வருணனே! நீ அசட்டை செய்யாமல் எங்களை ஞாபகஞ் செய்து கொள்ளவும். பலரால் போற்றப்படும் நீ, எங்கள் ஆயுளைப் பறிக்காதே.

12. அறிஞர்கள் என்னிடம் இரவிலும் பகலிலும்— இந்த உன் துதியைக் கூறுகிறார்கள். இவ்வறிவு என் இருதயத்தினிடம் பேசுகிறது. கட்டப்பட்டுள்ள சுனச்சேபனால் அழைக்கப்படும் அவன், அரசனான வருணன் எங்களை விடுவிப்பானாக.

13. பிடிக்கப்பட்டு, முக்கால்களுள்ள மரத்திலே கட்டப்பட்டிருக்கும் சுனச்சேபன், அதிதியின் மகனை அழைத்துள்ளான். அறிஞனும் தடைபடாதவனும் அரசனுமான வருணன் அவனை விடுவிப்பானாக; அவன் சுனச்சேபனுடைய கட்டுகளை அவிழ்ப்பானாக.

14. வருணனே! நாங்கள் உன் கோபத்தை வணக்கங்களாலும், யக்ஞங்களாலும், அவிகளாலும் விலக்குகிறோம். அறிஞனும், சிறப்புள்ளவனும், துன்பத்தை நீக்குபவனுமான நீ, எங்களிடம் துலங்கி, நாங்கள் செய்த பாவங்களைத் துடைக்கவும்.

15. வருணனே! மேலிருக்கும், நடுவிலிருக்கும், கீழே இருக்கும் என் கட்டை அவிழ்க்கவும். அதிதியின் மகனே! நாங்கள் உன் விரதத்திலே மாசற்றவர்களாகி, பாவத்திலிருந்து விடுதலைப்படுவோமாக. 268

## 25. வருணன்

### 25. சுனச்சேபன்

1. தேவனான வருணனே! எல்லா சனங்களும் பிழைகளைச் செய்கிறார்கள். அப்படியே நாங்களும் உன் விரதத்தைத் தினந்தோறும் பங்கப்படுத்துகிறோம்.

2. உன்னுடைய அழிக்கும் கோபத்தாலும், அதிருப்தியால் தோன்றும் உன்னுடைய தாபத்தாலும் எங்களை நாசத்துக்குட்படுத்தாதே.



3. வருணனே! நாங்கள் உன் மனத்தை எங்களுடைய நன்மைக்காக, களைத்த குதிரையைத் தேர்ப்பாகன்போல் சாந்தப்படுத்துகிறோம்.

4 என் அமைதியான எண்ணங்கள் தங்கள் கூடுகளைச் சுற்றிப் பறக்கும் பறவைகள்போல் சீவனை விரும்பி நாடுகின்றன.

5. நாங்கள் எப்பொழுது எங்களுடைய இன்பத்துக்காக, க்ஷத்திரத்தைப் பற்றுபவனும், பலரைப் பார்ப்பவனும், தலைவனுமான வருணனை இங்கு வருவிப்போம்? 273.

6. மித்திரா வருணர்கள் அளிப்பவனுக்கும், யக்ஞத்தை நடத்துபவனுக்கும் நலமுடனிருப்பதால் ஸமமாயுள்ள அவியை அருந்துகிறார்கள்.

7. வானில் பறக்கும் பறவைகளின் வழியை யறியும் அவன், கடலில் நிலைத்து, கப்பல்களின் வழியையும் அறிகிறான்.

8. விரதங்களை அறியும் அவன், மக்களுள்ள பன்னிரெண்டு மாதங்களையும் அங்கு தோன்றும் அதிக மாதத்தையுமறிகிறான்.

9. அவன், பரந்தவனும், பொலிவுள்ளவனும், உத்தமனுமான காற்றின் வழியையறிகிறான். அவன் மேலே இருக்கும் தேவர்களையும் அறிகிறான்.

10. நல்ல செயல்களைச் செய்பவனும், விரதங்களை ஏந்துபவனுமான வருணன் பிரசைகளின் நடுவே மேலான ஆட்சியை நடத்த அமர்ந்திருக்கிறான். 278.

11. அறிஞன் அவனால் நடத்தப்பட்ட, நடத்தப்படும் அற்புதங்களை யெல்லாம் காண்கிறான்.

12. பேரறிஞனான வருணன் எங்களைத் தினந்தோறும் நன்னெறியில் செலுத்துவானாக. எங்கள் ஆயுளை நீடிப்பானாக.

13. வருணன் தங்கக் கவசத்தைத் தரித்து, தன் புட்டியான அங்கத்திலே, காந்தியை அணிந்து கொள்கிறன்; அவனைக் கதிர்கள் சூழ்கின்றன.

14. பகைவர்கள் தேவனைத் துன்புறுத்தத் துணியார்கள். துட்டர்களும், மானிடர்களைக் கொடுமைப் படுத்துபவர்களும் அவனை அசட்டை செய்யத் துணியார்கள்.

15. அவன் மானிடர்களுக்கு உணவை அளிக்கிறன். எங்களுக்கும் முதன்மையாக அளிக்கிறன். 283

16. என் நினைவுகள், பலரால் போற்றப்படும் அவனுக்கு மேய் நிலங்கட்குப் பசுக்கள் போல் செல்லுகின்றன.

17. என் அவி சித்தமாயிற்று என நாம் இருவரும் கூறுவோமாக. நீயும் ஹோதாவைப் போல் பிரியமான அவியைப் பெற்றுக்கொள்கிறய்.

18. நான், அனைவருக்கும் இனிய தோற்றமுள்ள அவனைக் கண்டேன். நான் புவியிலே அவனுடையத் தேரைக் கண்டேன். அவன் என்னுடைய இத்துதிகளை ஏற்றுக்கொண்டான்.

19. வருணனே! என்னுடைய இந்த அழைப்பைக் கேட்கவும். எங்களை இன்று சுகப்படுத்தவும், பாலனத்தை விரும்பும் நான் உன்னைப் போற்றுகிறேன்.

20. மேதாவியான நீ, சோதியிலும், புவியிலும், எல்லா உலகத்திலும் பிரகாசிக்கிறய். நீ என்னுடைய மொழிகளைச் செவியுற்று செல்வத்தோடு பதிலளிக்கவும்.

21. நாங்கள் சீவிக்க எங்களை மேலுள்ள பாசங்களிலிருந்து விடுவிக்கவும். நடுவிலுள்ள, கீழேயுள்ள கட்டுக்களை அவிழ்க்கவும். 209



# 26. அக்கினி

## 26. சுனச்சேபன்

1. உணவின் தலைவனே! நீ ஒளியாடைகளை அணிந்துகொள்ளவும். யக்ஞத்தை யஜிக்கவும்.

2. எப்பொழுதும் இளைஞனுயுள்ள அக்கினியே! போற்றத் தகுந்தவனும், ஒளியணிந்தவனுமான நீ. எங்களுடைய ஹோதாவாகவும்.

3. அக்கினியே! போற்றத் தகுந்த நீ, மகன் போலுள்ள எனக்குத் தந்தையைப்போலும், பந்துவுக்குப் பந்துவைப் போலும், நண்பனுக்கு நண்பனைப் போலுமிருக்கிறய்.

4. பகைவரை யழிக்கும் மித்திரனும், வருணனும், அர்யமானும், மனுவின் யக்ஞத்தில் அமர்ந்ததுபோல் எங்கள் தருப்பையில் அமர்வார்களாக.

5. பழைய ஹோதாவான நீ, எங்களுடைய இந்த யக்ஞத்திலும், நட்பிலும் இன்பமாகவும். இந்தத் துதிகளைக் கேட்கவும். 294

6. நாங்கள் மற்ற தேவனுக்கு நித்தியமாயும், தாராளமாயுமளிக்கும் அவியெல்லாம் உனக்கே அளிக்கப்படுகிறது.

7. ஹோதாவும், இனியனும், பிரஜாபாலகனும், போற்றத் தகுந்தவனுமான அவன் எங்களிடம் பிரியமாயிருப்பானக. நல்ல அக்கினிகள் உள்ள நாங்கள் உன்னிடம் பிரியமுள்ளவர்களாவோமாக.

8. மங்கள அனல்களுள்ள தேவர்கள் எங்களுடைய போற்றத் தகுந்த அவியை ஏற்றுகிறர்கள். ஆதலால், மங்கள அனல்களுள்ள நாங்கள் உன்னைப் போற்றுகிறோம்.

9. அமிருதனே! மானிடர்களின் பனுவங்கள், இனி உனக்கும், எங்களுக்கும் பரஸ்பரம் இன்பந் தருபவையாகுக.

10. அக்கினியே! ஆற்றல்மகனே! நீ இந்த யக்ஞத்தையும், எங்களுடைய இந்தத் துதியையும் எல்லா அனல்களோடும் ஏற்றுக்கொள்ளவும். எங்களுக்கு உணவை யளிக்கவும். 299

## 27. அக்கினி

### 27. சுனச்சேபன்

1. நான் யக்ஞச் சக்கரவர்த்தியான உன்னை துதிகளோடு வணங்க இயங்குகிறேன். ஏனெனில் நீ, தன் வாலால் ஈக்களை விலக்கும் குதிரையைப் போல் நீ எங்கள் பகைவர்களை விலக்குகிறாய்.

2. பலத்தின் மகனும், எங்கும் வேகமாய்ப் பரவுபவனுமான அவன், எங்களுக்கு மேலான சுகத்தையளிப்பானாக. எங்களுக்குச் செல்வங்களைப் பொழிவானாக.

3. அக்கினியே! எங்கும் செல்பவனான நீ, எங்களை எப்பொழுதும், அருகிலோ தூரத்திலோ துன்புறுத்த நினைக்கும் மனிதர்களிடமிருந்து பாலிக்கவும்.

4. அக்கினியே! நீ எங்களுடைய அவியையும்,புதிய தோத்திரத்தையும் தேவர்களிடம் தெரியப்படுத்தவும்.

5. நீ எங்களுக்கு சோதியிலும், புவியிலுமுள்ள உணவைச் செலுத்தவும். புவியிலுள்ள செல்வத்தை அளிக்கவும். 304

6. சித்திரபானுவே! நீ நதியின் அலைகள் போல் செல்வங்களைப் பகிர்ந்தளிக்கிறாய். அவியளிப்பவனுக்குப் பொழிகிறாய்.

7. அக்கினியே! போரில் உன்னால் பாலிக்கப்படுபவனும், உன்னால் போருக்கு எழுப்பப்படுபவனும் எப்பொழுதும் உணவைச் சுவாதீனப்படுத்துவான்.

8. பகைவர்களையழிப்பவனே! உன் பக்தனை எவனாலும் வெல்ல இயலாது ஏனெனில் அவனிடம் புகழுவதற்குரிய பலமுண்டு.



9. எல்லா மனிதர்களாலும் போற்றப்படும் அவன் தன் குதிரைகளால் எங்களைப் போரில் கடத்திச் செல்வானாக. அறிஞர்களால் ஏந்தப்படும் அவன், எங்களுக்குச் செல்வங்களை அளிப்பானாக.

10. ஜராபோதனே! எல்லா மனிதர்களையும் நலப்படுத்தும் தேவ யக்ஞத்தில் நீ பிரவேசிப்பாயாக. வழிபடுபவன் இணக்கமான ஸ்தோமத்தை ருத்திரனை அக்கினிக்குக் கூறுகிறான். 309

11. மகானும், எல்லையற்றவனும், தூமகேதுவும், புருசந்திரனுமான அவன், எங்களைச் செயலுக்கும் சக்திக்கும் செலுத்துவானாக.

12. துவஜனும்,தேவத்வனும், பெருஞ் சோதிமானும், பிரஜாபாலகனுமான அக்கினி,ஸ்தோத்திரங்களோடுள்ள எங்களை, கவிகளைச் செவியுறும் செல்வன்போல் செவியுறுவானாக.

#### தேவர்கள்

13. பெரிய தேவர்களுக்கு நமஸ்காரம்; சிறியவர்களுக்கு நமஸ்காரம்; இளைஞர்களுக்கு நமஸ்காரம்; விருத்தர்களுக்கு நமஸ்காரம்; ஆற்றலிருக்கும் நாங்கள் எல்லா தேவர்களையும் போற்றுகிறோம். தேவர்களே! நான் பெரிய தேவர்களுக்குத் துதியைக் கூறத் தவறுமலிருப்பேனாக. 312

## 28. இந்திரனும் மற்றவர்களும்

### 28. சுனச்சேபன்

1. இந்திரனே! ஸோமரஸத்தை அழுத்த, பரந்த அடிப்பாகமுள்ள கல் உயர்த்தப்படுகிறது. மர உரலில் ரஸத்தைப் பருகவும்.

2. இந்திரனே! ஸோமரஸத்தை ஏந்த, இரு பரந்த தாங்கிகள், இரு சகனங்கள்போல பயன்படுத்தப்படுகின்றன. உரலில் ரஸத்தை அறிந்து பருகவும்.

3. யக்ஞசாலையும், வருபவனும், செல்பவனுமான மனைவிபோல் நீ யக்ஞத்திலே உரலில் ஸோமரஸத்தை அறிந்து பருகவும்.

4. இந்திரனே! தொழுபவர்கள், மந்தை குதிரையைக் கடிவாளங்களால் பிணைப்பதுபோல், கயிற்றால் இணைக் குங்கால் நீ உரலில் ஸோமரஸத்தை அறிந்து பருகவும்.

### உரல்

5. உரலே! நீ இருக்கும் ஒவ்வொரு மனையிலும் வெற்றியுள்ள படையின் முரசுபோல் உரத்த நாதத்தை எழுப்பவும். 317

6. வனஸ்பதியே! உரலே! உன் முகப்பிலே காற்று வீசுங்கால் இந்திரனுடைய பானத்துக்காக ஸோமத்தை ஸித்தப்படுத்தவும்.

### உரலும் உலக்கையும்

7. யக்ஞத்தின் கருவிகளும் உணவைத் தருபவை யும் மிக்க சப்திப்பவையுமான - உரலும் உலக்கையும் - இந்திரனுடைய தானியத்தைப் புசிக்கும் குதிரைகள் போல விளையாடுகின்றன.

8. இனிய வடிவங்களுள்ள வனஸ்பதிகளான நீங்கள் இருவர்களும் இந்திரனுக்கு இனிய தாரைகளோடு இனிப்பான ஸோமரஸத்தைப் பொழியுங்கள்.

### ஹரிச்சந்திரன்

9. ஹரிச்சந்திரனே! மிகுதியாயிருக்கும் ஸோம ரஸத்தைத் தட்டுக்களில் ஏந்தவும்; பவித்திரத்தில் தெளிக்கவும். இன்னும் மீந்திருப்பதை கோ சருமத்தின் மீதுவைக்கவும். 321

## 29. இந்திரன்

### 29. சுனச்சேபன்

1. இந்திரனே! ஸோமரஸத்தைப் பருகுபவனே! சத்தியனே! செல்வப் பிரபுவே! நாங்கள் தகுதியற்றவர் களாயிருந்தாலும் எங்களை ஆயிரக்கணக்கான உத்தமப் பசுக்களோடும் குதிரைகளோடும் செல்வப்படுத்தவும்.



2. சிப்ரியே! சக்தனே! செல்வபதியே! உன்னு டைய அநுகூலமான செயல் எப்பொழுதும் நிலைக்கிறது. ஆதலால் இந்திரனே! நீ எங்களை ஆயிரக்கணக்கான உத்தமப் பசுக்களோடும் குதிரைகளோடும் செல்வப் படுத்தவும்.

3. அவர்களை உறக்கப்படுத்து. பரஸ்பரம் பார்த் துக்கொண்டு அவர்கள் தூங்குவார்களாக. விழிக்காம லிருப்பார்களாக. இந்திரனே! செல்வபதியே! நீ எங்களை ஆயிரக்கணக்கான உத்தமப் பசுக்களோடும் குதிரை களோடும் செல்வப்படுத்தவும்.

4. எங்களுடைய பகைவர்கள் உறங்குவார்களாக. சூரனே! எங்களுடைய ஈகையர்களான நண்பர்கள் விழித்திருப்பார்களாக. இந்திரனே! செல்வபதியே! நீ எங்களை ஆயிரக்கணக்கான உத்தமப் பசுக்களோடு செல்வப்படுத்தவும்.

5. இந்திரனே! அந்தப் பாபமொழியோடு உன்னைப் போற்றும்-எங்கள் பகைவனை - இந்த கர்தபத்தை அழிக்கவும். இந்திரனே! செல்வபதியே! நீ எங்களை ஆயிரக்கணக்கான உத்தமப் பசுக்களோடும் - குதிரை களோடும் செல்வப்படுத்தவும். 326

6. பிரதிகூலமான காற்று சுழல வழியோடு சென்று காட்டிலே விலகிச் செல்க. இந்திரனே! செல்வபதியே! நீ எங்களை ஆயிரக்கணக்கான பசுக்களோடும் குதிரை களோடும் செல்வப்படுத்தவும்.

7. எங்களை நிந்திக்கும் ஒவ்வொருவனையும் நீக்கவும். எங்களைத் துன்புறுத்தும் ஒவ்வொருவனையும் விலக்கவும். இந்திரனே! செல்வபதியே! நீ எங்களை ஆயிரக்கணக் கான உத்தமப் பசுக்களோடும் குதிரைகளோடும் செல் வப்படுத்தவும். 328

# 30. இந்திரன்

## 30. சுனச்சேபன்

1. ஆற்றலை விரும்பும் நாங்கள் இந்த—உங்களுடைய சதக்கிரதுவும், சக்தியுள்ளவனுமான இந்திரனை ஸோமரஸ பிந்துக்களால், சலத்தால் நிரப்பப்படும் கிணற்றைப் போல் திருப்தி செய்வோமாக.

2. நூறு சுத்த ஸோமங்களைப் பெறுபவனும், ஆயிரம் மிசிரத ரஸங்களை அடைபவனுமான இந்திரன் பள்ளங்களுக்குப் பாயும் சலங்கள் போல் யக்ஞத்துக்கு வருவானாக.

3. வலியனான இந்திரனுக்காகச் சேரும் ஸோமரஸம் அவனுடைய உதரத்தினுள் பாவி, அவனால் ஏந்தப்படுகிறது. கடலில் சலம்போல் அவனில்-அது பரவுகிறது.

4. இந்த ஸோமம் உனக்காகச் சித்தமாகிறது. நீ கருத் தரித்தப் பெட்டையினிடம் வரும் புறாவைப்போல் வருகிறாய். அப்பொழுது எங்கள் துதியையும் பெற்றுக் கொள்ளவும்.

5. சூரனே! இந்திரனே! செல்வபதியே! துதியைப் பற்றுபவனே! உன்னைச் சாற்றுபவனுக்குச் சத்தியமான செல்வம் தோன்றுக. 333

6. சதக்கிரதுவே! நீ எங்களை இந்தப் போரிலே பாலிக்க எழுந்து நிற்கவும். நாம் பரஸ்பரம் கலந்து வேறு விஷயங்களையும் சிந்திப்போம்.

7. நாம் நம்முடைய பாலனத்துக்காக மிக்க வலிமையுள்ள இந்திரனை நண்பர்களைப் போல் ஒவ்வொரு யோகத்திலும்—தேவையிலும்-ஒவ்வொரு போரிலும் அழைக்கிறோம்.

8. எங்களுடைய அழைப்பை அவன் செவியுற்றால் ஆயிரம் பாலனங்களோடும் ஆயிரம் செல்வங்களோடும் எங்களிடம் வருவானாக.

9. நான், தன்னுடைய, வசிக்கும் பழைய இடத்திலிருந்து வழிபடும் பலர்களிடம் செல்பவனான



மனிதனை—இந்திரனை—பூர்வத்திலே என் தந்தையால் அழைக்கப்பட்ட இந்திரனும் உன்னை அழைக்கிறேன்.

10. நாங்கள் விசுவத்தால் வலிக்கப்படுபவனும், வழிபடுபவர்களுக்குப் பலரால் போற்றப்படுபவனும், மனைகளைப் பாலிப்பவனுமான உன்னை நண்பனைப் போல் வேண்டுகிறோம். 337

11. ஸோம பானஞ் செய்பவனே! நண்பனே! வச்சிராயுதம் ஏந்துபவனே! நண்பர்களும் ஸோமத்தைப் பருகுபவர்களுமான எங்களுக்கு நீண்ட முகங்களுள்ள பசுக்களையளிக்கவும்.

12. ஸோம பானஞ்செய்பவனே! வச்சிராயுதமேந்துபவனே! நண்பனே! இங்ஙனம் எங்கள் விருப்பம் நிறைவேறுக. நாங்கள் விரும்புவதையெல்லாம் நீ செய்யவும்.

13. உணவுள்ள நாங்கள் பசுக்களோடு இன்புறுவோமாக. இந்திரனே! நீ எங்களோடு மகிழ்ந்து எங்களுடைய பசுக்கள், பால் செல்வத்தோடும், மிக்கப் பலத்தோடுமாகுக.

14. திருஷ்ணுவே! உனக்கு ஒப்பாகவுள்ள ஒரு தேவனான நீ, நீயே தோன்றி விரும்பப்படுங்கால் உன்னைத் தொழுபவர்களுக்குச் செல்வங்களை தேரின் சக்கரங்களின் அச்சை செலுத்துபவைபோல் அளிக்கவும்.

15. சதக்கிரதுவே! உன்னைத் தொழுபவர்கள் விரும்பும் செல்வத்தை சகடத்தின் சலனங்களோடு சுழலும் அச்சுப்போல் அளிக்கிறாய். 342

16. இந்திரன் தன் பகைவர்களிடமிருந்து செல்வங்களை தன்னுடைய கடிப்பவையும், கனைப்பவையும், சீறுபவையுமான குதிரைகளால் சதா ஜயிக்கிறான். தானசீலனும் செயல்கள் மிகுந்தவனுமான அவன் எங்களுக்குப் பொன் தேரைத் தானமாக அளித்தான்.

### அசுவினிகள்

17. அசுவினிகளே! பல குதிரைகள் ஏந்திவரும் உணவுகளோடு இங்கு வாருங்கள். நஸ்ரர்களே!

எங்கள் மனைப் பசுக்களோடும், பொன்னோடும் நிரப்பப் படுக.

18. நஸ்ரர்களே! உங்கள் இருவருக்கும் சமமாக இணைக்கப்பட்ட தேர் அழியாதது. அசுவினிகளே! அது சமுத்திரத்திலே செல்லுகிறது.

19. உங்களுடைய தேரின் ஒரு சக்கரம் திடமான மலையின் உச்சியிலே இருக்கிறது. மற்றொன்று சோதியிலே சுற்றுகிறது.

உஷை

20. உஷையே! அமிருதமே! துதியால் இன்பமாகும். உன்னை எந்த மனிதன் அனுபவிக்கிறான்? மிக்க ஒளி வீசுபவளே! நீ எவனிடஞ் செல்லுகிறாய்? 347

21. நாங்கள் வியாபகரும், பலநிறமுள்ளவரும், பிரகாசிப்பவருமான உன்னுடைய எல்லைகள், அருகிலோ தூரத்திலோ அறியோம்!

22. சோதியின் மகளே! இந்த உணவுகளோடு வா. எங்கள் செல்வத்தை நிலைப்படுத்தவும் 350

## 31. அக்கினி

### 31 அங்கிரஸனின் புதல்வனான ஹிரண்யஸ்தூபன்

1. அக்கினியே! நீ முதல் அங்கிரஸன். நீ ரிஷி. நீ தேவன். நீ தேவர்களின் மங்கள நண்பனாயிருந்தாய். உன்னுடைய விரதத்திலே கவிகளும், பேரறிஞர்களும், ஒளிப்படை ஏந்துபவர்களுமான மருத்துக்கள் தோன்றினார்கள்.

2. அக்கினியே! நீ முதல்வன். அங்கிரஸர்களின் தலைவன். எல்லா உலகத்தின் நன்மைக்காகப் பலவிதமாய் இருப்பவனும், மேதாவியும், இரு தாய்கள் உள்ளவனும், மனிதர்களுக்காக எங்கும் பலவிதமாய்ச் சயனித்திருப்பவனும், கவியுமான நீ, தேவர்களின் விரதத்தை அலங்கரிக்கிறாய்.



3. நீ மாதரிசுவனுக்கு முதல்வன். வழிபடுபவனுடைய வணக்கத்தை விரும்பி அவனுக்குப் புலப்படவும். உன் ஆற்றலைக் கண்டு சோதியும், புவியும் நடுங்குகின்றன. ஹோதா நியமிக்கப்பட்ட யக்ஞத்திலே நீ சுமையைத் தாங்குகிறாய். பசுவே! நீ மகத்தான தேவர்களை யஜிக்கிறாய்.

4. அக்கினியே! நீ மனுவுக்குச் சோதியைப் புலப்படுத்துகிறாய். உத்தமச் செயல் புரிந்த புரூரவசனுக்கு உத்தமப் பயனைத் தருகிறாய். உன்னுடைய பெற்றோர்களால் கடையப்பட்டு நீ விடுவிக்கப்பட்டவுடன், அறிஞர்கள் உன்னைக் கிழக்கிலும், பிறகு மேற்கிலும் எடுத்துச் செல்லுகிறார்கள்.

5. அக்கினியே! நீ விருஷபன். வழிபடுபவனின் செல்வத்தைச் செழிப்பிப்பவன். சட்டுவம் உயர்த்தப்பட்டவுடன் நீ அழைப்பதற்கருகன். உணவைத் தருபவனான நீ, அழைப்பை நன்கறிந்து அவியை யளிப்பவனுக்கு முதன்மையாக ஒளியைத் தருகிறாய். பிறகு எல்லா சனங்களையும் ஒளிப்படுத்துகிறாய். 355

6. அக்கினியே! பேரறிஞனான நீ தீமையான வழிகளில் செல்பவனை நன்னெறிப்படுத்தும் செயல்களுக்குச் செலுத்துகிறாய். வீரர்களின் போரிலே எங்கும் பரந்த செல்வமாயிருக்கிறாய். நீ போரிலே வலியர்களை மெலிந்தவர்களால் கொல்லுகிறாய்.

7. அக்கினியே! நீ நித்திய உணவால் மானிடனை உத்தம அமுதத்திலே ஏந்துகிறாய். நீ பிராணிகளையும் பிரசைகளையும் விரும்பும் அறிஞனுக்கு உணவையும் சுகத்தையும் தருகிறாய்.

8. அக்கினியே! செல்வத்துக்காக எங்களால் சாற்றப்படும் நீ, யக்ஞஞ் செய்பவனைச் சிறப்பிக்கவும். உன்னால் அளிக்கப்பட்ட புதிய புதல்வனால் நாங்கள் யக்ஞத்தை மேம்படுத்துவோமாக. சோதிபுவிகளே! எங்களைத் தேவர்களோடு பாலியுங்கள்.

9. மாசற்ற அக்கினியே! தேவர்களின் நடுவே விழித்திருக்கும் தேவனான நீ, பெற்றோர்களின் அருகிலிருப்பவனுமான நீ, எங்களுக்கு தேசமுள்ள மக்களை அளித்து எங்களை எழுப்பவும். கர்த்தாவுக்கு அநுகூலமாகவும். மங்களமான அக்கினியே! நீ எங்களுக்கு எல்லா செல்வங்களையுந் தருகிறாய்.

10. அக்கினியே! நீ பேரறிஞன். நீ எங்களுடைய தந்தை. நீ எங்களுக்கு சீவனை யளிப்பவன். நாங்கள் உன்னுடைய பந்துக்கள். தடைபடாத அக்கினியே! உத்தமப் புருஷர்களோடிருப்பவனும்,விரதபாலகனுமான உன்னிடம் நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான செல்வங்கள் சேர்கின்றன. 360

11. அக்கினியே! தேவர்கள் உன்னைப் பூர்வத்திலே மானிட நஹுஷனின் மானிடப்படைத் தலைவனாக நியமித்தார்கள். என் தந்தையின் புதல்வன் பிறந்தபோது, அவர்கள் இளையை, மனுவுக்கு ஆசிரியையாகக் கற்பித்தார்கள்.

12 அக்கினியே! போற்றத் தகுந்த நீ, செல்வர்களான எங்களை உன் செல்வங்களால் பாலிக்கவும். நீ எங்கள் புதல்வர்களின் தேகங்களையும் பாலிக்கவும். என் மகனின் மகனுக்கு நீ பசுக்களைப் பாலிக்கிறாய். அவன் எப்பொழுதும் உன்னை ஊக்கமாய்த் துதிக்கிறான்.

13. நான்கு கண்களுள்ள அக்கினியே! தடைபடாமல் யக்ஞத்தை நடத்த, அருகிலிருக்கும் வழிபடுபவனின் பாலகனாக, நீ சுவாலைகளோடு எழுகிறாய். இன்னலற்றவனும் போஷகனுமான உனக்கு அவியையளித்துத் தொழுபவனுடைய மந்திரத்தை நீ உன் மனத்திலே போற்றுகிறாய்.

14. அக்கினியே! நீ, பலரால் போற்றப்படும் வித்விஜனுக்கு அவசியமான உத்தம செல்வத்தை வழிபடுபவனளிக்க அவனுக்கு சம்பாதிக்கும் திறத்தை



விரும்புகிறாய். நீ நல்லெண்ணமுள்ள பாலகன் என அழைக்கப்படுகிறாய். பேரறிஞனான நீ பாலனைக் கற்பிக்கிறாய். திசைகளை நிலைப்படுத்துகிறாய்.

15. அக்கினியே! நீ, தட்சிணையளிக்கும் மனிதனை நன்கு தைக்கப்பட்ட கவசம்போல் எங்கும் பாலிக்கிறாய். மனையிலே வைத்திருக்கும் உத்தம உணவுகளால் அதிதிகளை இன்புறுத்தும் மனிதன் சீவனின் யக்ஞத்தைச் செய்கிறான். சுவர்க்கத்துக்குச் சமமாகிறான். 365

16. அக்கினியே! நீ, எங்களுடைய அசட்டையை மன்னிக்கவும். நாங்கள் இத்தீய வழியில் சென்று விட்டோம். நீ உரிய யக்ஞங்கள் செய்பவர்களை ஊக்கப்படுத்துபவனாகவும், பாலகனாகவும் நாடப்பட வேண்டும். நீ பேரறிஞன்: நீ செயல்களை நடத்துபவன். நீ மானிடர்களுக்கு உன்னை நீயாகவே புலன் செய்து கொள்கிறாய்.

17. அவிகளைப் பெறச் செல்லும் சுத்தமான அக்கினியே! நீ யக்ஞ சதனத்துக்கு மநுபோலும், அங்கிரஸன்போலும், யயாதிபோலும், பூர்வத்திலிருந்த மற்றவர்கள் போலும் வரவும். தேவசனங்களை இங்கு அழைத்து வா. அவர்களைத் தருப்பையிலே அமர்த்தவும். அவர்களுக்குப் பிரியமான அவியை அளிக்கவும்.

18. அக்கினியே! எங்களுடைய ஆற்றலோடும், அறிவோடும் இசைந்த தோத்திரத்தால் நீ செழிப்பாயாக. ஆதலால் நீ எங்களை செல்வத்துக்குச் செலுத்தவும். எங்களுக்கு உணவைத் தந்து, எங்களை நல்லறிவிலே ஸ்தாபிக்கவும். 368

## 32. இந்திரன்

### 32. அங்கிரஸனின் மகனான ஹரண்யஸ்தூபன்

1. நான் வச்சிராயுதனான இந்திரன் இயற்றிய முதன்மையான வீரச் செயல்களைக் கூறுகிறேன். அவன் மேகத்தைப் பிளந்தான். அவன் – புவிக்கு – சலங்களை

கீழே செலுத்தினன். அவன் மலையின் தாரைகளுக்கு வழியைக் கீறினன்.

2. அவன் மலையின்மீது சரணமடைந்திருந்த அஹியைக் கொன்ருன். துவஷ்டா தன்னுடைய தூரத்தில் செல்லும் படையைக் கூர்மைப் படுத்தினன். பெருகும் சலங்கள் கடலுக்குக் கன்றுகளினிடம் விரையும் பசுக்கள்போல் பாய்ந்தன.

3. காளைபோல் வேகமாயுள்ள அவன் ஸோமத்தைக் குடித்தான் அவன் திரிகத்துர்க்கங்களிலே பொழிந்திருந்த ஸோமத்தைப் பருகினன். மகவான் தன் ஆயுதமான வச்சிராயுதத்தை எடுத்தான். அதனுல், அவன் மேகங்களின் நடுவில் தோன்றிய அஹியைக் கொன்ருன்.

4. இந்திரனே! நீ அஹிகளின் நடுவே முதற் தோன்றிய மேகத்தைப் பிளந்த பிறகு, நீ மாயாவிகளின் மாயைகளை மாய்த்தாய்; அப்பால் நீ சூரியனையும், உஷையையும், வானையும், தோற்றுவித்தாய். பிறகு உன்னை எதிர்க்க எந்தப் பகைவனும் இல்லை.

5. இந்திரன் தன்னுடைய மகத்தாயழிக்கும் வச்சிராயுதத்தால் கநந்த விருத்திரனைத் துண்டம் துண்டமாய்த் துணித்தான். கோடரியால் தாழ்த்தப்பட்ட மரங்களின் தண்டுகள் போல் அஹி புவியின்மீது சாய்த்திருக்கிருன். 373

6. தனக்குச் சமன் எவனும் இல்லையென இறுமாப்படைந்திருந்த விருத்திரன் மகத்தான வீரனும், பலரையழிப்பவனும், பகைவர்களை விலக்குபவனுமான இந்திரனை எதிர்த்தான். அவன் இந்திரனுடைய பகைவர்கள் அடையும் நாசத்திலிருந்து பிழைக்கவில்லை. இந்திரனுடைய பகைவன் நதிகளின் கரைகளை உடைத்தான்.

7. இந்திரன் தன் வச்சிராயுதத்தால் விருத்திரனின் மலைபோலுள்ள தோளையடித்தான். கைகளையும், கால்களையும் இழந்த அவன் இந்திரனை எதிர்த்தான். ஆண்மையற்ற அவன் வீரியமுள்ளவனைப் போல் பாசாங்கு செய்தான். பிறகு பல அங்கங்களில் பின்னமடைந்த விருத்திரன் உறங்கினன்.



8. மனிதர்களின் மனங்களை இன்புறுத்தும் சலங்கள், இந்தப் புவியிலே சாய்ந்திருக்கும் விருத்திரன் மீது உடைந்த கரைகளின் வழியாய் வெடித்துச் செல்லும் நதி போல் பெருகுகின்றன. விருத்திரன் தன் திறத்தால் தடை செய்த சலனங்களின் பாதங்களின் கீழே அஹி சாய்க்கப் படுகிருன்.

9. இந்திரன் தன் ஆயுதத்தால் விருத்திரனின் அதோபாகத்தைத் தாக்குங்கால், விருத்திரனுடைய தாய் தன் புதல்வன் மீது குனிந்திருந்தாள். தானும் தன் புதல்வனோடு கன்றோடு பசுவைப்போல் தூங்கினள்.

10. சலங்கள், எப்பொழுதும் ஓடுபவையும், எப்பொழுதும் நிற்காதவையுமான தாரைகளால் உந்தப்பட்ட விருத்திரனின் பெயரற்ற தேகத்தை எடுத்துச் செல்லுகின்றன. இந்திரனுடைய பகைவன் நீண்ட தமத்திலே தூங்குகிருன். 378

11 தாஸபத்தினிகளான சலங்கள் அஹியால் பாலிக்கப்பட்டு, பணியால் பசுக்களைப்போல் தடைபட்டிருந்தன. இந்திரன் விருத்திரனைக் கொன்று, தடை செய்த குகையைத் திறந்தான்.

12. இந்திரனே! தேவனும், ஏமனுமான விருத்திரன் உன்னுயுதத்தால் தாக்கப்பட்ட அடிக்கு எதிரடி செய்யுங்கால், நீ குதிரையின் வால்போல் உக்கிரமானுய். நீ பசுக்களை மீட்டினுய். சூரனே! நீ ஸோமரஸத்தை ஜயித்தாய். நீ ஏழு நதிகளைப் பாய விடுவித்தாய்.

13. இந்திரனும் விருத்திரனும் போர் செய்யுங்கால், விருத்திரனல் ஏவப்பட்ட மின்னலும், முழக்கமும்,

சொரியப்பட்ட மழையும், இடியேறும் அவனை-இந்திரனைத் துன்புறுத்தவில்லை. மகவான், பகைவனின் மற்ற எல்லாப் படைகளையும் ஜயித்தான்.

14. இந்திரனே! நீ, அஹியைக் கொல்லும் சமயத்தில், பயம் உன் இருதயத்தினுள் நுழைந்தபோது உன்னைத் தவிர வேறு எவனை நீ அளிப்பவனாக நோக்கினாய்? கலங்கிய நீயே தொண்ணூற்றென்பது நதிகளை துரித பருந்துபோல் கடந்தாய்.

15. வச்சிராயுதம் ஏந்தும் இந்திரன், தாவர ஜங்கமங்களுக்கும், கொம்புகளும் கொம்புகளுமற்ற பிராணிகளுமான அனைத்துக்கும் அரசனானான். அவன் மானிடர்களுக்கும் அரசனாகி நிலைக்கிறான். அவன் சக்கரத்தின் பற்களைப் பற்றும் பரிதிபோல் தன்னில் அனைத்தையும் அறிகிறான். 383

# 33. இந்திரன்

## 33. அங்கிரஸனின் புதல்வனான ஹிரண்யஸ்தூபன்

1. வாருங்கள்! நாம் திருடப்பட்ட பசுக்களை மீட்க இந்திரனிடஞ் செல்வோம். பகைமையற்ற அவன் நம்முடைய பேரறிவை ஊக்கப்படுத்துகிறான். பிறகு அவன் நமக்கு பசுக்களின் இச்செல்வத்தைக் காணும் உத்தம ஞானத்தை அறிவிப்பான்.

2. நான், தான் போற்றப்பட்ட உறைவிடத்துக்குப் பாயும் பருந்துபோல், எதிர்ப்பற்றவனும், செல்வந்தருபவனும், போரிலே வழிபடுபவர்களால் அழைக்கத்தருந்தவனுமான அந்த இந்திரனை, உத்தய பனுவல்களோடு புகழ்ந்து கொண்டு அவனிடம் பாய்கிறேன்.

3. எல்லாப் படையின் தலைவன் தன் முதுகிலே அம்பறாத் தூணியைப் பிணித்திருக்கிறான். தலைவன் பசுக்களை விரும்புபவனுடைய மனைக்குச் செலுத்துகிறான். பேரறிஞனான இந்திரனே! எங்களுக்கு மிக்கச் செல்வத்தை



யளிக்கவும். ஆனால், எங்களிடம் வணிகன் போல் இயங்காதே.

4. இந்திரனே! நீ, செல்வனான தஸ்யுவை கனத்த வச்சிரத்தால் கொன்றாய். துணைவர்களான மருத்துக்கள் உன்னோடு இருந்தாலும், நீ, தனியனாகவே அவனை எதிர்த்தாய். யக்ஞங்களைச் செய்யாமலிருக்கும் ஸனகர்கள் உன் வில்லின் விவித நாசத்தன்மையை அறிந்து, அழிந்தார்கள்.

5. இந்திரனே! யஜிக்காதவர்கள், யஜிப்பவர்களோடு போர்புரிந்து, திரும்பிய முகங்களோடு ஓடினார்கள். உக்கிரனும், குதிரைத் தலைவனும், நிலைத்து நிற்பவனுமான நீ, விரதமற்றவர்களை சோதியிலிருந்தும், புவியிலிருந்தும், வானிலிருந்தும், ஊதியபோது அவர்கள் மறைந்தார்கள். 388

6 விருத்திரனின் ஆட்கள், குற்றமற்ற இந்திரனின் படையை எதிர்த்தார்கள். போற்றத்தகுந்த செயல்களுள்ள மனிதர்கள் அவனை ஊக்கப்படுத்தினார்கள். அவர்கள் வீரர்களோடு போர் செய்யும் பேடர்கள்போல் தங்கள் தாழ்மையை அறிந்து, இந்திரனிடமிருந்து உச்சி வழிகளால் ஓட்டமெடுத்தார்கள்.

7. இந்திரனே! நீ, அவர்கள் அழுதாலும், சிரித்தாலும் அவர்களை வானின் கடையெல்லையிலே வீழ்த்திச் செலுத்தினாய். நீ சோதியிலிருந்து தஸ்யுவைத்தள்ளி, தகித்தாய். நீ பொழிந்து போற்றுபவனுடைய துதியைப் பாலித்தாய்.

8. அவர்கள் பொன்னாலும், நகைகளாலும் தங்களை அலங்கரித்துக் கொண்டு புவியிலே எங்கும் பரவியிருந்தார்கள். மிக்க வலியர்களான அவர்கள் இந்திரனை ஜயிக்க இயலவில்லை. அவன் அவர்களை சூரியோதயத்தோடு கலைத்தான்.

9. இந்திரனே! நீ, உன் மகிமையால் பிரபஞ்சத்தைப் பெருமைப் படுத்தி, சோதியையும், புவியையும் அனு

பவிக்குங்கால் மந்திரங்களை அறியாமல் உரைப்பவர்களையும், அவர்களுக்காகக் கூறுபவர்களின் மந்திரங்களோடு தஸ்யுவையும் ஹதினாய்.

10. தான்யங்களோடு திரவியத்தைதயளிக்கும் தரணியின் மீது சோதியிலிருந்து மழை பெய்யாமலிருந்த போது, பொழிபவனான இந்திரன் வச்சிராயுதத்தை ஏந்தினான்; பிறகு அதன் ஒளியால் சலங்களைத் தமத்திலிருந்து கறந்தான். 393

11. சலங்கள், இந்திரனுக்கு உணவையளிக்கப் பெருகின. ஆனால் செல்வதற்குரிய நதிகளின் நடுவே இந்திரன் செழித்தான். பிறகு இந்திரன் தன் வலிய வச்சிராயுதத்தால் இந்திரனை எண்ணியிருந்த விருத்திரனைக் கொன்றான்.

12. இந்திரன், இல்பிசனுடைய திடமான கோட்டைகளை இடித்தான். கொம்புகளுள்ள சுஷ்ணனைக் கொன்றான். மகவானே ! நீ உன்னுடைய முதுத்திறத்தோடும், துரிதத்தோடும் போரை விரும்பும் பகைவனை உன் வச்சிரத்தால் தாழ்த்தினாய்.

13. இந்திரனுடைய ஆயுதம் பகைவர்கள் மீது பாய்ந்தது; அவன் தன் வலிய, கூரிய படையால் அவர்களின் புரங்களை உடைத்தான். பிறகு தன் வச்சிராயுதத்தோடு விருத்திரனிடஞ் சென்றான்; அவனைக் கொன்று தன் மனத்தை இன்பப்படுத்தினான்.

14. இந்திரனே ! நீ, உன்னால் விரும்பப்படும் ருத்ஸனைப் பாலித்தாய். நீ போர் புரியும் விருப்பனான தசத்யுவைத் தாங்கினாய். உன்னுடைய குதிரைக் குளம்புகளின் புழுதி சோதிக்கு எழுந்தது. சுவித்திரையின் மகன் ஜயத்துக்காக மீண்டும் எழுந்தான்.

15. மகவானே ! நிலத்துக்காகப் போர்புரிந்து· சலத்தில் அமிழ்த்தப்பட்டு, உன்னால் சாந்தமடைந்தவனுமான சுவித்திரையின் உத்தம மகனை நீ பாவித்



தாய், எங்களை வெகு காலமாய்ப் பகைத்து. எதிர்க்கும் வெறுப்பெண்ணவர்களை மிக்கத் துன்பப்படுத்தவும். 398

# 34. அசுவினிகள்

## 34. அங்கிரஸனின் மகன் ஹிரண்யஸ்தூபன்

1. நீங்கள் இன்று எங்களிடம் மும்முறை வாருங்கள் உங்களுடைய தேர் பரந்தது. தானமும் பரந்தது. உங்களுடைய ஐக்கியம் பிரகாசிக்கும் பகலும், பனிமய இரவும் போலாகிறது. அறிஞர்களின் அதீனத்துக்குட் படுங்கள்.

2. உங்கஞ்டைய அனைவரால் அறியப்பட்டதும், ஸோமனுடைய மனைவியை நோக்கிச் சென்றதும், தேன் ஏந்துவதுமான தேருக்கு மூன்று சக்கரங்களுண்டு. ஆதரவுக்காக அதன் மீது மூன்று தூண்கள் நிறுத்தப் பட்டிருக்கின்றன. அசுவினிகளே! நீங்கள் அத்தேரில் பகலில் மூன்று தடவையும், இரவில் மூன்று தடவையும் வருகிறீர்கள்.

3. அசுவினிகளே! ஒரு தினத்தில் மும்முறைவந்து குற்றங்களை நீக்கும் நீங்கள் இன்று எங்கள் யக்ஞத்தை தேனால் மும்முறை தெளித்து, இனிமைப்படுத்துங்கள். காலையிலும், மாலையிலும் எங்களுக்கு வலிமை தரும் உணவை யளியுங்கள்.

4. அசுவினிகளே! எங்கள் மனைக்கு மும்முறை வாருங்கள். நீதியுள்ள மனிதனிடமும் மும்முறை செல்லுங்கள். உங்கள் பாலனத்துக்குரியவர்களிடமும் மும்முறை தோன்றுங்கள். எங்களுக்கு மும்மடங்கான அறிவைக் கற்பியுங்கள். எங்களுக்குத் திருப்தியை யளிக்கும் பொருள்களையும் மும்முறையளியுங்கள். மழையைப் பெய்யும் இந்திரன்போல் எங்களுக்கு மும்முறை உணவைப் பொழியுங்கள்.

5. அசுவினிகளே! எங்களுக்கு மும்முறைச் செல்வங்களை அளியுங்கள். தேவ யக்ஞத்துக்கு மும்முறை

வாருங்கள். எங்கள் அறிவை மும்முறைப் பாலியுங்கள்; எங்களுக்கு மும்முறை சௌபாக்கியத்தையும், மும்முறை உணவையும் அளியுங்கள். சூரியனுடைய புதல்வி உங்களுடைய முச்சக்கரத் தேரிலே ஏறினாள். 408

6. அசுவினிகளே! நீங்கள் சோதியில் தோன்றும் ஔடதங்களையும், புவியில், வானில் தோன்றும் ஔடதங்களையும் எங்களுக்கு மும்முறையளியுங்கள். சம்யுவின் செழிப்பை என் புதல்வனுக்கு அளியுங்கள். சுபபதிகளே! தேகத்தின் - முத்தாதுக்களின் சுகத்தையளியுங்கள்.

7. அசுவினிகளே! தினந்தோறும் மும்முறைப் போற்றுவதற்குரிய நீங்கள் புவியிலே, முத்தாதுக்களுள்ள தருப்பையின் மீது சயனியுங்கள். பொய்யற்றவர்களே! தேர்த் தலைவர்களே! நீங்கள் தூரத்திலிருந்து மூவ்வனகயான யக்ஞத்தின் இடத்துக்கு மும்முறை தேகங்களுக்குச் செல்லும் பிராணன்போல் வாருங்கள்.

8. அசுவினிகளே! நீங்கள் ஏழு தாய்மார்களான ஸிந்துக்களோடு வாருங்கள். மூன்று நதிகளான கலசங்கள் இருக்கின்றன. மூவ்வித அவிகளும் சித்தமாகின்றன. நீங்கள் மூவ்வுலகங்களுக்கு மேலே எழுந்து, இரவாலும், பகலாலும் ஸ்தாபிக்கப்பட்ட சூரியனை வானிலே பாலிக்கிறீர்கள்.

9. பொய்யற்றவர்களே! உங்களுடைய முக்கோணத் தேரின் முச்சக்கரங்கள் எங்கே? அதற்குக் கெட்டியாய் இணைக்கப்பட்ட மூன்று பீடங்கள் எங்கே? உங்களை இந்த யக்ஞத்துக்கு ஏந்திவர அத் தேரை இணைக்கும் வலிய குதிரையை எப்பொழுது பூட்டுவீர்கள்?

10. பொய்யற்றவர்களே! யக்ஞத்துக்கு வாருங்கள். அவி அளிக்கப்படுகிறது. இனிய பானத்தை சுவைக்கும் வாய்களோடு ரஸத்தைப் பருகுங்கள். உஷைக்கும் முன்னே ஸவிதா, யக்ஞத்துக்கு உங்களுடைய அற்புதமாயும், நெய்யால் துலக்கமாயுமுள்ள தேரைச் செலுத்துகிறான். 408



11. பொய்யற்றவர்களே! அசுவினிகளே! நீங்கள் மூவித பதினொன்று தேவர்களோடு வாருங்கள். மது பானத்தைப் பருக வாருங்கள். எங்கள் ஆயுளை நீடியுங்கள். குற்றங்களை நீக்குங்கள். எங்கள் பகைவர்களை விலக்குங்கள். எங்களிடம் எப்பொழுதும் இருங்கள்.

12. அசுவினிகளே! உங்களுடைய மூவ்வுலகங்களில் செல்லும் தேரிலே எங்களுக்கு வீரப்புதல்வர்களோடு செல்வத்தை ஏந்தி வாருங்கள். நான் என்னைச் செவியுறும் உங்கள் இருவர்களையும் பாலனத்துக்காக அழைக்கிறேன். போரிலே தாங்கள் ஜயமாக எங்களோடிருங்கள். 410

# 35. ஸவிதா

## 35. அங்கிரஸனின் மகனான ஹிரண்யஸ்தூபன்

1. நான் முதலில் அக்கினியைப் பாலனத்துக்காக அழைக்கிறேன். நான் பாலனத்துக்காக மித்திரனையும், வருணனையும் அழைக்கிறேன். நான் உலகத்துக்குச் சாந்தத்தையளிக்கும் இரவை அழைக்கிறேன். நான் என்னுடைய பாலனத்துக்காக தேவ ஸவிதாவை அழைக்கிறேன்.

2. ஸவிதா, தேவன் கறுத்த வான வழியால் அடிக்கடி வந்து மனிதனையும், அமுதனையும் அவரவர் இடத்தில் ஸ்தாபித்து, எல்லா உலகங்களையும் ஒளிப்படுத்தி, பொன் தேரிலே எங்களிடம் வருகிறான்.

3. தேவ ஸவிதா மேலான வழியால் வருகிறான். கீழான வழியால் போகிறான். போற்றத் தகுந்த அவன்

இரு - வெண்ணிறக் குதிரைகளோடு தோன்றுகிருன். அவன் தூரத்திலிருந்து இங்கே எல்லா பாவங்களையும் விலக்கி வருகிருன்.

4. போற்றத் தகுந்தவனும், பலவித கதிர்களிலிருப்பவனுமான ஸவிதா, உலகத்திலிருந்து தமத்தை நீக்குமாற்றலுள்ளவன். அவன் பலவிதப் பொன் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டதும், பொன் நுகங்களிருப்பதும், அருகில் நிற்பதுமான தன் தேரிலே ஏறினுன்.

5. அவனுடைய தேரின் பொன் நுகத்திலே இணைக்கப்பட்ட வெண்மையான கால்களுள்ள குதிரைகள் மானிடர்களுக்கு ஒளியைத் தோற்றுவித்தன. மனிதர்களும், எல்லா புவனங்களும், ஸவிதா தேவனுடைய சந்நிதானத்தில் இருக்கிருர்கள்-இருக்கின்றன. 415

6. ஒளியுள்ள உலகங்கள் மூன்று உண்டு. ஸவிதாவினருகில் இரண்டு இருக்கின்றன. ஒன்று மானிடர்களை யமபவனத்துக்குச் செலுத்துகிறது. ஸவிதாவிலே அமிருதர்கள் ஆச்சானியின் மீது தேர்போல் நிலைக்கிருர்கள். ஸவிதாவின் சிறப்பை அறிபவன், அதைக் கூறுவாஞக.

7. கம்பீர சலனமுள்ளதும், உயிரையளிப்பதும், நன்கு செலுத்துவதுமான ஸுபர்ணம் – சூரியனுடைய ரசிமி—முவ்வுலகங்களையும் ஒளிசெய்தது. இப்பொழுது சூரியன் எங்கே? எந்த உலகத்துக்கு அவனுடைய கதிர்கள் சென்றன என்பதை எவன் அறிகிருன்?

8. அவன் புவியின் எட்டுத் திசைகளையும், சிவப்பொருள்களின் மூன்று உலகங்களையும், ஏழு நதிகளையும் ஒளிப்படுத்திஞன். பொன் கண்ணுள்ள ஸவிதாதேவன், அளிப்பவனுக்கு விரும்பத் தகுந்த செல்வத்தைத் தருபவனுய் இங்கு வருவாஞக.

9. பொன் கையுள்ளவனும், அனைத்தையும் காண்பவனுமான ஸவிதா, சோதிபுவிகளான இருவர்களின் நடுவே செல்லுகிருன். அவன் நோய்களை நீக்குகிருன். சூரியனை அணுகுகிருன். கருப்பை நீக்கும் காந்தியோடு வானிலே பரவுகிருன்.



10. பொன் கையுள்ளவனும், உயிரையளிப்பவனும், சுகப்படுத்துபவனும், நல்ல நாயகனுமான ஸவிதா, எங்களிடம் வருவாஞக. தேவன் மாலையிலே போற்றப்பட்டு, அரக்கர்களையும், யாதுதானர்களையும் விலக்கி நிற்கிருன்.

11. ஸவிதாவே! உன் வழிகள் பூர்வத்தில் தோன்றியவை. புழுதியற்றவை. வானிலே நன்கு நிலைக்கப்பட்டவை. நீ சுகமாய்க் கடப்பதர்க்கான அவ்வழிகளால் வந்து எங்களை இன்று பாலிக்கவும். தேவனே! எங்களிடம் பேசவும். 421

## 36. அக்கினி

### 36. கோரனின் புதல்வஞன கண்வன்

1. நாங்கள், தேவர்களைப் போற்றும் பல சனங்களான உங்களின் நன்மைக்காக மகானும், வேறு ரிஷிகளால் துதிக்கப்படுபவனுமான அக்கினியை சூக்தங்களாலும், சொற்களாலும் வேண்டுகிருேம்.

2. சனங்கள், சக்தியைச் செழிப்பிக்கும் அக்கினியை நாடுகிருர்கள். நாங்கள் அவிகளை அளித்து உன்னைப் போற்றுகிருேம். தாராளமாய் உணவையளிக்கும் நீ, இன்று இங்கே எங்களிடம் நல்ல மனமுடனிருக்கவும்; எங்கள் பாலகஞகவும்.

3. அக்கினியே! நாங்கள் அனைத்தையும் அறிபவஞன உன்னை, ஹோதாவாகவும், தூதஞகவும் ஆய்ந்தெடுக்கிருேம். மகத்தாயும், நித்தியமாயுமுள்ள உன்னுடைய சுடர்கள் விவிதமாய்ப் பரவுகின்றன. உன்னுடைய கதிர்கள் வானைப் பற்றுகின்றன.

4. தேவர்களான மித்திரனும், வருணனும், அர்யமானும், பழைய தூதஞன உன்னை எழுப்புகிருர்கள்.

அக்கினியே! உனக்கு அவிகளை அளிப்பவன், உன்னால் செல்வத்தையெல்லாம் பெறுகிறான்.

5. அக்கினியே! நீ இன்புறுத்துபவன். நீ ஹோதா. நீ பிரஜைகளின் மனையைப் பாலிப்பவன். நீ தூதன். உன்னில் எல்லா விரதங்களுமிருக்கின்றன. தேவர்களின் தீரச் செயல்கள் எல்லாம் உன்னில் குவிகின்றன. 426

6. இளைஞனே! மங்கலமான அக்கினியே! எங்களிடம் நல்ல மனமுள்ளவனான நீ, உன்னிடம் அளிக்கப்படும் அவியையெல்லாம் இப்பொழுதோ, எப்பொழுதோ மிக்க வலியர்களான தேவர்களிடம் செலுத்தவும்.

7. அக்கினியே! தொண்டன் நீயாகவே துலங்கும் உன்னை, துதியோடு இங்ஙனம் வணங்குகிறான். பகைவர்களை ஜயிப்பவர்களான மனிதர்கள், ஹோதாக்களோடு அக்கினியை எழுப்புகிறார்கள்.

8. அழிக்கும் தேவர்கள் உன்னோடு விருத்திரனைக் கொன்றார்கள். அவர்கள் சோதியையும், புவியையும், வானையும் சீவர்கள் வசிக்கப் பரந்த இடமாகச் செய்தார்கள். புகழுள்ள கானை அழைக்கப்பட்டு, கண்வனின் அருகே நின்றான். பசுக்களுக்காகப் போர்களிலே புரவி கர்ச்சித்து, கனைத்தான்.

9. அக்கினியே! நீ மகான். நீ தருப்பையில் அமரவும். தேவர்களை விரும்பும் நீ பிரகாசிக்கவும். உத்தமனும் துதியாருகனுமான அக்கினியே! அழகாயும், அசைவதாயுமுள்ள புகையை வெளிப்படுத்தவும்.

10. அவிகளை ஏந்துபவனே! மனுவுக்காகத் தேவர்களால் தாங்கப்பட்டவனும், கண்வனாலும், மேத்யாதியாலும், விருஷனனாலும், உபஸ்துதனாலும் செல்வமளிக்கத் தாங்கப்பட்டவனும் நீயே. 481

11. நாங்கள் யக்ஞத்துக்காகக் கண்வனால் எழுப்பப்பட்டவனும், மேத்யாதிதியால் மூட்டப்பட்டவனும், இந்தத் துதிகளால் ஏந்தப்படுபவனுமான அக்கினியைப் போற்றுகிறோம். அவனுடைய ரசிமிகள் மிக்க மேன்மையாகப் பிரகாசிக்கின்றன.



12. அக்கினியே! நீ உணவைத் தருபவன். நீ செல்வங்களை அளிக்கவும். உன்னால் தேவர்களுடைய நட்புத் தோன்றுகிறது. நீ புகழுள்ள உணவுத் தலைவன். நீ மகான். நீ எங்களை சுகப்படுத்தவும்.

### யூபம்

13. நீ, தேவனான ஸவிதாவைப் போல் எங்களுடைய பாலனத்துக்காக நேராக நிற்கவும். நாங்கள் உணவளிக்கும் உன்னை, உயர்ந்திருக்கும் உன்னை, உணவுக்காக, நெய்யோடும் யக்யஞ் செய்பவர்களோடும் போற்றுகிறோம்.

14. நீ நிமிர்ந்து நிற்கவும். நீ உயர்ந்து, எங்களைப் பாவத்திலிருந்து அறிவால் பாலிக்கவும். அனைத்தையும் புசிக்கும் அரக்கனைப் பற்பப்படுத்தவும். நாங்கள் உலகத்திலே சஞ்சரிப்பதற்கும், சீவனுடனிருக்கவும், எங்களை மேலே உயர்த்தவும். தேவர்களிடம் எங்களுடைய செல்வத்தைச் செலுத்தவும்.

### அக்கினி

15. அக்கினியே! மிக்கப் பிரகாசிப்பவனே! அரக்கர்களிடமிருந்து எங்களைப் பாலிக்கவும். தானமளிக்கத் துட்டனிடமிருந்தும் எங்களைப் பாலிக்கவும் நீ எங்களைக் கொடும் பிராணிகளிடமிருந்தும், கொல்ல விரும்புவர்களிடமிருந்தும் பாலிக்கவும். 486

16. அக்கினியே! உன்னுடைய எரிக்கும் சுவாலைகளால் தானமளிக்காத எல்லாப் பகைவர்களையும் மண்பாண்டங்களைத் தடியால் அடிப்பதுபோல் நாசப்படுத்தவும்.

17. அக்கினி, ஆண்மையளிக்கும் செல்வத்துக்காகப் போற்றப்படுகிறான். அவன் கண்வனுக்கு சௌபாக்கியத்தைத் தந்தான். அக்கினி! நண்பர்களையும், மெத்யா

திதியையும், உபஸ்தூதனையும் செல்வத்துக்காகப் பாலித்தான்.

18. நாங்கள் தூரத்திலிருந்து, உக்கிர தேவனையும், யதுவையும், துர்வசனையும், அக்கினியால் அழைக்கிறோம். அக்கினி, நவவாஸ்தவனையும், பிரஹத்ரதனையும், துர்வீதியையும், தஸ்யுவைத் தாழ்த்த அழைத்து வருவானாக.

19. அக்கினியே! மநு எல்லா சனங்களுக்காக சோதியான உன்னை ஸ்தாபித்தான். மனிதர்களால் போற்றப்படுபவனும், ருதத்தில் தோன்றி நெய்யால் நிரம்புபவனுமான நீ, கண்வனுக்காகப் பிரகாசிக்கிறாய்.

20. அக்கினியின் சுவாலைகள் மிக்கப் பிரகாசிப்பவை, பலமுள்ளவை, பயங்கரமானவை, அணுகத்தகாதவை. அக்கினியே! நீ எல்லா யாது தானர்களையும், அரக்கர்களையும் எப்பொழுதும் பற்பப்படுத்தவும். எல்லாப் பகைவர்களையும் பற்பப்படுத்தவும். 441

## 37. மருத்துக்கள்

### 37. கோரனின் மகனுன கண்வன்

1. கண்வர்களே! மாருதர்களின், எதிர்ப்பற்றதும், கிரீடிப்பதும், நேரிலே துலங்குவதுமான பலத்தைப் போற்றுங்கள்.

2. மருத்துக்கள் புள்ளிமான்களோடும், ஈட்டிகளோடும், கத்திகளோடும், மின்னும் நகைகளோடும், தாமே துலங்கும் ஒளியோடும் ஒருமித்துப் பிறந்தார்கள்.

3. நான், அவர்களின் கைகளிலிருக்கும் கசைகளின் சத்தத்தைச் செவியுறுகிறேன். அது போரிலே வீரத்தை அற்புதமாய் ஊக்கப்படுத்துகிறது.

4. அறிஞர்களே! பகைவர்களை யழிப்பவர்களும், வலியர்களும், மிக்கப் பிரகாசிக்கும் புகழுள்ளவர்களும், உங்களுடைய பலமாயிருப்பவர்களுமான மருத்துக்களுக்கு தேவர்களால் அளிக்கப்பட்ட தோத்திரத்தைக் கூறுங்கள்.



5. பசுக்களின் நடுவில் பிறந்தவர்களும், ரஸத்தைப் பருகி வளர்ந்தவர்களுமான மருத்துக்களின் கிரீடிப்பதும், தடைபடாததுமான மாருத பலத்தைப் போற்றுங்கள். 446

6. வீரர்களே! சோதியையும், புவியையும் குலுக்குபவர்களே! மரத்தின் உச்சியைப் போல் சுற்றுப்புரம் அனைத்தையும் ஆட்டும் உங்களின் நடுவில் பெரியவன் எவன்?

7. மனையின் தலைவன் உங்களுடைய உக்கிரமான, கொடுமையான வருகைக்குக்குப் பயந்து, மனையிலே திடமான தூணை நிறுத்தினன். பல பர்வங்களுள்ள மலையும் ஆடுகிறது.

8. உங்களுடைய மிக்க உக்கிர வரவிலே புவியானது, பகைவர்களைக் கண்டு பயப்படும் வலிமையற்ற அரசன்போல் நடுங்குகிறது.

9. மருத்துக்களின் ஜன்மஸ்தானம் திரமாயிருக்கிறது. ஆனால் அவர்களின் தாயான வானிலிருந்து பறவைகள் வர இயலுகின்றன. உங்களுடைய பலம் சோதி, புவிகளின் நடுவே பகிரப்பட்டிருக்கிறது.

10. மருத்துக்கள் மொழியைப் பிறப்பிக்கிறார்கள் அவர்கள் சலங்களை அவற்றின் வழிகளிலே பரத்துகிறார்கள். அவர்கள் கதறும் பசுக்களைத் தங்கள் முழங்கால் வரை சலத்தில் நின்று பருக நீருக்குச் செலுத்துகிறார்கள். 451

11. மருத்துக்கள், தங்கள் முன்னே நீண்டும், பரந்தும், துன்பப்படாததுமான மழை ஏந்தும் மேகத்தைச் செலுத்துகிறார்கள்.

12. மருத்துக்களே! உங்களிடம் பலமுண்டு. நீங்கள் மானிடர்களை அவரவர் செயல்களில் நிலைப்படுத்துங்கள். மேகங்களை ஊக்கப்படுத்துங்கள்.

13. மருத்துக்கள் செல்லும் இடங்களில் எல்லாம் ஆரவாரத்தால் வழியை நிரப்புகிறார்கள். ஒவ்வொருவனும் அவர்களுடைய சத்தத்தைக் கேட்கிறான்.

14. உங்களுடைய வேகமாயுள்ள தேர்களில் துரிதமாய் வாருங்கள். கண்வர்களின் நடுவே வழிபடுபவர்கள் உண்டு. அவர்களால் இன்புறுங்கள்.

15. உங்களுடைய மதத்துக்காக அவி சித்தமாகிறது. நாங்கள் நீண்ட காலம் வாழ உங்களை வழிபடுபவர்களாயிருக்கிறோம். 456

## 38. மருத்துக்கள்

### 38. கோரனின் மகன் கண்வன்

1. துதிப் பிரியர்களும், நறுக்கப்பட்ட தருப்பையுள்ளவர்களுமான மருத்துக்களே! நீங்கள் இரு கைகளால் எங்களை, மகனைத் தந்தைபோல் எப்பொழுது பற்றுவீர்கள்?

2. இப்பொழுது நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? எப்பொழுது நீங்கள் வருவீர்கள்? சோதியிலிருந்து வாருங்கள்; புவியிலிருந்து செல்லாதீர்கள்; உங்களுக்குப் பசுக்களைப் போல் கதறும் வழிபடுபவர்கள் எங்கே?

3. மருத்துக்களே! உங்களுடைய புதிய செல்வங்கள் எங்கே? அருமையான நிதிகள் எங்கே? உங்களுடைய எல்லா சௌபாக்கிய தானங்கள் எங்கே?

4. பிருசினி மக்களான நீங்கள், மனிதர்களாகலாம். ஆனால், உங்களைப் போற்றுபவன் அமிருதனுகிறான்

5. உங்களைப் போற்றுபவன் யமனுக்குச் செல்லும் வழியை மதிக்காமலிருக்க, புற்றரையை அசட்டை செய்யாமலிருக்கும் மான்போல் உங்களைப் போற்ற அசட்டையில்லாமலிருப்பானாக. 461

6. மிக்க ஆற்றலுள்ளவனும், அழிக்கப்படாதவனுமான நிர்ருதி எங்களை அழிக்காமலிருப்பானாக. அவன் எங்கள் தீயவிருப்பங்களோடு ஒழிக.

7. ருத்திரனால் பாலிக்கப்படுபவர்களும், பிரகாசிப்பவர்களும், வலியர்களுமான மருத்துக்கள், பாலைவானத்திலே காற்றில்லாமல் மழையைப் பொழிகிறார்கள். இது உண்மை.



8. கன்றுக்குக் கதறும் பசுவைப்போல், இடி கர்ச்சிக்கிறது. அங்கிருந்து மழை மருத்துக்களால் விடுவிக்கப்படுகிறது.

9. அவர்கள் சலம் ஏந்தும் மேகத்தால் பகலின் மீது தமத்தைப் பரத்துகிறார்கள். பிறகு புவியை வெள்ளத்தால் நிரப்புகிறார்கள்.

10. மருத்துக்களின் கர்ச்சனையிலே புவியின் ஒவ்வொரு மனையும் ஆடுகிறது. மானிடர்களும் நடுங்குகிறார்கள். 466

11. மருத்துக்களே! திறக்கைகளோடும், தடைபடாத சூலனங்களோடும், அழகான கரைகளுள்ள நதிகளை அனுசரித்து வாருங்கள்.

12. உங்கள் சக்கரங்களின் நேமிகள் திறமாயிருக்க, உங்கள் தேர்களும், குதிரைகளும் நிலையாகுக. உங்களுடைய விரல்களும், கடிவாளங்களைப் பற்றத் திறமுள்ளவையாகுக.

13. அறிஞர்களே! நீங்கள் பிரம்மணஸ்பதியையும், அக்கினியையும், அழகான மித்திரனையும் போற்றப் பொருந்தும் குரலோடு - துதிகளை – எங்கள் முகப்பிலே கூறுங்கள்.

14. உங்கள் வாயால் சுலோகத்தைச் சொல்லுங்கள். மழையைப் பரத்தும் மேகம் போல் அதைப் பரத்துங்கள். யுக்தமான காயத்திரி சூக்தத்தைப் பாடுங்கள்.

15. பிரகாசிப்பவர்களும், போற்றத் தகுந்தவர்களும், போற்றுவதற்குரியவர்களுமான, மருத்துக்களின் படையைப் போற்றுங்கள். அவர்கள், எங்களுடைய இந்த வணக்கத்திலே செழிப்பார்களாக. 471

# 39. மருத்துக்கள்

## 39. கோரனின் மகனுன கண்வன்

1. அனைத்தையும் நடுங்கப்படுத்தும் மருத்துக்களான நீங்கள், தூரத்திலிருந்தே உங்களுடைய உச்சிர பலத்தை சோதியிலிருந்து இறங்கும் ஒளிபோல் கீழாகச் செலுத்துங்கால், எவனுடைய துதியால் கவரப்படுகிறீர்கள்? எந்த இடத்துக்கு எவனிடம் நீங்கள் செல்லுகிறீர்கள்?

2. உங்களுடைய ஆயுதங்கள் பகைவர்களை விலக்க வலியவையாகுக. அவை பகைவர்களைத் தடுக்கத் திறமுள்ளவையாகுக. துதியாருகமான திறமை உங்களுக்குத் தோன்றுக. வஞ்சக மனிதர்களின் வலிமை எங்களை எதிர்க்காமலிருக்க.

3. வீரர்களான மருத்துக்களே! நீங்கள் நிலைத்ததைக் குலைத்து. கனத்ததைக் கலைக்குங்கால், உங்களுக்குப் புவியின் வனமரங்களின் இடைகளிலும், மலைகளின் விடர்களிலும் வழியைச் செய்து கொள்கிறீர்கள்.

4. பகையழிப்பவர்களே! உங்களுக்கு எப்பகைவனும், சோதியில் தோன்றவில்லை. புவியிலும் புலனுகவில்லை. ருத்திரமக்களான உங்களுடைய படைபலம் பகைவர்களைப் புடைக்கத் துரிதமாய்ப் பரவுக.

5. அவர்கள் மலைகளை ஆட்டுகிருர்கள்; காட்டுமரங்களைத் தனிப்படுத்துகிருர்கள். தேவர்களான மருத்துக்களே! நீங்கள் உங்களுடைய படையோடு விரும்பும் இடத்துக்குப் போதமடைந்தவர்கள் போல் செல்லுங்கள். 476

6. நீங்கள் உங்கள் தேரிலே புள்ளிமானைப் பூட்டினீர்கள். நடுவில் இணைக்கப்பட்ட சிகப்புமான் தேரை இழுக்கிறது. உங்கள் வருகையை வானஞ்செவியுறுகிறது. மனிதர்கள் கலங்குகிருர்கள்.



7. ருத்திரர்களே! நாங்கள் எங்களுடைய மக்களுக்காக உங்கள் பாலனத்தை நாடுகிறேம். எங்கள் பாலனத்துக்காக நீங்கள் பூர்வத்தில் வந்ததுபோல் கலங்குங்கண்வனிடம் துரிதமாய் வாருங்கள்.

8. மருத்துக்களே! உங்களாலோ, அல்லது வேறு மனிதர்களாலோ செலுத்தப்பட்டு எங்களைத் தாக்கும் சத்துருவை உங்களுடைய பலத்தாலும், திறத்தாலும், பாலனங்களாலும் எங்களிடமிருந்து தனிப்படுத்துங்கள்.

9. பூரணமாய்ப் போற்றத்தகுந்த பேரறிஞர்களான மருத்துக்களே! கண்வனை ஏந்துங்கள். நீங்கள் பூரண பாலனங்களோடு, மழையைத்தரும் மின்னல் போல் எங்களிடம் வாருங்கள்.

10. கொடைவள்ளல்களே! நீங்கள் சம்பூரண பலத்தை ஏந்துகிறீர்கள். புவியை ஆட்டுபவர்களே! சம்பூரண சக்தியைத் தாங்குகிறீர்கள். மருத்துக்களே! நீங்கள் உங்கள் கோபத்தை, ரிஷிகளின் கோபம்போல் பகைவன் மீது சரத்தைச் செலுத்துங்கள். 481

# 40. பிரம்மணஸ்பதி

## 40. கோரனின் மகனுன கண்வன்

1. பிரம்மணஸ்பதியே! எழுந்திருக்கவும். தேவர்களை விரும்பும் நாங்கள் உன்னை வணங்குகிறேம். நல்ல தானங்களையளிக்கும் மருத்துக்கள் எங்களிடம் வருவார்களாக. இந்திரனே! நீ, பிரம்மணஸ்பதியோடு சேர்ந்து விருத்திரனைக் கொல்லவும்.

2. பலத்தின் மகனே! மானிடன், பகைவனுல் கைவிடப்பட்ட செல்வத்துக்காக உன்னையே போற்றுகிருன். மருத்துக்களே! உங்களைப் போற்றுபவன், உத்தம குதிரைகளையும், உயர்ந்த ஆற்றலையும் தரும் செல்வத்தை அடைவானுக.

3. பிரம்மணஸ்பதி எங்களிடம் வருவானுக. சத்தியத்தைப் பேசும் தேவி எங்களிடம் தோன்றுவாளாக.

தேவர்கள் சத்துருவைத் துடைப்பார்களாக. அவர்கள் மானிடனுக்கு நலத்தைச் செய்வதும், ஐவகைச் செல்வங்களையளிப்பதுமான யக்ஞத்துக்கு எங்களைச் செலுத்துவார்களாக.

4. பெறுவதற்குரிய செல்வத்தை வித்விஜனுக்குத் தருபவன், அழியாத உணவை ஏந்துகிறான். நாங்கள் வழிபடுபவனுக்காக, உத்தம வீரர்களோடிருப்பவனும், மிக்கத்துன்புறுத்துபவனும், துன்பப்படாதவனுமான இளையைப் போற்றுகிறோம்.

5. பிரம்மணஸ்பதி, தேவர்களும், இந்திரனும், வருணனும், மித்திரனும், அர்யமானும் தங்கள் இடமாகச் செய்து கொண்ட மந்திரத்தைக் கூறுகிறான். 486

6. தேவர்களே! நாங்கள் யக்ஞங்களிலே, சுகப்படுத்துவதும் மாசற்றதுமான அந்த மந்திரத்தைச் சொல்வோமாக. நரர்களே! நீங்கள் இந்த மந்திரத்தைச் செவியுற விரும்பினால் உரைப்பதற்குரிய அனைத்தும் உங்களிடம் சேரும்.

7. தேவர்களை விரும்பும் மனிதனிடம் எவன் அணுகலாம்? நறுக்கிய தருப்பையிருப்பவனிடம் எவன் அணுகலாம்? அளிப்பவன் தன் சனங்களோடு-யக்ஞசதனத்துக்குச் செல்லுகிறான். அவன் தன் மனையை, அரிய பொருள்களால் நிரப்புகிறான்

8. பிரம்மணஸ்பதி, பலத்தைத் தன்னில் ஐக்கியப்படுத்தி, பெருக்கிக்கொள்வானாக. அவன் அரசர்களோடு அழிக்கிறான். போர்களிலே அவன் பத்திரமாய் வசிக்கிறான். பெரிய போரிலும், அற்பப்போரிலும் வச்சிராயுதம் ஏந்தும் அவனை தடுப்பவனும், தண்டுபவனுமில்லை. 489



# 41. வருணனும் மற்றவர்களும்

## 41. கோரனின் மகனான கண்வன்

### வருணனும் மித்திரனும் அரியமானும்

1. பேரறிஞர்களான வருணனாலும், மித்திரனாலும் அரியமானாலும் பாலிக்கப்படும் மனிதன், பகைவர்களைத் துரிதமாய்ப் புடைக்கிறான்.

2. தன் கைகளால் போர் போல் செல்வங்கள் குவிக்கப்படுபவனும், பகைவரிடமிருந்து பாலிக்கப்படுவனுமான ஒவ்வொரு மனிதனும் துன்பத்திலிருந்து விலகி செழிக்கிறான்.

3. அரசர்கள் முதலில் வழிபடுபவனின் பகைவர்களின் கோட்டைகளை இடிக்கிறார்கள். பிறகு பகைவர்களை முடித்து, தீச்செயல்களைத் துடைக்கிறார்கள்.

### ஆதித்தியர்கள்

4. ஆதித்தியர்களே! யக்ஞத்துக்குச் செல்லும் உங்களுக்கு வழிசுகமாயிருக்கிறது; முட்களில்லை; துதியாருக மற்ற அவியும் இங்கு செய்யப்படவில்லை.

5. ஆதித்தியர்களே! தலைவர்களே! நேரான வழியில் உங்களால் அணுகப்படும் யக்ஞம், உங்களைத் திருப்தி செய்வதாகுக. 494

6. உங்களால் ஆதரிக்கப்படும் மானிடன் துன்பத்திலிருந்து நீங்கி, எல்லா அரிய செல்வத்தையும், தன்னைப் போல் சந்தானத்தையும் பெறுகிறான்.

### மித்திரனும் வருணனும் அரியமானும்

7. நண்பர்களே! நாங்கள் மித்திரனுடைய, வருணனுடைய, அரியமானுடைய மகத்தான சிறப்புக்கேற்ற ஸ்தோமத்தை எங்ஙனம் கூறுவோம்?

8. நான், தேவர்களிடம் பக்தியோடிருப்பவனை எதிர்ப்பவனும் அல்லது நிந்திப்பவனுமான மனிதனை உங்களிடம் குறை கூறேம்; ஆனல் நான் துதிகளோடு உன்னை அருகில் அழைக்கிறேன்.

9. தீயச் சொற்களைக் கூற அவன் விரும்பாமலிருப்பானக; ஆனல் அவன் தன் கையினுள் ஆடும்வரை நான்கு கழங்குகளை ஏந்தும் பூதனை அஞ்சுவானக. 498

## 42. பூஷணன்

### கோரனின் மகஞன கண்வன்

1. பூஷாவே! எங்களைத் துன்ப வழியிலிருந்து கடத்திச் செலுத்தவும். தடுக்கும் துட்டனை விலக்கவும். தேவனே! மேகத்தின் மகனே! எங்கள் முன்னே நடக்கவும்.

2. திருடனும், தீமையிலே இன்புறுபவனுமான துட்டன் தகாத வழியைப் புலப்படுத்தினல் அவனை நீ வழியிலிருந்து விலக்குவாயாக.

3. கபடனும், கள்வனும், தடைப்படுத்துபவனுமான துட்டனை வழியிலிருந்து தனிப்படுத்தி தூரத்திலே செலுந்தவும்.

4. கள்வனும், கபடனுமான துட்டன், எவனயிருந்தாலும் அவனுடைய தேகத்தை உன் கால்களால் மிதிக்கவும்.

5. அறிஞனும், அழகனுமான பூஷணனே! நாங்கள் உன்னிடம் உங்களால் பிதாக்களுக்கு அளிக்கப்பட்ட பாலனத்தை நாடுகிறேம். 503.

6. எல்லாச் செல்வங்களிருப்பவனும், பொன்னயுதங்கள் அடைந்தவனுமான நீ, தானமளிப்பதர்க்குரிய செல்வங்களை அளிக்கவும்.



7. எதிர்ப்பவர்களிடமிருந்து எங்களைக் கடத்தவும். சுகவழியால் எங்களைச் செலுத்தவும். பூஷணனே! இந்தப் பயணத்திலே எங்களைப் பாலிக்க அறியவும்.

8. மிகுந்த புற்களுள்ள நிலத்துக்கு எங்களைச் செலுத்தவும்; வழியிலே மிக்கத் தாபம் தோன்ருமலிருக்க, பூஷணனே! இப்பயணத்திலே எங்களைப் பாலிக்க அறியவும்.

9. பூஷணனே! எங்களிடம் அனுகூலமாகவும், எங்களைக் கூர்மைப் படுத்தவும், எங்கள் உதரங்களை நிரப்பவும். பூஷணனே! இப்பயணத்திலே எங்களைப் பாலிக்க அறியவும்.

10. நாங்கள் பூஷணனை நிந்திக்காமலிருக்கிறேம். நாங்கள் அவனைச் சூக்தங்களால் போற்றுகிறேம். நாங்கள் அழகான பூஷணனிடம் செல்வங்களை விரும்புகிறேம். 508

## 43. ருத்திரன்

### 43. கண்வ கௌரன்

1. நாங்கள் எப்பொழுது மிக்க சுகத்தைத் தரும் ஸ்தோத்திரத்தை பேரறிஞனும், மிக்கப் பொழிபவனும், மிகுந்த பலமுள்ளவனும், எங்கள் இருதயங்களில் பாலிக்கப்படுபவனுமான ருத்திரனுக்குக் கூறுவோம்?

2. எதனல் அதிதி, ருத்திரத் தன்மையுள்ள ஔடதத்தை எங்களுடைய சனங்களுக்கும், பசுக்களுக்கும், மக்களுக்கும் அளிக்க இசைக்கப்படவேண்டும்?

### ருத்திரனும் மித்திராவருணர்களும்

3. எதனல் மித்திரனும், வருணனும், ருத்திரனும் எல்லாத் தேவர்களும், பரஸ்பரம் அன்புள்ள எங்களுக்கு அனுகூலத்தைச் செய்ய இசைக்கப்படவேண்டும்.

### ருத்திரன்

4. நாங்கள், துதிபாலகனும், யக்ஞபாலகனும், சுகப்படுத்தும் ஔடதங்களுள்ளவனுமான ருத்திரனிடம்,

பிரகஸ்பதியின் புதல்வனுன சம்யுவைப்போல் சுகத்தை விரும்புகிருேம்.

5. ருத்திரன், சூரியன்போல் சோதியுள்ளவன். பொன்போல் பிரகாசிப்பவன். தேவர்களின் நடுவே உத்தமன். மனைகளைத் தருபவன். 513

6. அவன் எங்களுடைய குதிரைகளுக்கும், செம்மறிகளுக்கும், செம்மறிக் கடாக்களுக்கும், மனிதர்களுக்கும், ஸ்திரிகளுக்கும், பசுக்களுக்கும் இனிமையாய்த் தோன்றும் சுகத்தைத் தருவானுக.

### ஸோமன்

7. ஸோமனே! நூறு மனிதர்களுக்குப் போதுமான செல்வத்துக்கதிகமான செழிப்பையும், மிக்க பலத்தைப் புலப்படுத்தும் உணவையும் எங்களுக்களிக்கவும்.

8. ஸோமனுக்குத் துன்பத்தையளிப்பவர்களும், எங்களுடைய பகைவர்களும், எங்களைத் துக்கப்படுத்தாமல் விருப்பார்களாக. இந்துவே! எங்களை உணவோடு பாலிக்கவும்.

9. ஸோமனே! அமுதமான உத்தம ஸ்தானத்திலுள்ள நீ, யக்ஞசதனத்தில் பிரசைகளின் தலைவனுயிருந்து அவர்கள் உன்னை அலங்காரஞ் செய்யுங்கால் நீ அவர்களை விரும்பவும். 517

## 44. அக்கினி

### 44. பிரஸ் கண்வ காண்வன்
### அக்கினி அசுவினிகள் உஷை

1. அக்கினியே! சாவற்றவனும், ஜாதவேதஸனுமான நீ, அவியளிப்பவனுக்கு உத்தமவசதியோடு பலவித செல்வத்தை உஷையிலிருந்து ஏந்தி வா. இன்று காலையோடு எழும் தேவர்களை இங்கு அழைத்து வா.

2. அக்கினியே! நீ விரும்பப்படும் தூதன் அவிகளை ஏற்றுபவன். நீ யக்ஞங்களின் வாகனம். நீ அசுவினிகளோடும் உஷையோடும் சேர்ந்து மிருத்ததும் பலப்படுத்துவதுமான உணவை எங்களுக்களிக்கவும்.



### அக்கினி

3. நாங்கள் இன்று தூதனும், வசுவும், பலரால் விரும்பப்படுபவனும், புகைக்கொடி ஏற்றுபவனும், ஒளி பரத்துபவனும், வழிபடுபவனின் யக்ஞத்தைப் பாலிப்பவனுமான அக்கினியை தினத்தின் உதயத்திலே போற்றுகிருேம்.

4. நான் வைகறையிலே உத்தமனும், மிக்க இளைஞனும், அதிதியும், நன்கழைக்கப்படுபவனும், அவியளிப்பவனிடம் பிரியமாயிருப்பவனும், ஜாதவேதஸனுமான அக்கினியை அவன் எல்லாத் தேவர்களையும் இங்கு அழைத்து வர ஏத்துகிறேன்.

5. அமிருதனே! விசுவபாலகனும், அவி ஏந்துபவனும், யக்ஞாருகனுமான அக்கினியே! நான் அமிருதனும், பாலிப்பவனும், யஜிப்பவனுமான உன்னைப் போற்றுவேன். 522

6. மிக்க இளைஞனுன அக்கினியே! இன்புறுத்தும் சுவாலைகளிருப்பவனும், எங்கும் அழைக்கப்படுபவனும், எங்களால் வழிபடுபவனுக்காகப் போற்றப்படுபவனுமான நீ, எங்களுடைய விருப்பங்களைத் தெரிந்துகொள்ளவும். பிரஸ் கண்வன் சீவித்திருக்க நீண்ட ஆயுளை யளித்து, தெய்வத்தன்மையுள்ள சனத்தை மேம்படுத்தவும்.

7. சனங்கள், ஹோதாவும் சர்வம்ஞனுமான உன்னை மூட்டுகிருர்கள். அக்கினியே! பலரால் அழைக்கப்படும் நீ, அறிஞர்களான தேவர்களை, இங்கு துரிதமாயழைத்து வரவும்.

8. நல்ல யக்ஞங்களுள்ள அக்கினியே! இரவைத் தொடரும் வைகறையிலே ஸவிதாவையும், உஷையை

யும், அசுவினிகளையும், பகனையும், அக்கினியையும் இங்கு அழைத்து வா. கண்வர்கள் அவி செலுத்தும் உன்னை ஒளிப்படுத்துகிறார்கள்.

9. அக்கினியே! நீ யக்ஞங்களையும் சனங்களையும் பாலிப்பவன்; நீ தேவர்களின் தூதன்; நீ இன்று இங்கே உஷையோடு எழுந்து சூரியனைத் தரிசிப்பவர்களான தேவர்களைச் செலுத்தவும்.

10. விபாவசுவான அக்கினியே! நீ அனைவருக்கும் விளங்குகிறாய். நீ பல பழைய உஷைகளைத் தொடர்ந்து பிரகாசித்தாய். நீ கிராமங்களிலிருக்கும் சனங்களைப் பாலிப்பவனாகிறாய் நீ யக்ஞங்களில் பூர்வத்தில் அமர்ந்திருக்கும் மனிதனாகிறாய். 527

11. நாங்கள் யக்ஞ சாதனமும், ஹோதாவும், ரித்விஜனும், பேரறிஞனும், பகைவர்களை அழிப்பவனும், அமுதனும், தூதனுமான உன்னை மநுவைப் போல் ஸ்தாபிக்கிறோம்.

12. நண்பர்களைப் போற்றும் நீ, யக்ஞத்திலே புரோகிதனாய் அமர்ந்து, தேவர்களுக்குத் தூதக்கடனைச் செலுத்துங்கால், உன்னுடைய சுவாலைகள் கடலின் கர்ச்சிக்கும் தரங்கள் போல் கர்ச்சிக்கின்றன, துலங்குகின்றன.

13. அக்கினியே! கூரிய செவிகளோடு என்னைச் செவியுறவும். மித்திரனும், அரியமானும், காலையில் எழும் தேவர்களும், அவி ஏந்தும் தேவர்களைத் தொடர்ந்து செல்லும் அனைவர்களோடு யக்ஞத்திலே தருப்பையின் மீது அமர்வார்களாக.

14. உத்தம தானமளிப்பவர்களும், அக்கினி நாவுள்ளவர்களும், ருதத்தை வளர்ப்பவர்களுமான மருத்துக்கள் எங்கள் ஸ்தோமத்தைக் கேட்பார்களாக. அசுவினிகளோடும், உஷையோடும் செயலை நிறைவேற்றும் வருணன் ஸோமத்தைப் பருகுவானாக. 531



# 45. அக்கினி

## 45. பிரஸ்கண்வ காண்வன்

1. அக்கினியே! நீ எங்களுடைய இந்த யக்ஞத்திலே வசுக்களையும், ருத்திரனையும், ஆதித்தியர்களையும், யக்ஞத்தை நன்கு செய்பவனும், மநுவிலிருந்து தோன்றுபவனும், நெய் தெளிப்பவனுமான சனத்தையும் போற்றவும்.

2. பேரறிஞர்களான தேவர்கள் அவி அளிப்பவனுக்குப் பயன்களையளிப்பவர்கள். சிவப்பு குதிரைகளுள்ள நீ,எங்கள் துதிகளால் போற்றப்பட்டு முப்பத்து மூன்று தேவர்களை இங்கு அழைத்துவா.

3. அக்கினியே! மகத்தான விரதமுள்ளவனும் ஜாதவேதஸுமான நீ, பிரஸ்கண்வனுடைய அழைப்பை-பிரியமேதனையும், அத்திரியையும், விருபனையும், அங்கிரஸனையும் செவியுறுவதுபோல் செவியுறவும்.

4. மகத்தான செயல்கள் உள்ள பிரியமேதர்கள் யக்ஞங்களின் நடுவே சுத்த சோதியோடு பிரகாசிக்கும் அக்கினியைப் பாலனத்துக்காக அழைக்கிறார்கள்.

5. அவிகளால் அழைக்கப்படுபவனும், பயன்களைத் தருபவனுமான நீ, கண்வ மக்களால் பாலனத்துக்குக் கூறப்படும் இந்தத் தோத்திரங்களைச் செவியுறவும். 536

6. மிகுந்த உணவையளிப்பவனும், பலரால் பிரியப்படுபவனுமான அக்கினியே! மானிடர்களின் புதல்வர்கள் சுடர்கேசங்களுள்ள உன்னை, தேவர்களிடம் அவியைச் செலுத்த அழைக்கிறார்கள்.

7. அக்கினியே! அறிஞர்கள், யக்ஞங்களிலே, ஹோதாவும், ரித்விஜனும், மிக்கச் செல்வத்தைத் தருபவனும், செவிச் செல்வனும், மிக்கப் புகழுள்ளவனுமான உன்னை ஸ்தாபிக்கிறார்கள்.

8. அக்கினியே! பொழிந்த ஸோமமுள்ளவர்களும், வழிபடும் மனிதனுடைய அவியை ஏந்துபவர்களுமான அறிஞர்கள் மகத்தாய்ப் பிரகாசிக்கும் உன்னை அவியை அருந்த அழைக்கிறார்கள்.

9. பலத்தால் தோன்றுபவனும், பயனைத்தருபவனும், மனைகளை அளிப்பவனுமான நீ, இன்று இங்கே தருப்பையின் மீது காலையில்வரும் தேவர்களையும், தேவத் தன்மையுள்ள ஜனத்தையும் ஸோமபானத்துக்காக ஸ்தாபிக்கவும்.

10. அக்கினியே! நீ இசைந்த பாக்களோடு முகப்பிலிருக்கும் தேவத் தன்மையுள்ள ஜனத்தை யஜிக்கவும். உத்தம தானங்களையளிக்கும் தேவர்களே! உங்களுக்கு இந்த ஸோமரஸமிருக்கிறது. இதைப் பருகவும். இது நேற்று பொழியப்பட்டது. 541

## 46. அசுவினிகள்

### 46. பிரஸ் கண்வ காண்வன்

1. இதுவரை தென்படாமலிருந்த இந்தப் பிரியமான உஷை வானிலிருந்து இருளை நீக்குகிறாள். அசுவினிகளே! நான் உங்களை மகத்தாய்ப் போற்றுகிறேன்.

2. நான், அழகுள்ளவர்களும், கடலின் மக்களும், செல்வத்தை விருப்பத்தோடு தருபவர்களும், செயலால் மனைகளைத் தருபவர்களுமான தேவர்களைப் பாற்றுகிறேன்.

3. குதிரைகளால் இழுக்கப்படும் உங்களுடைய தேர் போற்றத் தகுந்த சோதிகளுக்கு மேலே செல்லுகிறது. உங்களுக்குத் துதிகள் எங்களால் கூறப்படுகின்றன.

4. பூரணமாயிருப்பவனும், பாலகனும், செயலைக் காண்பவனும், சலங்களை ஆவியாய் எழுப்புபவனுமான சூரியன், எங்களால் அளிக்கப்படும் அவியால் தேவர்களைப் பூர்த்தி செய்கிறான்.



5. பொய்யற்றவர்களே! எங்கள் துதிகளை ஏற்று உங்கள் மனங்களை ஊக்கப்படுத்தும் மதமளிக்கும் ஸோமத்தைப் பருகுங்கள். 546

6. அசுவினிகளே! எங்கள் வறுமையின் தமத்தை விலக்கி, எங்களைத் திருப்தி செய்யப் பலப்படுத்தும் உணவை எங்களுக்குயளியுங்கள்.

7. துதிகளான கடலின் மீது எங்களைக் கடத்திச் செல்ல,கப்பலைப்போல் எங்களிடம் வாருங்கள். அசுவினிகளே! உங்கள் தேரைப் பூட்டுங்கள்.

8. உங்கள் கப்பல் வானுக் கதிகமாய்ப் பரந்திருக்கிறது. அது கடற்கரையிலே நின்றுவிடுகிறது. உங்கள் தேர் நிலத்திலே காத்திருக்கிறது. உங்களைப் போற்ற ஸோமரசங்கள் பொழியப்பட்டிருக்கின்றன.

9. கண்வப்புதல்வர்கள் வினவுகிறார். ஒளி உலகிலிருந்து சூரியனுடைய கதிர்கள் எங்ஙனம் வருகின்றன? சலங்களின் மண்டலத்திலே உஷை எங்ஙனம் தோன்றுகிறாள்? உங்களுடைய வடிவங்களை எங்கு ஸ்தாபிக்க விரும்புகிறீர்கள்?

10. உஷையை ஒளிப்படுத்த சோதியிருந்து பொன் போல் சூரியன் எழுந்தான். அக்கினி இருண்ட சுவாலைகளோடு பிரகாசித்தது. 551

11. சூரியன் இரவின் வரம்புக்கப்பால் செல்ல அவனுக்குத் தக்க வசதி செய்யப்பட்டது. சூரியனுடைய காந்தி தென்பட்டது.

12. தொழுபவன், ஸோமரஸபானத்தால் இன்பமாகும் அசுவினிகளிடமிருந்து தோன்றும் பாலனத்தை யெல்லாம் போற்றுகிறான்.

13. சுகத்தைத் தருபவர்களும், உங்களைத் தொழுபவனோடு மநுவோடு சேர்ந்து வசிப்பவர்களுமான நீங்கள் இங்கு ஸோமத்தைப் பருக வாருங்கள். எங்கள் துதியைப் பற்றுங்கள்.

14. உஷை எங்கும் பரவும் அசுவினிகளான உங்கள் வருகையின் சிறப்பை அனுசரிப்பாளாக. இரவிலே அளிக்கப்பட்ட அவிகளால் இன்புறுவீர்களாக.

15. அசுவினிகளே! நீங்கள் இருவர்களும் ஸோமத்தைப் பருகி உங்களுடைய மாசற்றப் பாலனங்களால் எங்களைச் சுகப்படுத்துவீர்களாக. 556.

## 47. அசுவினிகள்

### 47. பிரஸ் கண்வ காண்வன்

1. அசுவினிகளே! ருதத்தை வளர்ப்பவர்களே! இந்த மிக்க இனியஸோமம் உங்களுக்காகப் பொழியப் பட்டது. நேற்றுப் பிழியப்பட்ட இதைப் பருகுங்கள். அவியளிப்பவனுக்குச் செல்வங்களை யளியுங்கள்.

2. அசுவினிகளே! மூன்று பீடங்களுள்ளதும், மூவ்வுலகங்களில் செல்வதும், மிக்க அழகுள்ளதுமான தேரிலே வாருங்கள். கண்வர்கள் யக்ஞத்திலே உங்களுக்கு மந்திரத்தைக் கூறுகிறார்கள். இந்த அழைப்பைச் செவியுறுங்கள்.

3. அசுவினிகளே! ருதத்தை வளர்ப்பவர்களே! இந்த மிக்க இனிய ஸோமரஸத்தைப் பருகுங்கள். அழகுள்ளவர்களும், செல்வம் ஏந்துபவர்களுமான நீங்கள் இன்று அவியளிப்பவனிடம் வாருங்கள்.

4. ஸர்வக்ஞர்களான அசுவினிகளே! நீங்கள் மூன்று இடங்களில் பரத்திய தருப்பையில் அமர்ந்து யக்ஞத்தை ஸோமரஸத்தால் தெளியுங்கள். புகழ்பெற்ற கண்வப் புதல்வர்கள் பொழிந்துள்ள ஸோம ரஸங்களோடு உங்களை அழைக்கிறார்கள்.

5. அசுவினிகளே! தூயச் செயல்களைப் பாலிப்பவர்களே! நீங்கள் எந்த விரும்பத் தகுந்த பாலனங்களால் கண்வனைப் பாலித்தீர்களோ, அவற்றால் எங்களைப் பாலியுங்கள். ருதத்தை வளர்ப்பவர்களே! ஸோமரஸத்தைப் பருகுங்கள். 561



6. சுந்தரத் தோற்றமுள்ளவர்களே! அசுவினிகளே! உங்களுடைய செல்வம், தாங்கும் தேரிலே சுதாஸனுக்கு உணவை ஏந்தி வந்தீர்கள். அங்ஙனம் எங்களுக்குப் பலரால் விரும்பப்படும் செல்வங்களை வானிலிருந்தோ அல்லது சோதிக்கப்பாலிருந்தோ ஏந்தி வாருங்கள்.

7. பொய்யற்றவர்களே! நீங்கள் அருகிலிருந்தாலும் அல்லது தூரத்திலிருந்தாலும் உங்களுடைய நன்கு கற்பிக்கப்பட்ட தேரிலே சூரியனுடைய ரசிமிகளோடு எங்களிடம் வாருங்கள்.

8. உங்களுடைய யக்ஞத்துக்குச் சேவை செய்யும் குதிரைகள் உங்களை எங்களுடைய யக்ஞத்துக்கு ஏந்தி வருக. நல்ல செயலுள்ள ஈகையனுக்கு உணவையளித்து, தர்ப்பையின் மீது அமருங்கள்.

9. பொய்யற்றவர்களே! அவியளிப்பவனுக்கு நீங்கள் சதா ஏந்திவருவதான சூரிய கவசமுள்ள தேரிலே ஸோமத்தைப் பருக வாருங்கள்.

10. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காகப் புருவசுக்கான அசுவினிகளை சூக்தங்களோடும், தோத்திரங்களோடும் எங்கள் முன்னே அழைக்கிறோம். நீங்கள் கண்வப் புதல்வர்களின் பிரியமான இடத்திலே ஸதா ஸோமத்தைப் பருகவில்லையோ? 566

## 48. உஷை

### 48. பிரஸ் கண்வ காண்வன்

1. உஷையே! சோதியின்மகளே! எங்கள் மீது செல்வத்தோடு உதயமாகவும். ஒளிச் செல்வியே! தேவியே! மிக்கச் சிறப்போடு உதயமாகவும். தானமுள்ளவளே! பசுச் செல்வத்தோடு உதயமாகவும்.

2. குதிரைகளும், பசுக்களுமிருப்பவர்களும், எல்லாவித செல்வத்தையுமளிப்பவர்களுமான தேவர்களிடம் மானிடர்களின் வசதிகளுக்கு அவசியமான எல்லாப் பொருள்களுமிருக்கின்றன. உஷையே! பிரியமான மொழிகளை என்னிடம் பேசவும்; செல்வர்களின் செல்வத்தை எங்களிடம் செலுத்தவும்.

3. தேவியான உஷை, பூர்வத்தில் உதயமானுள்: கடலில்-கப்பல்களைச் செலுத்தும் செல்வத்தை விரும்பு வர்கள்போல் அவள் தோன்றுங்கால் தேர்களைப் பிரே ரிக்கும் உஷை இன்று உதயமாவாளாக.

4. உஷையே! நீ வருங்கால் அறிஞர்கள் தங்கள் மனங்களைத் தானங்களிலே செலுத்துகிருர்கள். இந்த மனிதர்களிலே மிக்க அறிஞன கண்வன் உன்னுடைய புகழைப் போற்றுகிருன்.

5. உஷை, அனைவரையும் பாலனஞ் செய்பவளாய்த் தினந்தோறும் மனைத் தலைவியைப் போல் எழுகிருள். இல்லத்துக்குரிய கடமைகளை நடத்துபவள் போலுள்ள அவள் அழிப்பதற்குரிய பிராணிகளை அழிவுக்குச் செலுத்துகிருள். அவள் வருங்கால் காலுள்ள ஒவ்வொரு பிராணியும் எழுகிறது. அவள் பறவைகளை எழுப்பு கிருள். 571

6. அவள் உழைப்பவனை ஊக்கப்படுத்துகிருள். ஒவ்வொருவனையும் அவனுடைய நோக்கத்துக்குச் செலுத்துகிருள். பனியைத் தெளிக்கும் அவள் அசை வின்மையை அறியாள். உணவையளிப்பவளே! நீ உதயமானவுடன் பறக்கும் பறவைகள் பறப்பதை நிறுத் தாமலிருக்கின்றன.

7. இந்தச் செல்வியான உஷை-தன்னுடைய தேர்களை, சூரியன் உதயமாகும் இடத்துக்கு மேலே வெகு தூரமாயிருக்கும் ஸ்தானத்திலே பூட்டினுள். அவள் நூறு தேர்களோடு மானிடர்களிடம் மேன்மை யாய் வருகிருள்.

8. எல்லாப் பிராணிகளும் அவளுடைய பிரகாசத் தைக் காண அவளைப் போற்றுகின்றன. உத்தமத் தலைவியான அவள் உலகத்தை ஒளிப்படுத்துகிருள். சோதியின் மகள் கைப்பவர்களையும், காய்ப்பவர்களையும் நீக்குகிருள்.

9. சோதியின் மகளான உஷையே! நீ எங்களுக் குத் தினந்தோறும் உன்னுடைய இன்புறுத்தும் நகையால்



இருளை விலக்கி, எங்களுக்கு சௌபாக்கியத்தை யளிப்பவளாய்ப் பிரகாசிக்கவும்.

10. உத்தமத் தலைவியான உஷையே! நீ உதய மாகுங்கால் எல்லாப் பிராணிகளின் சுவாசமும், உயிரும் உன்னில் இருக்கின்றன. ஒளிச் செல்வியே! உன்னுடைய உயர்ந்த தேரிலே எங்களிடம் வா. விசித்திரச் செல்வமுள்ள நீ, எங்களுடைய அழைப்பைக் கேட்கவும் 576

11. உஷையே! மானிடர்களின் நடுவிலிருக்கும் பலவித செல்வத்தை நீ ஏற்றுக்கொள்ளவும். உனக்கு அவியை யளித்து, உன்னைப் போற்றும் நல்ல செய லாளனை யக்ஞத்துக்குச் செலுத்தவும்.

12. உஷையே! எல்லாத் தேவர்களையும் வானி லிருந்து ஸோமத்தைப் பருக அழைத்து வரவும். எங் களுக்கு மேன்மையாயும் வலிமையளிப்பதாயுமுள்ள உணவை, பசுக்களோடும் குதிரைகளோடும் அளிக்கவும்.

13. எங்கும் புலப்படுவையும், பிரகாசிப்பவையும், மங்களமாயுமிருக்கும் ரசிமிகளுள்ள உஷை, விரும்பத் தகுந்தவையும், வண்ணமுள்ளவையும், சுலபமாய்ப் பெறுவதர்க்குரியவையுமான செல்வங்களை எங்களுக் களிப்பாளாக.

14. பாலனத்துக்கும், உணவுக்கும், பழைய ரிஷி களால் அழைக்கப்பட்டவளும், துதிக்கத் தகுந்தவளு மான உஷையே! நீ உன் சுத்த சோதியோடு எங்கள் அவிகளால் திருப்தியாகி எங்களுடைய ஸ்தோமத்தைப் பற்றவும்.

15. உஷையே! நீ உன் ஒளியால் சோதியின் இரு கதவுகளைத் திறந்தாய். எங்களுக்குப் பரந்த பத்திர மான வாச ஸ்தானத்தை யளிக்கவும். தேவியே! பசுவை யும், உணவையும் எங்களுக்களிக்கவும். 581

16. மேன்மையான உஷையே! உணவுத் தருபவளே! நீ எங்களை, மிகுந்துள்ள பலவித செல்வத்

தோடு, மிருந்த பசுக்களோடு, பகைவர்களைக் கொல் லும் புகழோடு, உணவோடு சேர்க்கவும். 562

## 49. உஷை

### 49. பிரஸ் கண்வ காண்வன்

1. உஷையே! வானின் ஒளிமய மண்டலத்துக்கு மேலே இருக்கும் இடத்திலிருந்து உன்னுடைய மங்கள வழிகளால் வா. சிகப்பான பசுக்கள் உன்னை ஸோம ரசமளிப்பவனுடைய மனைக்கு ஏந்தி வருக.

2. உஷையே! சோதி மகளே! நீ ஏறிவருவதும், அழகுள்ளதும், சுகத்தைத் தருவதுமான தேரிலே இன்று நல்ல அவியுள்ள சனத்தினிடம் வா.

3. வெண்ணிற உஷையே! உன் வருகையிலே பிராணிகளும் மனிதர்களும் சலனமாகிறார்கள். சிறகுள்ள பறவைகள் வானப்பிரதேசங்களிலிருந்து எங்கும் பறந்து செல்லுகின்றன.

4. உஷையே! ஒளிக்கதிர்களோடு உதயமாகும் நீ பிரகாசமான பிரபஞ்சத்தை ஒளிப்படுத்துகிறாய். செல் வத்தை விரும்பும் கண்வர்கள் பாக்களோடு உன்னைப் போற்றுகிறார்கள். 586

## 50. சூரியன்

### 50. பிரஸ் கண்வ காண்வன்

சூரியனுடைய குதிரைகள் புகழுள்ளவனும், ஜாத வேதஸனும், தேவனுமான சூரியனை அனைவருங்காண உயரத்திலே ஏந்துகின்றன.

2. விசுவத்தை ஒளிப்படுத்தும் சூரியன் தோன்றுங் கால், நட்சத்திரங்கள் இரவோடு திருடர்கள் போல் நீங்கு கின்றன.

3. அவனுடைய ஒளிப்படுத்தும் கிரணங்கள், மனி தர்களை அனுசரித்து சொலிக்கும் அனல்கள் போல் அவர் களைப் பிரகாசப் படுத்துகின்றன.



4. சூரியனே! நீ வேகத்திலே அனைவரையும் முந்து கிறாய். வழிபடுபவர்களை நோயிலிருந்து நீக்குகிறாய்; சோதியைச் செய்கிறாய்; நீ அனைவருக்கும் புலனாகிறாய்; பிரகாசிக்கும் மண்டலத்தையெல்லாம் ஒளிப்படுத்துகிறாய்

5. நீ தேவர்களுடைய படைகளினிடஞ் செல்லு கிறாய். இங்கு மானிடர்களிடம் வருகிறாய். வியாபகமான சுவர்க்கமும் உன்னைக் காண, நீ எழுகிறாய். 591

6. எந்த சோதியால் சுத்தப்படுத்துபவனும், தீமையிலிருந்து பாலிப்பவனுமான நீ, இந்தப் பிராணிகளை ஏந்தும் உலகத்தை ஒளிப்படுத்துகிறாயோ அச்சோதியை நாங்கள் போற்றுகிறோம்.

7. சூரியனே! நீ இரவுகளையும், பகல்களையும் தோற்றுவித்து, பரந்த வான்வெளியிலே சுற்றுகிறாய். பிறப்புள்ள அனைத்தையும் பார்த்து ஒளிப்படுத்துகிறாய்.

8. தேவனே! சூரியனே! அனைத்தையுங்காண் பவனே! உன் தேரிலே இணைக்கப்பட்ட சுடர்கேசங் களுள்ள ஏழு குதிரைகள் உன்னை ஏந்துகின்றன.

9. சூரியன் தன் தேரைப் பத்திரமாயிழுக்கும் ஏழு பெட்டைக் குதிரைகளை நுகத்திலே இணைத்தான். தாமாகவே சேரும் அவற்றோடு அவன் வருகிறான்.

10. நாங்கள் தமத்தின் மேலே ஏறும் சோதியைப் பார்த்துக் கொண்டு தேவர்களின் நடுவே தேவனும் உத் தமச் சோதியுமான சூரியனை அணுகுகிறோம். 596

11. நட்புக் கதிர்களுள்ள சூரியனே! இன்று உதய மாகி, உயர்ந்த வானிலே எழுந்து, என் இருதயத்தின் நோயையும், என் தேகத்தின் மஞ்சட் காமாலையையும் நீக்குவாயாக.

12. நாங்கள் எங்கள் தேசத்தின் மஞ்சட்காமாலையைக் கிளிகளிடமும், ரோபணகப் பறவைகளிலும் ஹரிதாவ மரங்களிலும் செலுத்துவோமாக.

13. என்னுடைய பகைவனை எதிர்க்கும் சக்தி என்னிடம் இல்லை. என் பகைவனை அழிப்பவனாய் இந்தச் சூரியன் தன் எல்லா ஆற்றலோடும் உதயமானான். 599

## 51. இந்திரன்

### 51. ஸவ்ய ஆங்கிரஸன்

1. பலரால் போற்றப்படுபவனும், பாவால் இன்புறுபவனும், செல்வக் கடலும், மானிடர்களின் நலத்துக்காகச் சூரியனின் கதிர்கள் போல் செயல்களிருப்பவனுமான அந்தப் புகழ் பெற்ற ஆடாம், இந்திரனைப் பாக்களால் ஊக்கப்படுத்துங்கள். வலியனும், விப்பிரனுமான இந்திரனைப் போகத்துக்காகப் போற்றுங்கள்.

2. பாலிப்பவர்களும், பலப்படுபவர்களுமான ரிபுக்கள், மங்கல சலனமுள்ளவனும், வானத்தை நிரப்புபவனும், மிக்க வலியனும், பகைவர்களைத் தாழ்த்துபவனும், அவர்களால் ஊக்கப்படுத்தும் மொழிகள் கூறப்படுபவனும், சதக்கிரதுவுமான இந்திரனின் முன்னிலையில் சென்றார்கள்.

3. நீ அங்கிரஸிர்களுக்காக மேகத்தைத் திறந்தாய். நூறு கபாடங்களால், இயந்திரங்களால் பீடிக்கப்பட்ட அத்திரிக்கு வழியைச் செய்தாய். விமதனுக்கு உணவோடு செல்வத்தையுந் தந்தாய். போர் புரியும் ஸ்தோதாவைப் பாலிக்க நீ உன் வச்சிராயுதத்தைச் செலுத்துகிறாய்.

4. நீ சலங்களின் சிறைத் தடைகளை விலக்கினாய். மலையிலே தூர்த்தன் மறைத்து வைத்திருந்த செல்வத்தைக் கைப்பற்றினாய். அழிக்கும் விருத்திரனை உன் பலத்தால் கொன்றபோது நீ வானிலே அனைவருங்காண சூரியனைப் புலப்படுத்தினாய்.

5. நீ, தங்கள் வாயினுள் அவிகளைத் தமக்கே அளித்துக்கொள்ளும் வஞ்சகர்களை உன் தந்திரங்களால் தாழ்த்தி



னாய். நீ மானிடர்களுக்கு அனுகூலமாகி பிப்ருவின் புரங்களைப் புடைத்தாய். திருடர்களை யொழிக்கும் சமர்களிலே நீ ரிஜிஸ்வினனைப் பாலித்தாய். 604

6. சுஷ்ணன் வீழ்த்தப்படுங்கால் நீ குத்ஸனைப் பாலித்தாய். நீ அதிதிக்வனைப் பாலிக்க சம்பரனைக் கொன்றாய். நீ உன்னுடைய கால்களால் மகத்தான அர்புதனை மிதித்தாய். பூர்வகாலத்திலிருந்தே நீ தஸ்யுவைக் கொல்லப் பிறந்தாய்.

7. உன்னிலே எல்லா வலிமைகளும் சேர்ந்து இணங்குகின்றன. உன் மனம், ஸோமரஸத்தைப் பருக விரும்புகிறது. நாங்கள் உன் கைகளில் வச்சிராயுதம் ஏந்தப்பட்டிருக்கிறது என்பதை அறிகிறோம். நீ பகைவனிடமிருந்து எல்லா ஆண்மைகளையும் விலக்கவும்.

8. நீ ஆரியர்களையும், தஸ்யுக்களையும் தெரிந்து கொள்ளவும், விரதமற்றவர்களை யக்ஞகருத்தாவுக்கு வசப்படுத்தவும். ஆற்றலுள்ள நீ யக்ஞம் நடத்துபவனை ஊக்கப்படுத்தவும். நான் உனக்குத் திருப்தியையளிக்கும் யக்ஞங்களிலே உன்னுடைய எல்லா வீரச் செயல்களையும் போற்ற விரும்புகிறேன்.

9. இந்திரன் விரதமனுசரிக்கும் வழிபடுபவனுக்கு விரதமற்றவர்களை வசப்படுத்துகிறான். போற்றாதவர்களைத் தண்டித்து, போற்றுபவர்களைத் தாங்குகிறான். வம்ரன், வளர்ந்தவனும், வளர்ப்பவனும், சோதியில் பரவுபவனுமான இந்திரனைப் போற்றும் போது யக்ஞத்திலே சேர்க்கப்பட்டிருந்த பொருள்களையெல்லாம் அழித்தான் எடுத்துச் சென்றான்.

10 உசனன், தன் திறத்தால் உன்னுடைய தூய்மைப் படுத்தும் திண்மையையும், சோதியையும், புவியையும் அச்சப் படுத்துகிறான். விருப்பம் போல் இணையும் குதிரைகள்

காற்றின் வேகத்தோடு வலிமை நிறைந்தவனும், மானிடனின் நண்பனுமான உன்னை, நீ அவியை அருந்த வகித்து வருக. 609

11. இந்திரன் விரும்பத் தகுந்த துதிகளால் இன்பமாகுங்கால் வக்கிரமாய்ச் செல்லும் குதிரைகள் இணைக்கப்பட்டுள்ள வக்கிரத் தேரிலே ஏறுகிறுன். உக்கிரனுன அவன், மேகத்திலிருந்து சலப்பிரவாகங்களை வெளிப்படுத்துகிறுன். அவன் சுஷ்ணனின் பரந்த நகரங்களை வசப்படுத்திஞன்.

12. ஸோமத்தைப் பருக நீயாகவே தேரிலேறுகிருய். சார்யாதனின் யக்ஞத்தில் நீ விரும்புவது விளங்குகிறது. மற்றவர்களின் யக்ஞங்களிலே நீ பருகி, திருப்தியாவது போல் அவனுடைய ஸோமங்களிலும் திருப்தியாகவும். இங்ஙனம் நீ சோதியிலே அழியாப் புகழைப் பெறுகிருய்.

13. இந்திரனே! உன்னைத் துதித்து, உனக்கு ஸோமரஸத்தையளிப்பவனும், வயது சென்றவனுமான கட்சிவானுக்கு யுவதியான விருசயையளித்தாய். மங்கலச் செயலுள்ள நீ, மேனை என்னும் பெயரோடு விருஷ்ணஸ்வனுடைய புதல்வியாயிருந்தாய். உன்னுடைய இச் செயல்கள் எல்லாம் யக்ஞங்களிலே போற்றத்தகுந்தவை.

14. நற்செயலுள்ளவன் துன்பமாகுங்கால் இந்திரனைத் தஞ்சமடைகிருன். பஜ்ரர்களின் ஸ்தோமம் கதவின் தூண்போல் திரமாயிருக்கிறது. இந்திரன் செல்வங்களைத் தருபவன். அவன் அளிப்பதர்க்காகக் குதிரைகளையும், பசுக்களையும், தேர்களையும், நிதிகளையும் விரும்புகிருன். அவன் பிரசன்னமாயிருக்கிருன்.



15. இந்த தோத்திரம் விருஷபனும், தானே துலங்குபவனும், சத்தியமான பலத்தையடைந்திருப்பவனும், வலியனுமான இந்திரனுக்குக் கூறப்படுகிறது. இந்திரனே! இந்தப் போரிலே நாங்கள் பல வீரர்களோடு பாலிக்கப்படுவோமாக. உன்னுல் அளிக்கப்பட்ட மங்கல மனையிலே நாங்கள் அறிஞர்களோடிருப்போமாக. 614

# 52. இந்திரன்

## 52. ஸவ்ய ஆங்கிரஸன்

1. நான், சோதியைப் புலப்படுத்துபவனும், நூறு தொழுபவர்களால் துரிதமாய்த் துதிக்கப்படுபவனுமான மேஷனை மேம்படுத்துகிறேன். நான் பல துதிகளோடு இந்திரனை என்னுடைய பாலனத்துக்காக யக்ஞத்துக்கு குதிரை போல் துரிதமாகும் தேரிலே ஏற வேண்டுகிறேன்.

2. யக்ஞ உணவில் இன்பமாகும் இந்திரன், நதியைத் தடுத்த விருத்திரனைக் கொன்று, சலங்களைப் பொழிந்த போது அவன் பிரவாகங்களின் நடுவே மலையைப் போல் திரமாய் நின்ருன். பாலிக்க ஆயிரம் வழிகளுள்ள அவன் பலத்திலே பெருகினுன்.

3. நான், பகைவர்களை ஜயிப்பவனும், பனிமய வானில் பரவியிருப்பவனும், மகிழ்ச்சியின் மூலனும், ஸோமரஸத்தால் மதப்படுபவனும், மகத்தான தானமளிப்பவனுமான இந்திரனை, அறிஞர்களான ரித்விஜர்களோடு சுபச் செயலுள்ள மனத்தோடு அழைக்கிறேன். ஏனெனில் அவனே மிகுந்த உணவை அளிக்கிருன்.

4. அந்த இந்திரனை யக்ஞத்தில் தோன்றும் ஸோமங்கள் கடலை நிரப்பும் ஆழிக்குரிய நதிகள் போல் நிரப்புகின்றன. இந்திரன், விருத்திரனைக் கொன்றபோது அவனருகிலே குடில வடிவமற்றவர்களும், வலியர்களும், எதிர்ப்பற்றவர்களுமான பாலகர்களாம் - மருத்துக்கள் நின்ருர்கள்.

5. அவனுடைய நண்பர்கள் ஸோமரஸத்தால் மதப்பட்டு மழை தடுப்பவனை எதிர்த்துக் கொண்டு இந்திரனிடம் இறக்கங்களில் பாயும் நதிகள் போல் முந்தினார்கள். இந்திரன், யக்ஞ உணவால் ஊக்கமடைந்து வலனின் காப்புக்களை, கிணற்றின் தடைகளைத் திரிதன் போல் நீக்கினான். 619

6. இந்திரனே! சலங்களைத் தடை செய்து, வானின் மேல் மண்டலத்திலே சயனித்திருந்த பரந்துவிரிந்தவனை விருத்திரனுடைய தாடையை, நீ உன் வச்சிரத்தால் அடித்தாய். உன் புகழ் பரந்தது. உன் பலம் சிறந்தது.

7. இந்திரனே! உன்னைப் போற்றும் பாக்கள், ஏரிக்குப் பாயும் சிற்றாறுகள் போல் உன்னிடம் சேர்கின்றன. துவஷ்டா, உனக்குத் தக்க பலத்தைப் பலப்படுத்தினான். உன்னுடைய பகையழிக்கும் வச்சிரத்தைக் கூர் செய்தான்.

8. இந்திரனே! செயல்களை நடத்தும் நீ, மனிதர்களிடம் செல்ல விரும்பி உன் குதிரைகளோடு விருத்திரனைக் கொன்றாய். சலங்களை விடுவித்தாய். கையிலே அயமய வச்சிரத்தை ஏந்தி, வானிலே சூரியனை அனைவருங்காண ஸ்தாபித்தாய்.

9. வழிபடுபவர்கள் அச்சமாகி, தானே துலங்குவதும், திறமளிப்பதும், சோதிக்கு எழுவதும், துதியாருகனான பிரஹதஸாமனைப் பாடினார்கள். அப்போது மானிடர்களுக்கு சேவை செய்பவர்களும், சோதியின் பாலகர்களும், சனங்களுக்குப் போராடுபவர்களும், நண்பர்களுமான மருத்துக்கள், இந்திரனை, விருத்திரனைக் கொல்ல ஊக்கப்படுத்தினார்கள்.

10. இந்திரனே! ஸோமரச பானத்தால் நீ மதமடைந்து, உன்னுடைய வச்சிராயுதம், சோதியையும் புவியையும் தடை செய்த விருத்திரனின் தலையை வேகத்தோடு துணித்த போது தோன்றிய அஹியின் ஆரவாரத்தால் வந்த பயத்தால் வலிய சோதியும் கிழிந்தது. 624



11. இந்திரனே! இப்புவி பத்து மடங்காய்ப் பரந்தாலும், மனிதர்கள் தினந்தோறும் மிக்கப் பெருகினாலும், மகவானே! உன் வலிமை ஒப்பான புகழைப் பெறுகிறது. உன் பலத்தால் தோன்றிய செயல் வானைப் போல் பரவுகிறது.

12. தீரமனமுள்ள இந்திரனே! பரந்த வானின் மேலிருக்கும் நீ, உன்னுடைய சொந்த பலத்தால் எங்களைப் பாலிக்கப் புவியைப் படைத்தாய். நீ பலத்தின் பிரதிநிதியாகிறாய். நீ ஒளியையும் சலத்தையுங்கடந்து சோதிக்குச் செல்லுகிறாய்.

13. நீ பரந்த புவியின் பிரதிநிதி. நீ அழகிய வீரர்கள் இருக்கும் சுவர்க்கத்தின் தலைவன். நீ உன் மகிமையால் வானையெல்லாம் நிரப்புபவன். இது சத்தியம். மெய்யாகவே உனக்கு ஒப்பு வேறு எவனுமில்லை.

14. இந்திரனே! சோதியும் புவியும் உன் பரப்பை எட்டவில்லை. சோதியின் சலங்களும் உன் வரம்புக்குச் செல்லவில்லை. நீ ஊக்கத்தோடு மழை தடுப்பவனிடம் சண்டை செய்யுங்கால் உனக்கொப்பான பலம் வேறு எவனிடமும் இல்லை. நீ ஒருவனே உலகத்திலுள்ள அனைத்தையும் வசப்படுத்தினாய்.

15. மருத்துக்கள், உன்னை இந்தப் போரிலே போற்றினார்கள். நீ உன்னுடைய கூரிய வளைந்த வச்சிரத்தால் விருத்திரனுடைய முகத்தையடித்த போது, இந்தப் போரிலே எல்லாத் தேவர்களும் உன்னைப் போல் மகிழ்ந்தார்கள். 629

# 53. இந்திரன்

## 53. ஸவ்ய ஆங்கிரஸன்

1. நாங்கள் மகத்தான இந்திரனுக்கு மங்களமான தோத்திரத்தைக் கூறுகிறோம். தொழுபவனுடைய மனையிலே இந்திரனுக்குத் துதிகள் தோன்றுகின்றன. அதனால் அவன் செல்வங்களை உறங்குபவர்களின் செல்வத்தைத் துரிதமாய் எடுத்துச் செல்லும் திருடனைப் போல் பற்றுகிறான். கொடுப்பவர்களின் நடுவே துந்துதிக்கு மதிப்பில்லை.

2. இந்திரனே! நீ குதிரைகளை, பசுக்களை, யவத்தை யளிப்பவன். நீ செல்வபதி. நீ செல்வ பாலகன். நீ தானத் தலைவன். பழையவன். விருப்பங்களைப் பூர்த்திசெய்து அவற்றை நீக்குபவன். நீ எங்களுடைய நண்பர்களின் நண்பன். நாங்கள் இத்தகைய இந்திரனைப் போற்றுகிறோம்.

3. இந்திரனே! நீ அறிஞன். நீ காந்தன். வீரச் செயல்களை நடத்துபவன். பரவியுள்ள செல்வங்கள் எல்லாம் உன்னுடையவை எனப் பிரசித்தம். ஜயமுள்ள நீ அவற்றைச் சேர்த்து எங்களுக்களிக்கவும். உன்னை விரும்பும் ஸ்தோதாவின் விருப்பத்தைப் பங்கப்படுத்தாதே.

4. நீ இந்த அவிகளாலும், ஸோமங்களாலும் திருப்தியாகி, வறுமையை – பசுக்களாலும் குதிரைகளாலும் விலக்கவும். நல்ல மனமுள்ளவனுகவும். நாங்கள் எங்கள் தஸ்யுவைத் தாழ்த்தி எங்களால் அளிக்கப்பட்ட ஸோமங்களால் திருப்தியான இந்திரனுல் பகைவர்களிடமிருந்து விலக்கப்பட்டு உணவோடு இன்புறுவோமாக.

5. இந்திரனே! நாங்கள் செல்வங்களையும் உணவையும் அடைவோமாக. பலரை இன்புறுத்துபவையும் எங்கும் பிரகாசிப்பவையுமான ஆற்றல்களோடு நாங்கள் உன்னுடைய பலத்தை, பசுக்களை, குதிரைகளையளிக்கும் ஸுமதியால் செழிப்போமாக. 684



6. உனக்கு நண்பனுயிருந்த மருத்துக்கள் உனக்கு இன்பத்தைத் தந்தார்கள். நல்லவர்களின் தலைவனே! உன்னைத் துதித்து உனக்கு அவிகளையளித்த ஸ்தோதாவை எதிர்த்தப் பதினுயிரந் தடைகளை, பகைவர்களால் எதிர்ப்பற்றிருந்தநீ,நீக்குங்கால்,உனக்களிக்கப்பட்ட அவிகளும், ஸோமங்களும் உனக்கு இன்பத்தையளித்தன.

7. பகைவர்களைப் புடைக்கும் நீ, சண்டையிலிருந்து சண்டைக்குச் செல்லுகிறாய். உன் பலத்தால் கோட்டைக்குப் பின் கோட்டையை இடிக்கிறாய். இந்திரனே! உன்னுடைய எதிரியைத் தாழ்த்தும் துணையான வச்சிராயுதத்தாலே நமுசி என்னும் பெயருள்ள வஞ்சகனைத் தூரத்திலேயே கொன்றாய்.

8. நீ அதிதிக்வனுக்காகக் காஞ்சனையும், பர்ணயனையும் உன் தேஜோமயத் திறமையால் தாழ்த்தினாய். ரிஜிசுவனனுல் முற்றுகையிடப்பட்டிருந்த வங்கிருதனின் நூறு கோட்டைகளை நீ துணையின்றி இடித்தாய்

9. புகழ்பெற்ற இந்திரனை நீ, நண்பனற்ற ஸுசிரவஸை எதிர்த்த இருபது சனபதிகளையும், அவர்களுடைய 60099 ஆட்களையும், உன்னுடைய முந்தப்படாத-தடைபடாத தேர்ச் சக்கரத்தால் ஜயித்தாய்.

10. இந்திரனே! நீ உன்னுடைய பாலனங்களால் ஸுசிரவஸைப் பாலித்தாய். தூர்வயாணனையும் உன்னுடைய பாலனங்களால் பாலித்தாய். நீ குத்ஸனையும், அதிதிக்வனையும், ஆயுவையும் மகத்தாயிருந்த இளைஞனை ஸுசிரவஸனுக்கு அடிமைப் படுத்தினாய். 689

11. நாங்கள் தேவர்களால் பாலனமாகி, இந்திரனே! யக்ஞப் பூர்த்தியிலே உன்னுடைய செல்வ நண்பர்களாயிருப்போமாக. உன்னால் செழிப்புள்ள, நீடித்துள்ள ஆயுளையும், வீரப்புதல்வர்களையும் அனுபவித்துவரும் நாங்கள் உன்னைப் போற்றுகிறோம். 640

# 54. இந்திரன்

## 54. ஸவ்ய ஆங்கிரஸன்

1. மகவானே! நீ எங்களை இந்தப் பாபமான போருக்குச் செலுத்தாதே. உன்னுடைய பலத்தை எவனாலும் கடக்க இயலாது. நீ கர்ச்சித்தாய். நீ நதிகளின் சலங்களையும் கர்ச்சிக்கச் செய்தாய். புவி எங்ஙனம் உன் பயத்தால் பிடிக்காமலிருக்கும்?

2. அறிஞனும், ஆற்றலுள்ளவனுமான சக்கரனைப் போற்றவும். சோதியையும், புவியையும் தீரத்திறத்தால் துலக்குபவனும், ஈகையால் நமது விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும், செவியுறுபவனுமான இந்திரனைப் புகழ்ந்து போற்றவும்.

3. தன்னரசு புரியும் திரமனமுள்ளவனும், தீரனும், காந்தனும், மகானுமான இந்திரனுக்கு ஸ்தோமத்தைக் கூறவும். மிக்கப் புகழுள்ள அவன் ஆற்றலுள்ளவன். பகைவர்களை விலக்குபவன். இரு குதிரைகளால் இழுக்கப்படுபவன். அவன் தேரும் காளையுமாகிறான்.

4. நீ, மகத்தான சோதியின் சிகரத்தை ஆட்டினாய். தீரனான நீ, நீயாகவே சம்பரனைக் கொன்றாய். நீ மதத்தோடும், தீர மனத்தோடும் உன்னுடைய கூரிய ஒளிக்கதிருள்ள வச்சிராயுதத்தை மாயாவிகளான அசுரர்களின் கூட்டத்தின் மீது செலுத்தினாய்.

5. நீ, காடுகளை நிரப்பும் கோஷத்தோடு, சுஷ்ணனால் சேர்க்கப்பட்ட செல்வங்களுள்ள காற்றின் தலையிலே நீ மழையைப் பூர்வத்தில் வீழ்த்தினாய். திரமாயும், தீரமாயுமுள்ள மனமிருக்கும் நீ, இன்று அத்தகைய செயல் செய்வதை எவன் தடுப்பான்? 645

6. நீ, நர்யனையும், துர்வசனையும், வய்ய வமிசத்தில் வந்த துர்வீதியையும் பாலித்தாய். சதக்கிரதுவே! நீ ஈருன போரிலே குதிரைகளையும், தேர்களையும் பாலித்தாய். நீ சம்பரனின் தொண்ணூற்றொன்பது கோட்டைகளை இடித்தாய்.



7. இந்திரனுக்கு அவியை யளித்துத் துதியைக் கூறுபவன் இராஜன் ஸத்பதி. தனக்குச் செழிப்பைச் செய்துகொள்கிறான். அவிகளை யளித்து, துதிகளைக் கூறும் அவனுக்கு இந்திரன், தான சீலனாகி, சோதியிலிருந்து மேகங்களை மழை பெய்யச் செய்கிறான்.

8. இந்திரனுடைய க்ஷத்திரம் ஒப்பற்றது. அவனுடைய அறிவும் ஒப்பற்றது. இந்திரனே! உனக்கு அவிகளையளித்து, உன் பலத்தையும் ஆண்மையையும் உறுதிப்படுத்தும் இவர்கள் உனக்கு ஒப்பாருக.

9. கற்களால் பொழியப்பட்டவையும், சட்டுவங்களில் நிறைந்திருப்பவையுமான இந்த ஸோமரஸங்கள் உனக்குச் சித்தமாயிருக்கின்றன. இவை இந்திரனுக்குரிய பானம். இவற்றைப் பருகவும். இவற்றால் உன் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ளவும். பிறகு எங்களுக்கு அளிப்பதற்குரிய செல்வத்திலே உன் மனத்தைச் செலுத்தவும்.

10. இருள், சலதாரையைத் தடுத்தது. மேகம் இந்திரனுடைய வயிற்றினுள் இருந்தது. தடுத்தவன் மறைத்திருந்த சலங்களையெல்லாம் இந்திரன் கீழே விழச் செய்தான். வெள்ளத்தை வெள்ளம் தொடர்ந்து புவியின் பள்ளங்களிலே பாய்ந்தன. 650

11. இந்திரனே! எங்களுக்கு இன்பமளிக்கும் புகழை யளிக்கவும். எங்களுக்குப் பகைவர்களை ஜயிக்கும் மகத்தான பலத்தையும், க்ஷத்திரத்தையுமளிக்கவும்; எங்களைச் செல்வத்திலே பாலிக்கவும்; அறிஞர்களைப் பாலிக்கவும்; உத்தம சந்தானத்தையும் உணவையுந் தரும் செல்வத்தையளிக்கவும். 651

# 55. இந்திரன்

## 55. ஸவ்ய ஆங்கிரஸன்

1. இந்திரனுடைய பெருமை சோதியின் வெளிக் கதிகமாய்ப் பரந்திருக்கிறது. மா நிலம் மகிமையிலே இந் திரனுக்குச் சமமாகாது. பயங்கரனும், மிக்கப் பலிட்டனு மான அவன், போற்றுபவர்களின் பகைவர்களை எப்பொ ழுதும் துன்புறுத்துகிறான். அவன் தன் வச்சிராயுதத்தை, தன் கொம்புகளைக் கூர் செய்யும் காளைபோல் கூர் செய்து கொள்ளுகிறான்.

2. அவன் சலமயக் கடல் போல் எங்கும் மிக்கப் பரந்து பெருகும் நதிகளைப் பற்றுகிறான். அவன் ஸோமத் தைப் பருக காளை போல் பாய்கிறான். போர் வீரனான அவன் தீரத்தால் புகழை விரும்புகிறான்.

3. இந்திரனே! நீ உன்னுடைய சுகத்துக்காக மேகத்தையடிக்கவில்லை. நீ மிகுந்த செல்வமுள்ளவர்களை நடத்துகிறாய். நாங்கள் உனது அனைவரது முற்றும் தேவத்தன்மையை அறிகிறோம். உக்கிரன் தன் வீரச் செயல்களால் எல்லாத் தேவர்களையும் முந்துகிறான்.

4. அவன், போற்றும் ரிஷிகளால் வனத்திலே புகழப்படுகிறான். அவன் தன் அழகான ஆற்றலை சனங் களின் நடுவே புலப்படுத்துகிறான். அவன் நாடுபவர் களின் விருப்பங்களை நிறைவேற்றுகிறான். அவனுடைய பாலனத்திலிருக்கும் அவிச் செல்வன் அவனுக்குத் துதி யைக் கூறுங்கால், இந்திரன் தன்னைப் போற்ற விரும்பும் மற்றவர்களையும் ஊக்கப்படுத்துகிறான்.

5. போர் வீரனான இந்திரன் தூய்மையான திறமை யோடு பெரிய போர்களிலே சனங்களின் நன்மைக்காகப் போராடுகிறான். அவன் நன்கு அழிக்கும் ஆயுதத்தைச் செலுத்தியவுடன் பிரகாசிப்பவனான இந்திரனில் அனை வர்க்கும் சிரத்தை தோன்றுகின்றது. 656

6. புகழை விரும்புபவனும், அசுரர்களின் நன்றாய்க் கட்டப்பட்ட கோட்டைகளை இடிப்பவனும், புவியைப்



போல் பரவுபவனும், மறைவிலிருந்து சோதி மண்டலங் களைப் புலப்படுத்துபவனும், நல்ல செயல்களை நடத்து பவனுமான இந்திரன் யஜிப்பவனுக்குப் பொழிய மழை யைப் பெய்தான்.

7. ஸோமம் பருகுபவனே! உன் மனம் தானத் துக்குத் தோன்றுக. துதிகளைச் செவியுறுபவனே! எங்கள் யக்ஞத்திலே உன் குதிரைகள் வருக. உன் பாகர்கள், குதிரைகளை வசப்படுத்தும் ஆற்றலுள்ளவர்கள். இந்தி ரனே! ஆயுதமேந்திய தந்திரப் பகைவர்கள் உன்னை எதிர்த்து விளங்கார்கள்.

8. நீ உன்னுடைய கைகளிலே தேயாத செல்வத்தை ஏந்துகிறாய். புகழுள்ள இந்திரனுடைய தேகத்திலே தடைபடாத பலமிருக்கிறது. உன் அங்கங்கள், சலங்கள் சேர்ந்துள்ள கிணறுகள்போல் பல வீரச் செயல்களோடு சேர்ந்திருக்கின்றன. இந்திரனே! உன் தேகத்திலே பல வீரச்செயல்கள் இருக்கின்றன. 659

# 56. இந்திரன்

## 56. ஸவ்ய ஆங்கிரஸன்

1. அவாவுடன் புசிக்கிற இந்திரன் யக்ஞச் சட்டு வங்களில் நிறைந்துள்ள ஸோம அவிகளை அருந்த பெட் டைக் குதிரையினிடஞ்செல்லும் அசுவத்தைப் போல் எழுந்தான். அவன் பொன்மயமாயிருப்பதும், இணைக்கப் பட்ட குதிரைகளிருப்பதும், பிரகாசிப்பதுமான தன் தேரை நிறுத்தி, மகத்தான வீரச்செயல்களுக்கு ஊக்கப் படுத்தும் ஸோமத்தைப் பருகுகிறான்.

2. அவிகளை ஏந்தும் ஸ்தோதாக்கள் இந்திரனிடம் கடலில் பயணமாகும் கப்பல்களில் லாபத்தை விரும்பி நெருங்கும் வணிகர்கள்போல் கூடுகிறார்கள். மேன்மை யான யக்ஞத்தின் பாலகனும், பலிஷ்டனுமான இந்தி ரனுக்குத் தோத்திரத்தோடு, மலையில் மலரைப் பறிக்க ஏறும் பெண்கள்போல் ஏறவும்.

3. அவன் ஜயமுள்ளவன். அவன் மகான். அவன் வீரப்போரிலே அவனுடைய குற்றமற்ற அளிக்கும் ஆற்றல் மலையின் சிகரம்போல் பிரகாசிக்கிறது. அவ்வாற்றலால், இரும்புக்கவசமணிந்தவனும், பகைவனைத் தாழ்த்துபவனுமான அவன், மதப்படுங்கால் மாயாவியான சுஷ்ணனைப் பந்தப்படுத்தி, சிறையில் செலுத்துகிறான்.

4. தேவியான திண்மை, பாலனத்துக்காக மிக்க ஊக்கமளிக்கப்படுபவனும், தீரத் திறமையோடு தமத்தை நீக்குபவனும், பகைவர்களைக் கொடுமைப்படுத்திக் கதறச்செய்பவனுமான இந்திரனுக்கு உஷைக்குச் சூரியனைப் போல் சேவை செய்கிறது.

5. அழிக்கும் இந்திரனே! விருத்திரனால் மறைத்து வைக்கப்பட்டிருந்தவையும், உயிரைத் தாங்குபவையும், தேயாதவையுமான சலங்களை நீ சோதியின் எல்லாத் திசைகளிலும் பரத்தியபோது நீ ஸோமரஸத்தால் ஊக்கமடைந்து போரிலிருந்தாய். மதத்தால் விருத்திரனைக் கொன்றாய். சலக்கடலைக் கீழே செலுத்தினாய். 664

6. இந்திரனே! மிக்க வலியனான நீ, உன்னுடைய பலத்தால் உலகத்தைத் தாங்கும் மழையை, சோதியிலிருந்து புவியின் பிரதேசங்களின்மீது செலுத்துகிறாய். நீ ஸோமத்தால் மதமாகி மேகங்களிலிருந்து சலங்களை விலக்கினாய். நீ கனத்த பாறையால் விருத்திரனைக் கொன்றாய். 665

## 57. இந்திரன்

### 57. ஸவ்ய ஆங்கிரஸன்

1. நான், மிக்கத் தானசீலனும், உத்தமனும், பெருஞ் செல்வனும், மெய்யான வலியனும், செங்குத்திலிருந்து கீழே பாயும் சலங்கள்போல் தடைபடாத வேகமிருப்பவனும், பலத்தைத் தாங்க எங்கும் பரவும் செல்வத்தைப் பரத்தியவனுமான இந்திரனுக்கு மனத்தை—துதியை யளிக்கிறேன்.



2. இந்திரனே! உலகமெல்லாம் உன்னைப் புகழ்ந்தது. வழிபடுபவனின் அவிகள் பள்ளத்துக்குப் பாயும் சலங்கள்போல் உனக்குப் பெருகின. இந்திரனுடைய அதப்படுத்தும் பொன்னாயுதம் பகைவன் மீது எறியப்படுங்கால் அது மலைமீது சயனிக்கவில்லை.

3. அழகான உஷையே! பயங்கரனும், போற்றத்தகுந்தவனுமான இந்திரனுக்கு நன்றாய் அவியைச் சேர்ப்பிக்கவும். இந்திரனுடைய அனைத்தையும் தாங்குவதும், புகழப்படுவதும், இந்திரத் தன்மையுமுள்ள சோதி இங்குமங்கும் யக்ஞ அவிக்குப் பாகனால் செலுத்தப்படும் குதிரைகள் போல் இந்திரனால் செலுத்தப்படுகிறது.

4. இந்திரனே! நீ பலரால் போற்றப்படுபவன். உன்னிடம் மிகுந்த செல்வமுண்டு. நாங்கள் உன் ஆதரவை விரும்பி உன்னிடம் வருகிறோம். துதியை விரும்புபவனே! எங்களுடைய பாக்கள் உன்னையன்றி வேறு எவனுக்குமில்லை. பிராணிகளை விரும்பும் புவிபோல் எங்களுடைய மொழியை விரும்பவும்.

5. இந்திரனே! உன் சாமர்த்தியம் சிறந்தது. நாங்கள் உன்னுடையவர்கள். மகவானே! இந்தத் தொழுபவனுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்யவும். மகானான சோதி உன் பலத்தை அளந்தான்—அறிந்தான். இப்புவியும் உன் பலத்துக்கு வணக்கமளித்தது. 670

6. வச்சிராயுதனான இந்திரனே! நீ உன்னுடைய வச்சிராயுதத்தால் பரந்த மகத்தான மேகத்தைத் துணித்துத் துண்டப்படுத்தினாய். தடைபட்டிருந்த சலங்களைத் தாராளமாய்ப் பெருக கீழே செலுத்தினாய். மெய்யாக நீ ஒருவனாகவே எல்லா பலத்தையும் தாங்குகிறாய். 671

## 58. அக்கினி

### 58. நோதா கௌதமன்

1. அக்கினி தேவர்களின் நடுவே ஹோதாவாகவும். வழிபடுவனின் தூதனுகவும் தோன்றுங்கால், பலத்தால் பிறந்தவனும். அமுதனுமான அவன் துரிதமாய்ப் புறப் படுகிறுன். அவன் மிக்க மேன்மையான வழிகளில் சென்று வானை அளந்தான்-செய்தான். அவன் யக்ஞத் திலே அவிகளோடு தேவர்களைப் போற்றுகிறுன்.

2. தேயாத அக்கினிச் சுடரோடு உணவைச் சேர்த்து, அதைப் புசிப்பவனுய்க் காய்ந்த கட்டைகளின் மீது ஏறுகிறுன். தகிக்கும் சுவாலை குதிரையைப் போல் பரவி, பிரகாசிக்கிறது. அவன் சோதியின் உச்சியிலே கர்ச்சிக்கும் மேகத்தைப் போல் கர்ச்சிக்கிறுன்.

3. அவிகளை வகிப்பவனும், ருத்திரர்களாலும், வசுக்களாலும் மதிக்கப்படுபவனும், யக்ஞத்தில் உட்கார் பவனும், செல்வங்களை ஜயிப்பவனும், அமிருதனும், சனங்களால் போற்றப்படுபவனும், மானிடர்களின் நடுவே தேர்போல் கருதப் படுபவனும், பிரகாசிப்பவனு மான அக்கினி தொடர்ந்தளிக்கப்படும் அவிகளை ஏற் கிறுன்.

4. அக்கினி காற்றுல் பிரேரிதமாகி, கர்ச்சித்து, மரங்களின் நடுவே தனது வேகமாய்ப் பரவும் சுவாலை களோடு சுலபமாய் நுழைகிறுன். தேயாதவனும் பிர காசிக்கும் சுவாலையுள்ளவனுமான அக்கினியே! நீ காட்டு மரங்களின் நடுவே காளைபோல் வேகமாய்ப் பாயுங்கால் உன்னுடைய வழி கருப்பாகிறது.

5. சுவாலைப் படை ஏந்தியவனும், வாயுவால் பிரேரிதமானவனுமான அக்கினி மரங்களின் காயாத ஈரத்தை எதிர்த்து, தன் எல்லாத் திறத்தோடும், திரண்ட சுவாலையோடும், வனத்தில் எல்லாப் பொருள் களையும் வெற்றியுடன் தாக்கி, காளைபோல் பாய்கிறுன். அவன் பறக்குங்கால் அசைபவையும் அசையாதவையு மான அனைத்தும் அலறுகின்றன. 676



6. அக்கினியே! மனிதர்களின் நடுவே பிருகுக்கள், தேவத் தன்மையை யடைய, மானிடர்களுக்காக யஜிப்பவனும், தேவர்களை அழைப்பவனும், யக்ஞங்களில் அதிதியும், அன்பு மிகுந்த நண்பனைப் போல் மதிப் பதர்க்குரியவனுமான உன்னை அருமையான செல்வத் தைப் போல் பாலித்தார்கள்.

7. நான் அவிகளோடு ஏழு ஹோதாக்களான அறிஞர்களால், தேவர்களின் ஹோதாவாக அழைக்கப் படும் அந்த அக்கினியைப் போற்றுகிறேன். நான், யக்ஞங்களில் மிக்க யஜிக்கத் தகுந்தவனும் எல்லாச் செல்வங்களை அளிப்பவனுமான அக்கினியிடம் இரத்தினத்தை விரும்புகிறேன்.

8. பலத்தின் மகனே! அனுகூலமாய்ப் பிரகாசிக் கும் அக்கினியே! நீ உன்னைத் துதிப்பவர்களுக்கு இந்த யக்ஞத்திலே இடையருத சுகத்தை யளிக்கவும். உணவின் மகனே! நீ, உன்னைப் போற்றுபவனைப் பாவத்திலிருந்து மீட்டு, இரும்புப் பாலனங்களால் பாலிக் கவும்.

9. விவிதமாய்ப் பிரகாசிக்கும் அக்கினியே! நீ, உன்னைப் போற்றுபவனுக்குப் பாலிக்கும் மனையாகவும். மகவானே! நீ, அவிகளை அளிக்கும் செல்வர்களுக்குச் செல்வமாயிருக்கவும். அக்கினியே! உன்னைப் போற்று பவனைப் பாவத்திலிருந்து பாலிக்கவும். ஞானச் செயல் களின் செல்வனுன அக்கினி, காலையிலே எங்களிடம் துரிதமாய் வருவாளுக. 680

## 59. அக்கினி

### 59. நோதா கௌதமன்

1. அக்கினியே! இருக்கும் வேறு அனல்கள் எல்லாம் உன்னுடைய கிளைகளாயிருக்கின்றன. அமுதங் களான அவை அனைத்தும் உன்னில் இன்புறுகின்றன. வைசுவாநரனே! நீ மனிதர்களின் நாபி. நீ அவற்றை ஆழமாய் நிறுத்தப்பட்ட தூண்போல் தாங்குகிறுய்.

2. சோதிக்குத் தலையும், புவிக்கு நாபியுமான அக்கினி, சோதிக்கும் புவிக்கும் அரசனானன். வைசுவாநரனே! எல்லாத் தேவர்களும் உன்னைச் சோதியின் வடிவிலே ஆரியனுக்காகப் பிறப்பித்தார்கள்.

3. செல்வங்கள், அக்கினி வைசுவாநரனிலே, சூரியனிலே, ஒளியின் நித்திய ரசிமிகள் போல் ஸ்தாபிக்கப்பட்டன. மலைகளிலும், ஓஷதிகளிலும், சலங்களிலும், மனிதர்களிலும் இருக்கும் எல்லாச் செல்வங்களுக்கும் நீ அரசனாகிறாய்.

4. சோதியும், புவியும் தங்கள் புதல்வனுக்காகப் பரந்தன. ஆற்றலுள்ள ஹோதா, போற்றும் கவிஞன் போல் பழைய, பலவித நிறைந்த பாக்களை, அழகாய்ச் சொல்பவனும், சத்திய பலமுள்ளவனும், அனைத்தையும் காட்டுபவனுமான வைசுவாநரனுக்குக் கூறுகிறான்.

5. வைசுவாநரனே! ஜாத வேதஸனே! உன்னுடைய மகிமை பரந்த சோதியையுங் கடந்தது. நீ, மனுவமிசத்தில் வந்த மனிதர்களுக்கு அரசனாகிறாய். நீ. அசுரர்களால் எடுத்துச் செல்லப்பட்ட செல்வத்தைப் போரிலே தேவர்களுக்காக மீண்டும் ஜயித்தாய். 685

6. நான், மழையைப் பொழிபவனும், விருத்திரனைக் கொல்பவன் என மனிதர்களால் புகழப்படுபவனுமான அவனுடைய மகிமையைக் கூறுகிறேன். அக்கினி, வைசுவாநரன், தஸ்யுவை-சலந்திருடுபவனைக் கொன்றான். சலங்களைக் கீழே புவியின் மீது செலுத்தினான். தடை செய்த சம்பரனை மேகத்தைப் பிளந்தான்.

7. வைசுவாநரன் தன் மகிமையால் எல்லா மனிதர்களிலுமிருக்கிறான். பலவித ஒளிபரப்பும் அவன், போற்றத் தகுந்தவன். மிக்கப் பிரகாசிப்பவன். சத்தியத்தைப் பேசுபவன். சதவனியின் புதல்வனான புருத்தனால் பல பாக்களோடு போற்றப்படுகிறான். 687.



# 60. அக்கினி

## 60. கோதா கௌதமன்

1. மாதரிசுவன் பிருகுவனிடம் அவியை ஏந்துபவனும், புகழுள்ளவனும், யக்ஞங்களை ஒளிப்படுத்துபவனும், கவனமாய்ப் பாலிப்பவனும், துரிதமாய்ச் செல்லும் தூதனும், சோதி புவிகளின் புதல்வனும், செல்வம் போல் சிறப்புள்ளவனுமான அக்கினியை நண்பனாக வகித்து வந்தான்.

2. தேவர்களும், மனிதர்களும் இந்த அரசனைப் போற்றுகிறார்கள். விரும்பப்படும் தேவர்களும், மானிடர்களும் அவனுக்கு அவிகளை ஏந்துகிறார்கள். போற்றத் தகுந்தவனும். சனங்களின் தலைவனும், விதிப்பவனுமான ஹோதா, வானிலே சூரியோதயத்துக்கு முன்னே சனங்களிலே அறிஞனால் ஸ்தாபிக்கப்பட்டான்.

3. எங்களுடைய மிக்கப் புதிய] புகழுரை - இனிய நாவுள்ளவனும், இருதயத்திலே பிறப்பிக்கத் தகுந்தவனும், மனுவின் சந்தானங்களான மானிடர்களால் யஜிக்கப்பட்டு, அவிகள் அளிக்கப்பட்டு, போர்க்களத்தில் தோன்றுவிக்கப்பட்டவனுமான அக்கினியிடம் செல்க.

4. விரும்பத் தகுந்தவனும், சுத்தப்படுத்துபவனும், மனைகளையளிப்பவனும், உத்தமனும், ஹோதாவுமான அக்கினி, மனிதர்களின் நடுவே-வேதியின் மீது ஸ்தாபிக்கப்பட்டான். அவன் எங்கள் பகைவர்களைத் துன்புறுத்துபவனாகவும், மனைகளைப் பாலிப்பவனாகவும், இம்மானிகையின் செல்வங்களைப் பாலிப்பவனாகவும் தோன்றுக.

5. கோதம வமிசத்தில் பிறந்த நாங்கள் விரும்பத் தகுந்த துதிகளோடு உன்னைச் செல்வபதியாகப் போற்றுகிறோம். நாங்கள், அவிகள் ஏந்தும் உன்னை, குதிரை சவாரி செய்பவன் போல் தேய்த்து-துடைத்து ஏந்துகிறோம். ஞானச்செயல்களால் செல்வனான அக்கினி காலையிலே எங்களிடம் துரிதமாய் வருவானாக. 692.

# 61. இந்திரன்

## 61. நோதா கௌதமன்

1. நான், வலியனும், வேகனும், மேலானவனும், துதியாருகனும், தடைபடாதவனுமான இந்திரனுக்கு விரும்பத் தகுந்ததுமான ஸ்தோத்தையும்; பசித்தவனுக்கு உணவைப் போல் இதமான அவிகளையும் அளிக்கிறேன்.

2. நான் இந்திரனுக்கு அவிகளை, பசித்தவனுக்கு உணவைப்போல் அளிக்கிறேன். என் பகைவர்களைத் துன்புறுத்தப் பயன்படும் பாக்கோஷங்களை நான் எழுப்புகிறேன். மற்றவர்களும், பழைய தலைவனான இந்திரனை இருதயத்தாலும், மனத்தாலும், அறிவாலும் போற்றுகிறார்கள்.

3. நான், என்னுடைய வாயால், அனைவர்க்கும் ஆதர்சமாயிருப்பவனும், நல்ல பொருட்களைத் தருபவனும், பெரியவனும், அறிஞனுமான இந்திரனை மேம்படுத்த துதியின் சக்தியுள்ள சுத்தமான சொற்களோடு அவனுக்குத் துதி முழக்கத்தை எழுப்புகிறேன்.

4. நான், அவனுக்கு ஸ்தோமத்தை, பாகன் உணவைப்பெற தேரைக் கற்பிக்கும் தச்சன் போல் கற்பிக்கிறேன்—கூறுகிறேன். நான், போற்றத் தகுந்த அவனுக்குப் பெறத்தகுந்த துதிகளையும், அறிஞனான இந்திரனுக்கு உத்தம அவிகளையும் அளிக்கிறேன்.

5. நான், அசுரர்களின் புரங்களை இடிப்பவனும், வீரனும், தான நிதியுமான இந்திரனைப்போற்ற, உணவைப் பெற தேரோடு குதிரையை இணைக்கும் மனிதன் போல் நாக்கோடு துதியைச் சேர்க்கிறேன். 697

6. துவஷ்டா, இந்திரனுடைய நல்ல செயலுள்ளதும், குறி தவறாததுமான வச்சிராயுதத்தைப் போருக்காகக் கூர்ப்பித்தான். அந்தக் கொடும் படையால் பகை தாழ்த்தும் வலியனான தலைவன், விருத்திரனின் அங்கங்களைத் துணித்தான்.



7. உலகத்தைத் தோற்றுவித்தவனுக்குத் தினம் மும்முறை யக்ஞங்கள் செய்யப்பட்டன. அங்கு அவன் அளிக்கப்பட்ட ஸோமங்களைப் பருகினான். அவிகளைப் புசித்தான். விஷ்ணு—இந்திரன்—அசுரர்களின் பக்குவமான செல்வங்களைத் திருடினான். பகையழிப்பவனும், படை செலுத்துபவனுமான அவன், போராடி மேகத்தைத் துளைத்தான்.

8. தேவபத்தினிகளான ஸ்திரீகள் அஹி அழிக்கப்பட்டவுடன் இந்திரனுக்குத் தோத்திரத்தைக் கூறினார்கள். அவன் பிறந்த புவியையும் சோதியையும் சூழ்ந்தான். உன் மகிமை சோதியையும் புவியையுங் கடந்து பரவுகிறது.

9. அவனுடைய மகிமை சோதியையும் புவியையும் கடந்து செல்லுகிறது. தன் மனையிலே தானே துலங்குபவனும், ஒவ்வொரு வீரச்செயலுக்கும் தகுந்தவனாயிருப்பவனும், தகுதியற்ற பகைவனிடம் போராடாமலிருப்பவனும், போரிலே நிபுணனுமான இந்திரன் போருக்கு அழைக்கிறான்.

10. இந்திரன் தன் திறத்தால், தன் வச்சிரத்தால் ஈரத்தை உறிஞ்சும் விருத்திரனைத் துண்டம் துண்டமாய்த் துணித்தான். திருடர்களிடமிருந்து மீட்கப்படும் பசுக்களைப் போல் பாலனமளிக்கும் சலங்களை விடுவித்தான் அவியளிப்பவனின் விருப்பங்களுக்கு இணங்கி அவனுக்கு உணவைத் தருகிறான். 702

11. அவனுடைய பலத்தால் நதிகள் விளையாடுகின்றன. ஏனெனில் அவன் தன் வச்சிராயுதத்தால் அவற்றுக்கு வழியைச் செய்தான். அவன், தன் தலைமைத் தன்மையை ஸ்தாபித்து, அளிப்பவனுக்குச் செல்வத்தைப் பொழிந்து, துர்வீதிக்கு நிலையான ஸ்தானத்தை ஸ்தாபித்தான்.

12. இந்திரனே! துரிதமாய்ச் செல்பவனும் திறமை யுள்ள தலைவனுமான நீ, விருத்திரனிடமிருந்து மழை தோன்றி, புவியின் மீது சலங்கள் பாய, உன்னுடைய வச்சிராயுதத்தை விருத்திரனின் மீது செலுத்தவும். அவ னுடைய கணுக்களை கால்நடைகளை வதைப்பவன் போல் துண்டம் துண்டமாக்கவும்.

13. களத்திலே தன் படைகளைச் செலுத்தி பகைவர் களிடம் போராடி அவர்களை ஜயிக்கும் போது, துரித மான அந்த இந்திரனுடைய பழைய வீரச் செயல்களைப் புதிய பாக்களோடு போற்றவும்.

14. அவனுடைய பயத்தினுல் நிலையான மலைகள் அசையாமலிருக்கின்றன. அவனுடைய தோற்றத்திற்குப் பயந்து சோதியும் புவியும் நடுங்குகின்றன. நோதஸன் அந்த அன்பு மிகுந்த நண்பனின் பாலனத்தைச் சதா போற்றுகிருன். அவன் துரிதமாய் வீரமுள்ள வாணுக.

15. தொழுபவர்களின் துதிகளைப்பெற விரும்புபவ னும், பலவித செல்வத்தின் தலைவனும், பகைவர்களைத் தனியனுகவே ஜயிப்பவனுமான இந்திரனுக்குத் துதியளிக் கப்படுகிறது. சுவஸ்வனுடைய புதல்வனுன சூரியனேடு பொழிபவனுன ஏதசன் போராடுங்கால் அவனை இந்தி ரன் பாலித்தான். 707

16. இந்திரனே! குதிரைகளை இணைப்பவனே! கோதமப் புதல்வர்கள் உன்னை இன்புறுத்த இந்தத் துதிகளைக் கூறினுர்கள். அவர்களுக்குப் பலவித வடிவ முள்ள புத்தியை யளிக்கவும். ஞானச் செயல்களால் செல்வனுன அக்கினி காலையிலே எங்களிடம் துரித மாய் வருவானுக. 708

## 62 இந்திரன்

### 62. நோதா கௌதமன்

1. நாங்கள் அங்கிரஸனைப் போல் சுகப்படுத்தும் ஸ்தோமத்தை மிக்க வலியனும், துதியை விரும்புவனு



மான இந்திரனுக்குச் சிந்திக்கிருேம். நாங்கள், போற்று பவனுல் நல்ல பாக்களோடு போற்றத் தகுந்தவனும், மிக்கப் புகழுள்ளவனுமான தலைவனுக்குத் தோத்திரத் தைக் கூறுவோமாக.

2. அறிஞர்களே! நீங்கள் மகத்தான வலிமையுள்ள இந்திரனுக்கு மகத்தான ஸ்தோத்திரத்தை, முழங்கத் தக்க ஸாம கானத்தைப் பாடுங்கள். ஏனெனில், அவனுல் நம்முடைய பூர்வ பிதாக்கள் அவனைத் துதித்து, காலடிச் சுவடுகளை அறிந்து, திருடப்பட்ட பசுக்களை மீட்டினுர்கள்.

3. இந்திரனும் அங்கிரஸர்களும் தேடுங்கால் ஸரமை தன் குட்டிக்கு உணவைப் பத்திரம் செய்து கொண்டாள். பிறகு பிரகஸ்பதி மலையைப் பிளந்தான். பசுக்களைக் கண்டான். மனிதர்கள் கோக்களோடு கோஷித்தார்கள்.

4. சர்வ சக்தியுள்ள இந்திரனே! நவக்வர்களும், தசக்வர்களுமான ஏழுவிப்பிரர்களால் சுகப்படுத்துவதும், சுவரத்தோடுமுள்ளதுமான ஸ்தோமத்தைப் பெற்ற நீ, உன்னுடைய முழக்கத்தால் மலையும், தானியத்தைத் தரும் மேகமும் கலக்க மடைந்தன.

5. பகையழிப்பவனே! நீ அங்கிரஸர்களால் போற்றப்பட்டு, உஷையோடும், சூரியனேடும் கிரணங் களோடும் இருட்டை விலக்கினுய். இந்திரனே! நீ புவியின் மேடுகளைச் சமப்படுத்தினுய். வானுலகின் மூலத்தைப் பலப்படுத்தினுய். 713

6. அந்த அழகான இந்திரனின் செயல்கள் மிக்க அழகாயிருக்கின்றன. அவனுடைய வீரச் செயல்கள் போற்றத் தக்கவை. புவியிலே ஸ்தாபிக்கப்பட்ட இனிய சலமுள்ள நதிகளை அவன் நிரப்பினுன்.

7. போர்ச் செயல்களால் பற்றப்படாத அவன் துதிகளால் போற்றுபவர்களுக்கு இணக்கமாகிருன். அவன் சேர்ந்திருந்த சோதியையும், புவியையும் தனிப்

படுத்தித் திரப்படுத்தினன். சுபச் செயலுள்ள இந்திரன் சுந்தரமாயும், சிறப்பாயுமுள்ள வானிலே சூரியனைப் போல் சோதியையும், புவியையும் ஏந்தினன்.

8. வெவ்வேறு நிறமுள்ளவர்களும், மீண்டும் மீண்டும் பிறப்பவர்களும், எப்பொழுதும் இளைஞர்களுமான இரவு, தன் கருப்பங்கத்தோடு, பகல் தன் வெளுப்பங்கத்தோடு சோதியையும், புவியையும் பூர்வ காலத்திலிருந்தே மாறி மாறிச் சுற்றி வருகிறார்கள்.

9. பலத்தின் புதல்வனும், உத்தமச் செயல்களில் செல்வனும், நடத்தும் ஆற்றலுள்ளவனுமான இந்திரன், பழைய நட்பைப் பாலித்து வருகிறான். இந்திரனே! நீ அபக்குவப் பசுக்களிலே கருப்பிலும், சிகப்பிலும், பக்குவமாயும், வெளுப்பாயுமுள்ள பாலை நிறைக்கிறாய்.

10. பூர்வகாலத்திலிருந்தே ஒரே இடத்தில் நிலைத்திருப்பவையான விரல்கள் தங்கள் ஆற்றல்களால் அமிருதமான விரதங்களைப் பாலிக்கின்றன. சகோதரிகள் பல்லாயிரக் கணக்கான செயல்களோடு பெருமைப்படும் இந்திரனுக்கு, மனைவிகளைப் போலும், தேவ பத்தினிகளைப் போலும் சேவை செய்கிறார்கள். 718

11. அழகான இந்திரனே! நீ வணக்கத்தோடு மந்திரங்களால் போற்றப்படுகிறாய். நித்தியச் செயல்களை விரும்புவர்களும், செல்வங்களை நாடுபவர்களும், அறிஞர்களும் உன்னிடமே வருகிறார்கள். மிக்க ஆற்றலுள்ள இந்திரனே! அவர்களுடைய மனங்கள், விரும்பும் கணவனை அன்பு மிகுந்த மனைவிகளைப் போல் உன்னைப் பற்றுகின்றன.

12. சுந்தரனே! உன்னுடைய கைகளில் வெகு காலமாக ஏந்தப்பட்டிருக்கும் செல்வங்கள் அழியவில்லை. தேயவில்லை. இந்திரனே! நீ தீரன்; துலங்குபவன்; செயலாளன். ஆற்றலுள்ளவனே! உன்னுடைய ஆற்றல்களால் எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும்,



13. ஆற்றலுள்ள இந்திரனே! கோதமனின் புதல்வனான நோதஸன், நித்தியமாயிருப்பவனும், உன்னுடைய தேருக்குக் குதிரைகளை இணைப்பவனும், நிலையான தலைவனுமான உனக்கு இந்தப் புதிய துதியை எங்களுக்காகக் கற்பித்தான். செயல்களால் செல்வத்தைப் பெற்ற அவன் இங்கு காலையிலே துரிதமாய் எங்களிடம் வருவானாக. 721

## 63. இந்திரன்

### 63. நோதா கௌதமன்

1. இந்திரனே! மகானான நீ, இங்கு பயம் தோன்றியவுடன் புலனாகி உன்னுடைய ஆற்றல்களால் சோதியையும் புவியையும் தாங்கினாய். பிறகு உன்னால் பயமடைந்து எல்லாப் பிராணிகளும், மலைகளும், வேறு பரந்த, கனத்த எல்லாப் பொருள்களும் சூரியனின் கதிர்களைப் போல் நடுங்கின.

2. இந்திரனே! நீ பலவித செயல்களுள்ள குதிரைகளைத் தேரிலே இணைக்குங்கால் உன்னுடைய கைகளிலே வச்சிராயுதத்தைத் தொழுபவன் தருகிறான். அதனால் பகைவர்களை எதிர்க்கும் விரும்பத்தகாத செயல்களைச் செய்து ஜயிக்கிறாய். பலரால் போற்றப்படும் நீ, அவர்களுடைய பல கோட்டைகளை இடிக்கிறாய்.

3. இந்திரனே! நீ அனைவரிலும் உத்தமன்; பகைவர்களை எதிர்த்துத் தாழ்த்துபவன்; ரிபுக்களின் தலைவன்; மனிதர்களின் நண்பன்; சத்துருக்களை யழிப்பவன்; நீ, புகழுள்ள இளைஞனை குத்ஸனைப் பாலித்தாய்; போர்க்களத்திலே நீ, குதிரையோடும், தேரோடும் சுஷ்ணனைக் கொன்றாய்.

4. அனாயாஸமாய்ப் பகைவர்களை ஜயித்து, தஸ்யுக்களைப் புறப்படுத்தி, பொழியுமனமுள்ள சூரனான நீ, விருத்திரனைக் கொன்ற போது, மழை தருபவனும், வச்சிராயுதம் ஏந்துபவனுமான நீ, பெற்ற புகழை குத்ஸன் பெற, நீ அவனை ஊக்கப்படுத்தினாய்.

5. இந்திரனே! எந்தத் தீரனையும் துன்புறுத்த விருப்பமில்லாமலிருக்கும் நீ, நாங்கள் பகைவர்களின் வெறுப்புக் குட்பட்டால், உன்னைப் போற்றும் எங்களுடைய குதிரைகளுக்குத் திசைகளை யெல்லாம் பரத்துவாயாக. வச்சிராயுத மேந்துபவனே! எங்களுடைய சத்துருக்களை மட்பாண்டத்தை, தண்டத்தால் உடைப்பது போல் உடைக்கவும். 726

6. மனிதர்கள், போரின் முழக்கத்திலும், செல்வந் தரும் சமரிலும் உன்னை அழைக்கிறார்கள். வலியனான இந்திரனே! உன்னுடைய இந்தப் போரிலே வீரர்களால் நாடப்பட்டு, பெறுவதற்குரிய பாலனம் எங்களுக்குத் தோன்றுக.

7. இந்திரனே! வச்சிராயுதம் ஏந்துபவனே! நீ புருகுத்ஸனுக்காகப் போர்செய்து அவனுடைய ஏழு புரங்களை இடித்தாய். நீ ஸுதாஸனுக்காக அன்ஹஸனின் செல்வத்தைத் தருப்பையின் நுனியைப் போல் நறுக்கினாய். அரசனே! உனக்கு அவிகளை அளித்து உன்னைத் திருப்தி செய்யும் அவனுக்குச் செல்வத்தை யளித்தாய்.

8. தேவனான இந்திரனே! நீ எங்களுக்குப் புவியெங்கும் பரந்த உணவை, சலத்தைப் போல் பெருகச் செழிப்பிக்கவும். சூரனே! நீ எங்கும் பெருக சலத்தை யளிப்பதுபோல் எங்களுக்கு உணவைச் சீவிக்க அளிக்கவும்.

9. இந்திரனே! கோதமர்களால் உனக்குத் தோத்திரம் கூறப்பட்டது. மந்திரங்கள், வணக்கத்தோடு குதிரைகளால் ஏந்திவரப்பட்ட உனக்கு மொழியப் பட்டது. செயல்களால் செல்வத்தைப் பெற்ற அவன் இங்கு காலையில் துரிதமாய் எங்களிடம் வருவானாக. 730



# 64. மருத்துக்கள்

## 64. நோதா கௌதமன்

1. நோதனே! துதியார்களும், மழையைப் பொழிபவர்களும், பழங்களைப் பக்குவப் படுத்துபவர்களுமான மருத்துக்களுக்கு—அவர்களுடைய சமூகத்துக்கு ஸ்தோத்திரத்தைக் கூறவும். தீரனான நான், இணங்கிய கைகளோடு யக்ஞங்களிலே வாய்மை யுள்ளவையும், சலங்களைப் போல் பெருகுபவையும், என் மனத்தில் தோன்றுபவையுமான மொழிகளைக் கூறுகிறேன்.

2. அவர்கள் வானிலிருந்து பிறந்தார்கள். அழகர்கள்; காளைகள்; ருத்திரப் புதல்வர்கள்; பகைவர்களை ஜயிப்பவர்கள்; பாபமற்றவர்கள்; சுத்தப்படுத்துபவர்கள்; சூரியனைப் போல் பிரகாசிப்பவர்கள்; பூதகணங்கள் போல் பராக்கிரமர்கள்; மழை பிந்துக்களைப் பரப்புவர்கள்; உக்கிரவடிவ முள்ளவர்கள்.

3. ருத்திரப் புதல்வர்கள் தருணர்கள்; மூப்பற்றவர்கள்; துதிக்காதவர்களைத் தாழ்த்துபவர்கள்; தடைபடாமல் செல்லுபவர்கள்; மலைகளைப் போல் திடாங்கர்கள்; தொழுபவனின் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவர்கள். தங்கள் பலத்தால் சோதியிலோ, புவியிலோ உள்ள எல்லாப் பொருள்களையும் ஆட்டுபவர்கள்.

4. அவர்கள் தங்கள் தேகங்களைப் பலவித நகைகளால் அலங்காரஞ் செய்து கொள்கிறார்கள். அவர்கள் எழிலுடனாகத் தங்கள் மார்புகளில் மின்னும் மாலைகளை அணிந்தார்கள். தோள்களிலே ஈட்டிகள் ஏந்தப்படுகின்றன. தலைவர்கள், அவற்றோடும் சொந்த பலத்தோடும் வானிலிருந்து பிறந்தார்கள்.

5. பகைவர்களைப் புசிக்கும் மருத்துக்கள், தொழுபவனைச் செல்வப்படுத்தி, மேகங்களைக் கலக்கி, காற்றுக்களையும் மின்னல்களையும் தங்கள் பலத்தால் பிறப்பிக்

கிறார்கள். ஆட்டுடவர்களும், சுற்றி வருபவர்களுமான அவர்கள் சோதியின் ஆவினங்களைக் கறந்து, புவியைப் பாலால் நிரப்புகிறார்கள். 735

6. உத்தம தானச் சீலர்களான மருத்துக்கள், புட்டியளிக்கும் சலங்களை, நெய்யை யக்ஞங்களில் பொழியும் ரித்விஜர்களைப் போல் பொழிகிறார்கள். அவர்கள் குதிரையைச் செலுத்தும் வீரர்களைப் போல் மேகத்தை அதீனப்படுத்துகிறார்கள். கர்ச்சிப்பதும், குறையாததுமான மேகத்தைக் கறக்கிறார்கள்.

7. மகான்களும் பேரறிஞர்களுமான நீங்கள், மலைகளைப் போல் சொந்த பலமுள்ளவர்கள்; சலனத்திலே துரிதர்கள். சிகப்பாயுள்ள சுவாலைகளிலே உங்கள் சக்தியைச் செலுத்துங்கால், நீங்கள், யானைகளைப் போல் காடுகளைப் புசிக்கிறீர்கள்.

8. பேரறிஞர்களான மருத்துக்கள் சிங்கங்களைப் போல் கர்ச்சிக்கிறார்கள். சர்வக்ஞர்களான அவர்கள் புள்ளிமான்களைப் போல் அழகாயிருக்கிறார்கள். பகைவர்களை அழிக்கிறார்கள். வழிபடுபவர்களை இன்புறுத்துகிறார்கள். அவர்கள் மிக்க உக்கிரவேகமுடனுகி, மான்களோடும் ஆயுதங்களோடும் தடையை விலக்க, வழிபடுபவனைப் பாலிக்க வருகிறார்கள்.

9. படைச் செல்வர்களும், மானிடர்களுக்கு நலத்தைச் செய்பவர்களும், வீரர்களும், உங்கள் கோபத்தில் கொல்லும் உக்கிரமிருப்பவர்களுமான நீங்கள் வருங்கால், சோதியையும், புவியையும் உங்கள கோஷத்தால் நிரப்புகிறீர்கள். உங்களுடைய தேஜசு பீடங்களிருக்கும் தேர்களில் அமர்கிறது. அது சுந்தர வடிவத்தைப் போலும், அழகிய மின்னலைப் போலும் விளங்குகிறது.

10. அனைத்தையுமறிபவர்களும், செல்வத்தோடு சேர்ந்து வசிப்பவர்களும், சக்தியோடு பொருந்துபவர்களும், முழங்குபவர்களும், பகைவர்களை விலக்குபவர்களும், அனந்தமான ஆற்றலுள்ளவர்களும், இந்திரனைப் படையாக அடைந்தவர்களும், மனிதர்களின் தலைவர்களுமான மருத்துக்கள் தங்கள் கைகளிலே சரத்தை ஏந்துகிறார்கள். 740



11. பாலைப் புட்டி செய்பவர்களான மருத்துக்கள், தங்களுக்கு வழியைச் செய்து கொள்ள மரங்களை அழித்துச் செல்லும் யானைகளைப் போல், தங்களுடைய தங்கச் சக்கரங்களால் மேகங்களைக் கிழித்துச் செல்லுகிறார்கள். யக்ஞஸதனத்துக்கு வருபவர்களும், தாமாகவே பகைவர்களை எதிர்ப்பவர்களும், திரமுள்ளவற்றை ஆட்டுபவர்களும், பகைவர்களால் அசைக்கப்படாதவர்களும், துலங்கும் படைகளை ஏந்துபவர்களுமான மருத்துக்கள் யக்ஞங்களில் போற்றப்படுகிறார்கள்.

12. நாங்கள் பகையழிப்பதும், சுத்தப்படுத்துவதும், மழையளிப்பதும், அனைத்தையுங்காண்பதும், ருத்திரனின் சந்ததியுமான மருத்துப் படையை அவியோடு போற்றுகிறோம். அறிஞர்களே! நீங்களும் புழுதியை எழுப்புவதும், உக்கிரமுள்ளதும், ஊக்கமிருப்பதுமான மருத்துக்களின் வலிய படையைச் செல்வத்துக்காகப் போற்றுங்கள்.

13. மருத்துக்களே! உங்கள் பாலனத்தால் பாலிக்கப்படும் மனிதன் பலத்திலே எல்லா சனங்களையும் முந்துகிறான். அவன் குதிரைகளால் உணவையும், மனிதர்களால் செல்வங்களையும் அடைகிறான். அவன் போற்றத் தகுந்த செயலை நடத்துகிறான்; செழிக்கிறான்.

14. மருத்துக்களே! உங்களை ஏந்தும் துதிச் செல்வர்களுக்கு நற்செயல்களில் சிறந்தவனும், போர்க்களத்தில் ஜயிக்கப்படாதவனும், புகழுள்ளவனும், பகைவர்களையளிப்பவனும், செல்வங்களைப் பற்றுபவனும், துதியாகுகனும், சர்வக்ஞனுமான புதல்வனை அளியுங்கள்.

15. மருத்துக்களே! நீங்கள் எங்களுக்கு, திரமுள்ளவையும், மனிதர்கள் நிறைந்தவையும், பகைவர்களை எதிர்ப்பவையுமான செல்வங்களை எங்களுக்கு அளியுங்கள். நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான, எப்பொழுதும் செழிப்பவையான செல்வங்களை அளியுங்கள். செயல்களால் செல்வர்களான அவர்கள் காலையிலே இங்கு துரிதமாய் வருவார்களாக. 745

## 65. அக்கினி

### 65. பராசரசாக்தியன்

1-2. அக்கினியே! புலவர்களும், பரஸ்பரம் அன்புள்ளவர்களுமான தேவர்கள்-நீ பசுவைத் திருடிய திருடனைப்போல் சலங்களின் குகையிலே-குழியிலே பதுங்கியிருக்கும் போது உன்னைக் காலடிச்சுவடுகளால் அறிந்து தொடர்ந்தார்கள்.

3-4. தேவர்கள் ருதத்தின் வழிகளை அணுகினார்கள். ஓடியவனின் அடையாளங்களைப் பற்றினார்கள். சோதனை எங்கும் பரந்தது. புவி, சுவர்க்கம் போலாயிற்று. சலங்கள், துதியால் வளர்ந்தவனும், ருதத்தின் மூலமான நீரின் கருப்பத்தில் புலனுமான அக்கினியைப் பாலித்தன.

5-6. அக்கினி, புட்டியைப் போல் போற்றத் தக்கவன்; புவியைப் போல் பரந்தவன்; மலையைப் போல் விளைவிப்பவன்; சலங்களைப் போல் சுகப்படுத்துபவன்; போரிலே எதிர்க்கச் செலுத்தப்பட்ட குதிரையைப் போலிருப்பவன்; சலங்களைப் போல் பாய்பவன். அவனை எவன் தடுக்க இயலும்?

7-8. அவன் சகோதரிகளுக்குச் சகோதரனைப் போல், சலங்களுக்குப் பிரியமான பந்துவாகிறான். அவன், தன் பகைவர்களை யழிக்கும் அரசனைப் போல் காடுகளைத் தகிக்கிறான். காற்றினால் ஊக்கமாகுங்கால் காடுகளிலே திரிகிறான். புவியின் ரோமங்களைக் கழிக்கிறான்.



9-10. அவன் உட்கார்ந்துள்ள அன்னத்தைப் போல் சலங்களின் நடுவே சுவாசிக்கிறான். காலையில் எழுப்பப்பட்ட அவன், ஒளியால் அனைவருக்கும் சைதன்யத்தை யளிக்கிறான். ஸோமனைப்போல் சான்றோனாயிருக்கும், சிருட்டிப்பவனாயிருக்கும் அவன், ருதத்திலிருந்து – நீரிலிருந்து பிறந்தான். அங்கு-அச்சலங்களில், அவன் சுருண்ட அங்கங்களோடு மிருகத்தைப் போல் பதுங்கியிருந்தான்– மறைந்திருந்தான். தோன்றிய பிறகு அவன் வளர்ந்தான் அவனுடைய ஒளி வெகுதூரம் பரந்தது. 755

## 66. அக்கினி

### 66. பராசரசாக்தியன்

1-2. விசித்திரச் செல்வத்தைப் போலும், அனைத்தையும் நோக்கும் சூரியனைப் போலும், பாலிக்கும் பிராணவாயுவைப் போலும், பிரியமுள்ள புதல்வனைப் போலும், சவாரியை ஏந்தும் குதிரையைப் போலும், பாலைத் தரும் பசுவைப் போலுமுள்ள அக்கினி, சுத்தனாயும் மிக்க சோதியுள்ளவனாயுமிருக்கிறான். அவன் காடுகளை எரிக்கிறான்.

3-4. பத்திரமான மனையைப் போல் அவன் செல்வத்தைப் பாலிக்கிறான். அவன் யவத்தைப் போல் சனங்களைப் புட்டிப்படுத்துகிறான். அவன் பகை சனங்களை ஜயிப்பவன். அவன் ரிஷியைப் போல் தேவர்களைத் துதிப்பவன். மனிதர்களின் நடுவே புகழுள்ளவன். போருக்குச் செல்லும் உற்சாகக் குதிரையைப் போலுள்ள அவன், யக்ஞ சதனத்துக்கு உற்சாகமாய் வருகிறான். அவன் எங்களுக்கு உணவை யளிப்பானாக.

5-6. அரிதான பிரகாசமுள்ள அக்கினி செயலாளனைப் போலிருக்கிறான். அனைவருக்கும் ஆபரணமாயிருக்கும் அவன், மனையிலிருக்கும் வனிதையைப் போலிருக்கிறான். அவன் அற்புத ஒளியோடு பிரகாசிக்கும் போது வெண்மையான பரிதியைப் போலிருக்கிறான்.

மனிதர்களின் நடுவே தங்கத் தேரைப் போலிருக்கும் அவன், போர்க்களங்களிலே துலங்குகிறான்.

7-8. அவன் பகைவர்களை, எதிரியின்மீது செலுத்தப்பட்ட படையைப் போலும், வில்லாளனின் கனல்கூர் அம்பைப் போலும் பயமுறுத்துகிறான். அக்கினி, பிறந்துள்ள அனைவர்க்கும் யமனைப் போலிருக்கிறான். பிறக்கப்போகும் அனைவர்க்கும் அவன் யமனைப் போலாகிறான். அவன் கன்னிகைகளின் காதலன். மனைவிகளின் கணவன்.

9-10. நாங்கள் தாவர, ஜங்கம அவிகளோடு கொட்டங்களுக்குச் செல்லும் பசுக்களைப் போல் எரியும் அக்கினியிடம் செல்வோமாக. சலங்களின் பாய்ந்தோடும் தாரைகளைப் போல் அவன் தன் சுவாலைகளை எங்கும் உந்துகிறான். அவனுடைய கதிர்கள் வானில் தோன்றும் காந்தியோடு சேர்கின்றன. 765

## 67. அக்கினி

### 67. பராசரசாக்தியன்

1-2. மனிதர்களின் நண்பனான அக்கினி, வனங்களில் பிறந்து, வலிமையுள்ளவனை விரும்பும் அரசனைப் போல் தொழுபவனைப் பாலிக்கிறான். துணைவனைப் போல் பிரியமாயிருக்கிறான். நல்ல செயலாளனைப் போல் போற்றத் தகுந்தவன். தேவர்களின் ஹோதாவும், அவிவகிப்பவனுமான அவன், எங்களிடம் நல்ல தியானமுடன் தோன்றுக.

3-4. தன் கையிலே எல்லாச் செல்வத்தையும் ஏந்துபவனும், சலங்களின் குகைகளினுள்-குழிகளில் மறைந்திருப்பவனுமான அக்கினி, தேவர்களைப் பயத்திலே ஸ்தாபித்தான். பிறகு தலைவர்களும் செயல்களை ஏந்துபவர்களுமான தேவர்கள், இருதயத்திலே கற்பித்த மந்திரங்களைக் கூறியவுடன் அக்கினியைக் கண்டார்கள்.



5-6. அவன், அஜனை -பிறப்பற்றவனைப்போல் வானையும், விண்ணையும் தாங்குகிறான். சத்திய மந்திரங்களால் ஒளி உலகை ஏந்துகிறான். அக்கினியே! விசுவ உணவைத் தாங்கும் நீ, பிராணிகளுக்குப் பிரியமான இடங்களைப் பாலிக்கவும். பசுக்கள் செல்லத் தகுதியற்ற இடங்களுக்குச் செல்லவும்.

7-8. குகைகளில் மறைந்திருக்கும் அக்கினியை யறிபவனுக்கும், சத்தியத்தைப் பாலிப்பவனாக, அவனை அணுகுபவனுக்கும், யக்ஞங்களைச் செய்து அவனுக்குத் துதிகளைக் கூறுபவர்களுக்கும் அவன் செல்வத்தைப் புலப்படுத்துகிறான்.

9-10 அறிஞர்கள், ஓஷதிகளில் தன் தன்மைகளை ஸ்தாபிப்பவனும், தாய்மார்களான செடி கொடிகளிலே, மலர்களையும் காய் கனிகளையும் வைப்பவனும், அறிவையும் எல்லா உணவையும் தருபவனும், சல மனையில் இருப்பவனுமான அக்கினியை மனையைப் போல் மதித்துப் போற்றுகிறார்கள். 775

## 68. அக்கினி

### 68. பராசர சாக்தியன்

1-2. அவிகளை ஏந்திச் செல்லும் அக்கினி அவற்றை வேறு பொருள்களோடு கலந்து சோதிக்கு ஏறுகிறான். அவன் இரவுகளையும், அசையும் அசையாத எல்லாப் பொருள்களையும் ஒளிப்படுத்துகிறான். தேவர்களின் நடுவே துலங்கும் அவன் ஒருவனே இந்தத் தாவர, சங்கமப் பொருள்களில் எல்லாம் பரவுகிறான்.

3-4. தேவனான அக்கினியே! நீ காய்ந்த கட்டையிலிருந்து-மந்தனத்தால் சொலித்துப் பிறந்த பிறகு உன்னை வழிபடுபவர்கள் எல்லாம், யக்ஞத்தைச் செய்கிறார்கள். அவர்கள் அமுதனான உன்னை உன்னிடம் சேரும் துதிகளோடு துதித்து, சத்தியமான தேவத் தன்மையை அடைகிறார்கள்.

5-6. ஸத்தியத்துக்குச் சென்றவனுக்குத் துதிகள் கூறப்படுகின்றன. யக்ஞத்துக்குச் சென்றவனுக்கு அவிகள் அளிக்கப்படுகின்றன. அவனில் எல்லா உணவுமுண்டு. அறிஞர்கள் அவனுக்கு எல்லாச் செயல்களையும் நடத்துகிறார்கள். அக்கினியே! நீ வழிபடுபவனுடைய எண்ணங்களை அறிந்து, உனக்கு அவிகளை அளிப்பவனுக்கும், அளிக்க விரும்புபவர்களுக்கும் செல்வங்களை அளிக்கவும்.

7-8. நீ மனுவிலிருந்து தோன்றிய மக்களிடம் தேவர்களின் ஹோதாவாக வசிக்கிறாய். நீயே அவர்களுடைய செல்வங்களின் தலைவனாயிருக்கிறாய். அவர்கள் உன்னிடம் தங்கள் தேகங்களுக்கு, பிறப்பிக்கும் ரேதஸை விரும்புகிறார்கள். அவர்கள் தங்களுடைய சொந்த ஆற்றல்களோடு சேர்ந்து தடைபடாமல் எல்லாப் பொருள்களையும் அறிகிறார்கள்.

9-10. அவர்கள், தந்தையினுடைய சொற்களைப் புதல்வர்களைப் போல் அக்கினியின் ஆக்ஞைகளை நிறைவேற்றத் துரிதமாகி, அவனுக்கு யக்ஞத்தை நடத்துகிறார்கள். மிக்க உணவுள்ள அவன் யக்ஞக் கதவுகளான செல்வங்களைப் புலப்படுத்துகிறான். மனையின் மனமுள்ள அவன் வானிலே நட்சத்திரங்களைப் பதித்தான். 785

## 69. அக்கினி

### 69. பராசர சாக்தியன்

1-2. சூரியனைப் போல் வெண்மையாய்ப் பிரகாசிப்பவனும், உஷையை மாய்ப்பவனுமான அக்கினி அனைத்தையும் ஒளிப்படுத்துகிறான். அவன் இணைந்துள்ள வானையும், விண்ணையும், சூரியனுடைய சோதியால், தன் ஒளியால் நிரப்புகிறான். நீ பிறந்தவுடன் உன் ஆற்றலால் எங்கும் பரவுகிறாய். நீ தேவர்களின் புதல்வனாகி, தந்தையுமாகிறாய்.

3-4. மேதாவியும், பணிவுள்ளவனும், பகுத்துணர்பவனுமான அக்கினி உணவுக்குச் சுவையைப் பசுக்களின்



ஆபீனத்தைப் போல் தருகிறான். அவன் அழைக்கப்பட்டு யக்ஞசதனத்தில் அமர்கிறான். மனிதர்களின் நடுவே அன்புள்ளவனைப் போல் சுகத்தைப் பரத்துகிறான்.

5-6. அவன் மனையிலே, பிறந்த புதிய புதல்வனைப் போல் இன்புறுத்துகிறான். அவன் ஊக்கமடைந்த குதிரையைப் போல் பகைவர்களை ஜயிக்கிறான். அக்கினியே! நான் மனிதர்களோடு சமமான இடத்தில் வசிக்கும் தேவர்களையெல்லாம் அழைக்குங்கால் நீயே அந்தத் தேவர்களாக மாறுகிறாய்.

7-8. அரக்கர்கள் உன்னுடைய இந்த விரதங்களைப் பங்கப்படுத்தார்கள். ஏனெனில் விரதங்களைப் பற்றி வழிபடுபவர்களுக்கு யக்ஞத்தின் பயனான சுகத்தைத் தருகிறாய். அவர்கள் உன்னுடைய விரதங்களைப் பங்கப்படுத்தினால் நீ தலைவர்களான மருத்துக்களோடு சேர்த்து அவர்களைப் புறப்படுத்துகிறாய்.

9-10. மனைகளையளிப்பவனும், அறியத்தக்க விஷயமிருப்பவனும், உஷையை மறைக்கும் சூரியனைப் போல் மிக்க ஒளியுள்ளவனுமான அக்கினி இந்த வழிபடுபவனின் விருப்பங்களை அறிவானாக. பிறகு அக்கினியின் கிரணங்கள் தாமாகவே அவிகளை வகித்து யக்ஞக் கதவுகளினிடம் செல்லுகின்றன. அப்பால் தெரியும் வானில் பரவுகின்றன. 795

## 70. அக்கினி

### 70. பராசர சாக்தியன்

1-2. நாங்கள் புத்தியால் பற்றப்படுபவனும் சுத்த ஒளியோடு பிரகாசிப்பவனும், தேவர்களுக்கு நடத்தப்படும் செயல்களை அறிபவனும், மானிட குலத்தின் பிறப்பைக் கிரமப்படுத்தும் நடத்தைகளையறிபவனுமான அக்கினியினிடம் மிக்க உணவை நாடுகிறோம்.

3-4. அவர்கள், சலங்களிலும், வனங்களிலும், எல்லா தாவர சங்கமப் பொருள்களின் இருப்பவனும்,

அமுதனும், எல்லா நல்ல செயல்களைப் பிரஜைகளின் நடுவே அன்புமிகுந்த அரசனைப்போல் நடத்துபவனுமான அக்கினிக்கு மலையிலே-மனையிலே அவிகளை அளிக்கிறார்கள்.

5-6. இரவில் தோன்றும் அக்கினி, சூக்தங்களோடு நன்றாய்ப் போற்றுபவனுக்குச் செல்வங்களைத் தருகிறான். அனைத்தையும் அறிபவனே! தேவர்களுடையவும், மனிதர்களுடையவும் பிறப்பை-மூலத்தை அறியும் நீ, புவியின் மீது வசிக்கும் இந்த எல்லா சீவன்களையும் பாலிக்கவும்.

7-8. பலவித வடிவங்களுள்ள வைகறைகளாலும், இரவுகளாலும், வளர்பவனும், ருதத்தோடு சூழ்ந்தவனும், தாவர ஜங்கமப் பொருள்களால் செழிப்பவனுமான அக்கினி போற்றப்பட்டு, யக்ஞத்திலே ஹோதாவாக அமருகிறான். எல்லாச் செயல்களையும் சித்தப்படுத்துகிறான்.

9-10. நீ எங்கள் பசுக்களையும், வனங்களையும் செல்வப்படுத்துகிறாய். எல்லா மனிதர்களும் போற்றத் தகுந்த பலியை-திறையை, செல்வத்தை எங்களுக்களிப்பார்களாக. அக்கினியே! மனிதர்கள் உன்னைப் பல இடங்களில் மேம்படுத்தி, உன்னிடமிருந்து செல்வங்களை வயது சென்ற தந்தையினிடமிருந்து புதல்வர்களைப் போல் பெறுகிறார்கள்.

11. எடுத்த செயல்களை வெற்றியுடன் முடித்து விரும்புவதைப் பெறுபவனைப் போலும், சரத்தை எய்யும் வீரனைப் போலும், பயங்கரப் பகைவனைப் போலும், போர்களில் பிரகாசிப்பவனுமான அக்கினி எங்களுக்கு நண்பனாகத் தோன்றுக. 806.

## 71. அக்கினி

### 71. பராசர சாக்தியன்

1. சகோதரிகளான விரல்கள் அன்புள்ள அக்கினியைத் தங்கள் சொந்தக் கணவர்களை விரும்பும் மனைவிகளைப் போல் விரும்பி, அவிகளால் இன்புறுத்துகின்றன.



அவை போற்றத்தகுந்த அவனுக்குக் கருப்பாயும், மினுங்குவதாயும், பிரகாசிப்பதாயுமுள்ள உஷைக்கு சேவை செய்யும் ஒளிக்கிரணங்களைப் போல் சேவை செய்கின்றன.

2. நம்முடைய பிதாக்களான அங்கிரஸர்கள் மந்திரங்களால் அக்கினியைத் துதித்து, பலிட்டனும், திடாங்கனும், தின்பவனுமான-பணியை-சத்தத்தால் பயமுறுத்தினார்கள். அவர்கள், மகத்தான சோதிக்குச் செல்லும் வழியை நமக்குச் செய்தார்கள். அவர்கள் சுகமாய்ச் செல்வதற்கான தினத்தையும், நாளின் கொடியான ஆதித்தியனையும், திருடப்பட்ட பசுக்களையும் அடைந்தார்கள்.

3. அவர்கள் ருதத்தை ஏந்தினார்கள். செல்வத்தைப் பற்றினார்கள். பிறகு துதிச் செல்வர்கள் அனல்களைப் பாலிக்கிறார்கள். யக்ஞங்களை நடத்துகிறார்கள். எல்லா விருப்பங்களிலிருந்தும் நீங்கிய அவர்கள் செயலிலே ஊக்கமாகி, தங்கள் அவிகளால் தேவர்களையும், மனிதர்களையும் செழிப்பிக்கிறார்கள். அவனிடம் செல்லுகிறார்கள்.

4. வியானன், அக்கினியை மந்தனஞ் செய்யுங்கால் அவன் பிரகாசமாகி ஒவ்வொரு மனையிலும் புலனாகிறான். வழிபடுபவன் பிருகுவைப் பின்பற்றி அக்கினியைத் தூதச் செயலை நடத்த, தன்னிலும் மிக்க வலிய அரசனிடம் தூதனைச் செலுத்தும் நண்பனான மன்னனைப்போல் நியமிக்கிறான்.

5. வழிபடுபவன், பெரியவனும் பிரகாசிப்பவனுமான பாலகனுக்கு ரஸத்தையளிக்குங்கால், பற்றும் அரக்கன், அக்கினியே! உன்னை அறிந்து புறமோடினான். ஆனால் வில்லியான அக்கினி, தன்னுடைய பயங்கர வில்லிலிருந்து சுடரம்பை அவன் மீது செலுத்துகிறான். தேவன் தன் சொந்தப் பெண்ணிலே ஒளியை ஸ்தாபிக்கிறான். 811

6. தன்னுடைய சொந்த மனையிலே உன்னை எழுப்பி, தினந்தோறும் விரும்பப்படும் அவியை அளிப்பவனுக்கு

அக்கினியே! இரட்டைப் பலமடைந்த நீ, அவனுடைய உணவைப் பெருக்கவும். உன்னுல் போருக்குத் தேரோடு செலுத்தப்படுபவன் செல்வத்தோடு திரும்புவானாக.

7. எல்லா உணவுகளும் அக்கினியிலே கடலில் பாயும் ஏழு பெரிய நதிகளைப்போல் சேர்கின்றன. எங்களிடம் போதுமான உணவில்லை. அதனுல் பந்துக்கள் எங்கள் உணவைப் புசிக்கவில்லை. அனைத்தையும் அறியும் நீ, எங்கள் விருப்பங்களைத் தேவர்களிடம் தெரிவிப்பாயாக.

8. செழிக்க, நரர்களின் தலைவனில் தேஜசு நிறையுங்கால் சுத்தமான ரேதஸ் சோதியிலிருந்து பொழிகிறது. அவனிடம் அக்கினி, வலியனும் குற்றமற்றவனுமாகப் பிறந்து, தருணனும், அறிஞனை புதல்வனுமான அவனை ஊக்கப்படுத்துவானாக.

9. சோதியின் வழியிலே மனோவேகத்தோடு தனியனாய்ச் செல்லும் சூரியன் தோன்றியவுடன் எல்லாச் செல்வங்களுக்கும் தலைவனாகிறான். இரு அரசர்களாகிய மித்திரனும், வருணனும் ஈகைக் கைகளோடு எங்களுடைய பசுக்களிலிருக்கும் பிரியமான அமுதத்துக்குப் பாலகர்களாகிறார்கள்.

10. அக்கினியே! எங்களுடைய தந்தையின் வழியால் வந்த நட்புக்களைப் பங்கப்படுத்தாதே. நீ இருந்ததையும், இருப்பதையும் அறிகிறாய். உருவாகும் மேகத்தைப் போல் மூப்பு என் தேகத்தைத் தளர்த்துகிறது. கேடு வருவதற்கு முன்னே என்னைப் பாலிக்க நினைக்கவும். 816

## 72. அக்கினி

### 72. பராசர சாத்தியன்

1. மானிடர்களுக்கு நல்ல பொருள்களைத் தன் கைகளில் ஏந்தியுள்ள அக்கினி, நித்தியனை இறைவனுக்களிக்கப்படும் ஸ்தோத்திரங்களைப் பற்றுகிறான். எல்லா அமுதங்களையும் துரிதமாயளிக்கும் அக்கினி செல்வங்களின் தலைவனாயிருக்கிறான்.



2. எல்லா அமுதர்களும், மயக்கமற்ற மருத்துக்களும், நம்மிடம் புதல்வனைப்போல் பிரியனாயிருப்பவனும், நம்மைச் சுற்றிலும் எங்கும் இருப்பவனை—நாட-விரும்பித் தேடினார்கள். ஆனால் அவனைக்காணவில்லை. அவர்கள் களைப்படைந்து, கால்களால் நடந்து, அவனுடைய செயல்களை அறிந்து, அக்கினியின் சுந்தரமான, கடையான மறைந்திருந்த இடத்திலே வந்து நின்றார்கள். சிரமத்தால் களைப்படைந்து அவனுடைய அடிச்சுவட்டைத் தொடர்ந்து, சிரத்தையுள்ள அவர்கள் அக்கினியின் அழகான உத்தம ஸ்தானத்துக்குச் சென்றார்கள்.

3. அக்கினியே! சுத்தர்களான மருத்துக்கள் சுத்தமான உன்னை மூன்று வருடங்கள் நெய்யோடு போற்றினார்கள். அதனால் அவர்கள் யக்ஞங்களிலே போற்றத்தகுந்த நாமங்களைப் பெற்றார்கள். அவர்கள் மீண்டும் பிறந்து தேவத்தன்மைகளுள்ள தேகங்களை அடைந்தார்கள்.

4. யக்ஞர்களான தேவர்கள் மகத்தான சோதி புவிகளின் நடுவே, அக்கினியை எங்கே, எங்கே எனத் தேடினார்கள். ருத்திரனுக்குரிய ரிக்குகளைக் கூறினார்கள். அவியின் பாதி பாகத்துக்குரிய இந்திரனோடு மருத்துக்களின் கணம், அக்கினி பரம பதத்தில் மறைந்திருப்பதை அறிந்து அவனை அடைந்தார்கள்.

5. தேவர்கள் உன்னைக் கண்டுபிடித்து அங்கே உட்கார்ந்தார்கள். அவர்கள் தேவபத்னிகளோடு முழந்தாள்களை வளைத்து உனக்குத் துதியாருக வணக்கத்தைச் செலுத்தினார்கள். நண்பனான உன்னுடைய காட்சியிலே பாலிக்கப்படும் நண்பர்களான தேவர்கள், தங்கள் தேகங்களைத் தாபப்படுத்தி யக்ஞங்களைச் செய்தார்கள். 821

6. யக்ஞாருகர்கள், உன்னில் மூவேழு மர்ம யக்ஞங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன என்பதை அறிகிறார்கள். அவற்றால் அமுதனான உன்னைப் பாலிக்கிறார்கள்.

ஆதலால் நீயும் அத்தகைய நட்போடு அவர்களுடைய பசுக்களையும், எல்லாத் தாவர ஜங்கமப் பொருள்களையும் பாலிக்கவும்.

7. அக்கினியே! அறிவதற்குரிய எல்லாப் பொருள்களை அறியும் நீ, மானிடர்கள் உயிருடனிருக்கப் பசிப் பிணியை நீக்கும் உணவை அளிக்கவும். சோதி புவிகளின் நடுவே தேவர்கள் செல்லும் வழிகளை அறிந்து தளராமல் தேவ தூதனாகவும்—அவிகளை ஏந்தவும்.

8. அக்கினியே! சோதியிலிருந்து பாயும் ஏழு சுத்தமான நதிகள் உன்னால் செலுத்தப்படுகின்றன. ருதத்தை உணர்பவர்கள் செல்வத்தின் கதவுகளை அறிந்தார்கள். பசுக்கள் மறைக்கப்பட்டிருந்தன. ஸரமை, உனக்காகப் பசுக்களின் திடமாய்க் கட்டப்பட்ட சிறையை—மடியை, மிகுந்த பாலைக் கண்டாள். அதனால் மானிட வம்சம் இன்னும் பாலனமாகிறது

9. ஆதித்தியர்கள், அமுதத்வத்துக்கு வழியைச் செய்யக் கருதி யக்ஞங்களை யெல்லாம் தோற்றுவித்தார்கள். அவற்றால் விழாமல் தப்பித்தார்கள். தாயும் தரணியுமான அதிதி, தன் மகிமையால், தன் மகத்தான புதல்வர்களோடு உலகத்தைத் தாங்க இயங்கினாள். அக்கினியே! நீ அக்காலத்திலிருந்தே அவிகளைப் பெற்றாய்.

10. வழிபடுபவர்கள் இந்த அக்கினியிலே யக்ஞத்தின் மங்களச் செல்வங்களை ஸ்தாபித்தார்கள். கண்களான நெய்யையும் அளித்தார்கள். பிறகு அமுதர்கள் சோதியிலிருந்து வருகிறார்கள். அக்கினியே! உன்னுடைய பிரகாசமான சுவாலைகள் எல்லாத் திசைகளிலும் பாயும் நதிகளைப் போல் பரவுகின்றன. தேவர்கள் சுவாலைகளைப் பார்த்து இன்புறுகிறார்கள். 826

## 73. அக்கினி

### 73. பராசர சாக்தியன்

1. அக்கினி, தந்தையின் வழி வந்த செல்வத்தைப் போல் உணவைத் தருபவன். அறிஞனின் கற்பனையைப்



போல் புலப்படுத்துபவன். அதிதியைப் போல் விரும்பப்படும் அவன், இனிமையான இடத்தில் சயனிக்கிறான். அவன் ஹோதாவைப் போல் வழிபடுபவனின் மனையைச் செல்வப்படுத்துகிறான்.

2. சத்தியத்தைக் காணும் அக்கினி, தேவனான ஸவிதாவைப் போல் தன் ஆற்றலால் வழிபடுபவர்களை எல்லாப் போர்களிலிருந்தும் பாலிக்கிறான். அவன் இயல்பைப் போல்—சூரியனைப் போல் சத்தியன். ஆத்மாவைப்போல் சுகப்படுத்துபவன். அவனே எப்பொழுதும் போற்றத் தகுந்தவன்.

3. அவன் தேவனான சூரியனைப் போல் விசுவத்தைத் தாங்குபவன். அவன் அனுகூல நண்பர்களோடுள்ள அரசனைப் போல் புவியிலே வசிக்கிறான். மனிதர்கள் அவனுடைய முகப்பிலே தந்தையின் மனையில் வசிக்கும் புதல்வர்களைப் போல் அமர்கிறார்கள். குற்றமற்றவளும், கணவனால் விரும்பப்படுபவளுமான மனைவியைப் போல் அவன் சாந்தமாயிருக்கிறான்.

4. அக்கினியே! அத்தகைய உன்னை மனிதர்கள் தங்கள் மனைகளின் பத்திரமான இடங்களில் எப்பொழுதும் ஒளிப்படுத்திப் பாலிக்கிறார்கள். உனக்கு மிக்க உணவையளிக்கிறார்கள். நீ விசுவான்னமாகி எங்களுக்குச் செல்வங்களை ஏந்துபவனாகவும்.

5. அவிச் செல்வர்கள் உணவைப் பெறுவார்களாக. உன்னைப் போற்றி உனக்கு அவிகளையளிக்கும் அறிஞர்கள் நீடித்த ஆயுஸைப் பெறுவார்களாக. நாங்கள் போர்களிலே பகைவர்களிடமிருந்து செல்வங்களை ஜயிப்போமாக. புகழுக்காக அவர்களுடைய பாகத்தைத் தேவர்களுக் களிப்போமாக. 831

6. பசுக்கள், அக்கினியை விரும்பி அவனுடைய ஒளியில் பாகமடைந்து, பருகுவதற்காகப் பாலைப்பூர்ண ஆபீனங்களோடு ஏந்தி வருகின்றன. நதிகள் அவனுடைய ஸுமதியை விரும்பி தூரத்திலிருந்து மலையின் அருகில் பாய்கின்றன.

7. அக்கினியே! யக்ஞர்களான தேவர்கள் உன்னுடைய ஸுமதியை விரும்பி, பிரகாசிக்கும் உன்னிலே அவியை ஸ்தாபித்தார்கள். அவர்கள் இரவையும், உஷையையும் வெவ்வேறு ரூபங்களுடன் செய்தார்கள். கருப்பையும் சிகப்பையும் ஒருமைப் படுத்தினார்கள்.

8. செல்வங்களுக்காக உன்னால் செலுத்தப்பட்ட மானிடர்களான நாங்கள், செல்வர்களாவோமாக. நீ, உன் ஒளியால் சோதியையும், வானையும், புவியையும் நிரப்பி, உலகத்தையெல்லாம் நிழலைப் போல் பற்றுகிறாய்.

9. அக்கினியே! உன்னால் பாலிக்கப்படும் நாங்கள், குதிரைகளைக் குதிரைகளாலும், மனிதர்களை மனிதர்களாலும், வீரர்களை வீரர்களாலும் ஜயிப்போமாக. தந்தை வழியில் வந்த செல்வத்தையடைந்தவர்களும் அறிஞர்களுமான எங்களுடைய புதல்வர்கள் நூறு வருடங்கள் வாழ்வார்களாக.

10. அறிஞனான அக்கினியே! எங்களுடைய இந்தத் துதிகள் உன் மனத்துக்கும், இருதயத்துக்கும் பிரியமுள்ளவையாகுக. தேவர்களால் போற்றத் தகுந்த அவியை உனக்களித்து, நாங்கள் உன்னுடைய வறுமை நீக்கும் செல்வத்தைப் பாலிப்பவர்களாவோமாக. 886

## 74. அக்கினி

### 74. கோதம ராஹூகணன்

1. நாங்கள் யக்ஞத்துக்குத் துரிதமாகி, தூரத்திலே எங்களைச் செவியுறும் அக்கினிக்கு மந்திரத்தைக் கூறுவோமாக.

2. துன்புறுத்தும் பகைவர்கள் ஒன்று சேருங்கால் எந்தப் பழையவன் வழிபடுபவனுக்குச் செல்வத்தைப் பாலிக்கிறான்?

3. மானிடர்கள், விருத்திரனைக் கொல்பவனும், பல போர்களிலே செல்வத்தைச் ஜயிப்பவனுமான அக்கினி பிறந்தவுடன் அவனைப் போற்றுவார்களாக.



4-5. அங்கிரஸனே! ஆற்றல் மகனே! நீ எந்த யஜிப்பவனுடைய மனையிலே தேவ தூதனாகயிருக்கிறாயோ, எவனுடைய அவியை நீ தேவர்கள் புசிக்க ஏந்திச் செல்கிறாயோ, எவனுடைய யக்ஞத்தை விரும்பத்தக்கதாகச் செய்கிறாயோ, அவனை—எல்லா மனிதர்களும் யக்ஞத்திலும், தேவதையிலும், அவிகளிலும் செல்வன் எனக் கூறுகிறார்கள். 841

6. மிக்கப் பிரகாசிக்கும் அக்கினியே! எங்களுடைய துதியையும், புசிக்க எங்களுடைய அவிகளையும் பெற்றுக் கொள்ள இங்கு தேவர்களை அழைத்து வா.

7. அக்கினியே! நீ தூதனாகச் செல்லும் போதெல்லாம் உன் தேரினுடைய, குதிரைகளினுடைய கேட்பதற்குரிய சத்தம் கேட்கவில்லை.

8. அக்கினியே! ஒரு தலைவனுக்கு அடிமைப்பட்டிருந்த அவன் உன்னால் பாலனமாகி உன் முகப்பிலே அவிகள் அளிப்பவனாக நிற்கிறான். அவனிடம் கூச்சமில்லை. அவன் உணவோடு இருக்கிறான்.

9. தேவனான அக்கினியே! நீ, தேவர்களுக்கு அவிகளை அளிப்பவனுக்கு, பிரகாசிப்பதும், பலத்தையுந் தருவதுமான மகத்தான செல்வத்தைப் பொழிய விரும்புகிறாய். 845

## 75. அக்கினி

### 75. கோதம ராஹூகணன்

1. எங்களுடைய அவியை வாயால் ஏற்கவும். தேவர்களைத் திருப்தி செய்யும் பரந்த தோத்திரத்தைக் கேட்கவும்.

2. அக்கினியே! பேரறிஞனே! அங்கிரஸர்களின் தலைவனே! நாங்கள் இப்பொழுது விரும்பத்தகுந்ததும், இன்புறுத்துவதுமான ஸ்தோத்திரத்தை உனக்குக் கூறுவோமாக.

3. அக்கினியே! மனிதர்களின் நடுவே உன் பந்து எவன்? எவன் உனக்கு யக்ஞத்தை யளிக்கத் தகுந்தவன்? நீ யார்? நீ எங்கு வசிக்கிறாய்?

4. அக்கினியே! நீ எல்லா சனங்களுக்கும் பந்துவாயிருக்கிறாய். அவர்களுக்குப் பிரிய நண்பனுயுமிருக்கிறாய். போற்றத் தகுந்த நீ, நண்பர்களுக்கு நண்பனுயிருக்கிறாய்.

5. அக்கினியே! நீ எங்களுக்காக மித்திரா வருணர்களை யஜிக்கவும். தேவர்களை யஜிக்கவும். ருதத்தை யஜிக்கவும். நீ உன்னுடைய சொந்த மனைக்குச் செல்லவும். 850

## 76. அக்கினி

### 76. கோதம ராஹூகணன்

1. அக்கினியே! நீ எங்களிடம் வர உன் மனத்தை எங்ஙனம் இசைப்பது? சுகப்படுத்தும் தோத்திரம் எது? யக்ஞங்களால் எவன் பலத்தை அடைந்தான்? உனக்கு நாங்கள் அவிகளை எந்த மனத்தோடு அளிக்கவேண்டும்?

2. அக்கினியே! இங்கு வா. ஹோதாவாக அமரவும். நீ எங்களுடைய தலைவனுகவும். ஏனெனில் உன்னைத் தடை செய்பவன் எவனுமில்லை. எங்கும் வியாபகமாகும் சோதியும், புவியும் உன்னைப் பாலிப்பார்களாக. தேவர்கள் மிக்க அனுகூல மனமுடன் அவர்களை யஜிக்கவும்.

3. அக்கினியே! எல்லா அரக்கர்களையும் பஸ்பப்படுத்தவும். எங்கள் யக்ஞங்களைப் பழிச் சொற்களிலிருந்து பாலிக்கவும். ஸோம பாலகனை அவனுடைய குதிரைகளோடு இங்கு அழைத்து வா. தாராளமாயளிக்கும் அவனுக்கு நல்ல வரவேற்பை யளிக்கிறோம்.

4. நான் பிரஜையை யளிக்கும் துதியோடு சுவாலையால் அவிகளை ஏந்திச் செல்லும் அக்கினியை யழைக்கிறேன். இங்கு நீ தேவர்களோடு அமரவும். யக்ஞா



ருகனுன நீ, ஹோதாவாகவும், போதாவாகவும் இருக்கவும். செல்வத்தை யளிப்பவனும், தோற்றுவிப்பவனுமான நீ எங்களை எழுப்பவும்.

5. கவிகளின் நடுவே கவியாயிருக்கும் நீ, விப்பிரனுன மனுவின் யக்ஞத்திலே அவிகளோடு தேவர்களை யஜித்தாய். அக்கினியே! சத்தியம் மிக்க நிறைந்துள்ள ஹோதாவான நீ, அங்ஙனம் இன்று அவிகளை மதந்தரும் துடுப்பால் அளிக்கவும். 855

## 77. அக்கினி

### 77. கோதம ராஹூகணன்

1. நாங்கள், அமுதனும், சத்தியவானும், ஹோதாவும், யஜிப்பவனும், மனிதர்களின் நடுவில் இருப்பவனும், தேவர்களுக்கு அவிகளை ஏந்திச் செல்பவனுமான அக்கினிக்கு அவியை எங்ஙன மளிப்போம்? தேவர்களால் போற்றத் தகுந்தவனும், பிரகாசிப்பவனுமான அக்கினிக்கு எந்தத் தோத்திரம் கூறப்படுகிறது?

2. யக்ஞங்களில் சுகப்படுத்துபவனும், சத்தியவானும், ஹோதாவுமான அக்கினியை, தோத்திரங்களோடு முற்படுத்துங்கள். ஏனெனில், மானிடர்களுக்காகத் தேவர்களிடம் செல்லும் அவன், அவர்களை நன்கறிகிறான். அவர்களை மனத்தால் போற்றுகிறான்.

3. அக்கினி, செயலை நடத்துபவன். அவன் அழிப்பவன், பிறப்பிப்பவன், நண்பனைப் போல் அற்புதச் செல்வத்தைத் தருபவன். எல்லா சனங்களும் தேவர்களை விரும்பி அழகான அக்கினியை அணுகி யக்ஞங்களிலே அவனுடைய நாமத்தையே முதலில் கூறுகிறார்கள்.

4. பகைவர்களை யழிப்பவனும், மனிதர்களின் நடுவே மிக்கப் பெரிய தலைவனுமான அக்கினி, எங்களுடைய துதியையும், வணக்கத்தையும், அவிகளோடு விரும்புவானாக. மிகுந்த செல்வமுள்ள, மிகுந்த வலிமையுள்ள அவியைத் தோற்றுவித்த அறிஞர்கள் வணக்கத்தையளிக்க விரும்புவார்களாக.

5. இங்ஙனம் சத்தியவானும், ஜாத வேதஸனுமான அக்கினி கோதமர்களால் துதிக்கப்பட்டான். அவன் அவர்களைப் புகழாலும், பலத்தாலும் புட்டிப்படுத்துவானாக. அவன் எங்கள் சேவையை அறிந்து செழிப்பானாக. 860

## 78. அக்கினி

### 78. கோதம ராஹூகணன்

1. ஜாத வேதஸனே! அனைத்தையுங் காண்பவனே! அக்கினியே! கோதமன் உன்னைத் துதியோடு போற்றுகிறான். நாங்களும் உன்னைப் புகழுரைகளோடு அடிக்கடி பாடுகிறோம்.

2. நாங்கள் புகழுரைகளோடு, செல்வங்களை விரும்பி, துதியோடு கோதமனால் போற்றப்படும் உன்னை அடிக்கடி பாடுகிறோம்.

3. நாங்கள் மிகுந்த உணவையளிக்கும் அத்தகைய உன்னை, அங்கிரஸனைப் போல் அழைக்கிறோம். நாங்கள் புகழுரைகளோடு உன்னை அடிக்கடி பாடுகிறோம்.

4. நாங்கள் புகழுரைகளோடு, விருத்திரர்களைக் கொல்பவனும், தஸ்யுக்களைத் துரத்துபவனுமான உன்னைப் பாடுகிறோம்.

5. ரஹூகணப் புதல்வர்களாயிருக்கும் கோதமர்களான நாங்கள், அக்கினிக்கு இனிய மொழிகளைக் கூறினோம். நாங்கள் புகழுரைகளோடு அவனைப் பாடுகிறோம். 865

## 79. அக்கினி

### 79. கோதம ராஹூகணன்

#### வானக்கினி

1. பொன் கேசமுள்ள அக்கினி–மின்னல் அழிப்பவனாகி மேகத்தை ஆட்டுகிறான். காற்றைப்போல் துரிதனாகிறான். அவன் சுந்தர ஒளியுள்ளவனாகி மேகத்தால் மழையைப் பெய்விக்க அறிகிறான். உஷைகள் இதை அறியார்கள். அவர்கள் உணவிருப்பவர்களும், தங்கள் சொந்த வேலைகளில் மனத்தைச் செலுத்துபவர்களுமான சாதுப் பிரஜைகளைப் போல் இருக்கிறார்கள்.



2. உன்னுடைய கதிர்கள் சலனமாகும் மருத்துக்களோடு சேர்ந்து மேகத்தை அடிக்கின்றன. கருத்த காளை கர்ச்சித்தது. தாரை சுகந்தருபவையும், காந்தியால் சிரிப்பவையுமான பிந்துக்களோடு வருகிறது. மழை பொழிகிறது. மேகங்கள் முழங்குகின்றன.

3. மின்னலான அக்கினி, ருதத்தின் பாலால் — மழையின் சலத்தால் உலகத்தைச் செழிப்பிக்கிறது. அது ருதத்தின் நேரான வழிகளால் – அதை – சலத்தைப் பிராணிகள் சுகப்படச் செலுத்துகிறது. அப்பொழுது அர்யமானும், மித்திரனும், வருணனும், எங்குஞ் செல்லும் மருத்துக்களும், மேகத்திலிருக்கும் சலத்தின் மூலஸ்தானத்தின் மறைப்பைத் துளைக்கிறார்கள்.

#### அக்கினி

4. அக்கினியே! ஜாத வேதஸனே! பலத்தின் மகனும், பசுச் செல்வத்தின் தலைவனுமான நீ, எங்களுக்கு மகத்தான புகழையளிக்கவும்.

5. அறிஞனும், மனைகளை அளிப்பவனும், ஒளியுள்ளவனுமான அக்கினி, நம்முடைய துதிகளால் போற்றத் தகுந்தவன். பல சுவாலைகளோடு மின்மினுக்கும் வாயுள்ள நீ, எங்களுக்கு உணவைத் தரும் செல்வம் தோன்றப் பிரகாசிக்கவும். 870

6. பிரகாசிக்கும் அக்கினியே! நீயாகவோ அல்லது உன் ஆட்களாலோ, இரவிலோ, பகலிலோ துன்புறுத்துபவர்களை யெல்லாம் துரத்தவும். கூரிய வாயுள்ள அக்கினியே! அரக்கர்களை யெல்லாம் பஸ்பப் படுத்தவும்.

7. எல்லாச் செயல்களிலும் போற்றத் தகுந்த அக்கினியே! நீ காயத்திரிச் சந்த சூக்தத்தால் போற்றப்பட்டு, உன் பாலனத்தால் எங்களைப் பாலிக்கவும்.

8. அக்கினியே! வறுமையை நீக்குபவையும், அனைவராலும் விரும்பத் தகுந்தவையும், போர்களிலே ஜயிக்கப்படாதவையுமான செல்வங்களை எங்களுக் களிக்கவும்.

9. அக்கினியே! நாங்கள் சீவிக்க சுகத்தைத் தருவதும், எங்களாயுளை யெல்லாம் ஆதரித்து ஞானந் தோடிருப்பதுமான செல்வத்தை எங்களுக்களிக்கவும்.

10. கோதமன், செல்வத்தை விரும்பி, சுத்தமான துதிகளையும், தோத்திரங்களையும் கூறிய சுவாலையுள்ள அக்கினிக்குக் கூறுகிறன் 875

11. அக்கினியே! எங்களைத் தூரத்திலோ, அருகிலோ துன்புறுத்துபவன் அழிவானுக. நீ எங்களைச் செல்வப்படுத்துவாயாக.

12. அனைத்தையுங்காணும் ஆயிரங்கண்களுள்ள அக்கினி, அரக்கர்களை நீக்குகிறன். துதிகளால்–துதிக்கப்பட்டு, ஹோதாவான அக்கினி தேவர்களைத் துதிக்கிறன். 877

## 80. இந்திரன்

### 80. கோதம ராஹூகணன்

1. மிக்க வலியனே! வச்சிராயுதம் ஏந்துபவனே! இங்ஙனம் மதத்திலே, ஸோமத்திலே அறிஞன் உனக்குத் துதியைக் கூறினுன். நீ உன் பயத்தால் அஹியைப் புவியிலிருந்து பிரித்தாய். நீ உன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையை–சுவராஜ்யத்தைப் புலப்படுத்தினுய்.

2. பொழிவதும், மதமளிப்பதும், பருந்தால் ஏந்திவரப்பட்டதும், பொழியப்பட்டதுமான ஸோமம் உன்னை இன்புறுத்தியது. வச்சிரனே! உன் பலத்தால் வானிவிருந்து நீ விருத்திரனை விலக்கினுய். நீ உன்னுடைய சுயராஜ்யத்தை–சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினுய்.



3. முன்னேறவும், பகைவர்களை எதிர்க்கவும், ஜயிக்கவும் உன்னுடைய வச்சிராயுதம் வீணுகாது. இந்திரனே! உன்னுடைய ஆற்றலின் ஆண்மைத் தன்மையுண்டு. நீ விருத்திரனைக் கொல்லவும், சலங்களைத் ஜயிக்கவும், நீ உன்னுடைய சுயராஜ்யத்தை-சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தவும்.

4. நீ புவியிலிருந்தும், சோதியிலிருந்தும் விருத்திரனை விலக்குகிறுய். நீ மருத்துக்களோடிருப்பவையும், பிராணிகளைப் பாலிப்பவையுமான மழை சலங்களைப் பெய்விக்கவும். உன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தவும்.

5. கோபமடைந்த இந்திரன், பகைவன் மீது பாய்ந்து, தன் வச்சிரத்தால் நடுங்கும் விருத்திரனைத் தாடையிலடித்தான். சலங்களைப் பெருகச் செய்தான். அவன் தன்னுடைய சுயராஜ்யத்தை–சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினுன். 882

6. இந்திரன் தன்னுடைய நூறு கணுக்களுள்ள வச்சிரத்தால் விருத்திரனை – அவனுடைய கதுப்பிலே அடித்தான். அவன் மகிழ்ந்து நண்பர்களுக்கு உணவு தோன்றும் வழியை விரும்புகிறன். அவன் தன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்துகிறன்.

7. இந்திரனே! வச்சிரனே! மேகத்தில் வருபவனே! உன்னுடைய ஆற்றல் தடைபடாதது. நீ உன்னுடைய தந்திரத்தால் வஞ்சகமான மிருகத்தைக் கொன்றுய். நீ உன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினுய்.

8. உன்னுடைய வச்சிராயுதம், தொண்ணூற்றென்பது நதிகளின் மீது எங்கும் பரந்தது. உன்னுடைய ஆற்றல் மகத்தானது. உன்னுடைய கைகள்

பலத்தை ஏந்துகின்றன. நீ உன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்துகிறாய்.

9. ஆயிரம் சனங்கள் இந்திரனை ஒருமிக்கத் துதித்தார்கள். இருபது மனிதர்கள் அவனை உயர்த்தினார்கள். நூறு ரிஷிகள் அவனை அடிக்கடி போற்றுகிறார்கள். இந்திரனுக்காக அவி எழுகிறது. இந்திரன் தன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்துகிறான்.

10. இந்திரன் தன் வலிமையால் விருத்திரனுடைய வலிமையை யழித்தான். அவனுடைய பலம் பெரிது. அதனால் அவன் விருத்திரனைக் கொன்று தடைபட்ட சலங்களை விடுவித்தான். அவன் தன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினான் 887

11. வச்சிரனே! மருத்துக்களோடுள்ள நீ, உன் கோபத்திலே, உன் பலத்தால் நீ விருத்திரனைக் கொன்றபோது இப்புவியும் சோதியும் நடுங்கிற்று. நீ உன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினாய்.

12. விருத்திரன் தன் ஆட்டத்தாலும், ஆரவாரத்தாலும் இந்திரனை அசைக்க இயலவில்லை. பல கூர்களுள்ள இரும்பினாலான வச்சிராயுதம் அவன் மீது வீழ்ந்தது. இந்திரன் தன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினான்.

13. நீ உன்னுடைய வச்சிராயுதத்தால் விருத்திரனையும், அவனுடைய இடிப்படையையும் எதிர்க்குங்கால், உன்னுடைய அஹியை அழிக்க விரும்பிய மனத்திண்மை சோதியெங்கும் பரந்தது. நீ உன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினாய்.

14. இந்திரனே! வச்சிராயுதனே! உன் கர்ச்சனையிலே தாவர ஜங்கமப் பொருள்கள் எல்லாம் நடுங்கின. இந்திரனே! உன் கோபத்துக்கு துவஷ்டாவும் பயத்தால் கலங்கினான். நீ உன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினாய்.



15. எங்கும் வியாபகமாயிருக்கும் இந்திரனை நாங்கள் நிச்சயமாக அறியோம். பரத்திலே பலத்தோடிருக்கும் அவனை எவன் அறிகிறான்? தேவர்கள் அவனில் செல்வத்தையும், வீரியச் செயலையும், ஆற்றல்களையும் ஸ்தாபித்தார்கள். அவன் தன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினான். 892

16. அதர்வனும், பிரஜைகளின் தந்தையான மனுவும், தத்யங்களும் நடத்திய யக்ஞங்களில் தோன்றிய அவிகளும், தோத்திரங்களும், பூர்வயக்ஞங்களில்போல் இந்திரனிடம் சேர்ந்தன. அவன் தன்னுடைய சொந்தத் தலைமைத் தன்மையைப் புலப்படுத்தினான். 893

## 81 இந்திரன்

### 81. கோதம ராஹூகணன்

1. மனிதர்கள் விருத்திரனைக் கொல்லும் இந்திரனை, பலத்துக்கும், மதத்துக்கும் உயர்த்தினார்கள். நாங்கள் அவனைப் பெரிய போர்களிலும், சிறிய போரிலும் அழைக்கிறோம். அவன் எங்களைப் போர்களிலே பாலிப்பானாக.

2. வீரனே! நீ சேனைக்கு ஒப்பானவன். நீ சத்துருக்களின் செல்வத்தைத் தருபவன். நீ தாழ்த்துபவனை உயர்த்துபவன். யக்ஞத்தைச் செய்து பொழிபவனுக்கு நீ செல்வத்தைத் தருகிறாய். உன்னிடத்தில் மிகுந்த செல்வமிருக்கிறது.

3. போர்கள் நடைபெறுங்கால் வீரனின் முன்னிலையில் பகைவர்களின் செல்வம் வைக்கப்படுகிறது. உன்னுடைய மதத்தோடு பாயும் குதிரைகளை இணைக்கவும். எவனை நீ கொல்வாய்? எவனை நீ செல்வப்படுத்துவாய்? இந்திரனே! நீ எங்களைச் செல்வப்படுத்தவும்.

4. செயலில் சிறந்தவனும், பகைவர்களுக்குப் பயங்கரனுமான இந்திரன் யக்ஞான்னத்தைப் புசித்து, தன்

பலத்தைப் படுத்தினுன். சுந்தரத் தோற்றமுள்ளவனும், அழகிய தாடையிருப்பவனும், குதிரைச் செல்வனுமான அவன் நம்முடைய செல்வத்துக்காகத் தன் இசைந்த கைகளிலே இரும்பாலான வச்சிராயுதத்தை ஏந்துகிருன்.

5. அவன் தன் புகழால், புவியின் வெளியையும் வானையும் நிரப்பினுன். அவன் விண்ணிலே நட்சத்திரங்களைப் பதித்தான். இந்திரனே! உன்னைப் போல் எவனும் பிறந்ததில்லை; பிறக்கப்போவதுமில்லை. நீ விசுவத்தைத் தாங்குகிருய். 898

6. பாலிப்பவனும், அவிகளை யளிப்பவனுக்கு மனிதருக்குரிய உணவைத் தருபவனுமான இந்திரன், எங்களுக்கு அத்தகைய உணவை அளிப்பானுக. நான் உன்னுடைய செல்வங்களிலே பாகத்தைப் பெற நீ உன்னுடைய மிகுந்த செல்வத்தைப் பங்கிடவும்.

7. நெறிச் செயல்களை நடத்தும் அவன், ஒவ்வொரு மதத்தைப் பெறுங்கால் எங்களுக்குப் பசுக்களின் மந்தைகளைத் தருகிருன். இந்திரனே! உன்னுடைய இரு கைகளால், பல நூற்றுக்கணக்கான தானுவித செல்வங்களைப் பற்றவும். எங்களறிவைக் கூர்மைப் படுத்தவும். எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும்.

8. சூரனே! எங்களுடைய செல்வத்தையும், சக்தியையும் செழிப்பிக்கப் பொழியப்பட்டுள்ள ஸோமத்தை எங்களோடு பருகி திருப்தியாகவும். உன்னிடம் பெரும் செல்வம் உண்டு என்பதை நாங்கள் அறிகிருேம். நாங்கள் எங்கள் விருப்பங்களை உன்னிடம் கூறுகிருேம். ஆதலால் நீ எங்களுடைய பாலகனுயிருக்கவும்.

9. இந்திரனே! உன்னுடைய இந்த மனிதர்கள் அனைவராலும் புசிக்கத் தகுந்த யக்ஞான்னத்தைச் செழிப்பிக்கிருர்கள். நீ அளிக்காதவர்களிடமிருக்கும் செல்வங்களை யறிகிருய். அவர்களுடைய செல்வத்தை எங்களுக்களிக்கவும். 902



# 82. இந்திரன்

## 82. கோதம ராஹுகணன்

1. மகவானே! அருகிலாகவும். எங்களுடைய துதிகளைக் கேட்கவும். நீ எங்களிடம் முன்பு இருந்தது போலிருக்கவும். நீ எங்களை உண்மையே பேச ஊக்கப்படுத்திலுய். அச் சத்திய மொழியால் நீ யாகிக்கப்படுகிருய். இந்திரனே! இப்பொழுது நீ உன்னுடைய குதிரைகளை இணைக்கவும்.

2. தொழுபவர்கள் நீ அளித்த உணவைப் புசித்தார்கள். இன்பமடைந்தார்கள். அதிகமாய்ப் புசித்து, பேச முடியாமல் தங்கள் அங்கங்களை ஆட்டினுர்கள். தாமே துலங்கும் விப்பிரர்கள், தங்களுடைய புதிய துதியால் உன்னைப் போற்றினுர்கள். இந்திரனே! இப்பொழுது நீ உன்னுடைய குதிரைகளை இணைக்கவும்.

3. மகவானே! நாங்கள் காணக் கனகமாயிருக்கும் உன்னை வந்திக்கிருேம். இங்ஙனம் எங்களால் போற்றப் பட்டு நீ செல்வம் நிறைந்த தேரிலே உன்னை விரும்புபவர்களிடம் செல்லவும். இந்திரனே! இப்பொழுது உன்னுடைய குதிரைகளை இணைக்கவும்.

4. அவன் நலங்களைப் பொழிவதும், பசுக்களைத் தருவதும், தானியமும் ஸோமமும் சேர்ந்த கலவையால் நிறைந்ததுமான தேரிலே ஏறுவானுக. இந்திரனே! இப்பொழுது உன்னுடைய குதிரைகளை இணைக்கவும்.

5. சதக்கிரதுவே! உன்னுடைய குதிரைகள் தேரின் வலது பக்கத்திலும் இடது பக்கத்திலும் இணைக்கப்படுக ஸோமான்னத்தால் மகிழ்ந்தவுடன் நீ தேரிலே அன்பு மிகுந்த மனைவியினிடஞ் செல்லவும். இந்திரனே! இப்பொழுது உன்னுடைய குதிரைகளை இணைக்கவும். 907

6. நான் கேசங்களுள்ள குதிரைகளை மந்திரங்களோடு உன் தேரிலே இணைக்கிறேன். புறப்படவும். கைகளில் வாய்வடங்களைப் பற்றவும். பொழியப்பட்டவையும், ஊக்கமளிப்பவையுமான ஸோமரசங்கள் உன்னை மதப்

படுத்தின. வச்சிரனே! இங்ஙனம் புட்டியடைந்து நீ உன் மனைவியோடு திருப்தியாகவும். 908

## 83. இந்திரன்

### 83. கோதம ராஹூகணன்

1. இந்திரனே! உன் பாலனங்களால் நன்கு பாலிக்கப்படும் மனிதன் குதிரைகளுள்ள மனையிலே வசிக்கிறான். முதல்வனாக பசுக்களுள்ள இடத்துக்குச் செல்லுகிறான். நீ, அவனை மிகுந்த செல்வத்தால், கடலை நிரப்ப நாலு திசைகளிலிருந்து ஞானத்தை ஏந்திப் பாயும் நதிகள் போல் நிரப்பவும்.

2. துலங்கும் சலங்கள் யக்ஞபாத்திரத்துக்குப் பாய்கின்றன. அப்பாத்திரத்தைத் தேவர்கள் காண்கிறார்கள். அவர்களுடைய திருஷ்டி கீழே வரும் பரந்த கிரணங்கள் பாத்திரத்தின் மீது வீழ்கிறது ஒரே பெண்ணை மணஞ் செய்து கொள்ள விரும்பும் பல யுவர்களைப் போல் தேவர்கள் ஸோமத்தால் நிறைந்ததும், தேவர்களை விரும்புவதுமான பாத்திரத்தை உத்தர வேதியினருகே செலுத்த விரும்புகிறார்கள்.

3. சுருக்கை உயர்த்தி, உன்னைப் போற்றிய தம்பதிகளை நீ வாழ்த்தினாய். தலைவன் தடைபடாமல் வசிக்கிறான். உன் விரதத்திலே அவன் செழிக்கிறான். பொழியுமவனுக்கு மங்களமான சக்தி தோன்றுகிறது.

4. அங்கிரஸர்கள் முதலில் ஆற்றலைப் பெற்றார்கள். உத்தமச் செயல்களாலும், யக்ஞங்களாலும் அவர்களுடைய அனல்கள் எழுப்பப்பட்டன. பிறகு மனிதர்கள் பணியின் பசுக்களும், குதிரைகளும், வேறு பிராணிகளுமுள்ள எல்லாச் செல்வத்தையும் பற்றினார்கள்.

5. அதர்வன் முதலில் யக்ஞங்களால் திருடப்பட்ட பசுக்களின் வழியைக் கண்டான். பிறகு காந்தனும் விரதபாலகனுமான சூரியன் தோன்றினான். அதர்வன் பசுக்களை அடைந்தான். இந்திரனுக்குக் காவ்ய உசனன் துணையாயிருந்தான். நாம் அசுரர்களை வசப்படுத்தத் தோன்றிய அமிருதனான இந்திரனைப் போற்றுவோமாக. 913



6. நலங்களைத்தரும் செயலுக்குத் தருப்பை நறுக்கப்படுங்காலும், ஹோதா யக்ஞத்திலே சுலோகத்தை அர்ச்சிக்குங்காலும், ஸோமத்தைப் பிழியுங்கால் தொழுபவனைப் போல் சந்திக்குங்காலும் இந்திரன் இன்புறுகிறான். 914

## 84. இந்திரன்

### 84. கோதம ராஹூகணன்

1. இந்திரனே! உனக்காக ஸோமம் பொழியப்பட்டுள்ளது. வலியனே! பகைவர்களைத் தாழ்த்துபவனே! இங்கு வா. வானைத் தன் கதிர்களால் நிறைக்கும் சூரியனைப்போல் இங்கு இந்திரியம் உன்னை நிரப்புக.

2. குதிரைகள் அவனை ரிஷிகளுடைய, மனிதர்களுடைய ஸ்தோத்திரங்களுக்கும், யக்ஞத்துக்கும் ஏந்தி வருக

3. விருத்திரனைக் கொல்பவனே! தேரிலே ஏறவும். உன்னுடைய குதிரைகள் மந்திரத்தால் இணைக்கப்பட்டிருக்கின்றன. ஸோமத்தை யழுத்துங்கால் அதன் சத்தத்தால் உன் கவனத்தை இங்கு செலுத்துக.

4. இந்திரனே! அமுதமாயும், மதமளிப்பதாயும், மேன்மையாயிருக்கும் இந்த ஸோமத்தைப் பருகவும். ருதத்தின் ஸ்தானத்தில் உனக்குச் சுக்கிரனுடைய தாரைகள் பெருகுகின்றன.

5. இந்திரனுக்குத் துரிதமாய் வணக்கத்தை யளியுங்கள். துதிகளைக் கூறுங்கள். பொழியப்பட்ட ஸோமங்கள் அவனை இன்புறுத்துக. அவனுடைய உத்தம பலத்தைப் போற்றுங்கள். 919

6. இந்திரனே! நீ குதிரைகளை இணைக்கிறாய். உனக்கு நிகராக எந்தத் தேர்ப்பாகனுமில்லை. பலத்தி

லும் உனக்கு ஒப்பாக வேறு எவனுமில்லை. நல்ல குதிரைகளிருந்தாலும் உன்னை முந்திச் செல்ல எவனாலும் இயலாது.

7. அவிகளை அளிக்கும் மானிடனுக்குச் செல்வத்தைத் தரும் தனியனே அவன். மாறுபாடற்றவன்; எதிர்ப்பற்றவன். இந்திரனே துரிதமாக அனைவர்க்கும் தலைவனாகிறான்.

8 அவியளிக்காதவனை அவன் தன் காலால் காளானைப் போல் எப்போது மிதிப்பான்? எங்கள் துதிகளை இந்திரன் எப்போது கேட்பான்?

9. பல்லின் நடுவே ஸோமத்தைப் பொழிந்து போற்றுபவனுக்கு இந்திரன் உக்கிரபலத்தை யளிக்கிறான்.

10. சுவைக்கு இனிமையாக யிருப்பதும், இங்ஙனம் பெருகியுள்ளதுமான ஸோமத்தை வெண்மையான பசுக்கள் பருகுகின்றன. எழிலுக்காக அவை வள்ளலான இந்திரனோடு சென்று களிப்புறுகின்றன. கொட்டங்களில் வசிக்கும் அவை இந்திரனுடைய சுயராஜ்யத்துக்கு சொந்த தலைமைத் தன்மைக்குக் காத்திருக்கின்றன. 924

11. பல்வித நிறமுள்ள பசுக்கள் அவனுடைய பரிசத்தை விரும்பி ஸோமரஸத்தைப் பாலோடு சேர்க்கின்றன. இந்திரனுடைய பிரியமான பசுக்கள், வெட்டும் வச்சிராயுதத்தை அவனுடைய பகைவர்கள் மீது செலுத்துகின்றன. அப்பசுக்கள் "இந்திரனுடைய சுயராஜ்யத்துக்குக் காத்திருக்கின்றன.

12. இந்தப் பேரறிவுள்ள பசுக்கள் அவனுடைய பலத்தைப் பாலான வணக்கத்தோடு போற்றுகின்றன. அப்பசுக்கள் போரை விரும்பும் பகைவர்கள் தெரிந்துள்ள இந்திரனின் பலவீரச் செயல்களைப் பாடுகின்றன. அவை இந்திரனுடைய சுயராஜ்யத்துக்குக் காத்திருக்கின்றன.



13. இந்திரன் ததீசியின் என்புகளால் 810 விருத்திரர்களைக் கொன்றான் - 310 பகைவர்களைக் கொன்றான்.

14. இந்திரன் மலைகளின் நடுவே மறைக்கப்பட்டிருந்த குதிரையின் தலையை விரும்பினான். அதைச் சர்யணாவதியிலே கண்டான்.

15. சலனமாகும் சந்திர மண்டலத்திலே மறைக்கப்பட்டுள்ள துவஷ்டாவின்–கற்பிப்பவனின் ஒளியை" சூரியனுடைய கதிர் என அவர்கள் இப்போது அறிந்தார்கள். 929

16. எவன் இன்று ருதத்தின் தேரின் நுகத்திலே வலியவையும், விளங்குபவையும், எதிரிகளால் தாங்க முடியாத சீற்றமுள்ளவையும், வாய்களினுள் சரமுள்ளவையும், பகைவர்களின் இருதயங்களை மிதிப்பவையும், நண்பர்களை இன்புறுத்துபவையுமான குதிரைகளை இணைக்கிறான்? இவற்றின் செயல்களைப் போற்றுபவன் நீண்ட ஆயுளைப் பெறுகிறான்.

17. இந்திரன் அருகிலிருக்குங்கால் பகைவர்களைக் கண்டு எவன் ஓடுகிறான்? எவன் துன்பமாகிறான்? எவன் பயமாகிறான்? அருகில் இந்திரன் இருக்கிறான் என்பதை எவன் அறிகிறான்? அவனருகில் இருக்குங்கால் இந்திரனிடம் ஒருவன் ஏன் புதல்வனுக்கும், யானைக்கும், செல்வத்துக்கும், தனக்கும் தன் சனங்களுக்கும் கேட்க வேண்டும்? அவனே கேட்காமல் அவசியமானவற்றைச் செய்கிறான்.

18. எவன் இந்திரனுக்காக ஒளிப்படுத்தப்பட்ட அக்கினியைத் துதிக்கிறான்? எவன் நித்தியமாய் வரும் ருதுக்களுக்கேற்றவாறு சுருக்கத்தில் நெய் அவியோடு அவனைப் போற்றுகிறான்? தேவர்கள், விரும்பப்படும் செல்வத்தை எவனுக்குத் துரிதமாயளிக்கிறார்கள்? எவனுமில்லை. இந்திரனே அளிக்கிறான். யக்ஞஞ் செய்பவனும், தேவர்களால் விரும்பப் படுபவனுமான எவன் இந்திரனை நன்கறிகிறான்?

19. தேவனே! வலிமையுள்ள இந்திரனே! உன்னைப் போற்றும் மனிதனை நீ போற்றவும். மகவானே! உன்னையன்றி சுகப்படுத்துபவன் வேறு எவனுமில்லை. ஆதலால் இந்திரனே! நான் உனக்குத் துதியைக் கூறுகிறேன்.

20. மணிகளையளிப்பவனே! உன்னுடைய செல்வங்களும், பாலனங்களும் எங்களைத் தவிர்க்காமலிருக்க. மானிட நண்பனே! மந்திரங்களை அறியும் எங்களுக்கு எல்லாச் செல்வங்களையுமளிக்கவும். 934

## 85. மருத்துக்கள்

### 85. கோதம ராஹூகணன்

1. மருத்துக்கள் புறப்படுங்கால் பாவைகளைப் போல் தங்களைப் பாங்கு செய்து கொள்கிருர்கள்; வானில் சலனமாடும் அவர்கள் ருத்திரப் புதல்வர்கள்; அவர்கள் தங்களுடைய நல்ல செயல்களால் வானையும் விண்ணையும் செழிப்பிக்கிருர்கள்; பாறைகளைப் பொடிப்படுத்தும் அவர்கள் யக்ஞங்களில் இன்புறுகிருர்கள்.

2. தேவர்களால் பலப்படுத்தப்பட்ட அவர்கள் மகத்துவத்தை அடைந்தார்கள்; ருத்திரப் புதல்வர்கள் தங்கள் மனையை விண்ணிலே ஸ்தாபித்தார்கள்; அவர்கள் புகழுக்குரிய இந்திரனைப் புகழ்ந்தார்கள்; அவர்கள் அவனைப் பலத்தால் ஊக்கப்படுத்தினுர்கள்; பிருசினிப் புதல்வர்கள் செல்வங்களை ஏந்தினுர்கள்.

3. புவியின் புதல்வர்கள் தங்களை ஆபரணங்களால் அலங்காரஞ் செய்து கொள்ளுங்கால், பிரகாசமுடனிருக்கும் அவர்கள் தங்கள் அங்கங்களிலே சொலிக்கும் எழில்களை ஏந்துகிருர்கள்; அவர்கள் பகைவர்களையெல்லாம் விலக்குகிருர்கள்; சலங்கள் அவர்களுடைய வழியைத் தொடர்கின்றன.

4. தகுதியாய்ப் போற்றப்படும் அவர்கள் பலவித ஆயுதங்களோடு பிரகாசிக்கிருர்கள்; தாழ்த்தப்படாத அவர்கள் தங்கள் திறத்தால் மலைகளைத் தாழ்த்து



கிருர்கள். மருத்துக்களே! மனோவேகமுள்ளவர்களும் மழையைச் செலுத்தும் விரதமுள்ளவர்களுமான நீங்கள் உங்கள் தேரிலே புள்ளிமானை இணையுங்கள்.

5. மருத்துக்களே! நீங்கள் உணவையளிக்க மேகத்தைச் செலுத்தி, புள்ளிமானைத் தேர்களிலே இணைத்தபோது காந்தியான மின்னலிலிருந்து தாரைகள் பொழிகின்றன. அவை சலத்தால் புவியை சர்மத்தைப் போல் நனைக்கின்றன. 939

6. மருத்துக்களே! வேகமாயும், விரைந்து பாய்பவையுமான உங்களுடைய குதிரைகள் உங்களை இங்கு ஏந்தி வருக. துரிதமாய்ச் செல்லும் நீங்கள் கைகளில் செல்வங்களை ஏந்தி வாருங்கள். தருப்பையினுல் பரந்த இடத்தில் அமருங்கள்; இனிய உணவால் இன்புறுங்கள்.

7. சொந்த பலமுள்ள மருத்துக்கள் பெருகினுர்கள்.. தங்கள் மகிமையால் சுவர்க்கத்துக்குச் சென்ருர்கள் அங்கு தங்களுடைய மனையைக் கற்பித்தார்கள். பொழிவதும், இன்பமளிப்பதுமான யக்ஞத்தை, விஷ்ணு மருத்துக்களுக்காகப் பாலிக்குங்கால், அவர்கள் துரிதமாய்ப் பறவைகளைப்போல் வந்து இனிமையான தருப்பையின் மீது அமர்கிருர்கள்.

8. துரிதமாய்ச் செல்லும் மருத்துக்கள் போர்களில் வீரர்களைப் போலும், தீரர்களைப் போலும் போராடுகிருர்கள். எல்லாப் பிராணிகளும் தலைவர்களான மருத்துக்களிடம் பயமாகின்றன. அவர்கள் அரசர்களைப் போல் உக்கிர வடிவமுள்ளவர்கள்.

9. கைத்திறமுள்ள துவஷ்டா, நுட்பமாய்ச் செய்யப்பட்டதும், ஆயிரங் கூர்களுள்ளதும், பொன்னுலானதுமான வச்சிராயுதத்தைக் கற்பித்தவுடன் அதை இந்திரன் வீரச்செயல்களை நடத்தப் பெற்றுக்கொண்டான். அவன் விருத்திரனைக் கொன்ருன். சலக்கடலைச் செலுத்தினுன்.

10. மருத்துக்கள் தங்கள் பலத்தால் கிணற்றை -மேகத்தை மேலே உயர்த்தினுர்கள். அவர்களுடைய

வழியைத் தடுத்த மலையைப் பிளந்தார்கள். ஈகையர்களான மருத்துக்கள் வீணையை வாசித்தார்கள். ஸோமத்தால் மகிழ்ந்து விரும்பத்தக்க செல்வங்களை யளித்தார்கள். 944

11. அவர்கள் கோணலாக எங்கோ சென்ற மேகத்தை இங்கே செலுத்தினார்கள். தாகமடைந்த கோதமனுக்கு நீர் ஊற்றைப் பெர்ழிந்தார்கள். விசித்திர ஒளியோடு விளங்கும் அவர்கள் பாலனத்தோடு அவனிடம் வந்தார்கள். விப்பிரனுடைய விருப்பத்தை சலங்களால் திருப்தி செய்தார்கள்.

12. உங்களுக்குத் துதியை யளித்து, உங்களைப் போற்றுபவனுக்கு இவ்வுலகங்களிலிருப்பவையும், அளிப்பார்க்கு விளங்குபவையுமான சுகங்களை-பாலனங்களை அவியளிப்பவனுக்குத் தாருங்கள். மருத்துக்களே! அவற்றை எங்களுக்குமளியுங்கள். பொழிபவர்களே! உத்தம வீரப் புதல்வர்களுள்ள செல்வத்தை எங்களுக்களியுங்கள். 946

## 86. மருத்துக்கள்

### 86. கோதம ராஹூகணன்

1. மிகுந்த பிரகாசமுள்ள மருத்துக்களே! நீங்கள் வானிலிருந்து இறங்கி எவனுடைய மனைக்குச் சென்று ஸோம பானஞ் செய்கிறீர்களோ, அவன் நல்ல பாலகர்களுடனாகிறான்.

2. யக்ஞங்களை ஏந்தும் மருத்துக்களே! யக்ஞங்களோடு போற்றப்படுபவனுடைய துதிகளையும் அல்லது விப்பிரனுடைய தோத்திரங்களையுங் கேட்கவும்.

3. தலைவனுடைய ரித்விஜர்கள் மருத்துக்களுக்கு அவிகளை அளித்து அவர்களை ஊக்கப்படுத்தினார்கள். தலைவன் பல பசுக்களுள்ள தொழுதுவத்துக்குச் செல்லுகிறான்.

4. யக்ஞ தினங்களில் நடத்தப்படும் யக்ஞத்திலே சூரர்களான மருத்துக்களின் கணத்துக்கு ஸோமம் ஊற்றப்படுகிறது. துதி கூறப்படுகிறது. அவர்களுடைய இன்பம் மூட்டப்படுகிறது.



5. எல்லாப் பகைவர்களையும் ஜயிக்கும் மருத்துக்கள் இந்தத் தொழுபவனின் துதிகளைக் கேட்பார்களாக. அவர்களைப் போற்றுபவன் அதிக உணவைப் பெறுவானாக. 951

6. மருத்துக்களே! எல்லாவற்றையுமறிபவர்களான உங்களுடைய பாலனத்திலிருக்கும் நாங்கள் பல வருடங்களாக அவிகளை அளித்து வருகிறோம்.

7. யக்ஞார்கர்களான மருத்துக்களே! எவனுடைய அவிகளை நீங்கள் பற்றுகிறீர்களோ, அவன் செழிப்பானாக.

8. சத்திய சக்தியுள்ளவர்களே! தலைவர்களே! உங்கள் ஆதரவை விரும்பி உங்களை சேவிப்பதில் வியர்த்து, உங்களைத் துதிப்பவனின் விருப்பங்களை அறிந்து கொள்ளுங்கள்.

9. ஸத்திய சக்தியுள்ளவர்களே! நீங்கள் உங்களுடைய மகத்வத்தைப் புலப்படுத்தினீர்கள். அதன் பிரகாசத்தால் நீங்கள் அரக்கர்களை அழித்தீர்கள்.

10. எங்கும் பரவியுள்ள தமத்தை நீக்குங்கள். ஒவ்வொரு பட்சிகளையும் விலக்குங்கள். நாங்கள் விரும்பும் சோதியைப் புலப்படுத்துங்கள். 956

## 87. மருத்துக்கள்

### 87. கோதம ராஹூகணன்

1. பகையழிப்பவர்களும், மிகுந்த பலமுள்ளவர்களும், பலவித கோஷ மெழுப்புபவர்களும், தாழாத உத்தமர்களும், பிரியாதவர்களும், மாலை அவியைப் புசிப்பவர்களும், ஸதா போற்றப்படுபவர்களும், தலைவர்களுமான மருத்துக்கள், தங்கள் தேகத்துக்குரிய ஆபரணங்களோடு சில சூரிய கிரணங்களைப் போல் வானிலே பிரகாசிக்கிறார்கள்.

2. மருத்துக்களே! நீங்கள் பறவைகளைப் போல் எந்த வழியாலும் பறந்து சலனமாடும் மேகங்களை

வானின் மிக்க அருகிலுள்ள இடங்களிலே சேர்க்குங்கால் அவை உங்கள் தேர்களோடு மோதி சலங்களைப் பொழிகின்றன. நீங்கள் தேன் நிறமுள்ள மழையை உங்களைப் போற்றுபவனுக்குப் பொழியுங்கள்.

3. உத்தமச் செயலான மழைக்காக அவர்கள் மேகங்களைத் திரட்டும் போது, அவர்களுடைய உக்கிர சலனங்களிலே வெளியில் சென்றுள்ள கணவனின் மனைவியைப் போல் நிலம் நடுங்குகிறது. கிரீடிப்பவர்களும், சலன இயல்புள்ளவர்களும், பிரகாசிக்கும் படைகளை ஏந்துபவர்களுமான மருத்துக்கள் மலைகளை அசைத்து, தங்களுடைய சொந்த பலத்தைப் புலப்படுத்துகிறார்கள்.

4. மருத்துக்களின் படை சுயமாகவே அசைகிறது. புள்ளிமானுள்ளது; நித்திய இளமைத் தன்மையுண்டு; புவியின் தலை சக்தியால் உடுத்தப்பட்டது. சத்தியம்; கடனை நீக்குவது; நிந்தையற்றது; பொழிவது; எங்களுடைய இந்த யக்ஞத்தைப் பாலிப்பது.

5. பழைய பிதாவினிடமிருந்த நாங்கள் பிறப்பின் உரிமையோடு பேசுகிறோம். நாங்கள் ஸோமத்தைக் காணுங்கால் எங்கள் நாக்கு தானே எழுகிறது. மருத்துக்கள் இந்திரனைப் போரில் ஊக்கப்படுத்தி அருகில் நின்றார்கள். பிறகு அவர்கள் யக்ஞாருக நாமங்களைப் பெற்றார்கள். 961

6. அவர்கள் சூரிய ரசிமிகளோடு சேர்ந்து மானிடர்களுக்குச் சேவை செய்ய மழையைப் பொழிய விரும்புகிறார்கள். அறிஞர்களோடு சேர்ந்து, இன்பந் தரும் அவியைப் புசிக்கிறார்கள். துரிதமாய்ச் செல்பவர்களும், பயத்திலிருந்து நீங்குபவர்களுமான அவர்கள், துதிகளால் போற்றப்பட்டு, மருத்துக்களுக்குத் தகுந்ததும், பிரியமுள்ளதுமான இடத்தைப் பெறுகிறார்கள். 962



## 88. மருத்துக்கள்

### 88. கோதம ராஹூகணன்

1. மருத்துக்களே! முழங்கும் பாக்களோடும், ஈட்டிகளோடும், சிறகுகளுள்ள குதிரைகளோடும் மின்னலை ஏந்திவரும் தேர்களில் இங்கு வாருங்கள். நல்ல செயல்களை நடத்தும் நீங்கள் பறவைகளைப் போல் இறங்கி வந்து எங்களுக்கு மிகுந்த உணவையளியுங்கள்.

2. அவர்கள் தங்களுடைய சிகப்பான பழுப்பான தேரைச் செலுத்தும் குதிரைகளிலே எந்தப் போற்றுபவனிடம் அவனுக்கு நன்மையைச் செய்ய செல்லுகிறார்கள்? தங்கத்தைப் போல் துலங்கி பகைவர்களைக் கொல்லும் ஆயுதங்களை ஏந்தும் அவர்கள் தங்கள் தேர்ச் சக்கரத்தால் புவியை அடித்தார்கள், உழுதார்கள்.

3. மருத்துக்களே! உங்கள் அங்கங்களிலே இராஜ்யத்தை ஜயிக்கும் பயங்கராயுதங்கள் உண்டு. அறிஞர்கள் உங்களுக்கு யக்ஞங்களை மரங்களைப் போல் உயர்த்துகிறார்கள். நல்ல சன்மங்களுள்ள உங்களுக்கு அவிச் செல்வர்கள் ஸோமத்தை அரைக்கும் கல்லை செல்வப் படுத்துகிறார்கள்.

4. தாகத்தால் தவிக்கும் கோதமப் புதல்வர்களே! உங்களுக்கு சௌபாக்கிய தினங்கள் தோன்றுகின்றன. அவை சலத்துக்கு அவசியமாயிருந்த யக்ஞத்துக்கு ஒளியைத் தந்தன. கோதமப் புதல்வர்கள் மந்திரங்களோடு அவியை யளித்து, பானத்துக்காக உயர்த்தினார்கள்.

5. மருத்துக்களே! நீங்கள் தங்கச் சக்கரங்களுள்ள தேர்களிலே அமர்ந்து, இரும்பாயுதங்களை ஏந்தி, இங்குமங்கும் விரைந்து வலிய சத்துருக்களை அழிக்கும் போது உங்களைக் கோதமர்கள் கண்டு துதித்தார்கள். அவர்களால் கூறப்பட்ட தோத்திரமே இது. 967

6. மருத்துக்களே! உங்களுக்கு ஏற்றதாயிருந்த அந்தத் துதியே இது. இது உங்களில் ஒவ்வொருவரையும் போற்றுகிறது. நீங்கள் எங்கள் கைகளில் அன்னத்

தைத் தந்தீர்கள். அறிஞனின் மொழி ரிக்குக்களோடு அனுயாசமாய் உங்களை இப்பொழுது மேம்படுத்துகிறது. 968

## 89. விசுவே தேவர்கள்

### 89 கோதம ராஹூ'கணன்

1 தடைபடாதவையும், துன்பமற்றவையும், பகைவர்களைத் தாழ்த்துபவையுமான மங்களச் செயல்கள் எங்களுக்கு எல்லாத் திசைகளிலிருந்தும் தோன்றுக. தினந்தோறும் பாலனமளிக்கும் எல்லாத் தேவர்களும் எங்களை எப்போதும் தக்கவண்ணம் செழிப்பிக்க எங்களிடமிருந்து நீங்காமல் இருப்பார்களாக.

2. தேவர்களுடைய மங்களமான ஸு'மதி எங்களுக்குத் தோன்றுக. சத்தியம் பற்றுபவர்களை விரும்பும் தேவர்களுடைய தானம் எங்களுக்குத் துலங்குக. நாங்கள் தேவர்களுடைய நட்பைப் பெறுவோமாக. தேவர்கள் நாங்கள் வாழ எங்களாயுசை நீடிப்பார்களாக.

3. நாங்கள் பழைய வேதமொழியோடு, பகனையும், ருத்திரனையும், அதிதியையும், தட்சனையும், மருக்கணத்தையும், அர்யமனையும், வருணனையும், அசுவினிகளையும், ஸோமனையும் அழைக்கிறோம். மங்களச் செல்வியான ஸரஸ்வதி எங்களை சுகப்படுத்துவாளாக.

4. காற்று சுகப்படுத்தும் மருத்தை எங்களிடம் செலுத்துவானுக. தாயான தரணியும், தந்தையான சோதியும் எங்களிடம் மருத்தைச் செலுத்துவார்களாக. ஸோமத்தைப் பொழிபவர்களும், இன்பத்தைத் தருபவர்களுமான கற்கள் எங்களிடம் மருத்தைச் செலுத்துவார்களாக. புலனர்களான அசுவினிகளே! நீங்கள் எங்கள் மொழிகளைக் கேளுங்கள்.

5. நாங்கள், தலைவனும், தாவர ஜங்கமப் பொருள்களின் நாயகனும், செயலை ஊக்கப்படுத்துபவனுமான இந்திரனைப் பாலனத்துக்காக அழைக்கிறோம். பூஷா எங்களுடைய செல்வங்களைச் செழிப்பிக்கும் பாலகனுயிருக்கிறன். அவன் எங்களுடைய சுவஸ்தியை நீடிக்கும் தடைபடாத பாலகனுகவும் இருப்பானுக. 978



6. மிக்கப் புகழுள்ள இந்திரன் எங்கள் சுவஸ்தியை–நலத்தைப் பாலிப்பானுக. அனைத்தையும் அறியும் பூஷா, எங்கள் சுவஸ்தியை–சுகத்தைப் பாலிப்பானுக. நிந்தையற்ற ஆயுதங்களுள்ள தார்க்ஷியன் எங்கள் சுவஸ்தியை–சுகத்தைப் பாலிப்பானுக.

7. வெள்ளைப் புள்ளிகளுள்ள குதிரைகளில் வருபவர்களும், பாங்காய் அசைபவர்களும், யக்ஞங்களில் தோன்றுபவர்களும், அக்கினி நாக்கள் உள்ள அறிஞர்களும், சூரியனைப் போல் பிரகாசிப்பவர்களும், பிருசினியின் புதல்வர்களுமான மருத்துக்களும், எல்லாத் தேவர்களும் இங்கு எங்களுடைய பாலனத்துக்கு வருவார்களாக.

8. தேவர்களே! எங்கள் செவிகளால் மங்களத்தைச் செவியுறுவோமாக. போற்றத் தகுந்தவர்களே! எங்கள் கண்களால் மங்களத்தைக் காண்போமாக. திடாங்கத் தேகங்களோடிருக்கும் நாங்கள் உங்களைத் துதித்து, தேவரால் அளிக்கப்பட்ட ஆயுளைப் பற்றுவோமாக.

9. தேவர்களே! மானிடர்களின் வயது நூறு வருடங்கள் எனக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. எங்கள் புதல்வர்கள், எங்களுடைய தந்தைகளாகப் பாலிப்பவர்களாகாமலிருக்க எங்கள் ஆயுளை–நூறு வருடங்களின் நடுவே மூப்பை அளித்து இடைப்படுத்தாதீர்கள்.

10. அதிதி சோதியாயிருக்கிறது; அதிதி வானமாயிருக்கிறது; அதிதி தாயாயிருக்கிறது; அதிதி தந்தையாயிருக்கிறது; அதிதி பஞ்ச சனங்களாயிருக்கிறது; அதிதி பிறப்பாயிருக்கிறது; வம்சமாயிருக்கிறது. 978

# 90. விசுவே தேவர்கள்

## 90. கோதம ராஹூகணன்

1. மித்திரனும், வருணனும் உத்தம இடத்தை அறிந்து எங்களை நேரான வழியில் செலுத்துவார்களாக. அரியமானும் தேவர்களோடு செலுத்துவானாக.

2. அவர்கள் செல்வத்தைப் பரத்துகிறார்கள். மதியின்மையற்ற அவர்கள் தங்களாற்றல்களால் கடமைகளைப் பாலிக்கிறார்கள்.

3. அமுதர்களான அவர்கள் மானிடர்களான எங்களுக்குப் பகைவர்களை அழித்து சுகத்தைத் தருவார்களாக.

4. துதியாருகர்களான இந்திரனும், மருத்துக்களும், பூஷாவும், பகனும் நாங்கள் நன்மையைப் பெற எங்களுடைய வழிகளைத் தீய வழிகளிலிருந்து தனிப்படுத்துவார்களாக.

5. பூஷாவே! விஷ்ணுவே! மருத்துக்களே! எங்கள் யக்ஞங்கள் பசுக்களை ஏந்துக. நீங்கள் எங்களை நாசப்படுத்தாதீர்கள்.

6. சத்தியத்தை விரும்புபவனுக்கு – காற்றுக்களும் நதிகளும் மது பொருள்களைப் பொழிகின்றன. ஓஷதிகள் எங்களுக்கு இனிப்பைத் தருக.

7. எங்களுக்கு இரவும் உஷையும் மதுவாகுக. புவியின் உலகமும் மதுவோடு நிறைக. பாலிக்கும் சோதியும் எங்களுக்கு மதுவாகுக.

8. எங்களுக்கு வனஸ்பதி மதுவோடு நிறைக. சூரியனும் மதுவோடு சேர்க. பசுக்கள் எங்களுக்கு மதுவோடு பொருந்துக.

9. மித்திரனும், வருணனும், அரியமானும், இந்திரனும், பிரகஸ்பதியும், கம்பீர அடியுள்ள விஷ்ணுவும் எங்களைச் சுகப்படுத்துவார்களாக. 987



# 91. ஸோமன்

## 91. கோதம ராஹூகணன்

1. ஸோமனே! நீ அறிவால் புலப்படுகிறாய். நீ எங்களை நேரான வழியிலே செலுத்துகிறாய். இந்துவே! எங்களுடைய தீரர்களான பிதாக்கள் உன்னால் செலுத்தப்பட்டு தேவர்களின் நடுவே செல்வத்தைப் பெற்றார்கள்.

2. ஸோமனே! நீ செயல்களால் நல்ல செயலானாகிறாய். நீ உன் வலிமைகளால் மிக்க வலியனாகிறாய். நீ எல்லாப் பொருள்களையு மறிகிறாய். உன் ஞானங்களால் நலங்களைப் பொழிபவனாயிருக்கிறாய். மகிமையால் மகானாகிறாய். மனிதர்களைச் செலுத்தும் நீ, சிறப்புக்களால் சிறப்புடனாகிறாய்.

3. ஸோமனே! உன்னுடைய விரதங்கள்—செயல்கள், அரசனான வருணனுடைய செயல்களைப் போலிருக்கின்றன. உன்னுடைய புகழ் பரந்தது. ஆழ்ந்தது. ஸோமனே! நீ பிரியமுள்ள மித்திரனைப் போல் அனைத்தையும் சுத்தப்படுத்துகிறாய். நீ அரியமானைப் போல்—சூரியனைப் போல்—அனைவரையும் செழிப்பிக்கிறாய்.

4. அரசனான ஸோமனே! உன்னால் சோதியிலும், புவியிலும், மலைகளிலும், ஓஷதிகளிலும், சலங்களிலும் புலப்படுத்தப்படும் பெருமைகளோடு சேர்ந்துள்ளவனும், அரசனுமான நீ, எங்களிடம் கோபமில்லாமல் நல்ல மனமுள்ளவனாகி எங்களுடைய அவிகளைப் பற்றவும்.

5. ஸோமனே! நீ அறிஞர்களின் தலைவனாயிருக்கிறாய். அரசனான நீ, விருத்திரர்களைக் கொல்பவன். நீ மங்களமான செயல். 992

6. ஸோமனே! துதியை விரும்பும் நீ, ஓஷதிகளின் தலைவன். நீ எங்களுக்கு உயிராயிருக்கிறாய். நீ விரும்பினால் நாங்கள் சாகமாட்டோம்.

7. ஸோமனே! உன்னைப் போற்றுபவன் இளைஞனுலும், முதியவனுலும் அவன் சீவித்து அனுபவிக்க நீ அவனுக்குச் செல்வத்தை யளிக்கிறுய்.

8. அரசனுன ஸோமனே! எங்களைத் துன்புறுத்த தாடும் ஒவ்வொருவனிடமிருந்தும் எங்களைப் பாலிக்கவும். உன்னைப்போலிருக்கும் ஒருவனுடைய நண்பன் எப்பொழுது மழியான்.

9. ஸோமனே! அவிகளளிப்பவனை சுகப்படுத்தும் உங்களுடைய பாலனங்களோடு எங்களுடைய பாலகனுகவும்.

10. ஸோமனே! எங்களுடைய இந்த யக்ஞத்தையும், இந்தத் துதியையும் பெற்றுக்கொள்ளவும். எங்களிடம் வரவும். எங்கள் யக்ஞத்தைச் செழிப்பிப்பவனுகவும். 997

11. துதிகளை அறியும் நாங்கள் உன்னைத் துதிகளோடு உயர்த்துகிறேம். சுகப்படுத்தும் நீ எங்களிடம் வரவும்.

12. ஸோமனே! நீ எங்களுக்குச் செல்வங்களைத் தருபவனுகவும், நோய்களை நீக்குபவனுகவும், செல்வங்களைச் செழிப்பிப்பவனுகவும், புட்டியைப் பலப்படுத்துபவனுகவும், உத்தம நண்பனுகவும் தோன்றவும்.

13. ஸோமனே! நீ எங்களுடைய இருதயங்களிலே, புதிய புற்றரைகளிலே பசுக்களைப் போலும், தங்கள் சொந்த மனைகளில் மனிதர்களைப் போலும் மகிழவும்.

14. தேவனே! ஸோமனே! நட்புக்காக எந்த மனிதன் உன்னைப் போற்றுகிறுனே அவனை அறிஞனும், ஆற்றலுள்ளவனுமான நீ பேர்ற்றுகிறுய்.

15. ஸோமனே! எங்களைப் பழிச் சொல்லிலிருந்து பாலிக்கவும். பாவத்திலிருந்து பாலிக்கவும். எங்களுக்குச் சுகத்தையளித்து நண்பனுகவும். 1,002



16. ஸோமனே! நீ பெருகவும்; உனக்கு வலிமை ஒவ்வொரு திசையிலிருந்தும் வருக; நீ எங்களுக்கு வலிமையை யளிப்பவனுகவும்.

17. மிக்க மதமுள்ள ஸோமனே, நீ எல்லாக் கொடிகளோடும் செழிக்கவும். எங்களிடம் நண்பனைப் போல் இருக்கவும். நாங்கள் உணவைப் பெற்று உறுதிப்படுவோமாக.

18. ஸோமனே! பகைவர்களை யழிக்கும் உன்னிடம் ரஸங்களும், அவிகளும், ஆற்றல்களும் ஐக்கியமாய்ச் சேர்க. எங்களுடைய அமுதத்துக்கு நீ புட்டியாகி சோதியிலே எங்களுக்கு உத்தம உணவுகளை ஏந்தவும்.

19. அவிகளால் தலைவர்கள் உன்னுடைய எந்தச் சிறப்புக்களைப் போற்றுகிறுர்களோ, அவற்றல் எங்களுடைய யக்ஞம் விளங்குக. ஸோமனே! செல்வத்தைச் செழிப்பிப்பவனும், கட்டங்களிலிருந்து கடத்துபவனும், வமிசத்தை யழிக்காதவனுமான நீ, எங்களுடைய மனைகளுக்கு வரவும்.

20. ஸோமன் அவிகளை அளிப்பவனுக்குப் பசுவையும், துரித குதிரையையும், வினைத்திட்பனும், மனையாருகனும், சபைக்குரியனும், தந்தைக்குப் புகழைத் தருபவனுமான புதல்வனைத் தருகிறுன். 1,007

21. ஸோமனே! நீ சமர்களில் ஜயிக்கப்படாதவன்; பகைவர்களை வெல்லுபவன்; சுவர்க்கத்தைத் தருபவன்; மழையைப் பொழிபவன்; பலத்தைப் பாலிப்பவன்; யக்ஞங்களில் தோன்றுபவன். நீ நல்ல மனையுள்ளவன்; நல்ல புகழுள்ளவன்; நல்ல ஜயமுள்ளவன். நாங்கள் உன்னை நினைத்து இன்புறுவோமாக.

22. ஸோமனே! நீ இந்த எல்லா ஒஷதிகளையும், சலங்களையும், பசுக்களையும் தோற்றுவித்தாய். நீ விரிந்த வானத்தையும் பரத்தினுய். நீ ஒளியால் இருளை நீக்கினுய்.

23. தேவனே! வலியனான ஸோமனே! உன்னுடைய மனத்தால் எங்களுக்குச் செல்வத்தில் பாகத்தை யளிக்கவும். எப்பகைவனும் உன்னைத் துன்பப்படுத்தாம லிருப்பானாக. போர் புரியும் இரு கட்சிகளின் பலத்துக்கும் நீயே தலைவனாகிறாய். போரிலே எங்களைப் பகைவர் களிடமிருந்து பாலிக்கவும். 1,010

## 92. உஷை

### 92. கோதம ராஹூகணன்

1. இந்த உஷைகள் தங்கள் கொடியை உயர்த்துகிறார்கள். வானின் கீழ்த்திசையிலே ஒளியைப் பரத்துகிறார்கள். படைகளைத் தீட்டும் வீரர்களைப் போல் துலக்குகிறார்கள். சிகப்பு நிறமுள்ள தாய்ப்பசுக்கள் தினந் தோறும் செல்லுகின்றன.

2. அவர்களுடைய சிகப்புக் கதிர்கள் சுகமாய் மேலே எழுகின்றன. அவர்கள் இணைப்பதற்கு இலகுவாயுள்ள சிவந்த பசுக்களை இணைக்கிறார்கள். பிராணிகளுக்கு முன்போல் உணர்வைத் தருகிறார்கள். சிகப்பர்கள் சூரியனிடம் சரணமாகிறார்கள்.

3. வைகறையிலே, நல்ல செயல்களை நடத்துபவனுக்கும், மேலான ஈகையனுக்கும், தொழுபவனுக்கும், விவித உணவை ஏந்திவரும் தலைவிகள், தங்களுடைய சொந்தக் கதிர்களால் தூரத்திலிருக்கும் இடங்களையெல்லாம் வீரர்களைப் போல் ஒருமித்த ஊக்கத்தோடு ஒளிப் படுத்துகிறார்கள்.

4. உஷை, நாவிதனைப் போல் இருளை நீக்குகிறாள். மடியைக் காட்டும் பசுவைப் போல் தன் மார்பைக்காட்டுகிறாள். தொழுவத்துக்குச் செல்லும் பசுக்களைப் போல் கீழ்த் திசைக்குப் பாய்கிறாள். அவள் உலகத்தை யெல்லாம் ஒளிப்படுத்தி, தமத்தை விலக்குகிறாள்.

5. அவளுடைய துலக்கமான ஒளி முதலில் கீழ்த் திசையில் தோன்றுகிறது. அது பரவுகிறது. கருத்த இருளை நீக்குகிறது. யக்ஞங்களில் நெய்யால், யூபத்தை— கம்பத்தை - புலப்படுத்தும் அறிஞர்களைப் போல், அவள் தன் அழகை எழில் படுத்துகிறாள். சோதியின் மகள் சூரியனிடம் சரணமாகிறாள் 1,015.



6. நாங்கள் இருட்டின் எல்லையைக் கடந்தோம். உதிக்கும் உஷை மீண்டும் சைதன்யத்தைத் தருகிறாள். மிக்கப் பிரகாசிக்கும் அவள் முகத்துதி செய்பவனைப் போல் புன்முறுவல் செய்கிறாள். எழிலங்கமுள்ள அவள், நாம் இன்பமாக இருளை விழுங்குகிறாள்.

7. கோதமப் புதல்வர்கள் சத்திய மொழிகளைத் தோற்றுவிப்பவனும், பிரகாசிப்பவனுமான சோதியின் மகளைப் போற்றினார்கள். உஷையே! நீ எங்களுக்குப் பிரஜைகளும், ஆட்களுமிருப்பவையும், குதிரைகளோடும் பசுக்களோடும் விளங்குபவையுமான உணவுகளை யளிக்கவும்.

8. உஷையே! நான், புகழையும், வம்சத்தையும், ஆட்படைகளையும் அளிப்பதும், குதிரைகளோடு விளங்குவதுமான செல்வத்தை அடைவேனாக. மிக்கச் செல்வமிருப்பவனும், உணவைத் தருபவனுமான நீ, யக்ஞங்களாலும், துதிகளாலும் போற்றப்பட்டவுடன் அவற்றைப் புலப்படுத்தவும்.

9. தேவியான உஷை எல்லா உலகங்களையும் ஒளிப்படுத்தி, மேற்குத் திசையை நோக்கும் கண்ணோடு பரவிப் பிரகாசிக்கிறாள். சீவிக்கும் ஒவ்வொரு பிராணியையும் அவள் உழைப்புக்கு எழுப்பி எல்லா அறிஞர்களுடைய மொழியையும் கேட்கிறாள்.

10. மீண்டும் மீண்டும் பிறப்பவளும், பழையவளும், ஒரே ரூபத்தை ஏந்துபவளும், தேவியுமான உஷை தினந்தோறும் எல்லாப் பிராணிகளுடைய சீவனை, பறவைகளை வெட்டித் துணிக்கும் கைத்திறமுள்ள வேட்ஸ்திரியைப் போல் தேய்கிறாள். 1,020

11. அவள் வானின் எல்லைகளை ஒளிப்படுத்துபவளாய்த் தோன்றுகிறாள். சகோதரியை வெகுதூரத்துக்குச் செலுத்துகிறாள். அவள் மனிதர்களின் ஆயுளைத் தேய்த்து, சூரியனின் ஸ்திரியைப் போல் ஒளியோடு பிரகாசிக்கிறாள்.

12. செல்வியும், போற்றத் தகுந்தவளுமான உஷை, மேய் நிலங்களிலே பசுக்களைப் பரத்தும் கோபாலனைப் போல் தன் கதிர்களைப் பரத்துகிறாள். பெருகும் சலங்களைப் போல் பரந்து பரவுகிறாள். தேவத்தன்மையுள்ள விரதங்களைத் தடைபடுத்தாமலிருக்கும் அவள் சூரிய ரசிமிகளோடு சேர்ந்தவளாய்ப் புலப்படுகிறாள்.

13. மிக்கச் செல்வமுள்ள உஷையே! எங்களுக்கு உன்னுடைய அற்புத செல்வத்தை யளிக்கவும். அதனால் நாங்கள் எங்கள் புதல்வர்களையும், போர்களையும் பாலிப்போம்.

14. உஷையே! பசுச் செல்வியே! புவிச் செல்வியே! ஒளிச் செல்வியே! மெய் மொழிச் செல்வியே! இன்று இங்கே செல்வத்தைத் தரும் இந்த யக்ஞத்திலே உதயமாகவும்.

15. உஷையே! ஆற்றலுள்ளவளே! இன்று உங்களுடைய சிகப்பான குதிரைகளை இணைக்கவும். எல்லா சௌபாக்கியங்களையும் ஏந்தி வரவும். 1,025

அசுவினிகள்

16. அசுவினிகளே! பகையழிப்பவர்களே! எங்கள் மனையில் பசுக்களும் பொன்னும் தோன்ற நீங்கள் இசைந்த மனங்களுடன் உங்களுடைய தேரை எங்களுடைய மனையை நோக்கிச் செலுத்துங்கள்.

17. அசுவினிகளே! சாற்றத் தகுந்த சோதியை சுவர்க்கத்திலிருந்து மானிடனுக்குச் செலுத்திய நீங்கள் எங்களுக்குச் சக்தியை யளியுங்கள்.

18. உஷையில் எழும் குதிரைகள், சுகத்தைத் தருபவர்களும், பகைவர்களை யழிப்பவர்களும், பொன் தேரில் அமர்ந்திருப்பவர்களுமான அசுவினிகளை ஸோமபானத்தைப் பருக இங்கு ஏந்தி வருவார்களாக. 1,028



# 93. அக்கினியும் ஸோமனும்

## 93. கோதம ராஹூகணன்

1. அக்கினி ஸோமர்களே! பொழிபவர்களே! என் அழைப்பைச் செவியுறுங்கள். சூக்தங்களை விரும்புங்கள். அவியளிப்பவனை சுகப்படுத்துங்கள்.

2. அக்கினி ஸோமர்களே! உங்கள் இருவரையும் போற்றுபவனுக்கு நல்ல வீரியத்தையும், பசுக் கூட்டத்தையும், நல்ல குதிரைகளையுமளியுங்கள்.

3. அக்கினி ஸோமர்களே! உங்களுக்கு அவியையும், ஆஹுதியையுமளிப்பவன், ஆயுசு முழுதும் பிரஜையோடு மிகுந்த பலத்தையும் பற்றுவானாக.

4. அக்கினி ஸோமர்களே! நீங்கள் உங்கள் சுவீரியத்தால் பணியின் உணவாயிருந்த பசுக்களை அபகரித்தீர்கள்; விரசயனின் புதல்வனைக் கொன்றீர்கள்; பலரின் நன்மைக்காகப் பற்றினீர்கள். இவை அனைத்தையும் நாங்கள் அறிகிறோம்.

5. அக்கினி ஸோமர்களே! நீங்கள் இருவர்களும் இசைந்து சோதியிலே நட்சத்திரங்களை ஏந்துகிறீர்கள். நீங்கள் பந்தப் பட்டிருந்த நதிகளைப் பாவத்திலிருந்தும், பழிச் சொல்லிலிருந்தும் மீட்டீர்கள். 1,033

6. அக்கினி ஸோமர்களே! உங்களில் ஒருவனை—அக்கினியை—வாயு சோதியிலிருந்து எடுத்து வந்தான். பருந்து மற்றொருவனை—ஸோமனை—மலையிலிருந்து பலத்தால் பறித்து வந்தது. நீங்கள் பிரமத்தால் பெருகி உலகத்தை யக்ஞத்துக்காகப் பரத்தினீர்கள்.

7. அக்கினி ஸோமர்களே! நீங்கள் சித்தமான அவியை அருந்துங்கள். எங்களை விரும்புங்கள். பொழிபவர்களே! இன்புறுங்கள். எங்களுக்கு சுகத்தை

யளிப்பவர்களாகவும், பாலனமுள்ளவர்களாகவும் விளங்குங்கள். வழிபடுபவனுடைய நோயையும், பயத்தையும் நீக்குங்கள்.

8. அக்கினி ஸோமர்களே! எவன் தேவர்களை நாடும் மனத்தோடு உங்களை நெய்யோடும் அவியோடும் போற்றுகிறுனே, அவனுடைய செயலைப் பாலியுங்கள். அவனைப் பாபத்திலிருந்து பாலியுங்கள். யக்ஞத்துக்குச் செல்லும் மனிதனை மேன்மையாய் சுகப்படுத்துங்கள்.

9. அக்கினி ஸோமர்களே! ஸமமான செல்வமுள்ளவர்களும், ஸமமான அழைப்போடு அழைக்கப்படுபவர்களுமான நீங்கள், எங்கள் துதிகளைப் பகிர்ந்து கொள்ளுங்கள். நீங்கள் எல்லாத் தேவர்களிலும் சிறந்தவர்களாயிருக்கிறீர்கள்.

10. அக்கினி ஸோமர்களே! உங்கள் இருவர்களுக்கும் நெய்யை யளிப்பவனுக்குத் திரண்ட செல்வத்தை யளியுங்கள். 1,038

11. அக்கினி ஸோமர்களே! எங்களுடைய இந்த அவிகளால் திருப்தியாகுங்கள், எங்களிடம் சேர்ந்து வாருங்கள்.

12. அக்கினி ஸோமர்களே! எங்களுடைய குதிரைகளைப் பாலியுங்கள். அவிகளுக்குப் பாலைத் தரும் பசுக்கள் புட்டிக்கப்படுக. செல்வர்களான எங்களுக்கு, யக்ஞங்களை நடத்த ஆற்றலையளியுங்கள். எங்கள் யக்ஞத்தைச் செல்வப்படுத்துங்கள். 1,040

## 94. அக்கினி

### 94. குத்ஸ ஆங்கிரஸன்

1. நாங்கள் துதியாருகனை ஜாதவேதஸனுக்கு இந்த ஸ்தோமத்தை, எங்கள் மனத்தால் தேரை சிற்பி போல் கற்பிக்கிறேம். அவனைப் போற்றுங்கால், எங்களு



டைய புத்தி பலமுடனுகிறது. அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றுராவோமாக.

2. நீ எவனுக்காக யஜிக்கிருயோ, அவன் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்கிறுன். எதிர்ப்பற்று வாழ்கிறுன். பலத்தையளிக்கும் செல்வத்தைப் பற்றுகிறுன். அவன் செழிக்கிறுன். வறுமை அவனை அணுகாது. அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றுராவோமாக.

3. நாங்கள் உன்னை ஒளிப்படுத்தும் ஆற்றலையடைவோமாக. யக்ஞத்தைப் பூர்த்தி செய்யவும். தேவர்கள், அளிக்கப்பட்ட அவிகளை உன்னுல் புசிக்கிறுர்கள். நீ ஆதித்தியர்களை இங்கு அழைத்து வரவும். ஏனெனில் நாங்கள் அவர்களை விரும்புகிறோம். அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றுராவோமாக.

4. நாங்கள் ஸமித்தைச் சேர்க்கிறேம். தொடர்ந்து வரும் யக்ஞங்களை ஞாபகப்படுத்தி, நாங்கள் உனக்கு அவிகளையளிக்கிறேம். நாங்கள் நீடித்து வாழ எங்கள் யக்ஞத்தைப் பூர்த்தி செய்யவும். அக்கினியே! நாங்கள் உன் நட்பால் துன்பமற்றுராவோமாக.

5. அவனுடைய பிராணிகளைப் பாலிப்பவையான ரசிமிகள் பரவுகின்றன. அவனுடைகளால் மனிதர்களும், கால் நடைகளும் ஊக்கமடைகிறுர்கள். நீ பலவித ஒளியோடு பிரகாசித்து, இரவிலே உலகத்தை ஒளிப்படுத்துகிருய். நீ உஷைக்கு மேலானவன். அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றுராவோமாக. 1,045

6. அக்கினியே! நீ அத்வாயு, நீ முதன்மையான ஹோதா; நீ யக்ஞங்களை நடத்துகிருய்; நீ போதாவாகிருய்; நீ பிறப்பிலே புரோகிதன்; எல்லா ஸித்விக்கின செயல்களை இங்ஙனம் அறியும் அறிஞுன நீ, யக்ஞத்தைப் பாலிக்கிருய். அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றுராவோமாக.

7. நீ எழிலுள்ளவன்; அனைவர்க்கும் எங்கும் சமமாயிருக்கிருய்; நீ தூரத்திலிருந்தாலும் அருகில் இருப்ப

வனைப் போல் பிரகாசிக்கிறாய். தேவனே! அக்கினியே! நீ இரவின் இருளுக்கப்பாலும் பார்க்கிறாய். அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றோராவோமாக.

8. தேவர்களே! அவியளிப்பவனுடைய தேர் மூந்துக. எங்களுடைய தோத்திரம் துட்ட புத்தியுள்ளவர்களைத் தாழ்த்துக. எங்களுடைய மொழிகளை அறியுங்கள். அவற்றைச் செல்வப்படுத்துங்கள். அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றோராவோமாக.

9. அருகிலோ, தூரத்திலோ இருக்கும் தீயோர்களும், துட்டர்களுமான எல்லாப் பகைவர்களையும் உன் கூரிய ஆயுதங்களால் ஜயிக்கவும். உன்னைப் போற்றும் யக்ஞகர்த்தாவுக்குச் சுலபமான வழியைச் செய்யவும். அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றோராவோமாக.

10. உன்னுடைய பிரகாசமாயுள்ள சிகப்புக் குதிரைகள் காற்றைப்போல் வேகமாயிருப்பவை. அவற்றை நீ, தேரிலே இணைத்தவுடன் உன்னுடைய கர்ச்சனை, காளையின் முழக்கத்தைப் போல் எழுகிறது. உன்னுடைய புகைக் கொடியுள்ள சுவாலையால் காட்டின் மரங்களை எதிர்க்கிறாய். அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றோராவோமாக. 1,050

11. உன் கர்ச்சனையிலே பறவைகளும் பயமடைகின்றன. புல்லைத் தகித்து, சுவாலைகள் எங்கும் பரவுங்கால், வனத்திலே சுலபமாய்ச் செல்ல உனக்கும் உன் தேர்களுக்கும் வழி தோன்றுகிறது. அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றோராவோமாக.

12. உன்னைப் போற்றும் இவன், மித்திரனுடையவும், வருணனுடையவும் பாலனத்தைப் பெறுவானாக. மருத்துக்களின் சீற்றம் அற்புதமாயிருக்கிறது. சோதியின் கீழே இருக்கும் அவர்கள் எங்களை ஊக்கப்படுத்துவார்களாக. அவர்களுடைய மனம் மீண்டும் எங்களிடம் பிரஸன்னமாகுக. அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றோராவோமாக.



13. தேவனான அக்கினியே! நீ தேவர்களுடைய அற்புத நண்பனாகிறாய். யக்ஞத்திலே சுந்தரனான நீ, வசுக்களில் வசுவாயிருக்கிறாய். உன்னுடைய மிக்கப் பரந்த பாலனத்தில் நாங்கள் வசிப்போமாக. அக்கினியே! உன் நட்பால் நாங்கள் துன்பமற்றோராவோமாக.

14. நீ உன்னுடைய இடத்திலே எழுப்பப்பட்டு, ஸோமத்தைப் பெற்று, துதிக்கப்படுங்கால், உனக்கு சுகம் தோன்றுகிறது. பிறகு நீ இன்பமாகி தொழுபவனுக்கு அரிய செல்வத்தைத் தருகிறாய். அக்கினியே! உன் நட்பிலே நாங்கள் துன்பமற்றோராவோமாக.

15. உத்தமச் செல்வனே! பூரணனே! எல்லா யக்ஞங்களிலும் ஊக்கமுடனிருக்கும் எவனைப் பாவத்திலிருந்து நீக்கி, மங்கலமளிக்கும் பலத்தைத் தருகிறாயோ, அவன் செழிக்கிறான். நாங்கள் உன்னைத் தொழுகிறோம். புத்திர பௌத்திரர்களோடுள்ள செல்வத்தை எங்களுக்களிக்கவும். 1,055

16. தேவனான அக்கினியே! சௌபாக்கியத்தை அறியும் நீ, எங்களுடைய ஆயுளை நீட்டவும். மித்திரனும், வருணனும், அதிதியும், ஸிந்துவும், புவியும், சோதியும் எங்கள் ஆயுளைப் பாலிப்பார்களாக. 1,056

## 95. அக்கினி

### 95. குத்ஸ ஆங்கிரஸன்

1. மாறான வடிவங்களுள்ள இரு அவதிகள் தங்கள் சொந்த இலக்குகளுக்குச் செல்லுகின்றன. ஒன்றையொன்று தொடர்ந்து ஒன்றின் கன்றை மற்றொன்று பேணுகிறது. ஒன்றிலே பகலிலே சூரியன் உணவைப் பெறுகிறான்; மற்றொன்றிலே இரவிலே பிரகாசமாயுள்ள அக்கினி புலனாகிறான்.

2. விழித்திருக்கும் யுவதிகளான பத்து திசைகள், எல்லாப் பொருள்களிலிருப்பவனும், கூரிய முகமுள்ளவனும், சுயமான் புகழோடு விளங்குபவனும், எல்லாதேசங்களில் திகழ்பவனும், மேகங்களில் கருவாகத் தோன்று

பவனுமான இவ்வக்கினியைத் துவஷ்டாவான காற்றிலிருந்து பிறப்பிக்கின்றன. இவ்வக்கினியை அரணிக் கட்டையிலிருந்து பத்து விரல்கள் தோற்றுவிக்கின்றன.

3. அறிஞர்கள், அக்கினி பிறக்கும் மூன்று இடங்களான கடலையும் - வடவான வடிவத்தையும், ஒளி உலகில்-சூரிய வடிவத்தையும், சலங்களையும் - மேகங்களான மின்னல் வடிவத்தையும் போற்றுகிறார்கள். அக்கினி, சூரிய ரூபத்தோடு, புவியின் பிராணிகளுக்காகப் பருவங்களைச் செய்து, கிரமமாய்க் கீழ்த்திசையை நடத்துகிறான்.

4. உங்களில் எவன் மர்மமாயிருக்கும் இவனை அறிகிறான்? புதல்வன்-மின்னல் தன் சொந்த இயல்போடு' தன் தாய்மார்களை—மழை சலங்களைப் பிறப்பிக்கிறான். மகானும், கவியும் ஸ்வதாவோடு—சொந்த இயல்போடு இருப்பவனும், பல சலங்களின் கருவுமான அக்கினி—மின்னல் சமுத்திரத்திலிருந்து - சூரிய வடிவத்தோடு எழுகிறான்.

5. அழகனும் அலங்குபவனுமான மின்னல், ஆடும் சலங்களின் அங்கத்தில் எழுந்து, தன் சொந்த சோதியிலே செழிக்கிறான். பிரகாசமான அக்கினி பிறந்தவுடன், புவியும் வானும் கலக்கமாகின்றன. அவை சிங்கத்தை அணுகிப் போற்றுகின்றன. 1,061

6. மங்களமான இருவர்கள் வையமும் விண்ணும், இரவும் பகலும் அவனைப் பணிவிடைப் பெண்களைப் போல் பாலிக்கிறார்கள். அருகில் சென்று கன்றுகளைக் காக்கும் கதறும் பசுக்களைப் போல் அவனைப் பேணுகிறார்கள். வலது பக்கத்தில் அவிகளால் பாங்காடும் அவன் வலியர்களின் நடுவே வலியனாகிறான்.

7. அவன் தன் கைகளை-கிரணங்களை ஊக்கத்தோடு ஸவிதாவைப்போல் பரத்துகிறான். பயங்கரனாகி வையத்தையும் வானையும் அலங்கரிக்கிறான். தன் கடமைகளில் ஈடுபடுகிறான். அவன் ஒவ்வொன்றிலிருந்தும் ஒளிமய ரஸத்தைக் கிரகித்து மேலே எழுப்புகிறான். தாய்களான



மழை சலங்களிலிருந்து வரும் புதிய ஆடைகளால் புவியை உடுத்துகிறான்.

8. வானிலே, சலன சலங்களோடு சேர்ந்த அவன், மேன்மையான ஒளிமய வடிவத்தை ஏந்துகிறான். கவியும் தாரகனுமான அக்கினி, மூல ஸ்தானமான வானைத் தன் தேஜஸால் எழில்படுத்துகிறான். தேவர்கள் போற்றப்படும் சபை தோன்றுகிறது.

9. மகானான உன்னுடைய பரந்த வெற்றியுள்ள காந்தி, வானிலே பரவுகிறது. எங்களால் சொலிக்கப்பட்ட அக்கினியே! நீ, உன்னுடைய தடைபடாதவையும், பாலிப்பவையுமான சொந்த எல்லாச் சிறப்புக்களோடும் எங்களைப் பாலிக்கவும்.

10. வானில் சலனமாகும் தாரையை, அக்கினி பெருக்குகிறான். அந்த சுத்த சலங்களால் புவியை வெள்ளப்படுத்துகிறான். உதரங்களிலே உணவை ஸ்தாபிக்கிறான். ஏந்துகிறான். அதற்காகப் புதியதாகத் தோன்றும் ஓஷதிகளிலே சலனமாகிறான். 1,066

11. சுத்தப்படுத்தும் அக்கினியே! நாங்கள் அளிக்கும் ஸமித்தால் வளர்ந்து. சிறந்து அவிச், செல்வர்களான நாங்கள் உணவைப் பெற பிரகாசிக்கவும். மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும் சோதியும் எங்களுக்கு உணவைத் தருவார்களாக. 1,067

## 96. அக்கினி

### 96. குத்ஸ ஆங்கிரஸன்

1. அக்கினி பூர்வத்தில்போல் பலத்தால் பிறக்கிறான். சத்தியம். உடனே எல்லா காவ்யங்களையும் ஏந்துகிறான். வாக்கும், சலங்களும் அவனை நண்பனாகச் செய்து கொள்கின்றன. தேவர்கள் செல்வந்தரும் அக்கினியை ஏந்துகிறார்கள்.

2. அவன் ஆயுவின் பழைய துதியால் போற்றப் பட்டு மநுவின் இந்தப் பிரசைகளையெல்லாம் பிறப்பித் தான். தன்னுடைய போர்த்தும் பிரகாசத்தோடு வானிலும் சோதியிலும் பரவுகிருன். தேவர்கள் செல் வந்தரும் அக்கினியை ஏந்துகிருர்கள்.

3. சனங்களே! முதல்வனும், யக்ஞங்களை நடத்து பவனும், அவிகளால் திருப்தியாகி துதிகளால் மகிழ் பவனும், உணவின் புதல்வனும், தாங்குபவனும், சதா தானங்களை யளிப்பவனும், தலைவனுமான அக்கினியைப் போற்றுங்கள். தேவர்கள் செல்வந்தரும் அக்கினியை ஏந்துகிருர்கள்.

4. வானிலிருப்பவனும், போற்றத் தகுந்த புட்டி யைத் தருபவனும், சுவர்க்கத்தை யளிப்பவனும், மானி டர்களைப் பாலிப்பவனும், சோதியையும் புவியையும் பிறப்பிப்பவனுமான அக்கினி, என்னுடைய புதல்வர் களுக்கு நன்னெறியைக் கற்பிப்பாளுக. தேவர்கள் செல்வந்தரும் அக்கினியை ஏந்துகிருர்கள்.

5. பரஸ்பரம் தங்கள் நிறத்தை—ஒருவரின் நிறத்தை மற்றொருவர் தேய்த்துக் கொள்ளும் இரவும் பகலும் சேர்ந்து, சோதி புவிகளின் நடுவிலே பிரகாசிப்பவனும், காந்தனுமான ஒரே குழந்தையை ஊட்டுகிருர்கள். தேவர்கள் செல்வந்தரும் அக்கினியை ஏந்துகிருர்கள். 1,072

6. அமுதத் தன்மையைப் பாலித்து வரும் தேவர் கள், செல்வத்தின் மூலனும், செல்வங்களைத் தருபவனும், யக்ஞத்தின் கொடியும், நாடுபவனின் விருப்பங்களை நிறைவேற்றுபவனும், நிதிகளைத் தருபவனுமான அக் கினியை ஏந்துகிருர்கள்.

7. தேவர்கள், பூர்வத்தில் போல் இப்பொழுதும் செல்வத்தின் நிலையாயிருப்பவனும், தோன்றியவைக் கும் இனித் தோன்றும் அனைத்துக்கும் இடமாயிருப்பவ னும், இருக்கும் அனைத்தையும், வரும் அனைத்தையும்



பாலிப்பவனும், செல்வந் தருபவனுமான அக்கினியை ஏந்துகிருர்கள்.

8. செல்வந்தரும் அக்கினி, எங்களுக்குச் சங்கமச் செல்வத்தில் பாகத்தை யளிப்பாளுக. செல்வந் தருபவன் தாவர செல்வத்தில் பாகத்தையளிப்பாளுக. செல்வந் தருபவன், வமிசத்தைத் தரும் உணவை அளிப்பாளுக. செல்வந் தருபவன் எங்களுக்கு நீண்ட ஆயுளைத் தருவாளுக.

9. சுத்தப்படுத்தும் அக்கினியே! நாங்கள் அளிக் கும் ஸமித்தால் சிறந்து. அவிச் செல்வர்களான நாங்கள் உணவைப் பெற பிரகாசிக்கவும். மித்திரனும், வருண னும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் எங்களுக்கு அதைப் பாலிப்பார்களாக. 1,076

## 97. அக்கினி

### 97. குத்ஸ ஆங்கிரஸன்

1. அக்கினியே! எங்களது பாபத்தைப் பற்பப்படுத் தவும். எங்களுக்குச் செல்வத்தைப் புலப்படுத்தவும். அவனுடைய ஒளி எங்களது பாபத்தை நீக்குக.

2. நாங்கள் உன்னை இனிய நிலங்களுக்காகவும், நல்வழிகளுக்காகவும், செல்வங்களுக்காகவும் போற்று கிருேம். அவனுடைய ஒளி எங்களுடைய பாபத்தை நீக்குக.

3. இந்தத் தொழுபவர்களின் நடுவே குத்ஸன் மிக்கச் சிறந்தவன். அங்ஙனமே எங்களுடைய அடியார் களும் மிக்கச் சிறந்தவர்கள். அவனுடைய ஒளி எங்களு டைய பாபத்தை நீக்குக.

4. உன்னைத் தொழுபவர்கள், வமிசத்தைப் பெறு கிருர்கள். அக்கினியே! அங்ஙனம் நாங்களும் புகழ்ந்து, வமிசத்தைப் பெறுவோமாக. அவனுடைய ஒளி எங்களு டைய பாபத்தை நீக்குக.

5. ஜயிக்கும் அக்கினியின் கதிர்கள் எங்கும் பரவு கின்றன. அவனுடைய ஒளி பாபத்தை நீக்குக. 1,081

6. உன்னுடைய முகம் எங்கும் இருக்கிறது. நீ எங்களைப் பாலிப்பவனுகவும். அவனுடைய ஒளி எங்களுடைய பாபத்தை நீக்குக.

7. எங்கும் முகமுள்ள நீ, எங்களுடைய பகைவர்களை-அக்கரைக்குச் செல்லும் கப்பல் போல் செலுத்தவும். அவனுடைய ஒளி எங்களுடைய பாபத்தை நீக்குக.

8. நீ எங்களை, எங்களுடைய க்ஷேமத்துக்காக, கப்பலிலே கடலுக்கப்பால் செலுத்தவும். அவனுடைய ஒளி எங்களுடைய பாபத்தை நீக்குக. 1,084

## 98. அக்கினி

### 98. குத்ஸ ஆங்கிரஸன்

1. நாங்கள் வைசுவாநரனுடைய ஸுமதியிலிருப்போமாக. ஏனெனில் அவனே சீவர்களுக்கும் போற்றத் தகுந்த அரசனுகிருன். அவன் இங்கு-கட்டைகளிலிருந்து பிறப்பிக்கப்பட்டவுடன் விசுவத்தைக் கவனிக்கிருன். அவன் எழும் சூரியனைத் தொடர்கிருன்.

2. சோதியிலும், புவியிலும், எங்கும் இருப்பவனுமான அக்கினி, எல்லா ஓஷதிகளிலும் பரவினுன். பலத்திலிருக்கும் வைசுவாநராக்கினி எங்களை இரவும் பகலும் ப்கைவர்களிடமிருந்து பாலிப்பானுக.

3. வைசுவாநரனே! இந்த யக்ஞம் பயனுடனுகுக. செல்வச் செழுமைகள் எங்களிடம் சேர்க. மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் அச்செல்வங்களை எங்களுக்குப் பாலிப்பார்களாக. 1,087

## 99. அக்கினி

### 99. கசியப மாரீசன்

1. நாங்கள் ஜாதவேதஸனுக்கு ஸோமத்தைப் பொழிவோமாக. எங்களை எதிர்க்க விரும்பும் பகைவர்களின் செல்வத்தை அவன் தகிப்பானுக. எங்களை எல்லாத் துன்பங்களிலிருந்தும் கடத்துவானுக. அக்கினி பாபங்களிலிருந்து எங்களை, நதியைப் படகினுல் கடப்பது போல் நடத்திச் செல்வானுக. 1,088



## 100. இந்திரன்

### 100. விருஷாகிரர்கள்

1. விருப்பங்களைப் பொழிபவனும், வீரியங்களோடு இசைந்திருப்பவனும், மகத்தான சோதிக்கும் புவிக்கும் தலைவனும், சலத்தைச் செலுத்துபவனும், போர்களில் அழைக்கத் தகுந்தவனுமான இந்திரன், மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

2. சூரியனுடைய கதியைப்போல் மற்றவர்களால் முந்தப்படாத வழியையுள்ளவனும், ஒவ்வொரு போரிலும் பகைவர்களைக் கொல்பவனும், எதிரிகளை உலர்த்துபவனும், தன் துரித நண்பர்களோடு மிக்கப் பொழிபவனுமான இந்திரன், மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

3. எவனுடைய வலிமையுள்ள வெல்லப்படாத கிரணங்கள், சூரியனுடைய ரசிமிகளைப் போல் மேகங்களைக் கறந்து வருகின்றனவோ, எவன் தன் வீரச் செயல்களால் வெற்றியையடைந்து, பகைவர்களை ஜயிக்கிருனே அவனே இந்திரன். அவன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

4. அவன் அங்கிரஸர்களின் நடுவே முதலங்கிரஸன். பொழிபவர்களிலே மிக்கப் பொழிபவன். நண்பர்களிலே உத்தம நண்பன். போற்றத் தகுந்தவர்களிலே போற்றத் தகுந்தவன். துதியார்களிலே முதல்வன். இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களைப் பாலிப்பவனுவானுக.

5. தன்னுடைய புதல்வர்களைப் போல் ருத்திரர்களோடு வலியவனுயிருக்கும் இந்திரன், தன் நெருங்கிய நண்பர்களோடு புகழுக்குரிய செயல்களை நடத்துகிருன்.

அவன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களைப் பாலிப்பவனுவானுக. 1,093

6. பகைவர்களின் சீற்றத்தை யடக்குபவனும், போரைத் தோற்றுவிப்பவனும், நல்லவர்களை ஏந்துபவனும், பலரால் அழைக்கப்படுபவனுமான அவன், இன்று எங்கள் சனங்களோடு சேர்ந்து சூரியனுடைய ஒளியைப் பெறுவானுக. இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

7. நண்பர்களான மருத்துக்கள், அவனைப் போர்க்களத்திலே ஊக்கப்படுத்துகிருர்கள். மனிதர்கள் அவனை க்ஷேம பாலகனுகக் கருதுகிருர்கள். அவன் ஒவ்வொரு செயலுக்கும் தனித் தலைவனுயிருக்கிறன். இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

8. சனங்கள் போர்க்களத்திலே, பாலனத்துக்காகவும், செல்வத்துக்காகவும், தலைவனுன இந்திரனிடமே செல்லுகிருர்கள். ஏனெனில், கலக்கந்தரும் தமத்திலே அவன் அவர்களுக்கு ஜயிக்கும் சோதியைத் தருகிறன். இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

9. அவன் தன்னுடைய இடது கையால் துன்புறுத்தும் பகைவர்களை அடக்குகிறன். வலது கையால் அவிகளை ஏற்கிறன். பகைவர்களின் செல்வத்தைப் பற்றுகிறன். துதியால் துதிக்கப்பட்டு, செல்வத்தைத் தருகிறன். இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களைப் பாலிப்பவனுவானுக.

10. அவன் கால் படைகளோடும், தேர்ப் படைகளோடும் செல்வங்களை ஜயிக்கிறன். அவன் இத்தினத்தில் எல்லா சனங்களாலும் நன்கறியப்படுகிறன். அவன் தன் பராக்கிரமத்தால் தன்னை வெறுப்பவர்களை ஜயிக்கிறன். இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களைப் பாலிப்பவனுவானுக. 1,098



11. அவன் பலரால் அழைக்கப்பட்டு பந்துக்களோடும், பந்துத்துவமற்ற ஆட்களோடும் போருக்குச் செல்லுகிறன். அவனைச் சரணமடைந்தவர்களுக்கும், அவர்களுடைய புதல்வர்களுக்கும், பேரர்களுக்கும் ஜயத்தைத் தருகிறன். இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

12. அவன் வச்சிரத்தை ஏந்துகிறன். தஸ்யுக்களைக் கொல்லும் அவன், பயங்கரனுயும், உக்கிரனுயுமிருக்கிறன். அனைத்தையுமறிகிறன். மிக்கப் போற்றப்படும் அவன், மகானுயிருக்கிறன். அவன் ஸோமரஸத்தைப் போல், பஞ்ச சனங்களை ஊக்கப்படுத்துகிறன். இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

13. அவனுடைய வச்சிராயுதம், பகைவர்களிடமிருந்து கூக்குரலை எழுப்புகிறது. அவன் நல்ல சலங்களையளிப்பவன். சூரியனைப்போல் பிரகாசிப்பவன். கர்ச்சிப்பவன். செயல்களில் ஈடுபடுபவன். அவனுக்குத் தானங்களும், செல்வங்களும் பணிகின்றன. இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

14. எல்லாப் பொருள்களுக்கும் உத்தமப் பரிமாணமாயுள்ள அவன், தன் பலத்தால் எங்கும் நித்தியமாய்ச் சோதியையும், புவியையும் பாலிக்கிறன். அவன் எங்கள் செயல்களால் மகிழ்ந்து எங்களைத் தீமைக்கப்பால் கடத்துவானுக. இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக.

15 தேவர்களும், மனிதர்களும், சலங்களும் அந்த தான தேவதையின் ஆற்றலின் எல்லையையணுகவில்லை. அவன் தன்னுடைய பலத்தால் சோதியையும், புவியையும் கடக்கிறன். இந்திரன் மருத்துக்களோடு சேர்ந்து எங்களுடைய பாலகனுவானுக. 1,103

16. நீண்டாங்கமுள்ளவையும், அலங்கரிக்கப்பட்டவையும், வானிலிருப்பவையும், களிப்புறுத்துபவையும்,

பொழிபவனை ஏந்தி வரும் தேரின் நுகத்தில், ரிஜ்ராசு வனைச் செல்வப்படுத்த இணைக்கப்பட்டவையுமான சிகப்பு, கருப்பு குதிரைகள் சேனைப் படைகளின் நடுவே தென்படுகின்றன.

17. இந்திரனே! பொழிபவனை உனக்கு வார்ஷ கிரர்களும், ரிஜ்ராசுவனும், அவனுடைய நண்பர்களும், அம்பரீஷனும், பயமானனும், ஸுராதஸனும், ஸஹதேவ னும் இந்தப் பிரியமான தோத்திரத்தைக் கூறுகிருர்கள்.

18. பலரால் அழைக்கப்படுபவனும், சலன மருத்துக் களோடு சேர்ந்துள்ளவனுமான இந்திரன், புவியிலிருக் கும் தஸ்யுக்களையும், சிம்யுக்களையும் எதிர்த்து வச்சிரா யுதத்தால் கொன்ருன். பிறகு வச்சிரனை அவன், பகை வர்களின் நிலங்களை வெண்ணிற நண்பர்களோடு பகிர்ந்துகொண்டான். சூரியனை மீட்டினான். சலத்தை விடுவித்தான்.

19. எப்பொழுதும் இந்திரன் எங்களுக்குப் பரிந்து பேசுவானுக. நாங்களும் நல்ல வழியிலே சென்று உண வைப் பெறுவோமாக. மித்திரனும், வருணனும், அதிதி யும், கடலும், புவியும், சோதியும் அதை எங்களுக்குப் பாலிப்பார்களாக. 1,107

## 101. இந்திரன்

### 101. குத்ஸ ஆங்கிரஸன்

1. ரிஜிஸ்வனேடு கிருஷ்ணனுடைய கர்ப்பந் தரித்த மனைவிகளைக் கொன்றவனும், துதியாருகனுமான இந்திரனுக்கு அவிகளோடு வணக்கத்தை யளியுங்கள். பாலனத்தை விரும்பும் நாங்கள், பொழிபவனும், வலது கையில் வச்சிரமேந்துபவனும், மருத்துக்களோடு சேர்ந் திருப்பவனுமான இந்திரனை, நண்பனுக இருக்க நாங் கள் அழைக்கிறேம்.

2. நாங்கள் மருத்துக்களோடு சேர்ந்தவனும், மிக் கக் கோபத்தோடு கையிழந்த வியம்ஸனையும், சம்பரனை



யும், விரதமற்ற பிப்ருவைக் கொன்றவனும், சாயாத சுஷ்ணனைச் சாய்த்தவனுமான இந்திரனை, நண்பனுக இருக்க அழைக்கிறேம்.

3. எவனுடைய மகத்தான ஆண்மை சோதியிலும் புவியிலும் பரவுகிறதோ, எவனுடைய விரதத்தை வருண னும் சூரியனும் பாலிக்கிருர்களோ, எவனுடைய ஆக்ஞை யால் நதிகள் பாய்கின்றனவோ, எவன் மருத்துக் களோடு சேர்ந்திருக்கிருனே அந்த இந்திரனை, நண்பனுக இருக்க நாங்கள் அழைக்கிறேம்.

4. குதிரைகளுக்கும் பசுக்களுக்கும் தலைவனுயிருப் பவனும், சுதந்திரனும், துதியைப் பெற்று ஒவ்வொரு செயலிலும் திரமாயிருப்பவனும், வலியனுயிருந்தாலும் பொழியாமலிருப்பவனைக் கொல்பவனும், மருத்துக் களோடு சேர்ந்திருப்பவனுமான இந்திரனை, எங்களிடம் நண்பனுக இருக்க நாங்கள் அழைக்கிறேம்.

5. சலனமாடும், சுவாசிக்கும் எல்லாப் பிராணி களுக்குத் தலைவனும், அறிஞனுக்குத் திருடப்பட்ட பசுக் களை மீட்டிய முதல்வனும், தன் கால்களின் கீழே தஸ்யுக் களைத் தாழ்த்தியவனும், மருத்துக்களோடு சேர்ந்திருப்ப வனுமான இந்திரனை, எங்களிடம் நண்பனுக இருக்க நாங் கள் அழைக்கிறேம். 1,112

6. பயப்படுபவர்களாலும் போர் வீரர்களாலும், ஜயித்தவர்களாலும், தோற்றவர்களாலும் அழைக்கத் தகுந்தவனும், எல்லா சனங்களாலும் தங்கள் செயல் களிலே முகப்படுத்தப்படுபவனும், மருத்துக்களோடு சேர்ந்திருப்பவனுமான இந்திரனை, எங்களிடம் நண்பனுக யிருக்க நாங்கள் அழைக்கிறேம்.

7. சூரிய ரூபமுள்ள இந்திரன், பிராண வடிவந் தரித்த ருத்திரப் புதல்வர்களான மருத்துக்களை கிரகித்து உதயமாகிருன். அந்த ருத்திரப் புதல்வர்களான மருத் துக்களால் மொழி விரைந்து பரவுகிறது. புகழுள்ள இந் திரனைப் பனுவல் போற்றுகிறது. நாங்கள் மருத்துக்

களோடு சேர்ந்துள்ள இந்திரனை நட்புக்காக அழைக்கிறோம்.

8. மருத்துக்களோடு சேர்ந்த இந்திரனே! உயர்ந்த மனையிலோ, தாழ்ந்த குடிசையிலோ இன்புறுபவனாயிருக்கும் நீ, எங்களுடைய யக்ஞத்துக்கு வரவும். ஸத்திய செல்வத்தைத் தருபவனான உன்னுடைய வருகையை விரும்பி நாங்கள் உனக்கு அவிகளை அளிக்கிறோம்.

9. சுதட்சனே! இந்திரனே! நாங்கள் உன்னை விரும்பி உனக்கு ஸோமத்தை யளிக்கிறோம் தோத்திரத்தால் தோன்றும் உன்னை விரும்பும் நாங்கள் உனக்கு அவிகளை அளிக்கிறோம். குதிரைகளுள்ள நீ, இந்த யக்ஞத்திலே தருப்பையின் மீது இன்பத்துடன் மருத்துக்களோடு சேர்ந்து அமரவும்.

10. இந்திரனே! உன்னுடைய சொந்தக் குதிரைகளோடு நீ இன்பமாகவும்; உன் வாய்களைத் திறக்கவும்; உன் உதடுகள் விரிக; அழகிய கன்னமுள்ள உன்னை உன் குதிரைகள் ஏந்தி வருக; எங்களை விரும்பும் நீ, எங்கள் அவிகளால் இன்புறவும். 1,117

11. மருத்துக்களோடு புகழப்படுபவனும், பகையழிப்பவனுமான இந்திரனால் பாலனமாகி, நாங்கள் அவனிடமிருந்து சக்தியைப் பெறுவோமாக. மித்திரனும் வருணனும், கடலும், புவியும், சோதியும் எங்களுக்கு அதைப் பாலிப்பார்களாக. 1,118

# 102. இந்திரன்

## 102. குத்ஸ ஆங்கிரஸன்

1. நான் மகானான உனக்கு இந்த மகத்தான துதியைக் கூறுகிறேன். உன்னுடைய மனம் என் துதியால் இணக்கமாயிற்று. தேவர்கள் செல்வத்துக்காகவும், செழிப்புக்காகவும் துதியின் திறத்தோடு ஜயமுள்ள இந்திரனைக் கிரமமாய்ப் போற்றினார்கள்.



2. ஏழு நதிகள் அவனுடைய புகழைப் புலப்படுத்துகின்றன. சோதியும், புவியும், வானமும் அவனுடைய சுந்தரமான வடிவத்தைக் காட்டுகின்றன. இந்திரனே! சூரியனும், சந்திரனும் நாம் பார்க்கவும், பார்ப்பதில் சிரத்தையுடனாகவும், ஒருவரை ஒருவர் தொடர்ந்து சுற்றிச் சுற்றி வருகிறார்கள்.

3. மகவானே! இந்திரனே! போரிலே மிக்கப் போற்றப்படும் உன்னுடைய எந்த ஜயமுள்ள தேரை நாங்கள் சமரில் காண இன்புறுகிறேமோ, அந்தத் தேரை எங்களுக்குச் செல்வத்தை ஏந்தி வரச் செலுத்தவும். உன்னை விரும்பும் எங்களை சுகப்படுத்தவும்.

4. உன்னை நண்பனாக அடைந்துள்ள நாங்கள், ஒவ்வொரு போரிலும் பகைவர்களை ஜயிப்போமாக. எங்கள் கட்சியைப் பாலிக்கவும் நாங்கள் சுலபமாக செல்வங்களைப் பற்றுவோமாக. மகவானே! எங்கள் சத்துருக்களின் பலத்தை உடைக்கவும்.

5. சனங்கள் பாலனத்துக்காக உன்னைப் பலவிதமாய் அழைக்கிறார்கள். இந்திரனே! எங்களுக்குச் செல்வத்தை ஏந்தி வர, தேரிலே ஏறவும். உன்னுடைய மனம் சாந்தமாயிருக்கிறது. ஜயத்திலே நிலைக்கிறது. 1,123

6. உன்னுடைய புஜங்கள் பசுக்களை ஜயிக்கின்றன. உன் அறிவுக்கு எல்லை இல்லை. நீ உத்தமன்; ஒவ்வொரு செயலுக்கும் நூறு பாலனங்களைத் தருபவன்; நீ போரைத் தோற்றுவிப்பவன்; சுதந்திரன். இந்திரன் பலத்தின் பிரதிநிதி. ஆதலால் செல்வத்தை விரும்பும் மனிதர்கள் அவனைப் பலவிதமாய் அழைக்கிறார்கள்.

7. மகவானே! நீ மனிதர்களுக்கு அளிப்பதர்க்கான உணவு நூற்றுக்கதிகமாய், இன்னும் அதிகமாய், ஆயிரத்துக்கு மதிகமாயிருக்கிறது. உனக்குப் பரிமாணமில்லை. மகத்தான தோத்திரம் உன்னை ஒளிப்படுத்துகிறது. புரந்தரனே! அப்பால் நீ விருத்திரர்களைக் கொல்லுகிறாய்.

8. மானிடர்களைப் பாலிப்பவனே! நீ மூன்று கயிறுகளால் முறுக்கப்பட்ட வடத்தைப் போல் வலியனாயிருக்கிறாய். நீ பலத்துக்குப் பிரதிநிதி. இந்திரனே! நீ மூவ்வுலகங்களையும், மூன்று சுடர்களையும்-சூரியனையும், மின்னலையும், புவியின் அனலையும்-மிக்க ஏந்த விரும்புகிறாய். நீயே அனைத்தையும் நடத்த விரும்புகிறாய். பிறந்ததிலிருந்தே உனக்குப் பகைவன் எவனுமில்லை.

9. நாங்கள் தேவர்களிலே முதல்வனான உன்னை அழைக்கிறோம். நீ போர்களிலே ஜயிப்பவனாகிறாய். இந்திரன் எங்களுடைய போருக்குத் தகுந்ததும், வேகமாய்ச் செல்வதும், தடைகளை நீக்குவதுமான இந்தத் தேரை சமரிலே முற்படுத்துவானாக.

10. மகவானே! நீ ஜயிக்கிறாய். நீ, பறித்த செல்வங்களைத் தராமல் ஒளித்து வைத்துக்கொள்வதில்லை. மகவானே! எங்களுடைய பாலனத்துக்காக உக்கிரனான உன்னை அற்பச் சண்டைகளிலும், பெரிய போர்களிலும் நாங்கள் தீவிரப்படுத்துகிறோம். இந்திரனே! ஆதலால் போரிலே அழைப்புக்கு வந்து எங்களை ஊக்கப்படுத்தவும். 1,128

11. எப்பொழுதும் இந்திரன் எங்களுக்குப் பரிந்து பேசுவானாக. நாங்களும் நல்ல வழியிலே சென்று உணவைப் பெறுவோமாக. மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் அதை எங்களுக்குப் பாலிப்பார்களாக. 1,129

# 103. இந்திரன்

## 103. குத்ஸ ஆங்கிரஸன்

1. உன்னுடைய அந்த உத்தம இந்திர பலம் தூரத்திலிருக்கிறது. அறிஞர்கள் இங்கு இருப்பதைப் பூர்வத்திலே பிரத்யட்சமாய் ஏந்தினார்கள். இந்திரனின் ஒரு சோதி புவியிலே; மற்றொன்று வானிலே பிரகாசிக்கின்றன. போரிலே கொடியோடு கொடிபோல் சூரியனும், அக்கினியும் ஒருவரோடு ஒருவர் சேர்கிறார்கள்.



2. இந்திரன் புவியை ஏந்தினான். அதைப் பரத்தினான். அவன் வச்சிரத்தால் மேகங்களை அடித்து சலங்களை விடுவித்தான். மகவான் அஹியைக் கொன்றான். ரௌஹிணனைப் பிளந்தான். அவன் தன் ஆற்றலால் கை யிழந்த விருத்திரனை அழித்தான்.

3. வச்சிரமேந்திய அவன் தன் வலிமையிலே மிக்க ஊக்கமுள்ளவனாகி தஸ்யுக்களின் புரங்களை அழித்துத் திரிந்தான். வச்சிரனே! நீ தொழுபவனுடைய சத்துருவின் மீது ஆயுதத்தைச் செலுத்தவும். இந்திரனே! ஆரியனின் 'புகழையும் பலத்தையும் அதிகப்படுத்தவும்.

4. வச்சிரனும், பகைவர்களைச் சிதைப்பவனுமான மகவான் தஸ்யுக்களை அழிக்கப் புறப்பட்டு, புகழுக்காக எந்த பலத்தை ஏந்தினானோ, போற்றுவதர்க்குரிய அந்த பலத்தைத் தரித்து, தொழுபவனுக்கு யுகங்களை சூரியனுடைய வடிவத்தால் அளிக்கிறான்.

5. இந்திரனுடைய இந்த செழித்த செல்வத்தைக் காண்மின். அவனுடைய ஆற்றலை ஏத்துமின்; அவன் பசுக்களை மீட்டினான். அவன் குதிரைகளை, ஓஷதிகளை, சலங்களை, செல்வங்களை மீட்டினான். 1,134

6. பல வீரச் செயல்களை நடத்துபவனும், சத்தியமான பலமுள்ளவனும், பொழிபவனும், விருஷபனுமான அவனுக்கு நாம் ஸோமத்தைப் பொழிவோமாக. தனத்தை மதிக்கும் சூரன் யஜிக்காதவனிடமிருந்து செல்வத்தை, வழிப்போக்கனிடமிருந்து பறிக்கும் திருடனைப் போல் பறித்து, யஜிப்பவனுக்களிக்கச் செல்லுகிறான்.

7. இந்திரனே! நீ உறங்கும் அஹியை உன் வச்சிராயுதத்தால் எழுப்பினாய். புகழுக்குரிய செயலை நடத்தினாய். பிறகு மருத்துக்களும், தேவ பத்தினிகளும், எல்லாத் தேவர்களும் உன் மதத்தைப் பார்த்து மகிழ்ந்தார்கள்—பின்பற்றினார்கள்.

8. இந்திரனே! நீ சுஷ்ணனையும், பிப்ருவையும், குயவனையும், விருத்திரனையுங் கொன்று, சம்பரனுடைய புரங்களை அழித்தாய். மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் நாங்கள் விரும்புவதை யளிப்பார்களாக. 1,137

## 104. இந்திரன்

### 104. குத்ஸ ஆங்கிரஸன்

1. இந்திரனே! நீ அமர, இடம் உயர்த்தப்பட்டது. லாயத்துக்குப் பாயும், கனைக்கும் குதிரையைப் போல் பாய்ந்து அதில் உட்காரத் துரிதமாகவும். பறக்கும் குதிரைகளைத் தளர்த்தவும். யக்ஞஞ்செய்யுங்கால் காலையிலும் மாலையிலும் உன்னை ஏற்றி வரும் குதிரைகளை அவிழ்த்துவிடவும்.

2. இந்த சனங்கள் பாலனத்தை விரும்பி இந்திரனிடம் வந்திருக்கிறார்கள். அவன் அவர்களை நல்ல வழியில் துரிதப்படுத்துவானாக. தேவர்கள் அழிப்பவனின் சீற்றத்தை யகற்றுவார்களாக. அவர்கள் எங்கள் சனங்களைச் செல்வத்துக்குச் செலுத்துவார்களாக.

3. அசுரன் மற்றவர்களின் செல்வத்தை அறிந்து அதைத் தானே அபகரித்துச் செல்லுகிறான். சலத்திலிருக்கும் அவன் தானே நுரையை எடுத்து சலிக்கிறான். குயவனின் இரு மனைவிகள் அந்த சலத்தில் ஸ்னானஞ் செய்கிறார்கள். சிபை நதியின் மடுக்களிலே அவர்கள் மூழ்கி மரிப்பார்களாக.

4. திரிபவனின்—குயவனின் இருப்பிடம் சலத்தின் நடுவே மறைந்திருந்தது. அவன் பூர்வத்தில் அபகரிப்பட்ட சலங்களோடு வளர்கிறான். சூரன் புகழோடு விளங்குகிறான். அஞுஸியும், குலிசியும், வீரபத்தினியுமான நதிகள் அவனைப் பாலால் சுகப்படுத்தி சலங்களால் தாங்குகின்றன.



5. தொழுவத்துக்குச் செல்லும் வழியை யறியும் பசுவைப் போல் தஸ்யுவின் மனைக்குச் செலுத்தும் வழியை நாங்கள் அறிகிறோம். மகவானே! அவனுடைய அடிக்கடி செய்யும் இம்சையிலிருந்து எங்களைப் பாலிக்கவும். செல்வத்தை நீக்கும் வீணனைப் போல் எங்களைப் புறக்கணிக்காதே. 1,142

6. இந்திரனே! நாங்கள் சூரியனையும், சலங்களையும் பாபமற்றவர்களையும், புகழுள்ளவர்களையும் மேம்படுத்த எங்களை ஊக்கப்படுத்தவும். கருப்பாசயத்திலிருக்கும் எங்கள் குழந்தையைத் துன்புறுத்தாதே. நாங்கள் உன்னுடைய மகத்தான வலிமையிலே சிரத்தையுடனிருக்கிறோம்—நம்பிக்கையுடனிருக்கிறோம்.

7. நான் உன்னை மனத்தால் அறிகிறேன். உன் சக்தியிலே எனக்கு—சிரத்தை-நம்பிக்கையுண்டு. பொழிபவனே! எங்களை மகத்தான செல்வத்துக்குச் செலுத்தவும். பலரால் போற்றப்படுபவனே! செல்வமற்ற மனையை எங்களுக்களிக்காதே. இந்திரனே! பசித்தவர்களுக்கு உணவையும் பாலையுமளிக்கவும்.

8. இந்திரனே! எங்களைத் துன்புறுத்தாதே; கைவிடாதே. நாங்கள் விரும்பும் போகங்களைப் பறிக்காதே. செல்வனான சக்கரனே! கருப்பத்திலுள்ள சந்தானத்தைத் துடைக்காதே. மூடவர்களைத் துக்கப்படுத்தாதே.

9. நீ எங்கள் முன்னிலையில் வா. உனக்கு ஸோமத்தில் பிரியமுண்டு என அவர்கள் கூறினார்கள். அது பொழியப்பட்டிருக்கிறது. உன்னுடைய மதத்துக்காக அதைப் பருகவும். பரவிப் பரந்து ஸோமத்தை உன் உதரத்தினுள் பொழிந்து கொள்ளவும். நீ அழைக்கப்பட்டவுடன் தந்தையைப் போல் செவி கொடுக்கவும். 1,146

# 105. விசுவே தேவர்கள்

## 105. திரித ஆப்தியன்

1 சோதியிலே அழகிய சிறகுகளுள்ள சந்திரன் சலங்களின் நடுவே ஓடுகிருன். தங்கச் சக்கரங்களோ டுள்ள மின் கதிர்களே! மானிடர்கள் உங்கள் இருப் பிடத்தைக் காணவில்லை. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

2. செல்வத்தை விரும்புவர்கள் அதை அடை கிருர்கள். கணவனின் சந்நிதியில் மனைவி இன்புறு கிருள். அவர்கள் இணைகிருர்கள். ஸந்தானம் தோன்று கிறது. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத் திரத்தை அறியுங்கள்.

3. தேவர்களே! அந்த சோதி வானிலே அதன் இடத்திலிருந்து விழாமலிருக்க ஸோமத்தைப் போல் இனிமையுள்ளவனும், எங்கள் இன்பத்துக்கு மூலமா யிருப்பவனுமான புத்திரனை நரங்கள் எப்பொழுதும் பெறுவோமாக. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

4. நான் தேவர்களிலே முதல்வனும், யக்ஞாருகனு மான அக்கினியிடம் வேண்டுகிறேன். அவன் தூதனுகி என் விருப்பத்தைத் தேவர்களிடம் கூறுவாளுக. அக்கினியே! நீ பூர்வத்தில் செய்த நன்மை எங்கே? உன்னுடைய பழைய, ருதம் எங்கு சென்றது? உன்னை யன்றி வேறு எவன் அந்த ருதத்தை இப்பொழுது ஏந்துகிருன்? சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

5. மூவ்வுலகங்களில் இருப்பவர்களும், சூரியனு டைய ஒளியில் வசிப்பவர்களுமான தேவர்களே! உங் களுடைய சத்தியம் எங்கே? அசத்தியம் எங்கே? நான் உங்களுக்குக் கூறிய பழைய தோத்திர மெங்கே? சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள். 1,151



6. தேவர்களே! உங்களுடைய சத்தியத்தின் பாலனமெங்கே? வருணனுடைய கண்ணேட்ட மெங்கே? நாங்கள் தீயோர்களைக் கடந்து செல்ல மகா னுன அர்யமானின் வழி எங்கே? சோதி புவிகளே! என் னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்,

7. தேவர்களே! ஸோமம் பொழியப்பட்டபோது பூர்வத்திலே உங்களுக்குத் துதியைக் கூறியவன் நானே. தாகமடைந்த மானைத் தாக்கும் ஓநாயைப் போல் துன்புறுத்தும் கவலைகள் என்னை வருத்துகின்றன. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

8. கிணற்றின் சுற்றுச் சுவர்கள் சக்களத்திகளைப் போல் என்னைத் தாபப்படுத்துகின்றன. சதக்கிரதுவே! தொழுபவனுன என்னை, கவலைகள், சேணியனின் இழை களைக் கடிக்கும் எலியைப் போல் கடிக்கின்றன. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

9. அங்கு இருக்கும் ஏழு சூரிய ரசிமிகளிலே நான் என் சந்தானத்தோடு பரவியிருக்கிறேன். இதைத் திரித ஆப்தியன் நன்கறிகிருன். அவன் சகோதரத்துவத்துக் காகப் போற்றுகிருன். கிணற்றிலிருந்து எழுப்பப்படத் துதிக்கிருன். சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

10. மகத்தான சோதியின் நடுவிலிருக்கும் ஐந்து பொழிபவர்களான அக்கினியும், வாயுவும், சூரியனும், இந்திரனும், மின்னலும் சேர்ந்து என்னுடைய இந்தத் துதிகளைத் தேவர்களிடம் துரிதமாய் எடுத்துச் சென்று திரும்புவார்களாக. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள். 1,156

11. சூரிய ரசிமிகள் சர்வ வியாபகமான வானின் நடுவிலிருக்கின்றன. அவை மகத்தான சலத்தைக் கடக்கும் ஓநாயை அதன் வழியிலிருந்து துரத்தின

சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

12. தேவர்களே! உங்களிடம் புதிய, புகழுக்குரிய, போற்றத் தகுந்த பலமிருக்கிறது. அதனால் நதிகள் சலத்தைச் செலுத்துகின்றன. சூரியன் தன்னுடைய நித்தியமாயிருக்கும் ஒளியைப் பரத்துகிறான். சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

13. அக்கினியே! உன்னுடைய தேவர்களோடிருக்கும் பந்துத்வம் போற்றத் தகுந்தது. மிக்க அறிஞனான நீ, எங்கள் யக்ஞத்தில் அமர்ந்து, மநுவின் யக்ஞத்தில் போல் தேவர்களை யஜிக்கவும். சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

14. தேவர்களின் நடுவே மேதாவியும், அறிஞனும், தேவனுமான அக்கினி மநுவினுடைய யக்ஞத்தில் போல் எங்கள் யக்ஞத்தில் அமர்ந்து, தேவர்களின் ஹோதாவாகி, அவிகளை அளிப்பானாக. சோதி புவிகளே! எங்களுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

15. வருணன், பிரம்மத்தைப் பாலிக்கும் செயலை நடத்துகிறான். நாங்கள் வழியைப் புலப்படுத்தும் அவனைப் போற்றுகிறோம். தொழுபவன் அவனுக்கு இதயத்தோடு துதியைக் கூறுகிறான். துதியாருகனான எங்களுடைய சத்தியமான பாலகனுவானாக. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள். 1,161

16. தேவர்களே! சோதியிலே போற்றத் தகுந்த வழியைச் செய்த சூரியனை நீங்கள் கடக்க இயலாது. மானிடர்களே! நீங்கள் அவனை அறியவில்லை. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்



17. கிணற்றிலே விழுந்த திருதன் பாலனத்துக்காகத் தேவர்களை அழைக்கிறான் பாபத்திலிருந்து பலரை மீட்கும் பிரகஸ்பதி அவனுடைய அழைப்பைக் கேட்டான். சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

18. ஒருக்கால் நான் என் வழியில் சென்றபோது, சிகப்பு ஓநாயொன்று என்னைப் பார்த்தது. என்னைக் கண்டவுடன், வேலையிலே குனிந்து முதுகின் வலியை நீக்க நிமிரும் தச்சனைப் போல் நிமிர்ந்து என் மீது பாய்ந்தது. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள்.

19. இந்த கோஷிக்கத் தக்கக் காதையால் இந்திரனை அடைந்து, நாங்கள் எல்லா வீரர்களோடும் சேர்ந்து, போரிலே எங்கள் பகைவர்களை ஜயிப்போமாக. சோதி புவிகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தை அறியுங்கள். 1,165

## 106. விசுவே தேவர்கள்

### 106. குத்ஸ ஆங்கிரஸன்

1. நாங்கள், எங்கள் பாலனத்துக்காக இந்திரனையும், மித்திரனையும், வருணனையும், அக்கினியையும், மருத்துக்களின் படையையும் அழைக்கிறோம். உத்தம வள்ளல்களான வசுக்கள், எங்களை எல்லாப் பாவத்திலிருந்தும், கடின வழியிலிருந்தும் தேரைப் போல் பாலிப்பார்களாக.

2. அதிதிப் புதல்வர்களே! தேவர்களே! எல்லாப் படைகளோடும் போரிலே உதவியளிக்க வாருங்கள். போர்களில் எங்களை சுகப்படுத்துங்கள். உத்தம வள்ளல்களான வசுக்கள் எங்களை எல்லாப் பாவத்திலிருந்தும், கடின வழியிலிருந்தும் தேரைப் போல் பாலிப்பார்களாக.

3. சுலபமாய்ப் போற்றத் தகுந்த பிதுருக்கள் எங்களைப் பாலிப்பார்களாக. ஸத்தியத்தை ஊக்கப்படுத்தும் தேவர்களின் தாய்மார்களான இரு தேவியார்கள் எங்

களைப் பாலிப்பார்களாக. உத்தம வள்ளல்களான வசுக்கள் எங்களை எல்லாப் பாவத்திலிருந்தும், கடின வழியிலிருந்தும் தேரைப் போல் பாலிப்பார்களாக.

4. நாங்கள் நராசம்ஸனின் – அக்கினியின் – வலிமையை ஒளிப்படுத்தி, வலியனான அவனையும், மனிதர்களை நடத்தும் பூஷாவையும், துதிகளோடு வேண்டுகிறோம். உத்தம வள்ளல்களான வசுக்கள் எங்களை எல்லாப் பாவத்திலிருந்தும், கடின வழியிலிருந்தும் தேரைப் போல் பாலிப்பார்களாக.

5. பிரகஸ்பதியே! எங்களுக்கு எப்போதும் சுகத்தையளிக்கவும். உன்னிடம், மானிடர்களை நோயிலிருந்து நீக்கவும், பயத்திலிருந்து பிரிப்பதர்க்குரிய இயல்புகள் இருக்கின்றன. அவற்றை நாங்கள் வேண்டுகிறோம். உத்தம வள்ளல்களான வசுக்கள் எங்களை எல்லாப் பாவத்திலிருந்தும், கடின வழியிலிருந்தும் தேரைப் போல் பாலிப்பார்களாக. 1,170

6. கிணற்றினுள் தள்ளப்பட்ட குத்ஸ ரிஷி பாலனத்துக்காகப் பகைவர்களை யழிப்பவனும், நல்ல செயல்களை ஊக்கப்படுத்துபவனுமான இந்திரனை அழைத்தான். உத்தம வள்ளல்களான வசுக்கள் எங்களை எல்லாப் பாவத்திலிருந்தும், கடின வழியிலிருந்தும் தேரைப் போல் பாலிப்பார்களாக.

7. தேவியான அதிதி தேவர்களோடு எங்களைப் பாலிப்பாளாக. தேவனான பாலகன்–சூரியன்–எங்களைப் பாலிக்க விழித்திருப்பானாக. மித்திரனும், வருணனும், அதிதியும், ஸிந்துவும், புவியும், சோதியும் எங்களுடைய இந்த விருப்பத்தை மேம்படுத்துவார்களாக–பூர்த்தி செய்வார்களாக. 1,172

## 107. விசுவே தேவர்கள்

### 107. குத்ஸ ஆங்கிரஸன்

1. எங்கள் யக்ஞம் தேவர்களை சுகப்படுத்துக. ஆதித்தியர்களே எங்களை சுகப்படுத்துபவர்களாகத் தோன்றுங்கள். உங்களுடைய ஸுமதியை எங்களிடம் விளக்குங்கள். வறுமையிலிருந்து விலக்கும் உத்தம வள்ளலாயிருங்கள்.



2. அங்கிரஸர்களுடைய ஸாமகானங்களால் பாடப்படும் தேவர்கள் இங்கு எங்களுடைய பாலனத்துக்கு வருவார்களாக. இந்திரன் இந்திரியங்களோடும்–செல்வங்களோடும், மருத்துக்கள் மருத்துக்களோடும்–பிராணன்களோடும், அதிதி–ஆதித்தியர்களோடும் வந்து எங்களுக்கு சுகத்தை யளிப்பார்களாக.

3. இந்திரனும், வருணனும், அக்கினியும், அரியமானும் ஸவிதாவும் எங்களுக்கு நாங்கள் விரும்பும் அந்த உணவையளிப்பார்களாக. மித்திரனும், வருணனும் அதிதியும், கடலும், புவியும், சோதியும் அந்த உணவை எங்களுக்குப் பாலிப்பார்களாக. 1,175

## 108. இந்திராக்கினிகள்

### 108. குத்ஸ ஆங்கிரஸன்

1. இந்திராக்கினிகளே! உங்களுடைய எல்லா உலகங்களையும் ஒளிப்படுத்தும் அற்புதமான அந்தத் தேரிலே நீங்கள் இருவரும் அமர்ந்து வாருங்கள்; பொழியப்பட்டுள்ள ஸோமரஸத்தைப் பருகுங்கள்.

2. இந்திராக்கினிகளே! பரப்பிலே இந்த முழுப்பிரபஞ்சத்தைப் போல் பரந்திருப்பதும், ஆழத்திலே கம்பீரமாயிருப்பதுமான இந்த ஸோமன் உங்களுடைய பானத்துக்குத் தகுந்ததாகுக. உங்கள் விருப்பங்களுக்கு ஏற்றதாகுக.

3. நீங்கள் இணைந்துள்ள நாமங்களை மங்கலப்படுத்தினீர்கள். விருத்திரனை யழிப்பவர்களே! நீங்கள் விருத்திரனைக் கொல்ல ஒன்று சேர்ந்தீர்கள். செல்வங்களைப் பொழியும் இந்திராக்கினிகள் சேர்ந்து அமர்ந்திருக்கிறீர்கள். உங்களுடைய ஸோம பாகத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

4. உயர்த்திய சுருக்கங்களோடு தருப்பைப் பரத்தப்பட்டு அக்கினிகள், சொலிப்பிக்கப்பட்டவுடன் இருவர்களும் பாங்காக விளங்குகிறார்கள். சுற்றிலும் பொழியப்பட்ட தீவிர ஸோமரஸத்தால் கவரப்பட்டு இந்திராக்கினிகளான நீங்கள் உங்கள் நல்ல மனத்தைப் புலப்படுத்துங்கள்.

5. இந்திராக்கினிகளே! நீங்கள் நடத்திய வீரச் செயல்களோடும், நீங்கள் சிருட்டித்த எல்லா உருவங்களோடும், மழை பெய்வது முதலிய செயல்களோடும், உங்களுடைய பழைய மங்கள நட்புக்களோடும்—இவ்வனைத் தோடும்—விளங்கி, பொழிந்துள்ள ஸோமத்தைப் பருகுங்கள். 1,180

6. நான் உங்கள் இருவர்களையும் ஆய்ந்தெடுத்து உங்களை ஸோமத்தால் மகிழ்விப்பேன் என முதலில் கூறினேன். அக்கபடமற்ற சிரத்தையைக் கண்டு வாருங்கள். பொழிந்திருக்கும் ஸோமத்தைப் பருகுங்கள். இந்த ஸோமன் அறிஞர்களால் அளிக்கத் தகுந்ததாகும்.

7. யக்ஞாருகர்களான இந்திராக்கினிகளே! உங்கள் இடத்திலோ, அரசனுடனோ, அறிஞனுடனோ அல்லது எங்கோ மகிழ்ந்திருந்தாலும், அங்கிருந்து விருப்பங்களைப் பொழிபவர்களான நீங்கள் இங்கு வாருங்கள். பொழிந்திருக்கும் ஸோமத்தைப் பருகுங்கள்.

8. இந்திராக்கினிகளே! யதுக்களோடு, துர்வசர்களோடு, துருஹ்யுக்களோடு. அநுக்களோடு, புருக்களோடு இருந்தாலும், எங்கிருந்தாலும், அங்கிருந்து விருப்பங்களைப் பொழிபவர்களான நீங்கள் வாருங்கள். பொழிந்திருக்கும் ஸோமத்தைப் பருகுங்கள்.

9. இந்திராக்கினிகளே! உலகத்தின் நீசத்திலோ, நடுவிலோ, உச்சத்திலோ இருந்தாலும், எங்கிருந்தாலும், அங்கிருந்து விருப்பங்களைப் பொழிபவர்களான நீங்கள் இங்கு வாருங்கள். பொழிந்துள்ள ஸோமத்தைப் பருகுங்கள்.



10. இந்திராக்கினிகளே! உலகத்தின் உச்சியிலோ, நடுவிலோ, நீசத்திலோ இருந்தாலும் அல்லது எங்கிருந்தாலும், அங்கிருந்து விருப்பங்களைப் பொழிபவர்களான நீங்கள் இங்கு வாருங்கள். பொழிந்துள்ள ஸோமத்தைப் பருகுங்கள். 1,185

11. இந்திராக்கினிகளே! சோதியிலோ அல்லது புவியிலோ, மலைகளிலோ, ஓஷதிகளிலோ, சலங்களிலோ இருந்தாலும் அல்லது எங்கிருந்தாலும், அங்கிருந்து விருப்பங்களைப் பொழிபவர்களான நீங்கள் இங்கு வாருங்கள். பொழிந்துள்ள ஸோமத்தைப் பருகுங்கள்.

12. இந்திராக்கினிகளே! வானின் நடுவிலோ, எழும் சூரியனிலோ அல்லது உங்கள் சுய சோதியிலோ மகிழ்ந்திருந்தாலும் அல்லது எங்கிருந்தாலும், அங்கிருந்து விருப்பங்களைப் பொழிபவர்களான நீங்கள் இங்கு வாருங்கள். பொழிந்துள்ள ஸோமத்தைப் பருகுங்கள்.

13. இந்திராக்கினிகளே! பொழிந்திருக்கும் ஸோமனை இங்ஙனம் பருகி எங்களுக்கு எல்லா வித செல்வத்தையுமளிங்கள். மித்திரனும், வருணனும், அக்கினியும், கடலும், புவியும், சோதியும் எங்களுக்கு அதைப் பாலிப்பார்களாக. 1,188.

## 109. இந்திராக்கினிகள்

### 109. குத்ஸ ஆங்கிரஸன்

1. இந்திராக்கினிகளே! செல்வத்தை விரும்பும் நான் உங்களை என் மனத்திலே பந்துக்களாகவும், சகோதரர்களாகவும் நினைக்கிறேன். நீங்கள் எனக்குப் பேரறிவைத் தந்தீர்கள். வேறு எவனும் தரவில்லை. அவ்வறிவை அடைந்துள்ள நான், செல்வத்தை விரும்பி தியானத்தோடு உங்களுக்குத் துதியைக் கற்பிக்கிறேன்.

2. நான், நீங்கள் உதவாத மைத்துனனுக்கு அல்லது மனைவியின் சகோதரனுக்கு அதிகமாக—தாராள

மாய்—செல்வத்தை யளிப்பவர்கள் என செவியுற்றுள்ளேன். இந்திராக்கினிகளே! நான் உங்களுக்கு ஸோமத்தை யளிக்குங்கால் புதிய ஸ்தோமத்தையுங் கூறுகிறேன்.

3 நாங்கள், சந்ததியின் இழைகளை அறுக்காம லிருப்போமாக. நாங்கள் இந்தப் பிரார்த்தனையோடு எங்கள் பூர்வ பிதாக்களின் ஆற்றல்களைப் பெற முயலுகிறோம். தொழுபவர்கள் குழந்தைகளைப் பிறப்பித்து, சுகத்துக்காக இந்திராக்கினிகளைப் போற்றுகிறார்கள். பகைவர்களையழிக்கும் அவர்கள் எங்களருகில் இருக்கிறார்கள்.

4. இந்திராக்கினிகளே! உங்களை விரும்பும் தேவியான வாக்கு உங்களை மதப்படுத்த ஸோமத்தைப் பொழிகிறது. குதிரைகளும், அழகிய கைகளும்—சுந்தர புஜங்களுமுள்ள நீங்கள் துரிதமாய் வந்து சலங்களிலுள்ள இனிப்போடு ஸோமரஸத்தைச் சேருங்கள்.

5. இந்திராக்கினிகளே! விருத்திரன் வீழ்த்தப்பட்டு செல்வங்கள் பங்கிடப் படுங்கால் நீங்கள் மிக்க வலிமையுடனிருந்தீர்கள் என நான் செவியுற்றேன். அனைத்தையுங் காணும் நீங்கள், இந்த யக்ஞத்தில் தருப்பையின் மீது அமர்ந்து ஸோமத்தால் மதப்படுங்கள். 1,193

6. போரிலே நீங்கள் அழைக்கப்பட்டு வந்து அனைவரையும் மேன்மையிலே முந்துகிறீர்கள். இந்திராக்கினிகளே! நீங்கள் நதிகளுக்கும், புவிக்கும், வானுக்கும், மலைகளுக்கும் பெரியவர்களாயிருக்கிறீர்கள். மேலும் வேறு எல்லாப் பொருள்களுக்கும் மேலாக விளங்குகிறீர்கள்.

7. வச்சிரத்தைக் கைகளில் ஏந்தும் நீங்கள் செல்வத்தை ஏந்தி வாருங்கள். அதை எங்களுக்களுக் களியுங்கள். இந்திராக்கினிகளே! உங்களுடைய ஆற்றல்களால் எங்களைப் பாலியுங்கள். எந்த சூரிய ரசிமிகளால்



எங்களுடைய பூர்வபிதாக்கள் ஐக்கியமாகி சோதி உலகுக்குச் சென்றார்களோ, அவை எங்கள் மீதும் பிரகாசிக்க.

8. கோட்டைகளை இடிப்பவர்களே! கைகளில் வச்சிரமேந்துபவர்களே! எங்களுக்குச் செல்வத்தை யளியுங்கள். இந்திராக்கினிகளே! எங்களைப் போர்களில் பாலியுங்கள். மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் எங்களுடைய இந்த ஸ்தோமத்தை மேம்படுத்துவார்களாக. 1,196

## 110. ரிபுக்கள்

### 110. குத்ஸ ஆங்கிரஸன்

1. நான் பூர்வத்தில் செய்த யக்ஞம் மீண்டும் செய்யப்படுகிறது. உங்களைப் போற்ற இனிய பாசுரம் பாடப்படுகிறது. இங்கு எல்லாத் தேவர்களுக்கும் போதுமான ஸோம சமுத்திரமிருக்கிறது. ஸ்வாஹா சப்த முழக்கத்தோடு அந்த ரஸம் அக்கினியில் அளிக்கப்பட்டவுடன் நீங்கள் பருகி இன்பமாகுங்கள்.

2. நீங்கள் என் குல பந்துக்கள். பூர்வத்தில் உங்களுக்குப் பக்குவ மனமில்லாமலிருந்தது. ஆனால் ஸோமத்தை அனுபவிக்க விரும்பி, தவஞ்செய்யக்கானகஞ் சென்றீர்கள். பிறகு ஸுதன்வப் புதல்வர்களான நீங்கள் உங்களுடைய கடுமையான தவங்கள் பூர்த்தியானவுடன் உங்கள் மகத்வத்தோடு அவியளிக்கும் ஸவிதாவினுடைய சதனத்துக்கு வந்தீர்கள்.

3. நீங்கள் ஒருவராலும் மறைக்க இயலாத ஸவிதாவினிடம் வந்தீர்கள். ஸோமத்தைப் பருக விரும்புகிறோம் எனக் கூறினீர்கள். துவஷ்டாவால் செய்யப்பட்டு அங்கு ஏகமாயிருந்த ஸோமகலத்தை நீங்கள் நான்காய்ச் செய்தீர்கள். அப்பொழுது ஸவிதா உங்களுக்கு அமுதத் தன்மையைத் தந்தான்.

4. வித்விஜர்களோடு சேர்ந்த அவர்கள் துரிதமாய் யக்ஞச் செயல்களை நடத்தினார்கள். மனிதர்களாயிருந்

தாலும் அவர்கள் அமுதத் தன்மையைப் பெற்றார்கள். சூரியனைப் போல் பிரகாசமாயிருந்த ஸுதன்வப் புதல்வர்களான ரிபுக்கள், 'வருஷத்தின் பருவ யக்ஞங்களோடு இணைக்கப்பட்டார்கள்.

5. உத்தம ஸோமத்தை விரும்பி, தேவர்களின் நடுவே அவி உரிமையை நாடிய ரிபுக்கள், அருகிலிருப்பவர்களால் போற்றப்பட்டு, ஏகமாயிருந்த ஸோம கலத்தைக் கூரிய ஆயுதத்தால்—அளவுகோலால்-நிலத்தைப் போல் அளந்தார்கள். 1,201

6. நாங்கள், பாலகனான சூரியனுக்குச் சமமான வேகமுள்ளவர்களும், யக்ஞ அவிகளால் ஒளி மண்டலம் ஏறியவர்களும், வானிலே வசிப்பவர்களும், தலைவர்களுமான ரிபுக்களுக்கு ஞானத்தோடு துதியைச் சுருக்கிலுள்ள நெய்யைப் போல் அளிக்கிறோம்.

7. பலத்தில் மிக்கப் புகழுள்ள ரிபு எங்கள் பாலகனாகிறான். உணவையும் செல்வத்தையுமளிக்கும் ரிபு-எங்கள் வசுவா-தஞ்சமாகிறான். அவன் செல்வங்களைத் தரும் வள்ளலாகிறான். தேவர்களே! உங்கள் பாலனத்தால் அவன் எங்களுக்கு உணவையும், செல்வத்தையுமளிப்பானாக. நாங்கள் அனுகூல தினத்திலே பொழியாதவர்களின் படைகளை ஜயிப்போமாக.

8. ரிபுக்களே! நீங்கள் சர்மத்தால் பசுவைப் போர்த்தினீர்கள். சருமத்திலிருந்து பசுவைச் செய்தீர்கள். தாயைக் கன்றோடு சேர்த்தீர்கள். நரர்களே! ஸுதன்வப் புதல்வர்களே! நீங்கள் உங்களுடைய நற்செயல்களால் முதுமை எய்திய பெற்றோர்களை இளமைப் படுத்தினீர்கள்.

9. ரிபுக்களோடு சேர்ந்த இந்திரனே! செல்வந்தரும் சக்தியை எங்களுக்களிக்கவும். அற்புத செல்வங்களைப் பொழிய விரும்பவும். மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் அவற்றை எங்களுக்குப் பாலிப்பார்களாக. 1,205



# 111. ரிபுக்கள்

## 111. குத்ஸ ஆங்கிரஸன்

1. செயல் திறமுள்ள ரிபுக்கள் அசுவினிகளுக்கு நன்கு செல்லும் தேரைக் கற்பித்தார்கள். அவர்கள் இந்திரனை வகித்து, செல்வங்களை ஏந்தி வரும் குதிரைகளையும் செய்தார்கள். பெற்றோர்கள் வாழ அவர்களுக்கு இளமைப் பருவத்தைத் தந்தார்கள். அவர்கள் கன்றுக்கு, பின் பற்றும் தாயை-பசுவை—அளித்தார்கள்.

2. யக்ஞத்துக்காக எங்களுக்கு மிக்கப் பிரகாசிக்கும் பலத்தைப் புலப்படுத்துங்கள். எங்கள் செயலுக்கும், சக்திக்கும், உத்தம சந்ததியையும், உணவையும் கற்பியுங்கள். எல்லாப் புதல்வர்களோடும், பிரஜையோடும் சுகமாய் வாழ்வதற்குரிய செல்வத்தையும், ஆற்றலையும் எங்களுக்கு அளியுங்கள்.

3. ரிபுக்களே! வீரர்களே! எங்களுக்குச் செல்வத்தையும், தேருக்குச் செல்வத்தையும், குதிரைக்குச் செல்வத்தையும் கற்பியுங்கள். எங்களுடைய வெற்றிகரமான செல்வத்தைத் தினந்தோறும் அனைவரும் போற்றுவார்களாக. நாங்கள் போரிலே பகைவர்களை—பந்துக்களாயிருந்தாலும், அந்நியர்களாயிருந்தாலும், அவர்களை ஜயிப்போமாக.

4. நான் பாலனத்துக்காக மகானான இந்திரனையும், மற்றும் ரிபுவையும், விபுவையும், வாஜனையும், மருத்துக்களையும் ஸோம பானத்துக்கு அழைக்கிறேன். நான் மித்திரா வருணர்களையும், அசுவினிகளையுமழைக்கிறேன். அவர்கள் எங்களைச் செல்வத்துக்கும், நல்ல செயலுக்கும், ஜயத்துக்கும் செலுத்துவார்களாக

5. ரிபு எங்களுக்குச் செல்வத்தைப் போருக்காக அளிப்பானாக. சமரிலே ஜயிக்கும் வாஜன் எங்களைப் பாலிப்பானாக. மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் எங்களுடைய இந்தத் தோத்திரத்தை மேம்படுத்துவார்களாக. 1,210

## 112. அசுவினிகள்

### 112. குத்ஸ ஆங்கிரஸன்

1. நான், அசுவினிகளைப் பூர்வத்திலே தியானிக்க முதலிலே புலப்படுத்த சோதியையும் புவியையும் துதிக்கிறேன். அசுவினிகளைப் போற்றுவதற்கு முன், அருகில் வரும் வெப்பமாயும் மிக்க விளங்குபவனுயுமுள்ள அக்கினியை ஏந்துகிறேன். அசுவினிகளே! ஜயித்த செல்வத்திலே பங்கு பெற எந்தப் பாலனங்களோடு சங்க நாதத்தை நீங்கள் எழுப்பினீர்களோ, அந்தப் பாலனங்களோடு இங்கு வாருங்கள்.

2 அசுவினிகளே! மிக்கத் துதிகளுள்ளவர்களும், உங்களையே ஏந்துபவர்களுமான அடியார்கள் உங்கள் தானத்துக்காக, கற்பனைக்காக அறிஞனின் மொழிகளைச் செவியுறும் மாணவர்களைப் போல் உங்கள் தேரினருகில் நிற்கிருர்கள். அசுவினிகளே! நீங்கள் எந்தப் பாலனங்களால் எங்கள் தியானிகளைத் தூயச் செயல்களில் நடத்தப் பாலிப்பீர்களோ, அப்பாலனங்களோடு இங்கு வாருங்கள்.

3. தலைவர்களே! சோதியில் தோன்றிய அமுதத்தைப் பருகியதாலான பலத்தால், நீங்கள் மூவுலகங்களிலிருக்கும் பிரஜைகளை ஆட்சி செய்யும் ஆற்றலைப் பெற்றீர்கள். அசுவினிகளே! நீங்கள் எப்பாலனங்களால் பாழான பசுக்குப் பாலை யளித்தீர்களோ அப்பாலனங்களோடு இங்கு வாருங்கள்.

4. உங்களுடைய எப்பாலனங்களால், வாயு தன் புதல்வஞன அக்கினியின் பலத்தோடு இரு உலகங்களையும்-சோதியையும் புவியையும்-அளப்பவனுகி, கற்பிப்பவனுகி, துரிதனிலும் துரிதனுமான அவன், எல்லாப் பிராணிகளையும் வண்ணப்படுத்துகிருனே, எப்பாலனங்களால் கட்சிவான் மூவ்விதக் கல்வியில் பேரறிஞனுனே அப்பாலனங்களோடு, அசுவினிகளே! இங்கு வாருங்கள்.



5. அசுவினிகளே! கட்டப்பட்டு கூபத்தினுள் தள்ளப்பட்ட ரேபனையும், வந்தனனையும், சூரியனையுங்காண எந்தப் பாலனங்களால் மீட்டீர்களோ, ஒளியைக்காண விரும்பிய கண்வனையும் பாலித்தீர்களோ, அப்பாலனங்களோடு இங்கு வாருங்கள். 1,215

6. அசுவினிகளே! ஆழமான ஏரியிலே தள்ளப்பட்டு, அழிவதர்க்கிருந்த அந்தகனை எப்பாலனங்களால் மீட்டீர்களோ, துன்பமளிக்காத எப்பாலனங்களால் புஜ்யுவைப் பாலித்தீர்களோ, எவற்ருல் துன்பத்திலிருந்த கர்க்கந்தனையும், வய்யனையும், சாந்தப் படுத்தினீர்களோ அப்பாலனங்களோடு, இங்கு வாருங்கள்.

7. எப்பாலனங்களால் ஸுச்சந்திக்குச் செல்வத்தையும், இனிய மனையையும் தந்தீர்களோ, அத்திரிக்கு அக்கினியின் தாபத்தை சுகப்படுத்தினீர்களோ, புருகுத்ஸனுக்கும் பிருசினிகுவுக்கும் காப்புக்களை யளித்தீர்களோ, அப்பாலனங்களோடு, அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

8. பொழிபவர்களே! எப்பாலனங்களால் நீங்கள் முடவனுன பராவிரஜனை நடக்கவும், குருடனுன ரிஜ்ராசுவனைக் காணவும், சப்பாணியான சுரோணனைச் சலிக்கவும் செய்தீர்களோ, ஓநாயால் கவ்வப்பட்ட காடையை விடுவித்தீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

9. எப்பாலனங்களால் நீங்கள் ஸிந்துவை இனிய சலத்தால் பெருகச் செய்தீர்களோ, மூப்பில்லாத நீங்கள் எவற்ருல் வசிஷ்டனை சுகப்படுத்தினீர்களோ, எவற்ருல் குத்ஸனையும், சுருதர்யனையும், நர்யனையும் பாலித்தீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

10. ஆயிரம் செல்வங்களைத் தரும் போருக்குச் செல்ல சக்தியற்றிருந்தவளும், செல்வத்தை விரும்பியவளுமான விச்பலைக்குச் செல்லும் ஆற்றலை—காலற்றிருந்த

அவனுக்குக் காலை—எப்பாலனங்களால் நீங்கள் அளித்தீர்களோ, எவற்றால் அசுவனின் மகனும், பக்தனுமான வசனைப் பாலித்தீர்களோ, அசுவினிகளே! அப்பாலனங்களோடு இங்கு வாருங்கள். 1,220

11. உத்தம வள்ளல்களே! உங்களுடைய எப்பாலனங்களால், உசிஜையின் புதல்வனான வணிகஞ் செய்த தீர்க்க சிரவஸனுக்கு இனிய சலத்தைப் பொழிய மேகம் வற்புறுத்தப்பட்டதோ, எவற்றால் தொழுபவனான கட்சீவானுக்குக் காப்பையளித்தீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

12. எப்பாலனங்களால், நீங்கள் ரஸ-நதியின்-தடத்தை சலத்தால் பெருக்கினீர்களோ, எவற்றல் குதிரையில்லாத தேரையும் ஜயத்துக்குச் செலுத்தினீர்களோ, எவற்றால் திரிசோகன் திருடப்பட்ட பசுக்களை மீட்டானோ அப்பாலனங்களோடு அசுவினிகளே! நீங்கள் இங்கு வாருங்கள்.

13. கிரகணத்திலிருந்து கதிரவனை விடுவிக்க தூரத்திலிருக்கும் சூரியனை எப்பாலனங்களோடு அணுகினீர்களோ, மந்தாதர ஆட்சிச் செயல்களை நடத்த எவற்றால் அவனைப் பாலித்தீர்களோ, எவற்றால் விப்பிரனான பரத்வாஜனைப் பாலித்தீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

14. திவோதாஸன் சம்பரனைக் கொல்ல நடத்திய போரில் அவன் அசுரர்களுக்குப் பயந்து சலத்திலே மறைந்திருக்குங்கால், விருத்தினர்களால் போற்றத் தகுந்தவனும், மகானுமான அவனை எப்பாலனங்களால் பாலித்தீர்களோ, எவற்றால் திரஸ தஸ்யுவைப் போரிலே பாலித்தீர்களோ, அப்பாலனங்ளோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

15. அருகிலிருப்பவர்களால் போற்றத் தகுந்த வம்ரனை அவன் மிக்கப் பருகுங்கால் எப்பாலனங்களால் பாலித்தீர்களோ, எவற்றால் மனைவியை யடைந்தவுடன் கலியைப் பாலித்தீர்களோ, எவற்றால் குதிரையை இழந்த பிருதியைத் தாங்கினீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள். 1,225



16. பூர்வத்திலே தீமையிலிருந்து விலகும் வழியை அறிய விருப்பமிருந்த சயுவையும், அத்திரியையும், மநுவையும், தலைவர்களான நீங்கள் எப்பாலனங்களால் பாலித்தீர்களோ, எவற்றால் ஸ்யூம ரசிமியின் பகைவர்களின் மீது சரங்களை எய்தீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

17. எந்தப் பாலனங்களால் படர்வான் தேக பலத்தால் போரிலே எரியும் கட்டைக் குவியலின் அக்கினியைப் போல் பிரகாசித்தானோ, எவற்றால் நீங்கள் போரிலே சர்யர்தனைப் பாலித்தீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! நீங்கள் இங்கு வாருங்கள்.

18. அங்கிரஸனே! நீ அசுவினிகளைப் போற்றவும். அசுவினிகளே! துதியால் பிரியமுடனாகும் நீங்கள் எப்பாலனங்களால் தொழுபவர்களை இன்புறுத்தி, திருடப்பட்ட பசுக்களை மீட்ட தேவர்களின் முன்னே குகைக்குச் சென்றீர்களோ, எப்பாலனங்களால் சூரனான மநுவை உணவோடு ஏந்தினீர்களோ. அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

19. எப்பாலனங்களால் நீங்கள் விமதனுக்கு மனைவியைத் தந்தீர்களோ, எவற்றால் சிகப்புப் பசுக்களை மீட்டீர்களோ, எவற்றால் சிறந்த செல்வத்தை ஸுதாஸனுக்கு அளித்தீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! எங்களிடம் வாருங்கள்.

20. எப்பாலனங்களால் அவி யளிப்பவனுக்கு சுகத்தைத் தருகிறீர்களோ, எவற்றால் புஜ்யுவையும் அத்ரிகுவையும் பாலித்தீர்களோ, எவற்றால் ருதுஸ்தூபனுக்கு ஊட்டுவதும் ஊக்கப்படுத்துவதுமான உணவைத் தந்தீர்களோ, அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள். 1,230

21. எப்பாலனங்களால் நீங்கள் கிருசானுவைப் போரில் பாலித்தீர்களோ. எவற்றால் தருணனை புருகுத்சனுடைய குதிரையை வேகப்படுத்தினீர்களோ, எவற்றால் இனிய தேனைத் தேனீக்களுக்குத் தருகிறீர்களோ. அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

22. போரிலே பசுக்களுக்காகப் போராடும் வீரனை எப்பாலனங்களால் பாலித்தீர்களோ, எவற்றால் அவன் செல்வத்தையும் மனைகளையும் பெறப் பாலிக்கிறீர்களோ, எவற்றால் அவனுடைய குதிரைகளையும்பாலிக்கிறீர்களோ அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

23. சதக்கிரதுவே! எப்பாலனங்களால் அர்ஜுனனின் புதல்வனான குத்ஸனையும், மேலும் துர்விதியையும், நபிதியையும், துவஸந்தியையும், புருஷந்தியையும், பாலித்தீர்களோ அப்பாலனங்களோடு அசுவினிகளே! இங்கு வாருங்கள்.

24. அசுவினிகளே! எங்கள் சொற்களைச் செயல்களோடு சிறப்பியுங்கள். பொழிபவர்களே! பகையழிப்பவர்களே! எங்கள் புத்தியைப் பலப்படுத்துங்கள். நாங்கள் உங்கள் இருவர்களையும் இரவின் கடையாமத்தில் கட்டம் வருங்கால், பாலனத்துக்காக அழைக்கிறோம். போர்க்களத்திலே எங்களைப் பலப்படுத்துங்கள்.

25. அசுவினிகளே! நீங்கள் எங்களை இரவிலும், பகலிலும், எப்பொழுதும் குறையாத செல்வங்களோடு பாலியுங்கள். மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் எங்களுடைய இந்தத் துதியை மேம்படுத்துவார்களாக. 1,235

## 113. உஷை

### 113. குத்ஸ ஆங்கிரஸன்

உஷையும் இரவும்

1. சோதிகளின் நடுவே இந்த சிரேட்டமான சோதி வந்திருக்கிறாள். அவனுடைய அற்புதமான புலப்படுத்துவதான பிரகாசம் புலனாகிறது. இரவு சூரியனிட



மிருந்து தோன்றியது போல் அவள் உஷைக்குத் தோன்றுமிடமாகிறாள்.

2. சுந்தரமாயும், சுடராயுமுள்ள உஷை, தன் வெண்மையான குழந்தையோடு வந்திருக்கிறாள். கருமையான இரவு அவளுக்குத் தன் இருப்பிடத்தை யளித்துவிட்டாள். சூரியனுடைய சமமான பந்துக்களும், அமுதர்களும், ஒருவரையொருவர் பின்பற்றுபவர்களும், பரஸ்பரம் ஒருவரின் நிறத்தை ஒருவர் தேய்த்துக் கொள்பவர்களுமான அவர்கள் வானிலே தினந்தோறும் சலனமாகிறார்கள்.

3. சகோதரிகளின் சமமான வழி முடிவற்றது; அவர்கள் சூரியனால் புலப்படுத்தப்பட்ட வழியிலே ஒருவரை யொருவர் தொடர்ந்து செல்லுகிறார்கள். அனைத்தையும் தோற்றுவிக்கும் உஷையும், இரவும் மாறுபட்ட நிறங்களோடிருந்தாலும், ஐக்கிய மனங்களுள்ளவர்களாயிருக்கிறார்கள். ஒருவரையொருவர் தடை செய்து கொள்ளாத அவர்கள் இளைப்பாறார்கள்.

உஷை

4. சத்தியத்தைப் பேசுபவர்களின் சோதித் தலைவியான அவளை எங்களுடைய கண்கள் காண்கின்றன. மிக்கப் பிரகாசமுள்ள அவள் கதவுகளைத் திறந்தாள். அவள் உலகத்தை ஒளிப்படுத்தி செல்வங்களைப் புலப்படுத்தினாள். அவள் எல்லா புவனங்களையும் எழுப்பினாள்.

5. செல்வியான உஷை உறக்கத்தில் சுருண்டு சாய்ந்திருந்தவர்களில் ஒருவனை போகத்துக்கும், மற்றொருவனை யக்ஞத்துக்கும், வேறொருவனைச் செல்வத்தைச் சம்பாதிக்கவும், அவரவர்களின் செயலில் ஊக்கமாக எழுப்புகிறாள். அற்பமாய்க் கண்டவர்களை நன்கு காணச் செய்தாள். பரந்த உஷை எல்லா புவனங்களையும் எழுப்பினாள். 1,240

6. ஒருவனை க்ஷத்திரத்துக்கும், மற்றொருவனை புகழுக்கும், வேறொருவனை மகத்தான யக்ஞத்துக்கும், ஒரு

வனை அவனுடைய சொந்தத் தொழிலுக்கும், ஒருவனை முயற்சிக்கும் உழைக்க அவள் ஊக்கப்படுத்தி, எல்லா மனிதர்களும் வாழ்க்கையை நடத்தப் பலவித வழிகளை ஒளிப்படுத்துகிறாள். உஷை எல்லாப் புவனங்களையும் எழுப்பினாள்.

7. யுவதியும், வெண்ணுடை யணிந்தவளும், எல்லாப் புவியின் செல்வத் தலைவியுமான சோதி மகள், தமத்தைக் கலைப்பவளாய்த் தோன்றுகிறாள். உத்தமச் செல்வியான உஷையே! இன்று இந்த யக்ஞ சதனத்திலே எங்களுக்குப் பிரகாசிக்கவும்.

8 சென்ற காலைகளின் வழியைப் பின்பற்றுபவளும், வரப்போகும் முடிவற்ற காலைகளுக்கு முதல்வியும், இருளை நீக்குபவளுமான உஷை, சீவாத்மாக்களை ஊக்கப்படுத்தி, மரித்தவன் போலிருந்த ஒவ்வொருவனையும் எழுப்புகிறாள்.

9. உஷையே! நீ அக்கினியை ஒளிப்படுத்த இயங்கினாய். நீ சூரியனின் கண்ணால் உலகத்தை வெளிப்படுத்தினாய். மானிடர்கள், யக்ஞத்தை நடத்த அவர்களை எழுப்பினாய். நீயே தேவர்களின் நடுவே இந்த முவ்வித மங்களச் செயலை இசைத்தாய்.

10. எப்பொழுதிலிருந்து உஷைகள் எழுகிறார்கள்? இன்னும் நமக்கு ஒளியைத் தர விரும்பும் அவர்கள் எத்தனை காலம் எழுவார்கள்? உஷை சென்ற வைகறைகளின் செயல்களைப் பின்பற்றி, மிக்கப் பிரகாசிப்பவளாய் வரப்போகும் காலைகளோடும் செல்லுகிறாள். 1,245

11. பழைய உஷையின் உதயத்தைக் கண்ட மனிதர்கள் சென்றுவிட்டார்கள். அவளை இப்பொழுது நாம் காண்கிறோம். அவளை வருங்காலத்தில் காண நம் சந்ததிகள் வருகிறார்கள்.

12. அவள் துவேஷிகளைத் துரத்துகிறாள். சத்தியத்தைப் பாலிக்கிறாள். ஸத்தியத்தில் தோன்றுகிறாள். அவள் சுகப்படுத்துகிறாள். இனிய பாக்களை எழுப்புகிறாள். அவள் ஸுமங்கலி. அவள் தேவர்களால் விரும்பப்படும் யக்ஞத்தை ஏந்துகிறாள். உஷையே! மிக்கப் புகழுள்ள நீ இன்று இங்கு உதயமாகவும்.



13. பூர்வத்தில் உஷை இடையறாமல் உதயமானாள். செல்வியான அவள் இன்றும் இவ்வுலகத்தில் உதயமாகிறாள். இனி வரப்போகும் தினங்களிலும் அவள் ஒளியைத் தருவாள். அழிவில்லாதவளும், அமுதியுமான அவள் தன் சொந்த சோதியோடு செல்லுகிறாள்.

14. தேவியான உஷை, சோதியின் எல்லைகளைத் தன் காந்திகளால் ஒளிப்படுத்துகிறாள். அவள் தன்னுடைய கரியவடிவத்தை எறிந்து விட்டாள். உறங்குபவர்களை எழுப்புபவளாய்த் தன்னுடைய சிகப்புக் குதிரைகளால் இழுக்கப்படும் தேரிலே வருகிறாள்.

15. உஷை சீவர்களைத் தாங்கும் செல்வங்களை ஏந்தி வந்து, உணர்வற்றவர்களுக்கு உணர்வைத் தந்து, தன்னுடைய அற்புத காந்தியைப் பரப்புகிறாள். சென்ற பல உஷைகளுக்குக் கடையாயும், ஒப்பாயும், வரப்போகும் பிரகாசமான உஷைகளுக்கும் முதல்வியாய் இன்று உஷை எழுந்தாள். 1,250

16. எழுந்திருங்கள்; நம்முடைய தேகத்தைச் செலுத்தும் சீவன் வருகிறது; இருள் சென்று விட்டது; ஒளி தோன்றுகிறது; உஷை சூரியன் செல்வதர்க்காக வழியைத் திறந்தாள். நாம் ஆயுளை நீட்டும் இடத்துக்கு உணவைச் செழிப்பிக்கும் நிலையத்துக்குச் செல்வோமாக.

17. துதிகளை ஏந்திக் கூறுபவன் துலக்கமான உஷைகளைப் புகழ்ந்து நன்கு சேர்ந்துள்ள மொழிகளைக் கூறுகிறான். செல்வியே! இன்று நீ உன்னைத் துதிப்பவனுக்கு உதயமாகவும். பிரஜைகளைத் தரும் உணவை எங்களுக்களிக்கவும்.

18. பசுக்களையும், புரவிகளையும், எல்லா வீரப் புதல்வர்களைத் தருபவர்களும், அவியளிப்பவனை ஒளிப்படுத்துபவர்களுமான உஷைகளின் நல் மனத்தை ஸோமத்

தைப் பொழிபவன் வாயுவைப் போல் துரிதமாயுள்ள வேதத் துதியின் ஸமாப்தியிலே பெறுவாளுக.

19. நீ தேவர்களுடைய தாயாகிருய். அதிதியின் புகழுடம்பை ஏந்துகிருய். யக்ஞத்தை ஒளிப்படுத்து கிருய். மகத்தான உஷையே! நீ பிரகாசிக்கவும்; எழுந் திருக்கவும்; எங்கள் தோத்திரத்தைப் போற்றவும். அனை வராலும் புகழப்படும் நீ, எங்களை சனங்களின் நடுவே பெருமைப் படுத்தவும்.

20. உஷைகள் ஏந்தி வரும் செல்வங்கள் எல்லாம் யஜிப்பவனுக்கும், ஏந்துபவனுக்கும் மங்களத்தைத் தரு கின்றன. மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும் புவியும், சோதியும் எங்களுடைய இந்த ஸ்தோமத்தை மேம்படுத்துவார்களாக. 1,255

# 114. உருத்திரன்

## 114. குத்ஸ ஆங்கிரஸன்

1. நாங்கள், பிராணிகளும் மனிதர்களும் ஆரோக்கி யமுடனிருக்கவும், இந்தக் கிராமத்திலே அனைவரும் நோய் நீங்கிப் புட்டியுடனிருக்கவும், இந்த மனனத் துதிகளை, சடையுள்ளவனும், வீரர் தலைவனும், வலியனுமான உருத்திரனுக்குக் கூறுகிருேம்.

2. உருத்திரனே! எங்களை சுகப்படுத்தவும்; இன் பப் படுத்தவும்; நாங்கள் வீரர்களின் தலைவனுன உன்னை வணக்கத்தோடு போற்றுவோம். எங்கள் தந்தையான மநு யக்ஞத்தால் அடைந்த எல்லா ஆரோக்கியத்தையும், ஆற்றலையும், உன் ஆக்ஞையால் நாங்கள் பெறுவோ மாக.

3. உருத்திரனே! பொழிபவனே! வீரர்களின் தலை வனே! நாங்கள் தேவ யஜனத்தால் உன் சுமதியைப் பெறுவோமாக. எங்களுடைய பிரசைகளினிடம் சுகத்தை ஏந்தி வரவும். துன்பமாகாத வீரர்களுள்ள நாங்கள் உனக்கு ஆவிகளை ஏந்தி வருவோமாக.



4. நாங்கள் பாலனமாக இங்கு, அறிஞனும்-திரிபவ னும்-குடிலகதியுள்ளவனும்-காந்தனும், யக்ஞத்தை சாதிப்பவனுமான உருத்திரனை அழைக்கிருேம். அவன் எங்களிடமிருந்து தேவர்களுடைய கோபத்தை நீக்கு வாளுக. நாங்கள் நிச்சயமாக அவனுடைய சுமதியை விரும்புகிருேம்.

5. நாங்கள் இங்கு சோதியின் வராகனும், சிகப்ப னும், சடையனும் ஒளி வடிவமுமுள்ள உருத்திரனை வணக்கத்தோடு அழைக்கிருேம். கைகளில் உயர்ந்த மருத்துக்களை ஏந்தியுள்ள அவன் எங்களுக்கு சுகத் தையும், கவசத்தையும், மனையையும் அளிப்பாளுக. 1,260

6. சுவையிலும், மிக்கச் சுவையுள்ளதும், சொல்ப வனைச் செழிப்பிப்பதுமான இந்தத் தோத்திரம் மருத்துக் களின் பிதாவான ருத்திரனுக்குக் கூறப்படுகிறது. அமிரு தனே! மானிடர்கள் புசிக்கும் உணவை எங்களுக்கு அளிக்கவும். என்னையும், என் புதல்வனையும், என் சந் ததியையும் சுகப்படுத்தவும்.

7. உருத்திரனே! எங்கள் நடுவிலிருக்கும் பெரிய வனை, சிறியவனை, வளரும் பாலனை, வளர்ந்த மனிதனைத் துன்புறுத்தாதே எங்கள் நடுவிலிருக்கும் தந்தையைக் கொல்லாதே. இங்கு தாயைக் கொல்லாதே. உருத் திரனே! எங்களுடைய பிரியமான தேகங்களையும் துன் புறுத்தாதே.

8. உருத்திரனே! எங்கள் புதல்வர்களையும், பேரர் களையும், சீவர்களையும், பசுக்களையும், குதிரைகளையும் துன்புறுத்தாதே; உன் சீற்றத்திலே எங்களுடைய வீரர் களைக் கொல்லாதே. நாங்கள் அவிகளை அளித்து சதா உன்னை அழைக்கிருேம்.

9. நான் உரியவனிடம் பசுக்களைச் சேர்ப்பிக்கும் கோபாலனைப் போல் உன்னிடமிருந்த ஸ்தோமங்களை உனக்கே கூறுகிறேன். மருத்துக்களின் தந்தையே! எங்

களை சுகப்படுத்தவும், உன்னுடைய சுமதி, சுகத்தையும், மங்களத்தையுந் தருகிறது. நாங்கள் உன் பாலனத்தை விரும்புகிறோம்.

10. பகைவர்களின் வீரர்களை யழிப்பவனே! பசுவைக் கொல்வதும், மனிதனைக் காய்ப்பதுமான உன் படை விலகுக. உன்னால் அளிக்கப்படும் மகிழ்ச்சி எங்களுக்காகுக. எங்களிடம் அனுகூலமாகவும்; எங்களை சுகப்படுத்தவும், தேவனே! எங்களுக்குப் பரிந்து பேசவும். சோதிக்கும் புவிக்கும் தலைவனுயுள்ள நீ எங்களுக்குப் பாலனத்தை யளிக்கவும். 1,265

11. நாங்கள் பாலனத்தை விரும்பி, அவனுக்கு வணக்கம் எனக் கூறினோம். உருத்திரன் மருத்துக்களோடு எங்கள் அழைப்பைக் கேட்பானுக. மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் எங்களுடைய இந்த ஸ்தோமத்தை விரும்புவார்களாக. 1,266

## 115. சூரியன்

### 115. குத்ஸ ஆங்கிரஸன்

1. தேவர்களின்-கதிர்களின்-அற்புதப் படை எழுந்தது. அது மித்திரனுடைய, வருணனுடைய, அக்கினியினுடைய கண். எல்லாத் தாவர ஜங்கமப் பொருள்களின் ஆத்மாவான சூரியன், சோதியையும் புவியையும், வானையும் நிரப்பினுன்.

2. சூரியன், தேவியும் துலங்குபவளுமான உஷையை, அழகிய பெண்ணைத் தொடரும் மனிதனைப் போல் தொடர்கிறுன். அப்பொழுது அறிஞர்கள் தங்கள் மனைவிகளோடு சேர்ந்து மங்களத்துக்காக மங்களத்தை-சூரியனை-சிறப்பித்து, யக்ஞத்தை நடத்துகிருர்கள்.

3. சூரியனின் துரிதயான குதிரைகள் மங்களமானவை. விசித்திராங்கமுள்ள அவை வழியிலே



செல்பவை. துதியால் சுகப்படத் தகுந்த அவை, எங்களால் போற்றப்பட்டு சோதியின் உச்சியிலேறி வேகமாய் ஒளியுலகையும் புவியையும் சுற்றி வருகின்றன.

4. இது சூரியனின் தேவத் தன்மை. இது அவனுடைய மகிமை. அவன் வேலையின் நடுவிலே தான் பரத்திய ஒளியைத் தன்னிடம் ஈர்த்துக் கொள்கிறுன். அவன் தன் தேரிலிருந்து குதிரையை அவிழ்த்தவுடன் இரவு தன் ஆடையை அனைத்தின் மீதும் போர்த்துகிறுன்.

5. சூரியன் தன் சோதி வடிவத்தை மித்திரனும், வருணனுங் காண வானின் நடுவிலே புலப்படுத்துகிறுன். ஒரு சமயத்தில் அவனுடைய ரசிமிகள் அவனுடைய அனந்தமான, துலக்கமான ஆற்றலை, ஒளியைப் பரத்துகின்றன. வேறொரு சமயத்தில் அவை விலகி இரவின் கருமையை விரிக்கின்றன. 1,271

6. தேவர்களே! இத்தினத்திலே சூரியன் உதயமாகுங்கால் எங்களைக் கொடிய பாவத்திலிருந்து விடுவியுங்கள். மித்திரனும், வருணனும், அதிதியும், கடலும், புவியும், சோதியும் எங்களுடைய இந்த ஸ்தோமத்தை மேம்படுத்துவார்களாக. 1,272

## 116. அசுவினிகள்

### 116. கட்சிவான் தைர்க்கதமஸ ஔசிஜன்

1. நான் தர்ப்பையை நறுக்கும் வழிபடுபவனைப் போலும், மேகங்களைச் செலுத்தும் காற்றைப் போலும், ஸ்தோமங்களைக் கடத்தப்பட்ட-மணப் பெண்ணை-பகைவரிடமிருந்து மீட்டு, தங்கள் தேரிலே ஏந்தி, இளையுனை கணவனும் விமதனிடம் சேர்ப்பித்தவர்களும், பொய்யற்றவர்களுமான அசுவினிகளுக்குப் பிரேரிக்கிறேன்.

2. பொய்யற்றவர்களே! தேவர்களின் ஆதரவால் செலுத்தப் படுபவையும், வலியவையும், விரைபவையுமான குதிரைகளால் ஏந்தப்படுபவர்களுமான உங்களு

டைய கர்தபமம் யமனுக்குப் பிரியமான போரிலே, ஆர்ப்பிலே ஆயிரம் பகைவர்களை அழித்தது.

3. அசுவினிகளே! செல்வத்தைத் தியாகஞ் செய்யும் சாகும் மனிதனைப்போல் துக்கிரன் கட்டத்தோடு, தன்னுடைய புதல்வனுன புஜ்யுவைப் படையுடன் பகைவர்களை ஜயிக்கக் கப்பலிலே கடலின் நடுவிலிருக்கும் தீவுக்கு அனுப்பித்தான். கடலின் நடுவே மூழ்கிய புஜ்யுவை மீட்டு, உங்கள் கப்பலிலே அவனைத் துக்கிரனிடம் செலுத்தினீர்கள். சலத்தின் மீது வானில் சலனமாகும் உங்கள் கப்பலில் சலம் நுழையாது.

4. நாசத்தியர்களே! நீங்கள் கடற்கரைக்கு சமுத்திரத்தின் காய்ந்த தடத்தின் வழியாய் புஜ்யுவை, துரிதமாய்ச் செல்பவையும், நூறு சக்கரங்கள் உள்ளவையும், சுற்றுபவையும், ஆறு குதிரைகளால் இழுக்கப்படுபவையுமான தேர்களிலே மூன்று இரவுகளும், மூன்று பகல்களும் வகித்துச் சென்றீர்கள்.

5. அசுவினிகளே! ஆதரவும், பிடிப்பும், நிலையுமற்ற கடலிலே புஜ்யுவை நூறு துடுப்புகள் உள்ள கப்பலில் ஏற்றிச் சென்று, அவனைத் தந்தையினிடஞ் சேர்த்த உங்களுடைய செயல் வீரச் செயலாகும். 1,277

6. அசுவினிகளே! நீங்கள் பேதுவுக்கு அளித்த கேடில்லாத வெள்ளைக் குதிரை அவனுக்கு எப்பொழுதும் ஜயத்தைத் தந்தது. உங்களுடைய மகத்தான தானம் எப்பொழுதும் போற்றத் தகுந்தது. சத்துருக்களைச் சிதறடிக்கும் பேதுவின் குதிரை சதா புகழத் தக்கது.

7. தலைவர்களே! பஜ்ர வம்சத்தில் வந்த கட்சிவானுக்குப் பலவித அறிவைத் தந்தீர்கள். உங்களுடைய வலிய குதிரையின் குளம்பிலிருந்து, பீப்பாயிலிருந்தது போல் நூறு மதுக் கலசங்களை நிரப்பினீர்கள்.

8. அசுவினிகளே! அத்திரியைச் சூழ்ந்து எரிந்த சுவாலைகளை உங்கள் குளிர்ந்த சலத்தால் அணைத்தீர்கள். தலை அவனுக்குப் புட்டியான உணவை அளித்தீர்கள். தலை கீழாய் இருண்ட குகையினுள் தள்ளப்பட்ட அவனை மீட்டு, அவனையும் அவனுடைய எல்லா சனங்களையும் சுகப்படுத்தினீர்கள்.



9. பொய்யற்றவர்களே! நீங்கள் கிணற்றை உயர்த்தினீர்கள். அடியை மேலே வைத்து வாயைக் கீழே நோக்கச் செய்தீர்கள். அதனுல் அளிப்பவனும், தாகமுள்ளவனுமான கோதமனுடைய பானத்துக்கு சலம் பெருகிற்று.

10. பொய்யற்றவர்களே! நீங்கள் மூப்பையடைந்த சியவனனுக்கு அவனுடைய தேகத்திலிருந்த சர்மத்தையெல்லாம் கவசத்தைப் போல் களைந்தீர்கள். தஸ்ரர்களே! பந்துக்களால் கைவிடப்பட்ட அவனுக்கு ஆயுளை நீடித்து, அவனை இளமைப் படுத்தி, பல யுவதிகளுக்கும் கணவனுகச் செய்தீர்கள். 1,282

11. வீரர்களே! பொய்யற்றவர்களே! வழிப்போக்கர்களுக்குப் புலனுன கிணற்றிலிருந்து, ஒளிக்கப்பட்டிருந்த செல்வத்தைப் போல் மறைக்கப்பட்டிருந்த வந்தனனை, அறிஞர்களான நீங்கள் மீட்ட செயல் சாற்றத் தகுந்தது; போற்றத் தக்கது; புகழுக்குரியது; எங்களால் விரும்பத் தகுந்தது.

12. தலைவர்களே! அதர்வனுடைய புதல்வனுன தத்தியங்கன் உங்களால் அளிக்கப்பட்ட, திரையின் தலையோடு உங்களுக்கு மது, வித்தையைக் கற்பித்தான். நான் செல்வத்தைப் பெற, நீங்கள் நடத்திய அந்த உக்கிரமான செயலை, மழையை அறிவிக்கும் இடியைப் போல் முழங்குகிறேன்.

13. நாசத்தியர்களே! பேரறிஞரான வத்திரிமதி, மகத்தான தோத்திரத்தோடு, பலரைப் பாலிப்பவர்களும், விருப்பங்களை நிறைவேற்றுபவர்களுமான உங்களை அழைத்தார். ஆச்சாரியனுடைய சிட்சை போல் அவருடைய அழைப்பு கேட்கப்பட்டது. அசுவினிகளே! நஷம்ஸகனின் மனைவியான வத்திரிமதிக்குப் புதல்வனுன ஹிரண்ய ஹஸ்தனைத் தந்தீர்கள்.

14. நாசத்தியர்களே! தலைவர்களே! காடையைப் பிடித்த ஓநாயின் வாயிலிருந்து அதை மீட்டீர்கள். புஜபராக்கிரமுள்ள நீங்கள் உங்களைத் துதிக்கும் கவிக்கு சத்திய அறிவைக் காணும் ஆற்றலைத் தந்தீர்கள்.

15. இரவிலே நடந்த போரிலே கேலனுடைய மனைவியான விச்பலையின் கால், பறவையின் சிறகைப் போல் துண்டிக்கப்பட்டது. உடனே நீங்கள் அவள் நடந்து செல்ல அவளுக்கு இரும்புக் காலைத் தந்தீர்கள். அந்தப் போர் மறைத்து வைக்கப்பட்டிருந்த செல்வத்தைப் பற்றுவதர்க்காக நடந்தது. 1,287

16. ரிஜ்ராசுவன் பெட்டை ஓநாய்க்கு நூறு ஆடுகளை வெட்டித் துணித்து அளிக்குங்கால் அவனுடைய தந்தையான விருஷாகிரன் அவனைக் குருடனாகச் செய்தான். தஸ்ரர்களே! பொய்யற்றவர்களே! மருத்துவர்களே! வழியைக் காண சக்தியற்றிருந்த அவனுக்கு நீங்கள் கண்களைத் தந்தீர்கள்.

17. அசுவினிகளே! உங்களுடைய தேரே சூரியனிடம் முதன்மையாகச் சென்றது. சூரியனின் புதல்வி இலக்குக்குப் பாய்ந்த உங்களுடைய ரதத்திலே ஏறினாள். உங்களுடைய துரித குதிரைகளால் நீங்கள் போட்டியில் ஜயித்த போது எல்லாத் தேவர்களும் தங்கள் இருதயங்களில் சம்மதமுடனானார்கள். பொய்யற்றவர்களே! நீங்கள் புகழோடு சேர்ந்தீர்கள்.

18. அசுவினிகளே! பரத்வாஜனான திவோதாஸனுடைய மனைக்கு நீங்கள் சென்ற போது உங்களுடைய தேரிலே சிறந்த செல்வங்களிருந்தன. அத்தேரிலே காளையும் சிம்சுமாரமும்–முதலையும்–கட்டப்பட்டிருந்தன.

19. நாசத்தியர்களே! உங்களுக்குத் தினம் மும்முறை உங்களுக்குரிய பாகத்தை யளித்த ஜஹ்நுவின் சந்தானங்களிடம், ஆட்சியோடு செல்வத்தையும், புதல்வர்களோடு ஆயுளையும், உக்கிர வீரர்கள் நிறைந்த வாழ்க்கையையும் ஒருமனத்தோடு ஆற்றலையும் ஏந்தி வந்தீர்கள்.



20. அழியாத நாசத்தியர்களே! ஒவ்வொரு பக்கத்திலும் பகைவர்களால் சூழப்பட்டிருந்த ஜாஹுஷனை உங்களுடைய பகைவர்களை ஜயிக்கும் தேரிலே, இரவிலே பத்திரமான வழிகளால் சென்று ஏற இயலாத மலைகளில் கடத்தினீர்கள். 1,292

21. அசுவினிகளே! நீங்கள் வசன் ஒரே தினத்தில் விரும்பத் தகுந்த ஆயிரக்கணக்கான செல்வங்களை அடைய அவனைப் பாலித்தீர்கள். பொழிபவர்களே! நீங்கள் இந்திரனோடு சேர்ந்து பிருது சிரவஸனைத் துன்புறுத்திய பகைவர்களை அழித்தீர்கள்.

22. ரிசந்தகனுடைய புதல்வனான சரன் பானஞ் செய்ய நீங்கள் கிணற்றின் அடியிலிருந்து சலத்தை உயர்த்தினீர்கள். பொய்யற்றவர்களே! களைத்திருந்த சயுவுக்குப் பாழாயிருந்த பசுவைப் பாலால் நிறைத்தீர்கள்.

23. நாசத்தியர்களே! உங்களைத் துதித்து, பாலனத்தை விரும்பிய கிருஷ்ணனின் புதல்வனும், நெறிமகனுமான விசுவகனுக்கு அவனுடைய இழந்த மகனான விஷ்ணபூவை, அவன் கண்களால் நட்டமடைந்த பசுவைப் போல் காண, நீங்கள் உங்கள் ஆற்றல்களால் மீட்டுத் தந்தீர்கள்.

24. அசுவினிகளே! பாசங்களால் பந்தமாகி, கிணற்றிலே தள்ளப்பட்டு, காயமடைந்து, அமிழ்ந்து, சலத்தால் துன்பத்தில் பத்து இரவுகளும், ஒன்பது பகல்களும் தவித்த ரேபனை, துடுப்பிலே ஸோமத்தைப் போல் எழுப்பினீர்கள்.

25. அசுவினிகளே! நான் இங்ஙனம் உங்களுடைய பழைய வீரச் செயல்களைக் கூறினேன். நான் மிருந்த பசுக்களையும், வீரர்களையுமடைந்து இந்த நாட்டின் தலைவனாவேனாக. நான் தெரியும் கண்ணோடு நீடித்த ஆயுளை அனுபவித்து, மனையில் நுழைபவனைப் போல் மூப்புக்குச் செல்வேனாக. 1,297

# 117. அசுவினிகள்

## 117. கட்சீவான் தைர்கதமஸ ஔசிஜன்

1. அசுவினிகளே! பழைய ஹோதா உங்களை இனிய ஸோம ரஸத்தோடு இன்புறுத்தப் போற்றுகிறுன். எங்கள் தானம் தருப்பை மீது இருக்கிறது. மொழியுமுண்டு. பொய்யற்றவர்களே! இங்கு உணவோடும் பலத்தோடும் வாருங்கள்.

2. அசுவினிகளே! மனத்தைப் போல் வேகமுள்ளதும், நல்ல குதிரைகளால் இழுக்கப்படுவதும், மனிதர்கள் முன் தோன்றுவதும், உத்தமச் செயலார்களின் இடத்துக்கு உங்களை ஏந்திச் செல்வதுமான உங்கள் தேரிலே எங்கள் மனைக்கு வாருங்கள்.

3. பொழிபவர்களே! தலைவர்களே! நீங்கள் துன்புறுத்தும் தஸ்யுக்களின் மாயைகளைத் தடுத்து, பகைவர்களைக் கிரமமாய்க் கொன்று, தீமைச் சிறையிலிருந்து பஞ்சனங்களால் போற்றப்பட்ட அத்திரி ரிஷியையும், அவனுடைய சனங்களையும் மீட்டீர்கள்.

4. தலைவர்களே! பொழிபவர்களே! அசுவினிகளே! எதிர்ப்பற்ற பகைவர்களால் சலத்தினுள் வீழ்த்தப்பட்ட ரேபனை எழுப்பினீர்கள். பிணிக் குதிரையைப் போல் காயமடைந்திருந்த அவனை உங்களுடைய சிகித்ஸைச் செயல்களால் குணப்படுத்தினீர்கள். உங்களுடைய பழைய வீரச்செயல்கள் நிலைத்திருக்கின்றன.

5. தஸ்ரர்களே! அசுவினிகளே! பாங்கான பொன்னைப் போல் புதைக்கப்பட்டு, நிர்ருதியினங்கத்தில் உறங்கியவனைப் போலும், இருட்டிலிருந்த சூரியனைப் போலுமிருந்த வந்தனனை வெற்றிக்காக மீட்டீர்கள். 1,302

6. பொய்யற்றவர்களே! தலைவர்களே! நீங்கள் வலிய குதிரையின் குளம்பிலிருந்து, விரும்பிய மனிதனுக்கு, நூறு கலசங்களை நிரப்ப மதுவை எடுத்தீர்கள். உங்களுடைய இந்தச் செயல் பஜ்ர வம்சத்தில் வந்த கட்சிவானுல் போற்றத் தகுந்தது.



7. நரர்களே! அசுவினிகளே! கிருஷ்ணனுடைய புதல்வனுன விசுவகன் உங்களைத் துதித்தபோது நீங்கள் அவனுடைய இழந்த மகனுன விஷ்ணுபுவை மீட்டீர்கள். தந்தையின் மனையிலே மூப்பையடைந்து வந்த கோஷைக்குக் கணவனைத் தந்தீர்கள்.

8. அசுவினிகளே! சியவனுனுக்கு அழகிய மனைவியை அளித்தீர்கள். வழி தெரியாமலிருந்த கண்வனுக்குக் கண்ணைத் தந்தீர்கள். பொழிபவர்களே! நீங்கள் நிருஷதனுடைய புதல்வனுக்குச் செவியை நல்கினீர்கள். இச்செயல் போற்றத் தகுந்தது.

9. அசுவினிகளே! பல வடிவங்களை ஏந்தும் நீங்கள், பேதுவுக்கு, விபத்துக்களைக் கடந்து செல்வதும், போற்றத் தகுந்ததும், பகைவர்களை யழிப்பதும், தடைபடாததும், வலியதும், ஆயிரஞ் செல்வங்களைத் தாங்கி வருவதுமான துரித குதிரையை யளித்தீர்கள்.

10. உத்தம வள்ளல்களே! உங்களுடைய வீரச் செயல்கள் புகழுக்குரியவை. சோதி புவிகளிலிருக்கும் உங்களுக்கு மந்திர முழக்கம் எழுகிறது. அசுவினிகளே! பஜ்ரனுடைய புதல்வர்கள் உங்களை யழைக்குங்கால், நீங்கள் அறிபவனுக்கு உணவோடு பலத்தை யளியுங்கள். 1,307

11. அசுவினிகளே! புட்டிப்படுத்துபவர்களே! கும்பப் புதல்வனுடைய துதியால் துதியாகி, அகஸ்தியனுடைய மந்திரத்தால் உயர்த்தப்பட்டு, நீங்கள் விப்பிரனுன பரத்வாஜனுக்கு உணவை யளித்து, விச்பலைக்கு செயற்கைக் காலைத் தந்து, அவளை நடக்கச் செய்தீர்கள்.

12. சோதியின் புதல்வர்களே! பொழிபவர்களே! காவ்யனுடைய துதியை ஏற்க நீங்கள் அவனுடைய மனைக்குச் செல்லும் வழியிலிருந்து அகன்று வேறு

எங்கு சென்றிருந்தீர்கள்? அசுவினிகளே! பொன்னிறைந்த கலசத்தைப் போல் புதைக்கப்பட்டிருந்த ரேபனை, நீங்கள் பத்தாவது தினத்தில் தூக்கினீர்கள்; மீட்டீர்கள்.

13. அசுவினிகளே! நீங்கள் மூப்படைந்த சியவனனை உங்கள் ஆற்றல்களால் மீண்டும் இளமைப் படுத்தினீர்கள். பொய்யற்றவர்களே! சூரியனுடைய புதல்வி உங்களுடைய தேரிலே ஏறி அதை வண்ணப் படுத்தினாள்.

14. துக்கத்தை நீக்கும் நீங்கள், துக்கிரனால் முதலில் பாக்களோடு போற்றப்பட்டீர்கள். மீண்டும் புகமுடனானீர்கள். ஏனெனில் நீங்கள் புஜ்யுவை உந்தும் கடலிலிருந்து உங்களுடைய துரிதக் குதிரைகளாலும், துரிதக் கப்பல்களாலும், பத்திரமாய் ஏந்தி வந்தீர்கள்.

15. அசுவினிகளே! பொழிபவர்களே! உங்களுடைய நன்கு இணைக்கப்பட்ட தேரிலே, மனோவேகமான ரதத்திலே, துக்கிரனுடைய புத்திரனை ஏந்தி வந்தீர்கள். அவன் பத்திரமாய்க் கடலைக் கடந்தவுடன் உங்களைப் புகழ்ந்தான். ஏனெனில், அவன் உங்களால் தந்தையினிடம் சேர்க்கப்பட்டான். 1,812

16. அசுவினிகளே! நீங்கள் ஓநாயின் வாயிலிருந்து காடையை மீட்ட போது அது உங்களைப் புகழ்ந்தது. உங்களுடைய வெற்றியுள்ள தேரிலே மலையின் உச்சிக்கு ஜஹாஷனை ஏந்திச் சென்றீர்கள். நீங்கள் விசுவாங்கின் புதல்வனை விஷந்தால் கொன்றீர்கள்.

17 ரிஜ்ராசுவன் பெட்டை ஓநாய்க்கு நூறு ஆடுகளை அளித்தான். அவனுடைய கோபமடைந்த தந்தையால் அவன் தமத்துக்குச் செலுத்தப் பட்டான். குருடன் அனைத்தையுங்காண அவனுக்கு நீங்கள் கண்ணைத் தந்தீர்கள்.

18. குருடனுக்குக் கண்களின் சுகம் அளிக்கப்பட பெட்டை ஓநாய் இங்ஙனம் கதறிற்று. அசுவினிகளே!



பொழிபவர்களே! நரர்களே! காதயிக்கு, எல்லாச் செல்வங்களையும் வாரியிறைக்கும் தருணனைப் போல், ரிஜ்ராசுபவன் நூற்றொன்று ஆடுகளை வெட்டித் துணித்து, பல துண்டங்களாகச் செய்து, அவற்றை எனக்களித்தான்.

19. அசுவினிகளே! உங்களுடைய மகத்தான பாலனம் சுகத்தைத் தருகிறது. துதியாருகனான நீங்கள் முடவனை முழுப்படுத்தினீர்கள். ஆதலால் பேரறிவுள்ள கோஷை உங்களை அழைத்தாள். பொழிபவர்களே! உங்கள் பாலனங்களோடு இங்கு வாருங்கள்.

20. தஸ்ரர்களே! நீங்கள் சயுவின், பாலற்ற பாழான மெலிந்த பசுவைப் பாலால் நிரப்பினீர்கள். நீங்கள் புருமித்திரனின் மகளை உங்கள் ஆற்றல்களால் விமதனுக்கு மனைவியாகச் செலுத்தினீர்கள். 1,817

21. அசுவினிகளே! நீங்கள் கலப்பையால் உழப்பட்ட நிலங்களிலே யவத்தை விதைக்கச் செய்து, மநுவுக்காக மேகங்களைக் கறந்து, வச்சிரத்தால் தஸ்யுவைக் கொன்று, ஆரியனுக்குப் பரந்த சோதியையளித்தீர்கள்.

22. அசுவினிகளே! நீங்கள் அதர்வணனின் மகனான தத்தியங்கனுக்குக் குதிரையின் தலையைத் தந்தீர்கள். பழைய தலையைத் துணித்து, குதிரைத் தலையை அவனுடைய கண்டத்தில் வைத்தீர்கள். தஸ்ரர்களே! ததீசியும் சத்தியத்தைப் பாலித்து, துவஷ்டாவினிடமிருந்து—இந்திரனிடமிருந்து தான் கற்ற மநுவித்தையை உங்களுக்கு அறிவித்தான். அது உங்களுக்கு இடையில் கட்டும் கச்சை போலிருந்தது

23 அறிஞர்களான அசுவினிகளே! நான் உங்கள் ஸுமதியை—ஆதரவை—எப்பொழுதும் நாடுகிறேன். பொய்யற்றவர்களே! என்னுடைய எல்லாக் கடமைகளையும் பாலியுங்கள். எங்களுக்கு சந்தானத்தோடு மிகுந்த மேன்மையான செல்வத்தையளியுங்கள்.

24. நரர்களே! அளிக்கும் உத்தமர்களே! அசுவினிகளே! வத்திரிமதிக்குப் புதல்வனான ஹிரண்ய ஹஸ்தனைத் தந்தீர்கள். உத்தம வள்ளல்களான நீங்கள் மூன்

ருய்த் துண்டிக்கப்பட்ட சியவனுனை மீண்டும் உயர்ப்பித்தீர்கள்.

25. பொழிபவர்களே! அசுவினிகளே! எங்களுடைய முன்னோர்கள் உங்களுடைய இந்த வீரச் செயல்களைப் போற்றினுர்கள். பொழிபவர்களே! நாங்கள் எங்கள் வீரப் புதல்வர்களோடு சேர்ந்து, பாக்களை இசைத்து, யக்ஞத்திலே - சபையிலே உங்களுக்குத் துதிகளைக் கூறுவோமாக. 1,322

## 118. அசுவினிகள்

### 118. கட்சீவான் தைர்க்கதமஸ ஔசிஜன்

1. அசுவினிகளே! உங்களுடைய, சுகமளிப்பதும், செல்வமுள்ளதும், பருந்தைப் போல் வேகமுள்ளதுமான தேர் எங்கள் முன் தோன்றுக. பொழிபவர்களே! மூன்று பீடங்களுள்ளதும், வாயுவைப் போல் துரிதமாயிருப்பதும், மனே வேகமுள்ளதுமான தேர் தோன்றுக.

2. நீங்கள், மூன்று பீடங்களிருப்பதும், முவ்விதமாயுள்ளதும், மூவ்வுலகங்களில் செல்வதும், முச்சக்கரங்களுள்ளதும், நன்கு ஓடுவதுமான தேரிலே எங்களிடம் வாருங்கள். அசுவினிகளே! எங்கள் பசுக்களைப் பாலால் நிரப்புங்கள். எங்கள் குதிரைகளை ஊக்கப்படுத்துங்கள். ஒவ்வொரு வீரப்புதல்வனையும் பலப்படுத்துங்கள்.

3. தஸ்ரர்களே! உங்களுடைய துரிதமாய்ச் செல்வதும், நன்கு கற்பிக்கப்பட்டதுமான தேரிலே வந்து, உங்களைப் போற்றுபவனுல் கூறப்படும் இந்த சுலோகத்தைச் செவியுறுங்கள். அசுவினிகளே! நீங்கள் பழைய அறிஞர்களால் வறுமையை விலக்கத் துரிதமாய் வருபவர்கள் எனக் கூறப்பட்டவர்களல்லவா?

4. அசுவினிகளே! உங்களுடைய துரிதமானவையும், பறக்கும் சிறகுகளுள்ளவையும், உங்கள் தேரிலே இணைக்கப்பட்டவையுமான பருந்துகள் உங்களை இங்கு ஏந்தி வருக. பொய்யற்றவர்களே! இறக்கத்தில் பாயும் சலங்களைப் போல் வேகமுள்ளவையும், வானிலே பறக்கும் கழுகுகளைப் போலுமுள்ள குதிரைகள் உங்களை யக்ஞத்துக்கு ஏந்தி வருக.



5. தலைவர்களே! சூரியனுடைய புதல்வியான யுவதி உங்களுடைய இந்தத் தேரிலே இன்பமாகி ஏறினுள். உங்களுடைய வலியாங்கமுள்ளவையும், குதித்துப் பாய்ந்து பிரகாசிப்பவையுமான குதிரைகள் உங்களை எங்களிடம் ஏந்திவருக. 1,327

6. தஸ்ரர்களே! உங்கள் தொண்டுச் செயல்களால் வந்தனனை எழுப்பினீர்கள். பொழிபவர்களே! உங்கள் செயல்களால் ரேபனை மீட்டீர்கள். துக்கிரனுடைய மகனைக் கடல் மீது கடத்திச் சென்றீர்கள். சியவனனை இளமைப் படுத்தினீர்கள்.

7. அசுவினிகளே! நெருப்பிலே தள்ளப்பட்ட தாபமடைந்த அத்திரிக்கும், பலப்படுத்தும் உணவையும், ஆதரவையும் தந்தீர்கள். நீங்கள் நல்ல துதியை ஏற்று, தமத்தில் செலுத்தப்பட்ட கண்வனுக்குக் கண்ணை அளித்தீர்கள்.

8. அசுவினிகளே! பழைய சாயு உங்களை நாடியவுடன் நீங்கள் அவனுடைய பசுவைப் பாலால் நிரப்பினீர்கள். காடையை விபத்திலிருந்து விடுவித்தீர்கள். நீங்கள் விச்பலைக்குக் காலைத் தந்தீர்கள்.

9. அசுவினிகளே! நீங்கள் இந்திரனிடமிருந்து பெற்ற போரிலே முழங்குவதும், பகைவர்களை எதிர்ப்பதும், உக்கிரமுள்ளதும், ஆயிரஞ் செல்வங்களைப் பற்றுவதும், ஆற்றலுள்ளதும், புட்டாங்கமிருப்பதும், எதிரிகளை மிதிப்பதும், வெளுப்பாயுமுள்ள குதிரையைப் பேதுவுக்கு அளித்தீர்கள்.

10. அசுவினிகளே! உத்தமப் பிறவிகளே! வீரர்களே! நாங்கள் எங்களுடைய துன்பத்திலே இத்தகைய உங்களைப் பாலனத்துக்காக அழைக்கிறோம்.

எங்களுடைய இந்தப் பாக்களை விரும்பி, நலத்துக்காகச் செல்வம் நிறைந்த தேரிலே வாருங்கள். 1,332

11. பொய்யற்றவர்களே! நீங்கள் இருவரும் பரஸ்பரம் அன்புள்ளவர்களாகி எங்களிடம் வாருங்கள். பருந்தின் புதிய வேகத்தோடு வாருங்கள். அசுவினிகளே! நித்தியந் தோன்றும் உஷையின் உதயத்திலே அவியை ஏந்தியுள்ள நான் உங்களை அழைக்கிறேன். 1,333

## 119. அசுவினிகள்

### 119. கட்சீவான் தைர்க்க தமஸ ஔசிஜன்

1. நான் உயிருடனிருக்க உணவை விரும்பி, உங்களுடைய, பலவித கதியுள்ளதும், மனோவேகமுள்ளதும், வேகமான குதிரைகளால் இழுக்கப்படுவதும், யக்ஞாருகமானதும், ஆயிரம் கொடிகள் ஏந்துவதும், நூறு செல்வங்கள் நிறைந்ததும், சுகமளிப்பதும், செல்வத்தைத் தருவதும், மழையை யளிப்பதுமான தேரை அழைக்கிறேன்.

2. அதன் சலனத்திலே போற்றுவதில் எங்கள் புத்தி மேலெழுகிறது. எங்கள் துதிகள் அவர்களிடஞ் சேர்கின்றன. நான் அவியைச் சுவைப்படுத்துகிறேன். பாலகர்கள் அருகில் வருகிறார்கள். அசுவினிகளே! உங்களுடைய தேரிலே சூரியனுடைய புதல்வியான ஊர்ஜானீ ஏறினாள்.

3. அசுவினிகளே! யக்ஞ மனமுள்ள எண்ணிக்கையற்ற போரிலே ஜயமடைந்த மனிதர்கள் செல்வத்துக்காக பரஸ்பரம் போராடுங்கால் இறக்கத்தில் வரும் உங்களுடைய தேர் தென்படுகிறது. அதில் நீங்கள் உத்தமச் செல்வத்தைத் தொழுபவனுக்கு ஏந்தி வருகிறீர்கள்.

4. தன்னுடைய குதிரைகளால் ஏந்தப்பட்டு, சென்ற புஜ்யு கடலில் மூழ்கி கஷ்டப்படுங்கால் உங்களுடைய தாமாகவே இணைந்த குதிரைகளால் அவனை மீட்டு, அவனுடைய பிதாக்களிடஞ் சேர்த்தீர்கள். பொழிபவர்களே! தூரத்திலிருந்த அவனுடைய மனைக்குச் சென்றீர்கள். நீங்கள் திவோதாஸனுக்களித்த பெரிய பாலனம் புகழுள்ளது.



5. அசுவினிகளே! உங்களுடைய போற்றுவதற்குரிய இரு குதிரைகள் உங்களால் இணைக்கப் பட்ட தேரை இலக்கு வரை, சூரியனிடம் வரை எல்லாத் தேவர்களுக்கு முன்பாகவே நீங்கள் செலுத்தினீர்கள். கதிரவனின் புதல்வியான சூரியை விஜயமடைந்த உங்களிடம் வந்து நட்புத் தன்மையோடு பேசினாள். நீங்கள் என் கணவன் எனக் கூறி உங்களைப் பதியாகச் செய்து கொண்டாள். 1,338

6 நீங்கள் ரேபனைக் கொடுமையிலிருந்து பாலித்தீர்கள். நீங்கள் அத்திரிக்காக எரிக்கும் தாபத்தைப் பனியால் தணித்தீர்கள். சயுவின் பசுவிலே பாலைத் தோற்றுவித்தீர்கள். உங்களால் வந்தனன் நீண்ட ஆயுளைப் பெற்றான்.

7. வினைத்திறமுள்ள தஸ்ரர்களே! நீங்கள் மூப்பால் தளர்ந்திருந்த வந்தனனைத் தேரைச் செப்பனிடும் சிற்பனைப் போல் இளமைப் படுத்தினீர்கள். வாமதேவனுடைய துதிகளால் உருகி, விப்பிரனை அவனைக் கருப்பாசயத்திலிருந்து வெளிப்படுத்தினீர்கள்.

8. புஜ்யு-தந்தையினால் கைவிடப்பட்டான். அவன் தூர தேசத்தில் துன்பத்திலாகி உங்களைத் தொழுதான். நீங்கள் அவனிடம் சென்றீர்கள். சோதியின் ஒளிச் செல்வத்தோடு அவனைப் பாலித்தீர்கள். அவனருகில் நீங்கள் நின்றபோது உங்களுடைய பாலனம் அற்புதமாயிருந்தது

9. தேனுள்ள உங்களை, தேனை விரும்பும் தேனீ துதித்தது. உசிஜப் புதல்வனான கட்சீவான் ஸோமரஸ மதத்துக்கு உங்களை அழைக்கிறான். நீங்கள் ததிசியின்

மனத்தைச் சாந்தப்படுத்தினீர்கள். அவன் பெற்ற குதிரையின் தலையால் உங்களுக்கு மது வித்தையைக் கற்பித்தான்.

10. அசுவினிகளே! நீங்கள் பேதுவுக்கு, பலரால் விரும்பப் படுவதும், சத்துருக்களை நடத்திச் செல்வதும், பிரகாசிப்பதும், போரிலே பகைவர்களால் ஜயிக்கப் படாததும், ஒவ்வொரு செயலுக்குத் தகுந்ததும், இந்திரனைப் போல் மனிதர்களை ஜயிப்பதுமான வெள்ளைக் குதிரையை யளித்தீர்கள். 1,343

## 120. அசுவினிகள்

### 120. கட்சீவான் தைர்க்கதமஸ ஔசிஜன்

1. அசுவினிகளே! உங்களை எந்தத் துதி இன்புறுத்தும்? உங்கள் இருவரை எவன் திருப்தி செய்வான்? அறிவிலி உங்களை எங்ஙனம் ஏந்துவான்?

2. இங்ஙனம் அறிவிலி, எல்லாம் அறியும் அவர்களிடம் ஏந்தும் வழிகளைக் கேட்பானாக. ஏனெனில் அசுவினிகளைத் தவிர வேறு எவரும் அவ்வழிகளை அறியார்கள். ஜயிக்கப்படாத அவர்கள், தொழும் மனிதனுக்குத் துரிதமாய்ப் புலப்படுத்துகிறார்கள்.

3. நாங்கள் அனைத்தையும் அறியும் இரட்டையர்களான உங்களை அழைக்கிறோம். அறிஞர்களான நீங்கள் அறிவதற்குரிய ஸ்தோத்திரத்தைக் கூறுங்கள். உங்களை விரும்பும் நான் அவிகளையளித்துப் போற்றுகிறேன்.

4. நான் அபக்குவ தேவர்களை அழைக்கவில்லை. ஆனால் தஸ்ரர்களே! உங்களையே யழைக்கிறேன். வஷட் முழக்கத்தோடு அக்கினியில் அளிக்கப்படுவதும், அற்புதமாயும், புஷ்டியளிப்பதுமான ஸோம ரஸத்தைப் பருகுங்கள். எங்களைப் பலப்படுத்துங்கள்.

5. கோஷையின் புதல்வனும், பிருகுவாலும், போற்றப்பட்ட துதியால் அங்கிரஸன் உங்களைப்



போற்றுகிறான். அறிஞனான கட்சீவான் உணவை விரும்பி அதை அதிகமாய்ப் பெறுவானாக. 1,348

6. அசுவினிகளே! இடர்ப்படும் குருடனுடைய பாட்டைக் கேளுங்கள். உத்தமச் செயல்களைப் பாலிக்கும் உங்களால் நான் கண்களை அடைந்து உங்களைப் போற்றுகிறேன்.

7. நீங்கள் மகத்தான செல்வங்களைத் தந்தீர்கள். நீங்களே அவற்றைத் தேய்த்தீர்கள். மனைகளையளிக்கும் நீங்கள் எங்களைப் பாலிப்பவர்களாயிருங்கள். கொடிய கள்வனிடமிருந்து எங்களைப் பாலியுங்கள்.

8. அசுவினிகளே! எங்களைச் சத்துருக்களிடம் செலுத்தாதீர்கள். பாலால் எங்களைப் புட்டிப் படுத்தும் பசுக்கள், கன்றுகளிடமிருந்து பிரிக்கப்பட்டு, எங்கள் மனைகளிலிருந்து நீங்காமலாகுக.

9. உங்களைப் போற்றுபவர்கள் தங்கள் நண்பர்களைப் பாலிக்கச் செல்வத்தைப் பெறுவார்களாக. எங்களை உணவைத் தரும் செல்வத்துக்குச் செலுத்துங்கள். பசுக்களோடுள்ள உணவுக்கு எங்களை நடத்துங்கள்.

10. நான் அசுவினிகளிடமிருந்து குதிரையற்ற உணவு தரும் தேரை அடைந்தேன். அதனால் நான் திரண்ட செல்வத்தை யடைய விரும்புகிறேன். 1,353

11. செல்வந்தரும் தேரான உன்னை அடைந்தவன் நான்; என்னைச் செல்வப்படுத்தவும். சுகப்படுத்தும் தேர், மானிடர்களின் ஸோமபானத்தை அசுவினிகளிடம் ஏந்திச் செல்க.

12. நான் கனவை விரும்பவில்லை; ஏழைகளுக்கு உதவாத செல்வனையும் விரும்பவில்லை. ஏனெனில் கனவும், செல்வம் சுமக்கும் கருமியும் துரிதமாயழிகிறார்கள். 1,355

# 121. இந்திரன்

## 121. கட்சீவான் தைர்க்கதமஸ ஔசிஜன்

1. தேவர்களை விரும்பும் அங்கிரஸர்களுடைய இந்த ஸ்தோமங்களை, மனிதர்களைப் பாலிப்பவனும், செல்வங்களை யளிப்பவனுமான இந்திரன் எப்பொழுது செவியுறுவான்? மனையின் தலைவனுடைய ரித்விஜர்களை அவன் பார்த்து அங்கு அவன் யஜிக்கப்படுவான் என்பதை அறிந்தவுடன் அவன் மகிழ்வான்.

2. அவன் ஒளியுலகைத் தாங்குகிறான். பிரகாசிக்கும் அவன், பலத்துக்காக, வீரர்களைப் பலப்படுத்தும் பசுக்களின் செல்வத்தைப் பொழிகிறான். மகானான இந்திரன்-சூரியன்-தன் மகளான உஷை தோன்றிய பிறகு உதயமாகிறான். அவன் குதிரையின் ஸ்திரீயைப் பசுவின் தாயாகச் செய்தான்.

3. தினந்தோறும் அங்கிரஸர்களின் சனங்களுக்குச் செல்வத்தையளிப்பவனும், சிகப்பான உஷையை ஒளிப்படுத்துபவனுமான இந்திரன், பூர்வத்தில் கூறப்பட்ட அழைப்புக்குச் செவி கொடுப்பானாக. அவன் வெட்டும் வச்சிரத்தைக் கூர் படுத்தினான். அவன் பிராணிகளின், இரு கால் ஜந்துக்களின், மனிதர்களின் நலத்துக்காகச் சோதியைத் தாங்குகிறான்.

4. மூவ்வுலகங்களுக்கும் தலைவனாயிருக்கும் இந்திரன் போரிலே ஈடுபட்டு, மானிடர்களைத் துன்புறுத்தியவர்களின் கதவுகளை, பசுக்களை வெளிப்படுத்தத் திறக்கிறான். நீ ஸோம மதத்திலே யக்ஞத்துக்காகப் புகழத் தகுந்ததும், மறைக்கப்பட்டிருந்ததுமான பசுக்களின் மந்தையை அங்கிரஸர்களுக்குத் தருகிறாய்.

5. உலகத்தைப் பாலிப்பவர்களான சோதியும், புவியும், துரிதச் செயலுள்ள உனக்குப் புட்டியளிப்பதும், பிறப்பிக்கும் சக்தியுள்ளதுமான பாலை ஏந்தி வந்தார்கள். அப்பொழுது அவர்களுடைய பால் சொரியும் பசுக்களின் சுத்த செல்வமுள்ள பாலை உங்கள் முன் அவர்கள் வைத்தபோது நீ கதவுகளைத் திறந்தாய். 1,360



6. இதோ இந்திரன் தோன்றுகிறான். இந்த உஷையின் சூரியனைப் போல் மிக்கப் பிரகாசிப்பவனும், பகைவர்களைக் கடத்துபவனுமான இந்திரன் எங்களை சுகப்படுத்துவானாக. நாங்களும் அவியை யளித்து, போற்றத் தகுந்த ஸோம ரஸத்தைத் துடுப்பால் யக்ஞ ஸ்தானத்தில் தெளித்துப் பருகுவோமாக.

7. சூரிய கிரணங்களால் பிரகாசமாகும் மேகக் கூட்டங்கள் மழையைப் பொழிய ஊக்கமாகின்றன. அப்பொழுது பிரேகனான இந்திரன் யக்ஞத்துக்காக மழைத் தடைகளை நீக்குகிறான். இந்திரனே! நீ சூரியனாகத் தினந்தோறும் செயல் நடத்தும் தினத்தில் கிரணங்களை யளிக்குங்கால் சகட முள்ளவனும், பசு பாலகனும், துரிதனும் அவனவனுடைய செயலிலே சித்தியை யடைகிறார்கள்.

8. அவர்கள் உன் வலிமையைப் பலப்படுத்த இன்புறுத்துவதும், மதப்படுத்துவதும், ஊக்கப்படுத்துவதும், காற்றைப் போல் துரிதனாயுள்ள உன்னால் பற்றுவதற்குரியதுமான ஸோமத்தைப் பிழியுங்கால், மிக்க மதப் படுத்தும் ரஸத்தைப் பருகுபவையான எட்டு குதிரைகளையும் வீரனே! இங்கு செலுத்தவும். எங்கள் செல்வத்தை அபகரிக்கும் சத்துருவை ஜயிக்கவும்.

9. புருஹூதனே! சோதியில் ரிபுவால் ஏந்தி வரப்பட்டதும், பகைவர்களைத் துரிதமாய்க் கொல்வதுமான இரும்பாலான வச்சிராயுதத்தை வேகமாய்ச் செல்லும் அசுரன்மீது நீ செலுத்தினாய். நீ குத்ஸனுக்காகக் கணக்கற்ற ஆயுதங்களால் சுஷ்ணனை முற்றுகை செய்து அவனை அடித்தாய்.

10. இருட்டோடு சண்டை செய்த போரிலிருந்து சூரியன் வெளிப்பட்டவுடன் வச்சிர மேந்தும் நீ, மறைக்

கும் மேகத்தின் மீது உன் ஆயுதத்தைச் செலுத்தினாய். பிறகு சூரியனை மறைத்த சுஷ்ணனால் நன்கு கற்பிக்கப் பட்ட போர்வையைக் கிழித்தாய். 1,365

11. இந்திரனே! மகான்களும், வலியர்களும், சர்வ வியாபகர்களுமான சோதியும், புவியும் விருத்திரனைக் கொல்லும் செயல்களுக்கு உன்னை ஊக்கப்படுத்தினார் கள். நீ எங்கும் பரவுபவனும். அழிப்பவனுமான விருத் திரனை உன்னுடைய மகத்தான வச்சிராயுதத்தால் சலங் களிலே வீசி எறிந்தாய்.

12. இந்திரனே! மானிடர்களின் பந்துவான நீ, உன் னால் பாலிக்கப்படுபவையும், காற்றைப் போல் வேகமாக யிருப்பவையும், சுலபமாய் இணைக்கப் படுபவையும், சுமையை நன்கு ஏந்துபவையுமான குதிரைகளிலே ஏற வும். கவியின் புதல்வனான உசநானனலால் உனக்கு ஊக்கப்படுத்தும் ஆயுதம் அளிக்கப்பட்டது. நீ பகைவர் களை யழிக்கும் விருத்திரர்களைத் துடைக்கும் அவ் வாயுதத்தைத் தீட்டினாய்.

13. சூரியனான இந்திரனே! உன்னுடைய வல்ய ஹரி எனப்படும் குதிரைகளை நிறுத்தவும். ஏதசம் எனப்படும் குதிரை தேரின் சக்கரத்தை இழுக்கிறது. நீ யஜிக்காத வர்களைத் தொண்ணூறு நதிகளுக்கப்பால் செலுத்தி, அவர்களைக் கடமைச் செயல்களில் கட்டாயப் படுத்துக.

14. இந்திரனே! வச்சிர மேந்துபவனே! எங்களை, விலக்கக் கடினமாயிருக்கும் இவ்வறுமையிலிருந்தும். போரின் விபத்திலிருந்தும் பாலிக்கவும். உணவுக்காக வும், புகழுக்காகவும், சத்தியத்துக்காகவும், எங்களுக்குத் தேர் துலக்குபவையும் குதிரை விளங்குபவையுமான செல்வங்களையளிக்கவும்.

15. இந்திரனே! செல்வத்துக்குப் போற்றத் தகுந் தவனே! உன்னுடைய சுமதியை எங்களிடமிருந்து விலக் காதே. எங்களை உணவால் புட்டிப்படுத்தவும். மகவானே



நீ செல்வபதி. எங்களுக்குப் பசுக்களையளிக்கவும். உன்னை மிக்க ஊக்கமாய்த் துதிக்கும் நாங்கள் புத்திர பௌத்திரர்களோடு சேர்ந்து இன்புறுவோமாக. 1,370

# 122. விசுவே தேவர்கள்

## 122. கட்சீவான் தைர்க்கதமஸ ஔசிஜன்

1. கோபமில்லாத ரித்விஜர்களே! நீங்கள், பாலிக் கத் தகுந்த யக்ஞான்னத்தை சுகப்படுத்தும் உருத்திர னுக்கு அளியுங்கள். தன் வீரப்படைகளால் அம்பறாத் தூணியிலிருந்து அம்புகளைப் போல் அசுரர்களை சோதி யிலிருந்து விலக்கிய அவனை நான் ஏத்துகிறேன். நான் சோதி புவிகளின் நடுவிலிருக்கும் மருத்துக்களைப் போற்று கிறேன்.

2. எங்களுடைய பலவித துதியால் ஊக்கமடைந்து உஷையும் இரவும் எங்களுடைய முதலழைப்புக்கு-கண வனுடைய அழைப்புக்கு – மனைவியைப் போல் துரிதமா வார்களாக. எழும் சூரியனின் ஒளியோடு அழகாயிருக் கும் உஷை, தன்னுடைய பரந்த வடிவத்தைச் சூரியனைப் போல் தங்கக் கதிர்களால் ஏந்தி வருவாளாக.

3. வசிப்பதர்க் கருகனும், எங்கும் செல்பவனுமான சூரியன், எங்களை உற்சாகப்படுத்துவானாக. மழையைத் தோற்றுவித்துப் பெய்யுங் காற்று, எங்களை இன்புறுத்து வானாக. இந்திர பர்வதர்களே! எங்கள் புத்தியைத் தூய்மைப் படுத்துங்கள். எல்லாத் தேவர்களும் எங் களுக்குத் திரண்ட செல்வத்தை அளிக்க விரும்புவார் களாக.

4. நான் உசிஜனின் மகன். அறிஞர்களே! எனக் காக நீங்கள், புகழுள்ளவர்களும், புசிப்பவர்களும், பருகுபவர்களுமான இரு அசுவினிகளை உலகத்தை வெண்மை செய்யும்-உஷையிலே-அழையுங்கள். சலங் களின் பேரனான அக்கினியை ஸ்தாபியுங்கள். மானிட னான எனக்குத் தாய்மார்களைப் போல் நலத்தைச் செய் யும்-இரவையும் பகலையும்-போற்றுங்கள்.

5. உசிஜனின் மகனுன நான், தன் தேகத்தில் வெண்ணிறமாயிருந்த சரும நோயை நீக்க உங்களைத் துதித்த கோஷையைப் போல் நானும் அசுவினிகளான உங்களுக்குத் துதிக்கத் தகுந்த தோத்திரத்தை உங்களை அழைக்கக் கூறுகிறேன். தேவர்களே! நான் உங்களோடு சேர்ந்துள்ள பயனை யளிக்கும் பூஷாவைப் போற்றுகிறேன். நான் அக்கினியின் செல்வ தானத்தையும் போற்றுகிறேன். 1,375

6. மித்திரா வருணர்களே! என்னுடைய இந்த அழைப்புக்களைச் செவியுறுங்கள். யக்ஞ சதனத்தில் எங்கும் கூறப்படும் துதிகளைச் செவியுறுங்கள். செவிச் செல்வமுள்ள செவிச் செல்வியான ஸிந்து, எங்கள் நல்ல நிலங்களை சலத்தால் செழிப்பித்து, எங்களைச் செவியுறுவாளாக.

7. மித்திரனே! வருணனே! நீங்கள் பஜ்ரனுக்குப் பல பசுக்களைத் தானஞ் செய்தீர்கள். அதற்காக நான் உங்களைப் போற்றுகிறேன். தோத்திரங்களிலிருந்து திரண்ட செல்வம் தோன்றுக. எனக்குப் புட்டியை யளித்துக் கொண்டு-தேவர்கள்-அவரவருடைய புகழுள்ள பிரியமான தேரிலே என்னிடம் தடைபடாமல் துரிதமாய் வருவார்களாக.

8. நான் உயர்ந்த செல்வர்களான தேவர்களின் செல்வங்களைப் போற்றுகிறேன். மனிதர்களான நாங்கள் உத்தம வீரப் புதல்வர்களோடு சேர்ந்து அவற்றை அனுபவிப்போமாக. கட்சீவானுக்கு உணவையளிக்கும் தேவன், குதிரையையும் தேரையுந் தருகிறுன். அவனை நான் துதிக்கிறேன்.

9. மித்திரா வருணர்களே! உங்களை வெறுப்பவனும், வக்கிர வழியில் சென்று ஸோமரஸங்களைப் பொழியாமல் உங்களை ஊறுபடுத்துபவனுமான மனிதன், தன் இருதயத்தில் தனக்கே நோயைச் செய்து கொள்ளுகிருன். ஆனுல் சத்தியவான் அனைத்தையும் சொற்களால் பற்றுகிருன்.



10. அவன் அமைதியான குதிரைகளைப் பெறுகிருன். மிக்கப் பலமடையும் அவன் மனிதர்களிலே புகழுள்ளவனுகிருன். தானச் செல்வனுன அவன் சூரனுகிருன். எல்லாப் போர்களிலும் எப்பொழுதும் வீரனுயிருக்கிருன். மகத்தான தீரர்களை எதிர்த்துப் போராடுகிருன். 1,380

11. இன்பத்தையளிக்கும் அரசர்களே! அமுதனுன–தொண்டனுடைய அழைப்புக்குச் செவிகொடுங்கள். வாருங்கள். வானிலே வியாபகமாகும் நீங்கள், உங்களையன்றி வேறு பாலகனில்லாதவனும் தேருள்ளவனுமான தலைவனுடைய செழிப்புச் சாதனமான அவியைப் போற்ற விரும்புவீர்கள்.

12. தேவர்கள் சொன்னுர்கள்: எந்த அறிஞனுடைய பத்து புலன்களை ஊக்கப்படுத்தும் உணவைப் பெற நாங்கள் வருகிருேமோ அவனுக்கு நாங்கள் பலத்தை யளிக்கிருேம். செல்வங்களும், சிறப்புக்களும் மிகுந்த தேவர்கள், எல்லா உத்தம யக்ஞங்களிலே உணவைத் தருவார்களாக.

13. பத்து புலன்களை இன்புறுத்தும் பத்து விதமான அவியைப் பத்து துடுப்புக்களில் அறிஞர்கள் வேதிக்கு ஏந்திச் செல்ல நாங்கள் தேவர்களைப் போற்றுகிருேம். இஷ்டாசுவனும், இஷ்டரசியியும், இப்பொழுது புவியின் தலைவர்களாயிருப்பவர்களும், மானிடர்களின் தலைவர்களையும், பகைவர்களை ஜயிப்பவர்களையும் என்ன செய்ய இயலும்?

14. எல்லாத் தேவர்களும், எங்களுக்குப் பொற் செவியும், பொற்கண்டமுமுள்ள வீரப் புதல்வனை யளிப்பார்களாக. பெரியார்கள் நாவிலிருந்து வரும் மொழிகளையும், உடனே எங்கள் அவிகளையும் விரும்புவார்களாக. எங்கள் துதிகளாலும் அவிகளாலும் இன்புறுவார்களாக.

15. மசர்சாரனுடைய நான்கு மதியின் புதல்வர்களும், வெற்றியுள்ள அயவஸனுடைய மூன்று மைந்தர்

களும், என்னை வருத்துகிறார்கள். மித்திரா வருணர்களே! உங்களுடைய பரந்த வடிவமுள்ள சுகக் கதிருள்ள தேர், சூரியனைப் போல் அவர்கள் முகப்பிலே பயத்தைப் புலப்படுத்தித் துலங்குக. 1,385

## 123. உஷை

### 123. கட்சீவான் தைர்க்கதமஸ ஔசிஜன்

1. தட்சிணையின்-உஷையின் பரந்த தேர் குதிரைகளோடு இணைக்கப்பட்டிருக்கிறது. அத்தேரிலே அமுதர்களான தேவர்கள் ஏறியிருக்கிறார்கள். போற்றத் தகுந்தவளும், பரவுபவளுமான உஷை தமத்திலிருந்து எழுகிறாள். மானிடர்களின் மனைகளுக்கு ஒளியை ஏந்தி வருகிறாள்.

2. எல்லா சீவர்களுக்கும் முதல்வியாய் அவள் எழுந்திருக்கிறாள். மகத்தான அவள் ஜயித்து செல்வங்களைக் குவிக்கிறாள். யுவதியும், மீண்டும் மீண்டும் பிறப்பவளுமான அவள், உச்சத்திலிருந்து அனைத்தையுங் காண்கிறாள். உஷை, அழைப்புக்கு முதலில் வருகிறாள்.

3. உத்தமப் பிறவியும் தேவியுமான உஷையே! மானிடர்களைப் பாலிப்பவளான உன்னால் மானிடர்களுக்கு இன்று பகிரப்படும் ஒளியினம்சத்தை, தானத்தை, ஈகை மனமுள்ள ஸவிதா, திரப்படுத்தி எங்களை அவன் பாபமற்றவன் எனக்கூறுவானாக. அதனால் சூரியன் எங்களிடம் தோன்றுவானாக.

4. அஹனா, உஷை-வணங்கும் இயல்போடுள்ள அவள்-ஒளியுடன் தினந்தோறும் ஒவ்வொரு மனைக்கும் செல்லுகிறாள். ஒளியைப் பரத்திக் கொண்டு நித்தியம் வருகிறாள். நலங்களை அளிக்க விரும்புகிறாள். யக்ஞச் செல்வங்களின் உத்தம பாகங்களைப் பற்றுகிறாள்.

5. சத்தியவதியான உஷையே! நீ சூரியனுடைய சகோதரி; நீ வருணனோடு பிறந்தாய்; நீ முதலில் துதியாகவும். பிறகு தீமை செய்பவன் வருவானாக. உன் உதவியோடு நாங்கள் அவனை எங்கள் தேரால் துடைப்போமாக. 1,390



6. சத்திய மொழிகள் எழுப்பப்படுக. ஞானச் செயல்கள் நடத்தப்படுக; எரியும் சுடர்கள் எழுதுக. அவற்றால் விவிதமாய்ப் பிரகாசிக்கும் உஷைகள், தமத்தால் மறைக்கப்பட்டுள்ள விரும்பத் தகுந்த செல்வங்களைப் புலப்படுத்துகிறார்கள்.

7. இரு வடிவங்களுள்ள தினம்-இரவும், பகலும் இணை பிரியாமல் செல்லுகின்றன. ஒன்று முந்துகிறது; மற்றொன்று பிந்துகிறது. ஒருத்தி போகிறாள்; மற்றொருத்தி வருகிறாள். மாறுபட்ட நிறமுள்ள இவர்கள் ஒருவரையொருவர் பின்பற்றுகிறார்கள். ஒருத்தி எல்லாப் பொருள்களையும் மறைக்கிறாள். உஷை தன் ஒளித் தேரால் அனைத்தையும் ஒளிப்படுத்துகிறாள். 1,392

8. உஷைகள் இன்று போல் நாளையுமிருப்பார்கள். அவர்கள் வருணனின் நித்தியமான சட்டத்தைப் பாலிக்கிறார்கள். குற்றமற்ற அவர்கள் சூரியனுக்கு முன்னே முப்பது யோசனைகள் செல்லுகிறார்கள். ஒருவரைச் சூரியனும், ஒருவரை உஷையும் தொடர்ந்து, அவரவர்க்குரிய செயலிலே அவர்கள் ஈடுபடுகிறார்கள்.

9. தானாகவே துலங்கும் உஷை தினத்தின் முதல் வருகையின் இயல்பை யறிந்திருக்கிறாள். வெண்மையாய்ப் பிரகாசிக்கும் அவள் தமத்திலிருந்து தோன்றுகிறாள். பெண் ருதத்தைப் பங்கஞ் செய்யாள். தினந்தோறும் குறிப்பிட்ட இடத்துக்கு வருகிறாள்.

10. தேவியே! தன்னைப் புலப்படுத்திக் கொள்ளும் யுவதியைப் போல் நீ-பிரகாசிப்பவனும், ஈகை மனமுள்ளவனுமான சூரியனிடம் செல்லுகிறாய்; உன்னை ஜயிக்க விரும்பும் தேவனிடம் போகிறாய். கணவனிடம் செல்லும் யௌவனப் பெண்ணைப் போல நீ, அவனுடைய முகப்பிலே புன்னகையோடு உன் பக்ஷ-ஸ்தலங்களைப் புலப்படுத்துகிறாய். 1,395

11. தாயால் எழில் செய்யப்பட்ட பெண்ணைப்போல் மிக்கப் பிரகாசிக்கும் நீ, உன் அங்கத்தை அனைவருங் காணப் புலப்படுத்துகிறாய். மங்கலமான உஷையே! நீ இருட்டை விலக்கவும்; உன்னையன்றி வேறு உஷைகள் அதைச் செய்யார்கள்.

12. குதிரைச் செல்வங்களும், பசுச் செல்வங்களுமிருப்பவர்களும், எப்பொழுதும் விளங்குபவர்களும், சூரிய ரசிமிகளோடு பிரயத்தனஞ் செய்பவர்களும், போற்றத் தகுந்தவர்களுமான உஷைகள், மானிடர்களுக்கு நலங்களை ஏந்திக் கொண்டு செல்லுகிறார்கள். மீண்டும் வருகிறார்கள்.

13. நீ சத்தியமான சூரியனுடைய ரசிமிகளோடு ஒத்துழைத்து, எங்களை ஒவ்வொரு நல்ல செயலிலும் ஸ்தாபிக்கவும். உஷையே! அவிச் செல்வர்களான எங்களால் அழைக்கப்படும் நீ, எங்களுக்கு இருளை நீக்க, பல செல்வங்கள் தோன்றப் பிரகாசிக்கவும். 1,398

## 124. உஷை

### 124. கட்சீவான் தைர்க்கதமஸ ஒளசிஜன்

1. அக்கினி சொலிப்பிக்கப்பட்டவுடன் உஷை இருளை நீக்குகிறாள் உதய சூரியனைப் போல் பெருஞ் சோதியைப் பரத்துகிறாள். தேவனான ஸவிதா நாங்கள் தழைக்க-உழைக்க-எங்களுக்குப் பசுக்களும் ஆட்களுமுள்ள செல்வத்தை யளிப்பானாக.

2. தெய்வ விரதங்களைத் தடை செய்யாதவளும், மானிடர்களுடைய ஆயுளைத் தேய்ப்பவளும், சென்ற அல்லது சாசுவதமாயுள்ள வைகறைகளுக்கு ஒப்பாகவும், வரப் போகும் காலைகளுக்கு முதல்வியாயுமுள்ள உஷை பிரகாசிக்கிறாள்.

3. சோதி மகள் ஒளியை அணிந்திருக்கிறாள். அனுகூல மனமுள்ள அவள் கீழ்த் திசையிலே தோன்றுகிறாள். ருதனின்-சூரியனின்-வழியை நன்கு தொடர்கிறாள். அவனுடைய மனத்தை அறியும் அவள் திசைகளைச் சேதப்படுத்தாள்.



4. ஒளிப்படுத்தும் சூரியனுடைய ரசிமி, சமூகத்தைப் போல் பிரகாசிக்கும் அவள் அருகில் தென்படுகிறாள். இனிய பொருள்களைப் புலப்படுத்தும் நோதாவைப் போல் தன் கதிர்களை வெளிப்படுத்துகிறாள். அவள் பணிப் பெண்ணைப் போல் தூங்கும் குழந்தைகளை எழுப்புகிறாள். சலனமாகும் பணிப் பெண்களின் நடுவே அவள் ஒருத்தியே அடிக்கடி எப்பொழுதும் வருகிறாள்.

5. பரந்த வானின் கீழ்த் திசையிலே அவள் பிறந்து ஒளிக் கதிர்களின் கொடியைக் காட்டுகிறாள். பெற்றோர்களின் அங்கத்திலே நிலைத்து, சோதியையும் புவியையும் நிரப்புகிறாள். அவள் பரந்து, மிக்கப் படர்ந்து பிரகாசிக்கிறாள். 1,403

6. இங்ஙனம் பரவிப் பரந்த உஷை, தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் காட்சியின் இன்பத்தையளிக்கத் தவறாள். மாசற்ற வடிவத்தில் விளங்குபவளும், மிக்கப் பிரகாசிப்பவளுமான அவள் சிறியவன், பெரியவன் எனப் பார்க்காமல் அனைவரையும் ஒளிப்படுத்துகிறாள்.

7. ஆண் பந்துக்களிடஞ் செல்லும் சகோதரனற்ற ஸ்திரீயைப் போல் அவள் மேற்றிசைக்குச் செல்லுகிறாள். இழந்த செல்வத்தைப் பெற நீதி மன்றத்துக்கு ஏறுபவனைப் போல் தன் ஒளியைப்பெற வானின் உச்சியிலே ஏறுகிறாள். தன் கணவனை இன்புறுத்த விரும்பும் மனைவியைப் போல் உஷை தன் அழகிய ஆடையை அணிந்து புன்னகை செய்பவள் போல் தன் எழில்களைப் புலப்படுத்துகிறாள்.

8. சகோதரி இரவு, தமக்கைக்கு - உஷைக்கு- பகலுக்கு - பிறப்பிடத்தைச் செய்து, அதை அவளுக்கு அறிவித்து, சென்று விடுகிறாள். உஷை, சூரியனுடைய கதிர்களால் இருளை விலக்கி, குவிந்த மின்னல்களைப் போல் உலகத்தை ஒளிப்படுத்துகிறாள்.

9. முன்னே சென்ற சகோதரிகளிலே, முந்திய வளைத் தினந்தோறும் ஒருத்தி பின்பற்றிஞள்-பின்பற்று கிருள். பழையவர்களைப் போல் புதிய உஷைகளும் செழிக்கும் தினங்களைத் தந்து, செல்வந்தோன்ற எங் களுக்குப் பிரகாசிப்பாளாக.

10. செல்வியான உஷையே! அவியளிப்பவர்களை எழுப்பவும். விழிக்க விருப்பமில்லாத கருமித் தன்மை களுள்ள வணிகர்கள் உறங்குவார்களாக. செல்வியான உஷையே! எழுந்திருக்கவும்; ஈகையனுக்குச் செல் வத்தை ஏந்தவும். சத்தியத்தைப் பேசுபவளே! சீவர் களைத் தேய்க்கும் நீ, போற்றுபவனைச் செல்வப்படுத்த எழுந்திருக்கவும். 1,408

11. கீழ்த் திசையிலிருந்து இந்த யுவதி வருகிருள். அவள் சிகப்பான காளைப் படையை இணைக்கிருள். அவள் பிரகாசிப்பாள். இங்கு ஒளி துரிதமாகும். ஒவ் வொரு மனையிலும் அக்கினி தோன்றுவான்.

12 உஷையே! நீ உதயமாகுங்கால் பல விதப் பறவைகள் தங்கள் கூடுகளிலிருந்து எழுகின்றன. மனி தர்கள் உணவுக்காக உழைக்க, மனைகளிலிருந்து நீங்கு கிருர்கள். தேவியான உஷையே! யக்ஞ சதனத்திலிருக் கும் ஈகை மனமுள்ள மனிதனுக்கு நீ திரண்ட செல் வத்தை யளிக்கிருய்.

13. துதியாருகமான உஷைகளே! என்னுடைய இந்தத் தோத்திரத்தால் போற்றப்படுங்கள். எங்களை விரும்பும் நீங்கள் எங்களைச் செல்வப்படுத்துங்கள். தேவி களே! நாங்கள் உங்கள் பாலனத்தால் நூற்றுக் கணக் கான, ஆயிரக்கணக்கான செல்வத்தை அடைவோ மாக. 1,411



## 125. சுவநயனின் தானம்

### 125. கட்சீவான் தைர்க தமஸ ஒளசிஜன்

1. சுவநயன் காலையில் எழுந்து தன் அரிய செல் வத்தைப் பெறுவதற்குரியது என்பதையறிந்து கட்சீ வானுக்களித்தான். அவன் அதனை ஏற்று, தந்தையனி டம் அளித்தான். அதனுல் அவன் தன் ஆயுசையும் பிரஜையையும் செழிப்பித்து, வீரப் புதல்வர்களோடும், செல்வப் புஷ்டியோடும் கொழித்தான்.

2. அவன் பசு, பொன், குதிரைச் செல்வங்களோடு பொங்குக. அவனுக்கு இந்திரன் மிக்க உணவையளிப் பாஞக. திரியும் பிராணிகளைப் பாசங்களால் கட்டும் வேடனைப் போல், குருகுலத்திலிருந்து திரும்பிய புதல் வனை அவன் செல்வங்களால் பிணைத்துத் தாமதப் படுத் தினுன்.

3. நான் உன்னை மீண்டும் காண விரும்பி காலை யிலே உத்தமச் செயலைச் செய்த உன்னிடம் வந்தேன். செல்வம் நிறைந்த தேரோடு யக்ஞத்தை நடத்தும் நீ, பிழியப்பட்ட மதமளிக்கும் ஸோம ரஸத்தைப் பருகவும். வீரர் தலைவனை இனிய மொழிகளால் செல்வப்படுத்தவும்.

4. தாரையாய்ப் பொழிபவையும், சுகப்படுத்து பவையுமான பசுக்கள் ஸோம யாகத்தை நடத்தப் பாலைத் தருகின்றன. நடத்துபவனுக்கும் நல்கின்றன. பெற்றோர் களைப் பாலிப்பவனுக்கும், மானிடர்களை நலப்படுத்துபவ னுக்கும் நெய் தாரைகள் ஒவ்வொரு திசையிலிருந்தும் பாய்கின்றன.

5. தேவர்களைப் போற்றி அவர்களுக்களிப்பவன் சோதியின் உச்ச ஸ்தானத்திலே சுகமாயமருகிருன். பெரு கும் சலங்கள் அவனுக்குச் சத்தான ரஸத்தை யளிக்கின் றன. அவனுக்கு இந்த வளமான நிலம் எப்பொழுதும் செழிப்பைத் தருகிறது. 1,416

6. ஈகையர்களுக்கு இந்த அற்புதச் செல்வங்கள் எல்லாம் தோன்றுகின்றன. ஈகையர்களுக்குச் சோதியிலே

பரிதிகள் பிரகாசிக்கின்றன. ஈகையர்கள் பூரணயுசை அடைகிறார்கள்.

7. ஈகையர், தீமையிலும் துக்கத்திலும் தேயாமலாகுக. விரதங்களைப் பாலித்து, தேவர்களைப் போற்றுபவர்களும் தேயாமலாகுக. சுற்றியுள்ள ஒவ்வொருவனும் அவர்களைப் பாலிப்பவனாகுக. ஈகையற்றவனுக்குத் துன்பங்கள் தோன்றுக. 1,418

## 126. சுவநய பாவயவ்யன்

### 126. கட்சீவான் தைர்க்கதமஸ ஔசிஜன்

1. ஸிந்துவில் வசிக்கும் பாவயவ்யனின் புதல்வனான சுவநயனுக்கு என்னுடைய புத்தி பலத்தோடு பற்பல ஸ்தோமங்களைக் கூறுகிறேன். எவனாலும் ஜயிக்கப்படாத அவன் புகழை விரும்பி, ஆயிரம் யக்ஞங்களை நடத்த என்னைத் திறப்படுத்தினான்.

2. உத்தம ஈகையனான அரசன், நான் தானத்தை ஏற்கவேண்டுமென விரும்பினான். கட்சீவானான நான், அவனிடம் உடனே நூறு நிஷ்கங்களையும், நூறு வலிய குதிரைகளையும், நூறு காளைகளையும் பெற்றேன். அதனால் அவன் தன் அழியாப் புகழை சோதியிலே பரத்தினான்.

3. சுவநயனால் எனக்குக் கருப்புக் குதிரைகளால் இழுக்கப்படும் பத்து தேர்கள் அளிக்கப்பட்டன. அவற்றில் பணிப் பெண்கள் ஏறினார்கள். அறுபதினாயிரம் பசுக்கள் அவற்றைத் தொடர்ந்தன. அவற்றைக் கட்சீவான் மாலையிலே தந்தையினிடம் அளித்தான்.

4. பத்து தேர்களில் இணைக்கப்பட்ட நாற்பது சிகப்புக் குதிரைகள் ஆயிரம் படை ஆட்களுக்கு முன்னே பவனியைச் செலுத்துகின்றன. பஜ்ரர்களும், தீவனமுள்ளவர்களும்—கட்சி வந்தர்களும், குதிரை வடங்களுள்ளவர்களும் பொன் அணிகளால் அலங்கரிக்கப்பட்டு மிக்க ஊக்கமுடனிருப்பவையான குதிரைகளைக் கனைப்புத் தீரப் பிடித்து விட்டுத் தூய்மைப்படுத்துகிறார்கள்.



5. ஸுபந்துக்களே! நான் பழைய தானத்தை உங்களுக்காகப் பெற்றேன். அவை, பூட்டப்பட்ட எட்டும் மூன்றுமான தேர்கள், மிக்க மதிப்புள்ள பசுக்கள். நல்லெண்ணமுள்ள பந்துக்களைப் போல் உறவினர்களான பஜ்ரர்கள், மிக்க அளித்துப் புகழைப் பெற விரும்புவார்களாக. 1,423

6. அவளுடைய விருப்பங்களுக்கு இசைந்தால் அவள் நகுலியைப் போல் இறுகப் பிடித்துக் கொள்கிறாள். போகத்துக்குப் பக்குவமான அவள் எனக்கு அபரிமித இன்பத்தைத் தருகிறாள்.

7. என்னை அணுகவும்; என்னை அற்பமாக எண்ணாதே. நான் கந்தார தேசங்களின் செம்மறிகளைப் போல் ரோமம் நிறைந்தவள். 1,425

## 127. அக்கினி

### 127. பருச்சேபன் திவோதாஸனின் புதல்வன்

1. நான், ஈகையனும், மனைகளை யளிப்பவனும், பலத்தின் மகனும், மேதாவியுமான விப்பிரனைப் போல் இருக்கும் எல்லாப் பொருள்களை யறிபவனும், யக்ஞங்களை ஏந்தும் தேவனும், தன்னுடைய உயர்ந்த போற்றுவதற்குரிய ஊக்கத்தால், சுவாலைகளில் அளிக்கப்பட்ட நெய்ச் சுடரைத் தேவர்களுக்காக விரும்புபவனும், ஹோதர்வுமான அக்கினியைப் போற்றுகிறேன்.

2. விப்பிரனே! சுக்கிரனே! யக்ஞ கர்த்தாக்களான நாங்கள், மிக்க யக்ஞாருகனும், அங்கிரஸர்களில் முதல்வனுமான உன்னை, மந்திரங்களோடு—விப்பிரர்களின் மந்திரங்களோடு அழைக்கிறோம். நாங்கள், மானிடர்களின் நலத்துக்காக எங்கும் செல்லும் சூரியனைப் போல் ஹோதாவாக இருப்பவனும், சுகத்தைப் பெற பல சனங்களால் அணுகப்பட்டுப் போற்றப்படுபவனும், சுடர் கேசமுள்ளவனும், பொழிபவனுமான உன்னைத் துதிக்கிறோம்.

3. சுவாலையின் சக்தியால் மிக்கப்பரந்து பிரகாசிக்குமவன் மரங்களை வெட்டும் பரசுவைப்போல் பகைவர்களை வெட்டுபவனுயிருக்கிருன். அவன் பரிசித்தவுடன், கனமாயும் கெட்டியாயுமுள்ள எப்பொருளும் மரங்களைப் போல் சாய்கிறது. அவன் இரக்கமற்று, பகைவர்களின் நடுவே விளையாடுகிருன். போரிலிருந்து விலகாமலிருக்கும் வில்லாளனைப் போல அழிக்கும் பணியிலிருந்து நீங்காமலிருக்கிருன்.

4. அறிஞனுக்குச் செல்வங்களை அளிப்பவர்கள் போல் அவனுக்குச் சத்துள்ள அவிகளை மந்திரங்களோடு அவர்களளிக்கிருர்கள். எரியும் அரணிகளால் நம்முடைய பாலனத்துக்கு அவன் தேஜஸை யளிக்கிருன்; வழிபடுபவன் பாலனத்துக்காக அக்கினிக்கு அவிகளைத் தருகிருன். அவிகளில் பரவும் அவன் அவற்றைக் காடுகளைப் போல் தன் சுவாலையால் பற்பப்படுத்துகிருன். அவன் கெட்டியான தானியங்களைத் தன் சுவாலையால் பக்குவப் படுத்துகிருன். அவன் தன் பலத்தால் திரமான பொருள்களையுமழிக்கிருன்.

5. நாங்கள் பகலைக் காட்டிலும் இரவிலே அதிகமாய் விளங்கும் அவனுக்கு அவியை வேதியினருகே வைக்கிருேம். பகலில் உயிரற்றவன் போலிருக்கும் அவனுக்கு அவியைத் தருகிருேம். புதல்வனுக்குத் தந்தையாலளிக்கப்படும் மனைபோல் அவி அவனுல் துரிதமாய் கிரகிக்கப் படுகிறது. பக்தனையும் பக்தியில்லாதவனையும் அறிந்து, அக்கினி இருவர்களையும் பாலிக்கிருன். அவியைப் புசித்து, அக்கினி தேயாமலாகிருன். அளிப்பவர்களையும் அமுதப் படுத்துகிருன். 1,430

6. பாலை நிலங்களில் போற்றத் தகுந்தவனும், உழப்பட்ட வளமுள்ள நிலங்களில் போற்றத் தகுந்தவனும், மருத்துக்களின் படையைப் போல் கர்ச்சித்து முழங்குபவனும், யக்ஞத்தின் கொடியை ஏத்தத் தகுந்தவனுமான அவன், எங்கள் அவிகளை விரும்பி அருந்துகிருன். எல்லா மனிதர்களும், தங்களுடைய நலத்துக்காக வழிபடுபவர்களுக்கு இன்பத்தை யளிக்கும் அக்கினியின் வழியில் செல்லுகிருர்கள். இன்பத்துக்குச் செலுத்தும் வழியை யனுசரிக்கும் மனிதர்களைப் போல் அவனை இன்புறுத்தியே-அவ்வழியில் அவர்கள் போகிருர்கள்.



7. பிருகுவின் மக்கள், அக்கினியின் இருவடிவங்களைப் புகழ்ந்து அவனைப் போற்றி வணக்கத்தையளித்து துதிகளைக் கூறுகிருர்கள். பிருகுவின் மக்கள் அரணியை மந்தனஞ் செய்து அவிகளை யளிக்கிருர்கள். இந்த எல்லாச் செல்வங்களின் பாலகனும், பிரகாசிப்பவனுமான அக்கினி அவற்றையளிக்க ஆற்றலுள்ளவனுயிருக்கிருன். அறிஞனை அவன் பிரியமான அவிகளை ஏற்றுக் கொள்வானுக. அறிஞனை அவன் அவிகளை ஏற்றுக் கொள்வானுக.

8. நாங்கள், எல்லா சனங்களைப் பாலிப்பவனும், அனைவருக்கும் சமமாயிருப்பவனும், மனையைப் பாலிப்பவனும், சத்திய மொழிகளை ஏந்துபவனுமான உன்னை, போகத்துக்காக அழைக்கிருேம். நாங்கள் மானிடர்களின் அதிதியும், உணவுக்காக இந்த எல்லாத் தேவர்களாலும் தந்தையினிடம் மகனைப் போல் நாடப்படுபவனும், தேவர்களின் நடுவே அறிஞர்களால் அவியளிக்கப் படுபவனுமான உன்னை அழைக்கிருேம்.

9. அக்கினியே! பலத்தால் பகைவர்களை யழிப்பவனும், மகத்தான சோதியுள்ளவனுமான நீ, தேவர்களின் யாகத்துக்காகச் செல்வத்தைப் போல் தோன்றுகிருய். உன் மதம் மிக்கப் பிரகாசமுள்ளது. உன் செயல் மிக்கப் புகழுள்ளது. ஆதலால் தேயாதவனே! மனிதர்கள் உன்னிடம் அரசனிடம் தூதர்களைப் போல் காத்திருக்கிருர்கள்.

10 துதியாருகனும், திறத்தைத் தாழ்த்தும் திறமுள்ளவனும், உஷையோடு எழுபவனும், பசுக்களை யளிப்பவனுமான அக்கினிக்கு உங்கள் ஸ்தோமம் பாடப்

படுக. அவியுள்ளவன் ஊக்கத்தோடு ஒவ்வொரு வேதிக்கும் செல்லுகிறுன். துதியை நன்கறியும் ஹோதா, வரப்போகும் தேவர்களின் நடுவே அக்கினியை முதல்வனுக மன்னனை முன்னேடியைப் போல் போற்றுகிறுன். 1,435

11. அக்கினியே! எங்களிடம் மிக்க அருகில் தோன்றி, தேவர்களோடு இசைந்து, காருண்ய மனத்தோடு மகத்தான செல்வங்களை யளிக்கவும். சக்திமானே! நாங்கள் புவியைப் பார்த்து அனுபவிக்க எங்களுக்கு மகத்தான மேன்மையை, மகத்தான புகழையளிக்கவும். மகவானே! பலத்தால் உக்கிரனைப் போல் பகைவர்களைக் கொல்லும் நீ, துதிப்பவர்களுக்கு வீரதீரத்தை யளிக்கவும். 1,436

## 128. அக்கினி

### 128. பருச்சேபன் திவோதாஸனின் புதல்வன்

1. ஹோதாவும் யக்ஞாருகனுமான அக்கினி, விரும்புவர்களின் விரதத்தை நிறைவேற்றவும், தன விரதத்தைப் பூர்த்தி செய்பவனுமான இவ் வக்கினி, மனிதனிடமிருந்து தோன்றுகிறுன். நட்பை நாடுபவனுக்கு அனைத்தையுஞ் செய்பவனுகவும், புகழை விரும்புபவனுக்குச் செல்வத்தைப் போலவுமிருக்கிறுன். தடைபடாத ஹோதாவான அவன் அறிஞர்களால் சூழப்பட்டு அமருகிறுன்.

2. நாங்கள் அந்த யக்ஞ சாதகனை, ருதத்தின் வழியால் அவியோடும், தோத்திரத்தோடும், அவிச் செல்வமுள்ள யக்ஞத்தோடும் அழைக்கிருேம். நாங்கள் அளிக்கும் இந்த அவியால் அவன் இந்த வடிவத்தில் மூப்பாகாமலிருக்கிறுன். வெகு தூரத்திலிருந்து காற்றினுல் ஏந்தப்பட்டு வந்த தேவன், மநுவுக்காக வெகு தூரத்திலிருந்து ஏந்தப்பட்டு வந்தவன்.

3. எப்பொழுதும் போற்றத் தகுந்த அக்கினி, புவியிலே–வழியிலே–அழைக்கப்பட்டவுடன், கர்ச்சிக்கும்



ரேதஸை ஏந்தும்–காளை–கர்ச்சித்து, ரேதஸை ஏந்துபவன் தோன்றுகிறுன். துரிதஞன தேவன் சுவாலைகளால் நூறு விதங்களாய்ப் புலப்படுகிறுன். உச்சஸ்தானங்களில் வசிக்கும் அக்கினி எங்களுடைய உத்தமச் செயல்களுக்கு உடனே வருகிறுன்.

4. உத்தமச் செயலுள்ளவனும், புரோகிதனுமான அக்கினி ஒவ்வொரு மனையிலுமுள்ள அழியாத யக்ஞத்தை அறிகிறுன். செயலால், யக்ஞத்தை நினைக்கிறுன்–அறிகிறுன். விதிப்பவனுன அவன் தன் செயலால்–மனத்திட்பத்தால், நாடுபவனுக்கு எல்லாப் பொருள்களையும் புலப்படுத்துகிறுன். அதனுல் மனிதர்களின் அதிதியாகிறுன். நெய்யால் மிக்க ஊட்டப்படுகிறுன். விதிப்பவனுகவும், ஏந்தும் வல்லவனுகவுமாகிறுன்.

5. எல்லா மனிதர்களும் அக்கினிக்குத் திருப்தியைச் செய்ய, காற்றுக்களால் அனுபவிக்கப்பட தானியங்களைப் போலும், நாடுபவனுக்கு அளிக்கப்படும் உணவுகளைப் போலும், எரியும் சுவாலைகளிலே அவிகளை அளிக்கிறுர்கள். இங்ஙனம், வழிபடுபவன் தன் செல்வத்துக்குத் தகுந்த தானத்தை–அவிகளை–அவனுக்களிக்கிறுன். அவன் எங்களை நாங்கள் பாபத்தால் வருத்தமாகுங்கால் தீமையிலிருந்தும், தாழ்த்தும் தீமையிலிருந்தும், பாபத்திலிருந்தும் பாலிக்கிறுன். 1,441

6. எங்கும் நிறைந்தவனும், மகானும், தலைவனுமான அக்கினி, தனது வலது கையிலே செல்வத்தை ஏந்துகிறுன். வழிபடுபவனுக்குப் பொருளைத் தர பிரிதியைப் போல் தன் பிடிப்பைத் தளர்த்தி–கையைத் திறக்கிறுன். ஆனுல் அவிகளை விரும்பத் தளராமலிருக்கிறுன். அக்கினி, விரும்பும் ஒவ்வொரு தேவனுக்கும் அவியை ஏந்திச் செல்லுகிறுன். நலத்தைச் செய்யும் எவனுக்கும் நன்மைகளைச் செய்கிறுன். அவன் சோதிக் கதவுகளைத் திறக்கிறுன்.

7. அந்த அக்கினி, மானிடர்களின் கழகத்திலே, வெற்றியடைந்த சனத் தலைவனைப் போல், யக்ஞங்களிலே வெற்றி யடைந்த பிரியமான தலைவனைப் போல், யக்ஞங்களிலே நிலைக்கப்படுகிறான். வேதியிலே மனிதர்களால் அளிக்கப்படும் அவிகளின் மீது அவன் இறங்குகிறான். அவன் எங்களை வருணனின் தண்டனையிலிருந்து பாலிக்கிறான். மகத்தான தேவனின் தண்டனையிலிருந்து எங்களைப் பாலிக்கிறான்.

8. அவர்கள் ஹோதாவான அக்கினியைச் செல்வத்துக்காகப் போற்றுகிறார்கள். பிரியனும், ஞாபகமிருப்பவனுமான அவனைத் தலைவனாக அவர்கள் நாடுகிறார்கள். அவனை அவிகள் ஏந்தச் செய்கிறார்கள். எல்லாப் பிராணிகளின் உயிராயும், அனைத்தையும் அறிபவனாயும், ஹோதாவாயும், யக்ஞாருகனாயும், அறிஞனாயுமுள்ள அவனைப் போற்றுகிறார்கள். தொழுபவர்கள் செல்வத்தை விரும்பி, பாலனத்தைப் பெற, மந்திரங்களைக் கூறுகிறார்கள். 1,444

## 129. இந்திரன்

### 129. பருச்சேபன் திவோதாஸனின் மகன்

1. இந்திரனே! தேவர்களைத் தாங்க, உன்னுடைய தேர் தூரத்திலிருந்தாலும், துரிதனான நீ அருகிலே செலுத்துகிறாய். குற்றமற்றவனே! நீ அருகிலே செலுத்துகிறாய். எங்கள் பாலனத்துக்காக அதை எங்களருகில் துரிதமாய் நிறுத்தவும். அதைப் பலப்படுத்த விரும்பவும். குற்றமற்றவனே! ஊக்கமுள்ளவனே! விதிப்பவர்களின் இம் மொழியைக் கேட்கவும்; விதிப்பவர்களைப் போலுள்ள எங்களுடைய இந்த மொழியைக் கேட்கவும்.

2. இந்திரனே! பல போர்களில் மருத்துக்களோடு சேர்பவனும், அவர்களின் ஊக்கத்தால் உற்சாக மடைபவனும், பகைவர்களை ஜயிக்க மருத்துக்களோடு இயங்குபவனுமான நீ, எங்களுடைய இந்த அழைப்பைக் கேட்கவும். நீ சூரர்களோடு இருந்தாலும் நீயாகவே ஜயத்தைத் தருகிறாய். அறிஞர்களால் உணவைத் தரப்படுபவனாகிறாய். மொழித் தலைவர்கள் உன்னை, குதிரையைப் புட்டிப்படுத்துபவர்களைப் போல் துரிதனும், அவியுள்ளவனுமான உன்னைப் போற்றுகிறார்கள்.



3. இந்திரனே! நீ பகைவர்களை ஜயிக்கிறாய். மழையைத் தடுக்கும் மேகத்தைப் பிளக்கிறாய். மனிதனைப் போல் சலனமாகும் மேகத்தைப் பிடித்து சலம் நீக்கப்பட்டவுடன் அதை விட்டு விடுகிறாய். இந்திரனே! புகழுக்குரிய செயலுக்காக நான் உனக்குத் துதியைக் கூறுகிறேன். நான் சோதிக்கு, சுயப் புகழுள்ள ருத்திரனுக்கு, மித்திரனுக்கு, வருணனுக்கு சுகமளிக்கும் அத்தகைய புகழ்ச் செயலுக்காக நான் துதியைக் கூறுகிறேன்.

4. நாங்கள், உங்களை இங்கு பலப்படுத்த நண்பனும், அனைவரையும் விரும்புபவனும், மிக்க வலிய துணைவனும், போர்களிலே மிக்க வலிய துணைவனுமான இந்திரனை இங்கு வர விரும்புகிறோம். நாங்கள் பாலனமாக எல்லாப் போர்களிலும் எங்கள் போர்த்திறத்தை ஊக்கப்படுத்தவும். உன்னால் எதிர்க்கப்படும் பகைவன் உன்னைத் தாழ்த்தான்.

5. உக்கிரனான இந்திரனே! உன்னை நாடுபவனின் ஒவ்வொரு பகைவனையும் புகழுக்குச் செலுத்தும் போர் வழிகளைப் போல் உன் பாலனங்களால் அவனுடைய அதீனத்தில் செலுத்தவும். சூரனே! அனைவராலும் போற்றப்படும் நீ, எங்கள் முன்னோர்களுக்கு வழியைப் புலப்படுத்தியது போல் எங்களுக்கும் உன்னுடைய உக்கிரபாலனங்களால் வழியைப் புலப்படுத்தவும். உலகத்தைத் தாங்கும் நீ, மனிதனின் எல்லாப் பாவங்களையும் நீக்குகிறாய். எங்கள் யக்ஞத்தில் வந்து நல்ல பொருள்களை ஏந்துகிறாய். 1,449

6. நான், உலகத்தைத் தாங்குபவனும், அழைக்கத் தகுந்த தேவனைப் போலிருப்பவனும், உணவோடு ஒவ்வொரு உத்தமச் செயலுக்குச் செல்பவனும், ஒவ்வொரு உத்தமச் செயலிலும் அரக்கர்களைக் கொல்பவனுமான இந்துவுக்கு–சாமனுக்கு–சந்திரனுக்குத் துதியைக் கூறும் திறத்தைப் பெறுவேனாக. அவன் தானாகவே தன் ஆயுதங்களால் நிந்திப்பவனின் துற்புத்தியை எங்களிடமிருந்து விலக்குவானாக. பழி மொழிபவன் அற்பப் புழுதியைப் போல் பாழாவானாக.

7. இந்திரனே! நாங்கள் பாக்களால் உன் புகழைப் புலப்படுத்தி, உன்னைப் பாடுகிறோம். நாங்கள் செல்வங்களைத் தருபவனான உன்னிடம், இனிமையாயும், திரமாயும், வமிசத்தைத் தாங்குவதாயும், வலிமையைத் தருவதாயுமுள்ள செல்வத்தை நாடுகிறோம். உன்னைத் தக்கவாறு போற்ற இயலாத நாங்கள் உன்னைப் பாக்களால் போற்றி, மிகுந்த உணவுள்ளவர்களாவோமாக. நாங்கள் போற்றத் தகுந்த இந்திரனை சத்தியமான, ஊக்கமான பாக்களால் பற்றுவோமாக.

8. உங்களுடையவும், எங்களுடையவும் நன்மைக்காக இந்திரன் தன் சுயச்சிறப்புள்ள பாலனங்களோடு தீயோர்களைத் துரத்தவும், தீயமனமுள்ளவர்களைத் துடைக்கவும் வருகிறான். பட்சிக்கும் பகைவர்களால் எங்கள் மீது செலுத்தப்பட்ட ஆயுதம் தானாகவே அழிந்தது. அது எங்களை அணுகாது. எங்களைத் துன்புறுத்தாது.

9. இந்திரனே! திரண்ட செல்வங்களோடு தடைபடாத வழியால் எங்களிடம் வரவும். அரக்கர்கள் நீங்கியுள்ள வழியால் வரவும். நாங்கள் தூரத்திலிருக்குங்கால் நீ எங்களுடனிருக்கவும். எங்கள் மனை அருகிலிருக்குங்கால் நீ எங்களோடிருக்கவும். தூரத்திலிருந்தாலும், அருகிலிருந்தாலும், உன் பாலனத்தால் எங்களைப் பாலிக்கவும். எப்பொழுதும் உன் பாலனத்தால் எங்களைப் பாலிக்கவும்.



10. இந்திரனே! துன்பத்தைக் கடந்தும், செல்வத்தால் எங்களைத் தாங்கவும். உக்கிரமாயிருக்கும் உன்னை மகிமை பாலிக்க, மகத்தான பாலனத்துக்காக சூரியனைப் போல் பற்றுகிறது. மிக்க ஆற்றலுள்ளவனும் அமுதனுமான நீ, எங்களைப் பாலிப்பவன்; காப்பவன்; எந்தத் தேரிலாவது ஏறி எங்களிடம் வா. பகைவர்களைப் புசிப்பவனே! எங்களை எதிர்க்கும் எவனையும் விலக்கவும்.

11. நன்கு போற்றப்படும் நீ, எங்களைத் துன்பத்திலிருந்து பாலிக்கவும். நீ எப்பொழுதும் துர்மதிகளைத் தாழ்த்துபவன். தேவனான நீ, துர்மதிகளைத் தாழ்த்துபவன். நீ, பாவிகளான அரக்கர்களை அழிப்பவன்; என்னைப் போலிருக்கும் அறிஞனைப் பாலிப்பவன். அனைவருக்கும் தஞ்சமளிக்கும் உன்னை, தலைவன் அரக்கர்களை அழிப்பவனாகத் தோற்றுவித்தான். வசுவே! பிறப்பிப்பவன். அரக்கர்களை அழிப்பிப்பவனாகத் தோற்றுவித்தான். 1,455

## 130. இந்திரன்

### 130. பருச்சேபன் திவோதாஸனின் புதல்வன்

1. இந்திரனே! நீ தூரத்திலிருந்தாலும் எங்கள் முன்னிருந்தும் தோன்றுமலிருக்கும் அக்கினி போலும், சபைகளுக்குச் செல்லும் வீரர்களின் தலைவன் போலும், தன் இடத்துக்குச் செல்லும் வீரர்களின் தலைவனான அரசன் போலும் எங்களிடம் வா. அவிகளை ஏந்தி வரும் நாங்கள் பொழியப்பட்ட ஸோம ரஸத்தை நீ பெற்றுக் கொள்ள, அறிஞர்களோடு, உன்னை, தந்தையை அருந்த அழைக்கும் புதல்வர்கள் போல் அழைக்கிறோம். நாங்கள் மிக்கப் போற்றத் தகுந்த உன்னை உணவைப் பெற்றுக் கொள்ளவும், போரில் ஜயிக்கவும் அழைக்கிறோம்.

2. இந்திரனே! கற்களால் பிழியப்பட்டு கோசத்திலிருந்து பொழியப்பட்ட ஸோம ரஸத்தை, நீரூற்றைப் பருகும் காளை போலும், நீரூற்றைப் பருகும் மிக்கத் தாகமுள்ள காளை போலும் பருகவும். உன்னை மதப்படுத்த, உன்னைப் பலப்படுத்த மிக்க அதிகமாய் ஊக்கப்படுத்தப் பருகவும். குதிரைகள் உன்னைச் சூரியனை ஏந்திச் செல்லும் குதிரைகள் போலும், தினந்தோறும் வானிலே ஏந்திச் செல்லும் புரவிகள் போலும் இங்கு ஏந்தி வருக.

3. இந்திரன், சோதியிலிருந்து எடுத்து வரப்பட்டதும், மலையிலே பறவையின் குஞ்சுகளைப் போல் மறைக்கப்பட்டு மகத்தான குன்றுகளின் நடுவே புதர்களால் மூடப்பட்டிருந்ததுமான ஸோம நிதியைக் கண்டான். வச்சிரன் ஸோமத்தைப் பருக விரும்பி, மறைத்து வைக்கப்பட்டிருந்த பசுக்களின் இடத்தைக் கண்ட அங்கிரஸர்களின் முதல்வன் போல் அதை அறிந்தான். உணவைத் தோற்றுவிப்பவையும், மேகங்களில் மூடப்பட்டிருந்த உணவைக் கற்பிப்பவையுமான சலங்களின் கதவுகளைத் திறந்தான். புவியில் உணவைப் பரத்தினான்.

4. இந்திரன் தன் இரு கைகளாலும் தன் வச்சிரத்தை இறுகப் பிடித்து, தன் பகைவர்களின் மீது செலுத்த வெட்டும் வாளைப்போல் நீட்டினான். அகியைக் கொல்லக் கூர்ப்பித்தான். இந்திரனே! பலத்தோடும், படைகளோடும், வலிமையோடும் சேர்ந்துள்ள நீ, எங்களுடைய பகைவர்களைக் காட்டின் மரங்களைச் சாய்க்கும் மர வெட்டி போல் வெட்டுகிறாய்; கோடரி போல் அவர்களைத் துண்டப் படுத்துகிறாய்.

5. இந்திரனே! நீ நதிகளைக் கடலுக்குப் பாய தேர்களைப் போலும் போருக்குச் செல்ல விரும்புபவர்களுக்கு தேர்களைக் கற்பிப்பவர்களைப் போலும் அநாயஸமாய்ச் செய்தாய். மநுவுக்கு எல்லாப் பொருள்களையும் பொழியும் பசுக்களைப் போல், நதிகள் பொதுவான நோக்கத்துக்கு இங்கு பாய்ந்து, சலங்களை ஒருமைப் படுத்துகின்றன. 1,460



6. செல்வத்தை விரும்பும் மனிதர்கள், இந்த ஸ்தோமத்தைப் பயணத்துக்குத் தேரைச் சித்தப்படுத்தும் தீரமும், தீரச் செயலுமுள்ள மனிதனைப் போல் கூறினார்கள். அவர்கள் சுகத்துக்காக உன்னை இன்பப்படுத்தினார்கள். அறிஞனான இந்திரனே! அவர்கள் போர்களில் மிக்க வேகமாயுள்ள உன்னைப் புகழ்ந்து ஜயிப்பவர்களைப் போற்றும் மனிதர்களைப் போல் போற்றினார்கள்.

7. இந்திரனே! போரிலே நடிப்பவனான நீ, அவிகளை அளிக்கும் புருவுக்காகவும், மகத்தான திவோ தாஸனுக்காகவும், தொண்ணூறு நகரங்களை அழித்தாய்; நடிப்பவனான நீ, உன் வச்சிரத்தால் அவர்களை பகைவர்களை அவியளிப்பவனுக்காக ஒழித்தாய். உக்கிரனான இந்திரன், அதிதிக்வனுக்காக சம்பரனை மலையிலிருந்து தன் பலத்தால் கீழே தள்ளினான். மகத்தான செல்வங்களை திவோதாஸனுக்களித்தான். தன் பலத்தால் பற்றிய எல்லாச் செல்வங்களையுமளித்தான்.

8. போர்களிலே நூறு பாலனங்களுள்ள இந்திரன், எல்லாப் போர்களிலும் யஜிக்கும் ஆரியனை சுவர்க்கத்தையளிக்கும் போர்களிலே, பாலிக்கிறான்; அவன் விரதமற்றவர்களை மானிடனின் நலத்துக்காகத் தண்டித்தான். அவன் துன்புறுத்துபவனின் கருப்பான சமருத்தைக் கிழித்தான். அசுரனான கிருஷ்ணனின் கருப்பான சருமத்தை உரித்தான். சுடர் போல் எரியும் அவன் பேராசையுள்ள ஒவ்வொருவனையும் பற்பப்படுத்துகிறான். துன்பமளிப்பதில் இன்புறுபவனை மிக்கப் பற்பப் படுத்துகிறான்.

9. சூரியனின் தேர்ச்சக்கரத்தை இந்திரன் பற்றியவுடன், அவனுடைய தேகத்திலே வலிமை வலுவடைந்தது. இந்திரன் பரிதியின் சக்கரத்தைச் செலுத்தினான். அவன் அருண வடிவத்தை ஏந்தினான். பகைவர்களிடம் செல்லுங்கால் அவர்களுடைய மொழியைப் பறித்தான்–உயிரை நீக்கினான். பிறகு தலைவனான அவன், அவர்களுடைய உயிரை மாய்த்தான். இந்திரனான சூரியன் உதயமாகி, தன் பலத்தால் சக்கரமான–கிரணத்தை–

செலுத்தினான். பிறகு அருணனாகும் அவன், அவர்களுடைய மொழியைத் திருடினான்—அபகரித்தான். தலைவனான அவன் தமங்களிடமிருந்து உயிரைத் தளர்த்தினான். அறிஞனான நீ, உசானனைப் பாலிக்கத் தூரத்திலிருந்து வந்தாய். நீ, எங்களுக்கு எல்லா நல்ல பொருள்களையும் ஏந்திக் கொண்டு அங்ஙனம் துரிதமாய் வரவும். மற்றவர்களைச் செவியுறுவதுபோல் எங்களைச் செவியுற, தினந்தோறும் துரிதமாய் எங்களிடம் வரவும்.

10. நலங்களைப் பொழிபவனும், புரங்களைப் புடைப்பவனுமான நீ, எங்களுடைய புதிய பாக்களால் இன்பமாகி, பாலன சுகங்களோடு எங்களைப் பாலிக்கவும். இந்திரனே! திவோதாஸனின் சந்ததிகளால் போற்றப்படும் நீ, தினங்களில் சூரியனைப் போல் செழிக்கவும். 1,465

## 131. இந்திரன்

### 131. பருச்சேபன் திவோதாஸனின் புதல்வன்

1. பரந்த—தீயோர்களை விலக்கும்-சுவர்க்கம் இந்திரனுக்கு வணக்கமளித்தது; மகத்தான பூமியும், விரும்பத் தகுந்த பாக்களோடு இந்திரனுக்கு வணக்கமளித்தது; விரும்பத் தகுந்த பாக்களோடு சுவர்க்கத்துக்காக வழிபடுபவர்கள் இந்திரனை வணங்கினார்கள். எல்லாத் தேவர்களும் ஒருமையுடனாகி இந்திரனை முதல்வனாக ஸ்தாபித்தார்கள். மானிடர்களுடைய எல்லா யக்ஞங்களும், மானிடர்களுடைய தானங்களும்-அவிகளும் இந்திரனுக்கே அளிக்கப்படுக.

2. எல்லா யக்ஞங்களிலும் விர மனத்தோடு மனிதர்கள் அனைவருக்கும் ஒரு ரூபனான தனியனும் உன்னிடமே ஒவ்வொருவனும் தனித்தனியாய் ஒளியை நாடி, ஒவ்வொருவனும் தனித்தனியாய் ஒளியைப் பெற விரும்பி துரிதமாகிறார்கள். கப்பலைப் போல் கடத்தும் உன்னைப் பலத்தின் தேர் நுகத்தில் நாங்கள் ஸ்தாபிக்கிறோம். நதிக் கப்பால் சனங்களை ஏந்திச் செல்லும் படகைப் போல் எங்களுடைய பலத்தைத் தாங்கும் உன்னைத் தியானஞ்



செய்கிறோம். சனங்கள் யக்ஞங்களால் இந்திரனை அறிகிறார்கள். மனிதர்கள் ஸ்தோமங்களால் இந்திரனைப் போற்றுகிறார்கள்.

3. தம்பதிகள் உனக்குத் திருப்தியைச் செய்ய விரும்பி, ஒருமித்து அவிகளை யளித்து, பசு மந்தையைப் பெற உனக்கு யக்ஞத்தை நடத்துகிறார்கள். இந்திரனே! உனக்கு அவிகளை யளிக்கிறார்கள். இந்த இருவர்களும் பசுச் செல்வத்தையும், சுவர்க்கத்தையும் விரும்புகிறார்கள் என நீ நன்கறிகிறாய். இந்திரனே! பொழிபவனான நீ, உன்னுடைய நித்திய துணையான—எப்பொழுதும் உன்னோடு இணைந்திருப்பதான வச்சிராயுதத்தை விளக்குபவனாய் விளங்குகிறாய்.

4. இந்திரனே! மனிதர்கள் உன் மகிமையை அறிகிறார்கள். அசுரர்களின் நித்தியமான நகரங்களை நீ அழிக்கிறாய். பகைவர்களைத் தாழ்த்தி அவற்றை அழிக்கிறாய். பலத்தின் தலைவனே! நீ யஜிக்காத மனிதனைத் தண்டிக்கிறாய். நீ இந்த பரந்த பூமியையும் இந்த சலங்களையும் விடுவிக்கிறாய். நீ இன்பத்தோடு இந்த சலங்களையும் மீட்கிறாய்.

5. பொழிபவனே! உன்னுடைய மதத்திலே உன்னை நாடுபவர்களை நீ பாலிக்க உன் பலத்தைப் பலப்படுத்த வழிபடுபவர்கள் உனக்கு ஸோமங்களை அளிக்கிறார்கள் உன்னுடைய நட்பை விரும்புவர்களைப் பாலிக்க அவிகளை அளிக்கிறார்கள். அவர்களைப் போர்களிலே வணக்கப்படுத்த நீ சிங்கநாதத்தைச் செய்கிறாய். அவர்கள் உன்னிடமிருந்து பற்பல போகங்களைப் பெறுகிறார்கள். உணவை விரும்பும் அவர்கள் அதை உன்னிடமிருந்து பெறுகிறார்கள். 1,470

6. எங்களுடைய இந்த யக்ஞத்துக்கு இந்திரன் வருவானாக. இந்திரனே! நியமங்களோடு அளிக்கப்படும் அவியை யறிந்து கொள்ளவும். ஒளியுலகைப் பெறுவதற்காக நியமங்களோடு அளிக்கப்படும் ஆவியைத்

தெரிந்து கொள்ளவும். வச்சிரனே! பொழிபவனே! துன்புறுத்தும் பகைவனை எங்ஙனம் அழிக்க வேண்டுமென்பதை நீ அறிகிறாய். ஆதலால் நான் புதியவனானாலும், அறிஞனாயிருக்கும் என்னுடைய விரும்பத் தகுந்த துதியைச் செவியுறவும். புதியவனான என்னிடம் அதைக் கேட்கவும்.

7. இந்திரனே! பல பெருமைகளோடுள்ள நீ, எங்களுடைய பாக்களால் போற்றப்பட்டு எங்களை விரும்புகிறாய். எங்களிடம் நட்பற்றிருக்கும் மனிதனைக் கொல்லவும். சூரனே! உன்னுடைய வச்சிராயுதத்தால் அவனைச் சாய்க்கவும். எங்களைத் துன்புறுத்த விரும்புபவனைத் துடைக்கவும். மிக்கச் செவிச் செல்வமுள்ளவனே! எங்களைச் செவியுறவும். வழியிலே தோன்றும் துர்மதியைப் போல் துன்பம் தூரத்திலாகுக. ஒவ்வொரு துர்மதியும் தூரமாகுக. 1,472

## 132. இந்திரன்

### 132. பருச்சேபன்—திவோதாஸனின் புதல்வன்

1. இந்திரனே! மகவானே! பழைய போரிலே உன்னால் பாலனமான நாங்கள் எங்களோடு போராடும் படைகளை ஜயிப்போமாக. நாங்கள் எதிர்ப்பவர்களை முந்துவோமாக. இன்று யக்ஞம் அருகிலிருப்பதால் நீ அவியளிப்பவனை ஊக்கப்படுத்தி அவனிடம் பேசவும். இந்த யக்ஞத்திலே, எங்களுடைய பலத்தை, போர் செல்வத்தைப் புலப்படுத்தி, போரில் பறித்த செல்வத்தை நாங்கள் பங்கிடுவோமாக.

2. இந்திரன், சோதியைத் தரும் போரிலே, கர்த்தனான—சூரனின் தகுந்த நேரான வழியை யனுசரித்து, தனக்குரிய தகுந்த நேரான வழியிலே சென்று, காலையிலே எழுந்து யக்ஞஞ் செய்பவனுடைய பகைவனை யழிக்கிறான். அவன் பேரறிஞன் போல் அனைவராலும் தலையால் வணங்கப்பட்டு, போற்றத் தகுந்தவன்:



இந்திரனே! உன்னுடைய செல்வங்கள் எங்களுக்குக் குவிக்கப்படுக. நீ மங்களன். உன்னுடைய தானங்கள் மங்களத்தைத் தருக.

3. இந்திரனே! உனக்கு வேதியின் மீது அறிஞர்களால் அளிக்கப்பட்ட பிரகாசமான அவியுள்ள யக்ஞத்திலே பூர்வத்திலே அத்தகைய யக்ஞத்தில் நிலைத்தது போல் நீ நிலைக்கும் யக்ஞத்தில்—மானிடர்கள் அங்கிருந்து சூரியனுடைய கதிர்களோடு பிரகாசமான வரனைக் காண நீ இயங்கும் அந்த யக்ஞத்தை அறிவிப்பாயாக. பந்துக்களான வழிபடுபவர்களின் நன்மைக்காக மழையைத் தேடும் இந்திரன் பசுக்களைத் தேடுபவனாகிறான். கிரமத்தோடு கர்த்தனாகி மழை தோன்றும் வழியை யறிகிறான்.

4. இந்திரனே! பூர்வத்தில் போல் இப்பொழுதும் உன்னுடைய வீரச் செயல்கள் போற்றத் தக்கவை. நீ எப்பொழுது அங்கிரஸர்களுக்காக மேகத்தைத் திறந்தாய்? பசுக்களை எப்பொழுது மீட்டாய்? நீ பூர்வத்திலே அவர்களுக்குச் செய்தாய். அங்ஙனமே இப்பொழுது எங்களுக்காகப் போர் புரியவும்; ஜயிக்கவும்; விரதமற்றவனை யஜிப்பவர்களுக்கு வசப்படுத்தவும்; எங்களிடம் கோபிப்பவனையும், விரதமற்றவனையும் எங்களுக்கு வசப்படுத்தவும்.

5. சூரன் சனங்களை அவரவர்களுடைய செயல்களால் அறிந்து, அவர்களைத் தக்கவாறு பயன்களுக்குச் செலுத்துகிறான். அதனால் உணவை விரும்பும் அறிஞர்கள் அவனை யஜித்து, அடைந்த செல்வத்தால் பகைவர்களைக் கொல்லும் ஆற்றலைப் பெறுகிறார்கள். அவனுக்களிக்கப்படும் அவி, வழிபடுபவனுக்குப் பிரஜையைத் தருகிறது. சனங்கள், தங்கள் பலத்தால் பகைவர்களை ஜயிக்க இந்திரனைப் போற்றுகிறார்கள். செயலாளர் இந்திரனிடம் இடத்தைச் செய்துகொள்கிறார்கள். செயலாளர்கள் தேவர்களின் முன்னே செல்லுகிறார்கள். 1,477

6. இந்திராபர்வதர்களே! போர்களில் முதல்வர்களாகயிருக்கும் நீங்கள், எங்களை எதிர்க்க விரும்பும் ஒவ்வொருவனையும் வச்சிரத்தால் கொல்லுங்கள். உங்களாயுதம் பகைவர் அருகிலோ அல்லது தூரத்திலோ, எந்த இடத்திலோ ஓடினாலும், அவனைக் கொல்ல விரும்பி அவனிடஞ் செல்லுகிறது. சூரனே! நீ எங்கள் பகைவர்களைக் கண்டம் கண்டமாகக் கிழிக்கிறாய். பகைவர்களைப் பிளக்கும் வச்சிரம் அவர்களைத் துண்டமாகப் பிளக்கிறது. 1,478

## 133. இந்திரன்

### 133. பருச்சேபன் திவோதாஸனின் மகன்

1. நான் ருதத்தால் சோதியையும் புவியையும் சுத்தப்படுத்துகிறேன். நான் இந்திரனைப் போற்றுத பெரிய அரக்கிகளைத் தகிக்கிறேன். சென்ற இடங்களில் எல்லாம் அவர்கள் கொல்லப்பட்டார்கள். அடியோடழிக்கப்பட்டு அவர்கள் ஆழ்ந்த பள்ளத்தில் சயனிக்கிறார்கள்.

2. பகைவர்களைப் புசிப்பவனே! நீ யாதுமதிப் படைகளின் தலைகளை மிதித்து, உன்னுடைய அகன்ற பரவலான காலால், மிக்க அகன்ற பரவலான காலால் அவர்களை நசுக்கவும்.

3. மகவானே! யாதுமதிப் படைகளின் படைப்பலத்தை யொழிக்கவும். அவர்களைப் பாழான மயானத்திலே செலுத்தவும். பாழான பரந்த மயானத்திலே செலுத்தவும்.

4. நீ மூன்று ஐம்பதான பகைவர்களின் படைகளை எதிர்ப்புக்களால் தாக்கி அழித்தாய்; அறிஞர்கள் இதை புகழுக்குரிய செயல் எனக் கருதினார்கள். ஆனால் இது உனக்குச் சாமான்யச் செயலாயிருந்தது.

5 இந்திரனே! இரத்த வர்ணமுள்ளவளும், பயங்கரமாய்க் கர்ச்சிப்பவளுமான பிசாசியை யழிக்கவும். எல்லா அரக்கர்களையும் ஒழிக்கவும். 1,483



6. இந்திரனே! மகத்தான மேகத்தை அதோமுகப்படுத்தவும். எங்களைச் செவியுறவும். மேகம் ஏந்துபவனே! பஞ்சத்தின் பயத்தால், புவியைப் போல் சோதியும் துக்கத்திலிருந்தது-பூர்வத்திலே அக்கினியான துவஷ்டாவின் பயத்தினால் போல். வச்சிரமேந்துபவனே! திட்பங்களால் மிக்கத் திட்பனான நீ, உன் உக்கிர தாடனங்களால் மேகங்களை அடிக்கிறாய். ஜயிக்கப்படாத சூரனே! நீ மனிதர்களைக் கொல்லாமல், வீரர்களோடு, முப்பத்தேழு வீரர்களோடு செல்லுகிறாய்.

7. பொழிபவன் இடத்தைப் பெறுகிறான். பொழிபவன் தாழ்ந்த சத்துருக்களைச் சாந்தப்படுத்துகிறான். தேவர்களின் பகைவர்களை அழிக்கிறான். உணவில் செழித்து, பகைவர்களால் தாழ்த்தப்படாமல், பொழிபவன் ஆயிரக்கணக்கான செல்வங்களை அடைய விரும்புகிறான். பொழிபவனுக்கு விரும்பும் எதையும் இந்திரனளிக்கிறான். அவனுக்கு நித்தியமான செல்வத்தைத் தருகிறான். 1,485

## 134. வாயு

### 134. பருச்சேபன்-திவோதாஸனின் புதல்வன்

1. வாயுவே! உன்னுடைய துரித குதிரைகள், நீ முதலில் ஸோமத்தைப் பருக உன்னை இங்கு துரிதமாய் ஏந்தி வருக. தேவர்களுக்கு முன்னால் ஸோமத்தைப் பருக ஏந்தி வருக. எங்களுடைய மேலான உன்னை நன்கறிகிற இனிய மொழி உன் மனத்தில் நிலைத்து அதை இன்புறுத்துக. நீ உன் குதிரை இணைக்கப்பட்ட தேரிலே உனக்களிக்கப்படும் ஸோமத்துக்கு வரவும். வாயுவே! நாங்கள் விரும்புவதையளிக்க நெருங்கவும்.

2. வாயுவே! இன்புறுத்துபவையும், பயனளிப்பவையும், நன்கு பக்குவப்பட்டவையும், சோதிகளுக்குச் செலுத்தப்படுபவையும், தீவிரமாயிருப்பவையும், பாலோடு கலந்தவையும், சோதிகளை நாடுபவையுமான ஸோம பிந்துக்கள் உன்னை இன்புறுத்துக. அடங்கியும்,

துரிதமாயுமுள்ள நியுத குதிரைகள், நீ ஸோமத்தைப் பெற்றுக் கொள்ள உன்னை யக்ஞ ஸ்தானத்துக்கு, தங்கள் விருப்பங்களை அறிவித்துக் கொள்ளும் அறிஞர்களுடைய யக்ஞத்துக்கு ஏந்தி வருக.

3. வாயு தன் தேருக்கு இரு சிகப்புக் குதிரைகளை இணைக்கிறான். வாயு தன் பொன்நிறப் புரவிகளைப் பூட்டுகிறான். வாயு களைப்படையாமலிருக்கும் இரு குதிரைகளைச் சுமையை இழுத்துச் செல்லத் தன் தேரில் இணைக்கிறான். அவை சுமையைத் தாங்கி இழுக்க மிக்க ஆற்றலுள்ளவை. வாயுவே! உன் பேரறிஞனை, உறங்குபவனை எழுப்பும் காதலனைப் போல் எழுப்பவும்; சோதியையும் புவியையும் ஒளிப்படுத்தவும்; உஷைகளை ஒளிப்படுத்தவும்; புகழுக்காக உஷைகளை ஒளிப்படுத்தவும்.

4. காந்திகளுள்ள உஷைகள் தூரத்திலிருந்தே உதயமாகி, தங்கள் வசப்படுத்தும் கதிர்கள் வீசும் மங்களகரமான ஆடையை, போற்றத் தகுந்தவையும் பல வித நிறமுள்ளவையுமான இரசிமிகளுள்ள எழிலைப் பரத்துகிறார்கள். அமுதத்தையளிக்கும் பசு உனக்கு எல்லா வித செல்வத்தையுங்கறக்கிறது. நதிகளை நிரப்ப, மழையைப் பொழிய, நீ வானிலே மருத்துக்களைத் தோற்றுவிக்கிறாய்.

5. ஒளியுள்ளவையும், சுத்தமாயிருப்பவையும், உன்னையடைய துரிதமாயிருப்பவையும், உன் மதத்துக்கு உக்கிரமுள்ளவையுமான அவியின் அனலுக்கு ஆர்வமாகின்றன. சலம் பொழியும் மேகத்துக்கு ஊக்கமாகின்றன. வழிபடுபவன், பயந்து, களைப்படைந்து, திருடர்களை விலக்க மங்களகரமான உன்னைப் போற்றுகிறான். எல்லா உலகங்களின் பயத்திலிருந்து எங்களைத் தருமத்தால் பாலிக்கிறாய். அசுரர்களுடைய பயத்திலிருந்தும் எங்களைத் தருமத்தால் பாலிக்கிறாய். 1,490

6. வாயுவே! உன்னை முந்துபவன் எவனுமில்லை. ஆதலால், எங்களுடைய இந்த ஸோமங்களை முதலில்



பருக நீயே அருகன். பொழியப்பட்ட ஸோமங்களைப் பருக நீயே அருகனாகிறாய்; பாபங்களை விலக்கும் பிரசைகளின் அவிகளை நீ ஏற்றுக்கொள்கிறாய். அவர்களுடைய பசுக்கள் உனக்குப் பாலைத் தருகின்றன; நெய்யைத் தருகின்றன. 1,491

## 135. வாயு

### 135. பருச்சேபன்—திவோதாஸனின் புதல்வன்

1. வாயுவே! தருப்பைப் பரத்தப்பட்டிருக்கிறது. விருந்தைப் புசிக்க உன்னுடைய ஆயிரங் குதிரைகளோடு வா. நூறு குதிரைகளோடு அணுகவும்; நியுத குதிரைகள்ளவனுக்குத் தயாராயிருக்கிறது. நீயே பூர்வ பானத்துக்கருகனான தேவன் எனத் தேவர்கள் வைத்திருக்கிறார்கள். பொழியப்பட்ட இனிய ரஸங்கள் உன் மதத்துக்கு—யக்ஞப் பூர்த்திக்காக இருக்கின்றன.

2. உனக்காக, கற்களால் சுத்தப்பட்டதும், விரும்பத் தகுந்த காந்தியை யணிந்ததுமான இந்த ஸோமரஸம், கோசத்துக்குப் பாய்கிறது. சுத்த சோதியை அணிந்துள்ள இந்த ஸோமரஸம் உன்னுடைய பாகமாக, தேவர்களின், மனிதர்களின் நடுவே உனக்களிக்கப் படுகிறது. அதைப் பெற்றவுடன் உன் குதிரைகளை இணைக்கவும். எங்களிடமிருந்து அன்போடு புறப்பட்டுச் செல்லவும். திருப்தியாகி எங்களிடமிருந்து அன்போடு புறப்பட்டுச் செல்லவும்.

3. நீ, உன் நூறும் ஆயிரமுமான நியுதங்களில் ஏறி, எங்கள் யக்ஞத்துக்கு—யாக—உணவைப் புசிக்க வா. வாயுவே! அவிகளை அருந்த வா. இது உன்னுடைய பாகம். உரிய காலம் வந்து விட்டது. இது சூரியனோடு சேர்ந்து பிரகாசிக்கிறது. ஸோமரஸங்கள் ரித்விஜர்களால் ஏந்தப்பட்டு தயாராயிருக்கின்றன. வாயுவே! சுத்த ரஸங்கள் தயாராயிருக்கின்றன.

#### இந்திரனும் வாயுவும்

4. நியுதங்களால் இழுக்கப்படும் தேர்—இந்திரனும் வாயுவுமான உங்களை, எங்களைப் பாலிக்கவும், நாங்கள்

சேர்ந்து அளிப்பவையுமான அவிகளைப் புசிக்கவும் ஏந்தி வருக. வாயுவே! இந்திரனே! அவிகளைப் புசியுங்கள். ஸோம ரஸத்தைப் பருகுங்கள். இந்த முதற் பானம் உங்கள் இருவர்களுக்கும் உரியது. வாயுவே! இந்திரனே! இன்பமளிக்கும் செல்வத்தோடு வாருங்கள். இந்திரனே! வாயுவே! செல்வத்தோடு வாருங்கள்.

5. உங்களுக்காக நடத்தப்படும் செயல்கள் எங்கள் யக்ஞங்களை ஊக்கப்படுத்துகின்றன. அறிஞர்கள் உங்களுக்காகத் துரிதமாய்ச் சொட்டும் இந்த ஸோம ரஸத்தை, துரிதமாய் ஓடும் வலிய குதிரையைப் போல் சுத்தப்படுத்துகிறார்கள். அவர்களால் அளிக்கப்படும் ஸோமரஸங்களைப் பருகுங்கள். இங்கு வாருங்கள். எங்களைப் பாலிக்க விரும்புங்கள் கற்களால் பிழியப்பட்ட ஸோம ரஸங்களை நீங்கள் இருவரும் மதத்துக்காகப் பருகுங்கள். ஏனெனில் மதமாகி எங்களுக்கு உணவை யளிக்கிறீர்கள். 1,496

6. உங்களுக்காக இந்த ஸோம ரஸங்கள் சலங்களில் பிழியப்பட்டு, பற்றப்பட்ட அத்வர்யுக்களால் ஏந்தப்பட்டு அளிக்கப்படுகின்றன. வாயுவே! இந்திரனே! பிரகாசமாயுள்ள ஸோமரஸங்கள் உங்களுக்காகத் துலங்குகின்றன. பரவும் ஸோமரஸங்கள் உங்கள் இருவருக்கும் வக்கரப்பவித்திரத்தின் வழியாய்ப் பாய்ந்தன. உங்களை விரும்பும் ஸோமரஸங்கள் கம்பளச் சல்லரி வழியாய்ச் செல்லுகின்றன. களைப்படையாத ரஸங்கள் ஓடுகின்றன.

7. வாயுவே! உறங்கிக்கொண்டிருக்கும் பலரைக் கடந்து சென்று, நீ இந்திரனோடு சேர்ந்து கல்லொலி கேட்கும் மனைக்குப் போகவும். இந்திர வாயுக்களே! அந்த மனைக்குச் செல்லுங்கள். சத்திய மொழி கூறும் இடத்துக்குச் செல்லுங்கள். நெய் பெருகும் இடத்துக்குச் செல்லுங்கள். புஷ்டாங்கங்களுள்ள குதிரைகளோடு யக்ஞத்துக்குச் செல்லுங்கள். இந்திரனே! வாயுவே! நீங்கள் யக்ஞத்துக்கு விரையுங்கள்.



8. மலையில் தோன்றிய ஸோம ஓஷதியைச் சுற்றி நிற்கும் வெற்றியுள்ள அறிஞர்களின் யக்ஞத்திலே இனிய ரஸத்தின் ஆஹுதிகளைப் பெற்றுக் கொள்ளுங்கள். அவர்கள் எப்பொழுதும் எங்களுக்கு ஜயமுள்ளவர்களாயிருப்பார்களாக. உங்கள் இருவருக்கும் பசுக்கள் பாலைத் தருகின்றன. யவம் பக்குவமாகிறது. வாயு, இந்திரர்களே! உங்களுக்காகப் பசுக்கள் தேயாமலிருக்கின்றன; பசுக்கள் திருடர்களால் திருடப்படாமல் இருக்கின்றன; நட்டமாகாமல் நிலைக்கின்றன.

### வாயு

9. வாயுவே! வலிய அங்கமுள்ளவையும், பொழிபவையும், பெரியவையும், வளர்ந்தவையுமான இக் குதிரைகள் உன்னை சோதி புவிகளின் நடுவே ஏந்திச் செல்லுகின்றன. காளைகளான அவை வானிலே நட்டமாகாமலிருக்கின்றன. வேகத்தில் குறையாமலும், நிந்தையால் தடைபடாமலும் பரவுகின்றன. சூரியனுடைய காந்திகளைப் போல் தடுக்கக் கடினமானவை. கைகளால் பிடிபடக் கடினமானவை. 1,500

## 136. மித்திரா வருணர்கள்

### 136. பருச்சேபன் - திவோதாஸனின் புதல்வன்

1. நித்தியர்களும், சுகப்படுத்துபவர்களும், மிக்க இனிய ஸோமங்களில் இன்புறுபவர்களுமான மித்திரா வருணர்களுக்கு மேன்மையான மேலான வணக்கத்தையும், அவி தரும் மனத்தையும் அளியுங்கள். சக்கரவர்த்திகளான அவர்கள் நெய்யால் போற்றப்படுகிறார்கள். ஒவ்வொரு யக்ஞத்திலும் ஏத்தப்படுகிறார்கள். அவர்களுடைய க்ஷத்திரத்தை எவனும் எதிர்க்க இயலாது. அவர்களுடைய தேவத் தன்மையை எவனும் தாங்க இயலாது.

2. முன்னேறும் மேன்மையான உஷை, பரந்த யக்ஞத்துக்குத் தோன்றுகிறாள். சூரியனுடைய வழி கதிர்

களோடு பிரகாசமாகிறது. பகனுடைய ரசிமிகளால் கண்கள் திறக்கப்படுகின்றன-காணும் சக்தியைப் பெறுகின்றன. மித்திரனுடைய, வருணனுடைய, அர்யமானுடைய பிரகாசமான ஸதனம்-வானம்-அவனுடைய ரசிமிகளால் ஒளியுடனாகிறது. அங்கிருந்து அவர்கள் போற்றத்தகுந்த மகத்தான பலத்தையும் புகழத்தக்க மேலான ஆயுளையுந் தருகிறார்கள்.

3. சோதியுள்ளவனும், சுவர்க்கத் தன்மையிருப்பவனும், சனங்களைத் தாங்குபவனுமான அதிதியோடு, தினந்தோறும் விழித்திருப்பவர்களான நீங்கள் ஒவ்வொரு தினத்திலும் சேர்ந்து வாருங்கள். ஈகையைப் பாலிப்பவர்களும், அதிதியின் புதல்வர்களுமான நீங்கள், தினந்தோறும் யக்ஞங்களில் சேர்ந்து வந்து, ஒளிச் சிறப்புள்ள க்ஷத்திரத்தை அடையுங்கள். உங்கள் இருவரிலே மித்திரன் மனிதர்களை ஊக்கப்படுத்துகிறான். அங்ஙனமே வருணனும் செய்கிறான். அங்ஙனமே அர்யமானும் மானிடர்களை ஊக்கப்படுத்துகிறான்.

4. இந்த ஸோமம் மித்திரனுக்கும் வருணனுக்கும் மிக்க இனிமையுடனாகுக. அதோமுகத்துடன் பருகப்படும் அது அவர்களால் சுவைக்கத் தக்கது. தேவபானம் தேவர்களால் சுவைப்பதற்குரியது. எல்லாத் தேவர்களும் மிக்க மகிழ்ந்து அதைப் பற்றுவார்களாக. அரசர்களே! எங்களால் விரும்பப் படுவதைச் செய்யுங்கள். எப்பொழுதும் சத்தியமாயிருக்கும் நீங்கள், எங்களால் விரும்பப் படுவதைச் செய்யுங்கள்.

5. மித்திரனையும் வருணனையும் போற்றும் ஒருவனை நீங்கள் பாபத்திலிருந்து துன்பமாகாமல் பாலியுங்கள். உங்களுக்கு அவிகளளிக்கும் மனிதனைப் பாவத்திலிருந்து பாலியுங்கள். அர்யமான், விரதத்தைப் பின்பற்றி நேர்மையாகச் செல்பவனும், பாக்களால் மித்திரா வருணர்களுடைய விரதத்தைப் பற்றுபவனும், ஸ்தோமங்களால் அவர்களுடைய விரதத்தைப் பாங்கு செய்பவனுமான மனிதனைப் பாலிக்கிறான். 1,506



6. நான் மகத்தான சூரியனுக்கும், சோதிக்கும், புவிக்கும், மித்திரனுக்கும், சுகப்படுத்தும் வருணனுக்கும், இன்பமளிப்பவனுக்கும், நலங்களைப் பொழிபவனுக்கும் வணக்கத்தைக் கூறுகிறேன். நாங்கள் பிரஜையோடு சேர்ந்து வெகுகாலம் வாழ, நீ இந்திரனையும் அக்கினியையும், பிரகாசமாயுள்ள அர்யமானையும், பகனையும் போற்றுவாயாக. நாங்கள் ஸோமனுடைய பாலனத்தோடு பொருந்துவோமாக.

7. தேவர்களின் பாலனத்தோடு, அருகிலிருக்கும் இந்திரனோடுள்ள நாங்கள், மருத்துக்களோடு சேர்ந்து சுய சிறப்புள்ளவர்களாவோமாக. அக்கினியும், மித்திரனும், வருணனும் எங்களுக்கு சுகத்தையளிப்பார்களாக. நாங்களும், செல்வர்களும் இந்த சுகத்தை அடைவோமாக. 1,507

## 137. மித்திரா வருணர்கள்

### 137. பருச்சேபன்–திவோதாஸனின் புதல்வன்

1. நாங்கள் கற்களால் ஸோம ரஸத்தைப் பிழிந்திருக்கிறோம். மித்திரா வருணர்களே! எங்கள் யக்ஞத்துக்கு வாருங்கள். திருப்தியை யளிக்கும் இந்த ஸோம ரஸங்கள் பாலோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்த ஸோம ரஸங்கள் மதமளிப்பவை. அரசர்களும், சோதியில் வசிப்பவர்களும், பாலகர்களுமான நீங்கள் எங்களிடம் வாருங்கள். மித்திரா வருணர்களே! உங்களுக்காக இந்த ஸோமரஸங்கள் பாலோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவை சுத்தமானவை. பாலோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன.

2. இதோ மதப்படுத்தும் பிந்துக்களான ஸோம ரஸங்கள் அருகில் வாருங்கள். ஸோம பிந்துக்கள் தயிரோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன. ரஸங்கள் பிழியப்பட்டு, தயிரோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன. உஷையின் உதயத்திலோ அல்லது சூரிய ரசிமிகளோடு சேர்ந்தோ அவை உங்களுக்காகப் பிழியப்பட்டவை. மித்திரா வரு

ணர்களுடைய பாங்கான பானத்துக்கும், யக்ஞத்திலே பருகவும் ரஸம் பிழியப்பட்டிருக்கிறது.

3. அவர்கள் உங்கள் இருவருக்காக மிருந்த ரஸமுள்ள ஸோமக் கொடியை மிக்கப் பாலையளிக்கும் பசுவைப் போல் கறக்கிறார்கள். அவர்கள் கற்களால் ஸோமவதையைக் கறக்கிறார்கள். எங்களிடம் பாலகர்களாக வாருங்கள். ஸோமரஸத்தைப் பருக எங்களுடனிருங்கள். மித்திரா வருணர்களே! உங்கள் இருவர்களுக்காக இந்த ஸோமரஸம் பிழியப்பட்டிருக்கிறது. உங்கள் பானத்துக்குப் பிழியப்பட்டிருக்கிறது. 1,510

## 138. பூஷா

### 138. பருச்சேபன்–திவோதாஸனின் புதல்வன்

1. பலரால் போற்றப்படும் பூஷாவின் பலத்தின் மகிமை அனைவராலும் போற்றப்படுகிறது. அவனைத் துதிப்பதிலிருந்து எவனும் தளரான். அவனுடைய தோத்திரம் எவனையும் தளர்த்தாது. அவனுடைய பாலனம் அருகிலிருக்கிறது. அவன் சுகத்தைத் தருபவன். ஏத்தப்பட்டால் எல்லா வழிபடுபவர்களின் மனங்களைச் சேர்ப்பிப்பவன். யக்ஞத்தோடு இணைக்கப்படும் தேவன்;-நான் சுகத்தை விரும்பி அவனைப் போற்றுகிறேன்.

2. பூஷாவே! நீ யக்ஞத்துக்குத் துரிதமாகப் போருக்குச் செலுத்தப்படும், துரித குதிரையைப் போல் உன்னை ஸ்தோமங்களால் போற்றுகிறேன். நீ எங்களைப் போர்க்களத்திலிருந்து, ஒட்டகத்தைப் போல் கடத்திச் செல்ல உன்னை நான் ஏத்துகிறேன். ஆதலால் மனிதனை நான் சுகமளிக்கும் தேவனை உன்னை நட்புக்காக அழைக்கிறேன். எங்கள் பாக்களைப் பயனுறச் செய்து பெருமைப்படுத்தவும். போர்களில் ஜயத்தையளித்து, பாக்களைப் பெருமைப்படுத்தவும்.

3. பூஷாவே! உன் நட்பிலும், செயலிலும், தோத்திரத்திலும் ஊக்கமாயிருப்பவர்கள் உன் பாலனத்தால் எல்லா போகங்களையும் அனுபவிக்கிறார்கள். செயலால் போகங்களைப் பற்றுகிறார்கள். உன்னுடைய புதிய பாலனத்தைப் பெற்ற நாங்கள், உன்னிடம் அபரிமிதமான செல்வங்களை விரும்புகிறோம். மிக்கப் போற்றப்படுபவனும், கோபமில்லாதவனுமான நீ, எங்களிடம் வா, நீ ஒவ்வொரு போரிலும் எங்களிடம் வா.



4. ஆட்டில் ஏறுபவனே! கோபம் நீங்கியவனும், தானமளிப்பவனுமான நீ, எங்களுடைய இந்த அவியைப் பெற்றுக்கொள்ள எங்களருகிலாகவும். ஆட்டைக் குதிரையாகவுள்ளவனே! உணவை விரும்புபவர்களினருகிலாகவும். பகையளிப்பவனே! நாங்கள் உன்னை உத்தம ஸ்தோமங்களால் இங்கு வருவிக்கலாமோ? பூஷாவே! நான் அவிகளை ஏற்கும் உன்னை நினைக்காமலிருப்பதில்லை. நான் உன் நட்பை விடாமலிருக்கிறேன். 1,514

## 139. விசுவேதேவர்கள்

### 139. பருச்சேபன்–திவோதாஸனின் புதல்வன்

1. எங்கள் துதி செவியுறப்படுக. நான் முதலில் அக்கினியை மனதிலே போற்றுகிறேன். நாங்கள் அவனுடைய சுவர்க்கத்தன்மையுள்ள படையைப் புகழ்கிறோம். நாங்கள் இந்திரவாயுக்களை உயர்த்துகிறோம். புதிய தோத்திரம், புவியின் பிரகாசமான நாபிக்கு எங்களால் கூறப்படுகிறது. எங்களுடைய யக்ஞ செயல்கள் தேவர்களிடஞ் செல்க. எங்களுடைய உத்தமச் செயல்கள் தேவர்களின் முன்னே செல்க.

#### மித்திரா வருணர்கள்

2. மித்திரா வருணர்களே! உங்களுடைய வலிமையின் சொந்த சக்தியால், நீங்கள் சூரியனிடத்திலிருந்து அடையும் வற்றும் இயல்புள்ள சலத்தை, எங்களுக்கு அதிகமாயளியுங்கள். நாங்கள் எங்களுடைய யக்ஞ சதனங்களிலே இங்ஙனம் உங்கள் பொன் வடிவங்களை எங்கள் யக்ஞ செயல்களாலும், சிந்தனைகளாலும், இந்திரி

யங்களாலும், செயல்களாலும், சிந்தனைகளாலும், சொந்த இந்திரியங்களாலும் காண்போமாக.

### இரு அசுவினிகள்

3. அசுவினிகளே! உங்களைத் துதிகளால் புகழ விரும்பும் மனிதர்கள், தோத்திரங்கள் செவியில்பட முழங்குகிறார்கள். அவிகளால் போற்றுகிறார்கள். அவர்கள், எல்லாச் செல்வங்களுமுள்ள உங்களிடமிருந்து ஒவ்வொருவிதமான செல்வத்தையும் ஏராளமான உணவையும் பெறுகிறார்கள். தஸ்ரர்களே! உங்களுடைய பொன் தேரிலே எடுத்துச் செல்லப்படும் தேனை, உங்களுடைய தேன் நிறைந்த தேர்ச் சக்கரங்களின் நேமிகள் சொட்டுகின்றன.

4. தஸ்ரர்களே! உங்கள் மனம் அனைவராலும் அறியப்படுகிறது. நீங்கள் சுவர்க்கத்துக்குப் போவீர்கள். நீங்கள் சுவர்க்கத்துக்குப் பயணமாக, தேரோட்டிகள் உங்கள் குதிரைகளை இணைக்கிறார்கள். அக்குதிரைகள் சுவர்க்கத்துக்குச் செல்லும் தேரை, தேரிலிருப்பவர்களைத் துன்புறுத்தாதவை. தஸ்ரர்களே! நாங்கள் பகைவர்களை நடத்துபவர்களும், மழையை முக்கியமாகக் கிரமப்படுத்துவர்களுமான உங்களை, சுலப வழியால் சோதிக்குச் செல்லும் மூன்று கம்பங்களுள்ள-தண்டங்களுள்ள பொன் தேரிலே அமர்த்துகிறோம்.

5. செயல்களால் செயல் செல்வர்களான நீங்கள், இரவிலும் பகலிலும் எங்களுக்குச் செல்வங்களையளியுங்கள். எங்களுடைய தானங்களும், உங்களுடைய தானங்களும் எப்பொழுதும் தவறாமலாகுக. 1,519

### இந்திரன்

6. இந்திரனே! வர்ஷிப்பவனே! உன்னுடைய பானத்துக்காக மலை ஓஷதிகளிலிருந்து தோன்றி, கற்களால் பிழியப்பட்ட இந்த ஸோமரஸங்கள் இருக்கின்றன. இவை உனக்காகப் பீரிடுகின்றன. இவை உன் மனத்தை நீ எங்களுக்கு மகத்தாயும், அற்புதமாயுமுள்ள



செல்வத்தையளிக்க இன்புறுத்துக. துதிகளை ஏற்கும் நீ, பாக்களால் புகழப்பட்டு எங்களிடம் வா. சுகமளிப்பவனாய் எங்களிடம் வா.

### அக்கினி

7. அக்கினியே! எங்களைத் துரிதமாய்ச் செவியுறவும். நீ எங்களால் போற்றப்பட்டு எங்களுக்காக யக்ஞாருகர்களான தேவர்களிடமும், அரசர்களிடமும் பேசுவாயாக. தேவர்களே! ஞானவெளியில் நீங்கள் அங்கிரஸர்களுக்குப் பசுவைத் தந்தீர்கள். அவர்கள் அவனைக் கறந்தார்கள். அர்யமான் அவர்களோடு சேர்ந்து கறந்தான். அவன் அவனை அறிகிறான். நானும் அறிகிறேன்.

### மருத்துக்கள்

8. மருத்துக்களே! உங்களுடைய நித்யமான புகழ் பெற்ற ஆற்றல்கள் எங்களை ஜயிக்காமலாகுக. எங்களுடைய செல்வங்களும் குறையாமலாகுக. எங்கள் நகரங்களும் தேயாமலாகுக. உங்களுடைய புதியதான, அற்புதமான, மானிடர்களுக்குத் துர்லபமான, முழங்குவதுமான எந்தெந்தப் பொருளுண்டோ, அந்தந்தப் பொருள்கள் எல்லாம் எங்களுக்கு ஒவ்வொரு யுகத்திலும் தோன்றுக. அடைவதற்குக் கட்டமாயிருக்கும் எதையும் எங்களுக்களியுங்கள்.

### இந்திராக்கினிகள்

9. பழைய தத்தியங்கனும், அங்கிரஸனும், பிரியமேதனும், கண்வனும், அத்திரியும், மநுவும் என் பிறப்பை அறிகிறார்கள். பழையவர்களும், பூர்வமநுவும் என் பிதாக்களை அறிந்தார்கள். அவர்களுடைய நீண்ட வமிச வரிசைத் தேவர்களிடம் துவங்குகிறது. மகரிஷிகளின் நடுவே அவர்கள் தீர்க்காயுஸுடனிருந்தார்கள். என்னுடைய சீவனோடு அவர்களுக்கு ஸம்பந்தமுண்டு. அவர்கள் மகான்கள்; நான் துதியோடு அவர்களை-தேவர்களைத் துதிக்கிறேன். நான் துதியோடு இந்திராக்கினிகளை வணங்குகிறேன்.

### பிரகஸ்பதி

10 ஹோதா யஜிப்பானாக. அவிகளை விரும்பும் தேவர்கள் இனிய ஸோமத்தைப் பற்றுவார்களாக. ஸோமத்தை விரும்பும் பிரகஸ்பதி ஸோமங்களோடு பெருகும் உத்தம ஸோமங்களோடு யஜிக்கிறான். நாங்கள் தூரத்திலிருந்தே ஸோமத்தைப் பிழியும் கற்களின் சத்தத்தைக் கேட்கிறோம். உத்தமச் செயலாளன் தானே சலங்களைப் பற்றுகிறான். உத்தமச் செயலாளன் பல வசதிகளையும் பெறுகிறான். 1,524

### விசுவேதேவர்கள்

11 சோதியிலிருக்கும் பதினொன்று தேவர்களே! புவியிலே வசிக்கும் பதினொருவர்களே! புகழோடு சலங்களில் வசிக்கும் ஏகாதசர்களான நீங்கள் இந்த யக்ஞத்தை விரும்புங்கள். 1,525

## 140. அக்கினி

### 140. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

1. நான், வேதிகையில் அமர்ந்திருப்பவனும், தன் மனையை விரும்புபவனும், ஒளியுள்ளவனுமான அக்கினிக்குப் பிறக்கும் இடத்தைப் போல் ஆஹுதியாம் நெய்யை அளிக்கிறேன். நான் இருளை நீக்குபவனும், ஒளிநிறமிருப்பவனும், சோதி ரதமுள்ளவனும், சுத்தனுமான அவனை ஆடையைப் போல், என் துதியால் உடுத்துகிறேன்.

2. இரு அரணிகளால் பிறந்த அவன் முவ்வித உணவுகளைப் புசிக்கிறான். அவன் வருடம் முடிந்தவுடன் புசிக்கப்பட்டதைப் புதுப்பிக்கிறான். வர்ஷிக்கும் அவன் ஒரு வடிவத்தை ஏந்தி அந்நியனுடைய நாக்கால், வாயால் புசித்துச் செழிக்கிறான். வேறு வடிவமேந்தி அனைவரையும் விலக்கும் அவன் காட்டிலுள்ள மரங்களைத் தகிக்கிறான்.

3. தகனத்தால் கருப்பான இரு தாய்மார்கள் - இரு அரணிகள் சலனமாகிறார்கள். அவர்கள் கீழ்த்திசையிலே



நாக்குள்ளவனும், இருளை நீக்குபவனும், சட்டென்று எழுபவனும், உடனே வளர்க்கப்படுபவனும், சதா பாலிக்கத் தகுந்தவனும், யக்ஞத்தை நடத்தும் தலைவனைச் செழிப்பிப்பவனுமான பாலனைப் பிறப்பித்தார்கள்.

4. மனிதர்களின் நண்பனான அக்கினியின் – சுலபமாய்ச் செல்பவையும், கருப்பான வழியைச் செய்பவையும், துரிதப்படுபவையும், தடுமாடும் சித்தமுள்ளவையும், துடிப்பவையும், துள்ளுபவையும், காற்றால் செலுத்தப்படுபவையும், பரவுபவையும், மோட்சமளிப்பவையுமான சுவாலைகள் மானிடனுக்காக இணைக்கப்படுகின்றன.

5. அக்கினி புவியையெல்லாம் அடிக்கடி ஒளிப்படுத்தி, நெடுமூச்செறிந்து, இடித்து, கர்ச்சித்து முன்னேறுங்கால் அவனுடைய சுவாலைகள் ஒன்று சேர்ந்து, இருளை நீக்கி, எல்லா இடங்களிலும் பரவுகின்றன. அவை இருள் வழியெங்கும் மகத்தான சோதியைப் பரத்துகின்றன. 1,530

6. அக்கினி! புதர்களின் ஓஷதிகளின் நடுவே அவற்றைத் தன் ஒளியால் எழில் படுத்துபவன் போல் கீழே குனிகிறான். பசுக்களின் நடுவே பாயும் காளைபோல் அவன் கர்ச்சித்துப் பாய்கிறான். அவன் மிக்க தேஜசுள்ளவனாகி, தன் தேகத்தைப் பிரகாசப்படுத்துகிறான். தடைபட கட்டமாகும் அவன், பயங்கர மிருகம் போல் தன் கொம்புகளை ஆட்டுகிறான்.

7. அவன் மறைகிறான். அவன் வெளிப்படுகிறான். அவன் வழிபடுபவனின் நோக்கத்தை அறிபவன் போல் ஸமிதையைப் பற்றுகிறான். சைதன்னிய சுவாலைகளின் நடுவே அவன் சயனிக்கிறான். சுவாலைகள் மீண்டும் எழுகின்றன. அவை போற்றத் தகுந்த அக்கினியினிடஞ் செல்லுகின்றன. அவை சேர்ந்து புவிக்கும் சோதிக்கும் வேறு வடிவத்தைத் தருகின்றன.

8. நீண்ட கேசமுள்ள பெண்கள்-சுவாலைகள் அவனைத் தழுவுகிறார்கள். மரிக்குங்கால் வருங் கணவனை-அக்

கினியைக் காண மீண்டும் எழுகிருர்கள். அவர்களை மூப்பிலிருந்து நீக்கி, அவன் ஊக்கமான உயிரையும், தடைபடாத சிவனையும் அவர்களுக்குப் பிறப்பித்து, முழக்கத்தோடு வருகிருன்.

9. தாயான புவியின் மேலாடையைச் சுவைத்து, அக்கினி மிக்கச் சந்திக்கும் பிராணிகளோடு சேர்ந்து, துரிதமாய்ச் செல்லுகிருன். காலுள்ள ஒவ்வொரு சீவனுக்கும் உணவையளிக்கிருன். சதா சுவைக்கும்-தகிக்கும் அவனைக் கருப்பு வழி தொடர்கிறது.

10. அக்கினியே! எங்கள் செல்வர்களோடு பிரகாசிக்கவும்; உயிர்ப்பிப்பவனுன நீ, பொழிபவனுகவும்; தானமனமுள்ளவனுகவும்; இளமைக்குரிய மினுங்கல்களை நீக்கி, மிக்கப் பிரகாசிக்கவும்; போர்களிலே கவசத்தைப் போல் பகைவர்களை அடிக்கடி விலக்கவும். 1,535

11. அக்கினியே! கடுமையான ஆனுல் இனிமையான சமிதையின் மீது கவனமாய் வைக்கப்பட்டிருக்கும் இந்த அவி, உன் மனத்துக்கு மிக்கப் பிரியமுள்ளதாகுக. உன்னைக் குறையுள்ள தோத்திரம் இன்புறுத்தினுலும், எங்களுடைய இந்தக் குறையற்ற நிறைந்த தோத்திரம் உனக்குப் பிரியமுள்ளதாகுக. உன்னுடைய தேகத்திலிருந்து இலங்கும் சுத்தமான சோதியோடு எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும்.

12. அக்கினியே! எங்கள் வீரர்களைச் செல்வப்படுத்துவதும், சனங்களை க்ஷேமத்துக்குக் கடத்திச் செல்வதும், பலகைகளோடும், நித்தியத் துடுப்புக்களோடுமுள்ளதுமான தோணியை எங்கள் தேருக்கும் மனைக்கு மளிக்கவும்.

13. இணக்கமாகி எங்களுடைய துதியை விரும்பவும். சோதியும், புவியும், விருப்பம் போல் ஓடும் நதிகளும் எங்களுக்கு நீண்ட ஆயுளையும், உணவையும், தானியத்தையும், பசுக்களையுமளிப்பார்களாக. சிகப்பான உஷைகள் எங்களுக்கு எப்பொழுதும் உணவையும் உத்தம செல்வத்தையும் பொழிவார்களாக. 1,538



# 141. அக்கினி

## 141. தீர்க்கதமஸ்-உசித்யனின் புதல்வன்

1. தேவனின் பிரத்தியட்சமான பிரகாசம் அனைவராலும் பார்க்கப்படுகிறது. தேகத்தைத் தாங்க ஏந்தப்படுகிறது. அதற்காகத் தேகபலத்தால் தோற்றுவிக்கப்படுகிறது. என் மனம் அதையறிந்து அவ்வொளியைப் பயன் படுத்த அவர்கள் ருதங்களை அவிகளோடு அளிக்கிருர்கள்.

2. அக்கினி உணவைப் பக்குவப்படுத்துபவனுகவும், தேகத்தை வளர்ப்பவனுகவும், உணவைப் பற்றுபவனுகவும், நித்தியனுகவும், புவியிலே சயனிக்கிருன்-நிலைக்கிருன். பிறகு அவன் இரண்டாவதாய் மங்களகரமான ஏழு தாய்மார்களின்-மழைகளின்-நடுவே வசிக்கிருன். பிறகு விருஷபன் கறக்கப்பட நிற்கிருன். பெண்கள் பத்து திசைகளிலுமுள்ள அவனைப் பிறப்பிக்கிருர்கள்.

3. அக்கினியை மூலத்திலிருந்து, மகிஷனின் வடிவத்திலிருந்து ஆற்றலுள்ள அறிஞர்கள் தங்கள் திறமையால் தோற்றுவிக்கும்போது, மறைந்திருக்கும் அவனைப் பூர்வத்தில்போல் இனிய அவிகள் அளிக்கப்பட காற்று எழுப்புங்கால்

4. பரம பிதாவினிடமிருந்து அவன் ஏந்தப்பட்டு எங்களிடம் வருங்கால், அவன் ஓஷதிகளின் நடுவே அதிசயப் பசியோடு எழுகிருன். அவன் பிறப்பிக்கப்பட இருவரும் சேருங்கால், அவன் இளைஞனையும், சுத்தனையும், சோதியுள்ளவனையும் தோன்றுகிருன்.

5. பிறகு அவன் திசைகளான தாய்களிடம் சென்ருன். அவற்றின் நடுவே சுத்தனும், துன்பமற்றவனுமான அவன் பரந்து வளர்ந்தான். அவன் பூர்வத்தில் அளித்தவற்றை எரித்தது போல் இப்பொழுது அவனுக்கு அளிக்கப்பட்ட ஓஷதிகளிலே ஏறினுன். புதியவையும், தாழ்ந்தவையாயுமுள்ள கிளைகளின் நடுவே அவன் பாய்ந்தோடுகிருன். 1,543

6. வழிபடுபவர்கள் சோதியில் வசிப்பவர்களுக்காக, ஹோதாவை—அக்கினியை—செல்வனான அரசனைப் புகழும் சனங்களைப் போல் போற்றுகிறார்கள். ஏனெனில், பலரால் போற்றப்படுபவனும், அனைத்தையும் ஏந்துபவனுமான அக்கினி, செயலாலும், சக்தியாலும் வழிபடும் மனிதனையும், தேவர்களையும் பரஸ்பரம் ஆதரவாக ஒருமைப் படுத்த அறிகிறான்.

7. போற்றத் தகுந்த அக்கினி காற்றினால் ஏவப்பட்டு, விருப்பம்போல் புகழுரைகளைக் கூறும் தடைபடாத கபடனான வாயாடியைப் போல்—விகடகவியைப் போல்—எல்லாத் திசைகளிலும் பரவுகிறான். தகிப்பவனும், கருப்பு வழி உள்ளவனும், சுத்த சன்மமிருப்பவனும், பல வழிகளில் செல்பவனுமான அக்கினியின் வழியிலே உலகம் நிலைக்கிறது.

8. கயிறுகளால் கட்டப்பட்ட தேர்போல், தன் சலனங்களின் உதவியால்—சுவாலைகளால் ஸ்தாபிதமாகி—வானுக்குச் செல்லுகிறான். பிறகு அக்கினியின் வழிகள் கருப்பாகின்றன. அவன் காஷ்டங்களை எரிக்கிறான். பறவைகளும், பிராணிகளும் அவனுடைய காந்தியிலிருந்து—வீரனிடமிருந்து ஓடும் பகைவர்களைப் போல் பறக்கின்றன.

9. அக்கினியே! உன்னால் வருணன் விரத பாலகனாகிறான். மித்திரன் இருளை நீக்குகிறான். அர்யமான் உத்தம வள்ளலாகிறான். சக்கரத்தின் பற்களைச் சூழும் பரிதியைப் போல் நீ எங்கும் செயலால் விசுவாத்மாவைப் போல் சர்வ வியாபகனாகி, அனைத்தையும் ஜயிப்பவனாய்த் தோன்றுகிறாய்.

10. மிக்க இளைஞனான அக்கினியே! பொழிந்து போற்றுபவனிடம் நீ எல்லாத் தேவப் படைகளையும், செல்வத்தையுஞ் செலுத்துகிறாய். பலத்தின் மகனே! நித்திய தருணனே! மகத்தான செல்வமே! போற்றத் தகுந்தவனும், அவி புசிப்பவனுமான உன்னை நாங்கள் துதிக்குங்கால், பகனைப் போல் ஸ்தாபிக்கிறோம். 1,548



11. நீ பயனுள்ளதும், விரும்பத் தகுந்ததுமான செல்வத்தையளிப்பதுபோல் போற்றப்படுபவனும், ஊக்கமுள்ளவனும், அறிவை ஏந்துபவனுமான புதல்வனையளிக்கவும். அக்கினி தன்னுடைய கிரணங்களைப் பரத்துகிறான். அங்ஙனம் ஜன்மாதாரமான வானையும், புவியையும் பரத்துகிறான். நல்ல செயலாளனான அக்கினி ருதத்திலே—யக்ஞத்திலே தேவர்களுடைய புகழைச் சிரமப்படுத்துகிறான்.

12. உத்தம ஒளியுள்ளவனும், துரித குதிரைகளிருப்பவனும், இன்பம் நிறைந்தவனும், ஹோதாவுடன் பொன் தேரில் வருபவனுமான அவன், எங்களுக்குச் செவி கொடுப்பானாக. கமனமுள்ளவனும், வகிக்கத் தகுந்தவனுமான அவன், உத்தம வழிகளால் சுகத்துக்கும், விரும்பப்படும் இன்பத்துக்கும் எங்களைச் செலுத்துவானாக.

13. மேலான ஸாம்ராஜ்யத்துக்குத் தகுந்த மேன்மையுள்ள அக்கினி, யக்ஞச் செயல்களாலும், பாக்களாலும் எங்களால் போற்றப்படுகிறான். இங்கு இருக்கும் அனைவரும், நாங்களும் அவனுடைய ஆதரவால் செல்வமடைந்து, அக்கினியின் துதியை மேகத்தை இடிக்கச் செய்யும் சூரியனைப் போல் முழுங்குவோமாக. 1,551

# 142. ஆப்பிரீ சூக்தம்

## 142. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

### ஸமிதை

1. ஸமிதையான அக்கினியே! இன்று துடுப்பை உயர்த்தியுள்ள வழிபடுபவனிடம் தேவர்களை ஏந்தி வா. ஸோமத்தைப் பொழிந்து அவியை யளிப்பவனுக்குப் பூர்வ யக்ஞத்தைப் பரத்தவும்.

### தநூநபாதன்

2. தநூநபாதனான அக்கினியே! எனக்குச் சமமாய் அவியளித்து உன்னைப் போற்றும் அறிஞனுடைய

தெய்யும், தேனுமுள்ள யக்ஞத்தில் வந்து யக்ஞப் பூர்த்தி வரையிலிருக்கவும்.

### நராசம்ஸன்

3. தேவர்களின் நடுவே சுத்தனும், சுத்தப்படுத்துபவனும், யக்ஞாருகனும், அற்புதனுமான நராசம்ஸன் சோதியிலிருந்து வந்து யக்ஞத்தை இனிய ரஸத்தோடு மும்முறை சேர்க்கிறான்.

### இளிதம்

4. இளிதனான அக்கினியே! அற்புதனும், அன்பனுமான இந்திரனை இங்கு ஏந்தி வா. என்னுடைய இந்தத் துதி நல்ல நாவுள்ள உனக்குக் கூறப்படுகிறது.

### தருப்பை

5. சுருக்கங்களை ஏந்தும் ரித்விஜர்கள் நன்கு அமைந்த இந்த யக்ஞத்திலே தருப்பைகளைப் பரத்துகிறார்கள். அவர்கள் தேவர்கள் வருவதர்க்குரியதும், பரந்த சுகத்தைத் தருவதுமான இடத்தை இந்திரனுக்குச் செய்கிறார்கள். 1,556

### கதவுகள்

6. ருதத்தை வளர்ப்பவையும், மகத்தாயுள்ளவையும், சுத்தப்படுத்துபவையும், பலரால் விரும்பப்படுபவையும், தனித்திருப்பவையும், தேவிகளுமான கதவுகள் தேவர்கள் வரத் திறக்கப்படுக.

### உஷையும் இரவும்

7. துதிகளால் போற்றத் தகுந்தவையும், சேர்ந்துள்ளவையும், காலத்தின் சந்ததிகளும், யக்ஞத்தின் தாய்மார்களும், அழகுள்ளவர்களுமான உஷையும் இரவும் சுயமாகவே வந்து தருப்பையின் மீது அமர்வார்களாக.

### இரு ஹோதாக்கள்

8. இனிய நாவுள்ளவர்களும், துதிக்கும் தலைவர்களை விரும்புபவர்களும், அறிஞர்களும், தேவத்தன்மை



களிருப்பவர்களுமான இரு ஹோதாக்கள், எங்களுடைய பயனையளிப்பதும், சோதியைப் பற்றுவதுமான இந்த யக்ஞத்தை இன்று நடத்துவார்களாக.

### மூன்று தேவிகள்

9. தேவர்களான மருத்துக்களின் நடுவே நிலைக்கப்பட்டுள்ள சுத்த ஹோதாவான பாரதியும், யக்ஞார்களான இளையும், மகத்தான ஸரஸ்வதியும் தருப்பையின் மீது அமர்வார்களாக.

### துவஷ்டா

10. துவஷ்டா எங்களுடைய நண்பன். அவன் எங்களைப் போஷிக்கவும், செழிப்பிக்கவும், மேகத்தின் நடுவிலிருக்கும் துரிதமாயும், அற்புதமாயுமுள்ள அதிக சலத்தைத் தானாகவே நன்மை செய்யும் மழையை எங்களிடம் செலுத்துவானாக. 1,561

### வனஸ்பதி

11. வனஸ்பதியே! நீயாகவே இங்கு விளங்கி, தேவர்களிடம் அவிகளைச் செலுத்துவாயாக. தேவனும், அறிஞனுமான அக்கினி, தேவர்களுக்காக அவிகளைப் பெற்றுக்கொள்கிறான்.

### சுவாஹா முழங்குபவர்கள்

12. பூஷாவோடும், மருத்துக்களோடுமுள்ள விசுவே தேவனுக்கு, வாயுவுக்கு, காயத்ரவடிவமுள்ள இந்திரனுக்கு அவியையளிக்க, சுவாஹாவை முழங்குங்கள்.

### இந்திரன்

13. இந்திரனே! சுவாஹாவோடு அளிக்கப்படும் அவியைப் புசிக்க வா. அவர்கள் உன்னை யக்ஞத்துக்கு அழைக்குங்கால், நீ வரவும். அழைப்பைச் செவியுறவும். 1,564

## 143. அக்கினி

### 143. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

1. நான் பலத்தின் மகனும், சலங்களின் பேரனும், அன்புள்ளவனும், ஹோதாவும், உரிய சமயத்தில் வருபவனும், வசுக்களோடு புவியின் மீது அமர்பவனுமான அக்கினிக்கு, ஊக்கப்படுத்துவதும், புதுமையாயுமுள்ள யக்ஞத்தைத் துதிமொழிகளோடு அளிக்கிறேன்—நடத்துகிறேன்.

2. அக்கினி பிறந்தவுடன் உத்தம வானிலே காற்றுக்குப் புலனானான். ஸமிதைகளால் வளர்ந்த, ஊக்கச் செயலால் தோன்றிய காந்தியால், சோதியையும் புவியையும் ஒளிப்படுத்தினான்.

3. அவனுடைய காந்திகள் தேயாதவை. சுந்தரத் தோற்றமுள்ள அவனுடைய ரசிமிகள் எங்கும் தெரிகின்றன – துலங்குகின்றன. அக்கினியின் மிக்க ஒளி வீசுபவையும், எங்கும் பரவுபவையும், இடைவிடாமலும் தேயாமலுமிருப்பவையுமான கதிர்கள் தங்கள் கடமைகளிலிருந்து நீங்காமலிருக்கின்றன.

4. புவியின் நாபியின் மீது பிருகு மக்களால் எல்லா சீவர்களின் பலத்தால் ஸ்தாபிக்கப்பட்டவனும், எல்லாச் செல்வங்களையடைந்தவனுமான அவ்வக்கினியை அவனுடைய இடத்துக்கு ஏந்தி வந்து போற்றவும். அவன் வருணனைப்போல்-சூரியனைப்போல் அவன் தனியனாய் எல்லாச் செல்வத்தையும் அரசுபுரிகிறான்

5. காற்றுக்களின் கோஷத்தைப் போலும், வெற்றியுள்ள படையைப் போலும், சோதியில் தோன்றும் இடியேறைப் போலும், தடைபடாமலுமுள்ள அக்கினி கூரிய பற்களால் பகைவர்களைப் புசிக்கிறான்; அழிக்கிறான்; வீரனைப் போல் ஒழிக்கிறான், அக்கினி, காடுகளைத் தகிக்கிறான். 1569

6. அக்கினி எங்கள் தோத்திரத்தை அடிக்கடி விரும்புவானாக. வசுக்களோடு எங்கள் விருப்பத்தைப்



பூர்த்தி செய்வானாக. ஊக்கப்படுத்துபவன் எங்கள் செயல்களைப் பயன்பெறச் செய்ய மிக்கத் துரிதப்படுத்துவானாக. நான் சுத்த சுவாலையுள்ள அக்கினியை இந்தத் துதியோடு போற்றுகிறேன்.

7. சொலிப்பிப்பவன் நண்பனைப் போல ருதத்தை ஏந்துபவனும், நெய்வடிவமுள்ளவனுமான அக்கினியைப் போற்றுகிறான்-பற்றுகிறான். ஒளிப்படுத்தப்பட்ட உக்கிரமான அவன், யக்ஞங்களில் பிரகாசமாகி, எங்களுடைய சுத்தமான செயலை ஒளிப்படுத்துகிறான்.

8. எங்களிடம் கவனமின்மையற்ற அக்கினி, எங்களை மங்களமளிப்பவையும், சுகப்படுத்துபவையுமான பாலனங்களோடு கவனமின்மையற்றுப் பாலிப்பானாக. அனைவராலும் விரும்பப்படும் நீ, எங்களையும் எங்கள் மக்களையும், தடைபடாத – தாழ்த்தப்படாத, எப்பொழுதும் கண் இமைக்காத கவனத்தோடு பாலிக்கவும். 1,572

## 144. அக்கினி

### 144. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

1. ஹோதா, புகழும் பிரகாசமுமான தோத்திரத்தை உயர்த்தி, தன்னுடைய அற்புத ஆற்றலோடு யக்ஞத்தை நடத்தச் செல்லுகிறான். அவன் வேதிகையைச் சுற்றி வருகிறான். அவன், அவிகளை அளிக்க முதன்மையாயிருக்கும் துடுப்புகளைப் பற்றுகிறான்.

2. சலங்களின் மூலாங்கத்திலே தாங்கப்பட்டு அக்கினி வசிக்கிறான். பிறகு உலகம் அமுதமான மழையைப் பருகுகிறது. அங்கு அவன் மின்னல் வடிவத்தோடு சலங்களைப் பானஞ் செய்யத் தருகிறான். அப்பொழுது சூரியகிரணங்களால் சூழப்பட்ட சலதாரைகள் -மழைத் திவலைகள்—அவற்றின் பிறப்பிடமான சூரியனின் சதனத்திலே-இருப்பிடத்திலே புதுப்பிக்கப்படுகின்றன.

3. சம பலமுள்ளவர்களும், சம நோக்கமிருப்பவர்களுமான ஹோதாவும், அத்வர்யுவும்—சமமான நோக்கத்துக்குச் சேர்ந்து ஊக்கமுள்ளவர்களாகி—தங்கள் செயல்களோடு—அக்கினியின் வடிவத்தைச் சேர்க்கிறார்கள். பிறகு அவிகள் அளிக்கப்படுபவனான அக்கினி, நெய் தாரைகளை—துதிகளை ஏற்கும் பகனைப் போலும், தேரை இழுக்கும் குதிரைகளின் வாய் வடங்களைப் பற்றும் தேரோட்டியைப் போலும் பற்றுகிறான்.

4. சம பலமுள்ள இருவரும், ஒரே யக்ஞத்தைத் தம்பதிகளைப் போல் நடத்துபவர்களும்; ஒரே இடத்தில் இருப்பவர்களுமான ஹோதாவும், அத்வர்யுவும் - இரவிலும், பகலிலும் அக்கினியைப் போற்றுகிறார்கள். கிழவனாகவோ, குமரனாகவோ உள்ள அவன் மானிடத் தம்பதிகளுக்காகப் பிறப்பிக்கப்படுகிறான். அவன் பல அவிகளைப் பெற்று மூப்பன்னியிலாகிறான்.

5. பத்து விரல்கள் பரஸ்பரம் இணைந்து பாலனத்துக்காக மானிடர்களான நம்மால் அழைக்கப்படும் அந்தத் தேவனான அக்கினியை ஊக்கப்படுத்துகின்றன. அவன் தன் ரசிமிகளை வில்லிலிருந்து பாயும் துரிதமான சரங்களைப் போல் செலுத்துகிறான். சூழ்ந்திருக்கும் சனங்களால் கூறப்படும் புதிய துதிகளை ஏற்றுக்கொள்கிறான். 1,577

6. அக்கினியே! நீ சோதியில் வசிப்பவர்களையும், புவியிலிருப்பவர்களையும் உன்னுடைய சொந்த பலத்தால் மந்தையைக் கோபாலன் போல் நடத்துகிறாய். மகத்தானவையும், செல்வமுள்ளவையும், பொன்மயமானவையும், இனிய நாதமுள்ளவையுமான சோதியும் புவியும் உன் யக்ஞத்துக்கு வருகின்றன.

7. அக்கினியே! மகிழ்ச்சியோடு பெற்றுக்கொள்ளவும். எங்களுடைய இந்தத் துதியிலே இன்புறவும். நீ இன்பமளிப்பவன்; தானே தாங்கிக்கொள்பவன்; நல்ல செயல்களை நடத்துபவன்; சத்தியத்தில் தோன்றுபவன்;



நீ அனைவரின் முகப்பிலிருக்கிறாய். அனைவருக்கும் தென்படுகிறாய். காட்சிக்கு இனியன். உணவளிக்கும் வள்ளலைப்போல் நீ தஞ்சனாயிருக்கிறாய். 1,579

## 145. அக்கினி

### 145. தீர்க்கதமன்—உசித்யனின் புதல்வன்

1. நீங்கள் விரும்புவதை அக்கினியிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். ஏனெனில், அவன் எங்கும் செல்லுகிறான். அனைத்தையும் அறிகிறான். பேரறிவுள்ள அவன் எதைச் செய்ய வேண்டுமென அறியச் செல்லுகிறான். வழிபடுபவர்களால் நாடப்படுகிறான். விரும்பப்படாத விருப்பங்களை அடக்கும் ஆற்றல் அவனிடமிருக்கிறது போகமளிக்கும் சக்தியும் அவனிடமிருக்கிறது. அவன் பலத்தையும், உணவையுமளிப்பவன். வலியவனையும் பாலிப்பவன்.

2. அனைவரும் அக்கினியினிடமே வினவுகிறார்கள் அவனிடம் எவனும் விபரீதமாய் வினவான். ஏனெனில், அறிவுள்ளவன் கேட்கப்படும் வினவுக்குத் தன் மனத்தில் நிச்சயஞ் செய்ததுபோல் பதிலளிக்கிறான். தன் பதிலை—முந்திக்கொள்ளும் பேச்சை அவன் சகியான். பிரதிவாத உத்தரத்தையும் பொறுக்கான். அவன் அகந்தையற்றவனைப் பாலனத்தால் தாங்குகிறான்.

3. அக்கினிக்கு யக்ஞத் துடுப்புக்கள் உயர்த்தப்படுகின்றன. அவனுக்குத் துதிகள் கூறப்படுகின்றன. அவன் ஒருவனே என் சொற்களையெல்லாம் செவியுறுகிறான். அவன் பலரை ஊக்கப்படுத்துபவன்; நடத்துபவன்; யக்ஞ சாதகன்; இடைவிடாமல் பாலிப்பவன்; குழந்தையைப் போல் அன்பாயிருப்பவன். யக்ஞப் பொருள்களோடு சேர்ந்த அவிகளைப் பெற்றுக் கொள்கிறான்.

4. அறிஞன் அவனைத் தோற்றுவிக்க முயன்றவுடன் அவன் உடனே தோன்றுகிறான். அவன் பிறப்

பிக்கப்பட்டவுடன் இலக்குக்களோடு-சுவாலைகளோடு-சேர்கிறான். அவனை விரும்பும் அவிகள் யக்ஞத்திலிருக்கும் அவனிடஞ் செல்லுங்கால், அவன்-அக்கினி, களைத்த மனிதனை இன்பத்துக்கும், மகத்தான மகிழ்ச்சிக்கும் ஊக்கப்படுத்துகிறான்.

5 தேடுபவனும், சேரத் தக்கவனும், வனத்திலிருப்பவனுமான அக்கினி, சருமத்தைப் போல் ஸமிதையின் நடுவே ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறான். அறிஞனும், ருதத்தை உணர்ந்தவனும், சத்தியனுமான அக்கினி மானிடர்களுக்குக் கடமைகளின் உண்மையைக் கூறுகிறான். 1,584

## 146. அக்கினி

### 146. தீர்க்கதமன்–உசித்யனின் மகன்

1. மூன்று தலைகளும், ஏழு ரசிமிகளிருப்பவனும், குறையற்ற பெற்றோர்களான சோதி புவிகளின் அங்கத்தில் வீற்றிருப்பவனுமான அக்கினியைப் போற்றவும். தேவனான அக்கினியின் விசுவகாந்தியானது, அசையும் அசையாத பொருள்களிலே பரவுங்கால் அவன்—யக்ஞ வடிவன்—எல்லா விருப்பங்களையும் பூர்த்தி செய்கிறான்.

2. பொழிபவனும், மகானுமான அவன் இந்த இரு உலகங்களிலும் பரவியிருக்கிறான். தேயாதவனும், துதியாருகனுமான அவன், எப்பொழுதுமிருக்கிறான். பாலனத்தை யளிக்கிறான். அவன் புவியின் உச்சமான இடத்திலே தன் காலை வைக்கிறான். அவனுடைய பிரகாசமான சுவாலைகள் வானின் மடியைச் சுவைக்கின்றன.

3. சுபச் செயல்களுள்ள இரு பசுக்களான தம்பதிகள் ஒரே புதல்வனான அக்கினியினிடம் வருகிறார்கள். அவனை நன்கு பாலிக்கிறார்கள். விலக்கத் தகுந்த வழிகளை விளக்குகிறார்கள். எல்லாப் பிரக்ஞானங்களுக்கு மதிகமாயுள்ள அறிவு அவர்களிடமிருக்கிறது.

4. அறிஞர்களான தீரர்கள் ஸதா தருணனையுள்ள அக்கினியை அவனுடைய இடத்துக்கு ஏந்தி வருகிறார்கள். அவர்கள் அவனைத் தங்கள் இருதயங்களிலே பல வழிகளால் பாலிக்கிறார்கள். போற்ற விரும்பும் அவர்கள் தங்கள் கண்களை நதியினிடம் செலுத்தினார்கள். அவர்களுக்கு மானிடர்களின் சூரியன் புலனாகிறான்.



5. வெற்றியுள்ளவனும், துதியாருகனும், பெரியவர்களுக்குச் சீவனுமான அக்கினி, பத்து திசைகளிலும் காணப்பட விரும்புகிறான். செல்வனும், அனைவர்க்கும் தென்படுபவனுமான அவன் பல இடங்களிலே இந்த ஸந்தானத்துக்கு – ரித்விஜர்களுக்குத் தந்தையாகிறான். 1,509

## 147. அக்கினி

### 147. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

1. அக்கினியே! உன்னுடைய பிரகாசிக்கும் ஆவிப்படுத்தும் கிரணங்கள், எங்ஙனம் தேவர்கள் உணவையும், ஆயுளைமனுபவிக்கவும், புதல்வர்களையும் பேரர்களையும் பெற்று, ருதத்திலே ஸாமத்தைப் பாடவும், சீவனையும் உணவையும் தருகின்றன?

2. தருணனே! சுவதாவுள்ளவனே! என்னுடைய வணக்கமுள்ள, ஊக்கமுள்ள இந்த மொழியைத் தெரிந்து கொள்ளவும். ஒருவன் நிந்திக்கிறான். வேறொருவன் உன்னை வந்திக்கிறான். அக்கினியே! வந்திக்கும் நான் உன் தேகத்தை ஏந்துகிறேன்.

3. அக்கினியே! உன்னுடைய பாலனமளிக்கும் கிரணங்கள் மாமதேயனின் கண்ணின்மையைக் கண்டு அவனைத் துன்பத்திலிருந்து நீக்கின. விசுவத்தையறியும் அவன் சுகிருதர்களைப் பாலிக்கிறான். துன்புறுத்தும் பகைவர்கள் அவர்களுக்குத் தீமை செய்ய இயலவில்லை.

4. அக்கினியே! ஈயாமல் எங்கள் ஈகைகளைத் தடைப்படுத்தும் தீயோன், வஞ்சகத்தோடு எங்களை நிந்திக்காமல் அவனுடைய மந்திரம் அவனுக்கே சுமையாகுக. தன் தீச்சொற்களால் தானே துன்புறுவானாக.

6. ஆற்றல் மகனே! போற்றப்படும் அக்கினியே! ஒரு மானிடன் மனமறிந்த வஞ்சக நாக்கால் வேறொரு மனிதனைத் துன்புறுத்துகிறான். அவனிடமிருந்து உன்னைத் துதிப்பவனை நீ பாலிக்கவும். எங்களைத் துன்பத்துக்குட் செலுத்தாதே. 1,594

## 148. அக்கினி

### 148. தீர்க்கதமன் – உசித்யனின் புதல்வன்

1. பூர்வந்திலே தேவர்கள் அக்கினியை மானிடப் பிரசைகளின் நடுவே யக்ஞத்தைச் சித்தப்படுத்த அற்புதமாயும், விவிதமாயும் பிரகாசிக்கும் சூரியனைப் போல் ஸ்தாபித்தார்கள். ஹோதாவும், பலவித ரூபமுள்ளவனும், விசுவதேவத் தன்மையிருப்பவனுமான அக்கினியை வாயு, சமிதையினுள் நுழைந்து ஊக்கப்படுத்தினான்.

2. நான் விரும்பப்படும் தோத்திரத்தை அக்கினிக்கும் கூறுங்கால், பகைவர்கள் என்னை நாசப்படுத்த இயலாமலாகிறார்கள். ஏனெனில், அக்கினி நான் கூறுவதை மனங்கொள்கிறான். அப்பொழுது எல்லாத் தேவர்களும், துதியைக் கூறுபவனும், யக்ஞத்தை நடத்துபவனுமான என்னுடைய செயல்களை விரும்புகிறார்கள்.

3. யக்ஞாருகர்கள் அக்கினியை நித்தியமான இடத்திலே கிரகித்து துதிகளோடு ஏந்துகிறார்கள். ஏந்தப்படும் அவனை ரித்விஜர்கள் யக்ஞத்துக்குத் தேரிலே இணைக்கப்பட்ட குதிரைகளைப் போல் எடுத்துச் செல்லுகிறார்கள்.

4. அழிக்கும் அக்கினி பல மரங்களைத் தன் சுவாலைகளால் எரிக்கிறான். காட்டிலே பலவித காந்தியோடு பிரகாசிக்கிறான். அனுகூலமான காற்று சுவாலைகளை வில்லின் துரித சரங்களைப் போல் தினந்தோறும் வீசிச் செலுத்துகிறது.

5. அரணிக்கோலின் கருவாயிலிருக்கும் அவனைக் குருடர்களும் – கண்ணற்றவர்களும் – அவனுடைய காந்தியின் மகிமையால் துன்புறுத்தார்கள். பகைவர்களும், துன்புறுத்தும் சத்துருக்களும் அவனைப் பங்கஞ் செய்யார்கள். அவனை எப்பொழுதும் விரும்புபவர்கள் அவனைப் பாலிக்கிறார்கள். 1,599



## 149. அக்கினி

### 149. தீர்க்கதமன்–உசித்யனின் மகன்

1. மகத்தான செல்வத்தின் தலைவனும், விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனுமான அக்கினி யக்ஞஸ்தானத்துக்கு வருகிறான். தலைவர்களின் தலைவனான அவன் செல்வ நிலையத்துக்கு நெருங்குகிறான். அவன் வருங்கால் கற்கள் சேவை செய்கின்றன.

2. அவன் மனிதர்களைப் போல் சோதியையும், புவியையும் தோற்றுவிப்பவன். புகழோடு பொருந்தும் அவனுடைய தாரைகளை எல்லா சீவர்களும் பருகுகிறார்கள். சிறப்புக்களோடு வசிக்கும் அவனிடமிருந்து சிருட்டி சீவனைச் சுவைக்கிறது. அவன் ஒவ்வொரு சீவனின் கருப்பாசயத்தினுள் நுழைந்து எல்லாப் பிராணிகளையும் பிறப்பிக்கிறான்.

3. அவன் அறிஞன். வானில் விளங்கும் வேகமான காற்றைப் போல் எங்கும் செல்லுகிறான். இன்பமான இடத்தை ஒளிப்படுத்துகிறான். நூறு ஆத்மாவுள்ள அவன் சூரியனைப்போல் பிரகாசிக்கிறான்.

4. இரு பிறவிகளுள்ள அக்கினி, மூன்று ஒளி மண்டலங்களைத் துலக்கஞ் செய்து, எல்லா சோதி உலகங்களையும் சோதிப்படுத்துகிறான். அவன் தேவர்களின் துதியாருக ஹோதாவாயிருக்கிறான். அவன் சலஞ் சேரும் இடத்திலே நிலைக்கிறான்.

5. இரு பிறவிகளுள்ள அவன் ஹோதாவாயிருக்கிறான். அவியை விரும்பும் அவன் எல்லா உத்தமச் செல்வங்களையும் ஏந்துகிறான் அவனுக்கு அவிகளையளிக்கும் மனிதன் உத்தமப் புதல்வனை அடைகிறான். 1,604

# 150. அக்கினி

## 150. தீர்க்கதமன்–உசித்யனின் புதல்வன்

1. அக்கினியே! நான் பல அவிகளை யளித்து–துதியைக் கூறுகிறேன். மகத்தான தலைவனின் மனையிலிருக்கும் சேவகனைப் போல் நான் எப்பொழுதும் உன் முன்னிலையிலே வருகிறேன்.

2. உன்னைத் தலைவனாக எண்ணாத செல்வனுக்கும், யக்ஞங்களில் தட்சிணையைத் தராதவனுக்கும், தேவர்களைத் துதி செய்யாதவனுக்கும் நீ செல்வத்தை அளிக்காதே என நான் உன்னைக் கேட்டுக் கொள்கிறேன்.

3. அறிஞனே! உன்னை ஏந்தும் மனிதன் ஒளியுலகில் சந்திரனாகிறான். அவன் மகானாகி தேவர்களில் உத்தமனாகிறான். அக்கினியே! நாங்கள் வழிபடுபவர்களிலே முதல்வர்களாயிருப்போமாக. 1,607

# 151. மித்திரா வருணர்கள்

## 151. தீர்க்கதமன்-உசித்யனின் மகன்

### மித்திரன்

1. பசுச் செல்வங்களை விரும்புபவர்களும், தியானச் செல்வர்களுமான தலைவர்கள், கோப் பொருள்களைப் பெறவும், மானிடர்களைப் பாலிக்கவும், நண்பனைப் போல் பிரியனும், யக்ஞாருகனான எந்த அக்கினியை வானில் தோன்றும் சலத்தின் நடுவே தங்கள் செயலால் தோற்றுவித்தார்களோ, அவ்வக்கினியின் பயங்கர சப்தத்தால் சோதியும் புவியும் நடுங்குகின்றன.

### மித்திரா வருணர்கள்

2. ஸோமத்தையளிக்கும் புருமீளனுடைய துரிதமான ரித்விஜர்கள்–மித்திரா வருணர்களான உங்களுக்கு ஸோமத்தை – நண்பர்களை – பிழிந்திருக்கிறார்கள். உங்கள் வரவைப் போற்றும் தலைவனுடைய செயலை அறியுங்கள். வர்ஷிப்பவர்களான நீங்கள் கிரகபதியின் அழைப்புக்குச் செவி கொடுங்கள்.



3. பொழிபவர்களான மித்திரா வருணர்களே! மானிடர்கள் மகத்தான பலத்தையடைய சோதி புவிகளிலிருந்து தோன்றிய உங்கள் பிறப்பைப் போற்றுகிறார்கள். அது புகழத்தக்கது. ஏனெனில், யக்ஞத்தை நடத்தும் தலைவனுக்கு விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறீர்கள். துதியோடும் அவியோடுமுள்ள யக்ஞத்தைப் பற்றுகிறீர்கள்.

4. அசுரர்களே! உங்களால் விரும்பப்படும் சனங்கள் செழிக்கிறார்கள். சத்தியத்தைப் பேசுபவர்களே! மகத்தை-சத்தியத்தை-கோஷியுங்கள். மகத்தான சோதியிலிருந்து தோன்றும் சக்தியை, செயலிலே, நுகத்திலே காளையைப் போல் சேருங்கள்.

5. நீங்கள் பசுக்களைப் புவியிலே விரும்பத் தகுந்த மேய் நிலத்துக்குச் செலுத்துகிறீர்கள். உங்கள் மகிமையால் பால் தரும் கோக்கள் பாலிக்கப்பட்டு, தங்கள் தொழுவங்களுக்குச் செல்லுகின்றன. அவை மேலுள்ள சூரியனை நோக்கி, காலையிலும் மாலையிலும் திருடனைக் கண்டவன் போல் கதறுகின்றன. 1,612

6. மித்திரனே! வருணனே! நீங்கள் எந்த யக்ஞத்துக்குச் சென்று போற்றுகிறீர்களோ அந்த யக்ஞத்தை-அக்கினியின் சுவாலைகள் – உங்களைப் போற்றுகின்றன. நீங்களாகவே மழையைப் பொழியுங்கள். எங்கள் செயல்களைச் செல்வப்படுத்துங்கள். நீங்கள் விப்பிரனின் துதிகளுக்குத் தலைவர்களாய்த் துலங்குகிறீர்கள்.

7. உங்களைப் புகழ்ந்து, விரும்புவதர்க்கானதைத் தந்து, அவிகளையளித்து, வணங்கும் அறிஞனான ஹோதாவினிடம் வாருங்கள். அவனுடைய யக்ஞத்தைப் பற்றுங்கள். விரும்பி எங்கள் துதிகளையும் பெற்றுக் கொள்ளுங்கள்.

8. சத்தியத்தைப் பேசுபவர்களே! இந்திரியங்களை உபயோகிப்பதற்கு முன்னால் முதலில் மனத்தை உபயோகிப்பது போல் உங்களையே யக்ஞத் தலைவர்கள்,

முதலில் வேறு தேவர்களுக்கு முன்னுல் பாலாலும், யக்ஞங்களாலும் போற்றுகிருர்கள். அவர்கள் உங்களுக்குக் குவிந்த சிந்தனையுள்ள துதிகளை யளிக்கிருர்கள். பணிந்த மனங்களோடு எங்களுக்குச் செல்வத்தை யளியுங்கள்.

9. செல்வர்களான நீங்கள் உணவை ஏந்துகிறீர்கள். செல்வத்தோடு உணவை யளியுங்கள். தலைவர்களே! உங்கள் அறிவுள்ள பாலனங்களால் பாலனமாகும் செல்வத்தையும், செழிப்பையும் எங்களுக்குத் தருகிறீர்கள்–தாருங்கள். இரவுகளோடு பகல்கள் உங்கள் தேவத்வத்தையடையவில்லை. நதிகளும், அசுரர்களும் அடையவில்லை. உங்கள் செல்வத்தையும் அடையவில்லை. 1,616

## 152. மித்திரா வருணர்கள்

### 152. தீர்க்கதமன்–உசித்யனின் மகன்

1. திறமான மித்திரா வருணர்களே! நீங்கள் ஒளியின் ஆடைகளை யணிந்திருக்கிறீர்கள். உங்கள் இயல்புகள் குற்றமற்றவை எனக் கருதப்படுகிறது. நீங்கள் எல்லா அசத்தியங்களையும் அழிக்கிறீர்கள். எங்களை சத்தியத்தோடு நினைக்கிறீர்கள்.

2. மித்திரனும் வருணனும் தங்கள் செயல்களை நடத்துகிருர்கள். இருவரும் சத்தியவான்கள். சிந்தனையாளர்கள். கவிகளால் போற்றத் தகுந்தவர்கள். பகைவர்களை இம்சிப்பவர்கள். அவர்கள் உக்கிரர்களாகி, நான்கு கூர்களுள்ள படைகளோடு, மூன்று கூர் படைகளுள்ள பகைவர்களை யழிக்கிருர்கள். அவர்களுடைய மகிமையால் தேவநிந்தகர்கள் முன்னதாகவே தேய்கிருர்கள்.

அல்லது

செயல்களை நடத்திவரும் உங்களை எவன் பின்பற்றி, சத்தியத்தைப் பேசி, சிந்தித்து, அறிஞரால் போற்றப்பட்டு உக்கிரனுகிருனே அவன் நான்கு கூர்களுள்ள படைகளை ஏந்தி, முக்கூர் படைகளுள்ள பகைவர்களை அழிக்கிருன். தேவநிந்தகர்கள் எத்தனை ஆற்றலோடிருந்தாலும் அழிகிருர்கள்.



3. மித்திரா வருணர்களே! காலில்லாத காரிகை–உஷை–கால்களுள்ள மனிதர்களை முந்துகிருள். இது உங்களுடைய செயல். இதை எவன் அறிகிருன்? உங்களுடைய குழந்தை–சூரியன்–இவ்வுலகத்தின் சுமையைத் தாங்குகிருன். அவன் சத்தியத்தைப் பரத்துகிருன். தமத்தை விலக்குகிருன்.

4. நாங்கள், மங்கையின் காதலனும், சதா செல்பவனும், ஒரு வினுடியும் ஓயாதவனும், பிரிக்கப்படாததும் பரத்துவதுமான காந்தியை யணிந்தவனும், மித்திரா வருணர்களின் நிலையனுமான சூரியனைக் காண்கிருேம்.

5. ஆதித்தியனிடம் குதிரைகளில்லை; வாய் வடங்களும் இல்லை. ஆனுல் அவன் துரிதமாய்ச் செல்லுகிருன்; கர்ச்சிக்கிருன். உலகம் சிந்தனைக்கு இயலாத பரந்த எல்லாச் செயல்களையும் மித்திரா வருணர்களுடைய மகிமை எனக் கருதி அவர்களைப் புகழ்ந்து போற்றுகிறது. 1,621

6. மாமதேயனுக்கனுகூலமாயிருக்கும் பசுக்கள் துதிக்க விரும்பும் அவனை, பால் நிறைந்த மடியோடு செல்வப்படுத்துக. அவன் யக்ஞம் நடத்துவதர்க்குரிய செயல்களை அறிந்து, தான் புசிக்க அவிகளின் மிச்சத்தை யாசிப்பானுக. அவன்–தீர்க்கதமன்–உங்கள் இருவரையும் போற்றி அகண்டிதமான யக்ஞத்தைப் பூர்த்தி செய்வானுக.

7. தேவர்களான மித்திரா வருணர்களே! நான் பிரியத்தோடும், வந்தனத்தோடும் உங்களை இந்த அவியில் இன்புறுத்துவேனுக. எங்களுடைய மகத்தான செயல் போர்களிலே ஜயத்தையளிக்க, நாங்கள் செழிக்க, சோதியிலிருந்து எங்களுக்கு மழை தோன்றுக. 1,623

## 153. மித்திரா வருணர்கள்

### 153. தீர்க்கதமன்–உசித்யனின் புதல்வன்

1. நெய் பொழிபவர்களான மகான்களே! மித்திரா வருணர்களே! பரஸ்பரம் அன்புமிகுந்த நாங்கள் உங்களை அவிகளோடும், வணக்கத்தோடும், நெய்யோடும் போற்றுகிறோம். எங்கள் அத்வர்யுக்கள் தோத்திரங்களோடு உங்களைத் தாங்குகிறார்கள்-மேம்படுத்துகிறார்கள்.

2. மித்திரா வருணர்களே! உங்களைப் போற்றுவதற்காக நான் யக்ஞத்தைச் செய்யவில்லை. நான் உங்கள் புகழையடைந்து, என்னுடைய கடமை தெரிந்து கொள்வதற்காகவே யக்ஞத்தைச் செய்கிறேன். பொழிபவர்களே! உங்களுக்கு ஹோதா யக்ஞங்களிலே அவிகளை அளிக்குங்கால் அறிஞன் யக்ஞத்தைச் செய்ய விரும்பி உங்களுடைய சுகத்தை-தேவத்தன்மையை அடைகிறான்.

3. மித்திரா வருணர்களே! ராதஹவ்யனுடைய மானிடத் தலைவனின் ஹோதாவால் யக்ஞத்தில் நீங்கள் போற்றப்பட்டு, பிரசன்னமாகி-ராதஹவ்யனின்–பசுக்கள் பாலோடு பெருகிற்று. உங்களுடைய யக்ஞத்தில் உங்களுக்கு அவிகளை அளிக்கும் தலைவனின் பசுக்களும் அங்ஙனம் பாலோடு பெருகுக.

4. மித்திரா வருணர்களே! தேவிகளான பசுக்களும் சலங்களும் உங்களால் இன்பத்துக்குரிய சனங்களின் செல்வத்துக்காக உங்களுக்கு அவிகளை அளிப்பார்களாக. பழைய பாலகனான அக்கினி அளிப்பானாக. மித்திரா வருணர்களே! புசியுங்கள்; பசுக்களின் பாலைப் பருகுங்கள். 1,627

## 154. விஷ்ணு

### 154. தீர்க்கதமன்–உசித்யனின் புதல்வன்

1. நான் விஷ்ணுவின் வீரச் செயல்களைக் கூறுவேன். அவன் மூவ்வுலகங்களை அளந்தான். மேலே யிருக்கும் சத்திய லோகத்தைத் தாங்கினான். அவன் மூவ்விதமாய்க் கால் அடிகளை வைத்தான். அவன் மகான்களால் போற்றப்படுபவன்.



2. விஷ்ணுவின் மூன்று பரந்த கம்பீர அடிகளிலே, நடைகளிலே–எல்லா உலகங்களும் நிலைக்கின்றன. வீரச் செயலுக்குப் புகழப்படும் அவன், மலையிலே துன்புறுத்த திரியும் பயங்கர மிருகத்தை-சிங்கத்தைப் போல் இருக்கிறான்.

3. மனனத்துக்குரிய தோத்திரமும், திண்மையும், உச்சத்திலிருப்பவனும், பலரால் போற்றப்படுபவனும், பொழிபவனும், ஏகனாகவே மூவ்வடிகளால் இந்தப் பரந்த திரமான மூவ்வுலகங்களின் திரட்சியைச் செய்தவனுமான விஷ்ணுவினிடம் செல்க.

4. தனியனாகவே மூன்று தாதுக்களையும், புவியையும், சோதியையும் ஏந்தும் விஷ்ணுவினுடைய அழியாத அடிகள், அமுதத்தோடு நிறைந்த அவை, சுவதாவோடு மானிடர்களை இன்புறுத்துகின்றன.

5. நான், அவனுக்குப் பிரியமாயிருப்பதும், தேவனை நாடும் மனிதர்கள் இன்புறுவதுமான அந்த வழியை–பிரம்ம லோகத்தை அடைவேனாக. பரந்த அடி வைக்கும் விஷ்ணுவின் பரம பதத்திலே அமிருத ரஸச் சுனையிருக்கிறது. விஷ்ணு இங்ஙனம் பந்துவாகிறான். 1,632

6. விஷ்ணுவை–நாங்கள், நீங்கள்–இருவரும், பல கொம்புகளும், துரிதமாய்ப் பரவுபவையுமான கதிர்களுள்ள நிலையங்களுக்குச் செல்லப் போற்றுகிறோம். ஏனெனில், அங்கு வர்ஷிப்பவனும், பலரால் போற்றப்படுபவனுடைய பரமபதம் மகத்தான சோதியோடு பிரகாசிக்கிறது. 1,633

## 155. இந்திரா விஷ்ணுக்கள்

### 155. தீர்க்கதமன்–உசித்யனின் புதல்வன்

1. நீங்கள், பயிற்சிபெற்ற குதிரைகளின் மீது போல மலைகளின் உச்சியின்மீது சவாரி செய்பவர்களும், தடை

படாதவர்களும், துதியால் இன்பமாகும் மகத்தான சூரனான இந்திரனுக்கும், விஷ்ணுவுக்கும் பருகத் தகுந்த ஸோமரஸத்தையளியுங்கள்.

2. இந்திரா விஷ்ணுக்களே! நீங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறீர்கள். யக்ஞத்தில் மிச்சப்படும் ஸோமத்தைப் பருகும் யக்ஞ கர்த்தா உங்களுடைய ஒளிமய வரவைப் போற்றுகிறான். நீங்கள் மனிதர்களுக்காக சத்துருவைச் சிதைக்கும் அக்கினியினிடமிருந்து கொடுப்பதற்குரிய உணவைச் சதா பிரேரிக்கிறீர்கள். மானிடன் மீது நன்கு செலுத்தப்படும் வில்லியான கிருசானுவின் அம்பை நீங்கள் விலக்குகிறீர்கள்.

3. இந்த அவிகள், இந்திரனின் மகத்தான ஆண்மையைப் பலப்படுத்துகின்றன. அதனால் அவன் சோதி புவிகளிலுள்ள பிராணிகளின் தாய் தந்தைகளைப் போகத்துக்கும், பிறப்பிக்கவும், யுக்தமாய்ச் செய்கிறான். அவன் தந்தையின் உத்தம நாமத்தைப் புதல்வனால் தாழ்த்துகிறான். சோதியின் ஒளியிலே உச்சத்தில் அவனுடைய மூன்றாவது நாமமிருக்கிறது. புதல்வன் எனப்படுவது–தாழ்ந்தது–கீழே இருப்பது. தந்தை என்னும் பெயர்–உயர்ந்தது–மேலே இருப்பது. சோதியின் பிரகாசமான இடத்திலே மூன்றாவது பெயரான பௌளத்திரன் உண்டு. அது இந்திரா விஷ்ணுக்களின் அதீனத்திலிருக்கிறது. சோதியின் உச்ச ஸ்தானத்திலே புதல்வனுக்குத் தாழ்ந்தவன், உயர்ந்தவன் என நாமங்களுண்டு. அவனுக்குத் தந்தை என்னும் பெயருமுண்டு.

### விஷ்ணு

4. ஆதலால் நாங்கள் அனைவரின் தலைவனும், பாலகனும், பகையற்றவனும், பலிஷ்டனுமான அவ் விஷ்ணுவின் ஆண்மையைப் போற்றுகிறோம். அவன் பலர் புகழத் தக்க உலகத்தைப் பாலிக்க, பல திசைகளிலே பரந்த மூன்று அடிகளால் மூவுலகங்களைக் கடந்தான்.



5. மானிடன், விஷ்ணுவைப் புகழ்ந்து, சோதியைக் காணும் விஷ்ணுவினுடைய இரு அடிகளைக் காண்கிறான். மூன்றாவது அடியைக் காணும் ஆற்றல் அவனிடமில்லை. உச்சத்தில் பறந்து செல்லும் பறவைகளிடமும் அதைக் கண்டு பற்றும் ஆற்றலில்லை: 1,688

6. விஷ்ணு, தன் தனிச் சலனங்களால் விவித இயல்புள்ள காலத்தின் 360 அம்சங்களை–சக்கரங்களைப் போல் சுழற்றித் தோற்றுவிக்கிறான். பரந்த தேகமுள்ள அவன் துதியால் அறியத் தக்கவன். அவன் தருணன்; சிறுவனில்லை. நம்முடைய அழைப்புக்களுக்கு வருகிறான். 1,689

## 156. விஷ்ணு

### 156. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

1. விஷ்ணுவே! சுகத்தைத் தருபவனும், அவிகளை ஏற்பவனும், மிகுந்த உணவுள்ளவனும், பாலனத்தைத் தருபவனும், எங்கும் பரந்துள்ளவனுமான நீ, எங்களுக்கு நண்பனைப் போலாகவும். ஆதலால், நீ அறிஞனால் அடிக்கடி ஸ்தோமம் கூறத் தக்கவன். அவியுள்ளவனால் யக்ஞம் நடத்தப்படுகிறது.

2. பழையவனும், படைப்பவனும், புதியவனும், தானே பிறந்தவனுமான விஷ்ணுவுக்கு அவிகளையளிப்பவனும், மகானுபாவனின் மகத்தான சன்மத்தைப் போற்றுபவனும், புகழுள்ளவர்களாகி, செல்வதற்குரிய அந்தப் பதத்துக்குப் போகிறார்கள்.

3. வழிபடுபவர்களே! பழைய விஷ்ணுவை ருதத்தின் கருவாக நீங்கள் அறிவது போல் அங்ஙனம் நீங்களாகவே போற்றுங்கள். அவனுடைய நாமத்தை அறியும் நீங்கள் அவனைப் பாடுங்கள். விஷ்ணுவே! நாங்கள் மகானான உன்னுடைய ஸுமதியைப் போற்றுவோமாக.

4. அரசனான வருணனும், அசுவினிகளும், அறிஞர்களான ரித்விஜர்களோடுள்ள தலைவனின்–யக்ஞ வடிவமான விஷ்ணுவைப் பணிகிறார்கள். அரசனான வருண

னும், இரு அசுவினிகளும், மருத்துக்களின் கூட்டத்தைச் செலுத்தும் விஷ்ணுவின் மனத்திட்பத்தைப் போற்று கிருர்கள். விஷ்ணு, நண்பர்களோடு சேர்ந்து உத்தம மாயும், சோதியைத் தருவதாயுமுள்ள பலத்தை ஏந்து கிருன். மேகத்தைத் திறக்கிருன். விஷ்ணு அவனுடைய நண்பனுன-இந்திரனேடு சேர்ந்து உத்தம சோதியளிக் கும் சக்தியைப் பெறுகிருன்; பசுக்களின் பட்டியைத் திறக்கிருன்.

5. சோதியில் தோன்றும் விஷ்ணு நல்ல செயல் களை நடத்துபவர்களின் நடுவே உத்தமனுயிருக்கிருன். யக்ஞம் செய்பவனிடம் வருகிருன்; உதவியளிக்கிருன்; தோற்றுவிக்கும் அவன் மூவ்வுலகங்களிலுமிருக்கிருன்; ஆரியனுக்கு-தலைவனுக்கு - உதவுகிருன்; கருத்தாவுக்கு ருதபாகத்தைத் தருகிருன். 1,644

## 157. அக்கினி

### 157. தீர்க்கதமன்—உசித்யனின் புதல்வன்

1. அக்கினி புவியின் மீது எழுப்பப்படுகிருன். சூரியன் எழுகிருன். மகத்தான உஷை தன் காந்தியால் அனைவரையும் மகிழ்வித்து இருளை நீக்கினுள். தேவ ஸவிதா எல்லா சீவர்களையும் அவரவர் செயல்களிலே செலுத்த, அசுவினிகளே! நீங்கள் யக்ஞத்துக்கு வர உங்கள் தேரை இணையுங்கள்.

2. அசுவினிகளே! நீங்கள் வர்ஷிக்கும் தேரை இணைக்குங்கால் எங்கள் க்ஷத்திரத்தைத் தேனுலும், நெய்யாலும் பலப்படுத்துங்கள். எங்கள் தோத்திரத் துக்குப் போரிலே ஜயமளிக்கும் பலத்தை யளியுங்கள். வீரர்களின் போராட்டத்திலே நாங்கள் செல்வத்தை யடைவோமாக.

3. அசுவினிகளின் மூன்று சக்கரங்கள் உள்ளதும், தேனேடு நிறைக்கப்பட்டதும், துரித குதிரைகளால் இழுக்கப்படுவதும், மூன்று பீடங்களிருப்பதும், செல்வ மேந்துவதும், எல்லா சௌபாக்கியங்களைத் தருவதும், நன்கு போற்றப்படுவதுமான தேர் எங்கள் அருகில்



வருக. அது எங்களுக்கும், எங்கள் பசுக்களுக்கும், எங்க ளாட்களுக்கும் சுகத்தைத் தாங்கி வருக.

4. இரு அசுவினிகளே! எங்களுக்குப் பலத்தை யளியுங்கள். உங்களுடைய தேன்மொழியால் எங்களை ஊக்கப்படுத்துங்கள். எங்களுடைய ஆயுளை நீட்டுங் கள். எங்களுடைய பாவங்களை நீக்குங்கள். எங்க ளுடைய பகைவர்களை விலக்குங்கள். எங்களுடைய நண்பர்களாயிருங்கள்.

5. அசுவினிகளே! நீங்கள் எல்லாச் சலனப் பிராணிகளின் கருவைத் தாங்குகிறீர்கள். எல்லாச் சீவர்களின் உள்ளங்களில் இருக்கிறீர்கள். வர்ஷிக்கும் நீங்கள் எங்களுக்கு அனலையும், சலத்தையும், காடு களின் மரங்களையும் அளியுங்கள்.

6. நீங்கள் இருவரும் எல்லா மருந்துகளையும் அறி யும் மருத்துவர்கள்—நன்கு பழக்கப்பட்ட குதிரைகளால் இழுக்கப்படும் தேரிலே செல்லுகிறீர்கள். உங்களுடைய க்ஷத்திரம் சிறப்புள்ளது. மனத்தோடு அவியளிப்பவனை ஆதரியுங்கள். 1,650

## 158. அசுவினிகள்

### 158. தீர்க்கதமன்-உசித்யனின் மகன்

1. வர்ஷிப்பவர்களே! பகையழிப்பவர்களே! இரு வசுக்களும், ருத்திரர்களும், பலரையறிபவர்களும், தோத்திரத்தினுல் வளர்பவர்களும், விருப்பங்களைப் பூர்த்தி செய்பவர்களுமான நீங்கள், எங்களுக்கு விரும்பு வதை யளியுங்கள். ஔசித்யன் உங்களுக்குச் செல் வத்தை—அவியைத் தருகிருன். நீங்கள் தடைபடாத பாலனங்களால் வழிபடுபவர்களைப் பாலிக்கிறீர்கள்.

2. வசுக்களே! எவன் உங்களுடைய ஸுமதிக்குத் தக்க அவியையளிக்க இயலும்? யக்ஞாருக இடத்திலே எங்களுடைய துதியைச் செவியுற்று, உணவோடு எங்க ளுக்கு மிகுந்த செல்வத்தைத் தர விரும்புகிறீர்கள். சரீரத்தைப் புஷ்டி செய்பவையும், பாற்செல்வமுள்ளவை

யுமான பசுக்களை எங்களுக்களியுங்கள். விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் மனத்தோடு வாருங்கள்.

3. அசுவினிகளே! பூர்வத்தில் நீங்கள் சலங்களின் நடுவே திட்டப்பட்டதும், திட்பமாயிருப்பதும், கடலைக் கடப்பதுமான தேரை, துக்ரனின் புதல்வனை மீட்க திருத்தினீர்கள். நான் உங்களுடைய பாலனத்தையும், சரணத்தையும் பறக்குங் குதிரைகளால் போரிலே ஜயித்து மனைக்குச் செல்லும் சூரனைப் போல் அணுகு வேனாக.

4. அசுவினிகளே! உங்கள் இருவருக்கும் கூறப் படும் துதிகள் ஔசித்யனைப் பாலிக்க. பறந்து செல்லும் இரவுகளும் பகல்களும் என்னைத் தளர்த்தாம லிருக்க. பத்துத் தடவை மூட்டப்பட்ட தணலும் என்னைத் தகிக்காமலிருக்க. உங்களைத் தஞ்சமடைந்த பாசங் களால் கட்டப்பட்ட நான், புவியைக் கவ்வாமலிருப் பேனாக.

5. தாஸர்கள் இந்த மெலிந்த கிழவனை அதோமுக மாய் நீரிலே தள்ளினார்கள். தாய்மார்களான சலங்கள் என்னை அமிழ்த்தாமலிருக்க. என்னுடைய தலையை, தாஸனான திரைதனன் காயப்படுத்தினான். அப்படியே அவன் தலையையும் காயஞ்செய்து கொண்டான். அவன் தன் மார்பையும், தோள்களையும் அடித்துக்கொண்டான். 1,655

6. மமதையின் புதல்வனான தீர்க்கதமன் பத்து யுகங் களுக்குப் பிறகு மூப்படைந்தான். அவன் தூயச் செயல்களின் நோக்கத்தை அடைய விரும்புபவர் களுக்குப் பிரம்மமாயிருக்கிறான். அவர்களின் சாரதியாயு மிருக்கிறான். 1,656

## 159. சோதியும் புவியும்

### 159. தீர்க்கதமன்-உசித்யனின் மகன்

1. நான், பேரறிஞர்களும், ருதத்தை வளர்ப்பவர் களும், தேவர்களைப் புதல்வர்களாக உள்ளவர்களும், தேவர்களோடு சேர்ந்து உத்தமச் செயலுடன், சத்திய சிந்தனையுடன் விரும்பத் தகுந்த செல்வங்களை அளிப்ப வர்களான, மகான்களையும், சொர்க்கத்தையும் புவியை யும் யாகங்களிலே யக்ஞங்களால் போற்றுகிறேன்.



2. நான் என் அழைப்புக்களோடு துரோகமில்லாத தந்தையின் மனத்தையும், தாயின்-புவியின்-மகத்தான தானே துலங்கும் அன்பையும் தியானிக்கிறேன். தாயும் தந்தையும் தங்களின் உத்தம ரேதஸால் பிரஜை களுக்கு உத்தம பாலனங்களோடு மிகுந்த பரந்த அமி ருதத்தைத் தந்தார்கள்.

3. உங்களுடைய புதல்வர்கள் நல்ல செயலா ளர்கள்; அழகுள்ளவர்கள். உங்களுடைய பழைய அன்பை ஞாபகஞ் செய்து, அவர்கள் உங்களைப் பெரிய பெற்றோர்கள் எனத் தெரிந்து கொள்கிறார்கள். ஸ்தாவரச் சங்கமப் பொருள்களின் சத்தியத்தைப் பாலிக்க, உங்களுடைய கபடமறியாத புதல்வனின் பதத்தைப் பாலிக்கிறீர்கள்.

4. ஒரு உதரத்தில் தோன்றியவர்களும், சகோதரி களுமான சோதியும் புவியும் ஒரே இடத்தில் வசிக்கிறார் கள். அவர்களிடம் அறிவுண்டு. அவர்கள் சைதன் யத்தை யளிக்கிறார்கள். கிரணங்கள் அவர்களை அளக் கின்றன. தங்கள் செயல்களை அறிபவையும், மிக்கப் பிரகாசிப்பவையும், விளங்குபவையுமான அவை வானின் நடுவே புதிய புதிய இழைகளைப் பரத்து கின்றன.

5. இன்று நாங்கள் ஸவிதாவின் பிரேரணையிலே வரிக்கத் தகுந்த அந்த செல்வத்தை விரும்புகிறோம். எங் களுக்கு சோதியும் புவியும் அனுக்கிரகித்து மனையும், நூற்றுக் கணக்கான பசுக்களுமுள்ள செல்வத்தை அளிப் பார்களாக. 1,661

## 160. சோதியும் புவியும்

### 160. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

1. இந்த சோதியும்-விண்ணும்-புவியும் அனைவருக்கும் சுகத்தைத் தருபவர்கள்; சத்தியத்தை ஊக்கப்படுத்துபவர்கள்; மழையின் சலத்தை ஏந்தும் ஆற்றலுள்ளவர்கள். உத்தமப் பிறவிகளான அவர்கள் செயலிலே உறுதியுள்ளவர்கள். அவர்களின் நடுவே சுத்தனும், துலங்குபவனுமான சூரியன் கடமைகளைச் செய்யச் செல்லுகிறான்.

2. விரிந்து பரந்தவர்களும், மகான்களும், தனித்திருப்பவர்களும், தாயும் தந்தையுமான அவர்கள் புவனங்களைப் பாலிக்கிறார்கள். தேகிகளின் நலத்துக்குத் தீரமாய்த் தாங்குபவர்கள் போல் வானமும் வையகமும் இருக்கிறார்கள்; தந்தை வடிவங்களால் ஒவ்வொன்றையும் நிலைப்படுத்துகிறான்.

3. இந்த வானம்-வையங்களின் புதல்வன்-சுத்தப்படுத்தும் ரசிமிகளுள்ளவன்; தீரன்; ஏந்துபவனான அவன் புவனங்களைத் தன் அறிவால் சுத்தப்படுத்துகிறான். அவன் வெண்மையான பசுவையும், புவியையும், உத்தம ரேதஸுள்ள விருஷபனான வானையும், எப்பொழுதும் சுத்தப்படுத்துகிறான். ஒளிப்படுத்துகிறான். அவன் ஒளி உலகத்திலிருந்து தினந்தோறும் நிர்மலமான பாலைக் கறக்கிறான்.

4. அவன் தேவர்களின் நடுவே மிக்கத் தேவத்தன்மையுள்ளவன்; செயலாளர்களின் நடுவே உத்தமச் செயலாளன். அவன் விசுவத்தை சுகப்படுத்தும் வையத்தையும் விண்ணையும் பிறப்பித்தான்; அவன் தன் உத்தம அறிவால் புவியையும் ஒளி உலகையும் அளந்தான்; தனிப்படுத்தினான்; அவர்களை அழியாத தம்பங்களால் நிலைப்படுத்தினான்.

5. வையமே! வானே! நீங்கள் எங்களால் போற்றப்பட்டு, எங்களுக்கு மகத்தான புகழையும் மிகுந்த க்ஷத்திரத்தையும் அளியுங்கள். அவற்றால் நாங்கள் தினந்தோறும் மக்களைப் பெருக்குவோமாக; போற்றத்தகுந்த பலத்தை எங்களுக்குத் தாருங்கள். 1,666



## 161. ரிபுக்கள்

### 161. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

1. நம்மிடம் வந்தவர்களிலே எவன் எங்களுக்கு மூத்தவனோ, எவன் எங்களுக்கு இளையவனோ, அவன் தேவர்களுடைய தூதச் செயலுக்காக எங்களிடம் வந்தானா? நாம் அவனிடம் எதைக் கூறவேண்டும்? அக்கினியே! சகோதரனே! நாங்கள் மகத்தான குலத்தில் தோன்றிய ஸோம கலத்தை நிந்தியோம்; நாங்கள் மாமய கலத்தின் மேன்மையை வற்புறுத்துவோம்.

2. அக்கினி கூறுகிறான்: ஒன்றாக இருக்கும் ஸோம கலத்தை நான்காய்ச் செய்யுங்கள். தேவர்கள் இங்ஙனம் உங்களை ஏவுகிறார்கள். ஸுதன்வப் புதல்வர்களே! நான் இதை உங்களிடம் சொல்ல வந்திருக்கிறேன்: நீங்கள் இதனை நிறைவேற்றினால் யக்ஞத்தில் தேவர்களோடு கலந்து கொள்ளத் தகுதி பெறுவீர்கள்.

3. பிறகு அவர்கள் தேவர்களின் தூதனான அக்கினிக்குப் பதிலைக் கூறினார்கள். குதிரையைக் கற்பிக்க வேண்டும்; இங்கு தேரைச் செய்யவேண்டும்; பசுவைச் சிருட்டிக்க வேண்டும்; இருவரை இளமைப் படுத்தவேண்டும். நீ கூறிய இச் செயல்களை எல்லாம் நிறைவேற்றி சகோதரனான அக்கினியே! பிறகு நீ விரும்பும் எதையுஞ் செய்ய உன்னிடம் வருவோம்.

4. ரிபுக்களே! நீங்கள் இச் செயலை முடித்தவுடன் வினவினீர்கள்: தூதனாய் நம்மிடம் வந்தவன் எங்கே சென்றான்? அப்பொழுது துவஷ்டா ஒன்றாயிருந்த கலம் நான்காய் இருப்பதைக் கண்டபோது அவன் ஸ்திரிகளின் நடுவே மறைந்து கொண்டான்.

5. அப்பொழுது துவஷ்டா சொன்னான்: தேவர்கள் பருகச் செய்யப்பட்ட மதுக் கலத்தை அசுத்தப் படுத்தியவர்களை நாம் கொல்லுவோமாக; பிழியப்பட்ட ஸோமம் ஊற்றப்படுங்கால் தங்களை ஒருவரை ஒருவர் வேறு பெயர்களால் அழைத்துக் கொண்டார்கள். கன்னிகை-

துவஷ்டாவின் மகள்-உஷை வேறு பெயர்களால் அவர்களை அழைத்தாள். 1,671

6. இந்திரன் தன் குதிரைகளைக் கோலப்படுத்தினுன். அசுவினிகள் தேரை இணைத்தார்கள். பிரகஸ்பதி விசுவருபமான பசுவை ஏற்றுக் கொண்டான். ஆதலால் ரிபுவும், விபுவும், வாஜனுமான நீங்கள் தேவர்களிடஞ் சென்றீர்கள். நல்ல செயல்களை நடத்தும் நீங்கள் யக்ஞத்தில் உங்கள் பாகத்தை அடைந்தீர்கள்.

7. ஸுதன்வப் புதல்வர்களே! இறந்த பசுவின் தேகத்திலிருந்து சருமத்தை எடுத்து அதனுல் புதிய பசுவைப் புலப்படுத்தினீர்கள். உங்களுடைய உத்தமச் செயல்களால் மூப்படைந்த பெற்ருேர்களை இளமைப் படுத்தினீர்கள். ஒரு குதிரையிலிருந்து வேறு குதிரையைச் செய்தீர்கள். உங்கள் தேரை இணைத்தீர்கள். தேவர்களிடம் சென்றீர்கள்.

8. தேவர்கள் சொன்ஞர்கள்: ஸுதன்வப் புதல்வர்களே! இந்த சலத்தை-ஸோமரஸத்தைப் பருகுங்கள். முஞ்சப் புல்லால் வடிகட்டப்பட்ட ரஸத்தைப் பானஞ் செய்யுங்கள். எதனுலும் திருப்தியாகமலிருந்தால் மாலை யக்ஞத்தின் பானத்தால் மதப்படுங்கள்.

9. ரிபுக்களிலே ஒருவன் சொன்ஞன்: சலங்கள் மிகச் சிறந்தவர்கள், வேருெருவன் அக்கினி மிகச் சிறந்தவன் எனக் கூறினுன்; புவியே மிகச் சிறந்தவள் என மற்றவன் பலரிடம் கூறினுன். இங்ஙனம் சத்தியத்தைக் கூறும் ரிபுக்கள் ஸோம கலத்தை நான்காய்ச் செய்தார்கள்.

10. ஒருவன் புவியின் மீது சிகப்புச் சலத்தைப் பொழிகிருன். ஒருவன் மாமிசத்தை வெட்டுகிருன். வெட்டுக் கத்தியால் துணித்துத் துண்டப்படுத்துகிருன். ஒருவன் வேறு பாகங்களிலிருந்து மலத்தைப் பிரிக்கிருன். பெற்ருேர்கள் புதல்வர்களுக்கு எங்ஙனம் உதவி செய்கிருர்கள்? 1,676



11. ரிபுக்களே! மழையின் தலைவர்களான நீங்கள், உச்ச ஸ்தானங்களிலே புல்லைத் தோற்றுவித்தீர்கள். உத்தமச் செயல்களைச் செழிப்பிக்க, தாழ்ந்த இடங்களில் சலங்களைப் பெருகச் செய்தீர்கள். கிரகிக்கப்படாத தன்மையுள்ள சூரிய மண்டலத்திலே இதுவரை சயனித்தீர்கள் - இருந்தீர்கள். இனி இங்ஙனமிருக்காதீர்கள். உங்களுடைய இந்தச் செயலை நடத்த இன்று தவருதீர்கள்.

12. நீங்கள் மேகங்களிலே புவனங்களை மறைத்துக் கொண்டு சரியுங்கால் உலகத்தின் பெற்ருேர்கள்-சூரியனும் சந்திரனும்-எங்கிருந்தார்கள்? உங்கள் கையைத் தடுப்பவனை நாசப்படுத்துங்கள். மரியாதையில்லாமல் பேசுபவனிடம் கடுமையாய்ப் பதிலளியுங்கள்.

13. ரிபுக்களே! சூரிய மண்டலத்திலே சயனிக்கும் நீங்கள், சூரியனிடம் வினவுகிறீர்கள்: எவராலும் பற்ற முடியாத சூரியனே! மழையைத் தோற்றுவிக்கும் இச் செயலை நடத்த எங்களை எவன் எழுப்புகிருன்? சூரியன் பதிலளிக்கிருன்: காற்று உங்களை எழுப்புகிருன். வருடம் முடிந்து விட்டது. இன்று மீண்டும் நீங்கள் இவ்வுலகத்தை ஒளிப்படுத்துங்கள்.

14. பலத்தின் புதல்வர்களே! மருத்துக்கள் உங்களைக் காண விரும்பி சோதியிலிருந்து வருகிருர்கள். அக்கினி உங்களைக் காண புவியிலிருந்து நெருங்குகிருன். வாயு வானிலிருந்து அணுகுகிருன். வருணன் சமுத்திர சலங்களோடு வருகிருன். 1,680

## 162. குதிரை

### 162. தீர்க்கதமஸ்-உசித்யனின் மகன்

1. நாங்கள் சபையிலே தேவர்களிடம் தோன்றிய துரிதமான குதிரையின் வீரச் செயல்களைப் போற்றுங்கால், மித்திரனும், வருணனும், அர்யமானும், ஆயுவும், இந்திரனும், ரிபுக்ஷனும், மருத்துக்களும் எங்களை நிந்திக்காமலிருப்பார்களாக.

2. சுத்தப்படுத்தப்பட்ட செல்வாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட குதிரையின் முன்னே ரித்விஜர்கள் பற்றப்பட்ட அவியைச் செலுத்துங்கால், மே மே சத்தஞ் செய்து கொண்டு அதன் முன்னே போகும் விசுவ ரூபமான—அவியாம்—அஜம் இந்திரனுக்கும் பூஷண னுக்கும் ஏற்ற உணவாகிறது.

3. இந்த ஆடு பூஷாவுடைய—அக்கினியின்—பாகம் எல்லாத் தேவர்களுக்கும் பிரியமாயிருக்கிறது. துரித குதிரையோடு முதலில் செலுத்தப்படுகிறது. துவஷ்டா, குதிரையோடு அதை முன்னே, புகழுக்காக யக்ஞத் துக்கு ஏற்றதாக இயக்குகிறன்.

4. மனிதர்கள் பருவத்திலே, தேவர்களிடம் செலுத்துவதர்க்குரிய அவியாம் குதிரையை மும்முறை அனலைச் சுற்ற நடத்துங்கால், பூஷாவுடைய பாகமான ஆடு, தேவர்களுக்கு யக்ஞத்தை அறிவித்துக்கொண்டு முன்னே போகிறது.

5. ஹோதாவும், அத்வர்யுவும், அவியளிப்பவரும், அக்கினியை எழுப்புபவரும், ஸோமத்தைப் பிழிபவரும், நடத்துபவரும், பேரறிஞருமான நீங்கள், நன்கமைக்கப் பட்டு, நன்கு நடத்தப்படும் யக்ஞத்தால் நதிகளை நிரப்புங்கள். 1,685

6. யூபத்துக்காக மரத்தை வெட்டுபவர், கட்டை யைத் தூக்குபவர், யூபத்தின் உச்சியிலே குதிரையைக் கட்ட இணைப்பதிவைச் செதுக்குபவர், குதிரைக்காகப் பாகப் பாத்திரங்களைச் சேர்ப்பவர்—இவர்களுடைய முயற்சிகள் எங்கள் எண்ணங்களை நிறைவேற்றுக.

7. எங்களுடைய மனோரதம் சுயமாகவே நிறை வேறுக. இனியாங்கமுள்ள குதிரை தேவர்களுடைய ஆசைகளைப் பூர்த்தி செய்ய வருக. அதை நாங்கள் தேவர்களைப் புட்டிப்படுத்தப் பந்தஞ் செய்கிறோம். ரிஷி களும் விப்பிரர்களும் இன்புறுவார்களாக.

8. குதிரையின் கழுத்திலும், கால்களிலும் சேர்க்கப் படும் வடங்களும், வார்களும், இடை ரசிசிகளும், கோலச்



சாமான்களும், அதன் வாயினுள் வைக்கப்பட்ட புல்லும்—இவை அனைத்தும் குதிரையோடு தேவர் களிடம் செல்க.

9. ஈயால் புசிக்கப்பட்ட எந்தப் பச்சை மாமிசப் பகுதியும், கம்பிலோ கோடரியிலோ பூசப்பட்ட எந்த மேதையின் பகுதியும், வெட்டுபவனுடைய கைகளிலோ, நகங்களிலோ படிந்துள்ள அந்த ரஸப் பகுதியும்—இவ் வனைத்தும் குதிரையே! உன்னோடு தேவர்களிடஞ் செல்க.

10. அவனுடைய உதிரத்திலிருந்து உதிரும் எந்த *சீரணமாகாத* புல்லும், 'பச்சை மாமிசத்தில் மிச்சமா யிருக்கும் எதுவும்—இந்த அனைத்தையும் வெட்டுபவர்கள் மாசு நீக்கி, சுத்த அவியைத் தேவர்களுக்குப் பக்குவப் படுத்துவார்களாக. 1,690

11. நெருப்பிலே வாட்டப்படுங்கால் சூலத்தி லிருந்து விழும் துணித்த தேகத்திலிருந்து புவியிலோ, தருப்பையிலோ எத்துண்டும் விடப்படாமலாகுக. இவ் வனைத்தும் விரும்பும் தேவர்களுக்கு அளிக்கப்படுக.

12. குதிரை பாகமாவதைப் பார்த்து—பக்குவப் படு வதைப் பார்த்து—வாசனை வீசுகிறது. எங்களுக்கும், குதிரையின் மாமிசத்தை, யாசகமாகக் கேட்பவர்களுக் கும் கொஞ்சம் அளியுங்கள். இவர்கள் முயற்சிகள் எங்கள் நலத்துக்காகுக.

13. மாமிசம் கொதிப்பிக்கப்படும் பாத்திரத்திலே, மாதிரி பார்க்க அமிழ்த்தப்படும் கம்பு, ரஸத்தை வழங் கும் பாண்டங்கள், தட்டுக்களின் மூடிகள், வாட்டுஞ் சலாகைகள், கத்திகள் எல்லாம் குதிரையை யலங்கரிக் கின்றன.

14. புறப்படும் இடம், தங்குமிடம், புவியிலே புரளும் இடம், கால் கட்டின் இடம், பருகப்பட்ட சலம், தின்னப்பட்ட புல்—இவையனைத்தும் உன்னோடு தேவர்களிடஞ் சேர்க.

15. கந்தப் புகையுள்ள அக்கினி உன்னைக் கதறச் செய்யாமலிருக்க. சுகந்தமுள்ளதும், பிரகாசிப்பதுமான கடாரம் கவிழாமலிருக்க. தேவர்கள் யக்ஞத்துக்காக ஆய்ந்தெடுக்கப்பட்ட குதிரையை ஏற்கிருர்கள். அனலைச் சுற்றிச் செலுத்தப்பட்டதும், பக்தியோடு அளிக்கப் பட்டதும், வஷட் முழக்கத்தால் வண்ணப்பட்டதுமான குதிரையைத் தேவர்கள் பெற்றுக் கொள்கிருர்கள். 1,695

16. குதிரைக்குப் போர்வையாகப் பரத்தப்பட்ட ஆடை, அலங்கரிக்கும் பொன்னுபரணங்கள், தலை வடங்கள், நால்வார்கள்—இவை தேவர்களுக்குப் பிரிய மானவை. ரித்விஜர்கள் இவற்றைத் தேவர்களிடம் செலுத்துகிருர்கள்.

17. நீ உன் பலத்திலே பெரு மூச்சுவிடுங்கால், நீ செல்லும்போது காலாலோ, கசையாலோ உன்னை எவ னேனும் அடித்திருந்தால், அந்த வருத்தங்களை யெல் லாம் துடுப்பால் அவிகளைப் போல் மந்திரத்தால் நான் ஆகுதி செய்கிறேன்—நீக்குகிறேன்.

18. தேவர்களுக்குப் பிரியமான துரித குதிரையின் மூப்பத்து நான்கு என்புகளிலே கத்தி செல்லுகிறது. அங்கங்கள் பாழாகாமலிருக்கக் குதிரையைத் திறமை யுடன் வெட்டுங்கள். அவற்றைத் துணிக்குங்கால், ஒவ்வொரு துண்டின் பெயரையுங் கூறுங்கள்.

19. பிரகாசமுள்ள குதிரையைத் துணிப்பவன் ஒருவன்—காலன்—இருக்கிருன். அவனை இருவர் இரவும் பகலும் ஏந்துகிருர்கள். நான் தக்க சமயத்தில் உன்னு டைய எந்த அங்கங்களைத் துணிக்கிறேனே, அவற் றைப் பிண்டமாகச் செய்து, அக்கினியிலளிக்கிறேன்.

20. குதிரையே! நீ தேவர்களிடஞ் செல்லுங்கால் உன்னுடைய பிரியமான தேகம் உன்னை வருத்தப்படுத் தாமலிருக்க. கத்தி, தேகத்தில் தங்காமலிருக்க. திறமையற்றவனும், பேராசையுமுள்ள காதகன், அங்கங் களைத் தவறி தன் கத்தியால் அனுவசியமாய் உன் உறுப்புக்களைச் சின்னு பின்னப்படுத்தாமலிருக்க. 1,700



21. இல்லை; இங்கு நீ சாகவில்லை; நீ துன்பமாக வில்லை. ஏனெனில், நீ மங்களமான வழிகளால் தேவர் களிடஞ் செல்லுகிருய். இந்திரனின் குதிரைகளும், மருத் துக்களின் அசுவங்களும், அவர்களுடைய தேர்களிலே இணைக்கப்படும். உன்னை சோதிக்கு வகித்துச் செல்ல— அசுவினிகளின்—கழுதையின் நுகத்துக்குக் குதிரை இணைக்கப்படும்.

22. இந்தக் குதிரை எங்களுக்கு, மிருந்த பசுக் களும், உத்தமக் குதிரைகளும், வீரப் புதல்வர்களு முள்ள விசுவத்தைத் தாங்கும் செல்வத்தை ஏந்தி வருக. எங்களுக்கு அதிதி—குதிரை—பாபத்திலிருந்து விடுதலையை யளிப்பாளாக. குதிரை அவிகளோடு எங்களுக்கு க்ஷத்திரத்தை யளிப்பாளாக. 1,702

## 163. குதிரை

### 163. தீர்க்கதமன்—உசித்யனின் புதல்வன்

1. குதிரையே! உன்னுடைய மகத்தான ஜன்மம் அனைவராலும் போற்றத் தகுந்தது. நீ முதல்வனுய் வானி லிருந்தோ, சலத்திலிருந்தோ பிறந்து முழங்கினுய். உனக் குப் பருந்தின் சிறகுகளும், மானின் கால்களும் இருக் கின்றன.

2. யமனுல் அளிக்கப்பட்ட குதிரையைத் திரிதன் இணைத்தான். இந்திரன் அதன் மீது முதலில் ஏறினுன். கந்தர்வன் அதன் வாய் வடங்களைப் பிடித்தான். வசுக் களே! நீங்கள் குதிரையைச் சூரியனிடமிருந்து கற்பித் தீர்கள்.

3. குதிரையே! நீ யமன்; நீ ஆதித்தியன்; மரும மான விரதத்தால் நீ திரிதன். நீ ஸோமனேடு கூடச் சேர்ந்திருக்கிருய். சோதியிலே உனக்கு மூன்று பந் தனங்கள் இருக்கின்றன என அறிஞர்கள் கூறினுர்கள்.

4. சோதியிலே உனக்கு மூன்று பந்தனங்கள் என அவர்கள் சொன்னுர்கள். புவியிலே மூன்று, வானில்

மூன்று எனவும் கூறினார்கள். குதிரையே! வருணனுன நீ, உன்னுடைய உத்தம சன்ம ஸ்தானங்கள் எனக் கூறப் படும் இடங்களைக் கூறுகிருய்.

5. குதிரையே! யக்ஞத்திலே பங்கு கொள்ளும் உன்னுடைய இந்த சுத்தப்படுத்தும் ஸ்தானங்களை, உன்னுடைய கால்களின் இந்தச் சுவடுகளை நான் கண்டேன். நான் இங்கு ருதத்தின்-ருதத்தை-பாவிக்கும் மங்களமான வாய் வடங்களைக் கண்டேன். 1,707

6. அசுவமே! நான் தூரத்திலிருக்கும் உன் ஆத்மாவை என் மனத்தால் காண்கிறேன். நீ கீழே புவியிலிருந்து வானின் வழியாய்ச் சூரியனிடஞ் செல்லுகிருய். புழுதியால் பங்கமாகாமலிருப்பதும், தடைபடாமல் செல்வதும், உச்சத்தில் பறந்து மேலேறுவதுமான உன்னுடைய தலையை நான் காண்கிறேன்.

7. நான், உன்னுடைய புவியின் பதத்திலே உன்னுடைய உணவைப் பெற்றுக் கொள்ளவரும் உன்னுடைய மிக்க உத்தம வடிவத்தைக் காண்கிறேன். மானிடன், நீ தீனியைப் புசித்து இன்புற உனக்குப் புல்லை ஏந்தி உன்னருகில் வந்தவுடன் அவாவுற்று ஓஷதிகளைப் புசிக்கிருய்.

8. குதிரையே! உன்னைத் தேர் தொடர்கிறது. மானிடர்கள் உன்னைத் தொடர்கிருர்கள். பசுக்களும் தொடர்கின்றன. பெண்களின் பாக்கியம் உன்னைப் பற்றுகிறது. தேவ கணங்கள் உன்னைத் தொடர்ந்து உன்னுடைய நட்பை நாடுகின்றன. தேவர்கள் உன்னுடைய வீரச் செயலைப் போற்றுகிருர்கள்.

9. அவன் தங்கக் கொம்புள்ளவன்; தலையுள்ளவன்; அவனுடைய கால்கள் இரும்பாலானவை; அவன் மனோ வேகமுள்ளவன். வேகத்திலே அவனுக்கு இந்திரன் தாழ்ந்தவன். தேவர்கள் அசுவ அவியைப் புசிக்க வந்தார்கள். முதலில் குதிரையின் மீது ஏறியவன் இந்திரன்.



10. சோதியின் வழியில் குதிரைகள் செல்லுங்கால், பருத்த சகனங்களுள்ள, சிறிய இடைகளுள்ள, மிக்க வீரமுள்ள சூரியனின் குதிரைகள் ஹம்சங்களைப் போல் அணிவகுத்து இசைந்து பாய்கின்றன. 1,712

11. குதிரையே! உன் தேகம் பறக்குந் தன்மையுள்ளது. உன் மனம் காற்றைப் போல் துரிதமாயிருக்கிறது. உன் கேசங்கள் அழகாய்க் காடுகளிலே பரவுகின்றன.

12. குதிரை தேவர்களிடம் செல்லும் மனத்தோடு தியானஞ் செய்து பலியிடும் இடத்துக்கு வருகிறது. பந்துவான அஜம் முன்னே செலுத்தப் படுகிறது. அதைப் பாடுபவர்களும், புலவர்களும் பின்பற்றுகிருர்கள்.

13. குதிரை உத்தமமாயுள்ள சபைக்குச் செல்லுகிறது. தாய் தந்தைகளின் முன்னே போகிறது குதிரையே! நீ இன்பமாகி, தேவர்களிடஞ் செல்லவும். ஈகையன் உத்தமச் செல்வங்களைப் பெறுவாஞக. 1,715

## 164. விசுவே தேவர்கள்

### 164. தீர்க்கதமன்-உசித்யனின் புதல்வன்

1. இந்தப் பிரியனும், பலிதனுமான ஹோதாவின் நடுச் சகோதரன் எங்கும் பரவியிருக்கிருன். மூன்ருவது சகோதரன் நெய் முதுகுள்ளவன். நான் இந்தச் சகோதரர்களின் நடுவே, ஏழு புதல்வர்களோடுள்ள சனங்களின் தலைவனைக் காண்கிறேன்.

2. எழுவர் ஒரு சக்கரமுள்ள தேரை ஏந்துகிருர்கள். ஏழு நாமங்களுள்ள குதிரை அதை இழுக்கிறது. சக்கரத்துக்கு மூன்று நாபிகள்-இருசுகள்-உண்டு. சக்கரம் தேயாது. அது தளராது. அங்கு எல்லா சீவர்களும் நிலைக்கிருர்கள். ஏழு சக்கரங்கள் உள்ளதும், ஏழு குதிரைகளால் ஏந்தப்படுவதுமான இந்தத் தேரிலே எழுவர் அமர்ந்திருக்கிருர்கள். இதன் முகப்பிலே ஏழு சகோதரிகள் வருகிருர்கள். இதில் பசுக்களின் ஏழு நாமங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன.

4. எவன் முதலில் தோன்றியதைக் கண்டான்? என்புள்ளதைத் தாங்கும் என்பற்ற பொருள் எது? புவியிலிருந்து ரத்தமும் சுவாசமும் தோன்றுகின்றன. ஆனால் ஆத்மா எங்கிருந்து வருகிறது? இதைத் தெரிந்து கொள்ள எவன் அறிஞனிடம் செல்லலாம்?

5. அபக்குவனான நான் அறியாத மனத்தோடு தேவர்களுக்கும் தெரியாமலுள்ள இப்பதங்களை அறிய நான் வினவுகிறேன். அனைவரையும் அறியும் சூரியனைப் போர்த்த கவிகள் எந்த ஏழு இழைகளைப் பரத்துகிறார்கள்? 1,720

6. அறியாமலுள்ள நான் அறிந்து கொள்ள, உண்மையை அறியும் அறிஞர்களிடம் கேட்கிறேன். நான் தெரிந்து கேட்கவில்லை. எந்த ஏகன் பிறப்பற்ற வடிவமேந்தி இந்த ஆறு உலகங்களையுந் தாங்குகிறான்?

7. இந்த உண்மையை அறிபவன், சதா செல்பவனும், அழகனுமான சூரியனின் மர்மமான பதத்தைத் துரிதமாயறிவிப்பானாக. பசுக்கள் அவனுடைய தலையிலிருந்து பாலைப் பொழிகின்றன. அவை பரந்த தேஜசுடனாகி அங்ஙனமே மீண்டும் சலத்தைப் பருகுகின்றன. அவை சூரியனுடைய தேஜஸை யணிந்து காலால் சலத்தைப் பானஞ் செய்கின்றன.

8. தாய்–பூமி, தந்தையை–சூரியனை–ருதத்துக்காகத் தியானத்தோடு போற்றுகிறாள். அவன் தன் மனத்திலே அவளுடைய விருப்பங்களை முன்னதாகவே அறிகிறான். அவன் அவளோடு சேர்கிறான். மக்களை விரும்புமவள் அடிபட்டு கர்ப்ப ரஸத்தால் கலங்குகிறாள். அவர்கள் பாக்கியவான்களைப் போல் பரஸ்பரம் புகழ்ந்து கொள்கிறார்கள்.

9. தாய் புவியின் நுகத்தில் பந்தமானாள். மேக பந்திகளின் நடுவே சல சங்கம் நின்றது. கன்று கதறிற்று. அது விசுவருபமான பசுவை மூன்று சந்திகளிலே பார்த்தது.



10. மூன்று தாய்களையும், மூன்று தந்தைகளையும் ஏந்தும் ஏகன் மேலே நின்றான். அவனை எவனும் தளர்த்தான். சோதியின் உச்சியிலே தேவர்கள் பரஸ்பரம் பேசிக்கொள்கிறார்கள். இப் பேச்சை எவனும் அறியான். அதில் அனைவரின் பேச்சுமிருக்கிறது. 1,725

11. ருதனான சூரியனின் பன்னிரெண்டு பற்களுள்ள சக்கரம் வானைச் சுற்றி வட்டமிடுகிறது. அந்தச் சக்கரம் தேயாதது. அக்கினியே! அதில் 720 குழந்தைகள்–360 இரவுகளும், 360 பகல்களும் வசிக்கின்றன.

12. ஐந்து கால்களும் ருதுக்களும், பன்னிரெண்டு வடிவங்களும்–மாதங்களுள்ள சூரியன் சோதியின் தூரமான அர்த்தகோளத்திலிருக்குங்கால் அவனைப் புரீஷீ எனக் கூறுகிறார்கள். இங்குள்ள அர்த்தகோளத்திலிருக்குங்கால் அவனை அர்ப்பிதம் என மற்றவர்கள் சொல்கிறார்கள். அப்பொழுது அவன் ஒவ்வொரு சக்கரத்துக்கும் ஏழு பற்களுள்ள ஏழு சக்கரத் தேரிலே சூரியன் பிரகாசிக்கிறான்.

13. இந்த ஐந்து பற்களுள்ள வட்டமிடும் சக்கரத்திலே எல்லாப் புவனங்களும் நிலைக்கின்றன. மிக்கப் பாரம் ஏந்தும் அச்சு சூடாகாது. அதன் அனுதியான அழுத்தமான நாபி எப்பொழுதும் முறியாமலிருக்கிறது.

14. ஸமநேமியுள்ள தேயாத சக்கரம் அடிக்கடி வட்டமிடுகிறது–சுற்றுகிறது. மேற்புறத்திலே, இணைந்துள்ள பதின்மர் உலகத்தைத் தாங்குகிறார்கள். சலத்தால் வியாபகமாகும் சூரிய மண்டலம் செல்லுகிறது. அங்கு எல்லாப் புவனங்களும் அர்ப்பிதமாகின்றன–நிலைக்கின்றன–அதன் தீனத்திலாகின்றன.

15. உடன் பிறந்த ருதுக்களிலே ஏழாவதை அறிஞர்கள் தனிப் பிறவி எனக் கூறினார்கள். அறுவர்கள் இரட்டையர்கள். சலனமுள்ள அவர்கள் தேவர்களிடமிருந்து தோன்றினார்கள். அவர்களுடைய விரும்பத் தருந்த தன்மைகள் அவற்றிற்குரிய இடத்திலே தனித்

தனியாய் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன; அவர்கள்ரூப பேதத்திலே விவித வடிவமுள்ளவர்கள். தாவரப் பொருள்களின் நன்மைக்காக வட்டமிடுகிருர்கள். 1,730

16. இவர்கள் உண்மையாகப் பெண்களாயிருந்தாலும் அவர்கள் இவர்களை ஆண்கள் எனக் கூறிஞர்கள். சூரியனுடைய கிரணங்கள் சலத்தை ஏந்துங்கால் பெண்களாகவும், பொழியுங்கால் ஆண்களாகவுமிருக்கின்றன. கண்களிருப்பவன் காண்கிருன்; குருடன் காணுன். அறிஞுயுள்ள புதல்வன் இதை யறிகிருன். பெண்களும் ஆண்களுமான ரசிமிகளை யறிபவன் தந்தையின் தந்தையாகிருன்.

17. பசு தன் முன்கால்களால் கன்றை மேலே ஏந்தி பிறகு பின்கால்களால் மேலே ஏந்தி உயரத்தில் எழுந்தது. அது எங்கே சென்றது? பாதி வழியிலே அது யாருக்காகத் திரும்பி வந்தது? எங்கு கன்றீனிற்று? மந்தையின் நடுவே கன்றையளிக்கவில்லை.

18. கீழே இருக்கும் தந்தையான அக்கினியை மேலே இருக்கும் சூரியனேடு இணைத்தும், மேலே இருக்கும் சூரியனைக் கீழே இருக்கும் அக்கினியோடு சேர்த்தும் கிரமமாய் அறிபவன் அறிஞன் போல் நடந்து கொள்கிருன். இங்கு இதை எவன் விளக்குவான்? தேவத் தன்மையுள்ள மனம் எங்கிருந்து தோன்றுகிறது.

19. அறிஞர்கள் கிரணங்களை இறங்குபவர்கள் எனச் சொன்னுர்கள். கிரணங்களை ஏறுபவர்கள் எனவும் கூறினுர்கள். ஏறுபவர்களை இறங்குபவர்கள் எனவும் சொன்னுர்கள். இந்திரனே! ஸோமனே! உங்களால் தோற்றுவிக்கப்பட்ட ஒளி மண்டலங்கள் வண்டியில் இணைக்கப்பட்ட குதிரைகளைப் போல் உலகங்களை வகுத்துச் செல்லுகின்றன.

20. பரஸ்பரம் சேர்ந்து நட்புடன் இரு பறவைகள் ஒரே மரத்தில் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று இனிய



அத்திப் பழத்தைப் புசிக்கிறது. மற்றது புசிக்காமல் பார்த்தவண்ணமாகவே இருக்கிறது. 1,735

21. எங்கு சுபர்ணங்கள் அமிருதத்தின் பாகத்தைக் கடமைக்குரிய அறிவோடு இடையருமல் பாடுகின்றனவோ அங்கு விசுவ புவனத்தின் தலைவஞன பாலகன் இருக்கிருன். தீரஞன அவன் அபக்குபவஞன என்னுள் நுழைந்தான்.

22. எந்த மரத்திலே சுபர்ணங்கள் மதுவை அருந்தி எங்கு அவை அனைத்தும் தங்கி குழந்தைகளைத் தோற்றுவிக்கின்றனவோ அந்த மரத்தின் உச்சியின் மீதுள்ள அத்திப் பழம் தித்திக்கிறது என அறிஞர்கள் கூறுகிருர்கள். தந்தையை யறியாத எவனும் அந்தப் பழத்தை அடையான்.

23. புவியின் மீதுள்ள அக்கினியின் ஸ்தானத்தையும், வானிலிருந்து கற்பிக்கப்பட்ட வாயுவின் ஸ்தானத்தையும், சோதியில் ஸ்தாபிக்கப்பட்ட சூரியனின் அந்த ஸ்தானத்தையும் அறிபவர்கள் அமுதத்வத்தை அடைகிருர்கள்.

24. அவன் காயத்திரி சந்தத்தால் மந்திரத்தைக் கற்பிக்கிருன். மந்திரத்தால் ஸாமனைக் கற்பிக்கிருன் திருஷ்டுபுச் சந்தத்தால் ஈரடி மூவ்வடிச் செய்யுள்களைச் செய்கிருன். ஈரடி மூவடிச் செய்யுள்களால், ஈரடி அல்லது நான்கடிகள் உள்ள சூக்தத்தைச் செய்கிருன். அவர்கள் எழுத்தால் ஏழு சந்தங்களைக் கற்பிக்கிருர்கள்.

25. அவன் ஜகதீச் சந்த பாக்களால் சோதியிலே மழையை ஸ்தாபித்தான். அவன் ரதந்தர ஸாமனிலே சூரியனைப் பார்த்தான். அவர்கள் காயத்திரியை எழுப்ப மூன்று ஸமிதைகள்-பிரிவுகள்-உண்டு எனக் கூறினுர்கள். ஆதலால், காயத்திரி மேன்மையிலும் நோன்மையிலும் அனைத்தையும் முந்துகிறது. 1,740

26. திறக்கறவையான் அவனைக் கறக்க நான் சுலபமாய்ப் பாலையளிக்கும் பசுவை அழைக்கிறேன். அவனு

டைய தாபம் அதிகப்பட ஸவிதா இந்த உத்தமப் பாலைக் கிரகிப்பானாக. நான் இதற்காகவே அவனை அழைக்கிறேன்.

27. வசுக்களின் வசுப்பத்தினியான பசு தன் மனத்திலே கன்றை விரும்புபவளாய் ஹிங்கார முழக்கத்தோடு இங்கு வருகிறாள். இந்தப் பசு அவனுடைய பாலை அசுவினிகளுக்களிப்பாளாக. எங்களுடைய மகத்தான சௌபாக்கியத்துக்கு அவள் செழிப்பாளாக.

28. மூடிய கண்களுடன் நிற்கும் தன் கன்றுக்காகப் பசு கதறுகிறாள். அதன் நெற்றியைச் சுவைக்க அவள் செல்லுங்கால் அலறுகிறாள். கன்றின் வாய்களில் ஈரத்தை – நுரையைப் பார்த்து, கவலையுள்ளவளாகி முழங்குகிறாள் பாலையளித்து கன்றைப் புட்டிப்படுத்துகிறாள்.

29. கன்று விளங்காத சத்தத்தை எழுப்புகிறது. கன்றால் சூழப்பட்ட பசுவும் கதறிக் கொண்டு தொழுவத்துக்குச் செல்லுகிறாள். அவள் தன் இயற்கையான அறிவால், செயல்களில் மனிதனை முந்துகிறாள் மின்னலாகி தன் வடிவத்தைப் புலப்படுத்துகிறாள்.

30. சுவாசத்தோடுள்ள சீவன் கடமைகளில் ஆர்வமாகி இயங்குகிறான். நிலையாகி மனைகளின் நடுவே நிற்கிறான். மானிடனோடு தோன்றிய மானிடனின் அமர சீவன் சுவதாக்களைப் புசித்து சதா சலனமாகிறான். 1,745

31. நான், பல வழிகளால் வருபவனும், செல்பவனும், சலிக்காதவனுமான கோபனைக் கண்டேன். குவிக்கத்தக்க, பரவத்தக்கக் காந்தியையணிந்த அவன் புவனங்களின் நடுவே அடிக்கடி வந்து போகிறான்.

32. எவன் இதைத் தோற்றுவித்தானோ அவன் இதை அறியான். எவன் இதைப் பார்த்தானோ அது அவனிடமிருந்து மறைந்திருக்கிறது. இது தாயின் கர்ப்பாசயத்தினுள் மூடப்பட்டிருக்கிறது. பல புதல்வர்களுடனாகி நிர்ருதியில் நுழைந்தது நாசமாகிறது.



33. சோதி என் தந்தை, என்னைப் பிறப்பித்தவன் புவியின் நாபி என் பந்துவாகிறது. பரந்த நிலம் என் தாய். உயர்த்தப்பட்ட இரு பாண்டங்களின் நடுவே மூலஸ்தானமான வானமிருக்கிறது. வானிலே சோதி துஹிதாவைக் கருப்பப் படுத்தினான்.

34. நான், புவியின் பரம எல்லை எங்கே என உன்னிடம் கேட்கிறேன். உலகத்தின் நாபி எங்கே என உன்னிடம் கேட்கிறேன். வர்ஷிக்கும் குதிரையின் ரேதசு எது எனக் கேட்கிறேன். மொழியின் பரம நிலயம் எது எனக் கேட்கிறேன்.

35. இந்த வேதி புவியின் பரம எல்லையாகும். இந்த யக்ஞம் புவியின் பரம நாபியாகும். இந்த ஸோமம் வர்ஷிக்கும் குதிரையின் ரேதஸாகும். இந்தப் பிரமம் மொழியின் பரம நிலயமாகும். 1,750

36. ஆறு மாதங்கள் வரை கருவை ஏந்தும் ஏழு கதிர்கள் புவியின் ரேதஸாகின்றன. அவை விஷ்ணுவின் விவிதச் செயல்களிலே அவனுடைய ஆக்ஞையால் நிலைக்கின்றன. அவை அறிவாலும் மனத்தாலும் எங்கும் விரிகின்றன. அறிவுள்ள அவை எங்கும் பரவுகின்றன.

37. நான் இவ்வனைத்துமாகிறேனா என்பதை நன்றாக அறியவில்லை. மூட சித்தமுள்ள நான், பந்த மனமுடனிருக்கிறேன். நான் திரிகிறேன்; கலங்குகிறேன்; நான் சத்தியத்தின் முதல் தோன்றும்–ஞானத்தை–அடைந்தவுடன் இம்மொழியின் மேன்மையைப் பற்றுகிறேன்.

38. அநித்தியனின் சகோதரனான நித்தியன் சுவதாவால் பற்றப்பட்டு எழுகிறான்; விழுகிறான். இவர்கள் எப்பொழுதும் சேர்ந்திருக்கிறார்கள். இவ்வுலகில் எங்கும் இணைந்தே செல்லுகிறார்கள். அவ்வுலகிலும் எல்லா

இடங்களிலும் சேர்ந்தே இருவரும் போகிருர்கள். மனிதர்கள் அநித்தியனைக் காண்கிருர்கள்; நித்தியனைக் காணுர்கள்.

39. எல்லாத் தேவர்களும் பரமபதமான அட்சரத்திலே அமர்ந்திருக்கிருர்கள். இதை அறியாதவன் இருக்குங்கால் எதைச் செய்வான்? இதை—வேதத்திலிருக்கும் உண்மையை அறிபவர்கள்-நன்ருய் நிலைக்கிருர்கள்.

40. பசுவே! நீ நல்ல புல்லைத் தின்று பால் செல்வியாகவும். நாங்களும் செல்வத்தோடு இருப்போமாக. எல்லாப் பருவங்களிலும் புல்லைப் புசிக்கவும். இஷ்டம் போல் திரிந்து சுத்தமான சலத்தைப் பருகவும். 1,755

41. கௌரி—வாக்கு-மழை சலங்களைக் கற்பித்து எழுகிருள். ஒரு அடி, ஈரடி, நான்கடி, எட்டடி, ஒன்பதடி, பரம நிலயத்திரத்திலிருக்கும் ஆயிரம் அட்சரங்களுள்ள அவள் பாடுகிருள்.

### வாக்கும் சலமும்

42. மேகங்கள் அவளிடமிருந்து மிகுந்த சலத்தைப் பொழிகின்றன. அதனுல் நான்கு திசைகளிலிருக்கும் சனங்கள் சீவிக்கிருர்கள். அங்கிருந்து அக்ஷரம் பாய்கிறது. சலம், விளைவிக்கப் பரவுகிறது. அதனுல் உலகம் உயிரை ஏந்துகிறது.

### புகையும் ஸோமமும்

43. காய்ந்த பசுஞ்சாணகம் எரியப் படுவதால் தோன்றும் புகையை நானருகில் கண்டேன். எங்கும் பரவும் இந்த அதம தூமத்தால் மூல காரணமான அக்கினியைப் பார்த்தேன். பொழிவதும், பிரகாசமாயிருப்பதுமான ஸோமத்தை வீரர்கள் பக்குவப் படுத்துகிருர்கள். அவர்களுக்கு இவை முதற் கடமைகளாயிருக்கின்றன.

### கேசினர்கள்

44. கேசங்களுள்ள மூவர் பல ருதுக்களிலே-அவரவர்க்குரிய பருவத்திலே—புவியை நோக்குகிருர்கள். வர்ஷம் முடிந்தவுடன் ஒருவன்-அக்கினி—நிலத்தின் மூடியை வெட்டுகிருன். ஏகன்—சூரியன்-உலகத்தையெல்லாம் தன் செயல்களால் கவனிக்கிருன். ஒருவனுடைய-வாயுவின்—சலனம் தெரிகிறது. ஆனுல் அவனுடைய வடிவம் தெரியவில்லை.



### வாக்கு

45. வாக்கு நான்கு பாகங்களாக அளக்கப்படுகின்றன. அறிஞர்களான பிராமணர்கள் அவற்றை அறிகிருர்கள். மூன்று பாகங்கள் மறைவிடத்திலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அவை சலனமாகவில்லை. புலனுகவில்லை. மொழியின் நான்காவது பாகத்தை-பகுதியை மனிதர்கள் உச்சரிக்கிருர்கள். 1,760

### சூரியன்

46. அவர்கள், சூரியனை இந்திரன் எனவும், மித்திரன் எனவும், வருணன் எனவும், அக்கினி எனவும் கூறிஞர்கள். அவனே சோதியில் தோன்றும் சுபர்ணனை கருத்மானுவான். இருப்பவன் ஒருவன். அவனை அறிஞர்கள் பலவித நாமங்களால் அழைக்கிருர்கள். அவனை அக்கினி எனவும், யமன் எனவும், மாதரிசுவான் எனவும் கூறுகிருர்கள்.

47. இறக்கம் கருப்பாயிருக்கிறது. பறவைகள் பொன்னிறமுடனிருக்கின்றன. அவை சலங்களை அணிந்து கொண்டு மேலே சோதிக்குப் பறக்கின்றன. ருதத்தின் ஸ்தானத்திலிருந்து அவை மீண்டும் இறங்குகின்றன. உடனே புவி சலத்தால் ஈரமாகிறது.

### வர்ஷச்சக்கரம்

48. வட்டங்கள் பன்னிரெண்டு. சக்கரம் ஒன்று-வருஷம். மூன்று நாபிகள்-அச்சுக்கள்—ருதுக்கள். அதை எவன் அறிகிருன்? அதில் சலிப்பவையும், சலிக்காதவையுமான 360 பற்கள் சேர்ந்து அமைக்கப்பட்டிருக்கின்றன.

### ஸரஸ்வதி

49. ஸரஸ்வதியே! எந்த ஸ்தனம் உன் தேகத்திலிருக்கிறதோ, எந்த ஸ்தனம் சுகத்தைத் தருகிறதோ, எதனால் நீ எல்லா உத்தமப் பொருள்களையும் தருகிறாயோ, எது செல்வத்தை ஏந்துகிறதோ, எது திரவியங்களைத் தருகிறதோ, எது நல்ல பொருளையுமளிக்கிறதோ, அந்த ஸ்தனத்தை நாங்கள் இங்கு பானஞ் செய்யப் புலப்படுத்துவாயாக.

### ஸாத்தியர்கள்

50. தேவர்கள் யக்ஞத்தால் யக்ஞத்தை நடத்துகிறார்கள். அக்கினிக்குரிய செயல்கள் முதல் தருமங்களாயிருக்கின்றன. எந்த சொர்க்கத்திலே பழைய சாத்தியர்களான தேவர்கள் வசிக்கிறார்களோ அந்த சொர்க்கத்திலே, மகாத்மாக்கள் சேர்கிறார்கள். 1,765

### அக்கினி

51. சமமாயிருக்கும் சலம் வெம்மையிலே தினங்களோடு மேலேறுகிறது. மாரியிலே கீழே இறங்குகிறது. மேகங்கள் புவியை, அனல்கள் சோதியை இன்புறுத்துகின்றன.

### சூரியன்

52. நான் நம்முடைய பாலனத்துக்காகச் சோதியில் தோன்றுபவனும், சுபர்ணனும், சலிப்பவனும், மகத்வனும், சலங்களைத் தோற்றுவிப்பவனும், ஓஷதிகளைப் புலப்படுத்துபவனும், ஏரிகளைப் பாலிப்பவனும், தடாகங்களை மழையால் நிரப்புபவனுமான ஸரஸ்வதனை-சூரியனை அழைக்கிறேன். 1,767

## 165. இந்திரனும் மருத்துக்களும்

### 165. மித்திரா வருணர்களின் புதல்வனான அகஸ்தியரும் இந்திரனும் மருத்துக்களும்

### சம்பாஷணை

1. இந்திரன் பேசுகிறான்: ஸம வயதுள்ளவர்களும், ஸம நிலயத்திலிருப்பவர்களும், ஸம மகிமையுள்ளவர்களு



மான, மருத்துக்கள், எந்த சோபையால் புவியை நன்கு நனைத்தார்கள்? எந்த எண்ணத்தோடு எங்கிருந்து வந்தார்கள்? வர்ஷிக்கும் அவர்கள் செல்வத்தை விரும்பி எந்த பலத்தைப் போற்றுகிறார்கள்?

2. தருணர்களான அவர்கள் எவனுடைய பிரம்மங்களை-பாக்களை ஏற்கிறார்கள்? எவன் அவர்களைத் தன்னுடைய யக்ஞத்துக்கு வருவிக்கிறான்? வானிலே பருந்துகளைப் போல் பறக்கும் அவர்களை எந்த மகத்தான மனத்தால் நாங்கள் இன்புறுத்துவோம்?

3. மருத்துக்கள்: இந்திரனே! வீரர்களின் தலைவனே! மரியாதைக்குரிய நீ, தனியே எங்கு போகிறாய்? இங்ஙனம் உன்னைப் பின்பற்றுங்கால், நீ எங்களிடம் நிசத்தையே ஏன் கேட்கிறாய்? குதிரைகளுள்ள நீ, எங்களிடம் பேச விரும்புவதை இனிய மொழிகளோடு கூறவும்.

4. இந்திரன்: எல்லா பிரம்மங்களும், அவிகளும் எனக்கே. தோத்திரங்கள் என்னை சுகப்படுத்துகின்றன. ஸோமரஸங்கள் எனக்கே. என்னுடைய வலிய வச்சிரம் பகைவர்களின் மீது செலுத்தப்பட்டு இலக்குக்குப் போகிறது. அறிஞர்கள் என்னையே போற்றுகிறார்கள். பாக்கள் எனக்கே பாடப்படுகின்றன. இந்தக் குதிரைகள் என்னை வந்திப்பவர்களிடம் ஏந்திச் செல்லுகின்றன.

5. மருத்துக்கள்: ஆதலால் நாங்களும் எங்கள் தேகங்களை யலங்கரித்துக்கொண்டு எங்களுடைய ஆற்றலுள்ள, அருகிலுள்ள குதிரைகளுடன் சேர்ந்து எங்களுடைய மகிமைகளோடு உன்னுடன் யக்ஞங்களுக்கு வரத் தயாராகிறோம். இந்திரனே! நீ எங்களுடைய ஸ்வதாவை அனுபவிப்பாய். 1,772

6. இந்திரன்: மருத்துக்களே! நீங்கள் என்னைத் தனியனாக அகியைக் கொல்லவேண்டுமென வற்புறுத்திய போது உங்களுடைய அந்த ஸ்வதா-சுயபலம் எங்கிருந்

தது? ஏனெனில் நானே உண்மையாக உக்கிரனும், வலியனும், ஊக்கமுள்ளவனுமிருக்கிறேன். நான் என்னுடைய சத்துருக்களையெல்லாம் வதப்படுத்தும் ஆயுதங்களால் வசப்படுத்தினேன்.

7. மருத்துக்கள்: காளையே! நீ மிக்கச் செய்தாய். ஆனால் நாம் நம்முடைய சமமான, ஐக்கியப்பட்ட வீரச் செயல்களால் நீ நடத்தினாய். மிக்க வலியனான இந்திரனே! நாங்களும் பல வீரச் செயல்களைச் செய்திருக்கிறோம். நாங்கள் மருத்துக்கள்; நாங்கள் விரும்பும் எதையும் எங்களுடைய செயல்களால் வசப்படுத்துகிறோம்.

8. இந்திரன்: மருத்துக்களே! நான் என்னுடைய சொந்த பலத்தால், கோபத்தால் வலியனாகி, கையிலே வச்சிரமேந்தும் நான் விருத்திரனைக் கொன்றேன். நான் மானிடரின் நலத்துக்காக, அனைவரையும் இன்புறுத்தும்பவையும், இனிமையாய்ப் பாய்பவையுமான சலங்களைக் கற்பித்தேன்.

9. மருத்துக்கள்: மகவானே! உன்னால் செலுத்தப்படாதது ஒன்றுமில்லை. உன்னைப் போல் அறிஞனான தேவன் எவனுமில்லை. மிக்க வலியனான இந்திரனே! பிறந்த எவனும், பிறக்கும் எவனும், உன்னாண்மையில் வரான்; நீ செய்வதைச் செய்வாயாக.

10. இந்திரன்: நான் தனியன். என்னுடைய திண்மையே எங்கும் பரவுக. நான் என் மனதில் நினைப்பதையெல்லாம் துரிதமாய் நடத்துகிறேன். நான் உக்கிரன் என அறியப்படுகிறேன். இந்திரனான நான் அகப்படுத்திய பொருள்களுக்கெல்லாம் தலைவனாகிறேன். 1,777

11. மருத்துக்களே! நரர்களும் நண்பர்களுமான நீங்கள் எந்த செவியுறத் தகுந்த தோத்திரத்தைக் கூறுகிறீர்களோ, அந்த ஸ்தோமம் எங்களை இப்பொழுது இன்புறுத்துகிறது. பொழிபவனும், உத்தம யக்ஞம் செலுத்தப்படுபவனும், பல வடிவங்கள் உள்ளவனும், நண்பனும், இந்திரனுமான எனக்கு, என் நண்பர்களான நீங்கள்,என் தேகத்தைப் புட்டிப்படுத்த யஜிப்பீர்களாக.



12. மருத்துக்களே! என்னைப் புகழ்ந்து, என்னால் உணவையும், அனந்தமான சிறப்பையும் அனுபவித்து, பொன் மேனியுள்ள நீங்கள், புகழால் பாங்காடும் நீங்கள், என்னைப் புகழோடு போர்த்துங்கள்—புலப்படுத்துங்கள்.

13. அகஸ்தியன்: மருத்துக்களே! எவன் உங்களை இங்கு போற்றுகிறான்? நண்பர்களே! நண்பர்களிடம் செல்லத் துரிதப்படுங்கள். அற்புதர்களே! நீங்கள் செல்வங்களைச் செலுத்துபவர்களாக விளங்குங்கள். என்னுடைய இந்த ருதங்களை—உண்மைகளை—அறிபவர்களாயிருங்கள்.

14. மருத்துக்களே! தோத்திரத்தால் சேவை செய்ய ஆற்றலுள்ளவனும், சிற்பியுமான மான்யனின் மேதை உங்களுக்குச் சேவைபுரிய எங்களிடம் தோன்றுகிறது. நான் அறிஞன்; என் முன்னே வாருங்கள். உத்தம செயல்களை எண்ணித் தொழுபவன் உங்களைப் போற்றுகிறான்.

15. மருத்துக்களே! இந்த உங்களுடைய ஸ்தோமம், இந்த உங்களுடைய பாட்டு, சிற்பியான மான்ய மாந்தார்யனால் பாடப்பட்டு, தேகத்தைப் புட்டிப்படுத்த உங்களிடம் வருகிறது. நாங்கள் உணவையும், பலத்தையும், தீர்க்காயுளையும் அடைவோமாக. 1,782

## 166. மருத்துக்கள்

### 166. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்

1. மருத்துக்களே! நாங்கள், விருஷபனின் துவஜனை நீங்கள், துரிதமாய்த் தோன்ற உங்களுடைய பழைய பெருமையைக் கூறுவோமாக. முழக்கமுள்ளவர்களும், ஆற்றலிருப்பவர்களுமான நீங்கள், வழியிலே

அனலோடு, போரோடும்போல் உங்களுடைய திறச் செயல்களை நடத்துங்கள்.

2. அவர்கள் பிரியமான புதல்வனைப்போல் மதுவை ஏந்துகிறார்கள். அவர்கள் யக்ஞங்களிலே பகைவர்களை விலக்கி, ஸரஸமாய் விளையாடுகிறார்கள். உருத்திரர்கள் வணக்கத்தோடு அவியளிப்பவனிடம் பாலனத்தோடு வருகிறார்கள். சுயபலமுள்ள அவர்கள் வழிபடுபவனை வருத்தப்படுத்தார்கள்.

3. பாலிக்கும் அமிருதர்களான மருத்துக்கள் அவியளிப்பவனுடைய அவியால் திருப்தியாகி, அவனுக்குச் செல்வச் செழிப்பைத் தருகிறார்கள். சுகத்தைப் பொழியும் மருத்துக்கள், நண்பர்கள் போலாகி, உலகங்களை சலத்தால் மிக்க நனைக்கிறார்கள்.

4. உங்களுடைய குதிரைகள் தங்கள் திறத்தால் உலகங்களைச் சுற்றுகின்றன. தாமே செலுத்திக்கொண்டு பாய்கின்றன. உங்கள் வருகையிலே எல்லா உலகங்களும், எல்லா மனைகளும் கலங்குகின்றன. உங்கள் வருகையற்புதம். போரிலே ஈட்டிகளால் குத்தப்படும் பயத்தைப் போல் உன் வரவில் அச்சம் தோன்றுகின்றன.

5. உங்களுடைய பிரகாசமான குதிரைகள் மலைகளை எதிர் முழக்கஞ் செய்வித்து, மானிடர்களுக்கு நண்பர்களாய் வானின் உச்சியிலே நீங்கள் செல்லுங்கால், உங்கள் வரவைக் கண்டு எல்லா வனஸ்பதிகளும் நடுங்குகின்றன. ஓஷதிகள் தேரிலே பெண்ணைப் போல் இங்குமங்குஞ் செல்லுகின்றன. 1,787

6. உக்கிரர்களான மருத்துக்களே! உங்களுடைய மின்னல் கலம், மானைக் காயப்படுத்தும் சரத்தைப் போல் மேகத்திலே எழுங்கால், மேகத்தைப் பிளக்குங்கால், நீங்கள் துன்பமற்றவர்களாகி, உங்கள் ஸுமதிகளை எங்களிடம் செலுத்துங்கள்.

7. எல்லையற்ற தானமளிப்பவர்களும், அழியாத செல்வமுள்ளவர்களும், பகையற்றவர்களும், யக்ஞங்களில் சதா போற்றப்படுபவர்களுமான மருத்துக்கள், துதியாருகனான இந்திரனை ஸோமபானத்துக்காகப் போற்றுகிறார்கள். ஏனெனில், அவர்கள் வீரனின் முக்கியமான வீரச் செயல்களை அறிகிறார்கள்.



8. மருத்துக்களே! குடில இயல்பான பாபத்திலிருந்து உங்களால் பாலிக்கப்படுபவனையும், பழிச்சொல்லிலிருந்து உக்கிரர்களும், வலியர்களும் போற்றப்படுபவர்களுமான உங்களால் காக்கப்பட்டு, அவனுடைய சந்ததிகளுக்குப் புட்டியளிப்பவர்களுமான உங்களுடைய பூரணமான நூறு போகங்களோடு ஆதரியுங்கள்.

9. மருத்துக்களே! உங்கள் தேர்களிலே எல்லா நல்ல பொருள்களுமிருக்கின்றன. உங்கள் தோள்களிலே முந்திக்கொள்ள விரும்பும் ஆற்றல் இருக்கிறது. வழியில் நீங்கள் தங்கும் இடங்களிலே உணவுகள் இருக்கின்றன. உங்கள் தேரின் அச்சு, சக்கரங்களைச் சேர்த்துச் சுழற்றுகின்றன.

10. மருத்துக்களே! உங்கள் கைகளிலே மானிடர்களுக்கு நலமளிக்கும் பல நல்ல பொருள்கள் இருக்கின்றன. உங்கள் மார்புகளிலே பொன்னுபரணங்கள் உண்டு. அவை மிக்கப் பிரகாசித்து விளங்குகின்றன. உங்கள் வெண்மையான மாலைகள் ஆடுகின்றன. உங்களுடைய ஆயுதங்களின் தாரைகள் கூர்மையாயிருக்கின்றன. சிறகுகளை ஏந்தும் பறவைகளைப் போல் அவர்கள் செல்வத்தை ஏற்றுகிறார்கள். 1,792

11. மகத்வத்தால் மகான்களும், பரவியிருப்பவர்களும், விவித செல்வமுள்ளவர்களும், சோதியிலுள்ள நட்சத்திரங்கள் போல் தூரத்திலிருந்தே விளங்குபவர்களும், உற்சாகமுள்ளவர்களும், சுந்தரநாவுள்ளவர்களும், வாயால் இனிய மொழி கூறுபவர்களுமான மருத்துக்கள், இந்திரனோடு துதிகளால் போற்றப்பட்டு, எங்கள் யக்ஞத்துக்கு வருகிறார்கள்:

12. நன்கு பிறந்த மருத்துக்களே! உங்களுடைய மகத்வம் இங்ஙனம் புகழ் பெற்றது. உங்கள் அதிதியின் விரதத்தைப் போல் நீண்டிருக்கிறது. சுகிருதனுக்கு உங்களாலளிக்கப்படும் தானம் இந்திரனுடைய தியாகத்துக்கு-தானத்துக்குச் சமமாகிறது. அதனுல், அவனும் குடிலமாகான்.

13. மருத்துக்களே! இது உங்களுடைய பந்துத் தன்மை. அமுதர்களே! நீங்கள் எங்களுடைய ஸ்துதியை அடிக்கடி பாலித்தீர்கள். நீங்கள் மானிடனுக்கு இந்தத் துதியால் உங்கள் செவியை யளித்தீர்கள். தலைவர்கள் தங்கள் செயல்களால் திறத்தைப் புலப்படுத்தினுர்கள்.

மருத்துக்களே! உங்களுடைய பந்துத்வம் பிரசித்தமாயிருக்கிறது. நீடித்திருக்கிறது. ஆதலால், அமிருதர்களான நீங்கள், எங்கள் பரந்த பனுவலைப் பற்றுங்கள். அதை ஏற்றுத் திருப்திப் படுங்கள். தலைவர்களான நீங்கள் செயல்களால் மானிடனை அனுகூல மனத்தோடு சேர்த்து கொள்கிறீர்கள்.

14. துரிதர்களான மருத்துக்களே! நாங்கள் உங்கள் மகத்தான வரவிலே எங்களுடைய நீண்ட யக்ஞத்தை வளர்க்கிறோம். அதனுல் சனங்கள் போரிலே ஜயிக்கிறுர்கள். நான் இந்த அவிகளால் யக்ஞத்தைப் பூர்த்தி செய்வேனுக.

15. மருத்துக்களே! இந்த உங்களுடைய ஸ்தோமம், இந்த உங்களுடைய பாட்டு, சிற்பியான மான்ய மாந்தார்யனுல் பாடப்பட்டு, தேகத்தைப் புட்டிப்படுத்த உங்களிடம் வருகிறது. நாங்கள் உணவையும், பலத்தையும், தீர்க்காயுளையு மடைவோமாக. 1,797

## 167. மருத்துக்கள்

### 167. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன் இந்திரன்

1. இந்திரனே! உன்னுடைய ஆயிரம் பாலனங்கள் எங்களுக்குத் தோன்றுக. குதிரைகளிருப்பவனே! ஆயிரம் விதங்களான *செழித்த உணவு எங்களுக்குத் தோன்றுக. ஆயிரம் வகைகளான செல்வம் எங்களை இன்புறுத்தத் தோன்றுக. ஆயிரக்கணக்கான குதிரைகள் எங்கள் அருகில் வருக.



### மருத்துக்கள்

2. மருத்துக்கள் பாலனங்களோடு எங்களருகில் வருக. அறிவுள்ள அவர்கள் மேன்மையான மின்னெளிச் செல்வங்களோடு வருக. அவர்களுடைய மிக்க உத்தம குதிரைகள் கடலுக்கப்பால் செல்வத்தை ஏந்துகின்றன—குவிக்கின்றன.

3. சலத்தைப் பொழிபவனும், பொன்வடிவமுள்ளவனுமான மின்னல், வானிலே சலனமாகும் மேகங்களின் மாலையைப் போலும், அந்தப்புரத்திலுள்ள செல்வனின் மனைவியைப் போலும், சபையிலே மொழியைப் போலும், சபையோடு விளங்குபவள் போலும், மருத்துக்களோடு ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறுள்.

4. பிரகாசிப்பவர்களும், ஸதா செல்பவர்களுமான மருத்துக்கள், தங்கள் துணைவியான மின்னலோடு, பொதுப் பெண்களோடு இளைஞர்களைப் போல் சேர்ந்திருக்கிறுர்கள். உக்கிரர்களான தேவர்கள், சோதியையும் புவியையும் வருத்தப்படுத்தார்கள்—விலக்கார்கள். நட்புக்காக அவர்களுடைய செழிப்பைச் செல்வப்படுத்துகிறுர்கள்.

5. ஆற்றலுள்ள மருத்துக்களின் துணைவியும், மிக்க அடர்ந்த கேசமுள்ளவளும், தலைவர்களிடம் மனமுள்ளவளுமான ரோதஸி—மின்னல், தன்னுடன் சேர மருத்துக்களைப் பணிக்கிறுள். ஒளியாங்கமுள்ள அவள், சஞ்சலமுள்ள மருத்துக்களின் தேரிலே, அசுவினிகளின் ரதத்தில் ஏறிய சூரியைப் போல் ஏறி இங்கு சூரியனுடைய வேகத்திலே வருகிறுள். 1,802

6. மருத்துக்களே! உங்களை வழிபடுபவன் அவிகளை அளித்து, ஸோமத்தைப் பொழிந்து, போற்றி, பாட்டைப்

பாடுங்கால், தருணர்களான நீங்கள், உங்கள் பிரகாசமுள்ள தேரிலே, சக்தியுள்ளவளும், நியமத்தோடு சேர்பவளும், யுவதியுமான ரோதஸியை-மின்னலை, யக்ஞங்களிலே மழையைப் பொழிய ஏந்துகிறீர்கள்.

7. மருத்துக்களின் மகிமை அனைவராலும் போற்றத் தகுந்தது. அது அமோகமாயிருக்கிறது. நான் அதைக் கூறுகிறேன்: அவர்களுடைய மனைவியான ரோதஸி-மின்னல், பெய்யும் மனமுள்ளவள்; அகங்காரமுள்ளவள்: சதா சகிக்குந் தன்மையுள்ள அவள், சௌபாக்கியவதி; செழிக்கும் சந்தானத்தைத் தாங்குகிறாள்.

8. மருத்துக்களே! உங்களுடைய மித்திரா வருணர்களும், அர்யமானும், இந்த உலகத்தை நிந்தையிலிருந்து தகுதியற்றவையை யழித்துப் பாலிக்கிறார்கள். நிலையாய் ஆட்டப்படாதிருந்த பொருள்கள் ஆட்டப்படுகின்றன. அவிகளை யளிப்பவன் செழிக்கிறான். பொழியாத மேகங்களைப் பொழியச் செய்து, அதனால் உலகம் செழிக்கிறது.

9. மருத்துக்களே! எங்கள் அருகிலோ, தூரத்திலோ எவனும் உங்கள் பலத்தின் எல்லையையணுகவில்லை. நீங்கள் தீரத்திலும், திண்மையிலும் உயர்ந்து, பகைவர்களைக் கடல்போல் ஜயிக்கிறீர்கள்.

10. நாங்கள் இன்று இந்திரனின் பிரிய நண்பர்களாவோமாக. நாங்கள் அவனை நாளைக்குப் போரிலே அழைப்போமாக. நாங்கள் பூர்வத்தில் பலமுடனிருந்தோம். புதிய பலம் எங்களுக்குத் தினந்தோறும் தோன்றுக. வீரர்களின் மகான் எப்பொழுதும் எங்களோடிருப்பானாக. 1,807

11. மருத்துக்களே! கவியான மான்ய மாந்தாரியனின் இந்த ஸ்தோமம் - இந்தப் பாட்டு - உங்களுக்கு எழுகிறது. இது உங்களைச் செழிப்பிக்க விரும்பி உங்களிடம் வருகிறது. நாங்களும் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுஸையும் அடைவோமாக. 1,808



# 168 மருத்துக்கள்

## 168. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. மருத்துக்களே! உங்களுடைய உற்சாகம் ஒவ்வொரு யக்ஞத்திலும் சமமாயிருக்கிறது. தேவர்களிடம் எடுத்துச் செல்ல நீங்கள் எல்லா யக்ஞச் செயல்களையும் ஏந்துகிறீர்கள். நான் உங்களை உத்தமத் துதிகளோடு சோதியும் புவியும் உங்களுடைய மகத்தான பாலனத்தைப் பெற இங்கு அழைக்கிறேன்.

2. வடிவமுள்ளவர்கள் போல் இருப்பவர்களும், தாமே தோன்றியவர்களும், சொந்த பலமுள்ளவர்களும், ஆட்டுபவர்களுமான அவர்கள், உணவையும் சுவர்க்கத்தையு மளிக்கத் தோன்றுகிறார்கள். சலங்களின் அலைகள் போல் ஆயிரக்கணக்கானவர்கள் அருகில் இருக்குங்கால், அவர்கள் பசுக்களைப் போலும், காளைகளைப் போலும் போற்றத் தக்கவர்கள்.

3. நன்கு பாலிக்கப்பட்ட ஸோமக் கொடிகள் பிழியப்பட்டு சுவைக்கப்படுகின்றன. அவை இருதயங்களிலே பணியாளர்கள் போல் சேவை செய்கின்றன. தியானஞ் செய்யப்பட்டவுடன் மருத்துக்களும் சேவை செய்கிறார்கள். அவர்களுடைய தோள்களிலே, ஈட்டி யுவதியைப் போல் தழுவுகிறது. அவர்களுடைய கைகளிலே கத்தியும், காப்பும் இருக்கின்றன.

4. பரஸ்பரம் தாங்கிக் கொள்ளும் அவர்கள் சோதியிலிருந்து சுலபமாய் இறங்கினார்கள். அமுதர்களே! உங்களுடைய சொந்த மொழிகளால் எங்களை ஊக்கப்படுத்துங்கள். பாபமற்றவர்களும், பல யக்ஞங்களில் தோன்றுபவர்களும், பிரகாசிக்கும் கண்களுமுள்ள மருத்துக்கள் திரமான மலைகளையும் ஆட்டினார்கள்.

5. மருத்துக்களே! மின்னல் ஆயுதம் ஏந்தும் உங்கள் நடுவிலிருந்து எவன் தாடைகளின் நடுவிலிருக்கும் நாக்கைப் போல் உங்களைச் சலனப்படுத்துகிறான்? ஆனால் நீங்களோ சலனம் செய்து கொள்ளும்

இயல்புள்ளவர்கள். நீங்கள் பல செயல்களை நடத்தப் பாயும் சூரியனுடைய தினக் குதிரையைப் போல், உணவை நாட விரும்பியவர்கள்போல் சோதியின் ஸ்தானத்திலிருந்து பாய்கிறீர்கள். 1,813

6. மருத்துக்களே! நீங்கள் வச்சிரத்தால் பிரகாசமாயிருக்கும் மேகத்தை வீழ்த்தி அற்பப் புல்லைப் போல் சலக் குவியலைக் கலைக்குங்கால், நீங்கள் எந்த உலகத்திலிருந்து வந்தீர்களோ அந்தப் பரந்த உலகத்தின் எல்லை எங்கே இருக்கிறது? நீங்கள் செல்லும் உலகத்தின் துவக்கம் எங்கே இருக்கிறது?

7. மருத்துக்களே! உங்களுடைய செல்வத்தைப் போல் உங்களுடைய தானமும் இருக்கிறது. உங்கள் தானத்துக்கு இந்திரன் துணைவனுயிருக்கிறுன். ஒளியுள்ள அது சுகத்தைத் தருகிறது; அது பயனையளிக்கிறது; அது உழவனுக்கு அனுகூலமாகி மங்களத்தைத் தருகிறது; அது செல்வனின் ஈகையைப் போல் துரிதமாய் லாபத்தைத் தருகிறது. அசுரனின் எல்லாம் ஜயிக்கும் ஆற்றலைப் போலிருக்கிறது.

8. மருத்துக்கள் மேகங்களின் நாதத்தை எழுப்புங்கால் நதிகள் அவர்களுடைய வச்சிரங்களை நோக்கி முழங்குகின்றன. மருத்துக்கள் புவியின் மீது நெய்யைத் தெளிக்குங்கால் மின்னல்கள் வானிலே புன்னகை செய்கின்றன.

9. பிருச்னி மகத்தான போருக்காகத் துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் பிரகாசமான படையைப் பிறப்பித்தாள். மானிடர்கள் உடனே விரும்பப்பட்ட உணவை அடைந்தார்கள்.

10. மருத்துக்களே! கவியான மான்ய மாந்தாரியனின் இந்த ஸ்தோமம்—இந்தப் பாட்டு—உங்களுக்கு எழுகிறது. இது உங்களைச் செழிப்பிக்க விரும்பி, உங்களிடம் வருகிறது. நாங்களும் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைவோமாக. 1,818



# 169. இந்திரன்

## 169. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்

1. இந்திரனே! எங்களிடம் வரும் மருத்துக்களை மகத்தான துரோகத்திலிருந்தும், மகத்தான வஞ்சகத்திலிருந்தும் நீ பாலிக்கிருய். மருத்துக்களை விதிப்பவனுன—நடத்துபவனுன நீ, அவர்களுடைய சுகங்களை எங்களுக்களிக்கவும். ஏனெனில், அந்த சுகங்கள் உனக்குப் பிரியமானவை.

2. இந்திரனே! சனங்களையெல்லாம் நடத்துபவர்களும், மானிடர்களுக்கு மழை பொழியும் மேகங்களைச் செலுத்துபவர்களுமான மருத்துக்கள் உன்னோடு இணைந்திருக்கிறுர்கள். மருத்துக்களின் படை ஒளிதரும் போர் செல்வத்தை ஜயிக்கக் களிப்புடனிருக்கிறது.

3. இந்திரனே! உன்னுடைய ஆயுதம் எங்களுடைய நன்மைக்காக உன்னருகில் இருக்கிறது. நீண்ட காலம் சேர்க்கப்பட்ட மழையை மருத்துக்கள் பெய்கிறுர்கள். பரந்த யக்ஞத்துக்காக அக்கினி பிரகாசிக்கிறுன். திட்டைச் சூழ்ந்துள்ள சலங்கள்போல் அவிகள் அவனைச் சூழ்ந்திருக்கின்றன.

4. இந்திரனே! உன்னிடத்திலிருக்கும் தானத்துக்குத் தருந்த செல்வத்தை எங்களுக்களிக்கவும். மேலான செல்வத்தால் பந்துவை வசப்படுத்துவது போல் நாங்களும் உனக்களித்து, உன்னை வசப்படுத்துகிறேம். துரிதமாய் வரத்தையளிக்கும் உன்னை வழிபடுபவர்கள் துதிக்க விரும்புகிறுர்கள். அறிஞர்கள் உன்னை அவியால், இனிய பாலால், தாயின் ஸ்தனத்தைப் புட்டிப் படுத்த விரும்புபவர்கள் போல் புட்டிப் படுத்துகிறுர்கள்.

5. இந்திரனே! உன்னுடைய செல்வங்கள் மிக்க இன்பத்தைத் தருகின்றன. சத்தியத்தில் நடக்க விரும்புபவர்களை ஏந்துகின்றன, யக்ஞத்துக்கு முதலில் செல்ல விரும்பும் தேவர்களான மருத்துக்கள் எங்களை சுகப் படுத்துவார்களாக. 1,823.

6. இந்திரனே! மகத்தானவர்களும், சலத்தைப் பெய்பவர்களும், நரர்களுமான மேகங்களிடஞ் செல்லவும். வானின் இடத்திலே மேகங்களோடு போர் செய்யவும். மருத்துக்களின் பரந்த கால்களுள்ள குதிரைகள், போர்க்களத்திலே அரசனின் சேனைகள் போல் நிற்கின்றன.

7. இந்திரனே! உக்கிரர்களாயும், கருப்பர்களாயும், துரிதமாய்ச் சென்று முன்னேறுபவர்களாயுள்ள மருத்துக்களின் எதிர் முழக்கமாகிறது. அவர்களை எதிர்த்து வரும் சேனைப் படையின் மானிடப் பகைவர்களைத் தாங்க தற்காப்புத் தாடனங்களால் அற்ப சத்துருவின் மீது அடிப்பது போலான எதிர்ப்புகளால் தாக்கும்போது எழும் சத்தம் எங்கும் காதில் வீழ்கிறது.

8. இந்திரனே! எல்லாப் பிராணிகளையும் தோற்றுவிக்கும் நீ, மருத்துக்களோடு சேர்ந்து, உன்னுடைய பெருமைக்குத் துக்கத்தைத் தடுப்பவையும், சலங்களை ஏந்துபவையுமான மேகப் பந்திகளைப் பிளக்கவும். தேவனே! நீ போற்றத் தகுந்த தேவர்களால் போற்றப் படுகிறாய். எங்களுக்கு உணவும், பலமும், நீண்ட ஆயுசும் வேண்டும். 1,826

## 170. இந்திரன்

### 170. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்

1. இந்திரன் பேசுகிறான்: இன்று சூன்யமாயிருக்கிறது. நாளையும் சூன்யமே; இன்று எது தோன்றும்? நாளை எது தோன்றும்? எதுவும் நிச்சயமில்லை. அந்த அற்புதத்தை எவன் அறிகிறான்? அன்னியனுடைய சித்தம் சஞ்சல இயல்புள்ளது. நன்கு கற்கப்பட்டதும் மறந்து விடுகிறது.

2. அகஸ்தியன் பேசுகிறான்: இந்திரனே! நீ ஏன் எங்களைக் கொல்ல விரும்புகிறாய்? மருத்துக்கள் உன்னுடைய சகோதரர்கள். அவர்களோடு அவியை அமைதியாய்ப் பகிர்ந்து கொள்ளவும். போரிலே எங்களை அழிக்காதே.



3. இந்திரன்: சகோதரனே! அகஸ்தியனே! எங்களுடைய நண்பனான நீ, எங்களை ஏன் புறக்கணிக்கிறாய்? நாங்கள் உன் மனத்தின் இயல்பை அறிகிறோம். நீ எங்களுக்கு எதையுமளிக்க விரும்பவில்லை.

4. அகஸ்தியன்: அறிஞர்கள் வேதியை எழில் படுத்துவார்களாக. அவர்கள் கீழ்த்திசையில் அக்கினியை எழுப்புவார்களாக. அமுதர்கள் காண உனக்கு யக்ஞ சத்தைப் பரத்துவோம்.

5. அகஸ்தியன்: வசுக்களின் வசபதியான நீ தலைவனாகிறாய்; நண்பர்களின் தலைவனான நீ, நண்பர்களான எங்களை அதிசயமாய்த் தாங்குகிறாய். இந்திரனே! நீ மருத்துக்களோடு பிரியமாய்ப் பேசவும். உரிய காலத்தில் அளிக்கப்படும் அவியை அருந்தவும். 1,831

## 171. மருத்துக்கள்

### 171. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. மருத்துக்களே! நான் சூக்தத்தோடும், வணக்கத்தோடும் உங்களிடம் வருகிறேன். நான் துரிதர்களான உங்களுடைய ஸுமதியை விரும்புகிறேன்—வேண்டுகிறேன். எங்கள் துதிகளால் இன்பமாகி உங்கள் கோபத்தை அடக்குங்கள்; குதிரைகளை அவிழ்த்து விடுங்கள்.

2. தேவர்களே! மருத்துக்களே! வணக்கத்தோடுள்ள இந்த ஸ்தோமம் மனத்திலும், இருதயத்திலும் கற்பிக்கப்பட்டு உங்களுக்கு அளிக்கப்படுகிறது. எங்களிடம் வாருங்கள். மனத்திலே இன்பமாகுங்கள். நீங்கள் எங்கள் வணக்கத்தைப் பலப்படுத்துகிறீர்கள் - சித்தப் படுத்துகிறீர்கள்.

3. துதிக்கப்படும் மருத்துக்கள் எங்களை சுகப்படுத்துவார்களாக. புகழப்படும் மகவான் எங்களை இன்பப் படுத்துவானாக. எங்களுடைய வரப்போகும் எல்லாத்

தினங்களும் மேன்மைகளையும், விரும்பத் தகுந்தவை யையும், போகங்களுக்குரியவையும் தோற்றுவிக்க.

4. நான் இந்த மகத்தான இந்திரனிடமிருந்து பயத் தால் ஓடினேன். நான் நடுங்கினேன். உங்களுக்கு அளிப்பதற்குரிய அவியை அகற்றிவிட்டோம். ஆனு லும் எங்களிடம் சாந்தமுடனிருங்கள். 1,835

5. இந்திரனே! நீ வலியன். உன்னுடைய மதிப்புக் குரிய அனுக்கிரகத்தால் கிரணங்கள் தினந்தோறும் உஷையின் உதயங்களிலே பிராணிகளுக்குச் சைதன் னியத்தைத் தருகின்றன. விருஷபனும், உக்கிரனும், பலத் தைத் தருபவனும், பழையவனுமான நீ, உக்கிர மருத்துக் களோடு சேர்ந்து எங்களுக்கு மிகுந்த உணவையளிக்க வும்.

6. இந்திரனே! சக்தியுள்ள தலைவர்களைப் பாலியுங் கள். மருத்துக்களிடம் கோபிக்காதீர்கள். நீ அறிஞர் களான மருத்துக்களோடு சேர்ந்து, எங்களுடைய பகை வர்களை ஜயித்து, நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைய எங்களைத் தாங்கவும். 1,837

## 172. மருத்துக்கள்

### 172. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. மருத்துக்களே! உங்களுடைய வருகை அற் புதமாயிருக்க; பிரகாசிக்கும் பாம்பைப் போல் பிரகாசிப் பவர்களும், உத்தம வள்ளல்களுமான உங்களுடைய வருகை பாலனத்தோடிருக்க.

2. மருத்துக்களே! உத்தம வள்ளல்களே! உங்களு டைய அழிக்குமாயுதம் எங்களிடமிருந்து தூரத்தில் விலகுக. நீங்கள் எறியுங் கல்லும் எங்களிடமிருந்து தூரத் திலாகுக.

3. மருத்துக்களே! உத்தம வள்ளல்களே! நான் புல்லைப் போல் அற்பனுயிருந்தாலும் நீங்கள் என்



னுடைய சனங்களைப் பாலியுங்கள். நாங்கள் வாழ எங்களை உயர்த்துங்கள். 1,840

## 173. இந்திரன்

### 173. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. வானிலே பரவும் பறவையைப் போல் அவன் ஸாமத்தைப் பாடுவானுக. நாங்களும் சோதியின் ஒளி யைப் போல் பரவும் அந்த ஸாமத்தைப் பாடுவோமாக. பசுக்களும், தடைபடாத கோக்களும், தருப்பையில் அமர்ந்துள்ள இந்திரனை உன்னைப் போற்றுகின்றன. நாங்களும் உன்னை அங்ஙனம் போற்றிப் பாடுவோமாக

2. அவிகளைப்பொழியும் தலைவன், அறிஞர்களோடு சேர்ந்து தான் சேகரித்த அவிகளையளித்து, இந்திரன், யக்ஞத்துக்கு-சலத்துக்குத் துரிதமாகும் மானைப் போல் சீக்கிரமாய் வர அவனைப் போற்றுகிறுன். உக்கிரனுன இந்திரனே! மானிட ஹோதா துதியை விரும்பும் தேவர் களை ஏத்துங்கால் உனக்கு இரட்டை அவியைத் தரு கிறுன்.

3. ஹோதா-அக்கினி-அளந்த ஏழு இடங்களிலே பரவுகிறுன். அவன் புவியினுடைய, வர்ஷத்தினுடைய அவியைப் பெற்றுக் கொள்கிறுன். அருகில் செலுத்தப் பட்டு வரும் குதிரை கனைக்க, காளையும் கதறுக. வாக்கு இரு உலகங்களின் நடுவே தூதனைப் போல் செல்க.

4. நாங்கள் இந்திரனுக்கு மிக்க வியாபகமான அவி களைத் தருகிறேம். தேவர்களை விரும்பும் அறிஞர்கள் அவனுக்கு முக்கியமான செயல்களை நடத்துகிறுர்கள். விளங்கும் ஒளியுள்ள அவன், தேரிலே அமர்ந்து சுக மாய்ச் செல்லும் அசுவினிகளைப் போல் எங்கள் ஸ்தோத் திரங்களைப் பற்றுவானுக.

5. மிக்கப் பலமுள்ளவனும், சூரனும், செல்வனும், தேரில் இருப்பவனும், பகைவர்களை எதிர்த்துப் போரா

டும் வீரப் புதல்வனும், வச்சிரமேந்துபவனும், சூழும் இருளை நீக்குபவனுமான இந்திரனைப் போற்றவும். 1,845

6. இந்திரன் தன் மகிமையால் தலைவர்களை நடத்துகிறான். அவனுடைய இடைச் சுற்றளவு சோதி புவிகளுக்கதிகமாகிறது. புவியைச் சூழும் வானம் போல் அவன் மூவ்வுலகங்களையும் சூழ்கிறான்.

7. சூரனான இந்திரனே! நீ போர்க்களத்திலே வீரர்களுக்குப் பலத்தைத் தருகிறாய். நீ உத்தம வழியைப் புலப்படுத்துகிறாய். மருத்துக்கள் உன்னைத் தலைவன் எனக் கூறி ஆனந்தமாகிறார்கள். அவர்கள் உன்னுடைய பரிசனங்கள். உன்னை இன்புறுத்த அனைவரும் மகிழ்ந்து உன்னை எழில்படும் பணியில் இயங்குகிறார்கள்.

8. உனக்களிப்படும் ஸோமங்கள் சுகத்தைத் தருகின்றன. மானிடரின் நலத்துக்காக வானிலே தோன்றும் திவ்ய சலங்கள் உன்னை இன்புறுத்துகின்றன. இந்திரனே! நீ எல்லாத் துதிகளையும் ஏற்கிறாய். நீ, துதிக்கும் சனங்களை மழைச் செயலோடு விரும்புகிறாய்.

9. தலைவனே! உன்னுடைய மதிப்புக்குரிய நண்பர்களான நாங்கள் செல்வர்களைத் துதித்து, செல்வம் பெறுபவர் போல் விரும்புபவற்றைப் பெறுவோமாக. இந்திரன் எங்கள் துதிகளால் ஏத்தப்பட்டு, எங்கள் தோத்திரங்களால் யக்ஞத்துக்கு அழைக்கப்படுவானாக.

10. மானிடர்களுடைய தயவைப் பெற, பரஸ்பரம் முந்திக் கொள்ளும் தொழுபவர்களைப் போல், நாங்களும் துதிக்கிறோம். வச்சிரமேந்தும் இந்திரன், எங்களுக்கு நண்பனாவானாக. நலமுடன் அரசை நடத்தும் நகரப்பதியின் நட்பைப் பெற விரும்புபவர்கள் போல் எங்கள் இடையிலிருக்கும்-அத்வர்யுக்கள்-யக்ஞங்களால் இந்திரனைப் போற்றுகிறார்கள். 1,850

11. ஒருவன் யக்ஞத்தால் இந்திரனைப் பலப்படுத்துகிறான். வஞ்சகன் பொய்யான மனத்தோடு அவனைப் போற்றுகிறான். முதல்வனுக்கு அவன் தாகமுள்ள யாத்திரிகனுக்கு, புனித இடத்துக் கருகிலுள்ள புட்கரமாகிறான். மற்றவனுக்கு நோக்கத்துக்குச் செல்லாத நீண்ட வழியாகிறான்.



12. இந்திரனே! போர்களிலே மருத்துக்களோடு சேர்ந்துள்ள நீ, எங்களைக் கைவிடாதே. சக்தியுள்ளவனே! உனக்குரிய யக்ஞபாகம் தனிமைப் படுத்தப்பட்டிருக்கிறது. மருத்துக்களைத் தோத்திரம் துதிக்குங்கால் மழையைப் பொழிபவனும், அவிகளை ஏற்பவனுமான இந்திரனுக்கு அவிகளோடு வணக்கமளிக்கப்படுகிறது.

13. குதிரைகளிருப்பவனே! இந்திரனே! உனக்கு இந்த ஸ்தோமம் கூறப்படுகிறது. அதனால் எங்கள் யக்ஞத்துக்கு வரும் வழியைத் தெரிந்து கொள்ளவும். எங்களுடைய நலத்துக்காக எங்களிடம் வா. அதனால் நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைவோமாக. 1,853

## 174. இந்திரன்

### 174. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. இந்திரனே! நீ இராஜன்; தேவர்களுக்கும் அரசன்; நீ மனிதர்களைப் பாலிக்கவும். அரசனே! எங்களைக் காக்கவும். நீ வீரர்களின் தலைவன்; நீ மகவான்; எங்களைப் பாவத்திலிருந்து கடத்துபவன்; நீ சத்தியன்; நீ ஒளிப்படுத்துபவன்; நீ பலத்தையளிப்பவன்.

2. இந்திரனே! உன்னிடம் நிந்தித்துப் பேசிய சனங்கள் வசித்த ஏழு சரத்ருது கோட்டைகளை இடித்து அவர்களைத் தாழ்த்தினாய். மாசற்றவனே! நீ பெருகும் சலங்களை ஊக்கப்படுத்தினாய். நீ இளைஞனான புருகுத்ஸனுக்காக விருத்திரனைக் கொன்றாய்.

3. இந்திரனே! புருஹூதனே! நீ அரக்கர்கள் வசிக்கும் நகரங்களுக்குப் போகவும். பிறகு மருத்துக்களோடு சோதிக்குச் செல்லவும். சாந்தமற்றவனும், துரிதமாய்ச்

செல்பவனுமான அக்கினி, தன் கடமைகளை நிறைவேற்று பவனாய்த் தன் வீட்டில் வசிக்க, நீ அவனைச் சிங்கத்தைப் போல் பாலிக்கவும்.

4. இந்திரனே! உன்னுடைய வச்சிராயுதத்தின் வலிமையால் பகைவர்கள் தாழ்த்தப்பட்டு, தங்களின் சொந்தமான நிலயத்திலே உன் புகழுக்காகச் சயனிப் பார்களாக. நீ உன் ஆயுதம் ஏந்தி சலனமாகுங்கால், சலங்களைக் கீழே செலுத்துகிறாய். நீ உன் குதிரைகளிலே ஏறி, வீரத்தால் செல்வத்தைப் பற்றினாய்.

5. இந்திரனே! காற்றைப் போல் வேகமாயுள்ளவை யும், அடங்கியவையுமான குதிரைகளிலே குத்ஸனை உன்னால் விரும்பப்படும் யக்ஞத்துக்கு ஏந்திச் செல்லவும். சூரியன் தன் தேரின் சக்கரத்தை எங்களருகில் செலுத்து வானாக. வச்சிராயுதம் ஏந்தும் அவன் பகைவர்களை எதிர்த்து முன்னேறுவானாக. 1,858

6. இந்திரனே! குதிரைகளுள்ள, தோத்திரங்களால் ஊக்கமான நீ, வழிபடுபவர்களைத் தடுத்து, உனக்கு அவி களை அளிக்காமலிருந்தவர்களை அழித்தாய். உன்னைப் பாலகனாக எண்ணி, அவிகளையளிக்க ஒன்று சேர்பவர் கள் உன்னிடமிருந்து சந்தானத்தைப் பெறுகிறார்கள்.

7. கவி விரும்பத் தகுந்த இந்த உணவைப் பெற உன்னைத் துதிக்கிறான். ஏனெனில் புவியைத் தாஸனுக்கு சயனமாகச் செய்தாய். மகவான் மூவுலகங்களை அதி சயப் படுத்தினான். துர்யோனிக்காகப் போரிலே குய வாசனைக் கொன்றான்.

8. இந்திரனே! புதிய கவிகள் உன்னுடைய இந்தப் பழைய வீரச் செயல்களைப் பாடினார்கள். ஏனெனில், நீ ஜயித்தாய். பல சனங்களை வசப்படுத்தினாய். போரை நிறுத்த பல துன்பங்களைச் சகித்தாய். தேவத்தன்மை யற்ற குலங்களை, கோட்டைகளைப் போல் அழித்தாய். தேவத்தன்மையற்ற அசுரனின் ஆயுதத்தைச் சாய்த் தாய்.



9. இந்திரனே! நீ உன்னுடைய பகைவர்களைப் பயப்படுத்துபவன். தடுக்கப்பட்டு, நடுங்கும் சலங்களைப் புவியின் மீது ஓடும் நதிகளைப் போல் பெருக்கினாய். கலக்குபவனான நீ, கொந்தளிக்கும் சலங்களைப் பாயும் நதிகளைப் போல் பெருகச் செய்தாய். சூரனே! நீ கடலை நிரப்புங்கால், யதுவையும், துர்வசனையும், சுவஸ்திக்கு செலுத்திப் பாலித்தாய்.

10. இந்திரனே! எங்களுக்கு எப்பொழுதும் அளிப்ப வனாகவும். எங்களுடைய சனங்களைப் பாலிப்பவனாகவும். பரஸ்பரம் முந்திக் கொள்ள விரும்பும் எங்களுடைய சேனைகளுக்குப் பலமளிப்பவனாகவும். நாங்கள் உணவை யும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைவோமாக. 1,863

## 175. இந்திரன்

**175. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்**

1. மகத்தான ஸோமம் பாத்திரத்தில் வைக்கப் பட்டிருக்கிறது. நீயும் பாத்திரமாகி அதைப் பருகவும்; ஏந்தவும்; பிரசன்னமாகவும். வர்ஷிப்பவனான உன்னை அது மதப்படுத்துகிறது; இன்பப்படுத்துகிறது; ஊக்கப் படுத்துகிறது. உணவைப் போல் உற்சாகமளிப்பதான அது ஆயிரம் செல்வங்களைத் தருகிறது.

2. இந்திரனே! எங்களுடைய ஸோமம் உன்னிடம் சேர்க. அது மதமளிப்பது; ஊக்கந் தருவது; மதமயக்க மளிப்பது; மிக்க மேலானது; நட்புக்குரியது; மகிழ்ச்சிக் குரியது; பகைவர்களைத் தாழ்த்துவது; அமுதமானது.

3. இந்திரனே! நீ சூரன்; நீ அளிப்பவன்; மனித னான என்னுடைய தேரைத் துரிதப்படுத்தவும். ஜயிப்ப வனே! நீ, விரதமற்ற தஸ்யுவை சுவாலையோடுள்ள பாண்டத்தைப் போல் தகிக்கவும்.

4. கவியே! தலைவனான நீ, சூரியனின் தேர்ச் சக்கரத்தைத் திருடினாய்; சுஷ்ணனைக் கொல்ல உன்னு

யுதத்தை எடுக்கவும்; காற்றுப்போல் வேகமாயுள்ள உன்னுடைய குதிரைகளிலே குத்ஸனிடஞ் செல்லவும்.

5. உன்னுடைய மதம் மிக்க ஊக்கமுடனிருக்கிறது; உன்னுடைய செயல் மிக்கச் சிறப்புள்ளது; தாராளமாய்க் குதிரைகளையளிக்கும் நீ, உன் மதத்தாலும், செயலாலும் பகைவர்களையழிக்கவும், செல்வங்களையளிக்கவும் விரும்புகிறாய்.

6. இந்திரனே! பூர்வத்திலே உன்னைத் துதித்தவர்களுக்கு சுகத்தை—இன்பத்தை, தாகமெடுத்தவனுக்குத் தண்ணீரைப் போல் தந்தாய். நான் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைய உனக்கு எப்பொழுதும் இத்துதியை அடிக்கடி கூறுகிறேன். 1,869

## 176. இந்திரன்

### 176. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்

1. ஸோமனே! நீ இந்திரனை மதப்படுத்தவும். வர்ஷிக்கும் நீ, அவனில் பரவவும். பருகப்பட்டவுடன் நீ பகைவர்களையழிக்கிறாய். எந்தச்சத்துருவையும் அருகில் அணுகவிடாய்.

2. எந்த இந்திரன் மனிதர்களின் தலைவனாயிருக்கிறானே, எவனுக்கு அவியளிக்கப்படுகிறதோ, வர்ஷிக்கும் எவன் ஒவ்வொரு விருப்பத்தையும், யவத்தையும் போல் முளைக்கச் செய்கிறானே அவனுக்குத் துதியைக் கூறவும்.

3. பஞ்ச சனங்களால் விரும்பப்படும் செல்வங்கள் எல்லாம் அவனுடைய கைகளில் இருக்கின்றன. இந்திரனே! எங்களைத் துரோகிப்பவனைக் கொல்லவும். நீயே சோதியின் வச்சிராயுதம் போல் அவனைக் கொல்லவும்.

4. அழிக்க எத்தனை கட்டமாயிருந்தாலும் யஜிக்காத ஒவ்வொருவனையுமழிக்கவும். உன்னை சுகப்படுத்தாத ஒவ்வொருவனையுமழிக்கவும். அவனுடைய செல்வத்தை எங்களுக்களிக்கவும். உன்னை வழிபடுபவன் அதற்கருகனாகிறான்.

5. எந்த இரட்டைப் பலமுள்ளவனுடைய துதியும், அவியுமுள்ளவனுடைய பாக்கள், இடையறாமல் பாடப்படுகின்றனவோ, அவனை, ஸோமனே! நீ பாலிக்கிறாய். நீ போரிலே இந்திரனைப் பாலிக்கவும். வலியனான இந்திரனைப் போர்களிலே பாலிக்கவும்.

6. இந்திரனே! பூர்வத்திலே உன்னைத் துதித்தவர்களுக்கு இன்பத்தை, தாகமெடுத்தவனுக்குத் தண்ணீரைப் போல் தந்தாய். நான் உணவையும், பலத்தையும் நீண்ட ஆயுளையுமடைய உனக்கு எப்பொழுதும் இத்துதியை அடிக்கடி கூறுகிறேன். 1,875



## 177. இந்திரன்

### 177. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. மானிடர்களைச் சீராட்டுபவனும், சனங்களின் விருஷபவனும், மாந்தர்களின் மன்னனும், புருஹூதனுமான இந்திரன் எங்களிடம் வருவானாக. துதிக்கப்படுபவனும், அவிகளை விரும்புபவனுமான இந்திரனே! உன் வலிய குதிரைகளைத் தேரிலே இணைத்து, பாலனத்துக்காக என்னிடம் வரவும்.

2. இந்திரனே! பொழிபவையும், சிறந்தவையும், மந்திரத்தோடு இணையத் தக்கவையுமான குதிரைகள், பொழியும் தேரிலே இணைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் ஏறி எங்களிடம் வா. இந்திரனே ஸோமம் பொழியப்பட்டுள்ளது. நாங்கள் உன்னை அழைக்கிறோம்.

3. இந்திரனே! பொழியும் உன் தேரில் ஏறு. வர்ஷிக்கும் ஸோமம் உனக்காகப் பிழியப்பட்டிருக்கிறது. இனியபானங்கள் தயாராகின்றன. விஷபனே! வலிய குதிரைகளை இணைத்து மானிடர்களுடைய நலத்துக்காக வா. உன்னுடைய துரிதமான தேரிலே என் முன்னே வா.

4. இதுதான் தேவர்களுக்களிக்கப்படும் யக்ஞம். இது தான் பசு; இவை ஸ்தோத்திரங்கள். இந்திரனே! இதோ ஸோமரஸம். தருப்பைப் பரத்தப்பட்டிருக்கிறது. ஆதலால் சக்கரனே! இங்கு துரிதமாய் வரவும்; உட்காரவும்; பருகவும்; இங்கு உன் குதிரைகளை அவிழ்த்து விடவும்.

5. இந்திரனே! நீ எங்களால் போற்றப்பட்டு மான்யனுன சிற்பியின் தோத்திரங்களை ஏற்க எங்கள் முன்னே வா. துதிக்கும் நாங்கள் உன் பாலனத்தால் எப்பொழுதும் செல்வத்தையடைந்து, உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் பெறுவோமாக. 1,880

## 178. இந்திரன்

### 178. அகஸ்தியன்–மித்திரா வருணர்களின் புதல்வன்

1. இந்திரனே! நீ துதிப்பவர்களுக்கு எந்த செவிச் செல்வத்தால் பானத்தை யளிக்க விரும்புகிருயோ, அதை அனைவரும் செவியுறுகிருர்கள். ஆதலால், மகானுக விரும்பும் எங்கள் விருப்பத்தை நீ பங்கப்படுத்தாதே. நான் உன் ஆதரவால் மனிதனுய் அடைவதர்க் குரிய எல்லாப் பொருள்களையும் நான் பற்றுவேனுக.

2. சகோதரிகளான இரவும் பகலும் தங்கள் சன்மஸ்தானத்திலே மழையத் தோற்றுவிக்கும் செயல்களை நடத்திவருகிருர்கள். எங்களுக்காகச் செய்யப்படும் அவற்றை அரசனுன இந்திரன் தடைபடுத்தாமலிருப்பானுக. இந்தப் பலப்படுத்தும் அவிகள் அவனிடஞ் சேர்கின்றன. அவன் எங்களுக்கு நட்பையும் நேரான்மையையுமளிப்பானுக.

3. சூரனும், சமர்களிலே ஜயிப்பவனுமான இந்திரன், மருத்துக்களோடு சேர்ந்து துதிப்பவனின் அழைப்பைச் செவியுறுவான். அவன் துதிகளை ஏற்க விரும்பியவுடன் தானுகவே அவியளிப்பவனிடம் தன் தேரைச் செலுத்துவான்.



4. யக்ஞ உணவைப் பற்ற விரும்பும் இந்திரன், வழிபடுபவர்களால் அளிக்கப்படும் அவிகளைப் புசிக்கிருன். நண்பனின் பகைவர்களை நீக்குகிருன். பல குரல்கள் எழும் குழுவிலே ஸத்திய பாலகனுன இந்திரன் வழிபடுபவனைப் புகழ்ந்து அவனுடைய பனுவலைப் போற்றுகிருன்.

5. மகவானே! இந்திரனே! நாங்கள் உன்னுல் தங்களை மிக்க வலியர்கள் என எண்ணியிருக்கும் பகைவர்களை ஜயிப்போமாக. நீ எங்களுடைய பாலகன். எங்கள் செல்வத்தைச் செழிப்பிப்பவனுகவும். அதனுல் நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைவோமாக. 1,885

## 179. உலோபாமுத்திரை

### 179. அகஸ்தியன்–மித்திரா வருணர்களின் புதல்வன்

1. உலோபாமுத்திரை: நான் பல வருடங்களாக இரவும் பகலும் முதுமைக்குச் செலுத்தும் உஷைகளிலே உனக்குப் பணிவிடை செய்தேன்; களைத்தேன்; மூப்பு என் அங்கங்களின் அழகைத் தேய்க்கிறது. ஆதலால், இப்பொழுது எது செய்யப்பட வேண்டும்? கணவர்கள் தங்கள் மனைவிகளோடு சேர்வார்களாக.

2. சத்தியத்தைப் பாலித்த பழைய ரிஷிகள் தேவர்களோடு சேர்ந்து சத்திய மொழிகளையே பேசிக் கொண்டார்கள். அவர்களும் ரேதஸைப் பொழிந்தார்கள். அதனுல் அவர்கள் பிரம்மசரியத்தைப் பங்கஞ் செய்யவில்லை. மனைவிகள் கணவர்களோடு சேர்வார்களாக.

அகஸ்தியன்

3. நாம் தவத்தை வீணுகப் பயிலவில்லை. தேவர்கள் நம்மைப் பாலிக்கிருர்கள். நாம் நம்முடைய விருப்பங்களை யெல்லாம் அனுபவிப்போமாக. நாம் இருவருஞ் சேர்ந்து இயங்கினுல், இந்த உலகில் கல்விகளிலே வெற்றி பெறலாம்.

4. நான் ஜபத்திலும், இந்திரிய நியமித்திலுமிருக் குங்கால் இக்காரணத்தாலோ, அதனாலோ, எதனாலோ காமம் தோன்றுகிறது. உலோபாமுத்திரை கணவனை அணுகுவாளாக. தீரமற்றவள் தீரனை திட்பனைத் தாங்குகிருள்.

மாணவன்

5. நாங்கள் செய்த பாவங்களிலிருந்து விலக்கப் பட்டு என்னை சுகப்படுத்த என் இருதயத்தில் பருகப் பட்டு மிக்க அருகிலிருக்கும் இந்த ஸோமத்தினிடம் நான் கூறுகிறேன். உண்மையாகவே மானிடன் பல காமங்களின் வசத்திலிருக்கிருன்.

6. அகஸ்தியன், உழுபடைகளால் உழுது, விதைத்து, விளைவித்து, உக்கிர ரிஷி, புதல்வரையும், வமிசத்தையும் விரும்பி, இரண்டு வர்ணங்களை-தமிழை யும், வட மொழியையும்-அல்லது தவத்தையும், போகத் தையும் பாலித்தான். அவன் தேவர்களிடமிருந்து சத்திய வாழ்த்துக்களைப் பெற்ருன். 1,891

## 180. அசுவினிகள்

### 180. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்

1. அசுவினிகளே! நீங்கள் விரும்பும் இடங்களுக்கு உங்களுடைய தேர் செல்லுங்கால், உங்களுடைய குதிரைகள் மூவ்வுலகங்களையுஞ் சுற்றுகின்றன. சக்கரங் களின் பொன்மய நேமிகள் விரும்புவதைத் தருகின்றன. நீங்கள் ஸோமத்தைப் பருகி, காலை யக்ஞத்திலே கலந்து கொள்கிறீர்கள்.

2. அனைவராலும் துதிக்கப்படுபவளும், உங்களு டைய சகோதரியுமான உஷை, உங்கள் வருகைக்கு ஒளியைச் செய்து, ஸோமரஸத்தைப் பருகும் உங்களை, பலத்தையும், உணவையும் பெற வழிபடுபவன் யஜிக்கும் போது, உங்களுடைய துரிதமாய்ச் செல்வதும், பலவித மாய்ப் போவதும், மானிடனுக்கு நலமளிப்பதும், முதன்



மையாய்ப் போற்றப்படுவதர்க்குரியதுமான தேரைக் கீழே நோக்கி, உதயத்துக்கு முன்னால் செலுத்துங்கள்.

3. நீங்கள் பசுவில் பாலை ஸ்தாபித்தீர்கள். நீங்கள் அபக்குவ ஆபினத்தினுள் முன்னதாகத் தோன்றும் பக்குவமான சுரப்பை-பாலின் கசிவை-புலப்படுத்தினீர் கள். அவியுள்ளவனும், சுத்தனுமான தலைவன் யக்ஞத் தின் நடுவே, புதரின் நடுவே, திருடனைப் போல் விழிப்பு டன் சத்திய வடிவங்களுள்ள உங்களைப் போற்றுகிருன்.

4. நீங்கள் உக்கிர தாபத்தை அத்திரிக்கு அவனு டைய விருப்பத்துக்கிணங்கி, இனிய நெய்யைப் போல் இனிமைப்படுத்தி, சலத்தின் தன்மையைத் தண்மைப் படுத்தினீர்கள். ஆதலால் அசுவினிகளான உங்களுக்கு அக்கினியிலே அவியளிக்கப்படுகிறது. ஸோமரஸங்கள் உங்களுக்கு இறக்கத்தில் ஓடும் தேர்ச்சக்கரங்களைப் போல் விரைகின்றன.

5. தஸ்ரர்களே! துக்கிரனின் தளர்ந்த புதல்வனைப் போல் என் துதிகளின் ஸாதனத்தால் உங்கள் உதவியை எனக்களிக்க உங்களை இங்கு வருவிப்பேனாக. சோதியும் புவியும் உங்களைப் போற்ற. உங்களுடைய மகிமையால் பரஸ்பரம் சேர்கின்றன. துதியாருகர்களான அசுவினி களாம் உங்களை, முதுமை எய்திய இந்த ஸ்தோதா பாவத்திலிருந்து நீங்கி, நீண்ட ஆயுளைப் பெறுவானாக. 1,896

6. உத்தம வள்ளல்களே! நீங்கள் உங்களுடைய குதிரைகளை இணைக்குங்கால், புவியை சுவதாக்களால் நிரப்புகிறீர்கள். உங்களை வழிபடும் இவன் வாயுவைப் போல் துரிதனாகி, உங்களைத் திருப்தி செய்து பற்றுவா னாக. இவன் உங்களுடைய மகத்தான ஆதரவால் நல்ல விரதனைப் போல் உணவைப் பெறுவானாக.

7. வழிபடும் சத்தியப் பிரதிக்ஞைகளுள்ள நாங்கள் உங்களை விவிதமாய்ப் போற்றுகிறோம். மது கலசம்

வைக்கப்பட்டிருக்கிறது. போற்றத் தகுந்தவர்களும், பொழிபவர்களுமான அசுவினிகளே! தேவர்களினருகே ஸோமரஸத்தைப் பருகுங்கள்.

8. அசுவினிகளே! மனிதர்களின் தலைவர்களில் தலைவனான அகத்தியன், மழை தாரையின் பலவிதப் பெருக்கைப் பெற, இசைக் குழலைப் போல் பல பாக்களோடு உங்களைத் தினந்தோறும் எழுப்புகிறான்.

9. அசுவினிகளே! உங்கள் தேரின் மகிமையால் நீங்கள் சுற்றி வருங்கால், நீங்கள் மானிடர்களின் ஹோதாவைப் போல் துரிதமாகுங்கால், யக்ஞஞ் செய்பவர்களுக்கு உத்தம குதிரைச் செல்வங்களைத் தருகிறீர்கள். பொய்யற்றவர்களே! நாங்களும் செல்வங்களைப் பற்றுவோமாக.

10. அசுவினிகளே! நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைய, நல்ல பொருள்களையும் பெற, உங்களுடைய புதியதும், தடைபடாத சக்கரங்களுள்ளதும், சோதியெல்லாம் சுற்றுவதும், துதியாருகமுமான தேரை இன்று விரும்புகிறோம். 1,901

## 181. அசுவினிகள்

### 181. அகஸ்தியன் - மித்திரா வருணர்களின் புதல்வன்

1. பிரியமுள்ள அசுவினிகளே! யக்ஞத்தை விரும்பும் நீங்கள் கீழே மழையைச் செலுத்த எப்பொழுது உணவுகளையும், செல்வங்களையும் உயரத்தில் பிரேரிப்பீர்கள்? மனிதர்களையும், மனிதர்களைப் பாலிப்பவர்களையும், செல்வங்களைத் தருபவர்களுமான உங்களையும் இந்த யக்ஞம் போற்றுகிறது.

2. அசுவினிகளே! உங்களுடைய சுத்தமுள்ளவையும், மழையைப் பருகுபவையும், காற்றைப் போல் துரிதமாயிருப்பவையும், சோதியில் தோன்றியவையும், துரித சலனமுள்ளவையும், மனோ வேகமுள்ளவையும், வர்ஷிப்பவையும், புஷ்டாங்கமுள்ளவையும், தாமாகவே



துலங்குபவையுமான குதிரைகள் உங்களை இங்கு ஏந்தி வருக.

3. அசுவினிகளே! உத்தம இடத்துக்குத் தகுந்தவர்களும், தேரிலே அமர்ந்திருப்பவர்களுமான உங்களுடைய புவியைப் போல் பரந்திருப்பதும், விரிந்த முகப்புள்ளதும், மழையைப் போல் வேகமாயிருப்பதும், மனத்தைப் போல் விசைவதும், முந்தும் தன்மையுள்ளதும், துதியாருகமான தேர் எங்களுடைய நலத்துக்கு இங்கு வருக.

4. அசுவினிகளே! நீங்கள் இங்கு நடுவானிலே—உயரத்திலே—சந்திரனும், சூரியனும் பிறந்தீர்கள். நீங்கள் பாபமற்ற தேகமுள்ளவர்கள். இருவரும் சேர்ந்து போற்றப்படுகிறீர்கள். உங்களுக்குரிய பல மகிமைகளிலே நீங்கள் பூரணமாயிருக்கிறீர்கள். உங்களில் ஒருவன் வெற்றி மகன்—ஸோமன்—சந்திரன். அவன் நல்ல யக்ஞத்தை நடத்தி, உலகத்தைத் தாங்குகிறான். மற்றவன் சோதியின் செல்வப் புதல்வன்—சூரியன். அவனும் உலகத்தைத் தாங்குகிறான்.

5. அசுவினிகளே! உங்களிலே ஒருவருடைய பொன்னிறமுள்ள தேரானது விருப்பம் போல திசைகளில் எல்லாம் சுற்றி எங்கள் மனைகளுக்கு வருக. மற்றவனுடைய குதிரைகளுக்கு மனிதர்கள் தீனியை அளிப்பார்களாக. அவர்கள் முழக்கங்களோடு உலகங்களைக் களக்கப்படுத்துவார்களாக. 1,906

6. உங்களில் ஒருவன் பகைவர்களை அழிக்கும் இந்திரனைப் போல் மேகங்களைக் கலக்கிறான். அவிகளை விரும்பி, உணவை அளிப்பவனாய்ச் செல்லுகிறான். நதிகளைப் போல் பெருகி வரும் அவனுடைய ஆதரவுகளுக்காக மற்றவனை அவிகளால் போஷிக்கிறார்கள்.

7. படைப்பவர்களான அசுவினிகளே! நித்தியமாயும் மூவ்வகையாயுமுள்ள தோத்திரம் இயங்கப்பட்டு, உங்களுடைய திரமான ஆதரவைப் பெறக்

கூறப்படுகிறது. இங்ஙனம் போற்றப்படும் நீ, உங்கள் தானத்தை நாடுபவனுக்குப் பாலனத்தை அளிக்கவும்.

8. மூவ்விதமாய்த் தருப்பைப் பரத்தப்பட்ட யக்ஞ ஸதனத்திலே கூறப்பட்ட, உங்களுடைய பிரகாசமாயுள்ள வடிவங்களை உயர்த்தும் தோத்திரம் யக்ஞத்தை நடத்துபவர்களுக்குச் செல்வத்தைச் செலுத்துக. வர்ஷிப்பவர்களான உங்களுடைய பெய்யும் மேகமானது மானிடனிடம் சென்று தெளிக்கும் சலத்தைப் போல் அவனைப் புட்டிப்படுத்துக.

9. நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் அடைய உங்களைப் பணிந்து போற்றி நான் அழைக்குங்கால், பேரறிவோடு வழிபடுபவன் உங்களை-அசுவினிகளை, பூஷாவைப் போலும் அக்கினியைப் போலும் போற்றுகிறன். 1910

## 182. அசுவினிகள்

### 182. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. அறிஞர்களே! செய்தியை அறிந்தோம். அசுவினிகளின் வர்ஷிக்கும் தேர் வந்தது. அதன் முகப்பில் தோன்றுங்கள். அவர்களை இன்புறுத்துங்கள். அவர்கள் நல்ல செயல்களைச் செய்பவனுக்கு அனுகூலமாயிருக்கிறர்கள். அவர்கள் துதியாருகர்கள்-விச்பலையைப் பாலித்தார்கள். மானிடர்களுக்குப் பாலனமளிப்பவர்கள். சோதியின் பேரர்கள்; சுத்த விரதமுள்ளவர்கள்.

2. அசுவினிகளே! பகையழிப்பவர்களே! இந்திரத் தன்மையுள்ள நீங்கள், துதியாருகர்கள். காற்றுக்களை முந்தும் துரிதர்கள்; உத்தமச் செயல்களில் உயர்ந்தவர்கள்; தேரிலே செல்லுபவர்கள்; ஸாரதிகளின் தலைவர்கள். அமுதம் நிறைந்த தேரை இங்கு இயக்குங்கள். அதனோடு அவியளிப்பவனிடம் வாருங்கள்.

3. அசுவினிகளே! அங்கு என்ன செய்கிறீர்கள்? ஏன் தாமதிக்கிறீர்கள்? அவியளிக்காதவன் போற்றப்பட்டால் அவனைத் தாழ்த்துங்கள். கருமியின் பிராணனை நீக்குங்கள். உங்களுக்குத் துதியைக் கூற விரும்பும் விப்பிரனுக்கு சோதியை யளியுங்கள்.



4. அசுவினிகளே! எங்களை நோக்கிக் குரைக்கும் நாய்களை அழியுங்கள். எதிர்ப்பவர்களைக் கொல்லுங்கள். அவர்களை அழிக்கும் வழியை நீங்கள் அறிகிறீர்கள். துதி செய்பவனுடைய ஒவ்வொரு மொழியையும் செல்வப்படுத்துங்கள். பொய்யற்றவர்களே! நீங்கள் இருவரும் என் துதியைப் பாலியுங்கள்.

5. நீங்கள் துக்கிரனுடைய புதல்வனுக்குக் கடல் சலத்தில் பிரசித்தமான, கெட்டியான சிறகுகள் உள்ள படகைச் செய்தீர்கள். தேவர்களிடம் மனத்தைச் செலுத்தும் நீங்கள் அதனுல் அவனை மீட்டு உயர்த்தினீர்கள். நீங்கள் துரிதமாய் இறங்கி, பெரிய சலங்களைக் கடக்க அவனுக்கு வழியைச் செய்தீர்கள். 1,915

6. சலத்தின் நடுவே தலை கீழாக வீழ்த்தப்பட்ட துக்கிரனின் புதல்வன், ஆதரவற்ற இருளின் நடுவே மிக்கத் துன்பமடைந்தான்; அசுவினிகளால் ஏவப்பட்ட நான்கு கப்பல்கள் அவனிடஞ் சென்றன. பிறகு அவனை மீட்டன.

7. கடலின் நடுவே ஒரு மரம் நின்றது. அதைத் துக்கிரனுடைய புதல்வன் நாடித் தழுவினுன். அம்மரம் எது? அசுவினிகளே! பறவைக் காதரவளிக்கும் கிளைகளைப் போல் நீங்கள் ஆதரவாகி அவனை மீட்டீர்கள்; புகழைப் பெற்றீர்கள்.

8. நாஸத்தியர்களே! நரர்களே! மானிடர்களால் கூறப்படும் தோத்திரத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள். எங்கள் குழுவினுல் அளிக்கப்படும் ஸோமத்தால் இன்புறுங்கள். அதனுல் நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் பெறுவோமாக. 1,918

## 183. அசுவினிகள்

### 183. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. வர்ஷிப்பவர்களே! உங்களுடைய மூன்று சக்கரங்களும், மூன்று பீடங்களுள்ளதும், மனத்தைப் போல் வேகமாய் விசைவதும், மூன்று தாதுக்களால் பாங்கானதும், சுகிருதனுடைய மனைக்கு உன்னால் ஏறிச் செல்லப்படுவதும், அதிலே சிறகுகளுள்ள பறவை போல் உன்னால் பயணஞ் செல்லப்படுவதுமான தேரை இணையுங்கள்.

2. சங்கற்பமுள்ள நீங்கள் அவியைப் பெற்றுக் கொள்ள சுலபமாய்ச் செல்லும் தேரிலே ஏறியவுடன் அது புவியின் மீது இறங்குகிறது. உங்கள் தேகத்தை வளப்படுத்தும் துதி உங்கள் வடிவங்களோடு சேர்க. நீங்கள் சோதியின் மகளான உஷையோடு சேர்வீர்களாக.

3. பொய்யற்றவர்களே! அவியளிப்பவனின் யக்ஞத்தை அணுகவும், வழிபடுபவனுக்குப் புதல்வனை அளிக்கவும், அவனுடைய சொந்த நலனுக்காகவும், தலைவர்களான நீங்கள் யக்ஞத்துக்குச் செல்லக் கருதி, வழிபடுபவனுடைய மனைக்குச் செல்ல உங்களுடைய நன்கு செல்லும் தேரிலே ஏறுங்கள்.

4. தஸ்ரர்களே! உங்கள் பாலனத்தில் ஓநாயும், பெட்டை ஓநாயும் என்னைத் துன்புறுத்தாமலிருக்க. என்னைக் கைவிடாதீர்கள். என்னை அன்னியனுக்கு அளிக்காதீர்கள். இது உங்களுடைய பாகம். இந்தத் துதி உங்களுக்குக் கூறப்படுகிறது. உங்களுக்கு இந்த ஸோமரசச் செல்வங்கள் தோன்றுகின்றன.

5. கோதமனும், புருமீடனும், அத்திரியும், உங்களுக்குத் தனித்தனியாய் அவிகளை அளித்து, அவரவருடைய பாலனத்துக்காக உங்களை அழைக்கிறார்கள். தஸ்ரர்களே! எண்ணும் இடத்துக்கு நேரான வழியில் செல்லும் பிரயாணியைப் போல் என்னுடைய அழைப்புக்கு நேராக வாருங்கள். 1,923



6. அசுவினிகளே! நாங்கள், உங்கள் பாலனத்தால் இருளின் இந்த எல்லையைக் கடக்கிறோம். உங்களுக்கு இந்த ஸ்தோமம் கூறப்பட்டிருக்கிறது. நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் பெற, நீங்கள் தேவர்களால் செல்லப்பட்ட வழிகளால் இங்கு வாருங்கள். 1,924.

## 184. அசுவினிகள்

### 184. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. அசுவினிகளே! நாங்கள் உங்கள் இருவரையும், இன்றும் பிறகும் அழைப்போமாக. பொய்யற்றவர்களே! சோதியின் பேரர்களே! உஷைகள் உதயமாகுங்கால் நீங்கள் எங்கிருந்தாலும், துதிக்கும் தலைவன் தோத்திரங்களோடு தாராளமாயளிப்பவனுக்காக உங்களை அழைக்கிறான்.

2. வர்ஷிப்பவர்களே! எங்கள் ஸோமங்களில் மகிழ்ந்து எங்களை இன்பப் படுத்துங்கள். எங்களுடைய ஸோம தாரைகளிலே இன்பமாகி கருமிகளைக் கொல்லுங்கள். தலைவர்களே! உங்கள் செவிகளால் செவியுறுங்கள். என்னுடைய துதிகள் தூய சொற்களால் கூறப்படுகின்றன. நீங்கள் துதியை நாடுகிறீர்கள். துதி உங்கள் ஞாபகத்திலிருக்கிறது.

3. பூஷாவே-சூரியனே! நாஸத்தியர்களே! தேவர்களான நீங்கள், சூரியை ஏந்திச் செல்லவும், சிறப்புக்காக சரங்களைப் போல் பாய்ந்தீர்கள். பூர்வ காலங்களிலே மகத்தான வருணனுக்குப் பாகங்களிலே கூறப்பட்ட துதிகளைப் போல் உங்களுக்குத் துதிகள் கூறப்படுகின்றன.

4. உத்தம தானமளிப்பவர்களே! மானிடர்கள் உத்தம பலத்துக்காக உங்களுடைய சிறப்பான செயல்களிலே இன்பமாகுங்கால் இனிய ரஸங்களை விரும்பும் நீங்கள் உங்களுடைய தானத்தை எங்களுக்களியுங்கள். மான்யனுன சிற்பியின் ஸ்தோமத்தைச் செழிப்பியுங்கள்.

5. அசுவினிகளே! செல்வமிருப்பவர்களே! பாபத்தை நீக்கும் இந்த ஸ்தோமம் மதிப்புக்குரிய அவிகளோடு உங்களுக்குக் கூறப்படுகிறது. நாஸத்தியர்களே! அகஸ்தியருடன் இன்பமாயிருங்கள். அவனுடைய மனைக்கு வம்சத்தையளிக்கவும், அவனுடைய நலத்துக்காகவும் வாருங்கள். 1,929

6. அசுவினிகளே! நாங்கள் உங்கள் பாலனத்தால் இருளின் இந்த எல்லையைக் கடக்கிறோம். உங்களுக்கு இந்த ஸ்தோமம் கூறப்பட்டிருக்கிறது. நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் பெற நீங்கள் தேவர்களால் செல்லப்பட்ட வழிகளால் இங்கு வாருங்கள். 1,930

## 185. சோதியும் புவியும்

### 185. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. சோதி புவிகளிலே எது முதலில் தோன்றிற்று? எது பின் வந்தது? எங்ஙனம் இவை கற்பிக்கப்பட்டன? கவிகளே! எவன் இதை அறிகிறான்? இவை தாமாகவே இருக்கும் எல்லாப் பொருள்களையும் தாங்குகின்றன. இரவும் பகலும் சக்கரங்களிருப்பவை போல் சுழல்கின்றன.

2. பாதமற்றவையும், சலனமற்றவையுமான இவை, காலுள்ள பிராணிகளையும், சலனமாகும் பலவற்றையும் பெற்றோர்களின் அங்கத்திலே புதல்வனைப் போல் தாங்குகின்றன. சோதி புவிகளே! எங்களை மகத்தான பாபத்திலிருந்து பாலியுங்கள்.

3. நான் துன்பமற்றதும், தேய்வில்லாததும், சோதி போலுள்ளதும், இன்னலற்றதும், மிகுந்த உணவுள்ளதுமான அதிதியினிடம் செல்வத்தை விரும்புகிறேன். சோதி புவிகளே! உங்களைத் துதிப்பவர்களுக்கும், விரும்பும் செல்வத்தையளியுங்கள். சோதி புவிகளே! எங்களை மகத்தான பாவத்திலிருந்து பாலியுங்கள்.

4. வருத்தத்துக்கு வசமாகாதவையும், உணவால் அனைத்தையும் திருப்தி செய்பவையும், தேவர்களையும் மனிதர்களையும் புதல்வர்களாக உள்ளவையும், ஒளிமயப் பகலும் இரவுமான இரு செல்வங்களிருப்பவையுமான சோதியையும் புவியையும் நாங்கள் எப்பொழுதும் பற்றுவோமாக. சோதி புவிகளே! எங்களை மகத்தான பாவத்திலிருந்து பாலியுங்கள்.

5. எப்பொழுதும் பரஸ்பரம் சேர்ந்து செல்பவர்களும், ஸமமான யுவதிகளும், ஒப்பான எல்லையுள்ளவர்களும், சகோதரிகளும், பந்துக்களும், பெற்றோர்களான அவர்களுடைய அங்கத்திலிருக்கும் புவனத்தின் நாபியான சலத்தை முகருபவர்களுமான சோதி புவிகளே! எங்களை மகத்தான பாவத்திலிருந்து பாலியுங்கள். 1,935

6. நான் தேவர்களும், மனிதர்களும், பாலனமாகப் பரந்தவர்களும், அனைத்தையும் தாங்குபவர்களும், மழையினுடைய, பயிர்களுடைய மகத்தான பெற்றோர்களும், எழில் வடிவமுள்ளவர்களும், அமுதத்தை ஏந்துபவர்களுமான சோதி புவிகளை ருதத்துக்கு அழைக்கிறேன். சோதி புவிகளே! விபத்திலிருந்து எங்களைப் பாலியுங்கள்.

7. நான் பரந்தவர்களும், விரிந்தவர்களும், பல வடிவங்களுள்ளவர்களும், அனந்தர்களும், மங்கலமுள்ளவர்களும், தங்கள் தானத்தால் எல்லாச் சீவர்களையும் தாங்குபவர்களுமான இருவரை இந்த யக்ஞத்திலே வணக்கத்தோடு போற்றுகிறேன். சோதி புவிகளே! எங்களை மகத்தான பாவத்திலிருந்து பாலியுங்கள்.

8. நாங்கள் தேவர்களிடமோ, எப்பொழுதாவது நண்பனிடமோ, மருமகனிடமோ, எந்தக் குற்றங்களைச் செய்திருந்தாலும், அக்குற்றங்களை இந்த யக்ஞம் விலக்கும் சாதனமாகுக. சோதி புவிகளே! மகத்தான பாவத்திலிருந்து எங்களைப் பாலியுங்கள்.

9. இவ்விருவர்களும் என் துதியை ஏற்று, மானிடனுக்கு நண்பனாகி, என்னிடம் அனுகூலமாயிருப்பார்களாக. என்னுடைய பாலனத்துக்காக இவர்கள் பாலகர்

களாகச் சேர்ந்திருப்பார்களாக. தேவர்களே! உங்களை வழிபடும் நாங்கள் யக்ஞ அவியால் உங்களைப் போற்றி, தாராளமாய்த் தானங்களைச் செய்ய மிகுந்த செல்வத்தை விரும்புகிறோம்.

10. அறிவுள்ள நான் இந்த முதல் ஸ்தோமத்தை அனைவரும் செவியுற சோதி புவிகளுக்குக் கூறுகிறேன். தந்தையான சோதியும், தாயான பூமியும், நிந்தைக்குரிய பாவத்திலிருந்து எங்களைப் பாலிப்பார்களாக. அவர்கள் எப்பொழுதும் எங்கள் அருகிலாகி, பாலனத்தோடு எங்களைப் பாலிப்பார்களாக.

11. சோதி புவிகளே! தந்தையே! தாயே! எங்களால் கூறப்படும் இந்த ஸ்தோமம் நிறைவேறுக. நான் உங்கள் இருவருக்கும் இங்கு இத்தோத்திரத்தைக் கூறுகிறேன். நீங்கள் பாலனத்தோடு உங்களைத் துதிப்பவர்களினருகில் எப்பொழுதும் இருங்கள். அதனால் நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் பெறுவோமாக. 1,941

## 186. விசுவே தேவர்கள்

### 186. அகஸ்தியன்–மித்திரா வருணர்களின் புதல்வன்

1. விசுவாநரனும், தேவனுமான ஸவிதா எங்களுடைய துதிகளுக்காக–செல்வங்களுடன் புவியிலுள்ள தேவர்களோடு சேர்ந்து எங்களுடைய யக்ஞத்துக்கு வருவானாக. தருணர்களும், எங்கள் யக்ஞத்தில் விருப்பத்துடனிருப்பவர்களுமான நீ, விசுவத்தை இன்புறுத்துவதுபோல் எங்களை இன்புறுத்தவும்.

2. பகைவர்களை ஆக்கிரமிக்கும் மித்திரனும், அர்யமானும், எல்லாத் தேவர்களும் சம அன்புள்ளவர்களாகி, எங்கள் யக்ஞத்துக்கு வருவார்களாக. எல்லாத் தேவர்களும், எங்களைப் பலப்படுத்துவார்களாக. அவர்கள் எங்களைத் தளர்ச்சியிலிருந்து நீக்கி, மகத்தான பலத்தால் எங்களைப் பாலிப்பார்களாக.



3. தேவர்களே! நான் உங்களுடைய அதி உத்தமப் பிரியனும், அதிதியுமான அக்கினியைப் பாக்களால் போற்றுகிறேன். அவன், அவிகளைப் பற்றத் துரிதமாகிறான். உங்களோடு பிரியமுள்ளவனாயிருக்கிறான். அதனால் நல்ல புகழுள்ளவனும், பகைவர்களைத் தாழ்த்துபவனும், மனிதர்களை ஊக்கப்படுத்துபவனுமான வருணன், எங்களை உணவால் நிரப்புவானாக.

4. தேவர்களே! நான் உங்களிடம் வணக்கத்தோடு இரவும் பகலும் பாவத்தை நீக்க, கறப்பதற்கு வரும் சாதுவான பசுவைப் போல், அந்தப் பசுவின் ஆபீனத்திலிருந்து வந்த பாலின் பலவித சேகரங்களோடு அவியைத் தருந்த தினத்தில் கலந்து வருகிறேன்.

5. அஹிர்புத்னியன் எங்களுக்கு சுகத்தைத் தருவானாக. ஸிந்து, எங்களைத் தன் கன்றைப் புட்டிப் படுத்தும் பசுவைப் போல் புட்டி செய்பவளாய் வருவாளாக. நாங்கள் அவளால், மனோ வேகத்தில் மேகங்களால் ஏந்தப்பட்டு, இங்கு வருபவனும், சலங்களின் பேரனுமான அக்கினியைப் போற்றுகிறோம். 1,946

6. துவஷ்டா, சென்ற இடத்திலுள்ள அறிஞர்களோடு ஒரு மனமுள்ளவனாகியுள்ள அவன், எங்களிடம் வருவானாக. மனிதனைப் பாலிப்பவனும், விருத்திரனைக் கொல்பவனும், மிக்க வலியனுமான இந்திரன் எங்கள் தலைவர்களுடைய யக்ஞத்துக்கு வருவானாக.

7. எங்களுடைய குதிரைகளை இணைக்கும் துதிகள் தருணன இந்திரனை, கன்றுகளைச் சுவைக்கும் பசுக்கள் போல் சுவைக்கின்றன – துதிக்கின்றன. அவனுக்குக் கூறப்படும் மானிடர்களின் துதிகள், புதல்வர்களைப் பிறப்பிக்கும் மனைவியைப் போல் அவனை அடைந்து சுகந்தமான பழத்தைப் புலப்படுத்துகின்றன.

8. ஒரு மனமுள்ள மருத்துக்கள் சோதி புவிகளிலிருந்து யக்ஞத்துக்கு வருவார்களாக. மகத்தான படை

யுள்ளவர்களும், பல நிறக் குதிரைகளிருப்பவர்களும், பாவிக்கும் தேர்களைப் போலிருப்பவர்களும், பகைவர்களைப் புசிப்பவர்களுமான அவர்கள் நட்புள்ள தேவர்களைப் போல் வருவார்களாக.

9. மருத்துக்களின் மகிமை புகழுள்ளது. ஏனெனில் அவர்கள் தங்கள் கடமைகளை ஊக்கமாய்ச் செய்கிருர்கள். அழகான தினத்திலே எங்கும் பரவும் ஒளியைப் போல் வறண்ட இடத்தில் எல்லாம் அவர்களுடைய படைகள் மழையைப் பொழிகின்றன.

10. என்னுடைய பாலனத்துக்காக அசுவினிகளையும், பூஷாவையும் போற்றுங்கள். வெறுப்பில்லாத விஷ்ணுவைப் போலும், பரவும் வாயுவைப் போலும், மகானுன இந்திரனைப் போலும் சுதந்திர சக்தியுள்ள தேவர்களைப் போற்றுங்கள். நான் என்னுடைய சுகத்துக்குத் தேவர்களை இங்கு அழைப்பேனுக. 1,951

11. நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் பெற யக்ஞாருகத் தேவர்களின் புகழுள்ள சோதியானது, பிராணனையும், நிவாஸஸ்தானத்தையும் அளிக்க, செல்வியான அவள் தேவர்களையும் துலக்குவாளாக. 1,952

## 187. பிது

### 187. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

1. நான், மகத்தாயிருப்பவனும், தாங்குபவனும் வலியனுமான பிதுவைப் போற்றுகிறேன். திருதன் அவனுடைய உதவியால் விருத்திரனைத் துணித்துக் கொன்ருன்.

2. இனிய பிதுவே! உணவே! தித்திப்பான உணவே! நாங்கள் உன்னைப் போற்றுகிருேம் – பணிகிருேம். நீ எங்கள் பாலகனுகவும்.

3. பிதுவே! மங்களமான நீ, மங்கள பாலனங்களோடு எங்களிடம் வரவும். நீ சுகத்தைத் தருபவன்;



துவேஷமில்லாதவன்; நீ அன்பன்; வஞ்சகமில்லாத நண்பன்.

4. உணவே! உன்னுடைய இந்த ரஸங்கள் உலகங்களில் எல்லாம் பரவியிருக்கின்றன. காற்றுக்களைப் போல் அவற்றிற்கு சோதியிலே இடமிருக்கிறது.

5. உணவே! மிக்கச் சுவையுள்ள உணவே! உன்னுடைய இந்தத் தானங்கள், உன்னுடைய இரஸங்களின் இந்த இனிமைகள், மகத்தான கண்டங்களுள்ள பிராணிகளைப் போல் இயங்குகின்றன. 1,957

6. பிதுவே! மகான்களான தேவர்களின் மனம் உன்னில் நிலைத்திருக்கிறது. உன்னுடைய அறிவுள்ள அன்பான ஆதரவால் இந்திரன் அஹியைக் கொன்ருன்.

7. பிதுவே! செல்வனுன மேகம் பிரசித்தமான மழை சலத்தைத் தோற்றுவிக்குங்கால், நாங்கள் பூரணமாய்ப் புசிக்க எங்களருகிலாகவும்.

8. நாங்கள் மிகுந்த சலங்களையும், பூஷிதிகளையும் அனுபவிக்கிருேம். ஆதலால் தேகமே! நீ பருமனுகவும்.

9. ஸோமனே! உன்னுடைய சேர்க்கையுள்ள பால் உணவையும், பக்குவ யவத்தையும் நாங்கள் அனுபவிக்கிருேம். ஆதலால், தேகமே நீ பருமனுகவும்.

10. கரம்பமே! ஓஷதியே! நீ புஷ்டியளிப்பவனுகவும், நோய் நீக்குபவனுகவும், ஊக்கப்படுத்துபவனுகவும் தோன்றுக. தேகமே! நீ பருமனுகவும். 1,962

11. பிதுவே! நாங்கள் உன்னிடமிருந்து எங்களுடைய துதிகளால் ரஸங்களைப் பசுக்களிடமிருந்து அவிக்கு நெய்யைப் போல் கிரகிக்கிருேம். இந்த ரஸம் தேவர்களை மதப்படுத்துகிறது; எங்களையும் மதப்படுத்துகிறது. 1,963

# 188 ஆப்பிரி சூக்தம்

## 188. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்

### ஸமிந்தனம்

1. ஆயிரஞ் செல்வங்களை ஜயிக்கும் தேவனுன நீ, தேவர்களால் எழுப்பப்பட்டு, இன்று துலங்குகிருய். நீ தூதன்; நீ கவி; நீ எங்களுடைய அவிகளைத் தேவர்களிடஞ் செலுத்தவும்.

### தநூநபாதன்

2. யக்ஞாருகமான தநூநபாதன் யக்ஞத்துக்குச் செல்கிருன். அவியோடு சேர்கிருன். ஆயிரக்கணக்கான உணவைத் தலைவனுக்கு ஏந்துகிருன்.

### ஈட்யன்

3. ஈட்யன் என்னும் பெயருள்ள அக்கினியே! எங்களால் அழைக்கப்படும் நீ, துதியாருகர்களான தேவர்களை இங்கு அழைத்து வா. ஏனெனில், நீ ஆயிரக்கணக்கான செல்வங்களைத் தருபவன்.

### தருப்பை

4. அறிஞர்கள் கீழ்த் திசையிலே ஆயிரம் வீரர்கள் அமர, தங்கள் திறத்தால் தருப்பையைப் பரத்தியிருக்கிருர்கள். அங்கு ஆதித்தியர்களான நீங்கள் விளங்குகிறீர்கள்.

### கதவுகள்

5. மிக்க ஒளியுள்ளவையும், நன்கு விளங்குபவையும், பலவிதமாய்ப் பிரகாசிப்பவையும், மேன்மையுள்ளவையும், மிகுந்தவையும், திரண்டவையுமான யக்ஞசதனக் கவாடங்கள் மீது அறிஞர்கள் நெய்களைப் பொழிகிருர்கள். 1,968

### இரவும் பகலும்

6. முதன்மையான பிரகாசத்தோடு பிரகாசிப்பவர்களும், சோதியுள்ளவர்களும், அழகுடனிருப்பவர்களுமான இரவும் பகலும், இங்கு தருப்பையின் மீது அமர்வார்களாக.



7. முதல்வர்களும், பிரியமொழிகளிருப்பவர்களும், தேவர்களும், கவிகளும், ஹோதாக்களுமான இந்த இருவர் எங்களுடைய இந்த யக்ஞத்தை நடத்துவார்களாக.

### மூன்று தேவிகள்

8. இளையே! பாரதியே! ஸரஸ்வதியே! நீங்கள் எங்களைச்செல்வத்துக்குச் செலுத்த நான் உங்களையெல்லாம் அழைக்கிறேன்.

### துவஷ்டா

9. தலைவனுன துவஷ்டா, எல்லா ரூபங்களையும், எல்லாப் பசுக்களையும் வேறுவேருய்க் கற்பித்தான். அவன் எங்களுக்காக அவற்றைச் செழிப்பிப்பானுக.

### வனஸ்பதி

10. வனஸ்பதியே! நீ தேவர்களுக்குப் பசு ரூபமான அன்னத்தைத் தோற்றுவிக்கவும். அக்கினி அவிகளைச் சுவைப்பானுக. 1,973

### சுவாஹா

11. தேவர்களை முந்தும் அக்கினி, காயத்திரி சந்தத்தால் போற்றப்படுகிருன். சுவாஹாவோடு அவி அளிக்கப்படுங்கால் அவன் பிரகாசிக்கிருன். 1,974

# 189. அக்கினி

## 189. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்

1. தேவனுன அக்கினியே! நீ அறிவின் எல்லாப் பிரிவுகளையும் அறிந்து எங்களைச் செல்வத்துக்குச் சிறந்த வழிகளால் செலுத்தவும். தீமைக்கு நடத்தும் பாவத்தை எங்களிடமிருந்து தனிப்படுத்தவும். நாங்கள் உனக்கு மிக்க மிகுந்த வணக்கத்தைக் கூறுவோம்.

2. துதியாருகனுன அக்கினியே! எங்களை எல்லாத் தீய வழிகளிலிருந்தும் சுவஸ்திகளால் கடத்திச் செல்லவும். எங்களுடைய நகரம் பரந்ததாயிருக்க. எங்களுடைய நிலம் விரிந்ததாயிருக்க. எங்கள் சந்தானத்துக்கும், புதல்வர்களுக்கும் சுகத்தையளிப்பவராயிருக்கவும்.

3. அக்கினியே! எங்களிடமிருந்து நோயை நீக்கவும். அக்கினியால் பாலிக்கப்படாதவர்கள் எங்கள் பகைவர்களாயிருக்கிறார்கள். யக்ஞாருகனான தேவனே! நீ எல்லாத் தேவர்களோடும் எங்களுடைய க்ஷேமத்துக்காகப் புவிக்கு வரவும்.

4. அக்கினியே! நீ எங்களை நித்திய பாலனங்களால் பாலிக்கவும். நீ விரும்பும் மனையிலே எப்பொழுதும் பிரகாசிக்கவும். மிக்க இளைஞனே! எந்த பயமும் இன்று வழிபடுபவனைப் பற்றாமலாகுக. சக்தியுள்ளவனே! பயம் அவனைப் பிற்காலத்திலும் பற்றாமலாகுக.

5. அக்கினியே! எங்களைத் துட்டனும், பெருந்திண்டியும், துன்புறுத்துபவனுமான பகைவனிடமளிக்காதே. விஷப் பற்களுள்ளதும், கடிப்பதுமான ஜந்துக்களிக்காதே. இம்சிப்பவனுக்குமளிக்காதே. ஆற்றலுள்ள அக்கினியே! இழிவுக்கும் எங்களைச் செலுத்தாதே. 1,979

6. யக்ஞத்துக்காகத் தோன்றும் அக்கினியே! உத்தமனான உன்னைத் துதிக்கும் மனிதன், தன்னுடைய தேகத்தைப் பாலித்துக்கொள்ள உன்னைப் போலாகிறான். அவன் துன்பஞ் செய்பவனிடமிருந்தும், நிந்திப்பவனிடமிருந்தும் தானே நீங்குகிறான். அக்கினியே! தேவனே! நீ தீமை செய்பவனின் தனிப் பகைவனாகிறாய்.

7. யக்ஞாருகமான அக்கினியே! நீ அறிஞன். நீ யஜிக்கும் மனிதர்களையும், யஜிக்காதவர்களையும் நன்கு அறிகிறாய். உரிய காலத்தில் வழிபடுபவனை அணுகவும். அவனுடைய விருப்பங்களுக்கு ரித்விஜர்களுடைய விருப்பங்களால் செலுத்தப்படும் யக்ஞத் தலைவனைப் போல் இணங்கவும்.

8. அக்கினியே! மானனுடைய புதல்வனும், பகையழிப்பவனுமான உனக்குத் துதிமொழிகளைக் கூறுகிறோம். நாங்கள் உணவையும், பலத்தையும், நீண்ட ஆயுளையும் பெற மந்திரங்களால் ஆயிரஞ் செல்வங்களைப் பற்றுவோமாக. 1,982



# 190. பிரகஸ்பதி

## 190. அகஸ்தியன்—மித்திரா வருணர்களின் புதல்வன்

1. வழிபடுபவனைக் கைவிடாதவனும், பொழிபவனுக்கு இனிய நாவுள்ளவனுமான பிரகஸ்பதியை மந்திரங்களால் மேம்படுத்துங்கள். காதையின் தலைவனும், காந்தியுள்ளவனும், கதைக்கத் தகுந்தவனுமான அவனுக்குத் தேவர்களும் மனிதர்களும் செவிசாய்க்கிறார்கள்.

2. மழையைத் தோற்றுவிக்கும் பிரகஸ்பதிக்கு மழைக்குரிய மொழிகள் எழுகின்றன. அவன் பக்தனின் விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறான். அவன் அனைத்தையும் புலப்படுத்துகிறான். சலத்தை எங்கும் பரத்த, நலங்களைப் பொழியும் காற்று தோற்றுவிக்கப்பட்டது.

3. அவன் கிரணங்களை நீட்டும் சூரியனைப் போல் வணக்கத்தையளிக்கும் சுலோகத்தையும், தோத்திரத்தையுமளிப்பானாக. அரக்கர்கள் தடைபடாத அவனுடைய செயல்களால் தினந்தோறும் சுற்றும் சூரியன் இருக்கிறான். அவன் பயங்கர மிருகத்தைப் போல் வலியனாயிருக்கிறான்.

4. இந்தப் பிரகஸ்பதியின் புகழ் சோதியிலும் புவியிலும் பரவுகிறது. அவன் துதியை ஏற்று அறிவை அளிக்கிறான். யக்ஞத்தின் பயனைத் தருகிறான். பிரகஸ்பதியின் இந்த ஆயுதங்கள், வேடர்களின் அம்புகளைப் போல் மாயாவிகளான அசுரர்களின் மீது தினந்தோறும் பாய்கின்றன.

5. தேவனே! உன்னை அற்பக் காளை என எண்ணுபவர்களும், செல்வமுள்ள பாவிகளும், உன் தானத்தில் வசிக்கிறார்கள். அறிவிலிகளான இவர்களுக்கு நீ உன் ஆசியை வழங்காய். பிரகஸ்பதியே! நீ துன்புறுத்துபவனைத் தண்டிக்கிறாய். 1,987

6. துட்டனைத் தண்டிக்கும் அரசனின் அன்புமிகுந்த நண்பனைப் போல் நன்கு சென்று நன்களிப்பவனுக்கு நீ

இனிய வழியாகவும். எங்களுக்குக் கல்வியைத் தரும் குற்றமற்றவர்கள் அறியாமையால் மறைக்கப்பட்டிருந்தாலும் அவர்கள் அறியாமையிலிருந்து நீங்குவார்களாக.

7. அவனுக்குப் பாக்கள் தலைவனை நாடும் மனிதர்களைப் போலும், இரு கரைகளுக்கடங்கி கடலுக்குப் பாயும் நதிகளைப் போலும் செல்லுகின்றன. மழையை விரும்பும் அறிஞுனை பிரகஸ்பதி, நடுவிலே நிலைத்து, தோணியையும் சலத்தையும் கவனிக்கிருன்.

8. மகானும், பலவானும், விருஷபனும், தேவனுமான பிரகஸ்பதி இங்ஙனம் போற்றப்படுகிருன். நாங்கள் உணவையும், நீண்ட ஆயுளையும் பெற ஏந்தப்பட்டு, எங்களுக்கு வமிசத்தையும், பசுச்செல்வத்தையும் அவன் அளிப்பானுக. 1,990

## 191. சூரியன்

### 191. அகஸ்தியன்-மித்திரா வருணர்களின் புதல்வன்

#### விஷக்கிருமிகள்

1. அற்பவிடமுள்ள ஏதோ ஒரு கிருமியும், அதிக விடமுள்ள ஏதோ ஒரு கிருமியும், விஷமுள்ள ஏதோ சலசர சந்துவும், இருவித ஜந்துக்களும், அழிப்பவையும், நஞ்சுள்ளவையுமான காணுமலிருக்கும் சீவன்களும் என்னில் விஷத்தைச் செலுத்தியிருக்கின்றன.

2. மருந்து, கடிக்கப்பட்டவனிடம் வந்து காணுத கிருமிகளை அழிக்கிறது. அது நீங்குங்கால் அவற்றை யழிக்கிறது. அது அவற்றை விலக்குங்கால் அவற்றை அழிக்கிறது. அது அரைக்கப்படுங்கால் அவற்றை அழிக்கிறது.

3. சாப்புல்லிலே, குசாப் புல்லிலே, தருப்பையிலே சைர்யத்திலே, முஞ்சையிலே, வீரணப்புற்களிலே தென்படாமலிருக்கும் எல்லா விஷக் கிருமிகளுஞ் சேர்ந்து என்னில் நஞ்சுகளைச் செலுத்தின.



4. பசுக்கள் தொழுவங்களிலே சாய்ந்தன. வன மிருகங்கள் குகைகளுக்குச் சென்றன. மானிடர்களின் புலன்கள் உறங்கின. அப்பொழுது தென்படாத விஷக் கிருமிகள் எல்லாஞ் சேர்ந்து என்னில் நஞ்சுகளைச் செலுத்தின.

5. மாலையின் இருளிலே திருடர்களைப் போல் அவற்றை இருட்டிலே காணலாம். நாம் அவற்றைக் காணவில்லை. ஆனுல் அவை நம்மைக் காண்கின்றன, ஆதலால் மனிதர்களே! விழித்திருங்கள். 1,995

6. பாம்புகளே! சோதி உங்களுடைய தந்தை; புவி உங்களுடைய தாய்; ஸோமன் உங்களுடைய சகோதரன்; அதிதி உங்களுடைய சகோதரி. காணப்படாமலிருக்கும் நீங்கள் எங்களை யெல்லாம் காண்கிறீர்கள். உங்கள் உறைவிடங்களிலே நிலைத்திருங்கள். அங்கு சுகமாய் இன்புறுங்கள்.

7. தோள்களோடு செல்பவையும், தேகங்களோடு ஊர்பவையும், கூரிய பற்களோடு கொட்டுபவையும், கொடிய நஞ்சுள்ளவையுமான நீங்கள், இங்கு ஏன் இருக்கிறீர்கள்? காணப்படாமலிருக்கும் நீங்கள் அனைவரும் சேர்ந்து, எங்களிடமிருந்து தூரத்தில் விலகிச் செல்லுங்கள்.

#### சூரியன்

8. தென்படாத கிருமிகளை யழிப்பவனும், காணுமலுள்ள எல்லா விஷ ஜந்துக்களை விலக்குபவனும், எல்லா யாது தானிகளை நீக்குபவனும், அனைத்தையும் காண்பவனுமான சூரியன், கீழ்த்திசையிலே எழுகிருன்.

9. பல விஷங்களை விலக்கி, சூரியன் உச்சத்திலே எழுந்தான். தென்படாத கிருமிகளை யழிப்பவனும், அனைத்தையுங் காண்பவனுமான ஆதித்தியன் சீவர்களின் நலத்துக்காக உயர்ந்தான்.

10. நான் சூரிய மண்டலத்திலே விஷத்தை மது விற்பவனுடைய மனையிலே சரும பாண்டத்தில்—மதுவை—

போல் வைக்கிறேன். துதியாருகுனை சூரியன் சாகான். நாங்களும் விஷத்தால் சாகோம். அவன் தூரத்திலிருந்தாலும் குதிரைகளால் இழுக்கப்படும் அவன் விஷத்தைப் பற்றுவான். விஷமே! மதுவித்தை உன்னை அமுதமாகச் செய்தது. 2,000

11. அற்பமான சிறிய பறவை உன்னுடைய விஷத்தைத் தின்றது. அவள் சாகாள். நாங்களும் சாகோம். அவன் தூரத்திலிருந்தாலும், குதிரைகளால் இழுக்கப்படும் அவன் விஷத்தைப் பற்றுவான். விஷமே! மதுவித்தை உன்னை அமுதமாகச் செய்தது.

12. அக்கினியின் மூவ்வேழு பொறிகள் விஷத்தின் சாரத்தைப் பஸ்மப்படுத்துக. சுடற்பொறிகள் சாகாமலிருக்கின்றன. நாங்களும் சாகோம். அவன் தூரத்திலிருந்தாலும் குதிரைகளால் இழுக்கப்பட்ட அவன் விஷத்தைப் பற்றுவான். விஷமே! மதுவித்தை உன்னை அமுதமாகச் செய்தது.

13. நான் விஷத்தை நீக்கும் தொண்ணூற்றென்பது நதிகளின் பெயர்களைக் கூறுகிறேன். அவன் தூரத்திலிருந்தால் குதிரைகளால் இழுக்கப்படும் அவன் விஷத்தைப் பற்றுவான். விஷமே! மதுவித்தை உன்னை அமுதமாகச் செய்தது.

14. தேகமே! உன் விஷத்தை மூவ்வேழு பெட்டை மயில்களும், ஏழு சகோதரிகளான நதிகளும், கும்பங்களால் சலத்தை எடுத்துச் செல்லும் யுவதிகளைப் போல் எடுத்துச் செல்வார்களாக.

15. அற்பமான கீரி விஷத்தை எடுத்துச் செல்க. இல்லையேல் நான் விஷக் கிருமியைக் கல்லால் அரைப்பேன். என் தேகத்திலிருந்து விஷம் நீங்குக. தூரமான இடங்களுக்குச் செல்க.



16. அகஸ்தியனுடைய ஆக்ஞையால் துரிதமாகி, இங்ஙனம் நகுலம் கூறிற்று. தேளின் விஷம் நஞ்சற்றது; பலமில்லாதது. தேளே! உன் விஷம் கொடுமையில்லாதது. 2,006

மண்டலம் ஒன்று: சூக்தங்கள் 191

இருக்குக்கள் – 2,006

★

## முதலாவது மண்டலம் முற்றிற்று.

# இரண்டாவது மண்டலம்

*

## 1. அக்கினி

### 192. கிருத்ஸமதன்

1. அக்கினியே! மனிதர்களின் நடுவே மனிதர் தலைவனுன நீ, சோதிகளோடு தோன்றுகிருய். நீ சலங்களிலிருந்தும், கற்களிலிருந்தும், மரங்களிலிருந்தும், ஓஷதிகளிலிருந்தும், சுத்தனுகவும், எங்கும் பிரகாசிப்பவனுகவும் விளங்குகிருய்.

2. அக்கினியே! ஹோதாவின் செயல் உன்னுடையது; போதாவின் செயல் உன்னுடையது; ரித்விஜனுடைய செயல் உன்னுடையது; நேஷ்ரியின் செயல் உன்னுடையது; நீ யக்ஞத்தை விரும்புபவனுகிருய். அக்கினித்ரனுகிருய். பிரசாஸ்திரம் உன்னுடையது; நீ அத்வர்யு; நீ பிரம்மா; நீ மனையிலே கிரகபதி.

3. அக்கினியே! நீ இந்திரன்; வீரர்களின் வீரன்; நீ விஷ்ணு; மகத்தான கம்பீர நடையுள்ள நீ, போற்றத் தகுந்தவன்; பிரம்மணஸ்பதியான நீ, பிரம்மன்; செல்வங்களை ஏந்துபவன்; தாங்குபவனுன நீ, உன் அறிவால் எங்களைப் பாலிக்கிருய்.

4. அக்கினியே! நீ விரதங்களைப் பாலிக்கும் அரசனுன வருணன்; நீ துதியாருகனுன மித்திரன்; பகைவர்களையழிப்பவன்; நீ சாதுக்களைப் பாலிக்கும் அர்யமான். உன்னுடைய தானம் அனைவராலும் அனுபவிக்கப்படுகிறது. நீ சூரியனின் பாகம். தேவனே! எங்கள் யக்ஞத்தில் நல்ல பொருள்களை வழங்குபவனுகவும்.

5. அக்கினியே! நீ துவஷ்டா. நீ வழிபடுபவனுக்கு மிகுந்த செல்வத்தைத் தருகிருய். இவை உன்னுடைய துதிகள். மித்திரர்களை மேம்படுத்தும் நீ, எங்களுடைய பந்துத்வத்தை அறியவும். எங்களைத் துரிதமாய் ஊக்கப்



படுத்தும் நீ, எங்களுக்கு உத்தம குதிரைச் செல்வத்தைத் தருகிருய். புருவசுவான நீ, மானிடர்களின் படையாகிருய். 2,011

6. அக்கினியே! நீ ருத்திரன். நீ பகைவர்களை மகத்தான வானிலிருந்து நீக்குகிருய்; நீ மருத்துக்களின் பலமாகிருய்; நீ உணவுக்குத் தலைவனுகிருய்; நீ யக்ஞசதனத்திலே இனிமையாய் வசிக்கிருய். நீ சிகப்புக் குதிரைகளோடு காற்றைப் போல் வேகமாய்ச் செல்லுகிருய். நீ பூஷாவாகி, நீயாகவே வழிபடுபவர்களைப் பாலிக்கிருய்.

7. அக்கினியே! உன்னை மேம்படுத்துபவனுக்கு நீ செல்வத்தைத் தருபவனுகிருய். தேவஸவிதாவான நீ, இரத்தினங்களை ஏந்துகிருய். நீ மனிதர்களைப் பாலிப்பவனுன பகன். நீ செல்வத்தை நடத்துகிருய். யக்ஞ மனையிலே உன்னைப் போற்றுபவனுக்கு நீ பாலகனுகிருய்.

8. அக்கினியே! சனங்களின் பாலகனுன உன்னை, மனிதர்கள் தங்கள் மனைகளில் போற்றுகிருர்கள். ஈகைமனமுள்ள மன்னனுன உன்னைப் பெருமைப்படுத்துகிருர்கள். சுவாலை முகமுள்ள நீ, அனைத்தையும் அரசுபுரிகிருய். நீ நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான படைகளுக்கு ஒப்பாயிருப்பவன்.

9. அக்கினியே! மனிதர்கள், தந்தையான உன்னை யக்ஞங்களால் போற்றுகிருர்கள். அவர்கள் தேகத்தை ஒளிப்படுத்தும் உன்னை, சகோதரத் தன்மைக்காகப் பிரியமான செயல்களால் ஏத்துகிருர்கள். நீ பணிவிடை செய்பவனுக்குப் புதல்வனுகிருய். நீ, நண்பனும் சுகப்படுத்துபவனுமாகி எங்களைப் பாலிக்கிருய்.

10. அக்கினியே! நீ ரிபு; நீ அருகிலிருக்குங்கால் போற்றத் தகுந்தவன்; நீ புகழுள்ள உணவுக்கும், செல்வத்துக்கும் தலைவனுகிருய்; நீ மிக்கப் பிரகாசிக்கிருய்; நீ அளிப்பதற்காக எரிக்கிருய்; நீ யக்ஞத்தை நடத்துகிருய். பயன்களைத் தருகிருய். 2,016

11. தேவனான அக்கினியே! நீ அவியளிப்பவனுக்கு அதிதியாகிறாய். ஹோதாவும், பாரதியுமான நீ, மொழியால் வளர்கிறாய். நீ பலத்தை யளிக்க நூறு வருடங்களுள்ள இளையாகிறாய். நீ விருத்திரனைக் கொல்பவன். நீ செல்வபதி. நீ சரஸ்வதி.

12. அக்கினியே! நீ நன்கு போஷிக்கப்பட்டவுடன் உத்தம உணவைத் தருகிறாய். உன்னுடைய விரும்பத்தகுந்த நிறங்களிலே செல்வங்கள் விளங்குகின்றன. நீ உணவு; நீ பாவத்திலிருந்து கடத்துபவன்; நீ மகான்; நீ செல்வம்; நீ பலவிதமாயிருப்பவன்; நீ எங்கும் பரந்தவன்.

13. அக்கினியே! ஆதித்தியர்கள் உன்னைத் தங்கள் வாயாகச் செய்து கொண்டார்கள். கவியே! சுத்தர்கள் உன்னைத் தங்கள் நாவாகச் செய்து கொண்டார்கள். செல்வந் தரும் தேவர்கள் யக்ஞங்களில் உன் ஆதீனத்தில் இருக்கிறார்கள். அவர்கள் அளிக்கப்படும் அவியை, உன்னால் புசிக்கிறார்கள்.

14. துரோகமற்றவர்களும், அமிருதர்களுமான எல்லாத் தேவர்களும், அளிக்கப்பட்ட அவியைத் தங்கள் வாய் போலிருக்கும் உன்னால் புசிக்கிறார்கள். மனிதர்கள் எல்லா உணவுகளின் ரஸத்தையும் உன்னால் சுவைக்கிறார்கள். ஓஷதிகளின் கருவான நீ, சுத்தனாய்ப் பிறக்கிறாய்.

15. அக்கினியே! தேவனே! நீ உன் பலத்தால் அந்தத் தேவர்களோடு சேர்ந்திருக்கிறாய். நீ தனித்துமிருக்கிறாய்; நன்கு தோன்றிய அக்கினியே! நீ அவர்களைப் பலத்திலே முந்துகிறாய். உன்னுடைய மகிமையால் பக்குவமாகும் உணவு, சோதி புவிகளின் நடுவே பரவுகிறது.

16. அறிஞர்கள் துதிப்பவர்களுக்கு உத்தமப் பசுவையும், உத்தமக் குதிரையையுமளிக்கிறார்கள். அக்கினியே! நீ எங்களையும், அவர்களையும் உத்தம சுக



நிலையத்துக்குச் செலுத்தவும். வீரப் புதல்வர்களோடு நாங்கள் சபையிலே முழங்கிப் பேசுவோமாக. 2,022

## 2. அக்கினி

### 193. கிருத்ஸமதன்

1. ஜாதவேதஸனான அக்கினியை மேம்படுத்துங்கள். நன்கு சொலிப்பிக்கப்பட்டவனும், நன்கு ஊட்டப்பட்டவனும், மிக்கப் போற்றப்பட்டவனும், பிரகாசிப்பவனும், ஹோதாவும், போர்களிலே பலத்தைத் தருபவனுமான அவனை, அவியாலும் மிகுந்த மொழியாலும் போற்றுங்கள்.

2. அக்கினியே! காலைகளும் மாலைகளும் உன்னைப் போற்ற,தொழுவங்களிலே தங்கள் கன்றுகளை நாடும் பசுக்களைப்போல் விரும்புகின்றன. பலரால் புகழப்படுபவனும், தன்னைத் தான் நடத்திக் கொள்பவனுமான நீ, சோதியிலே பரவுகிறாய். நீ மனிதர்களின் எல்லா யக்ஞங்களிலுமிருக்கிறாய். நீ இரவிலே நன்கு பிரகாசிக்கிறாய்.

3. தேவர்கள், உலகத்தின் மூல ஸ்தானத்திலே, அழகிய தோற்றமுள்ளவனும், சோதியிலும் புவியிலும் பரவுபவனும், விருப்பங்களை ஏந்திச் செல்லத் தேரைப் போல் அறியத் தகுந்தவனும், சுத்த ஒளியோடு விளங்குபவனும், மனிதர்களின் நடுவே நண்பனைப் போல் போற்றுவதற்கருகனுமான அக்கினியை ஸ்தாபித்திருக்கிறார்கள்.

4. தேவர்கள், புவியின் மீது மழையைப் பொழிபவனும், பொன்னைப் போல் பிரகாசிப்பவனும், சோதியிலும் புவியிலும் பரவுபவனும், சுவாலைகளால் ஊக்கப்படுத்துபவனும், சலத்தைப் போல் பாலிப்பவனும்,சோதியிலும் புவியிலும் வியாபகமாகும் அவனை, அவனுடைய சொந்த இடத்திலே நிலைப்படுத்தியிருக்கிறார்கள்.

5. தேவர்களுக்கு அவிகளைச் செலுத்தும் எல்லா யக்ஞங்களிலும் அக்கினி சூழ்ந்திருப்பானாக. அவன்

வளரும் ஓஷதிகளின் நடுவே ஒளிச் சுடர்களோடு சொலித்து, சோதியையும் புவியையும், தன் பொறிகளால் வான் நட்சத்திரங்களைப் போல் செல்வப்படுத்தும் போது அக்கினியை, மனிதர்கள், அவிகளாலும், துதிகளாலும் போற்றுகிறார்கள். 2,027

6. அக்கினியே! நீ எங்களுடைய க்ஷேமத்துக்காகச் செல்வத்தை ஏந்துகிறாய். நீ எங்களால் எழுப்பப்பட்டு, செல்வம் தரும் வள்ளலாக விளங்கவும். தேவனே! சோதியையும் புவியையும் எங்களுக்காகச் செழிப்பிக்கவும். தேவர்கள் புசிக்க, மனிதன் அவியைத் தரச் செழிப்பிக்கவும்.

7. அக்கினியே! நீ எங்களுக்கு அநந்தமான செல்வங்களையளிக்கவும். ஆயிரக்கணக்கான பசுக்களையும், மக்களையும் தரவும். புகழைத்தரும் பலத்தை, கதவுகளைப் போல் திறந்து எங்களுக்கு நல்கவும். எங்களுக்கு சோதியையும் புவியையும் பிரமத்தால் அனுகூலப்படுத்தவும். உஷைகள் உன்னைச் சூரியனைப் போல் ஒளிப்படுத்துவார்களாக.

8. அக்கினி அழகிய உஷையிலே எழுப்பப்பட்டு, மிக்க ஒளியோடு பிரகாசிக்கிறான். அக்கினி வழிபடுபவனின் துதிகளால் துதிக்கப்பட்டு, மனிதர்களின் அரசனான அவன், யக்ஞக் கருத்தாவினிடம் இதமான அதிதியாக வருகிறான்.

9. அக்கினியே! பழையவனே! மனிதர்களின் நடுவே எங்களுடைய தோத்திரம், பரந்து பிரகாசிக்கும் அமிருதர்களின் நடுவிலிருக்கும் முதல்வனான உன்னைப் போற்றுகிறது. அது எங்களுக்கு, யக்ஞங்களிலே வழிபடுபவனுக்கு விருப்பம் போல் அநந்தமான பலவிதமான பாற் செல்வங்களைத் தரும் பாற் பசுவைப் போல் தோன்றுக.

10. அக்கினியே! நீ எங்களுக்களித்த குதிரையாலும், உணவாலும் நாங்கள் வேறு சனங்களின் நடுவே எங்கள் பலத்தைப் புலப்படுத்துவோமாக. அனைவரையும் முந்தும் எங்களுடைய செல்வம், பஞ்ச சனங்களின் மீது சூரியனைப் போல் பிரகாசிக்க. 2,032



11. பகையழிக்கும் வலிமையுள்ள அக்கினியே! எங்களுடைய துதிகளுக்குச் செவி கொடுக்கவும். நீ துதிப்பதர்க்கருகன். நல்ல பிறப்புள்ள அறிஞர்கள் உன்னையே ஏத்துகிறார்கள். நித்தியமான சந்தானத்தைப் பற்ற துதியாருகனும், தன் சொந்த இடத்திலே ஒளி வீசுபவனுமான உன்னிடம் அவியளிப்பவர்கள் வருகிறார்கள்.

12. ஜாதவேதஸனே! அக்கினியே! தொழுபவர்களும், அறிஞர்களுமான நாங்கள், உன் ஆதீனத்திலிருப்போமாக. நீ எங்களுக்கு மனைகளுடன், பசுக்களுடன், மிகுந்த பொன்னுடன், பல ஆட்களுடன், பண்புள்ள புதல்வருடனுள்ள செல்வத்தையளிக்கவும்.

13. அறிஞர்கள், துதிப்பவர்களுக்கு உத்தமப் பசுவையும், உத்தமக் குதிரையையுமளிக்கிறார்கள். அக்கினியே! நீ எங்களையும் அவர்களையும் உத்தம சுக நிலையத்துக்குச் செலுத்தவும். வீரப் புதல்வர்களோடு நாங்கள் சபையில் முழங்கிப் பேசுவோமாக. 2,035

## 3. ஆப்பிரி சூக்தம்

### 194. கிருத்ஸமதன்

#### ஸமிந்தனம்

1. அக்கினி நன்கு சொலிப்பிக்கப்பட்டு புவியிலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். அவன் எல்லா சீவர்களின் முன்னே நிற்கிறான். ஹோதாவும், பாவகனும், பழையவனும், பேரறிஞனும், தேவனுமான அக்கினி யக்ஞாருகனாகி தேவர்களை யஜிப்பானாக.

#### நராசம்ஸன்

2. நன்கு பிரகாசிக்கும் நராசம்ஸன் யக்ஞ ஸ்தானங்களை ஒளிப்படுத்தி, தன் மகிமையால் மூன்று சோதி உலகங்களைப் புலப்படுத்தி யக்ஞத்தின் முகப்பிலே அவி

யைப் பரப்பி நெய்யளிக்கும் மனத்தோடு தேவர்களைத் திருப்தி செய்வானாக.

### துதிக்கப்படுபவன்

3. அக்கினியே! மனத்திலே துதிக்கப்பட்டு தகுந்தவனாயிருக்கும் நீ, மானிடனின் முன்னே, இன்று முதன்மையாகத் தேவர்களை யஜிக்கவும். நீ மருத்துக்களின் படையை அழைத்து வா. நித்தியமான இந்திரனையும் அழைத்து வா. மனிதர்களே! தருப்பையிலே அமர்ந்துள்ள இந்திரனைப் போற்றுங்கள்.

### தருப்பை

4. தேவனே! தருப்பையே! வசுக்களும், விசுவே தேவர்களும், துதியாருகர்களான ஆதித்தியர்களும், செல்வத்துக்காக இந்த வேதிகையின் பரத்தப்பட்டதும், நெய் தெளிக்கப்பட்டதும், செழிப்பிப்பதும், வீரர்களைப் பலப்படுத்துவதும், பூரணமாயிருப்பதுமான இந்தத் தருப்பையிலே அமர்வார்களாக.

### கதவுகள்

5. பரந்தவையும், சுலபமாய் நுழைவதற்குரியவையும், வணக்கங்களோடு வந்திப்பதற்குத் தகுந்தவையும், தேவிகளுமான கதவுகள் திறக்கப்படுக. விரிந்தவையும், இன்னலாகாதவையும், வீரச் செல்வமுள்ளவையும், புகழுள்ளவையும், அழகுள்ளவையும், சுத்தஞ் செய்பவையுமான கதவுகள் போற்றப்படுக. 2,040

### உஷையும் இரவும்

6. பால் நிறைந்தவையும், நன்களிப்பவையும் நித்தியமாய்ப் போற்றப் படுபவையும், எங்களுடைய நல்ல செயல்களுக்காக அல்லும் பகலும் இயங்குபவையுமான புகழுள்ள நெசவு செய்யும் இரு பெண்களைப் போல் இசைந்து, பரந்த இழையை, யக்ஞத்தின் ஆடையைப் பூர்த்தி செய்ய நெய்கின்றன.



### ஹோதாக்கள்

7. முதன்மையாகப் போற்றத் தகுந்தவர்களும், மிக்க அறிஞர்களும், தெய்வ ஹோதாக்களுமான இருவர்கள் ரிக்கோடு போற்றுவார்களாக. உத்தம வடிவமுள்ள அவர்கள் உரிய காலத்திலே தேவர்களை யஜித்து, புவியில் நாபியின் மீதுள்ள மூன்று உயர்ந்த ஸ்தானங்களிலே அவிகளை அளிப்பார்களாக.

### மூன்று தேவிகள்

8. நம்முடைய புத்தியைப் பூர்த்தி செய்யும் ஸரஸ்வதியும், தேவியான இளையும், எங்கும் வியாபகமாகும் பாரதியுமான மூன்று தேவிகள், சுவதாவோடு அமர்ந்து, எங்களுடைய குற்றமற்ற தஞ்சமான இந்த யக்ஞத்தைப் பாலிப்பார்களாக.

### துவஷ்டா

9. எங்களுக்குப் பொன்மேனியுள்ளவனும், நன்கு வளர்ந்தவனும், உணவையளிப்பவனும், துரிதனும், வீரனும், தேவர்களை விரும்புபவனுமான புதல்வன் தோன்றுக. துவஷ்டா குலத்தைப் பெருக்கும் சந்தானத்தைத் தருவானாக. தேவர்களின் உணவும் எங்களிடம் வருக.

### வனஸ்பதி

10. வனஸ்பதியான அக்கினி எங்கள் செயல்களை அறிந்து, எங்கள் அருகில் இருப்பானாக. அவன் தன் செயல்களால் அவியைப் பக்குவப்படுத்துகிறான். அவியைச் செம்மைப் படுத்தும் தேவன், அவி மும்முறை தூய்மையாயிற்று என்பதை அறிந்தவுடன் அதைத் தேவர்களிடம் செலுத்துவானாக. 2,045

### சுவஹாகிருதம்

11. நான் நெய்யை ஊற்றுகிறேன். நெய் அவனுடைய பிறப்பிடம். அவன் நெய்யிலே தங்குகிறான். நெய் அவனுடைய ஒளியாகும். அளிக்கப்படும் அவிக்குத் தேவர்களை ஏந்தி வா. சுவாஹாவோடு அளிக்கப்பட்ட அவியை அவர்களிடம் செலுத்தவும். 2,046

# 4. அக்கினி

## 195. ஸோமாஹுதி பார்கவன்

1. நான் உங்களுக்காக மிக்க ஒளியுள்ளவனும், பாபமில்லாதவனும், சனங்களின் அதிதியும், யக்ஞ உணவை ஏற்றுக் கொள்பவனும், ஜாதவேதஸனும், மனிதர்களிலிருந்து தேவர்கள் வரை எல்லா ஜீவர்களையும் நண்பனைப் போல் தாங்குபவனும், தேவனுமான அக்கினியை அழைக்கிறேன்.

2. பிருகுக்கள் அக்கினியைப் போற்றி அவனை இரு இடங்களிலே புலப்படுத்தினார்கள். சலங்களின் இருப்பிடத்திலே, மானிடப் புதல்வர்களின் நடுவிலே, தேவர்களின் தலைவனான அந்த அக்கினி, துரித குதிரையின் மீது ஏறி எங்கள் பகைவர்களை எப்பொழுதும் தாழ்த்துவானாக.

3. தேவர்கள் சோதியிலே வசிக்க எண்ணி மானிட சனங்களின் நடுவே அக்கினியைப் பிரிய நண்பனாக ஸ்தாபித்தார்கள். யக்ஞ ஸ்தானத்திலிருக்கும் அந்த அக்கினி அவியளிப்பவனுக்கு வள்ளலாகி, அவன் விரும்பப்படுங்கால் இரவிலே பிரகாசிக்கிறான்.

4. ஒருவன் அக்கினியைப் புட்டிப் படுத்துவது தன்னையே புட்டி செய்து கொள்வது போல் இன்பமாகிறான். அவன் ப்ரவி கஷ்டத்தை சகிக்குங்கால், அவனுடைய தோற்றம் சுந்தரமாகிறது. அவன் புதர்களிலே தன் சுவாலைகளை, வாலையாட்டும் தேர்க் குதிரையைப் போல் ஆட்டுகிறான்–செலுத்துகிறான்.

5. தன் உண்மையான வடிவத்தை அறிஞர்களுக்குப் புலப்படுத்துபவனும், பலவித ஒளியால் அவிகளில் அறியப்படுபவனும், அடிக்கடி முதுமையை அடைந்தாலும் மீண்டும் மீண்டும் இளைஞனைத் தோன்றுபவனுமான அக்கினியின் மகிமையை அவனுடைய தோழர்கள் முழங்குகிறார்கள். 2,051

6. அவன் காடுகளின் நடுவே தன்னை உணவால் திருப்தி செய்து கொள்வது போல் பிரகாசிக்கிறான்.



அவன் இறக்கத்தில் செல்லும் சலத்தைப் போல் பாய்கிறான். போரின் தேரைப்போல் சப்திக்கிறான். அவன் கருப்பு வழியிலே எரியுமழகோடு விளங்குகிறான். நட்சத்திரங்களோடு புன்னகை செய்யும் வானைப் போல் தென்படுகிறான்.

7. தன் விருப்பம்போல் திரியும் கோபனற்ற பசுவைப் போல், பல இடங்களில் இருக்கும் அவன் புவியெல்லாம் பரவுகிறான். மிக்கப் பிரகாசிக்கும் அக்கினி காய்ந்த செடி கொடிகளை எரிக்கிறான். கருமையின் வேதனையை மரங்களுக் களிக்கிறான். அவற்றின் ரஸத்தை–ஈரத்தை முற்றும் பருகுகிறான்.

8. உன்னுடைய பழைய ஆதரவை நினைத்து எங்களுடைய இந்த மூன்றுவது யக்ஞத்திலே என்னுடைய துதியைக் கூறினேன். அக்கினியே! எங்களுக்குப் பல ஆட்களைத் தாங்குபவையான செல்வங்களையும், வமிசத்தையும், மிகுந்த புகழுள்ள உணவையுமளிக்கவும்.

9. அக்கினியே! கிருத்ஸமதர்கள் உனக்கு இரகசியத்திலே பணிந்து உன்னால் அருகிலுள்ளவர்களை ஜயித்து, நல்ல வீரர்களின் செல்வத்தை யடைந்து, பகைவர்களை வெல்லுவார்களாக. வழிபடுபவர்களுக்கும், துதிப்பவனுக்கும் உணவை யளிக்கவும். 2,055

# 5. அக்கினி

## 196. ஸோமாஹுதி பார்கவன்

1. ஹோதாவும், கற்பிப்பவனும், காப்பவனுமான அக்கினி பாலகர்களைப் பாலிக்கப் பிறந்தான். அவியுள்ள நாங்கள் பூஜார்ஹமானதும், ஜயிக்கத் தகுந்ததும், பராமரிப்பதற்குரியதுமான செல்வத்தைப் பெறும் சக்தியைப் பெறுவோமாக.

2. யக்ஞத்தை நடத்தும் அக்கினியிலே ஏழு ரசிமிகள் பரவுகின்றன. தேவர்களின் போதாவான அவன், மானிடப் போதாவைப் போல் ஒவ்வொரு தேவ யக்ஞத்

தையுஞ் செய்ய, எட்டாவது ஸ்தானத்திலாகி அதை நடத்துகிறான்.

3. அக்கினி, யக்ஞத்தில் அளிக்கப்படும் அவிகளையும், அங்கு கூறப்படும் எல்லாத் துதிகளையுமறிகிறான். அவன் கருவிகளின் எல்லாக் காவ்யங்களையும் சக்கரத்தின் கம்புகளை – பற்களை – உட்படுத்தும் வட்டத்தைப் போல் அறிகிறான்.

4. யக்ஞத்தைச் சிரமப்படுத்தும் சுத்தன், சுத்த செயலோடு சேர்ந்து பிறந்திருக்கிறான். சுத்தன் நிலையான விரதங்களை அறிந்து எழும் மரக் கிளைகளைப் போல் வளர்கிறான்.

5. நேஷ்டிரியின் பசுக்களும், சகோதரிகளுமான விரல்கள், அக்கினியின் யஜனத்தை நடத்துகின்றன. அவை மூவ்வனல்களைப் பலவிதமாய்ப் போற்றுகின்றன. 2,060

6. நெய் ஏந்தும் துடுப்பு, தாயான வேதியினருகில் வைக்கப்பட்டவுடன், மழை பெய்தவுடன் யவத்தைப் போல் அத்வர்யு இன்புறுகிறான்.

7. அவன் ரித்விஜன். தன் ஆதரவுக்குத் தன் ரித்விஜக் கடமையை நடத்துவானாகுக. நாமும் தக்கவாறு அவனுக்கு ஸ்தோமத்தைக் கூறி யக்ஞத்தை அளிப்போமாக.

8. அக்கினியே! நாங்கள் அளிக்கும் யக்ஞம் உன்னில் பூர்த்தியாகவும்; வழிபடும் இந்த அறிஞன் எல்லாத் துதியாருகத் தேவர்களைத் தக்கவாறு துதிக்கவும்; நீ நடத்தவும். 2,063

## 6. அக்கினி

### 197. ஸோமாஹுதி பார்கவன்

1. அக்கினியே! என்னுடைய இந்த ஸமித்தையும், இந்த அவியையும் பெற்றுக் கொள்ளவும். இந்தத் துதிகளை இனிமையாய்க் கேட்கவும்.



2. அக்கினியே! நாங்கள் இந்த அவியால் உன்னைப் போற்றுவோமாக. பலத்தின் மகனே! குதிரைகளை நாடுபவனே! உத்தமமாய்ப் பிறந்த உன்னை நல்ல சூக்தத்தால் புகழ்வோமாக.

3. செல்வத்தைத் தரும் அக்கினியே! துதிகளால் போற்றத் தகுந்தவனும், செல்வங்களை விரும்புபவனுமான உன்னை வழிபடும் நாங்கள், பாக்களோடு பணிவோமாக.

4. மகவானும், செல்வபதியும், அறிஞனும், செல்வத்தைத் தருபவனுமான நீ, எங்களுடைய தோத்திரங்களைத் தெரிந்து கொள்ளவும். எங்களுடைய பகைவர்களை விலக்கவும்.

5. நீயே சோதியிலிருந்து மழையைத் தருகிறாய். எங்களுக்குத் தேயாத பலத்தையும் அளிக்கிறாய்; நீ அபரிமித உணவையும் தருகிறாய். 2,068

6. இளைஞனும், நூதனும், போற்றத் தகுந்தவனும், ஹோதாவுமான நீ, உனக்கு வணக்க மளித்து உன் பாலனத்தை விரும்புவனிடம் எங்கள் துதியால் வரவும்.

7. அக்கினியே! அறிஞனே! நீ சனங்களின் இருதயங்களிலே செல்லுகிறாய். நீ ஏத்துபவர்களின், ஏத்தப்படும் தேவர்களின் சன்மங்களை அறிகிறாய். நீ, சனங்களுக்கு ஹிதமாயும், நண்பர்களுக்கு நலமாயுமுள்ள தூதன் போலாகிறாய்.

8. நன்கறியும் நீ, எங்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்யவும். உணரும் நீ, தேவர்களைக் கிரமமாய் யஜிக்கவும். இந்தத் தருப்பையின் மீது அமரவும். 2,071

## 7. அக்கினி

### 198. ஸோமாஹுதி பார்கவன்

1. அக்கினியே! மிக்க இளைஞனே! பாரதனே! வசுவே! எங்களுக்குப் புகழுள்ளதும், பிரகாசமாயிருப்

பதும், பலரால் விரும்பத் தகுந்ததுமான செல்வத்தை ஏந்தி வரவும்.

2. தேவனுடைய அல்லது மனிதனுடைய கொடுமை எங்களை வெல்லாமலாகுக. அவ்வித இரு பகைவர்களிடமிருந்து எங்களைப் பாலிக்கவும்.

3. அக்கினியே! நாங்கள் உன்னுதரவால் எங்களுடைய எல்லாப் பகைவர்களையும், சிற்றுறுகளைப் போல் கடப்போமாக.

4. அக்கினியே! நீ சுத்தப்படுத்துபவன்; நீ சுத்தன்; நீ துதிக்கத் தகுந்தவன்; நீ நெய்யவிகளால் போற்றப்பட்டு, மிக்கப் பிரகாசிக்கிறாய்.

5. பாரதனே! அக்கினியே! நீ ஈனுத பசுக்களோடும், காளைகளோடும், கன்றுகளுள்ள பசுக்களோடும் எங்களால் போற்றப்படுங்கால் எங்களுடையவனாகிறாய். 2,076

6. ஸமிந்தனத்தை உண்பவனும், நெய்யைப் பெறுபவனுமான நீ, பழையவன்; நீ ஹோதா; நீ உத்தமன்; நீ பலத்தின் மகன்; நீ அற்புதன். 2,077

## 8. அக்கினி

### 199. கிருத்ஸமதன்

1. புகழுள்ளவனும், வள்ளலுமான அக்கினியின் இணைக்கப்பட்ட தேரை, உணவை விரும்பும் ஒருவனைப் போல் துரிதமாய்ப் போற்றவும்.

2. உத்தமத் தலைவனும், தேயாதவனும் சுந்தரத் தோற்றமுள்ளவனுமான அவன் துதியாகுங்கால் அவியளிப்பவனுடைய பகைவனையழிக்கிறான்.

3. தேயாத விரதமுள்ள அக்கினி சுவாலையுள்ளவனாகி, நம்முடைய மனைகளிலே காலையிலும் மாலையிலும் போற்றப்படுகிறான்.

4. அவன் பல நிறமுள்ளவன். கிரணங்களால் சூரியனைப் போல் அவன் நித்திய சுவாலைகளால் எங்கும் ஒளியைப் பரத்தி, திரண்ட சுடரோடு பிரகாசிக்கிறான்.



5. எங்களுடைய தோத்திரங்கள் தானே துலங்குபவனும், இருளைப் புசிப்பவனுமான அக்கினியைச் செழிப்பிக்கிறது. அவன் எல்லாப் புகழையும் ஏந்துகிறான்.

6. துன்பமாகாத நாங்கள் அக்கினியினுடைய, இந்திரனுடைய,ஸோமனுடைய பாலனங்களோடு சேர்ந்திருப்போமாக. எங்களோடு போர் செய்யும் சத்துருக்களை ஜயிப்போமாக. 2,083

## 9. அக்கினி

### 200. கிருத்ஸமதன்

1. ஹோதாவும், அறிஞனும் சோதியுள்ளவனும், ஒளி வீசுபவனும், மிக்க வலியனும், செயல்களைத் தடைபடாமல் நடத்த அறிபவனும், வசிட்டனும், ஆயிரஞ் சனங்களைத் தாங்குபவனும், ஒளி நாக்குள்ளவனுமான அக்கினி, ஹோதாவின் ஸ்தானத்தில் அமர்வானாக.

2. காளையே! அக்கினியே! நீ என்னுடைய தூதனாகவும். தீமையிலிருந்து எங்களைப் பாலிப்பவனாகவும். எங்களிடம் செல்வத்தைச் செலுத்துபவனாகவும். ஸதா விழித்திருப்பவனும், சோதியுள்ளவனுமான நீ, எங்களுடைய புதல்வர்களையும், பேரர்களையும், எங்களுடைய தேகங்களையும் பாலிப்பவனாகவும். எங்கள் விருப்பத்தைத் தெரிந்துகொள்ளவும்.

3. அக்கினியே! நாங்கள் உன்னுடைய உயர்ந்த சன்ம ஸ்தானத்திலிருக்கும்–சோதியிலுள்ள – உன்னைப் போற்றுகிறோம். தாழ்ந்த ஸ்தானமான வானிலிருக்கும் உன்னை ஸ்தோமங்களோடு பணிகிறோம். நான், நீ புவியிலிருந்து எழும் அந்த இடத்தையும் ஏத்துகிறேன். நீ சொலிப்பிக்கப்பட்டவுடன் அறிஞர்கள் உனக்கு அவிகளை யளிக்கிறார்கள்.

4. அக்கினியே! யக்ஞஞ் செய்பவர்களிலே உத்தமனாயிருக்கும் நீ, அவியால் தேவர்களை யஜிக்கவும். அளிக்கப்பட்ட அவியை அவர்களிடம் போற்றவும். நீ

செல்வங்களின் நடுவே செல்வபதியாயிருக்கிருய். எங்களுடைய காந்த மொழியை நீயே கற்பிக்கிருய்.

5. அழகான அக்கினியே! நீ தினந்தோறும் தோன்றும் இடங்களான சோதியும் புவியும் அழியாமலிருக்கின்றன. உன்னைத் துதிப்பவனுக்கு உணவையளிக்கவும். நல்ல புதல்வர்களைத் தாங்கும் செல்வபதியாக்கவும். 2,088

6. அக்கினியே! நீ இந்த ஆட்படையோடு எங்களுக்களிக்கும் உத்தமச் செல்வனுகவும். நீ தேவர்களை யஜிப்பதில் உத்தமன். தடைபடாத தேவ பாலகன். எங்களையும் பகைவர்களிடமிருந்து பாலிப்பவன். சோதியும் செல்வமும் சேரும் ஸ்வஸ்தியை அனைவருக்கும் ஒளிப்படுத்தவும். 2,089

## 10. அக்கினி

### 201. கிருத்ஸமதன்

1. அக்கினி அனைவராலும் அழைக்கத் தகுந்த முதல்வன். வேதிகையின் மீது அவன் மனிதனுல் சொலிப்பிக்கப்படுங்கால் பிதாவாகிருன். ஒளியை யணிந்துள்ள அவன் அமிருதனு யிருக்கிருன். விவித அறிவுள்ள அவன் ஆற்றலுள்ளவன். அனைவராலும் போற்றத் தகுந்தவன்.

2. அமிருதனும் பலவித அறிவுள்ளவனும், சித்திர பானுவுமான அவன், எல்லாத் துதிகளோடும் என் அழைப்பைக் கேட்பானுக. அவனுடைய தேரைக் கருப்புக் குதிரைகளும், சிகப்புப் பசுவங்களும், வெண் புரவிகளும் இழுக்கின்றன. பல இடங்களுக்கு அவன் செலுத்தப்படுகிருன்.

3. அவர்கள் மேற்பக்க அரணியில் சயனிக்கும் அக்கினியைப் பிறப்பிக்கிருர்கள். அவன் பல ஓஷதிகளிலே கருவாயிருக்கிருன். அவன் அவியால் புலப்படுத்தப்படுகிருன். அவன் இரவிலே சைதன்யத்தோடிருக்கிருன். அவன் இருளால் மறைக்கப்படாமலிருக்கிருன்.



4. நான், எல்லா புவனங்களில் வசிப்பவனும், மகானும், பரந்தவனும், தேஜசால் வளர்ந்தவனும், அவியால் வியாபகனும், வலியனும், தென்படுபவனுமான அக்கினியை, நெய்யாலும் அவியாலும் ஒளிப்படுத்துகிறேன்.

5. நான் எல்லா யக்ஞங்களிருக்கும் அக்கினிக்கு அவிகளை யளிக்கிறேன். அவன் தயங்காத மனத்தோடு நெய்யை ஏற்பானுக. மானிடர்களின் தஞ்சனும், விரும்பப்படும் எந்த வடிவத்தையும் எடுப்பவனுமான அக்கினி, ஒளியோடு பிரகாசிக்குங்கால் அவனை எவனுலும் பரிகசிக்க இயலாது. 2,094

6. உன்னுடைய பகைவர்களைக் காந்தியால் ஜயித்து, உன்னுடைய தோத்திரத்தை நீ தெரிந்து கொள்ளவும். எங்களுடைய தூதனுகவுள்ள உனக்கு மதுவைப்போல் துதியைக் கூறுவோமாக. நான் செல்வத்தை விரும்பி இனிப்பையளிக்கும் நாவோடும், மொழியோடும் பூரணமாயுள்ள அக்கினியை அழைக்கிறேன். 2,095

## 11. இந்திரன்

### 202. கிருத்ஸமதன்

1. இந்திரனே! என் அழைப்பைக் கேட்கவும். கவனியாமலிருக்காதே. நாங்கள் உன்னுடைய செல்வ தானத்துக்கு அருகர்களாயிருப்போமாக, இந்த அவிகள் வழிபடுபவனுக்குச் செல்வத்தை விரும்புகின்றன. நதிகளைப் போல் பெருகும் இவை உன் பலத்தைப் பலப்படுத்துகின்றன.

2. இந்திரனே! சூரனே! பூர்வத்தில் அஹியால் தடை செய்யப்பட்டிருந்த சலப் பெருக்கத்தை நீ விடுவித்தாய், அதை வழங்கினுய். தோத்திரங்களால் திற

மடைந்த நீ, தன்னை அமிருதன் என எண்ணியிருந்த தாஸனைத் தலைகீழாகக் கீழே தள்ளினாய்.

3. சூரனே! இந்திரனே! நீ எந்தத் துதிகளிலே, எந்தத் தொழுபவர்களின் ஸ்தோமங்களிலே விருப்பமாகிறாயோ, எந்தப் பாக்களிலே இன்புறுகிறாயோ, அந்தத் தோத்திரங்கள் யக்ஞத்தை நோக்கி வரும் உன்னிடமே வருகின்றன.

4. நாங்கள் எங்களுடைய தோத்திரங்களால் உன்னுடைய பிரகாசமாயுள்ள பலத்தைப் பலப்படுத்துகிறோம். உன்னுடைய கைகளிலே வச்சிராயுதத்தை வைக்கிறோம். பாக்களால் பெருகி, தேஜஸோடிருக்கும் நீ, சூரியனால் ஊக்கமாகி தாஸிகளான அரக்கிகளை ஜயிக்கவும்.

5. சூரனே! இந்திரனே! நீ உன்னுடைய ஆற்றலால், குகையில் ஒளிந்திருந்தவனும், மறைப்பிலே பதுங்கியிருந்தவனும், சலங்களில் வசித்து அவற்றால் மூடப்பட்ட மாயாவியும், வானிலே மழையைத் தடுத்தவனுமான அஹியைக் கொன்றாய். 2,100

6. இந்திரனே! நாங்கள் உன்னுடைய பழைய மகத்தான செயல்களைப் போற்றுகிறோம். நாங்கள் உன்னுடைய புதிய வீரச் செயல்களைப் பாடுகிறோம்; நாங்கள் உன் கைகளிலே பிரகாசிக்கும் வச்சிராயுதத்தைப் புகழ்கிறோம்; நாங்கள் சூரியனாயிருக்கும் உன்னுடைய கொடிகளான குதிரைகளைப் போற்றுகிறோம்.

7. இந்திரனே! உன்னுடைய துரித குதிரைகள் மழையை யறிவிக்கும் முழக்கத்தை எழுப்பின. மேகக் குவியல் சென்றது. சமநிலம் மழைக்குக் காத்திருக்கின்றது.

8. விழித்திருக்கும் மேகம் வானிலே நிற்கிறது. அது தாய்மார்களான சலங்களோடு சேர்ந்து, உறுமி, எங்கும் பரவுகிறது. காற்றுக்கள் தூரமான அடிவானிலே வாக்கைச் செழிப்பித்து, இந்திரனால் பிரேரிதமான சத்தத்தைப் புலப்படுத்துகின்றன.



9. மகத்தான இந்திரன் மேகத்திலே சயனித்திருந்த வஞ்சகனான விருத்திரனை அடித்தான். சோதியும் புவியும் பொழிபவனின் இடிக்கும் வச்சிராயுதத்துக்குப் பயந்து நடுங்கின.

10. மனிதர்களின் நண்பனான இந்திரன் மானிடர்களின் பகைவனைக் கொல்ல விரும்புங்கால், பொழிபவனின் வச்சிராயுதம் முழக்கஞ் செய்தது. இந்திரன் ஸோமத்தைப் பருகி, மாயாவியான தானவனுடைய தந்திரங்களைத் தடுத்தான். 2,105

11. சூரனே! நீ பருகவும். இந்திரனே! நீ ஸோமத்தைப் பருகவும். இன்பந்தரும் ஸோமங்கள் உன்னை இன்புறுத்துக. அவை உன் வயிற்றின் இரு பாகங்களையும் நிரப்பி, உன் பலத்தைப் பலப்படுத்துக. இங்ஙனம் உன் வயிற்றை நிரப்பும் ஸோமம் இந்திரனான உன்னைத் திருப்தி செய்க.

12. இந்திரனே! அறிஞர்களான நாங்கள் உன் இருதயத்தில் இருப்போமாக – வசிப்போமாக. ருதத்தை விரும்பும் நாங்கள் உனக்கு சேவை செய்து செயலைப் பற்றுவோமாக. பாலனத்தை விரும்பும் நாங்கள் உன் பாக்களைத் தியானிக்கிறோம். நாங்கள் உன்னுடைய செல்வ தானத்துக்கு அருகர்களாவோமாக.

13. இந்திரனே! உன் பாலனத்தை விரும்பி, துதிகளால் உன் பலத்தை வளர்ப்பவர்கள் போல் நாங்களும் வளர்ந்து, உன்னுடைய ஆதீனத்திலிருப்போமாக. தேவனான இந்திரனே! நாங்கள் விரும்பும், மிகுந்த ஆற்றலுள்ளதும், உத்தமப் புதல்வர்களுள்ளதுமான செல்வத்தை, நீ எங்களுக்குத் தருகிறாய்.

14. இந்திரனே! நீ எங்களுக்கு மனையையளிக்கவும். எங்களுக்கு நண்பனை அளிக்கவும். நீ எங்களுக்கு மருத்துக்

களின் படையையும், பலத்தையும் அவர்களோடு ஒருமித்த மனமுள்ளவர்களின் பலத்தையும், ஸோமத்தின் முதல் பானத்தைப் பருகும் வாயுக்களின் பலத்தையும் அளிக்கவும்.

15. இந்திரனே! நீ எவர்களிலே இன்புறுகிருயோ, அவர்கள் ஸோமத்தைப் பருகுவார்களாக. நீயும் பலத்துக்காகவும், இன்பத்துக்காகவும் பருகவும். தாரகனே! நீ துதியாகுகர்களான, வலியர்களான மருத்துக்களோடு சேர்ந்து எங்களைப் போர்களிலே செல்வத்தால் மேம்படுத்தவும். சோதியையும் மேம்படுத்தவும். 2,110

16. தாரகனே! சுகத்தைத் தரும் உன்னைப் பாக்களால் போற்றுபவர்கள் மகான்களாகிருர்கள். உனக்குத் தருப்பையைப் பரத்துபவர்கள் உன்ஞல் பாலனமாகிருர்கள். அவர்கள் குடும்பத்தோடு உணவைப் பெறுகிருர்கள்.

17. சூரனே! இந்திரனே! உக்கிரங்களாயுள்ள திரித்துருகங்களிலே இன்பமாகி, ஸோமத்தைப் பருகவும். திருப்தியான நீ, உன் தாடிகளிலே சிந்தியுள்ள ரஸத்தை ஆட்டிச் சிதறி, உன் குதிரைகளோடு நாங்கள் பிழிந்துள்ள ரஸத்தைப் பருக நெருங்கவும்.

18. சூரனே! இந்திரனே! நீ எந்த பலத்தால் ஔர்ணவாபனுன விருத்திரனை அழித்தாயோ, அந்த பலத்தைப் பேணவும். நீ அந்த பலத்தால் ஆரியனுக்கு சோதியைப் புலப்படுத்திஞய். உன்னுடைய இடது கையால் தஸ்யு தள்ளப்பட்டான்.

19. நாங்கள் உன்னுடைய பாலனத்தால், ஆரியனேடு எங்களுடைய பகைவர்களான தஸ்யுக்களை யெல்லாம் ஜயித்து செல்வத்தைப் பற்றுவோமாக. நீ எங்களுக்குச் செய்த செல்வச் செயலாவது: எங்களுடைய நண்பனுன திருதனுக்காகத் துவஷ்டாவின் புதல்வனுன விசுவரூபனைக் கொன்ருய்.



20. பொழிபவனுன திரிதனுல் அளிக்கப்பட்ட மதகா ரஸத்தால் இந்திரன் பலமடைந்து, அற்புதனைக் கொன்ருன். அவன் சுழலும் சக்கரத்தைச் சூரியனைப் போல் செலுத்திஞன். அங்கிரஸர்களின் உதவியோடு பலனைப் பிளந்தான். 2,115

21. இந்திரனே! உன்னிடமிருந்து வரும் செல்வியான தட்சிணை, உன்னைத் துதிப்பவனுக்கு விரும்பும் வரத்தையளிக்கிறது. உன்னைத் துதிக்கும் எங்களுக்கு அதையளிக்கவும். போற்றப்படும் நீ, கவனியாமலிருக்காதே. நாங்கள் சபையிலே வீரப் புதல்வர்களோடு முழங்கிப் பேசுவோமாக. 2,116

## 12. இந்திரன்

### 203. கிருத்ஸமதன்

1. மானிடர்களே! பிறந்தவுடன் முதல்வனுயிருப்பவனும், தேவனும், ஞானமுள்ளவனும், தன் வீரச் செயல்களால் தேவர்களைப் பாலித்து மேம்படுத்துபவனும், சோதியும் புவியும் அச்சமாகும் பலமுள்ளவனும், தன் ஆண்மையின் மேன்மையால் அறியப்படுபவனுமே இந்திரன்.

2. மானிடர்களே! சலனமான புவியை நிலைப்படுத்தியவனும். கோபமடைந்த மலைகளைச் சாந்தப்படுத்தியவனும், பரந்த வானைப் பரத்தியவனும், சோதியை நிலைநிறுத்தியவனுமே இந்திரன்.

3. மானிடர்களே! அஹியைக் கொன்று ஏழு நதிகளை விடுவித்தவனும், பலனுல் தடுக்கப்பட்ட பசுக்களை மீட்டவனும், மேகங்களின் நடுவே அக்கினியைத் தோற்றுவித்தவனும், போர்களிலே பகைவர்களை ஜயிப்பவனுமே இந்திரன்.

4. மானிடர்களே! திறமற்ற இவ்வுலகங்களைத் திறப்படுத்தியவனும், தாழ்ந்த தாஸ இனத்தைக் குகையிலே செலுத்தியவனும், பகைவனுல் பாலிக்கப்பட்ட செல்வங்

கனை இரையை எய்யும் வேடனைப்போல் எய்து பற்றுபவ வனுமே இந்திரன்.

5. உக்கிரனுன அவன் எங்கே எனக் கேட்கப்படு பவனும், அவன் இல்லை என அவர்களால் கூறப்படுபவ னும், பகைவரின் செல்வங்களைப் பறவைகளைப் போல் பறிப்பவனுமே இந்திரன். மானிடர்களே! அவனிடம் சிரத்தையுடனிருங்கள். 2,121

6. மானிடர்களே! துதித்து நாடும் அறிஞனையும், ஏழையையும், செல்வனையும் ஊக்கப்படுத்துபவனும், தகுந்த கற்களால் ஸோமத்தைப் பிழிபவனைப் பாலிப்பவ னும், சுந்தர மோவாயுமுள்ளவனே இந்திரன்.

7. மானிடர்களே! குதிரைகளையும், பசுக்களையும், கிராமங்களையும், எல்லாத் தேர்களையும் வைத்திருப்பவ னும், சூரியனையும் உஷையையும் தோற்றுவித்தவனும், சலங்களின் தலைவனுமாயிருப்பவனுமே இந்திரன்.

8. மானிடர்களே! போராடும் இரு படைகளாலும், வலிமையுள்ள வலிமையற்ற இருவிதப் பகைவர்களாலும் அழைக்கப்படுபவனும், ஒரே தேரில் ஏறி நிற்கும் இருவ ரால் தனித்தனியாய் நாடப்படுபவனுமே இந்திரன்.

9. மானிடர்களே! அவன் இல்லையேல் மனிதர் களுக்கு ஜயமில்லை எனப்படுபவனும், போராடுங்கால் பாலனத்துக்காக அழைக்கப்படுபவனும், விசுவத்துக்குப் பிரதிநிதியாக இருப்பவனும், அசையாதவற்றை அசை விப்பவனுமே இந்திரன்.

10. மானிடர்களே! வணக்கத்தையளிக்காமல் பெரிய பாபத்தைச் செய்த பல அறிவிலிகளைத் தன் வச்சிராயு தத்தால் உற்சாகமுள்ள அறிவிலிக்கு ஊக்கமளிக்காத வனும், தஸ்யுவைக் கொல்பவனுமே இந்திரன். 2,126

11. மானிடர்களே! மலைகளில் நாற்பது வருடங் களாய் வசித்து வந்த சம்பரனைக் கண்டு பிடித்தவனும், தானுவின் தூங்கும் புதல்வனும், பலத்தில் பெருகியவனு மான அஹியைக் கொன்றவனுமே இந்திரன்.



12. மானிடர்களே! விருஷபனும், ஏழு ரசிமிகள் உள்ளவனும், ஏழு நதிகளைப் பாய விடுவித்தவனும், வச் சிரமேந்துபவனும், ரௌஹிணனைக் கொன்றவனுமே இந்திரன்.

13. மானிடர்களே! சோதியிலும் புவியிலும் வணங் கப்படுபவனும், தன் பலத்தால் மலைகளை நடுங்கச் செய்ப வனும், ஸோமத்தைப் பருகுபவனும், திடமான அங்க முள்ளவனும், வச்சிராயுதமுள்ளவனும், வச்சிராயுதம் ஏந்துபவனுமே இந்திரன்.

14. மானிடர்களே! ஸோமமளிப்பவனையும், பக்கு வப்படுத்துபவனையும், துதியைக் கூறுபவனையும், உதவி நாடுபவனைப் பாலிப்பவனும், தோத்திரத்தாலும் ஸோமத் தாலும் அவியாலும் பலப்படுபவனுமே இந்திரன்.

15. இந்திரனே! உக்கிரனும் சத்தியனுமுள்ள நீ, பிழிபவனுக்கும் வழிபடுபவனுக்கும் பலத்தைத் தரு கிருய். உன்னுடைய நண்பர்களான நாங்கள் எப்பொழு தும் எங்கள் வீரர்களோடு சபையிலே முழங்கிப் பேசு வோமாக. 2,131

## 13. இந்திரன்

### 204. கிருத்ஸமதன்

1. மாரிகாலம் ஸோமனின் தாயாகிறுள். ஸோமன் பிறந்தவுடன் சலங்களிலே நுழைகிறுன். அங்கு வளர் கிறுன். சலத்தின் சாரத்தைப் பெறும் அவன் பிழிவதர்க் கருகனுகிறுன். ஸோமனின் ரஸம் போற்றத் தகுந்தது.

2. நதிகள் ஒருமித்துச் சேர்ந்து பாலை ஏந்தி கட லுக்குச் செல்லுகின்றன. அனைத்துக்கும் தஞ்சமளிக்கும் சமுத்திரத்துக்கு உணவை ஸாரத்தைத் தருகின்றன. இறக்கத்தில் பாயும் தாரைகளுக்கு வழி சமமாயிருக்கிறது

பூர்வத்திலே இவற்றிற்கு வழியை வகுத்த இந்திரன் போற்றத் தகுந்தவன்.

3. வழிபடுபவன் அளிக்கிறன். ஹோதா அறிவிக்கிறன். அத்வர்யு, பசுவின் அங்கங்களைக் கூறுபடுத்தும் செயல்களிலே ஈடுபடுகிறன். வேருெருவன் அவர்கள் செய்த பிழைகளை யெல்லாம் திருத்துகிறன். இவற்றை யெல்லாம் முதலில் நடத்திய இந்திரனை நீ, போற்றத் தகுந்தவன்.

4. விருந்தினனுக்கு ஏந்திச் செல்வதற்கு அதிகமாயிருக்கும் செல்வத்தை ஒருவன் தருவதுபோல் அவர்கள் வழிபடுபவர்கள் தங்கள் சனங்களுக்கு மிகுந்த உணவை வழங்கி அமர்கிறர்கள். அவன் அக்கினியைப் போல் வழிபடுபவனின் உணவைத் தன் பற்களால் புசிக்கிறன். இவற்றை யெல்லாம் முதலில் நடத்திய நீ, போற்றத் தகுந்தவன்.

5. நீ புவியை, சூரியனை நோக்கச் செய்தாய். நீ அஹியைக் கொன்று நதிகளுக்கு வழிகளை வகுத்தாய். தேவர்கள் தேவனுன உன்னை ஸ்தோமங்களால், மனிதர்கள், குதிரையை சலங்களால் போல் ஊக்கப் படுத்தினர்கள். இவற்றை அறியும் நீ, போற்றத் தகுந்தவன். 2,136

6. நீ உணவையும் செழுமையையும் தருகிறய். நீ ஈரமாயிருக்கும் கதிரிலிருந்து காய்ந்திருப்பதும், புட்டி தருவதுமான தானியத்தைக் கறக்கிறய். வழிபடுபவனுக்குச் செல்வத்தையளிக்கிறய். நீ விசுவத்துக்கு ஒரே தலைவன். இத்தகைய நீ, போற்றத் தகுந்தவன்.

7. வேளாண்மையால் மலர்பவையும், பழுப்பவையுமான ஓஷதிகளை நிலத்திலே பரத்தியவனும், சோதியிலே பலவித விண்சுடர்களைப் பிறப்பித்தவனும், மகானும், மகத்தான பொருள்களைத் தோற்றுவித்தவனுமான நீ, போற்றத் தகுந்தவன்.



8. பல வீரச் செயல்களை நடத்தும் நீ, யக்ஞ உணவைப் பாலிப்பதற்கும், தஸ்யுக்களை அழிப்பதற்கும், உன்னுடைய கூரிய வச்சிராயுதத்தால் நிருமானின் மகனுன ஸஹவசுவைக் கொல்ல இன்று கலங்காத முகத்துடனிருக்கவும். நீ போற்றுவதற்க்கருகன்.

9. ஒருவனுன உன்னுடைய இன்பத்துக்காக ஆயிரங் குதிரைகளிருக்கின்றன. நீ அனைவருக்கும் உணவைத் தருகிறய். நீ வழிபடுபவனைப் பாலிக்கிறய். நீ நபீதிக்காக தஸ்யுக்களைக் கட்டாமல் சிறைப்படுத்தினய். நீ அனைவராலும் அணுகத் தகுந்தவன். நீ போற்றத் தகுந்தவன்.

10. உன்னுடைய ஆண்மையிலிருந்து எல்லா நதிகளும் பாய்ந்தன. வழிபடுபவர்கள் அவனுக்கு அவியையளித்தார்கள். அவர்கள் மகத்தான செயல்களை நடத்தும் அவனுக்குச் செல்வத்தைத் தந்தார்கள். நீ பரந்த ஆறு பொருள்களை — சோதி, புவி, இரவு, பகல், சலம், ஓஷதி-கிரமப்படுத்தினய். நீ உன்னை நோக்கும் பஞ்ச சனங்களைப் பாலித்தாய். நீ போற்றத் தகுந்தவன். 2,141

11. வீரனே! உன்னுடைய வீரத் தன்மை போற்றத் தகுந்தது. அதனுல் ஒரு சங்கற்பத்திலே நீ செல்வத்தைப் பற்றுகிறய். வலியனுன ஜாதூஷ்டிரனின் உணவை அடைந்தாய். இவற்றையெல்லாம் நீ நடத்தினய். இந்திரனே! நீ போற்றத் தகுந்தவன்.

12. துர்வீதியும், வய்யனும், பெருகிப் பாயும் சலங்களை சுலபமாய்க் கடந்து செல்ல நீ வழியைச் செய்தாய். நீ தாழ்ந்திருந்த பராவிருஜனை உயர்த்தினய். நீ குருடனையும், முடவனையும் குணப்படுத்தி, புகழளித்தாய். நீ போற்றத் தகுந்தவன்.

13. வசுவே! இந்திரனே! எங்களுக்குச் செல்வ தானத்தைத் தரவும். உன்னிடம் மிகுந்த செல்வமிருக்கிறது. இந்திரனே! விரும்பத் தகுந்த செல்வத்தை எங்க

ளுக்களிக்கப் பற்றவும். நாங்கள் வீரர்களோடு சபையில் முழங்கிப் பேசுவோமாக. 2,144

## 14. இந்திரன்

### 205. கிருத்ஸமதன்

1. அத்வர்யுக்களே! இந்திரனுக்காக ஸோமத்தை எடுத்து வாருங்கள். மதமளிக்கும் ஸோமத்தைத் துடுப்புக்களால் அக்கினியில் பொழியுங்கள். வீரன் எப்பொழுதும் ஸோமரஸத்தை விரும்புகிறன். வர்ஷிக்கும் இந்திரனுக்கு ஸோமத்தை யளியுங்கள். அவன் அதை விரும்புகிறன்.

2. அத்வர்யுக்களே! அவன் தன் இடியால் மரத்தைத் தகிப்பதுபோல் மழையைத் தடுத்த விருத்திரனைக் கொன்ற இந்திரனுக்கு ஸோமத்தை அளியுங்கள். அவன் அதை விரும்புகிறன். இந்திரன் ஸோமபானத்துக்கருகன்.

3. அத்வர்யுக்களே! திரிபீகனைக் கொன்றவனும், வலனையழித்தவனும், பசுக்களை விடுவித்தவனுமான இந்திரனுக்கு வானிலே காற்றைப் போல் மழையைத் தரும் இந்த ஸோமத்தை யளியுங்கள். ஆடைகளால் முதியவனைப் போல் இந்திரனை ஸோமங்களால் போர்த்துங்கள்.

4. அத்வர்யுக்களே! தொண்ணூற்றென்பது கைகளைப் புலப்படுத்திய உரணனைக் கொன்றவனும், தலைகீழாக அற்புதனைக் கீழே தள்ளிய இந்திரனுக்கு ஸோமத்தை யளித்துப் போற்றுங்கள்.

5. அத்வர்யுக்களே! சுவசனனையும், வெப்பத்தால் கவரப்படாமலிருந்த சுஷ்ணனையும், வியம்சனையும் கொன்றவனும், பிப்ருவையும், நமுசியையும், ருதிக்கிரானையும் அழித்தவனுமான இந்திரனுக்கு ஸோமத்தை யளியுங்கள். 2,149



6. அத்வர்யுக்களே! வைரமான வச்சிரத்தால், சம்பரனின் நூறு பழைய கோட்டைகளை இடித்தவனும், வர்சினின் நூருயிரம் மக்களை வீழ்த்தியவனுமான இந்திரனுக்கு ஸோமத்தை யளியுங்கள்.

7. அத்வர்யுக்களே! நூற்றுக் கணக்கிலும், ஆயிரக் கணக்கிலும் அசுரர்களைக் கொன்று, அவற்றைப் புவியின் அங்கத்தின் மீது எறிந்தவனும், குத்ஸனுடைய, ஆயுவினுடைய, அதிதித்வனுடைய பகைவர்களை யழித்தவனுமான இந்திரனுக்கு ஸோமத்தை யளியுங்கள்.

8. அத்வர்யுக்களே! தலைவர்களே! இந்திரனுக்கு ஸோமத்தையளித்து, நீங்கள் விரும்புவதைப் பெற்றுக் கொள்ளுங்கள். புகழ் பெற்ற இந்திரனுக்குக் கைகளால் சுத்தப்படுத்தப்பட்ட ஸோமத்தை எடுத்து வாருங்கள். யக்ஞத்தை நடத்தும் நீங்கள் அதை இந்திரனுக்களியுங்கள்.

9. அத்வர்யுக்களே! நீங்கள் துரிதமான சுகப்படுத்தும் ஸோமத்தை அவனுக்களியுங்கள். சலத்தால் சுத்தமானதும், துடுப்பிலிருப்பதுமான ஸோமத்தை உயர்த்துங்கள். அவன் இன்பமாகி உங்கள் கைகளிலிருந்து பெற விரும்புகிறன். மதமளிக்கும் ஸோமரஸத்தை இந்திரனுக்களியுங்கள்.

10. அத்வர்யுக்களே! பாலால் நிறைந்துள்ள பசுவின் ஆபினத்தைப் போல் வள்ளலான இந்திரனை ஸோமத்தால் நிரப்புங்கள். யக்ஞாருகனுன இந்திரன், ஸோமத்தையளிக்க விரும்புபவனை நன்கறிந்து அவனிடம் தானே இந்த ஸோமத்தின் ரகசியத்தை அறிகிறேன் எனக் கூறினுன். 2,154

11. அத்வர்யுக்களே! சோதியின், வானின், புவியின், செல்வங்களின் அரசனுன இந்திரனை, ஸோமங்களால் களஞ்சியத்தை யவத்தால் போல் நிரப்புங்கள். இது உங்கள் செயலாகுக.

12. வசுவே! இந்திரனே! எங்களுக்குச் செல்வ தானத்தைத் தரவும். உன்னிடம் மிருந்த செல்வ மிருக்கிறது. இந்திரனே! விரும்பத் தகுந்த செல்வத்தை எங்களுக்களிக்க நீ அதைப் பற்றவும். நாங்கள் வீரர் களோடு சபையில் முழங்கிப் பேசுவோமாக. 2,156

## 15. இந்திரன்

### 206. கிருத்ஸமதன்

1. நான் மகானும் சத்தியனுமான இந்திரனுடைய உண்மையான மகத்தான வீரச் செயல்களைக் கூறு கிறேன். இந்திரன் திரிகத்துருகக்களிலே ஸோமத்தைப் பருகினன். அதனுடைய மதத்திலே அஹியைக் கொன்ருன்.

2. அவன் ஆதரவற்ற வெளியிலே சூரியனை நிலைப் படுத்தினன். அவன் பரந்த வானையும், சோதியையும் புவியையும் ஒளியால் நிரப்பினன். அவன் புவியைத் தாங்கினன். அவன் அதைப் பெருமைப் படுத்தினன். ஸோம மதத்திலே இந்திரன் இந்தச் செயல்களை நடத் தினன்.

3. அவன் கீழ்த்திசைகளை மனையை அளவு கோல்களால் அளந்தான். நதிகளின் சுனைகளை வச் சிரத்தால் தோண்டினன். நெடுந்தூரஞ் செல்லும் வழி களால் அனுயாஸமாய்ப் பெருக அவற்றைச் செலுத்தி னன். ஸோமத்தின் மதத்திலே இந்திரன் இந்தச் செயல்களை நடத்தினன்.

4. தபீதியைப் பிடித்துச் சென்ற அசுரர்களை எதிர்த்து எரியும் நெருப்பால் அவர்களுடைய எல்லா ஆயுதங்களையும் பற்பப்படுத்தினன். பிறகு தபீதியை அவர்களுடைய பசுக்களாலும், குதிரைகளாலும், தேர் களாலும் செல்வப்படுத்தினன். ஸோமத்தின் மதத் திலே இந்திரன் இந்தச் செயல்களை நடத்தினன்.



5. அவன் மகத்தாய் முழங்கும் பிரவாகத்தைப் பெருக்கிலிருந்து தடுத்தான். நீந்தி, பத்திரமாய்க் கரைக் குச் சேராதவர்களை அவன் மீட்டான். அவர்கள் நதி யைக் கடந்த பிறகு செல்வங்களைப் பற்றினர்கள். ஸோமத்தின் மதத்திலே இந்திரன் இந்தச் செயல்களை நடத்தினன். 2,161

6. இந்திரன் தன் மகிமையால் ஸிந்துவை வட திசை நோக்கத் திருப்பினன். தன் வச்சிராயுதத்தால் உஷையின் தேரை உடைத்தான். தன்னுடைய துரிதக் குதிரைகளால் அவனுடைய மந்த குதிரைகளைத் துடைத் தான். ஸோமத்தின் மதத்திலே இந்திரன் இந்தச் செயல்களை நடத்தினன்.

7. கன்னிகைகள் மறைந்திருந்த இடத்தை அறிந்து, பராவிருகன் – தாழ்ந்தவன் – தன்னைப் புலப் படுத்த அவர்களின் முன்னே நின்ருன். முடவன் அவர் களை–கன்னிகைகளை–முந்தினன். நிமிர்ந்து நின்ருன். குருடன் அவர்களைப் பார்த்தான். ஸோமத்தின் மதத் திலே இந்திரன் இந்தச் செயல்களை நடத்தினன்.

8. அங்கிரஸர்களால் துதிக்கப்பட்டு இந்திரன் வலனைப் பிளந்தான். அவன் மலையின் மூடப்பட் டிருந்த திரமான கதவுகளை இடித்துத் திறந்தான். அவர்களுடைய செயற்கைத் தடைகளை உடைத்தான். ஸோமத்தின் மதத்திலே இந்திரன் இச்செயல்களை நடத்தினன்.

9. நீ தஸ்யுவையும், சுமுரியையும், துனியையும், தூக்கத்திலே சாய்த்துக் கொன்ருய். நீ தபீதியைப் பாவித்தாய். அவனுடைய முன்னேடி அசுரர்களின் தங்கத்தைக் கண்டான். ஸோமத்தின் மதத்திலே இந் திரன் இச்செயல்களை நடத்தினன்.

10. இந்திரனே! உன்னிடமிருந்து வரும் செல்வி யான தட்சிணை உன்னைத் துதிப்பவனுக்கு விரும்பும் வரத்தையளிக்கிறது. உன்னைத் துதிக்கும் எங்களுக்கு

அதையளிக்கவும். போற்றப்படும் நீ, கவனமற்றிருக்காதே. நாங்கள் சபையிலே முழங்கிப் பேசுவோமாக. 2,166

## 16. இந்திரன்

### 207. கிருத்ஸமதன்

1. நான் உங்களுக்காக மகத்தான தேவர்களின் நடுவே உத்தமத் தலைவனாயிருக்கும் இந்திரனுக்கு சொலிப்பிக்கப்பட்ட அக்கினியிலே அவியை ஏந்துகிறேன். தகுந்த துதியைக் கூறுகிறேன்: நாங்கள் பாலனத்துக்காக, தேயாதவனும் தேய்பவனும், திறப்பட்டவனும், நித்தியனும், தருணனுமான இந்திரனை அழைக்கிறோம்.

2. மகத்தான இந்திரன் இல்லையேல் இந்த உலகமில்லை. அவனிடம் எல்லா வீரத் தன்மைகளும் சேர்ந்திருக்கின்றன. அவன் தன் உதரத்தினுள் ஸோமத்தை ஏந்துகிறான். அவனுடைய தேகத்திலே திறமும் தேஜசுமுண்டு. அவன் தன் கையிலே வச்சிரத்தையும், தலையிலே விக்ஞானத்தையும் தாங்குகிறான்.

3. இந்திரனே! உன்னுடைய பலத்தை சோதி கடக்காது; புவி கடக்காது; உன்னுடைய தேரை மலை தடுக்காது; கடலும் தடுக்காது; உன்னுடைய குதிரைகளால் நீ பல யோசனை கடக்குங்கால், உன்னுடைய வச்சிராயுதத்திலிருந்து எவனாலும் தப்ப இயலாது.

4. எல்லா சனங்களும் போற்றத் தகுந்தவனும், விருஷபனும், தீரனும், துதியோடு சேர்ந்தவனுமான இந்திரனுக்கு வணக்கத்தைச் செலுத்துகிறார்கள். ஆதலால், வலியனும் மிக்க அறிஞனுமான நீ, அவியால் இந்திரனைப் போற்றவும். இந்திரனே! நீ விருஷபனான சொலிப்பிக்கப்பட்ட அக்கினியோடு ஸோமத்தைப் பருகவும்.



5. திருப்தி செய்வதும், மதமளிப்பதும், குடிப்பவர்களை ஊக்கப்படுத்துவதுமான ஸோமரஸம், விருஷபனும் உணவைத் தருபவனுமான இந்திரனுடைய பானத்துக்குப் பாய்கிறது. அவிகளைத் தரும் இரு அத்வர்யுக்களும், ஸோமத்தைப் பிழியும் கற்களும், பொழியும் ஸோமத்தை விருஷபனுக்களிக்கிறார்கள். 2,171

6. உன்னுடைய வச்சிராயுதம் வலியது; உன்னுடைய தேர் வலியது; உன்னுடைய இரு குதிரைகள் வலியவை; உன்னுடைய ஆயுதங்கள் வலியவை. இந்திரனே! வலியனே! மதமளிக்கும் வலிய ஸோமத்துக்கு நீ தலைவனாயிருக்கிறாய். இந்திரனே! நீ வலிய ஸோமனோடு திருப்தியாகவும்.

7. பகைவர்களை ஜயிக்கும் நான், யக்ஞங்களில் துதியால் தோணியைப் போலிருப்பவனும், துதியால் திருப்தியடைபவனுமான உன்னிடம் வருகிறேன். இந்திரன் எங்களுடைய இந்த மொழிகளை நன்கு செவியுறுவானாக. நாங்கள் சலம் நிறைந்த கூபத்தைப் போல் செல்வச் சுனையாயிருக்கும் இந்திரனுக்கு ஸோமங்களைப் பொழிகிறோம்.

8. விபத்திலிருந்து மீட்டு, தன் கன்றை மேய்தரையிலே கடத்திச் செல்லும் பசுவைப் போல் நீ எங்களைத் தீமையிலிருந்து முன்னதாகவே கடத்திச் செல்லவும். சதக்கிரதுவே! உன்னை ஒருமுறை நாங்கள் விரும்பத் தகுந்த துதிகளால் மனைவிகளால் கணவர்களைப் போல் பற்றுவோமாக.

9. இந்திரனே! உன்னிடமிருந்து வரும் செல்வியான தட்சிணை உன்னைத் துதிப்பவனுக்கு விரும்பும் வரத்தையளிக்கிறது; உன்னை ஏத்தும் எங்களுக்கு வரத்தையளிக்கவும். போற்றுவதற்குரிய நீ, எங்களைப் புறக்கணிக்காதே. நாங்கள் புத்திர பௌத்திரர்களையடைந்து உன்னை இந்த யக்ஞத்திலே முழங்குவோமாக. 2,175

## 17. இந்திரன்

### 208. கிருத்ஸமதன்

1. நீங்கள் அங்கிரஸர்களைப் போல் புதிய துதியால் இந்திரனைப் போற்றுங்கள். பூர்வத்தில் போல் அவனுடைய ஆற்றல்கள் எழுகின்றன. அவன் ஸோமத்தின் மதத்திலே தடைபட்டும் திடமாயுமிருந்த மேகங்களைப் பிளந்தான்.

2. போர்களிலே தன் தேகத்தைப் பாலித்துக் கொண்ட சூரனும், தன் மகிமையால் சோதியைத் தலையிலே ஏந்தியவனும், முதல் ஸோம பானத்துக்காகத் தன் தீரத்தையளந்து தன் திறத்தைத் திறப்படுத்தியவனுமான இந்திரன் போற்றப்படுவானாக.

3. நீ துதியால் ஏத்தப்பட்டு சனத்தின் முன்னே பகையழிக்கும் பலத்தைப் புலப்படுத்துங்கால், உன்னுடைய முதன்மையான, மகத்தான வீரியச் செயலைப் புலப்படுத்தினாய். குதிரைகளால் இழுக்கப்படும் தேரிலுள்ள உன்னால் தள்ளப்பட்ட படைப் பகைவர்கள் கலைந்தார்கள்; ஓடினார்கள்.

4. பழைய இந்திரன் தன் பலத்தால் எல்லா புவனங்களுக்கும் தானே தலைவனானான்; வளர்ந்தான். பிறகு சோதியையும் புவியையும் தாங்கினான். சோதியோடு பரவினான். தீத்தமங்களைக் கலைத்து எங்கும் வியாபகமானான்.

5. அவன் தன் திறத்தால் திரியும் மலைகளைத் திரப்படுத்தினான். சலங்களின் இறக்க வழியைக் கற்பித்தான். அணைத்தையும் தாங்கும் புவியை ஏந்தினான். தன் தந்திரத்தால் சோதியை விழாமல் தடுத்தான். 2,130

6. இந்த உலகத்தைப் பாலிக்க அவன் பூரணமாயிருக்கிறான். அவன் தந்தை. தன்னறிவால் தலைவனாயிருக்கும் அவன் எல்லா மானிடர்களுக்காக உலகத்தைத் தன் இரு கைகளால் கற்பித்தான். மிக்கப் புகழுள்ள



அவன், தன் வச்சிராயுதத்தால் கிரிவியைக் கொன்று புவியின் மீது அவனை நித்திய உறக்கத்திலே சாய்த்தான்

7. பெற்றோர்களிடம் ஒரே மனையில் வசித்து முதுமையடையும் பெண்ணைப் போல் நான் உன்னைப் பகனாகப் போற்றுகிறேன். எனக்கு அறிவை அளிக்கவும்; அதை அளக்கவும். அதை எங்களுக்கு இங்கு ஏந்தி வரவும். எதனால் சனங்களை இன்புறுத்துகிறாயோ அந்த பாகத்தை நீ எங்களுக்களிக்கவும்.

8. நாங்கள் உன்னைப் பாலிப்பவனாய் அழைப்போமாக. இந்திரனே! நீ எங்களுக்கு உழைப்பையும், உறுதியையுந் தருகிறாய். இந்திரனே! பலவித பாலனத்தால் எங்களைப் பாலிக்கவும். வலியனே! இந்திரனே! நீ எங்களைச் செல்வப்படுத்தவும்.

9. இந்திரனே! உன்னிடத்திலிருந்து வரும் செல்வியான தட்சிணை துதிப்பவனுக்கு விரும்பத் தகுந்த வரத்தையளிக்கிறது. உன்னை ஏத்தும் எங்களுக்கு அதையளிக்கவும். போற்றுவதர்க்குரிய நீ, எங்களைப் புறக்கணிக்காதே. நாங்கள் புத்திர பௌத்திரர்களையடைந்து இந்த யக்ஞத்திலே உன்னை முழங்குவோமாக. 2,184

## 18. இந்திரன்

### 209. கிருத்ஸமதன்

1. மாசற்றதும் போற்றத் தகுந்ததுமான யக்ஞம், காலையில் நடத்தப்படுகிறது. இதற்கு நான்கு இரட்டைகளும், மூன்று சுவரங்களுமுண்டு. ஏழு சந்தங்கள் எழுகின்றன. பத்து பாத்திரங்கள் கண்கூடு. மானிடர்களுக்கு ஹிதமானது. சோதியைத் தருகிறது. யக்ஞாருகர்களாலும் துதிகளாலும் போற்றத் தகுந்தது.

2. இந்த யக்ஞம் இந்திரனுக்கு முதலாவது அல்லது இரண்டாவது அல்லது மூன்றாவது தடவையாக அளிக்கப்பட்டாலும் பூரணமாகிறது. இது மனிதனுக்கு நன்மையை ஏந்துகிறது. வேறு அறிஞர்கள், வேறு.

தாயின்—புவியின் புதல்வனை—ஸோமத்தைப் பிறப்பிக்கிருர்கள். வெல்லுபவனும் பொழிபவனுமான அவன்—யக்ஞம்—வேறு தேவர்களோடு செல்லுகிருன்.

3. நன்கு கூறப்படும் புதிய மொழிகள் அவனை இங்கு ஏந்தி வர நான் இந்திரனுடைய தேரிலே குதிரைகளை இணைத்தேன். வழிபடும் அந்நியர்கள் உன்னைத் தாமதப்படுத்தாமலிருப்பார்களாக. ஏனெனில் எங்களிடம் இங்கு பல அறிஞர்கள் இருக்கிருர்கள்.

4. இந்திரனே! நீ அழைக்கப்பட்டவுடன் உன்னுடைய இரண்டு அல்லது நான்கு அல்லது ஆறு அல்லது எட்டு அல்லது பத்து குதிரைகளோடு ஸோமத்தைப் பருக வா. உத்தமச் செல்வனே! இங்கு ஸோமமிருக்கிறது. இதை இகழாதே.

5. இந்திரனே! உன்னுடைய தேரிலே இருபது முப்பது நாற்பது குதிரைகளை இணைத்து இங்கு வா. இந்திரனே! நன்கு பழக்கப்பட்ட ஐம்பது குதிரைகளோடு அல்லது அறுபதோடு அல்லது ஏழுபதோடு ஸோமத்தைப் பருக இங்கு வா. 2,189

6. இந்திரனே! நீ எண்பதால் அல்லது தொண்ணூருல் அல்லது நூறு குதிரைகளால் ஏந்தப்பட்டு எங்கள் முன்னே வா. இந்திரனே! உன்னை மதப்படுத்த கலசங்களிலே ஆசையுடன் ஸோமம் ஊற்றப்பட்டிருக்கிறது.

7. இந்திரனே! என்னுடைய இந்தத் துதிக்கு இங்கு வா. உன்னுடைய விசுவ வியாபகமான குதிரைகளைத் தேரின் நுகத்திலே இணைக்கவும். நீ பல இடங்களில் அழைக்கத் தகுந்தவன். சூரனே! நீ இந்த யக்ஞத்திலே இன்பமாகவும்.

8. இந்திரனோடு என்னுடைய நட்பு எப்பொழுதும் நீங்காமலாகுக. அவனுடைய தானம் எங்களுக்குச் செல்வங்களைப் பொழிக. நாங்கள் அவனுடைய பாலிக்கும் கைகளின் உத்தமக் காப்பிலிருப்போமாக. நாங்கள் ஒவ்வொரு போரிலும் ஜயிப்பவர்களாயிருப்போமாக.



9. இந்திரனே! உன்னிடமிருந்து வரும் செல்வியான தட்சிணை, துதிப்பவனுக்கு விரும்பத்தகுந்த வரத்தையளிக்கிறது. உன்னை ஏத்தும் எங்களுக்கு வரத்தையளிக்கவும். போற்றுவதர்க்குரிய நீ எங்களைப் புறக்கணிக்காதே. நாங்கள் புத்திர பௌத்திரர்களையடைந்து யக்ஞத்திலே உன்னை முழங்குவோமாக. 2,193

## 19. இந்திரன்

### 210. கிருத்ஸமதன்

1. பொழியும் அறிஞனுடைய இதமான உணவை இந்திரன் மதத்துக்காகப் புசித்தான். இப்பழைய பானத்தால் அவன் செழித்து தகுந்த மனையை யளித்தான். அங்கு இந்திரனுக்குத் தோத்திரத்தை விரும்பும் மனிதர்கள் வசிக்கிருர்கள்.

2. இந்திரன் மதமளிக்கும் ஸோமத்தால் இன்பமாகி வச்சிரம் கையிலேந்தி சலங்களைத் தடுத்த அஹியைத் துணித்தான். அதனுல் நதிகளின் தாரைகள் தங்கள் உறைவிடங்களுக்குப் பறக்கும் பறவைகளைப் போல் கடலுக்குப் பாய்ந்தன.

3. அஹியைக் கொன்றவனும், துதியாருகனுமான இந்திரன், சலப்பிரவாஹத்தைக் கடலுக்குச் செலுத்தினுன். அவன் சூரியனைப் பிறப்பித்தான். பசுக்களைப் பற்றினுன். இரவால் தினங்களின் செய்கைகளைப் பூர்த்தி செய்தான்.

4. இந்திரன் வழிபடுபவனுக்குப் பலவித உத்தமச் செல்வங்களைத் தருகிருன். அவன் விருத்திரனைக்கொல்லுகிருன். சூரியனைப் பற்ற வழிபடுபவர்கள் போராடுங்கால் அவன் துதிகளோடு நேராக நாடத்தக்க நடுவன்.

5. தேவனுன இந்திரன் ஏதசனுல் போற்றப்படுங்கால், அவனுக்கு ஸோமத்தையளித்த மானிடனுக்காகச் சூரியனைத் தாழ்த்தினுன். வள்ளலான ஏதசன் இந்திர

னுக்கு மர்மமாயும், உத்தமமாயுமிருக்கும் செல்வங்களைப் புதல்வனுக்குப் பாகத்தையளிக்கும் தந்தையைப் போல் நல்கினுன். 2,198

6. பிரகாசமாயுள்ள இந்திரன் தன் தேரோட்டியான குத்ஸனுக்கு, சுஷ்ணனையும், அசுஷனையும், குயவனையும் வசப்படுத்தினுன். அவன் திவோதாஸனுக்காக சம்பரனின் 99 கோட்டைகளை இடித்தான்.

7. இந்திரனே! நாங்கள் உணவை விரும்பி உன்னைப் பலப்படுத்துகிறேம். நாங்கள் சுயமாகவே உனக்குத் துதியைக் கூறுகிறேம். நாங்கள் உத்தமச் செயல்களோடு இந்த நட்பைப் பெறுவோமாக. தேவத்தன்மையற்ற பியுவின் மீது உன் வச்சிரத்தைச் செலுத்துவாயாக.

8. பயணஞ் செய்ய விரும்பும் வழிப் போக்கர்கள் பாதைகளைச் செய்து கொள்வது போல், சூரனே! கிருத்ஸமதர்கள் தோத்திரங்களைக் கற்பித்தார்கள். துதியாருகளுன இந்திரனே! உன்னைப் போற்றுபவர்கள் உணவையும், பலத்தையும் மனைகளையும் அடைவார்களாக.

9. இந்திரனே! உன்னிடமிருந்து வரும் செல்வியான தட்சிணை, துதிப்பவனுக்கு விரும்பத் தகுந்த வரத்தையளிக்கிறது. உன்னை ஏத்தும் எங்களுக்கு வரத்தையளிக்கவும். போற்றுவதற்குரிய நீ, எங்களைப் புறக்கணிக்காதே. நாங்கள் புத்திர பௌத்திரர்களை யடைந்து யக்ஞத்திலே உன்னை முழங்குவோமாக. 2,202

## 20. இந்திரன்

### 211. கிருத்ஸமதன்

1. இந்திரனே! போரை விரும்புபவன் தேரை எடுத்து வருவது போல் நாங்கள் உனக்கு ஆற்றலை ஏந்தி வருகிறேம். எங்களைக் கவனிக்கவும். போற்றுபவர்களும் மனத்தியானமுள்ளவர்களுமான நாங்கள், உன்னைப் போலிருக்கும் தலைவர்களிடமிருந்து சுகத்தை விரும்புகிறேம்.



2. இந்திரனே! உன்னுடைய பாலனங்களால் எங்களைப் பாலிக்கவும். உன்னை விரும்புபவர்களை அவர்களுடைய பகைவர்களிடமிருந்து பாலிக்கிருய். நீ வழிபடுபவனுக்குத் தலைவன். சத்துருக்களை நீக்குகிருய். நீ இச் செயல்களால் உன்னைப் போற்றுபவனைப் பாலிக்கிருய்.

3. தருணனும், போற்றத் தகுந்தவனும், நண்பனுமான இந்திரன், மனிதர்களின் மங்களமான பாலகனுயிருப்பானுக. அவன் தன் பாலனத்தால் பாடுபவனையும், உழைப்பவனையும், பக்குவப் படுத்துபவனையும், துதிப்பவனையும் நடத்துவானுக.

4. பூர்வத்திலே வழிபடுபவர்கள் இந்திரனைப் போற்றிச் செழித்தார்கள். பகைவர்களை யழித்தார்கள். நானும் அந்த இந்திரனைப் பாடுகிறேன். அவனைப் போற்றுகிறேன். யாசிக்கப்படும் அவன் புதிய துதி கர்த்தாவின் செல்வ விருப்பத்தைப் பூர்த்தி செய்வானுக.

5. இந்திரன் அங்கிரஸர்களுடைய துதியால் இன்பமாகி அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றினுன். அவர்களை, பசுக்களை மீட்கும் வழியில் செலுத்தினுன். துதிக்கப்பட்ட அவன் சூரியனுடைய ஒளியால் உஷைகளைத் திருடி அச்னனின் பழைய புரங்களை இடித்தான். 2,207

6. புகழும் அழகுமுள்ள தேவனும் இந்திரன், மானிடர்களுக்கு உயரத்திலிருப்பானுக. ஜயிப்பவனும், சக்தியுள்ளவனுமான இந்திரன், துன்புறுத்தும் தாஸனுடைய பிரியமான தலையைக் கீழே சாய்ப்பானுக.

7. விருத்திரனைக் கொல்பவனும், கோட்டைகளை இடிப்பவனுமான இந்திரன், இருட்டில் வசித்த தாஸப் படைகளைச் சிதறடித்தான். அவன் மானிடனுக்காகப்

புவியையும் சலங்களையும் தோற்றுவித்தான். அவன் வழி படுபவனுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்வானாக.

8. வழிபடுபவர்கள் மழையை அடைய, அவிகளால் இந்திரனுக்கு நித்தியமாய் ஆற்றலைச் செலுத்தினார்கள். அதற்காக அவர்கள் அவனுடைய கைகளில் வச்சிரா யுதத்தை வைத்தார்கள். அதனால் அவன் தஸ்யுக்களைக் கொன்றான். அவன் அவர்களுடைய இரும்புக்கோட்டை களை இடித்தான்.

9. இந்திரனிடமிருந்து வரும் செல்வியான தட்சிணை துதிப்பவனுக்கு விரும்பத் தகுந்த வரத்தைத் தருகிறது. உன்னை ஏத்தும் எங்களுக்கு வரத்தையளிக்கவும். போற்றுவதற்குரிய நீ, எங்களைப் புறக்கணிக்காதே. நாங்கள் புத்திர பௌத்திரர்களையடைந்து, இந்த யக்ஞத்தில் உன்னை முழங்குவோமாக. 2,211

## 21. இந்திரன்

### 212. கிருத்ஸமதன்

1. நீங்கள் விரும்பத் தகுந்த ஸோமத்தை, விசுவத்தை ஜயிப்பவனும், செல்வத்தை ஜயிப்பவனும், சோதியை ஜயிப்பவனும், ஸதா ஜயிப்பவனும், புவியை ஜயிப்பவனும், குதிரையை ஜயிப்பவனும், பசுவை ஜயிப்பவனும், சலத்தை ஜயிப்பவனும் துதியாருகனுமான இந்திரனுக்கு ஏந்தி வாருங்கள்.

2. துடைப்பவனும், உடைப்பவனும், ஈசையனும், ஜயிக்கப்படாதவனும், அனைத்தையும் சகிப்பவனும், படைப்பவனும், பலரால் போற்றத் தகுந்தவனும், எதிர்க்கப்படாதவனும், தாங்குபவனுமான இந்திரனுக்குத் தோத்திரத்தைக் கூறுங்கள்.

3. நான் பலரை ஜயிப்பவனும், மனிதனுக்கு நயத்தைச் செய்பவனும், வலிய பகைவர்களை ஜயிப்பவனும், சத்துருக்களை நீக்குபவனும், போர் வீரனும், ஸோமத்தால் திருப்தியடைபவனும், விருப்பங்களை நிறை



வேற்றுபவனும், பகைவர்களைத் தாழ்த்துபவனும், சனங்களின் தஞ்சமுமான அந்த இந்திரனின் மகத்தான வீரச் செயல்களை யறிவிக்கிறேன்.

4. ஒப்பற்ற வள்ளலும், விருஷபனும், துன்புறுத்துபவனைத் தாழ்த்துபவனும், கம்பீரனும், மகானும், அந்நியர்களால் அறிய இயலாத அறிவுள்ளவனும், செல்வத்தை வழங்குபவனும், பகைவர்களின் பலத்தைக் குறைப்பவனும், திடாங்கனும், பரந்தவனுமான இந்திரன் உஷையில் ஒளியை—சூரியனை—பிறப்பித்தான்.

5. துதிகளைக் கூறுபவர்களும், அவனை விரும்புபவர்களும், அறிஞர்களுமான அங்கிரஸர்கள் யக்ஞத்தால் சலத்தைப் பிரேரிக்கும் இந்திரனிடமிருந்து திருடப்பட்ட பசுக்களின் வழியை அறிந்தார்கள். அவர்கள் இந்திரனின் உதவியை நாடி, துதிகளைக் கூறி, வணக்கத்தைச் செலுத்தி, தோத்திரங்களையளிக்குங்கால் பசுச் செல்வங்களைப் பெற்றார்கள்.

6. இந்திரனே! எங்களுக்கு மிக்க உத்தமச் செல்வங்களை அளிக்கவும். பலத்தின் புகழையும், சௌபாக்கியத்தையும், செல்வச் செழிப்பையும், தேகங்களின் பாலனத்தையும், இனிய மொழியின் இனிப்பையும் அளிக்கவும். எங்கள் தினங்களுக்கு மங்கல தினத்தன்மைகளையளிக்கவும். 2,217

## 22. இந்திரன்

### 213. கிருத்ஸமதன்

1. திரிகத்துருக யக்ஞங்களிலே மிக்க வலியனும், மகிடமான இந்திரன் யவத்தோடு கலக்கப்பட்ட பானத்தை அருந்தி திருப்தியானான். அவன் விஷ்ணுவோடு சேர்ந்து தன்னிஷ்டம் போல் ஸோமத்தைப் பருகினான். அது, மகானும் பரந்தவனுமான இந்திரனை, மகத்தான செயல்களை நடத்த, ஊக்கஞ் செய்தது.

தேவன், தேவனிடம் சேர்க. சத்தியஞன இந்து சத்திய ஞன இந்திரனிடம் சேர்க.

2. பிரகாசமுள்ள அவன் போரிலே தன் பலத்தால் கிரியை ஜயித்தான். அவன் தன் ஒளியால் சோதி யையும் புவியையும் நிரப்பிஞன். பலத்தால் பெருகிஞன். ஸோமத்தின் ஒரு பாகத்தைத் தான் பருகிஞன். மீந்த தைத் தேவர்களுக்கு அளித்தான். தேவன் தேவனிடம் சேர்க. சத்தியஞன இந்து, ஸத்தியஞன இந்திரனிடம் சேர்க.

3. நீ அறிவோடு சேர்ந்து, ஆற்றலோடு சேர்ந்து பிறந்தாய். நீ உலகத்தைத் தாங்க விரும்புகிருய். வீரச் செயல்களோடு மிக்க வலியஞயிருக்கும் நீ, துன்புறுத்து பவர்களை ஜயிப்பவன். நீ சனங்களைப் பகுத்தறிபவன். செல்வத்தையளிப்பவன். துதிப்பவனுக்குச் செல்வத் தைத் தர விரும்புகிருய். தேவன், தேவனிடம் சேர்க; சத்தியஞன இந்து சத்தியஞன இந்திரனிடம் சேர்க.

4. இந்திரனே! நீ அனைவரையும் நடிக்கச் செய் பவன். பூர்வத்தில் உன்னுல் செய்யப்பட்ட முதற் செய்கை மானிடரின் நலத்துக்காக இருந்தது. அது சோதியிலே போற்றத் தகுந்தது. நீ உன் பலத்தால் அசுரனுடைய உயிரை யழித்து அவன் தடை செய்த சலங்களை விடுவித்தாய். இந்திரன் தன் பலத்தால், வியாபகமாயிருக்கும் இருள் வடிவமான அசுரனை ஜயிப்பாஞக. சதக்கிரது பலத்தையும் உணவையும் அடைவாஞக. 2,221

## 23. பிரம்மணஸ்பதி

### 214. கிருத்ஸமதன்

1. பிரம்மணஸ்பதியே! நாங்கள் கணங்களின் கணபதியும், கணத் தலைவனும், கவிகளின் கவியும், ஈடற்றப் புகழுள்ளவனும், முதல்வர்களின் நடுவே பிர காசிப்பவனும், மந்திரங்களின் உத்தமத் தலைவனுமான



உன்னை அழைக்கிருேம். அங்கனுடைய அழைப்புக் களைக் கேட்டு உன்னுடைய பாலனங்களோடு வரவும். யக்ஞ ஸ்தானத்திலே அமரவும்.

பிரகஸ்பதி

2. பிரகஸ்பதியே! அசுரர்களை அழிப்பவனே! பேரறிஞர்களான தேவர்கள் உன்னிடமிருந்து யக்ஞா ருகமான பாகத்தைப் பெற்ருர்கள். கிரணங்களை சோதி யால் தோற்றுவிக்கும் துதியாருகஞன சூரியனைப் போல் நீ எல்லா மந்திரங்களுக்கும் தந்தையாயிருக்கிருய்.

பிரகஸ்பதி

3. பிரகஸ்பதியே! நீ நிந்திப்பவர்களை நீக்கி, தமங்களை விலக்கி, பகைவர்களுக்குப் பயமளிப்பதும், சத்துருக்களைத் தாழ்த்துவதும், அரக்கர்களை அழிப் பதும், மேகங்களைக் கிழிப்பதும், சோதியைப் பற்றுவது மான ருதத்தின் பிரகாசமான தேரிலே ஏறுகிருய்.

4. பிரகஸ்பதியே! நீ மனிதர்களை நன்னெறிகளால் செலுத்துகிருய். அவர்களை விபத்திலிருந்து பாலிக் கிருய். உனக்கு அவியளிப்பவனிடம் வறுமை யணு காது. நீ மந்திரத் துவேஷிகளை வருத்துகிருய். கோபத்தை நீக்குகிருய். இது உன்னுடைய மகத்தான மகிமை.

பிரம்மணஸ்பதி

5. பிரம்மணஸ்பதியே! நல்ல பாலகஞன உன்னுல் பாலிக்கப்படுபவனைத் துக்கமணுகாது; தீமையணுகாது. பகைவர்களும் வஞ்சகர்களும் அவனைத் துன்பப்படுத் தார்கள். ஏனெனில் நீ அவனிடமிருந்து துன்புறுத்தும் அனைவரையும் விலக்குகிருய். 2,226

பிரகஸ்பதி

6. பிரகஸ்பதியே! நீ எங்களைப் பாலிப்பவன். எங்களுக்கு வழியைப் புலப்படுத்துபவன். நீ எல்லாப் பொருள்களையும் ஆய்ந்தறிபவன். நாங்கள் உன்னு

டைய விரதத்துக்காகத் துதிகளால் உன்னைப் போற்றுகிறோம். எங்களிடம் வஞ்சகத்தை நாட்டுபவன் தன் சுயத் துர்ப்புத்தியால் தானே சாய்வானாக.

7. பிரகஸ்பதியே! குற்றமற்ற எங்களைத் துன்பப்படுத்த வரும் அகந்தையும், துர்ச் சிந்தையும், பறிக்கும் தன்மையுமுள்ள மனிதனை எங்களுடைய வழியிலிருந்து விலக்கவும். தேவர்களுக்கு இந்த யக்ஞத்தை நடத்த எங்களை நல்ல வழியிலே ஸ்தாபிக்கவும்.

8. பிரகஸ்பதியே! நாங்கள் விபத்துக்களிலிருந்து கடத்துபவனும், தேகங்களைப் பாலிப்பவனும், பரிந்து ஊக்க மொழிகளைக் கூறுபவனும், எங்களை விரும்புபவனுமான உன்னை அழைக்கிறோம். நீ தேவ நிந்தகர்களை அழிக்கவும். துட்டர்கள் உத்தம சுகத்துக்குச் செல்லாமலிருப்பார்களாக.

பிரம்மணஸ்பதி

9. பிரம்மணஸ்பதியே! நாங்கள் உன்னால் செழித்து, மானிடர்களிடமிருந்து விரும்பத் தகுந்த செல்வங்களை அடைவோமாக. நீ, எங்களை அருகிலோ, தூரத்திலோ எதிர்க்கும் நெறியற்ற பகைவர்களை யழிக்கவும்.

பிரகஸ்பதி

10. பிரகஸ்பதியே! எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும், சுத்தனும், எங்களோடு சேர்ந்துள்ளவனுமான உன்னால் உத்தம பலத்தை ஏந்துவோமாக. எங்களை வஞ்சிக்க விரும்பும் துட்டன் எங்களுக்குத் தலைவனாகாமலிருப்பானாக. நாங்கள் துதிகளிலே மேன்மையாகி செழிப்போமாக. 2,231

பிரம்மணஸ்பதி

11. பிரம்மணஸ்பதியே! உனக்கு ஒப்பான வள்ளல் இல்லை; நீ விருஷபன். போருக்குச் செல்பவன்; பகைவர்களை அழிப்பவன்; போர்களிலே ஜயிப்பவன்; நீ சத்தியன்; கடன்களைத் தீர்ப்பவன்; உக்கிரனையும் காமுகனையும் அடக்குபவன்.



பிரகஸ்பதி

12. பிரகஸ்பதியே! உக்கிரனும், கர்வியும், வழிபடுபவர்களைக் கொல்ல விரும்புபவனும், நெறியற்ற மனத்தோடு எங்களைக் கொல்ல விரும்புபவனுமான மனிதனின் ஆயுதம் எங்களை அணுகாமலாகுக. நாங்கள் திறமுள்ள துட்டனுடைய கோபத்தைத் தணிப்போமாக.

13. பிரகஸ்பதி போர்களில் அழைக்கத் தகுந்தவன் வணக்கத்தோடு அணுகத் தக்கவன். போர்களில் சலனமாகும் அவன் எல்லாச் செல்வத்தையும் தருபவன். தலைவனான பிரகஸ்பதி எதிர்க்கும் எல்லாத் துட்டப் படைகளையும், சண்டையிலே கவிழ்க்கப்படும் தேர்களைப் போல் கீழே சாய்த்தான்.

14. நீ புலப்படுத்திய பராக்கிரமத்தைத் துச்சமாய்ப் பார்த்த அரக்கர்களை உன்னுடைய கூறிய சுடர்ப் படையால் எரிக்கவும். உன்னுடைய போற்றுவதற்குரிய அந்த பலத்தைப் புலப்படுத்தவும். பிரகஸ்பதியே! எதிர்த்துப் பேசுபவர்களையழிக்கவும்.

15. பிரகஸ்பதியே! சத்தியத்தின் புதல்வனே! சான்றோனால் மிக்கச் சாற்றப்படுவதும், சனங்களின் நடுவே சிறப்புள்ளதும், ஞானச் சுடரால் சொலிப்பதும், பற்றுபவனைப் புலப்படுத்துவதுமான அந்தச் செல்வத்தை எங்களுக்களிக்கவும். 2,236

16. துரோகஞ் செய்ய மறைந்துள்ள இடத்தில் இன்புறும் பகைவர்களும், அந்நியர்களின் உணவைப் பறிப்பவர்களும், தங்கள் இருதயங்களிலே தேவர்களைப் புறக்கணிக்க விரும்புபவர்களும், ஸாம மயனான உன்னுடைய உத்தம ஸாமத்தை, சக்தியை யறியாதவர்களுமான திருடர்களிடம் எங்களை ஒப்படைக்காதே.

பிரம்மணஸ்பதி

17. துவஷ்டா, உன்னை எல்லாப் புவனங்களின் நடுவே தலைவனாகப் பிறப்பித்தான். நீ எல்லா ஸாமங்

களையும் பாடும் கவி. பிரம்மணஸ்பதி மகத்தான ருதத்தை ஏந்துபவனைக் கடனளித்தவன் போல் எண்ணுகிறான். அவன் கடனைத் தீர்க்கிறான். அவன் துரோகியைக் கொல்லுகிறான்.

பிரகஸ்பதி

18. பிரகஸ்பதியே! அங்கிரஸனே! பர்வதன் உன்னுடைய புகழுக்காகப் பசுக்களின் மந்தையை மறைத்து வைத்தபோது நீ அவற்றை விடுவித்தாய். நீ இந்திரனுடைய உதவியோடு இருட்டால் மூடப்பட்டிருந்த கடலைக் கீழே செலுத்தினாய்.

பிரம்மணஸ்பதி

19. பிரம்மணஸ்பதியே! நீ இந்த உலகத்தை நடத்துபவன். எங்களுடைய சூக்தத்தை அறிந்து கொள்ளவும். எங்களுக்கு வம்சத்தையளிக்கவும். தேவர்களால் பாலிக்கப்படுபவர்கள் எல்லாம் செழிக்கிறார்கள். நாங்கள் சபையிலே மகத்தான இந்த சூக்தத்தை முழங்குவோமாக. 2,240

## 24. பிரம்மணஸ்பதி

### 215. கிருத்ஸமதன்

பிரகஸ்பதி

1. பிரகஸ்பதியே! நீ அனைவரையும் நடத்துவதால் எங்களுடைய இந்தத் துதியைப் பற்றவும். நாங்கள் இந்தப் புதிதான மகத்தான மொழியால் உன்னைப் போற்றுகிறோம். எங்களின் நடுவே பொழிபவனும் உன்னுடைய நண்பனுமான இவன் உன்னைப் போற்றுகிறான். பிரகஸ்பதியே! நீ எங்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்வாயாக.

பிரம்மணஸ்பதி

2. தாழ்த்துவதர்க்குரியவர்களைத் தன் திறத்தால் தாழ்த்தியவனும், கோபத்தால் மேகங்களைப் பிளந்தவனும், அசையாமலிருந்த சலங்களைக் கீழே செலுத்தியவனுமே அந்த பிரம்மணஸ்பதி. பசுச் செல்வமிருந்த மலையினுள்ளே அவன் நுழைந்தான்.



3. தேவர்களின் உத்தம தேவனான பிரம்மணஸ்பதியின் அந்தச் செயலால்—செய்வதர்க்கரிய செயல்—அவனால் திடமான மலைகள் அசைந்தன. திரமான மரங்களும் ஆடின. அவன் பசுக்களை விடுவித்தான்; மந்திரத்தால் வலனைப் பிளந்தான்; இருளை நீக்கினான்; ஒளியைப் புலப்படுத்தினான்.

4. பிரம்மணஸ்பதி, தன் பலத்தால் மது வெள்ளத்தைப் பெய்யும் கல்வாயுள்ள கிணற்றைத் திறந்தான், எல்லாச் சூரிய கிரணங்களும் அதைப் பருகின. பிறகு அவை ஒருமித்துப் பொழிவதும், சல மயமுமான மேகத்தை மீண்டும் மிக்க மழையாகப் பெய்தது.

5. உங்களுக்காக, பிரம்மணஸ்பதியின் சந்தானங்களான, விசித்திரங்களான தானங்கள்—பிரக்ஞானங்கள்—மாதங்களாலும், வருடங்களாலும் வருங்கால மழைகளின் கதவுகளைத் திறந்தான். பிரம்மணஸ்பதி ஞானங்களை விதித்தார். அவற்றால் சோதியும் புவியும் அனுயாஸமாய் வளஞ் செய்து கொள்கின்றன. 2,245

6. அறிஞர்கள் எங்கும் தேடி பணிகளின் குகையினுள் உத்தமச் செல்வமான பசுக்களின் மந்தை மறைக்கப்பட்டிருந்தது என்பதை அறிந்தார்கள். பிறகு அசுரர்களின் பொய் மாயைகளை உணர்ந்து, மீண்டும் அந்த இடத்துக்கு வந்து, பலாத்காரமாய் நுழைந்தார்கள்.

7. சத்தியத்தில் சிறந்தவர்களான அறிஞர்கள் பொய்யர்களான அசுரர்களின் மாயைகளை அறிந்து, முதன்மையான வழியால் வந்த இடத்துக்கே வந்து, அங்கு அதுவரை இல்லாமலிருந்த தகிக்கும் தணலைக் கண்டு, அதைத் தங்கள் கைகளால் மலையின் மீது எறிந்தார்கள்.

8. பிரம்மணஸ்பதி சத்திய மென்னும் நாண் உள்ள தும், துரிதமாய் அம்பைச் செலுத்துவதுமான வில்லால் அவன் விரும்பும் எந்த இலக்கையும் பற்றுகிறான். சர்வக் ஞானி பிரம்மணஸ்பதியின் ஞானத்துக்காகத் தோன்றி யவையும், செவியிலிருந்து பாய்பவையும், செலுத்தப்படு பவையுமான அம்புகள் மேன்மையானவை; வெல்லும் ஆற்றலுள்ளவை.

9. தேவர்களின் தலைவனான பிரம்மணஸ்பதி பொருள்களைத் திரட்டுகிறான். தனிப் படுத்துகிறான்; போரிலே போற்றப்படுகிறான். அனைத்தையுங் காணும் அவன், உணவையும் விரும்பத் தருந்த செல்வத்தையுந் தருகிறான். பிறகு ஒளியுள்ள சூரியன் அனாயாஸமாய்ப் பிரகாசிக்கிறான்.

பிரகஸ்பதி

10. மழை பொழிபவனான பிரகஸ்பதியின் பெறுவதர்க் குரிய தானங்கள்-செல்வங்கள்—பரந்தவை, விரிந்தவை, மேலானவை. இவை உணவையளிக்கும் துதியாரு களின் ஈகைகள். இதனால் தேவர்களும் மனிதர்களும் இங்கு நுழைந்து போகங்களைப் பற்றுகிறார்கள். 2,250

பிரம்மணஸ்பதி

11. எங்கும் பரவுபவனும், இன்புறுத்துபவனுமான பிரம்மணஸ்பதி, திட்பனையும், தாழ்ந்தவனையும், பெரிய வனையும், தன் பலத்தால் தாங்க விரும்புகிறான். தேவர் களுக்குப் பிரதிநிதியாகிறான். புகழோடு பரவுகிறான். ஆதலால் அவனே அனைவரையுஞ் ஜயித்துத் தலைவனா யிருக்கிறான்.

இந்திரனும் பிரம்மணஸ்பதியும்

12. மகவான்களான உங்கள் இருவர்களிடமிருந்து எல்லா சத்தியமும் வருகிறது. சலங்களும் உங்கள் விரதத்தைத் தடை செய்யாமலிருக்கின்றன. தீனியைப் பெற்றுக்கொள்ள விரும்பும் இரு குதிரைகளைப் போல், இந்திர பிரம்மணஸ்பதிகளே! எங்கள் அவியைப் பெற் றுக் கொள்ள வாருங்கள்.



பிரம்மணஸ்பதி

13. பிரம்மணஸ்பதியின் இரு துரித குதிரைகள் எங்கள் அழைப்பைச் செவியுறுகின்றன. சபைக் கருகனான அறிஞன் பிரம்மணஸ்பதிக்குச் செல்வங்களைத் தருகிறான். வலிய அரக்கர்களை வெறுக்கும் பிரம்மணஸ் பதி எங்களிடம் கடனுக்குரியதைப் பெற்றுக் கொள்வா னாக. பிரம்மணஸ்பதி போரிலே பலமுள்ளவனாயிருக் கிறான்.

14. பிரம்மணஸ்பதி மகத்தான செயலை நடத்துங் கால் அவனுடைய எண்ணம் அவன் விரும்புவது போல் நிறைவேறுகிறது. அவன் ஒளியுலகிலிருக்கும் தேவர் களுக்குத் திருடப்பட்ட பசுக்களை மீட்டான். அவற் றைப் பாகஞ் செய்து அளித்தான். அவை தங்கள் சொந்த ஆற்றலால் மகத்தான நதியின் கிளையாறு களைப் போல பல திசைகளில் சென்றன.

15. பிரம்மணஸ்பதியே! நாங்கள் நன்கு செலுத்தப் படுவதும், உணவைத் தருவதுமான செல்வத்தின் தலைவர்களாய் எப்பொழுதும் இருப்போமாக. ஈசனான நீ, துதியால் என் அழைப்பை விரும்புங்கால் வீரர்கள் மேல் வீரர்களை எங்களுக்கு அளிக்கவும்.

16. பிரம்மணஸ்பதியே! இந்த உலகத்தை நடத்தும் நீ, எங்களுடைய சூக்தத்தை அறிந்து கொள் ளவும். எங்களுக்கு வமிசத்தையளிக்கவும். தேவர் களால் பாலிக்கப்படுபவர்கள் எல்லாம் செழிக்கிறார்கள். உத்தம வீரர்களோடிருக்கும் நாங்கள் மகத்தான மொழியை சபையிலே முழங்குவோமாக. 2,256

## 25. பிரம்மணஸ்பதி

### 216. கிருத்ஸமதன்

1. வழிபடுபவன் அக்கினியைச் சொலிப்பித்து, துன்புறுத்தும் பகைவர்களை ஜயிப்பானாக. துதிகளைக் கூறுபவனும் அவிகளை யளிப்பவனுமான அவன் செழிக்

கிறுன். பிரம்மணஸ்பதி எவனை நண்பனுகச் செய்து கொள்கிருனே அவன் புதல்வனின் புதல்வனைக் காண வசிக்கிருன்.

2. வீரர்களோடிருக்கும் அவன் வீரப் பகைவர்களை ஜயிப்பான். பசுக்களால் தன் செல்வத்தைப் பரத்துவான். அவன் தானுகவே அனைத்தையு மறிகிருன். எவனைப் பிரம்மணஸ்பதி நண்பனுகச் செய்து கொள்கிருனே அவனுடைய புதல்வர்களும் பேரர்களும் செழிக்கிருர்கள்.

3. பிரம்மணஸ்பதியைப் பணிந்து போற்றுபவன் கரைகளை உடைக்கும் நதியைப் போல் பகைவர்களை உடைக்கிருன். எருமைகளைக் காளை போல் வெல்லுகிருன். எவனை பிரம்மணஸ்பதி நண்பனுகச் செய்து கொள்கிறேனே அவன் அக்கினியின் சுவாலை போல் பரவுகிருன். அவனை எவனுலும் தடுக்க இயலாது.

4. அவனுக்கு—பிரம்மணஸ்பதியின் நண்பனுக்கு—சோதியிலிருந்து வரும் மழை தாரைகள் தவருமல் பெய்கின்றன. அவன் வீரர்களோடு முதல்வனுய்ப் பசுக்களுக்காகப் போருக்குச் செல்லுகிருன். எவனைப் பிரம்மணஸ்பதி நண்பனுகச் செய்து கொள்கிருனே, அவன் எதிர்ப்பற்ற வலியனுகி, தன் பலத்தால் பகைவர்களை யழிக்கிருன்.

5. எவனை பிரம்மணஸ்பதி நண்பனுகச் செய்து கொள்கிருனே அவனுக்கு நதிகள் பெருகுகின்றன. இடையருமல் பல இன்பங்களும் தோன்றுகின்றன. தேவர்களால் அளிக்கப்பட்ட சுகத்தால் மிக்கச் செல்வனுயிருக்கும் அவன் செழிக்கிருன். 2,261

## 26. பிரம்மணஸ்பதி

### 217. கிருத்ஸமதன்

1. உண்மையாய் வழிபடுபவன் பகைவர்களை ஜயிப்பான். தேவர்களை யஜிப்பவன் தேவத் தன்மையற்றவனைத் தாழ்த்துவான். ஏத்துபவன், எதிர்ப்பற்றவனைப்



போர்களில் வெல்லுவான். வழிபடுபவன் வழிபடாதவனின் உணவைப் பற்றுவான்.

2. வீரனே! நீ யஜிக்கவும். எதிர்க்க எண்ணுபவர்களைத் தீரமாய் எதிர்த்துச் செல்லவும். பகைவர்களிடம் போராடுங்கால் உன் மனத்தை உறுதி செய்துகொள்ளவும். நீ மிக்கச் செல்வமுடனுக அவியை யளிக்கவும். நாங்கள் பிரம்மணஸ்பதியின் பாலனத்தை நாடுகிறேம்.

3. எவன் அவியோடும் சிரத்தையுள்ள மனத்தோடும் தேவர்களின் தந்தையான பிரம்மணஸ்பதியை அவிகளோடு போற்றுகிருனே, அவன் தன் சனத்தோடு, பந்துவோடு, புதல்வர்களோடு உணவைப் பெறுகிருன். தன் ஆட்களோடு செல்வங்களைப் பற்றுகிருன்.

4. எவன் நெய்யோடான அவிகளால் பிரம்மணஸ்பதியைப் பணிகிருனே, அவனைப் பிரம்மணஸ்பதி நேரான வழியால் செலுத்துகிருன். அவனைப் பாவத்திலிருந்து பாலிக்கிருன். அவனைத் துன்பத்திலிருந்தும், பகைவனிடமிருந்தும் பாலிக்கிருன். அவனுக்கு அற்புதமான, பரந்த நன்மைகளை அளிக்கும் செயலாளனுகிருன். 2,265

## 27. ஆதித்தியர்கள்

### 218. கிருத்ஸமதன்

1. நான் அரசர்களான ஆதித்தியர்களுக்கு என் நாவால் நெய் சிந்தும் இந்த மொழிகளைக் கூறுகிறேன். மித்திரனும், அர்யமானும், பகனும், பல இடங்களில் தோன்றும் வருணனும், தட்சனுன அம்சனும் எங்களைக் கேட்பார்களாக.

2. ஆதித்தியர்களும், பிரகாசிப்பவர்களும், தாரைகளால் சுத்தமானவர்களும், எவரையும் கைவிடாதவர்களும், குற்றமற்றவர்களும், எதிர்ப்பற்றவர்களும், ஒப்பான வீரச் செயல்களை நடத்துபவர்களுமான மித்திர

னும், அர்யமானும், வருணனும், இன்று என்னுடைய இந்த ஸ்தோமத்தை விரும்புவார்களாக.

3. அந்த ஆதித்தியர்கள் மகான்கள்; கம்பீரமாயிருப்பவர்கள்; தாழ்த்தப்படாதவர்கள்; தாழ்த்துபவர்கள். பல கண்களிலிருப்பவர்கள். அந்த அரசர்களான தேவர்களின் அருகிலோ, தூரத்திலோ, நன்மையையோ புன்மையையோ, உள்ளங்களிலிருக்கும் மனிதர்களின் எண்ணங்களை அவர்கள் காண்கிறார்கள்.

4. தேவர்களான ஆதித்தியர்கள் எல்லாத் தாவர சங்கமப்பொருள்களையும் ஏந்துபவர்கள்; உலகத்தையெல்லாம் பாலிப்பவர்கள்; ஆழ்ந்த அறிஞர்கள்; மழையைப் பாலிப்பவர்கள்; சத்தியவான்கள்; கடனைத் தீர்ப்பவர்கள்.

5. ஆதித்தியர்களே! உங்களுடைய சுகத்தைத் தருவதும், விபத்திலிருந்து நீக்குவதுமான இந்த பாலனத்தை நான் அடைவேனாக. அர்யமானே! மித்திரா வருணர்களே! நான் உங்களைப் பின்பற்றி என் வழியில் பள்ளங்களைப் போலிருக்கும் பாபங்களிலிருந்து தப்புவேனாக. 2,270

6. அர்யமானே! மித்திரனே! வருணனே! உங்களுடைய வழி சுகமாயிருக்கிறது. அங்கு முட்களில்லை. இனிமையாயிருக்கிறது. ஆதலால் ஆதித்தியர்களே! நீங்கள் எங்களை அவ்வழியில் செலுத்துங்கள். எங்களிடம் அனுகூலமாய்ப் பேசுங்கள். அளிக்கக் கஷ்டமாகும் சுகத்தை யளியுங்கள்.

7. அரசப் புதல்வர்களின் தாயான அதிதி, எங்களைப் பகைவர்களின் வன்மத்திலிருந்து கடத்துவாளாக. அர்யமான் சுகமான வழியால் எங்களைச் செலுத்துவானாக. பல வீரர்களோடு சேர்ந்திருக்கும் நாங்கள் துன்பமற்றவர்களாகி, மித்திரனுடைய வருணனுடைய மகத்தான சுகத்தை–பாலனத்தை–பற்றுவோமாக.



8. அவர்கள் மூன்று உலகங்களையும், மூன்று சோதிகளையும் தாங்குகிறார்கள். அவர்களுடைய யக்ஞத்தின் நடுவே மூன்று விரதங்களிலிருக்கின்றன. ஆதித்தியர்களே! சத்தியத்தால் உங்களுடைய மகத்தான மகா பாக்கியம் தோன்றுகிறது. அர்யமானே! வருணனே! அந்த மகா பாக்கியம் மேன்மையானது.

9. பொன்னுபரணமணிந்தவர்களும், பிரகாசிப்பவர்களும், தாரைகளால் சுத்தப்பட்டவர்களும், தூங்காதவர்களும், இமை கொட்டாதவர்களும், எதிர்ப்பற்றவர்களும், பலரால் போற்றப்படுபவர்களுமான ஆதித்தியர்கள் மூன்று பிரகாசமான ஒளி மண்டலங்களை–அக்கினியையும், வாயுவையும், சூரியனையும் - நீதியுள்ள மானிடனுக்காக ஏந்துகிறார்கள்.

10. வருணனே! பகைவரையழிக்கும் நீ, அனைவருக்கும் அரசனாயிருக்கிறாய். தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் இராஜனாயிருக்கிறாய். நாங்கள் நூறு வருடங்களைக் காண எங்களுக்கு ஆயுளை அளிக்கவும். எங்களுடைய மூன்னோர்களின் தீர்க்காயுளை நாங்கள் அடைவோமாக. 2,275

11. ஆதித்தியர்களே! நாங்கள் வலது கையை யறியோம்; இடதையும் அறியோம்; முன்னறியோம்; பின்னறியோம். வசுக்களே! அற்பனும், கல்வியில் அச்சமிருப்பவனுமான நான் உங்களால் செலுத்தப்பட்டு அபய சோதியைப் பற்றுவேனாக.

12. அரசர்களும், சத்தியத் தலைவர்களுமான ஆதித்தியர்களுக்கு அவிகளையளிப்பவனும், புட்டிப்படுத்துபவர்களும், நித்தியர்களுமான ஆதித்தியர்களால் செழிப்பவனும் செல்வனாகிறான். முதல்வனாகிச் செல்வங்களைத் தருபவனாகிறான். அவன் போற்றப்பட்டு தேரிலே யக்ஞங்களுக்குச் செல்லுகிறான்.

13. ஆதித்தியர்களின் தலைமையிலே நன்கு செலுத்தப்படுபவன் சுத்தன்; தடைபடாதவன்; மிகுந்த உணவுள்ளவன்; நல்ல வீரர்களோடு சூழப்பட்டிருக்கிறான். பயிர் செழிக்கும் சலங்களினருகே வசிக்கிறான். ஆதித்தியர்களின் நல்ல தலைமையிலிருப்பவனைத் தூரத்திலோ, அருகிலோ எவனும் இன்னல் செய்யான்.

14. அதிதியே! மித்திரனே! வருணனே! நாங்கள் உங்களுக்கு ஏதேனும் பாபத்தைச் செய்திருந்தாலும் எங்களை மன்னித்துப் பாலியுங்கள். இந்திரனே! நான் அந்த அபயமான பரஞ்சோதியைப் பற்றுவேனாக. இரவின் நீடித்த தமங்கள் எங்களைப் பற்றாமலாகுக.

15. இணைந்துள்ள சோதியும் புவியும் ஆதித்தியர்களால் பாலிக்கப்படுபவனைப் புட்டிப்படுத்துகின்றன. மிக்கச் செல்வமுள்ள அவன் சோதியின் மழையால் செழிக்கிறான். போர்களிலே ஜயிக்கும் அவன் தன் மனையைக் காக்கிறான். எதிரியின் மனையைத் தாக்குகிறான். அவனுக்குச் சராசரங்கள் எல்லாம் அனுகூலமாகின்றன. 2,280

16. போற்றத் தகுந்த ஆதித்தியர்களே! துரோகிகளுக்கு உங்களால் கற்பிக்கப்பட்ட மாயைகளிலிருந்தும் பகைவனுக்கு உங்களால் பரத்தப்பட்ட பாசங்களிலிருந்தும் உங்கள் தேரிலே நான் பத்திரமாய்க் குதிரையில் ஏறியவனைப் போல் கடந்து செல்வேனாக.

17. வருணனே! ஒரு காலத்தில் செல்வனும், பிரியனும், வள்ளலாயுமிருந்த என் பந்துவின் வறுமையை உன்னிடம் கூறும் நிலைமை எனக்குத் தோன்றாமலாகுக. அரசனான வருணனே! நான் நன்கமைக்கப்பட்ட செல்வத் தேவையில்லாமலிருப்பேனாக. நல்ல வீரர்களுள்ள நாங்கள் யக்ஞத்திலே மகத்தான மொழியைக் கூறுவோமாக. 2,282



# 28. வருணன்

## 219. கிருத்ஸமதன்

1. வழிபடுபவன், அறிஞனும், தானே துலங்குபவனுமான ஆதித்தியனின் இந்த ஸ்தோத்திரத்தைக் கூறுகிறான். அவன் வருணனுடைய மகிமையால் எல்லாப் பொருள்களையும் ஜயிப்பானாக. நான், போற்றுபவனிடம் மிக்கப் பிரியமாயிருக்கும் மகத்தான வருணனிடம் மிக்கப் புகழை விரும்புகிறேன்.

2. வருணனே! மிக்கத் தியானிப்பவர்களும், துதிப்பவர்களுமான நாங்கள் உன் விரதத்தை யனுசரித்து, உத்தமச் செல்வமுடனாவோமாக. கிரணங்களோடுள்ள உஷை வருங்கால் சொலிப்பிக்கப்படும் அக்கினியைப் போல் தினந்தோறும் உன்னைப் போற்றும் நாங்கள் சொலிப்போமாக.

3. உத்தமத் தலைவனே! பலரால் போற்றப்படும் வருணனே! பல வீரர்களின் தலைவனே! நாங்கள் உன்னுடைய சுகத்தில் பாலனத்திலிருப்போமாக. அதிதியின் புதல்வர்களும், தேவர்களும், பகைவரால் துன்பப்படாதவர்களுமான நீங்கள் எங்கள் குற்றங்களை மன்னியுங்கள். எங்களிடம் நட்புடனிருங்கள்.

4. தாங்கும் ஆதித்தியன் நதிகளைப் பெருகச் செய்தான். வருணனுடைய ஆக்ஞையால் ஆறுகள் பாய்கின்றன. அவை களைக்காமலும், ஓயாமலும் ஓடுகின்றன. அவை புவியெங்கும் பறவைகளைப் போல் துரிதமாய்ப் பெருகுகின்றன.

5. வருணனே! என்னைப் பந்தத்திலிருந்து பந்தப்படுத்துவது போல் பாபத்திலிருந்து என்னைத் தளர்த்தவும். நாங்கள் உன்னிடமிருந்து சலத்தோடு நிறைந்த நதியை அடைவோமாக. நான் அறிவென்னும் ஆடையை நெய்யுங்கால் இழையை யறுக்காதே. செயல் பூர்த்தியாகும் முன்னே அதைப் பங்கப்படுத்தாதே. 2,287

6. வருணனே! என்னிடமிருந்து எல்லா பயத்தையும் விலக்கவும். சக்கரவர்த்தியே! சத்தியவானே! எனக்கு உன் தயையை—ஆதரவை—யளிக்கவும். கட்டிலிருந்து நீக்கப்படும் கன்றைப் போல் என்னைப் பாபத்திலிருந்து விடுவிக்கவும். உன்னையன்றி எவனும் ஒரு கணப்பொழுதேனும் அரசு புரியான்.

7. அசுரனான வருணனே! உன்னுடைய யக்ஞத்தில் தீமை செய்பவனை எந்த பயங்கராயுதங்களால் நீ அழிக்கிறாயோ, அவற்றால் நீ எங்களைத் துன்புறுத்தாதே. நாங்கள் ஒளியிலிருந்து புறத்தில் செல்லாமலிருப்போமாக. நாங்கள் வாழ, துட்டர்களை விலக்கவும்.

8. பல இடங்களில் தோன்றும் வருணனே! நாங்கள் இப்பொழுதும், இனி வருங்காலத்திலும் பூர்வத்தில் போல் உனக்கு எங்கள் வணக்கத்தைச் செலுத்துவோமாக. எதிர்ப்பற்ற உன்னில், உன்னுடைய அசைப்பதற்கு முடியாத விரதங்கள் மலையில் போல் நிலைத்திருக்கின்றன.

9. வருணனே! என் பிதாக்களால் ஏற்பட்ட கடன்களைத் தீர்க்கவும்—நான் செய்த பாவங்களை விலக்கவும். இப்பொழுது என்னால் செய்யப்படும் பாவங்களை விலக்கவும். அரசனே! நான் அந்நியருடைய செல்வத்தால் வாழாமலிருப்பேனாக. நான் அந்நியருடைய பாபத்தால் கட்டப்படாமலிருப்பேனாக. இன்னும் பல உஷைகள் தோன்றவில்லை. வருணனே! என்னை அவற்றில் வாழச் செய்யவும்.

10. அரசனே! தூக்கத்திலே பயந்துள்ள என்னைப் பயமுறுத்தும் நண்பனிடமிருந்தும் அல்லது பந்துவினிடமிருந்தும் அல்லது எங்களை அழிக்க விரும்பும் ஓநாயினிடமிருந்தும் அல்லது திருடனிடமிருந்தும் பாலிக்கவும். 2,292

11. வருணனே! ஒரு காலத்தில் செல்வனும், பிரியனும், வள்ளலாயுமிருந்த என் பந்துவின் வறுமையை



உன்னிடம் கூறும் நிலைமை எனக்குத் தோன்றாமலிருக்க. அரசனான வருணனே! நான் நன்கமைக்கப்பட்ட செல்வத் தேவை யில்லாமலிருப்பேனாக. நல்ல வீரர்களுள்ள நாங்கள் யக்ஞத்திலே மகத்தான மொழியை முழங்குவோமாக. 2,293

## 29. விசுவே தேவர்கள்

### 220. கிருத்ஸமதன்

1. ஆதித்தியர்களே! விரதங்களை ஏந்துபவர்களும் அனைவராலும் நாடப்படுபவர்களுமான நீங்கள், என்னிடமிருந்து பாபத்தை தூரத்திலே இரகசியமாகப் பிரஸவிக்கும் குழந்தையை நீக்கும் கன்னிகை போல் விலக்குங்கள். மித்திரனே! வருணனே! தேவர்களே! உங்கள் நலத்தையறியும் நான், செவியுறும் உங்களைப் பாலனத்துக்காக அழைக்கிறேன்.

2. தேவர்களே! நீங்கள் பேரறிவு. நீங்கள் பலம். துவேஷிப்பவர்களைத் தூரப்படுத்துங்கள். சத்துருக்களைத் தாழ்த்தும் நீங்கள், அவர்களைத் தாழ்த்துங்கள். இன்றும் இனியும் எங்களை சுகப்படுத்துங்கள்.

3. தேவர்களே! இன்று நாங்கள் உங்களுக்கு எதைச் செய்ய இயலும்? இனி எதைச் செய்ய இயலும்? வசுக்களே! எங்களுடைய பழைய நட்பால் எதைச் செய்ய இயலும்? மித்திரா வருணர்களே! அதிதியே! இந்திரா மருத்துக்களே! எங்களுக்கு சுவஸ்தியையளியுங்கள்.

4. தேவர்களே! நீங்கள் எங்களுடைய பந்துக்களாயிருக்கிறீர்கள். ஆதலால் உன்னை நாடும் என்னை சுகப்படுத்துங்கள். உங்களுடைய தேர் மெதுவாய் வராமலிருக்க. நாங்கள் உங்களிடம் தளர்ச்சியற்றிருப்போமாக.

5. நான் தனியனாகவே உங்களுக்குப் பல பாவங்களைச் செய்திருக்கிறேன். சூதனைத் திருத்தும் தந்தையைப் போல் நீ திருத்துகிறாய். தேவர்களே! உங்களு

டைய பாசங்களும் என்னுடைய பாபங்களும் தூரத்திலா குக. உங்களுடைய புதல்வனுன என்னை, பறவையைப் பிடிக்கும் வேடனைப் போல் பிடிக்காதீர்கள். 2,298

6. துதியாருகர்களே! என் இருதயத்திலே பயமுடனுகும் நான், உங்களை அணுக இன்று நீங்கள் எங்களிடம் வாருங்கள். தேவர்களே! எங்களைப் பாலியுங்கள். எங்களை ஓநாய் அழிக்காமலிருக்க. துதியாருகர்களே! எங்களுக்கு இடையூறைச் செய்பவனிடமிருந்தும் பாலியுங்கள்.

7. வருணனே! ஒரு காலத்தில் செல்வனும், பிரியனும், வள்ளலாயுமிருந்த என் பந்துவின் வறுமையை உன்னிடம் கூறும் நிலைமை எனக்குத் தோன்ருமலிருக்க. நான் நன்கு அமைக்கப்பட்ட செல்வத் தேவையில்லாமலிருப்பேனுக. நல்ல வீரர்களுள்ள நாங்கள் யக்ஞத்திலே மகத்தான மொழியை முழங்குவோமாக. 2,300

## 30. இந்திரனும் மற்றவர்களும்

### 221. கிருத்ஸமதன்

1. ஓயாத தாரைகள் மழையைத் தருபவனும், ஸவிதாவும், அஹியைக் கொல்பவனும், தேவனுமான இந்திரனுக்குப் பாய்கின்றன. தினந்தோறும் சலப்பிரவாகம் ஓடுகிறது. எக்காலத்தில் முதற் பிரவாகம் தோற்றுவிக்கப்பட்டது?

2. அதிதி தன் புதல்வனுன இந்திரனிடம் விருத்திரனுக்கு எவன் உணவையளித்தான் என்பதைத் தெரிவித்தான். உண்மையை யறிந்து இந்திரன் விருத்திரனைக் கொன்ருன். அவனுடைய விருப்பத்தை யனுசரித்து, நதிகள் தங்கள் வழிகளை எழுதிக்கொண்டு குறிக்கோளான கடலுக்குப் பாய்கின்றன.

3. வானின் மேலே—உச்சத்திலே—ஏறி விருத்திரன் நின்ருன். இந்திரன் தன் பயங்கராயுதத்தை விருத்திரன் மீது செலுத்தினுன். மேகத்தைப் போர்த்துக்



கொண்டிருந்த அவன், இந்திரன் மீது பாய்ந்தான். கூரிய ஆயுதத்தை ஏந்தும் இந்திரன் விருத்திரனை ஜயித்தான்.

4. பிரகஸ்பதியே! இந்திரனே! உன்னுடைய ஒளிப் படையால் இடியேறுப் போல் வாயில்களைக் காக்கும் அசுரப் புதல்வர்களை அடிக்கவும். இந்திரனே! நீ உன் ஆற்றலால் பூர்வத்தில் விருத்திரனைக் கொன்றது போல் நீ இப்பொழுது எங்களுடைய பகைவனையழிக்கவும்.

5. இந்திரனே! எந்த இடிப்படையால் உன்னுடைய மதத்திலே பகைவனைக் கொன்ருயோ, அப் படையை உயரத்திலிருக்கும் நீ, சோதியிலிருந்து பகைவர் மீது செலுத்தவும். எங்களுக்குப் பல புதல்வர்களையும், பேரர்களையும், பசுக்களையுந் தந்து, எங்களைச் செல்வப் படுத்தவும். 2,305

#### இந்திரனும் ஸோமனும்

6. இந்திரா ஸோமர்களே! உங்களால் வெறுக்கப் படும் தீயோனை யொழியுங்கள். வழிபடும் வள்ளலை ஊக்கப்படுத்துங்கள். பயம் தோன்றும் இந்த இடத்திலே எங்களைப் பாலியுங்கள். உலகத்தை அபயப்படுத்துங்கள்.

#### இந்திரன்

7. இந்திரன் என்னை வருத்தப்படுத்தாமலிருப்பானுக; அலுப்புப்படுத்தாமலிருப்பானுக; சோம்பல் படுத்தாமலிருப்பானுக. நாங்கள் எவனிடமும் ஸோமத்தைப் பொழியாதே எனச் சொல்லாமலிருப்போமாக. ஏனெனில் இந்திரன் என் விருப்பங்களைப் பூர்த்தி செய்வான். எனக்குச் செல்வங்களைத் தருவான். என் துதிகளைச் செவியுறுவான். அவன் பொழியும் எங்களிடம் பசுக்களோடு வருவான்.

#### ஸரஸ்வதி

8. ஸரஸ்வதியே! நீ எங்களைப் பாலிக்கவும். நீ மருத்துக்களோடு சேர்ந்து தீரமாய் எங்கள் பகைவர்களை

ஜயிக்கவும். தன் திறத்தில் துணிவுள்ளவனும், எதிர்ப் பற்றவனுமான சண்டிகர்களின் தலைவனை இந்திரன் கொல்லுகிருன்.

### பிரகஸ்பதி

9. பிரகஸ்பதியே! புதரிலே பதுங்கியிருந்து எங்களைக் கொல்ல விரும்பி நோக்குபவனை உன்னுடைய கூரிய ஆயுதத்தால் கொல்லவும். எங்கள் பகைவர்களை உன் ஆயுதங்களால் ஜயிக்கவும். துரோகியின் மீது உன் கொடிய ஆயுதத்தைச் செலுத்தவும்.

### இந்திரன்

10. வீரனே! எங்களுடைய தீரமான வீரர்களோடு நீ செய்வதற்குரிய வீரச் செயல்களை நடத்துவாயாக. எங்கள் பகைவர்கள் வெகு காலமாக கர்வத்தோடு இறுமாப்புடனிருக்கிருர்கள். அவர்களை அழிக்கவும். அவர்களுடைய செல்வங்களை எங்களிடம் ஏந்தி வரவும். 2,310

### மருத்துக்கள்

11. மருத்துக்களே! நான் சுகத்தை விரும்பி உங்களுடைய மருத்துக்களின் கணமான தெய்வப் படையைத் துதியாலும் தோத்திரத்தாலும் போற்றுகிறேன். அதனுல் நாங்கள் எல்லா வீரர்களோடும் புத்திர பௌத்திரர்களோடும் மிக்கப் புகழோடுமுள்ள செல்வத்தைத் தினந்தோறுமடைவோமாக. 2,311

## 31. விசுவே தேவர்கள்

### 222. கிருத்ஸமதன்

1. மித்திரா வருணர்களே! நீங்கள் ஆதித்தியர்களோடும், வசுக்களோடும், ருத்திரர்களோடும் சேர்ந்து, எங்களுடைய தேரானது, மரங்களில் தங்கி, இன்பமாகி, உணவை நாடிப் பறந்து செல்லும் பறவைகளைப் போல், ஒரு இடத்திலிருந்து வேறு இடத்துக்குப் போகுங்கால், நீங்கள் அதைப் பாலியுங்கள்.



2. ஒருமித்த மனமுள்ள தேவர்களே! எங்களுடைய தேரின் குதிரைகள் பாய்ந்தோடிப் புழுதியை எழுப்புகின்றன. புவியின் உச்ச ஸ்தானங்களைத் தங்கள் கால்களால் மிதிக்கின்றன. அக்குதிரைகளால் செலுத்தப்படும் தேர் சனங்களின் நடுவே உணவுக்காகச் செல்லுகிறது. அதைப் பாலியுங்கள்.

3. எல்லா மனிதர்களின் நண்பனும், மிக்க அறிஞனும், மருத்துக்களின் திரண்ட படையுடையவனுமான இந்திரன், சோதியிலிருந்து வந்து எங்களுடைய எதிர்ப் பற்ற பாலனத்தால் நாங்கள் மிகுந்த செல்வத்தையும், மிகுந்த உணவையும் பெறப் பாலிப்பானுக.

4. மேலும், உலகத்தைப் பாலிக்கும் தேவனுன துவஷ்டா, தேவ பத்தினிகளோடு சேர்ந்து, ஒரு மனமுள்ளவனுகி, எங்களுடைய தேரைச் செலுத்துவானுக. மேலும் இளையும், மிக்கப் பிரகாசிக்கும் பகனும், சோதியும் புவியும், பூஷாவும், புரந்தியும்-சூரியை-இருகணவர்களான இரு அசுவினிகளும் எங்களுடைய தேரைச் செலுத்துவார்களாக.

5. சலனமாகும் பிராணிகளை ஊக்கப்படுத்துபவர்களும், இரு செல்விகளும், தேவிகளுமான இரவும் பகலும் தேரைச் செலுத்துவார்களாக. சோதியே புவியே! நீங்கள் தாவரத்திலிருந்து மூன்று விதமான உணவைப் பரத்த நான் உங்கள் இருவரையும் புதிய துதியால் போற்றுகிறேன். எங்களுடைய முவ்வித அவிகளிருந்த போதிலும், உங்களுக்குத் தாவர உணவான தானியத்தையே தருகிறேன். 2,316

6. தேவர்களே! நாங்கள் துதியால் இணக்கமாகும் உங்களுக்குத் துதியைக் கூற விரும்புகிறேம். வானில் பிறந்த அஹிதேவனும், சூரியனும், அஜஏகபாதனும், திரிதனும், பரந்த நிலையமுள்ள இந்திரனும், ரிபுக்ஷணனும், ஸவிதாவும் எங்களுக்கு உணவையளிப்

பார்களாக, சலங்களின் துரித பேரனுன அக்கினி எங்கள் சொல்லாலும் செயலாலும் இன்புறுவானுக.

7. துதியாருகர்களே! நான் உங்களுக்கு இந்த ஊக்கமான துதிகளைக் கூறுகிறேன். மனிதர்கள் உணவை விரும்பி, பலத்தை விரும்பி, உங்களைப் போற்ற துதிகளைக் கற்பித்தார்கள். நீங்கள் துரித தேர்க்குதிரையைப் போல் எங்களிடம் வருவீர்களாக. 2,318

# 32. பலதேவர்கள்

## 223. கிருத்ஸமதன்

### சோதியும் புவியும்

1. சோதி புவிகளே! உங்களைத் தொழும் என்னைப் பாலிப்பவர்களாயிருங்கள். நான் துதியாலும், வணக்கத்தாலும் உங்களைப் போற்ற விரும்புகிறேன். நீங்கள் இருவரும் மிகுந்த உணவைத் தோற்றுவிக்கிறீர்கள். நான் செல்வங்களை விரும்பி உங்களைப் பாடுகிறேன். நான் மகத்தான தோத்திரத்தால் உங்களைத் தொழுகிறேன்.

### இந்திரன்

2. இந்திரனே! மானிடர்களின் வஞ்சகமும் இரகசியமும் எங்களை இரவிலும் பகலிலும் வருத்தப் படுத்தாமலிருக்க; எங்களைத் துன்புறுத்துபவர்களிடம் அவர்களால் வசப்படுத்தச் செலுத்தாதே. உன்னுடைய நட்பிலிருந்து எங்களைப் பிரிக்காதே. அங்கிருந்து தோன்றும் விரும்பும் மனத்தோடு எங்களைக் கருதவும்.

3. நீ கோபமில்லாத மனத்தோடு, பாலையளிப்பதும், சுகத்தைத் தருவதும், நன்கு புட்டிக்கப்பட்டதும், பருமனுகவுள்ளதுமான பாற்பசுவை எங்களுக்களிக்கவும். நான் தினந்தோறும் பலரால் போற்றப்படுபவனும், சொற்களிலும் நடைகளிலும் துரிதனுமான உன்னைப் போற்றுகிறேன்.



### ராகை

4. நான் உத்தமத் துதியோடு செவிச் செல்வமுள்ள ராகையை யழைக்கிறேன். சௌபாக்கியவதியான அவள் எங்களைச் செவியுறுவாளாக. தானுகவே அவள் எங்களைக் கவனிப்பாளாக. அவள் தன் ஒடியாத தவருத ஊசியால் தன் செயலைத் தைப்பாளாக. அவள் வீரனும், மிக்கச் செல்வனும், சிறப்புள்ளவனுமான புதல்வனை அளிப்பாளாக.

5. ராகையே! நீ அவிகளையளிப்பவனுக்கு எந்தப் பிரிய வடிவங்களுள்ள பிரியமான எண்ணங்களால் செல்வங்களைத் தருகிறுயோ அவற்றேடு நல்ல மனமுள்ளவளாகி இன்று எங்களிடம் வா. சௌபாக்கியவதியே! நீ ஆயிரஞ் செழுமைகளைத் தருகிறுய். 2,323

### ஸினீவாலி

6. ஸினீவாலியே! பரந்த ஜகனமுள்ளவளும், தேவர்களின் சகோதரியுமான நீ, அளிக்கப்படும் அவியைப் பெற்றுக்கொள்ளவும். தேவியே! எங்களுக்குப் பிரஜையை யளிக்கவும்.

7. மனிதர்களைப் பாலிப்பவளும், அழகிய கைகளுள்ளவளும், எழிலான விரல்களிருப்பவளும், நன்கு பிரஸவிப்பவளும், பல குழந்தைகளைப் பிறப்பிப்பவளுமான ஸினீவாலிக்கு அவியை யளியுங்கள்.

### நான்

8. நான் கங்கூவான அவளை, ஸினீவாலியான அவளை, ராகையான அவளை, ஸரஸ்வதியான அவளை அழைக்கிறேன். நான் இந்திராணியைப் பாலனத்துக்காகவும், வருணனியை ஸ்வஸ்திக்காகவும் அழைக்கிறேன். 2,326

# 33. உருத்திரன்

## 224. கிருத்ஸமதன்

1. மருத்துக்களின் தந்தையே! உன்னுடைய சுகம் எங்களிடம் தோன்றுக. சூரியனின் தரிசனத்திலிருந்து

எங்களை விலக்காதே. எங்களுடைய வீரப் புதல்வர்கள் பகைவர்களை ஜயிப்பார்களாக. உருத்திரனே! நாங்கள் பிரஜைகளோடு பெருகுவோமாக.

2. உருத்திரனே! உன்னால் அளிக்கப்படுபவையும், சுகப்படுத்துபவையுமான ஓஷதிகளால் நான் நூறு மாரிகாலங்கள் வசிப்பேனாக. எங்களிடமிருந்து பகைமையையும், வெறுப்பையும், நோய்களையும், துன்பத்தையும் தூரத்திலே விலக்குவாயாக.

3. உருத்திரனே! நீ புகழில் பிறந்த அனைவருக்கும் தலைவனாயிருக்கிறாய். வச்சிரமேந்துபவனே! நீ வலியர்களின் நடுவே மிக்க வலியனாயிருக்கிறாய். எங்களைத் துன்பத்திலிருந்து கடத்தி, சுவஸ்திக்குச் செலுத்தவும். எங்களிடமிருந்து கொடுமையின் எதிர்ப்புக்களையெல்லாம் விலக்கவும்.

4. உருத்திரனே! விருஷபனே! நாங்கள் உன்னைக் குற்றமுள்ள துதிகளாலும், போற்றத் தகாத தோத்திரத்தாலும், வேறு தேவர்களின் அழைப்பாலும் உன் கோபத்தை எழுப்பாமலாவோமாக. மருத்துவர்களின் நடுவே நீ முதல்வனான மருத்துவன் என நான் செவியுறுவதால், நீ ஓஷதிகளால் என் புதல்வர்களைப் பலப்படுத்தவும்.

5. நான் அவிகளாலும் அழைப்புக்களாலும் போற்றப்படும் அந்த உருத்திரனை, ஸ்தோமங்களால் அவனுடைய கோபத்தை நீக்கி, சாந்தப்படுத்துவேனாக. மிருதுவான வயிறுள்ளவனும், பழுப்பு நிறமுள்ளவனும், வணக்கத்தோடு அழைக்கப்படுபவனும், சுந்தர தாடையுள்ளவனுமான அவன் எங்களை இந்தத் துன்புறுத்தும் மனத்துக்கு அளிக்காமலிருப்பானாக. 2,331

6. விருஷபனும், மருத்துக்களோடிருப்பவனுமான அவன், நாடும் என்னைப் பலப்படுத்தும் உணவால் திருப்தி செய்வானாக. வெப்பத்தில் தவித்தவன் நிழலில் இன்பத்தைக் காண்பது போல் நான் உருத்திரனுடைய



சுகத்தை பாபமற்றவனாகிப் பற்றுவேனாக. அதற்காக நான் அவனைப் பணிவேனாக.

7. உருத்திரனே! உன்னுடைய குணப்படுத்துவதும், அனைவரையும் இன்பப்படுத்துவதும், சுகப்படுத்துவதுமான கை எங்கு இருக்கிறது? பொழிபவனும், தேவர்களின் பாபத்தை விலக்குபவனுமான நீ, என்னிடம் இரக்கமாகவும்.

8. நான் மேன்மையிலும் மேன்மையான மங்களத் துதியைப் பொழிபவனும், பாலிப்பவனும், வெறுப்பவனுமான உருத்திரனுக்குக் கூறுகிறேன். நாங்கள் மாசை நீக்கும் அவனை வணக்கங்களோடு வந்திக்கிறோம். நாங்கள் உருத்திரனின் புகழ் பெற்ற நாமத்தைப் போற்றுகிறோம்.

9. திடாங்கங்களோடு திரமாயிருப்பவனும், பல வடிவங்களை ஏந்துபவனும், உக்கிரனும், பாலிப்பவனுமான உருத்திரன், பிரகாசிக்கும் பொன்னாபரணங்களோடு விளங்குகிறான். வலிமை, இவ்வுலகத்தின் தலைவனும் ஈசனுமான உருத்திரனிடமிருந்து தனிமையாகாது.

10. போற்றத் தகுந்த நீ, வில்லையும் சரங்களையும் ஏந்துகிறாய். நீ துதியாருகமும் விசுவ ரூபமுமான பொன் மாலையை யணிகிறாய். போற்றத் தகுந்த நீ, விசுவமான இந்தப் பரந்த உலகத்தைப் பாலிக்கிறாய். உன்னையன்றி ஆற்றல் மிகுந்தவன் வேறு எவனுமில்லை. 2,336

11. நேரில் செல்பவனும், தருணனும், சிங்கத்தைப் போல் பயங்கரனும், அழிப்பவனும், புகழுள்ளவனுமான ருத்திரனைப் போற்றவும். உருத்திரனே! நீ எங்களால் போற்றப்பட்டு துதிக்கும் என்னை சுகப்படுத்துவாயாக. உன்னுடைய படைகள் எங்கள் பகைவனை அழிக்க.

12. உருத்திரனே! எங்கள் யக்ஞத்துக்கு வரும் உன்னை, நான், வாழ்த்தளிக்கும் தந்தையை வணங்கும்

குமாரனைப் போல் உன்னை வணங்குகிறேன். நான் மிகுந்த செல்வத்தைத் தருபவனும், நல்லவரைப் பாலிப்பவனுமான உன்னைப் போற்றுகிறேன்.

13. மருத்துக்களே! பொழிபவர்களே! எந்த மருந்துகள் சுத்தமாயிருக்கின்றனவோ, எவை சுகப்படுத்துகின்றனவோ, எவை எங்களுடைய தந்தையான மநுவால் வரிக்கப்பட்டவையோ, எந்த ருத்திரனுடைய மருந்துகள் நோயை நீக்கி விபத்திலிருந்து பாலிக்கின்றனவோ அம் மருந்துகளை நான் உங்களிடமிருந்து நாடுகிறேன்.

14. உருத்திரனுடைய ஆயுதம் எங்களை விலக்குக. உக்கிரனின் மகத்தான கோபம் ; எங்களை விலக்குக. பொழிபவனே! உன்னுடைய வில்லை, அவிச் செல்வர்களிடமிருந்து நீக்கவும். எங்கள் புதல்வர்களையும் பேரர்களையும் சுகப்படுத்தவும்.

15. பாலிப்பவனே! தேவனே! எங்களைக் கொல்லாமலிருக்கவும். எங்களிடம் கோபிக்காமலிருக்கவும். இங்ஙனம் உன் தன்மையைப் புலப்படுத்தவும். உருத்திரனே! இங்கு எங்களுடைய அழைப்பைக் கேட்கவும். நாங்கள் இந்த யக்ஞத்திலே உத்தம வீரர்களோடு மகத்தான மொழியைக் கூறுவோமாக. 2,341

## 34. மருத்துக்கள்

### 225. கிருத்ஸமதன்

1. எதிர்ப்பற்ற பலமுள்ள மருத்துக்கள் மழையை விரும்புகிறார்கள். பிரகாசமாயுள்ள அவர்கள் தங்கள் பலத்திலே காட்டு மிருகங்களைப் போல் பயங்கரமாயிருக்கிறார்கள். அக்கினியின் சுவாலைகளைப் போல் சொலிப்பவர்களும், சலம் நிறைந்தவர்களும், சலனமாகும் மேகத்தைப் பிரேரிப்பவர்களுமான மருத்துக்கள் பசுக்களைப் புலப்படுத்தினார்கள்.



2. பொன் மார்புள்ள மருத்துக்களே! உங்களை, பொழிபவனான உருத்திரன், பிருசினியின் நிர்மலமான ஆபீனத்திலிருந்து பிறப்பித்தான். ஆதலால் பகைவர்களைப் புசிக்கும் மருத்துக்கள் தங்கள் ஆபரணங்களால் ஒளி மண்டலங்கள், நட்சத்திரங்கள் போல் விளங்குகிறார்கள். மழையைச் செலுத்தும் அவர்கள் மேகத்தில் தோன்றும் மின்னலைப் போல் பிரகாசிக்கிறார்கள்.

3. போர்களில் சூடேறிய குதிரைகளை சலத்தால் தெளிக்கும் மனிதர்களைப் போல் அவர்கள் பரந்த புவியை நீரால் தெளிக்கிறார்கள். அவர்கள் துரித குதிரைகளோடு முழங்கும் மேகத்தின் செவிகளினருகில் பாய்கிறார்கள். தலையிலே பொன் கவசமுள்ளவர்களே! ஒருமித்த மனமுள்ள மருத்துக்களான நீங்கள், எல்லாப் பொருள்களையும் ஆட்டும் நீங்கள், உங்களுடைய புள்ளிமானோடு உணவைப் பெற்றுக் கொள்ள வாருங்கள்.

4. உடனே அளிக்கும் மருத்துக்கள் அவியளிப்பவனுக்கு நண்பனைப் போல், இந்த எல்லா சலங்களையுந் தருகிறார்கள். புள்ளிமான்கள், அவர்களுடைய குதிரைகள், தேயாத செல்வங்கள் அவர்களிடமுண்டு. தேர்களில் அமர்ந்திருக்கும் அவர்கள் இலக்குக்கு நேராகப் பாயுங் குதிரைகளைப் போல், செயல்களின் நுகத்திலே சேர்ந்திருக்கிறார்கள். சலனமாகும் மேகங்களின் நடுவே அமர்ந்து செல்லுகிறார்கள்.

5. ஒருமனமுள்ளவர்களும், பிரகாசிக்கும் ஆயுதங்களை ஏந்துபவர்களுமான மருத்துக்கள், மின்னுபவையும் நிறைந்திருப்பவையுமான பசுக்களோடு தடைபடாத வழிகளால் ஸோமத்தின் மதத்துக்காக உறை இடங்களுக்குச் செல்லும் அன்னங்களைப் போல் வருவார்களாக. 2,346

6. ஒருமனமுள்ள மருத்துக்களான நீங்கள், வழிபடுபவர்களுடைய பாக்களுக்குச் செல்வது போல் எங்கள் யக்ஞங்களில் அளிக்கப்படும் உணவுக்கு வாருங்கள்.

எங்களுடைய தோத்திரத்தைக் குதிரையைப் போலும், ஆபீனம் நிறைந்த பசுவைப் போலும் புட்டிப்படுத்துங்கள். பாடுபவனின் பாட்டை மிக்கப் பலப்படுத்துங்கள். வழிபடுபவனுடைய யக்ஞத்தை உணவு தரச் செய்யுங்கள்.

7. மருத்துக்களே! தினந்தோறும் உங்கள் வருகையை ஊக்கப் படுத்த உங்களுக்குத் தருந்த துதிகளைக் கூறுபவனும், வலிமையுள்ளவனுமான புதல்வனை யளியுங்கள். உங்களைப் போற்றுபவர்களுக்கு உணவையளியுங்கள். போர்களிலே உங்களைப் பாடுபவனுக்கு உணவை யளியுங்கள். அவனுக்கு ஈகைத் தன்மையையும், அறிவையும், தேயாததும், மிக்க மேன்மையுள்ளதுமான பலத்தையளியுங்கள்.

8. பொன் மார்புள்ளவர்களும், வள்ளல்களுமான மருத்துக்கள், உத்தம ஸ்தானத்திலே, தங்கள் தேர்களிலே குதிரைகளை இணைக்குங்கால் அவியளிப்பவனுக்கு மகத்தான உணவைத் தொழுவங்களில் தங்கள் கன்றுக்குப் பாலையளிக்கும் பசுவைப் போல் தருகிருர்கள்.

9. மருத்துக்களே! வசுக்களே! எங்களிடம் ஓநாயைப் போல் பகைமைத் தன்மையை ஏந்தும் மனிதனின் கொடுமையிலிருந்து எங்களைப் பாலியுங்கள். சுடர்த் தேரோடு அவனைச் சூழுங்கள். உருத்திரர்களே! புசிப்பவனின் ஆயுதத்தை விலக்குங்கள்.

10. மருத்துக்களே! உங்களுடைய அற்புதமான ஆற்றலை அனைவரும் அறிந்திருக்கிருர்கள். நீங்கள் அதனுல் சோதியின் ஆபீனத்தைப் பிடித்து, மழையைக் கறந்தீர்கள். வழிபடுபவனை நிந்தித்தப் பகைவனையழித்தீர்கள், தடைபடாத ருத்திரப் புதல்வர்கள், திரிதனுடைய பகைவர்களைக் கொல்ல அவனிடம் வந்தார்கள். 2,351



11. மருத்துக்களே! பரவத்தக்கதும், விரும்பத்தகுந்ததுமான ஸோம மளிக்கப்படுங்கால் இத்தகைய யக்ஞங்களிலே வருபவர்களும், மகான்களுமான உங்களை இருக்க நாங்களழைக்கிறோம். நாங்கள் பொன்நிறமுள்ளவர்களும், உத்தமர்களுமான மருத்துக்களிடம் ஏந்தியத் துருப்புக்களோடும், கூறும் துதிகளோடும், போற்றத் தகுந்த செல்வத்தை விரும்புகிறோம்.

12. தசக்வர்களான மருத்துக்கள் முதல்வர்களாக யக்ஞத்தை நடத்திஞர்கள். அவர்கள் உஷைகளின் உதயங்களில் எங்களை ஊக்கப்படுத்துவார்கள். உஷை தன் சிகப்புக் கதிர்களால் இரவை நீக்குகிருள். மகத்தான சுத்தமான பனி விலக்கும் சோதியால் இருள் அகற்றப் படுகிறது.

13. இசையெழுப்பும் குழல்கள் ருத்திரப் புதல்வர்களிடமுண்டு. சிகப்பாபரணங்களோடு விளங்குகிருர்கள். ருதத்தின் இடங்களிலே செழிக்கிருர்கள். உக்கிர பலத்தால் மேகங்களைக் கலைக்கிருர்கள். இன்புறுத்துபவையும், எழிலுள்ளவையுமான வடிவங்களை ஏந்துகிருர்கள்.

14. நாங்கள் மகத்தான செல்வத்துக்காகவும், பாலனத்துக்காகவும், மருத்துக்களை நாடுகிறோம். இந்தத் துதியால் அவர்களைப் போற்றுகிறோம். யக்ஞத்தை நடத்தவும், அதை ஆயுதத்தால் பாலிக்கவும், திரிதனுல் நியமிக்கப்பட்ட ஐந்து முதன்மையான ஹோதாக்களைப் போல் போற்றுகிறோம்.

15. மருத்துக்களே! உங்களுடைய வழிபடுபவனைப் பாபத்திலிருந்து கடத்திச் செல்வதும், துதிப்பவனை நிந்திப்பவனிடமிருந்து நீக்குவதுமான பாலனம் எங்களிடம் தோன்றுக. உங்களுடைய நல்ல மனம் கன்றினிடம் இசையும் பசுவைப் போல் விளங்குக. 2,356

## 35. சலங்களின் பௌத்திரன்

### 226. கிருத்ஸமதன்

1. நான் செல்வத்தை விரும்பி மொழி தாரையைப் பொழிகிறேன். முழங்குபவனும், துரிதமாய்ச் செல்பவனுமான சலங்களின் பௌத்திரன் துதிப்பவனுன எனக்கு மிகுந்த உணவையளிப்பானாக. எங்களைச் சுந்தர வடிவங்களோடு இசைப்பானாக. அவன் தோத்திரங்களை விரும்புகிருன்.

2. நாங்கள் எங்கள் இருதயங்களிலே கற்பிக்கப்பட்ட இந்த மந்திரத்தை அவனுக்குக் கூறுவோமாக. அவன் அதன் நோக்கத்தை முற்றும் அறிவானாக. தலைவனும், சலங்களின் பேரனுமான அவன், தன் பகையழிக்கும் திறத்தால்–மகிமையால் எல்லா புவனங்களையும் பிறப்பித்தான்.

3. மழையிலிருந்து வந்த சில சலங்கள் ஒருமித்துச் சேர்கின்றன. புவியிலே முன்னதாகவே இருந்த வேறு சலங்கள் அவற்றோடு கலக்கின்றன. எல்லாம் சேர்ந்து நதிகளாகி, கடல் நடுவிலிருக்கும் வடவானலைத் திருப்தி செய்கின்றன. சுத்தமான சலங்கள் சுத்தமாயும், சோதியுள்ளவையுமான சடல் வடவானலாயிருக்கும் நீரைச் சூழ்ந்து போற்றுகின்றன.

4. பணிவுள்ள யுவதிகள்–சலங்கள், தருணனைப் பணிய அருகிலே நிற்கிருர்கள். அவனை நீராட்ட ஊக்கமாகிருர்கள். அவன் சமிதையால் ஊட்டப்படாதிருந்தாலும், நெய்யால் சுத்தமாகி, சலங்களின் நடுவே ஒளிக் கிரணங்களோடு நாம் உணவைப் பெறப் பிரகாசிக்கிருன்.

5. மூன்று ஸ்திரிகளான தேவிகள் துன்பமாகாத தேவனுக்கு–சலப்பேரனுக்கு உணவை ஏந்துகிருர்கள். அவர்கள் சலங்களில் பிறப்பிக்கப்பட்டவர்கள் போல் பரவுகிருர்கள். பூர்வத்தில் தோற்றுவிக்கப்பட்ட சலங்களின் அமிருதன் அவன். அபாம்நபாதன்–சலப்பேரன் பருகிருன். 2,361



6. அவனிடமிருந்து குதிரையின் ஜன்மம் தோன்றுகிறது. அவனிடமிருந்தே எல்லா உலகத்தின் ஜன்மமும் தோன்றுகிறது. சலங்களின் பேரனுன நீ, வழிபடுபவர்களைக் கொடுமைப் படுத்துபவனின் கொடுமையிலிருந்து பாலிப்பாயாக. அளிக்காதவர்களும், அசத்தியத்தைப் பயிலுபவர்களும், அபக்குவ அல்லது உத்தம சலங்களில் வசித்த போதிலும் நினைப்பதற்கரிய தேவனை அடையார்கள்.

7. தன் மனையிலே வசிப்பவனும், சரளமாய்க் கறக்கும் பசுவுள்ளவனும், அமுதத்தைச் செழிப்பிப்பவனும், சலங்களின் பேரனுமான அவன் உத்தம உணவுகளைப் புசிக்கிருன். அவன் சலங்களின் நடுவே ஆற்றலைக் குவித்து, வழிபடுபவனுக்குச் செல்வத்தைத் தரப் பிரகாசிக்கிருன்.

8. அபாம்நபாதன், சலங்களின் பௌத்திரன்; சத்தியவான்; தேயாதவன்; பரந்தவன். அவன் மேகங்களின் நடுவே தேவத்தன்மையுள்ள தூய ஒளியோடு துலங்குகிருன். வேறு எல்லா புவனங்களும் அவனுடைய கிளைகள் போலாகின்றன. ஓஷதிகளும், மலர்களும், பழங்களும், அவனிடமிருந்தே தோன்றுகின்றன.

9. சலங்களின் பேரன் குடிகலகதியுள்ள மேகங்களில் மின்னல்களையணிந்து வானிலே ஏறுகிருன். பரந்தவையும் பொன்னிறமுள்ளவையுமான நதிகள், அவனுடைய மகத்தான புகழை ஏந்தி எங்கும் பரவுகின்றன.

10. சலங்களின் பேரன்; பொன் வடிவமுள்ளவன்; பொன் புலன்களுள்ளவன்; பொன் நிறமுள்ளவன்; பொன்னுன பீடத்திலிருந்து பிரகாசிக்கிருன்; பொன்னை அளிப்பவர்கள் அவனுக்கு அவியைத் தருகிருர்கள். 2,366

11. அழகு அவனுடைய வடிவம். சலங்களின் பேர னுடைய நாமம் அழகாயிருக்கிறது. அவனுடைய நாம மும், தோற்றமும் மறைந்திருந்தாலும் அவை செழிக்கின் றன. யுவதிகளான சலங்கள் ஒன்று சேர்ந்து பொன் னிறமுள்ள தேவனை வானிலே சொலிப்பிக்கிறார்கள். அவனுக்கு சலமே அன்னமாகிறது.

12. நாங்கள் யக்ஞங்களாலும், அவிகளாலும், வணக்கத்தாலும், நண்பனும், பல தேவர்களின் முதல்வ னுமான அவனைப் பணிகிறோம். நான் அவனுடைய உன்னத ஸ்தானத்தை எழில்படுத்துகிறேன். நான் அவனைச் சமிந்தனங்களால் ஏந்துகிறேன். நான் உண வுகளால் தாங்குகிறேன். நான் இருக்குக்களால் போற்று கிறேன்.

13. விருஷபன் சலங்களின் உள்ளே தன்னுடைய சொந்தக் கருவை ஸ்தாபித்தான். அவன் குழந்தையாகி சலங்களின் பாலைப் பருகுகிறான். சலங்கள் அவனை முத் தமிடுகின்றன – சுவைக்கின்றன. தேயாத ஒளியுள்ள சலங்களின் பேரன் வேறு அனல் வடிவத்தோடு இப்புவி யிலே இறங்குகிறான்.

14. மகத்தான சலங்கள் தங்கள் பேரனுக்கு நெய் யுள்ள உணவை ஏந்துகிறார்கள். பரமபதத்தில் வசிப்ப வனும், தன் தேயாத கிரணங்களோடு தினந்தோறும் பிரகாசிப்பவனுமான அவனை சுயமான சலனங்கள் சூழ்ந்து பெருகுகிறார்கள்.

15. அக்கினியே! நான் நல்ல மனைகளையளிக்கும் உன்னிடம் புதல்வனுக்காக வந்திருக்கிறேன். நான் அவிச் செல்வர்களுக்காக நன்கு கற்பிக்கப்பட்ட துதி யோடு வந்திருக்கிறேன். தேவர்களால் பாலிக்கப்படும் நலம் எல்லாம் எங்களுக்குத் தோன்றுக. உத்தம வீரர் களுள்ள நாங்கள் யக்ஞத்திலே மகத்தான மொழியைக் கூறுவோமாக. 2.371



# 36. ருதுதேவர்கள்

## 227. கிருத்ஸமதன்

1. இந்திரனே! உனக்களிக்கப்படும் ஸோமம் பாலோடும் சலத்தோடும் சேர்ந்திருக்கிறது. மனிதர்கள் அதைக் கற்களால் பிழிந்து கம்பளப் பவித்திரங்களால் சுத்தப்படுத்தினார்கள். முதல்வனும் உலகத்தை நடத்துப வனுமான நீ, சுவாஹாவும், வஷட்டுமுள்ள முழக்கங் களோடு ஹோதாவால் அளிக்கப்படும் ஸோமத்தைப் பருகவும்.

### மருத்துக்கள்

2. மருத்துக்களே! யக்ஞங்களோடு ஒருமிக்கப் போற்றப்படுபவர்களும், புள்ளியுள்ள குதிரைகளால் இழுக்கப்படும் தேரிலே அமர்ந்தவர்களும், ஈட்டிகளோடு பிரகாசிப்பவர்களும், ஆபரணங்களால் இன்புறுபவர் களும், பரதப் புதல்வர்களும், வானின் தலைவர்களுமான நீங்கள், தருப்பையில் அமர்ந்து போதாவினிடமிருந்து ஸோமத்தைப் பருகுங்கள்.

### துவஷ்டா

3. செவியுறத் துரிதமாகும் நீங்கள் சேர்ந்து எங்க ளிடம் வாருங்கள். தருப்பையிலே அமருங்கள்; இன்புறுங் கள். துவஷ்டாவே! பிறகு, உத்தம கணத்தோடுள்ள நீ, தேவர்களோடும், தேவபத்தினிகளோடும் ஸோமான்னத் தால் திருப்தியாகி இன்பமாகவும்.

### அக்கினி

4. விப்பிரனான அக்கினியே! இங்கு தேவர்களை ஏந்தி வா. அவர்களை யஜிக்கவும். ஹோதாவே! எங்களை விரும்பவும். மூன்று வேதிகைகளில் அமரவும். அக்கினித் திர யாகத்தில் உனக்களிக்கப்படும் ஸோமத்தைப் பெற் றுக்கொள்ளவும். உன் பாகத்தால் திருப்தியாகவும்.

### இந்திரன்

5. இந்த ஸோமம், உன்னுடைய தேகத்தின் தீரத் திண்மையைத் திறப்படுத்துகிறது. ஆற்றலும், வெற்றி

யும் உன் கைகளிலே நித்தியமாயிருக்க நிலைக்கப்பட்டி ருக்கின்றன. மகவானே! உனக்காகப் பிழியப்பட்ட இது உனக்களிக்கப்படுகிறது. இந்த பிராமணத்திலிருந்து பருகவும்; திருப்தியாகவும். 2,376

மித்திரா வருணர்கள்

6. மித்திரா வருணர்களே! இந்த யக்ஞத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள். நீங்கள் என்னுடைய அழைப்பைக் கவனியுங்கள். ஹோதா அமர்ந்து பழைய துதிகளைக் கிரமமாய்க் கூறுகிறான். அவர்களை அழைக்கும் என்னுடைய துதி இரு அரசர்களிடமும் செல்லுகின்றன. பிரசாஸ்தாவிடமிருந்து - நடத்துபவனிடமிருந்து, மதுரமான ஸோமரஸத்தைப் பருகுங்கள். 2,377

## 37. ருதுதேவர்கள்

### 228. கிருத்ஸமதன்

திரவிணோதஸன்

1. திரவிணோதஸனே! ஹோதாவினிடமிருந்து வரும் ஸோமான்னத்தை அனுபவிக்கவும். அத்வர்யுக்களே! அவன் பூரணாகுதியை விரும்புகிறான். அவனுக்கு ஸோமத்தையளியுங்கள். அதனால் அவன் ஊக்கமடைந்து உங்களுக்கு ஈகையவனாவான். திரவிணோதஸனே! நீ ருதுக்களோடு சேர்ந்து ஹோதாவின் யாகத்திலிருந்து ஸோமத்தைப் பருகவும்.

2. நான் அவனைப் பூர்வத்தில் அழைத்தேன். இப்பொழுதும் அழைக்கிறேன். அவன் அழைப்பதற்கு மிக்க அருகனாயிருக்கிறான். அவன் ஈகையன் எனப் புகழ் பெற்றவன். அத்வர்யுக்களால் அவனுக்கு ஸோமம் ஏந்தப்பட்டு வருகிறது. திரவிணோதஸனே! போதாவின் யக்ஞத்திலிருந்து ருதுக்களோடு ஸோமத்தைப் பருகவும்.

3. திரவிணோதஸனே! உன்னை ஏந்தி வந்த குதிரைகள் திருப்தியாகுக. வனஸ்பதியே! நீ துன்பப்படுத்தாமல் திறமுடனாகவும். தீரனான நீ, கவனமாகி நேஷ்டாவின் யக்ஞத்திலிருந்து ருதுக்களோடு ஸோமத்தைப் பருகவும்.



4. அவன் ஹோதாவின் யாகத்திலிருந்து ஸோமத்தைப் பருகியிருந்தாலும் அல்லது போதாவின் யாகத்திலிருந்து பருகி இன்புற்றிருந்தாலும், நேஷ்டாவால் அளிக்கப்பட்ட ஸோமத்தால் மகிழ்ந்திருந்தாலும், திரவிணோதஸன், சுத்தமானதும், அமுதமாயிருப்பதும், நான்காவது பாத்திரத்தில் இருப்பதுமான ஸோமத்தைப் பருகுவானாக.

அசுவினிகள்

5. அசுவினிகளே! உங்களுடைய துரிதமாய்ச் செல்வதும், தலைவர்களான உங்களை ஏந்திச் செல்வதும், உங்களை எங்கள் முன்னே இறக்குவதுமான தேரை இன்று இணையுங்கள். அவிகளை இனிய ரஸத்தோடு சேருங்கள். உணவுச் செல்வர்களான நீங்கள் வாருங்கள். ஸோமத்தைப் பருகுங்கள்.

அக்கினி

6. அக்கினியே! ஸமித்தனத்தால் இன்பமாகவும். மானிடர்களுக்கு நலத்தையளிக்கும் தோத்திரத்தால் இன்பமாகவும். அவியால் இன்பமாகவும். அனைவருக்கும் தஞ்சமான நீ, நல்ல துதியால் இன்பமாகவும். அவிகளைப் பெற்றுக்கொள்ள விரும்பும் நீ, மகத்தான எல்லாத் தேவர்களையும் அவிகளைப் பெற்றுக்கொள்ள விருப்பமுடனாக்கவும். அனைவரோடும், ருதுவோடும், ஸோமத்தைப் பருகவும். 2,383

## 38. ஸவிதா

### 229. கிருத்ஸமதன்

1. உலகத்தை ஏந்துபவனும், பிறப்பிக்கும் செயலைக் கடமை எனக் கருதுபவனுமான ஸவிதா, தேவன் பிறப்பிப்பதற்காகத் தினந்தோறும் எழுகிறான். அவன் தேவர்

களுக்குச் செல்வத்தையளிக்கிறன். அவன் யக்ஞஞ் செய்பவனுக்கு சுவஸ்தியிலே பாகத்தையளிப்பானுக.

2. தேவனுன பரந்த கையுள்ள ஸவிதா எழுகிறன். அனைவரையும் சுகப்படுத்த தன் கைகளை நீட்டுகிறன். சுத்தப்படுத்தும் சலங்கள் அவனுடைய செயல்களைப் பூர்த்தி செய்யப் பாய்கின்றன. இந்த வாயு வியாபக மாயிருக்கும் வானிலே ரமிக்கிறன்.

3. சலனமாகும் சூரியன் தன்னுடைய துரித கிர ணங்களால் விடுதலையாகிறன். அவன் பிரயாணியைப் பயணத்திலிருந்து நிறுத்தியிருந்தான். அவன் போருக்குச் செல்லும் வீரர்களின் விருப்பங்களைக் கட்டுப்படுத்து கிறன். ஸவிதாவின் செயல் நின்றவுடன் இரவு வருகிறள்.

4. இரவு, வஸ்திரத்தை நெய்யும் ஸ்திரியைப் போல் பரந்த உலகத்தை மீண்டும் நெய்து மூடுகிறள். விவேகத் திட்பன் செயலின் நடுவே தன் வேலையை நிறுத்துகிறன். கலைப்பற்றவனும், பருவங்களை வகுப்பவனும், தேவனு மான சூரியன் தோன்றுங்கால் தூக்கத்திலிருந்து உலகம் எழுகிறது.

5. தோற்றுவிக்கப்பட்ட வீட்டுக்குரிய அக்கினியின் காந்தியானது பல மனைகளிலும் பரவுகிறது; தலைவனு கிறது; எல்லா உணவுகளுக்கும் அதிபதியாகிறது. தாயான உஷை, தன் புதல்வனுன அக்கினிக்கு யக்ஞங் களிலே உத்தம பாகத்தையளித்தாள். அது சூரியனுல் அளிக்கப்பட்ட செல்வமாகும். 2,388

6. ஜயத்தை விரும்பிப் போருக்குச் சென்ற வீரன் திரும்புகிறன். ஏனெனில், மனை எல்லா சலனப் பிராணி களின் விருப்பமாகிறது. தெய்வமான ஸவிதாவின் செயல் நின்றவுடன் நித்தியச் செயலாளன் தான் செய்யும் வேலையைப் பாதியிலே நிறுத்திவிட்டு மனைக்குத் திரும்பு கிறன்.

7. நீ புவியிலிருந்து சலங்களைத் திரட்டி வானிலே சேர்த்தாய். புவியிலே பல இடங்கள் வறண்டன. அந்த



வறண்ட இடங்களிலே பிராணிகள் சலத்தைத் தேடு கின்றன. நீ பறவைகளுக்குக் காடுகளை விதிக்கிறய். தேவ ஸவிதாவின் இந்தச் செயல்களை எவனும் தடுக்க இயலாது.

8. சதா செல்பவனும், துரிதமான வேகத்தோடு முள்ள வருணன் மாலையிலே தன்னுடைய சலமய இடத்தை நாடுகிறன். அப்பொழுது ஒவ்வொரு பறவை யும் தன் இடத்தையும், ஒவ்வொரு பிராணியும் தன் ஸ்தா னத்தையும் நாடுகிறது. ஸவிதா ஒவ்வொரு பிராணியை யும் அதற்குரிய இடத்திலே ஸ்தாபிக்கிறன்.

9. நான் இங்கு வணக்கங்களோடு என்னுடைய க்ஷேமத்துக்காக, இந்திரனுலும், வருணனுலும், மித்திரனு லும், அர்யமானுலும், ருத்திரனுலும், தேவர்களின் பகை வர்களாலும் தடைபடாத செயல்களுள்ள அந்தத் தேவ ஸவிதாவை அழைக்கிறேன்.

10. மனிதர்களால் போற்றப்படுபவனும், தேவ பத்தினிகளைப் பாலிப்பவனுமான ஸவிதா, எங்களைப் பாலிப்பானுக. ஏனெனில் நாங்கள் பசுனும், தியானிக்கத் தகுந்தவனும், பேரறிஞனுமான அவனைப் போற்றுகி ரோம். நாங்கள் பசுக்களைப் பெறவும், செல்வத்தைச் சேர்க்கவும், தேவ ஸவிதாவின் நண்பர்களாவோமாக.

11. உன்னுல் சோதியிலிருந்து, புவியிலிருந்து, சலங் களிலிருந்து அளிக்கப்பட்ட அந்த விரும்பத் தகுந்த செல்வம் எங்களுக்குத் தோன்றுக. ஸவிதாவே! உன்னை நீ தொழுபவர்களின் பந்துக்களுக்கு எந்தச் செல்வம் சுகத்தைத் தருகின்றதோ அதை மிக்கத் துதிக்கும் எனக் களிக்கவும். 2,394

## 39. அசுவினிகள்

### 230. கிருத்ஸமதன்

1. இந்த ஒரே நோக்கத்துக்கும் ஸோமத்தைப் பிழி யும் இரு கற்களைப் போல் பாடுங்கள். மரத்துக்குச் செல்

லும் பறவைகளைப் போல் துதிச்செல்வர்களிடம் வாருங்கள். சபையிலே பாக்களை முழங்கும் இரு அந்தணர்களைப் போலிருங்கள். புவியிலே பல சனங்களால் வரவேற்கப்படும் தூதர்களைப் போல் வாருங்கள்.

2. மனிதர்களின் நடுவே வழிபடுபவனை சுகப்படுத்த யக்ஞங்களை ஆய்ந்தறியும் நீங்கள், காலையிலே தேரில் செல்லும் இரு வீரர்களைப் போலும், இரு ஆடுகளைப் போலும், அழகிய வடிவங்களுள்ள இரு வனிதைகளைப் போலும், தம்பதிகளைப் போலும் வாருங்கள்.

3. இரு கொம்புகளுள்ள பசுக்களைப் போலும், வேகமாய்ப் பாய்ந்தோடும் குளம்புகளுள்ள இரு குதிரைகளைப் போலும் முதன்மையாக எங்களிடம் வாருங்கள். காலைக்குக் காத்திருக்கும் இரு சக்கர வாகனங்களைப் போல் வாருங்கள். வலியர்களே! உதயத்திலே இரு தேர்ச் சக்கரங்களைப் போல் வாருங்கள்.

4. எங்களை நதிகளுக்கப்பால் இரு தோணிகளைப் போல் கடத்திச் செல்லுங்கள். எங்களை நீங்கள் நுகங்களைப் போலும், அச்சுக்களைப் போலும், சக்கர இலைகளைப் போலும், சக்கர வட்டங்களைப் போலும் பாலியுங்கள். எங்களங்கங்களைத் துன்பத்திலிருந்து நீக்கும் இரு நாய்களைப் போலிருங்கள். நாங்கள் தேயாமலிருக்க எங்களை இரு கவசங்களைப் போல் பாலியுங்கள்.

5. இரு நாற்றுக்களைப் போல் தடைபடாதவர்களும், இரு நதிகளைப் போல் துரிதர்களும், இரு கண்களைப் போல் ஊக்கமாய்க் காண்பவர்களுமான நீங்கள், எங்கள் முன்னே வாருங்கள். தேகத்துக்கு மிக்க சுகத்தையளிக்க-பாலனம் தர-இரு கைகளைப் போல் வாருங்கள். உத்தமச் செல்வத்துக்கு இரு கால்களைப் போல் நடத்திச் செல்லுங்கள். 2,399

6. இனிய மொழிகளைக் கூறும் இரு உதடுகளைப் போலும், நாம் வாழப் பாலைத் தரும் இரு ஸ்தனங்களைப் போலும், எங்கள் தேகங்கள் பாலனமாக இரு நாசிகளைப் போலுமிருங்கள். இனிய மொழிகளைக் கேட்க இரு செவிகளைப் போலுமிருங்கள்.



7. அசுவினிகளே! எங்களுக்கு இரு கைகளைப் போல் மிகுந்த ஆற்றலைத் தாருங்கள்; சோதி புவிகளைப் போல் எங்களுக்கு மழையைப் பொழியுங்கள்; உங்களுக்குக் கூறப்படும் துதிகளைக் கல்லினால் பரபுவைப் போல் கூர்மைப் படுத்துங்கள்.

8. அசுவினிகளே! கிருத்ஸமதர்கள் உங்களை மேம்படுத்த இந்த மந்திரங்களையும், தோத்திரத்தையும் கற்பித்தார்கள். தலைவர்களே! அவற்றை விரும்புங்கள். இங்கு வாருங்கள். உத்தம வீரப் புதல்வர்களோடுள்ள நாங்கள் உங்களை யக்ஞத்திலே மிக்கப் போற்றுவோமாக. 2,402

## 40. ஸோமனும் பூஷாவும்

### 231. கிருத்ஸமதன்

1. ஸோமா பூஷணர்களே! நீங்கள் செல்வங்களைத் தோற்றுவிப்பவர்கள். சோதியைத் தோற்றுவிப்பவர்கள். புவியைத் தோற்றுவிப்பவர்கள். நீங்கள் பிறந்தவுடன் எல்லா உலகத்துக்கும் பாலகர்களாயிருக்கிறீர்கள். தேவர்கள் உங்களை அமுதத்தின் நாபியாகச் செய்தார்கள்.

2. இந்த இரு தேவர்களின் பிறப்பிலே எல்லாத் தேவர்களும் இன்புறுகிறார்கள். ஏனெனில் அவர்கள் நாம் வெறுக்கும் இருளை நீக்குகிறார்கள். இந்திரன் இந்த ஸோமனோடும், பூஷாவோடும், இளமைத் தன்மைகளுள்ள பசுக்களின் ஆபீனத்திலே பக்குவமான பாலைத் தோற்றுவிக்கிறான்.

3. ஸோமா பூஷணர்களே! பொழிபவர்களே! உங்களுடைய உலகங்களையளப்பதும், ஏழு சக்கரங்களுள்ளதும், விசுவத்திலிருந்து தனிப்படாததும், எங்கும்

செல்வதும். ஏழு ரசிமிகளுள்ளதும், மனத்தால் இணைக்கப்படுவதுமான தேரை எங்களிடம் செலுத்துங்கள்.

4. அவர்களில் ஒருவன் பூஷா. மேலே சோதியிலே தன் மனையைச் செய்துகொண்டான். மற்றவன் ஸோமன். புவியிலும் வானிலும் தன் மனையைச் செய்து கொண்டான். அவ்விருவரும் எங்களுக்குப் பலரால் போற்றத் தகுந்ததும், மிக்க புகழுள்ளதும், போதத்துக்கு மூலமாயிருக்கும் செல்வச் செழிப்பைத் தருவார்களாக.

5. உங்களில் ஒருவன் எல்லா புவனங்களையும் தோற்றுவித்தான். மற்றவன் பூஷா. சூரியன் அனைத்தையும் பார்த்த வண்ணஞ் செல்லுகிறான். ஸோமா பூஷணர்களான நீங்கள் என் செயலைப் பாலியுங்கள். உன்னால் நாங்கள் எல்லாப் பகைவர்களின் படைகளை ஜயிப்போமாக.

6. விசுவத்தை ஊக்கப்படுத்தும் பூஷா. எங்கள் செயலை ஊக்கப்படுத்துவானாக. செல்வபதியான ஸோமன் எங்களுக்குச் செல்வத்தையளிப்பானாக. பகைவனற்ற அதிதி எங்களைப் பாலிப்பாளாக. உத்தம வீரப் புதல்வர்களுள்ள யக்ஞத்திலே மகத்தான மொழியைக் கூறுவோமாக. 2,408

# 41. பலதேவர்கள்

## 232. கிருத்ஸமதன்

### வாயு

1. வாயுவே! ஆயிரம் தேர்களும் நியுத் குதிரைகளுமுள்ள ஸோம ரஸத்தைப் பருக வா.

2. நியுத் குதிரைகளுள்ள வாயுவே! வா. உனக்கு இந்த சுத்தமான ஸோமம் அளிக்கப்படுகிறது. நீ பிழிபவனுடைய மனைக்குச் செல்லுகிறாய்.

### இந்திர வாயுக்கள்

3. தலைவர்களே! இந்திர வாயுக்களே! நியுத் குதிரைகளிருப்பவர்களே! வாருங்கள். பால் கலவையையும், சுத்த ஸோமத்தையும் பருகுங்கள்.



### மித்திரா வருணர்கள்

4. ஸத்தியத்தைப் பாலிக்கும் மித்திரா வருணர்களே! இந்த ஸோமம் உங்களுக்களிக்கப்படுகிறது. என்னுடைய இந்த அழைப்பைக் கேளுங்கள்.

5. துன்பப் படுத்தாத அரசர்கள், திரமான மேன்மையான ஆயிரம் தூண்களுள்ள இந்த இடத்திலே அமருவார்களாக. 2,413

6. நெய்யுணவு புசிப்பவர்களும், ஈகையின் தலைவர்களும், அதிதியின் புதல்வர்களும், உலகின் மன்னர்களுமான மித்திரா வருணர்கள் சிரத்தையுடனிருப்பவனைப் பணிகிறார்கள்.

### அசுவினிகள்

7. ஸோமத்தையளிப்பவன் பசுக்களையும் பெற அசுவினிகளே! பொய்யற்றவர்களே! ருத்திரர்களே! நீங்கள் தலைவர்களால் பருகுவதற்குரிய ஸோமத்தைப் பருக யக்ஞத்துக்கு நேரான வழியால் செல்லுங்கள்.

8. செல்வத்தைப் பொழிபவர்களே! அருகிலோ, தூரத்திலோ எந்தப் பகைவனாலும், தீயோனாலும் பறிக்க இயலாதுள்ள செல்வத்தை எங்களுக்களியுங்கள்.

9. தீரர்களான அசுவினிகளே! எங்களுக்கு நானாவிதச் செல்வங்களையும், செல்வந் தரும் செல்வத்தையுமளியுங்கள்.

### இந்திரன்

10. இந்திரன் ஆக்கிரமிக்கும் மகத்தான எல்லா பயத்தையும் விலக்குவானாக. ஏனெனில் அவன் தீரன்; அனைத்தையுங் காண்பவன். 2,418

11. இந்திரன் எங்களை சுகப்படுத்தினால் எங்களைப் புன்மை தொடராது. எங்கள் முன்னே நன்மை தோன்றும்.

12. விசுவத்தைக் காண்பவனும், பகை ஜயிப்பவனுமான இந்திரன் எங்களுக்கு எல்லாத் திசைகளிலும் அபயத்தை யளிப்பானாக.

### விசுவே தேவர்கள்

13. விசுவே தேவர்களே! இங்கு வாருங்கள். என்னுடைய இந்த அழைப்புக்குச் செவி கொடுங்கள். இந்தத் தருப்பையின் மீது அமருங்கள்.

14. இந்தத் தீவிரமான, இனிப்பான மதமளிக்கும் ஸோம பானம் கிருத்ஸமதர்களால் உங்களுக்குக் கற்பிக்கப்படுகிறது. இன்பமான இந்த பானத்தைப் பருகுங்கள்.

15. இந்திரனைத் தலைவனாக உள்ள மருத்துக்களான நீங்களும், பூஷணனை ஈகையனாகவுள்ள தேவர்களான நீங்கள் எல்லாம் என்னுடைய இந்த அழைப்புக்குச் செவி கொடுங்கள். 2,423

### ஸரஸ்வதி

16. தாய்மார்களிலே உத்தமியும், நதிகளிலே உத்தமியும், தேவிகளிலே உத்தமியுமான ஸரஸ்வதியே! நாங்கள் புகழற்றவர்களைப் போல் இருக்கிறோம். ஏழைகள் தாயே! எங்களைப் புகழ்படுத்தவும்; செல்வமளிக்கவும்.

17. ஸரஸ்வதியே! உன்னில் தெய்வத் தன்மையுள்ள எல்லாப் பொருள்களும் தஞ்சமாகின்றன. கிருத்ஸமதர்களின் நடுவே இன்பமாகவும். தேவியே! எங்களுக்குப் புதல்வர்களையளிக்கவும்.

18. செல்வமுள்ளவனும், சத்தியவதியுமான ஸரஸ்வதியே! இந்த பிரம்மங்களை-தோத்திரங்களை—ஏற்றுக்கொள்ளவும். பெறுவதர்க்குரியவையும், தேவர்களுக்குப் பிரியமுள்ளவையுமான மந்திரங்களை கிருத்ஸமதர்கள் கூறுகிறார்கள்.

### சோதியும் புவியும்

19. யக்ஞத்தை சுகப்படுத்தும் சோதியும் புவியும் வேதியினிடஞ் செல்வார்களாக. நாங்கள் உங்கள் இருவரையும், அவி ஏந்தும் அக்கினியையும் இங்கு வர விரும்புகிறோம்.



20. சோதி புவிகளே! சுவர்க்கத்துக்கு ஸாதகமாயிருப்பதும், சோதியிடம் செல்வதுமான இந்த யக்ஞத்தைத் தேவர்களிடஞ் செலுத்துங்கள்.

21. துரோகாகிதர்களான சோதி புவிகளின் நடுவே யக்ஞாருகர்களான தேவர்கள் இங்கு இன்று ஸோம பானத்துக்காக அமர்வார்களாக. 2,429

## 42. பறவை

### 233. கிருத்ஸமதன்

1. பறவை மீண்டும் மீண்டும் கதறுகிறது. எது வருமென்பதை முன்னதாகவே கூறுகிறது. தோணியைக் கடத்தும் படகோட்டியைப் போல் அது குரலைச் செலுத்துகிறது. சகுனமே! சுமங்கல மளிப்பவளாகவும். உனக்கு எங்கிருந்தும் துன்பம் தோன்றாமலாகுக.

2. உன்னைக் கழுகு கொல்லாமலிருக்க. கருடனும் கொல்லாமலிருக்க. சரமேந்தும் வில்லாளனும், உன்னை அணுகாமலிருப்பானாக. நீ தென் திசையிலே அடிக்கடி சத்தத்தை எழுப்பி, ஸுமங்கலத்தை அறிவிப்பவளாகவும். நலத்தை மொழியும் நீ இங்கு இனியதைக் கூறவும்.

3. பறவையே! சுமங்கலியும் இனிய மொழியைக் கூறுபவளுமான நீ, எங்கள் மனைகளின் தென் திசையிலிருந்து சப்திக்கவும். எந்தத் தீயோனும், எந்தத் திருடனும் எங்களை வருத்தப்படுத்தாமலிருப்பானாக. வீரப் புதல்வர்களுள்ள நாங்கள் யக்ஞத்திலே மகத்தான மொழியைக் கூறுவோமாக. 2,432

## 43. பறவை

### 234. கிருத்ஸமதன்

1. பறவைகள் பருவத்தோடிசைந்து தொழுபவர்களைப் போல் தங்கள் பிரதட்சிணங்களைப் புலப்படுத்து

கின்றன. அது திருட்டு புலிலும் காயத்திரியிலும், திற முள்ள ஸாமம் பாடுபவனைப் போல் இரு சுவரங்களோடு இசைக்கிறது. கேட்பவர்களை இன்புறுத்துகிறது.

2. பறவையே! நீ உத்காதாவைப் போல் ஸாமகானைப் பாடுகிறாய். நீ யக்ஞங்களிலே பிரம்மப் புதல்வனைப் போல் சிறௌத சுவரத்தை எழுப்புகிறாய். பெட்டையினிடம் செல்லும் வலிய குதிரையைப் போல் நீ எங்களுக்கு எங்கிருந்தும் நன்மையைப் பாடவும். எங்களுக்குச் செல்வத்தை-புண்யத்தைப் பாடவும்.

3. பறவையே! நீ குரலை எழுப்புங்கால் எங்களுடைய மங்களத்தைப் பாடவும். நீ அமைதியாய் உட்காரும் போது எங்களிடம் நல்ல எண்ணங்களுடனுகவும்' நீ பறக்கும் போது பாடுங்கால் அது குழலிசை போலிருக்க. வீரப் புதல்வர்கள் உள்ள நாங்கள் யக்ஞத்திலே மகத்தான மொழியை முழங்குவோமாக. 2,435

மண்டலம்: 2. சூக்தங்கள்: 1-43; 192—234.

இருக்குக்கள்: 429.



இரண்டாவது மண்டலம் முற்றிற்று.

# மூன்றாவது மண்டலம்

❋

## 1. அக்கினி

### 235. விசுவாமித்திரன்-காதினன்

1. அக்கினியே! நான் யஜிக்க, நீ என்னை யக்ஞத்திலே ஸோமத்தை ஏந்துபவனுகச் செய்ததால் என்னை வலிமைப் படுத்தவும். நீ தேவர்களை நோக்கிப் பிரகாசிக்கிறாய். ஸோமத்தைப் பிழிய நான் கற்களைப் பற்றுகிறேன். நான் அவர்களைப் போற்றுகிறேன். அக்கினியே! நீ என் தேகத்தைப் பாலிக்கவும்.

2. நாங்கள் ஜயசீலமான யக்ஞத்தைச் செய்துள்ளோம். துதி உன்னைப் போற்றுக. அவர்கள் ஸமித்தனங்களோடும், வணக்கத்தோடும் அக்கினியை உயர்த்துவார்களாக. சோதியிலிருந்து வந்து, தேவர்கள் தொழுபவர்களுக்குத் தோத்திரங்களைக் கற்பிக்கிறார்கள். அவர்கள் போற்றத் தகுந்த இந்த வலியனான அக்கினியைத் துதிக்க விரும்புகிறார்கள்.

3. தேவர்கள் யக்ஞச் செயல்களை நடத்த அறிஞனும், சுத்த பலமுள்ளவனும், நல்ல பந்துவாயிருப்பவனும், பிறப்பிலிருந்தே சோதிக்கும் புவிக்கும் இன்பத்தைத் தருபவனும், சுந்தரனுமான அக்கினி, சலங்களின் நடுவே மறைந்திருப்பதைக் கண்டார்கள்.

4. ஏழு மகத்தான நதிகள், பிறக்குங்கால் வெண்மையாயிருப்பவனும், பலமாகுங்கால் சிகப்பாயிருப்பவனுமான சௌபாக்கியனைச் செழிப்பித்தன. தேவர்கள் பிறந்த குட்டியைப் பாலிக்கும் பெட்டைக் குதிரைகளைப் போல், பிறந்தவுடன் அக்கினியின் தேகத்தைப் பாலித்து ஒளிப் படுத்தினார்கள்.

5. அக்கினி தன் பிரகாசிக்கும் அங்கங்களால் வானெங்கும் பரவி, யக்ஞத்தைப் போற்றத் தகுந்தவை

யும், சுத்தப்படுத்துபவையுமான, கதிர்களால் சுத்தப் படுத்தி, செயலாளனுக்கு உணவையும், மகத்தாயும், சம்பூர்ணமாயுமுள்ள செல்வத்தையும் தருகிறன். 2,440

6. அக்கினி, புசிக்காதவையும், புசிக்கப்படாதவை யுமான சலங்களுக்கு எங்கும் செல்லுகிறன். வானிலி ருந்து பிறந்த பெரியவர்களும், உடையணியாதவர்களும், நக்னமற்றவர்களும், ஒரே இடத்திலிருந்து தோன்றியவர் களும், நித்தியர்களும், எப்பொழுதும் தருணர்களாயிருப் பவர்களுமான ஏழு நதிகள், ஏகனுன அக்கினியைக் கருப் பாசயத்தில் கருவாக ஏந்தினுர்கள்.

7. அவனுடைய கதிர்கள் சலங்களின் கருப்பாசயத் திலே குவிந்து எங்கும் பரவுகின்றன. விசுவ தீபங்க ளுள்ள அவை, இனிய ரசங்களைப் பரந்த ஆபீனம் நிறைந்த பாற் பசுக்களைப் போல் இயக்குகின்றன. சேர்ந்துள்ள மகத்தான சோதியும் புவியும் அக்கினிக் குத் தருந்த தாய்மார்களாகிருர்கள்.

8. பலத்தின் மகனே! அனைவராலும் ஏந்தப்படு பவனும், பிரகாசிப்பவையும், துரிதமாயும், முன்கதிர் களோடுமுள்ள நீ விளங்குகிருய்; வலியனுன அக்கினி காவ்யத்தால் வலுப்பட்டவுடன் இனிய தாரைகள் பெய் கின்றன.

9. அக்கினி தானுகவே தந்தையின்-வானின்-ஆபீ னத்தை அறிந்தான். அதன் தாரைகளையும், பசுக்களை யும், மொழிகளையும்-இடிகளையும்-வெளிப்படுத்தினுன். மங்களமான நண்பர்களோடும்-காற்றுக்களோடும்- சோதியின் யுவதிகளோடும்-சலங்களோடும்-இரகசியத் தில் மறைந்திருக்கும் அவனை அங்கு எவனும் காண இயலவில்லை.

10. அவன் பிதாவினுடையவும். படைப்பவனுடைய வும் கருவை ஏந்துகிறன். அவன் ஒருவனே செழிக்கும் பல ஓஷதிகளைப் புசிக்கிறன். சூரியனுடைய உட னுெத்த மனைவிகளும், மானிடர்களுக்கு நலத்தையளிக் கும் சோதியும் புவியும், சுத்தனும், சொரிபவனுமான



அக்கினிக்குப் பந்துக்களாகிருர்கள். அக்கினியே! நீ அவர்களை-சோதி புவிகளை-பாலிக்கவும். 2,445

11. மகான் எல்லையற்றுள்ள, பரந்த வானிலே வளர் கிறன். ஏனெனில் சலங்கள் அவனுக்கு மிகுந்த ஊட் டத்தைத் தருகின்றன. சாந்தனுன அவன், சகோதரிக ளான நதிகளுக்குச் சேவை செய்ய, ருதத்தின்-சலத்தின்- மூல ஸ்தானத்திலே சயனிக்கிறன்.

12. பிறப்பிப்பவனும், சலங்களின் கருவும், தலைவர் களில் உத்தமத் தலைவனும். மகானும், பகைவர்களை ஆக் கிரமிப்பவனும், போரிலே வீரர்களைப் பாலிப்பவனும், அனைவராலுங் காணப்படுபவனும் தன் ஒளியால் பிரகா சிப்பவனுமான அக்கினி, அளிப்பவனுடைய நன்மைக் காக சலங்களைக் கற்பித்தான்.

13. செல்வியான அரணி சலங்களுடையவும், ஓஷதி களுடையவும், எழிலோடு பல வடிவங்களுள்ள கருவைப் பிறப்பித்தது. அக்கினி பிறந்தவுடன் அவனைத் தேவர் கள் அணுகினுர்கள். அவர்கள், வலியனும், வணங்கத் தகுந்தவனுமான அவனைப் போற்றினுர்கள்.

14. மகத்தான சூரியர்கள் பிரகாசிக்கும் மின்னல் களைப் போல் அகாதமான கடலின், வானின் நடுவே அமுதத்தைக் கறக்குங்கால், தன்னுடைய சொந்த இடத் திலே குகையினுள் போல் வளர்பவனும், தானே துலங்கு பவனுமான அக்கினியினிடஞ் சேர்கிருர்கள்.

15. யக்ஞத்தை நடத்தும் நான், அவிகளோடு உன்னைப் போற்றுகிறேன். உன்னுதரவை விரும்பும் நான், உன்னிடம் நட்பை நாடுகிறேன். நீ தேவர் களோடு சேர்ந்து துதிப்பவனுக்குப் பாலனத்தையளிக் கவும். உன்னுடைய கட்டுப்பட்ட கிரணங்களால் எங் களைப் பாலிக்கவும். 2,450

16. நன்கு நடத்திச் செல்லும் அக்கினியே! உன்னைப் பின்பற்றுபவர்களும், எல்லாச் செல்வங்களை யும் ஏந்துபவர்களுமான நாங்கள், மிகுந்த வீரப்

புகழோடு பலத்தைப் பெருக்கி, தேவத் தன்மையற்ற படைகளை ஜயிப்போமாக.

17. அக்கினியே! நீ தேவர்களின் துவஜனுகிருய். துதியாருகனுன நீ, எல்லாக் காவ்யங்களையும் அறிகிருய். பயின்ற மனமுள்ள நீ, மனிதர்களிலே வசிக்கிருய். நீ தேரோட்டியைப் போல், தேவர்களைப் பின்பற்றுகிருய். அவர்களுடைய செயல்களை நிறைவேற்றுகிருய்.

18. அமிருதனும், அரசனுமான அக்கினி, மானிடர்களின் மனையிலே அமர்கிருன். அவர்களுடைய யக்ஞங்களை நிறைவேற்றுகிருன். எல்லாக் காவ்யங்களை அறியும் அவன் நெய்யால் ஊட்டப்படுங்கால், அங்கங்களில் பருமனுகிப் பிரகாசிக்கிருன்.

19. மகானும், எங்கும் பரவுபவனுமான நீ, நட்புக்களோடும், மங்களத்தையளிக்கும் மகத்தான பாலனங்களோடும் எங்களிடம் வா. நீ துன்பமற்றவையும், நன்கு கூறப்படுபவையும், விரும்பத் தகுந்தவையும், புகழுள்ளவையும், மிகுந்தவையுமான செல்வங்களை எங்களுக் களிக்கவும்.

20. அக்கினியே! நான் உனக்கு நித்தியமாயும், புதியவையாயுமுள்ள துதிகளைக் கூறுகிறேன். இந்த யக்ஞங்கள், இருக்கும் அனைத்தையுமறிபவனும், ஒவ்வொரு பிறப்பிலும் மனிதர்களால் ஸ்தாபிக்கப்படுபவனும், பொழிபவனுமான அக்கினிக்குச் செய்யப்படுகின்றன. 2,455

21. எல்லா மனிதர்களிலும் ஜாதவேதஸன் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிருன். தேயாத அவன் விசுவாமித்திரனுல் துலக்கமாகிருன். நாங்கள் அவனுடைய சுமதியிலாகி யக்ஞாருகனுன அவனுடைய நல் மனத்திலிருப்போமாக.

22. ஆற்றலுள்ள அக்கினியே! நீ நல்ல செயல்களைப் பூர்த்தி செய்பவன். நீ இன்பமாகி இந்த யக்ஞத்தைத் தேவர்களிடம் செலுத்தவும். தேவர்களை அழைக்கும் நீ, எங்களுக்கு மிகுந்த உணவையளிக்கவும். அக்கினியே! மகத்தான செல்வத்தையளிக்கவும்.



23. அவியளிப்பவனுக்கு நித்தியமாயிருப்பதும், பல யக்ஞங்களைச் செய்ய சாதகமாயிருப்பவையான பசுக்களைத் தருவதுமான நிலத்தையளிக்கவும். எங்கள் வம்சத்திலே புத்திரர்களும் பேரர்களும் தோன்றுவார்களாக. உன்னுடைய ஸுமதி எங்களுக்குத் தோன்றுக. 2,458

## 2. வைசுவாநரன்

### 236. விசுவாமித்திரன்—காதினன்

1. நாங்கள் ருதத்தை வளர்க்கும் வைசுவாநர அக்கினிக்கு, சுத்தமான நெய்யைப் போல் ஸ்தோத்திரத்தையளிக்கிறேம். அறிஞர்களும், ரித்விஜர்களும் தங்கள் செயல்களால் இரு ரூபங்களுள்ள அக்கினியை சலனமாகத் தேரைத் திருத்தும் சிற்பனைப் போல் ஊக்கப்படுத்துகிருர்கள்.

2. அவன் தன் பிறப்பால், சோதியையும் புவியையும் ஒளிப்படுத்தினுன். அவன் தன் பெற்றேர்களுக்கு —சோதி புவிகளுக்கு— போற்றத் தகுந்த மகனுயிருந்தான். அவிகளை ஏந்துபவனும், தேயாதவனும், உணவைத் தருபவனும், சோதிச் செல்வனுமான அக்கினி, மனிதர்களின் அதிதியாயிருந்தான்.

3. சிந்தனை செய்யும் தேவர்கள், பல வடிவமுள்ள யக்ஞத்திலே பாலிக்கும் பலத்தின் ஊக்கத்தால் அக்கினியைப் பிறப்பித்தார்கள். உணவை விரும்பும் நான் குதிரையைப் போல் வலியனும், சூரியனுடைய சோதியோடு பிரகாசிப்பவனும், மகானுமான அக்கினியைப் போற்றுகிறேன்.

4. இலஜ்ஜையற்றிருப்பதும், போற்றுவதற்குரியதுமான உணவை விரும்பும் நாங்கள், பிருகுக்களுக்கு நலத்தையளிப்பவனும், விரும்பப்படுபவனும், திவ்ய

சோதியுடன் பிரகாசிப்பவனும், மிக்க அறிஞனுமான அக்கினியிடமிருந்து துதியாருகனுன வைசுவாநரனின் தானத்தை வேண்டுகிறேம்.

5. தருப்பையைப் பரப்பித் துடுப்புக்களை ஏந்தும் மனிதர்கள், சுகத்தைப் பெற, உணவையளிப்பவனும், மிக்க ஒளியுள்ளவனும், விசுவேதேவர்களுக்கு நலத்தைச் செய்பவனும், ருத்திரனும், யக்ஞக் கருத்தாவின் செயல்களைப் பூர்த்தி செய்பவனுமான அக்கினியை இங்கு யக்ஞத்தில் ஸ்தாபித்துப் போற்றுகிறார்கள். 2,463

6. அக்கினியே! சுத்தப்படுத்தும் சோதியானே! தேவர்களை அழைப்பவனுன உன்னை மனிதர்கள் போற்ற விரும்புகிறார்கள். தருப்பையைப் பரத்துகிறார்கள். யக்ஞங்களிலே உரிய இடத்திலிருக்கும் உன்னிடம் வருகிறார்கள். அவர்களுக்குச் செல்வத்தையளிக்கவும்.

7. பிறந்தவுடன் வினைத் திட்பர்களால் ஏத்தப்பட்ட அக்கினி, சோதியையும் புவியையும், பரந்த வானையும் நிரப்பினன். கவியான அவன், நம்மைப் பலப்படுத்த யக்ஞத்திலே குதிரையைப் போல் செலுத்தப்படுகிறன்.

8. அவிகள் ஏந்துபவனைப் போற்றுங்கள். நல்ல யக்ஞங்களறிபவனைப் போற்றுங்கள். ஜாதவேதஸனுன மனைகளின் நண்பனைப் பணியுங்கள். அவன் மகத்தான ருதத்தின் தேரைச் செலுத்துகிறன். தீர்க்கதரிசியான அக்கினி தேவர்களின் புரோகிதனுயிருக்கிறன்.

9. அமுதர்கள், அவனை அடைய விரும்பி, மகானும் எங்கும் சூழ்ந்திருப்பவனுமான அக்கினியின் மூன்று காந்திகளை-புவியனலை, மின்னலை-சூரியனை-சுத்தப்படுத்தினர்கள். அவர்கள் அவற்றில் ஒன்றை, அனைவரையும் ஊட்டப்படுத்த மானிட உலகத்திலே ஸ்தாபித்தார்கள். மற்ற இரண்டும் சகோதரி மண்டலத்துக்குச் சென்றன.

10. மானிடர்கள் செல்வத்தை விரும்பி, அறிஞனும் மனிதர்களின் தலைவனுமான அக்கினியை, சாணையால்-பரசுவைப் போல் துதிகளால் ஒளிப்படுத்துகிறர்கள். அவன் ஏறுகிறன்; அவன் இறங்குகிறன்; எங்கும் பரவுகிறன். அவன் இந்த புவனங்களிலே கருவாகிறன். 2468



11. பொழிபவனும், பல உதரங்களுள் பிறப்பவனுமான வைசுவாநரன், பல இடங்களில் சிங்கத்தைப் போல் கர்ச்சித்து, வயிறுகளிலே வளர்கிறன். பரந்த ஒளியுள்ளவனும், அமுதனுமான அவன், அவியளிப்பவனுக்கு அரிய செல்வங்களைத் தருகிறன்.

12. பூர்வத்தில் போல் வைசுவாநரன் பாடுபவர்களால் பாடப்பட்டு வானின் மேலுள்ள சோதிக்கு ஏறினன். முன்போல் இப்பொழுதும் வழிபடுபவனுக்குச் செல்வத்தைத் தருகிறன். ஸதா விழித்திருக்கும் அவன், தேவர்களின் வழக்கமான வழியிலே சூரிய வடிவத்தோடு செல்லுகிறன்.

13. வலியனும், யக்ஞாருகனும், அறிஞனும், துதியாருகனும், சோதியில் வசிப்பவனுமான அக்கினியைக் காற்று இங்கு ஏந்தி வந்து புவியிலே வைத்தான். நாங்கள் அந்த நாளுகதியிருப்பவனும், பொன் கேசமுள்ளவனும், மிக்கப் பிரகாசிப்பவனுமான அவனிடம் புதிய செல்வங்களை நாடுகிறேம்.

14. நாங்கள், சுத்தனும், யக்ஞத்தில் வருபவனும், எல்லாப் பொருள்களைக் காண்பவனும், சோதியின் துவஜனும், சூரியனிலிருப்பவனும், உஷையில் விழிப்பவனும், சுவர்க்கத்தின் தலைவனும், மறுத்துரைக்காதவனும், உணவுள்ளவனும், மகானுமான அக்கினியைப் போற்றுகிறேம்.

15. நாங்கள், துதியாருகனும், ஹோதாவும், சுத்தனும், குடிலமற்றவனும், உதாரனும், உத்தமனும், விசுவத்தைக் காண்பவனும், பலவித நிறங்களுள்ள தேரைப் போல் இருப்பவனும், வடிவில் அழகனும், எப்பொழுதும் மானிடர்களிடம் நலமாயிருப்பவனுமான அக்கினியிடம் வேண்டுகிறேம். 2,473

# 3. வைசுவாநரன்

## 237. விசுவாமித்திரன்–காதினன்

1. அறிஞர்கள் நன்னெறியைப் பற்ற யக்ஞங்களிலே வலியனான வைசுவாநரனுக்கு ஸ்தோத்திரங்களைக் கூறுகிறார்கள். அமிருதனான அக்கினி தேவர்களைப் போற்றுகிறான். அதனால் அவன் சநாதநமான தருமங்களைப் பங்கப்படுத்தாமலிருக்கிறான்.

2. அழகான அக்கினி தூதனாகி, சோதி புவிகளின் நடுவே செல்லுகிறான். தேவர்களால் ஊக்கமாகும் ஞானச் செல்வனான அக்கினி மனிதர்களின் புரோகிதனாக அமர்ந்து தன்னுடைய சுடர்களால் யக்ஞத்தின் பரந்த ஸதனங்களை அலங்கரிக்கிறான்.

3. அறிஞர்கள் தங்கள் செயல்களால் யக்ஞங்களின் துவஜனும், சபையின் ஸாதகனுமான அக்கினியைச் சிறப்பிக்கிறார்கள். பாடுபவர்கள், அக்கினிக்குச் செய்வதற்குரிய செயல்களைச் செய்தார்கள். வழிபடுபவன் அவனிடம் சுகத்தை விரும்புகிறான்.

4. யக்ஞங்களின் தந்தையும், அறிஞர்களை ஊக்கப்படுத்துபவனும், ரித்விஜர்களின் விமானமும், ஞானமுமான அக்கினி, பலவித ரூபங்களோடு சோதி புவிகளிலே பரவுகிறான். உத்தமர்களின் நண்பனும், கவியும், கதிர்களோடு இருப்பவனுமான அவன், வழிபடுபவனால் போற்றப்படுகிறான்.

5. தேவர்கள், சலங்களில் வசிப்பவனும், எல்லாம் அறிபவனும், எங்கும் பரவுபவனும், துரிதனும், திறத்தால் சூழப்பட்டவனும், மிக்கப் பிரகாசிப்பவனும், பொன் நிறமுள்ளவனும், வைசுவாநரனும், இன்புறுத்துபவனுமான அக்கினியை இந்த உலகத்திலே இன்புறுத்தும் தேரிலே ஸ்தாபித்தார்கள். 2,478

6. யக்ஞங்கள் செய்யப்படும் தேவர்களோடும், ரித்விஜர்களோடும் சேர்ந்து, வழிபடுபவனுடைய பல வடிவமுள்ள யக்ஞச் செயலைப் பூர்த்தி செய்பவனும், தலைவனும், துரிதனும், ஈகை மனமுள்ளவனும், பகைவர்களை அழிப்பவனுமான அக்கினி, சோதி புவிகளின் நடுவே செல்லுகிறான்.



7. அக்கினியே! நாங்கள் நல்ல புதல்வர்களையும், நீண்ட ஆயுளையுமடைய, நீ தேவர்களைப் போற்றவும். உணவால் தேவர்களைத் திருப்தி செய்யவும்; தானியத்துக்காக மழையைப் பொழியவும். ஸதா விழித்திருப்பவனே! வழிபடும் மகானுக்கு நீ உணவையளிக்கவும். வினைத் திட்பனான நீ, தேவர்களாலும் அறிஞர்களாலும் விரும்பப்படுகிறாய்.

8. தலைவர்கள் உலகத்தின் தலைவனும், மகானும் அதிதியும், எப்பொழுதும் செயல்களைக் கிரமப்படுத்துபவனும், யக்ஞங்களை அறிவிப்பவனும், துரிதனுமான ஜாதவேதஸனைச் செழுமைக்காக வணக்கத்தோடு ஏத்துகிறார்கள்.

9. மிக்க ஒளியுள்ளவனும், துதியாருகனும் இன்புறுத்துபவனுமான அக்கினி மங்கலமான தேரிலே ஏறி, தன் பலத்தால் எல்லாப் பிரஜைகளையும் பற்றினான். நாங்கள் தக்கப் பாக்களால் தன் இடத்திலே பல சனங்களைப் பாலிப்பவனுடைய செயல்களைப் போற்றுவோமாக.

10. வைசுவாநரனே! நான் உன்னுடைய ஆற்றல்களைப் போற்றுகிறேன். நன்கு காண்பவனே! நீ அவற்றால் சர்வக்ஞனாகிறாய். நீ பிறந்தவுடன் சோதி புவிகளையும், புவனங்களையும் நிரப்புகிறாய். அக்கினியே! நீ தானாகவே இவற்றையெல்லாம் கிரகிக்கிறாய். 2,483

11. வைசுவாநரனுக்கு உகந்த செயல்களிலிருந்து மகத்தான செல்வம் தோன்றுகிறது. அறிஞனும், முதல்வனுமான அவன், ஊக்கத்தோடு வழிபடுபவனுக்குச் செல்வத்தைத் தருகிறான். அக்கினி மிக்க ரேதஸுள்ள பெற்றோர்களான சோதியையும் புவியையும் மேம்படுத்திப் பிறந்தான். 2,484

# 4. ஆப்பிரி சூக்தம்

## 238. விசுவாமித்திரன்-காதினன்

### ஸமிந்தனம்

1. அடிக்கடி ஒளிப்படுத்தப்படும் நீ, அனுகூல மனத்தோடு எங்களிடம் விழித்திருக்கவும். மிக்க ஒளி யோங்கும் நீ, செல்வத்தைத் தரும் நல்ல மனத்துடனாகவும். தேவனே! அக்கினியே! நீ யக்ஞத்துக்குத் தேவர்களை ஏந்தி வா. தேவர்களின் நண்பனான நீ, நண்பர்களான தேவர்களை யஜிக்கவும்.

### தநூநபாதன்

2. மித்திரனாலும், வருணனாலும், அக்கினியாலும், தினந்தோறும் மும்முறை போற்றப்படும் தநூநபாதன் மழை தோற்றுவிக்கும் இந்த யக்ஞத்தை மழை பெய்யச் செய்வானாக.

### இளை

3. விசுவத்தால் விரும்பப்படும் தோத்திரம் ஹோதாவான அக்கினியிடஞ் செல்க. இளை முதலில் யஜிக்கவும். வணக்கங்களோடு போற்றவும். பொழிபவனிடம் செல்வாளாக. எங்களால் பிரேரிக்கப்படுபவனும், போற்றத் தகுந்தவனுமான அக்கினி தேவர்களை யஜிப்பானாக.

### தருப்பை

4. யக்ஞத்தில் உங்கள் இருவருக்கும்-தருப்பைக்கும் அக்கினிக்கும்-மேலே வழி செய்யப்பட்டிருக்கிறது. சோபிக்கும் அவிகள் மேலேறுகின்றன. ஹோதாவான அக்கினி பிரகாசமாயுள்ள யக்ஞ ஸதனத்தின் நடுவிலே அமருகிறான். நாம் தருப்பையைத் தேவர்கள் அமரப் பரத்துவோமாக.

### தேவிகளான கதவுகள்

5. மனத்தால் விரும்பப்படுங்கால் விசுவத்தை ருதத்தால்-சலத்தால்-திருப்தி செய்யும் தேவர்கள் ஏழு



ஹோதாக்களின் செயல்களிலே விளங்குகிறார்கள். நர வடிவங்களோடு யக்ஞங்களிலே தோன்றும் பல தேவர்கள் எங்களுடைய இந்த யக்ஞத்துக்கு வருவார்களாக. 2,489

### உஷையும் இரவும்

6. துதியாருகர்களான இரவும் பகலும் சேர்ந்து இங்கு வருகிறார்கள். சிரிக்கும் இருவர் தேகத்திலே, நிறத்திலே வேறு வடிவமுள்ளவர்கள். அவர்களோடு, மித்திரனும் வருணனும், இந்திரனும், மருத்துக்களோடிருப்பவனும் எங்களைத் தங்கள் மகிமைகளால் இன்புறுத்துவார்களாக.

### ஹோதாக்கள்

7. நான் முதல்வர்களான இரு திவ்ய ஹோதாக்களைப் போற்றுகிறேன். ஏழு ஹோதாக்கள் ஸ்வதாவோடு அவர்களை இன்புறுத்துகிறார்கள். ருதத்தைப் போற்றுபவர்களும், விரதங்களைப் பாலிப்பவர்களும், அக்கினியை ஒளிப்படுத்துபவர்களுமான ரித்விஜர்கள். விரதங்களிலே அக்கினியையே ருதம் எனக் கூறுகிறார்கள்.

### மூன்று தேவிகள்

8. பாரதிகளோடு சேர்ந்து பாரதியும், தேவர்களோடும் மனிதர்களோடும் சேர்ந்து இளையும், அக்கினியும், ஸாரஸ்வதர்களோடு ஸரஸ்வதியும் வருவார்களாக. மூன்று தேவிகளும் இத்தருப்பையின் மீது அமர்வார்களாக.

### துவஷ்டா

9. தேவனான துவஷ்டாவே! எங்களுக்கு, வலியனும், வினைத்திட்பனும், தேவர்களை விரும்புபவனும், பிழியுங் கற்களை இசைப்பவனும், வீரனுமான புதல்வன் தோன்ற நீ இன்பமாகி, தாரகமாயும், போஷகமாயும், புகழுள்ளதுமான ரேதஸைப் புலப்படுத்தவும்.

### வனஸ்பதி

10. வனஸ்பதியே! தேவர்களை அருகில் செலுத்தவும். சாந்தப்படுத்தும் அக்கினி அவியைத் தேவர்களிடம் பிரேரிப்பானாக. சத்திய சொரூபனான அவனே ஹோதா. அவன் யஜிப்பானாக. ஏனெனில், அவன் தேவர்களின் ஜன்மங்களையறிகிறான்.

### சுவாஹா முழக்கம்

11. அக்கினியே! சொலிப்பிக்கப்பட்ட நீ, இந்திரனோடும், துரிதமாய்ச் செல்லும் தேவர்களோடும், ஒரே தேரில் ஏறி எங்களிடம் வா. உத்தமப் புதல்வர்களின் தாயான அதிதி தருப்பையின் மீது அமர்வாளாக. சுவாஹாவோடு முழங்கப்படும் அமிருதர்களான தேவர்கள் இன்பப்படுவார்களாக. 2,495

# 5. அக்கினி

## 239. விசுவாமித்திரன் - காதினன்

1. அறிஞனான அக்கினி உஷையையறிகிறான். அறிஞர்களின் வழிகளில் செல்ல எழுப்பப்படுகிறான். மிக்க விளங்கும் வாஹினி பக்தர்களால் சொலிப்பிக்கப்பட்டு இருட்டின் கதவுகளைத் திறக்கிறான்.

2. போற்றத் தகுந்த அக்கினி, மொழிகளாலும், துதிகளாலும், தோத்திரங்களாலும் வளர்கிறான். தூதனான அவன், ருதத்தின்-சூரியனின்-பல கதிர்களை விரும்பி, உஷையின் உதயத்திலே பிரகாசிக்கிறான்.

3. சலங்களின் கருவும், நண்பனும், சத்தியத்தால் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுபவனுமான அக்கினி, மநு வம்சத்தில் வந்த பிரசைகளின் நடுவே-மானிட இல்லங்களின் நடுவே-தேவர்களால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். விரும்பத் தகுந்தவனும், போற்றத் தகுந்தவனுமான அவன் உச்சத்திலே அமர்ந்திருக்கிறான். அறிஞனான அவன் பாடுபவர்களால் போற்றத் தகுந்தவனாகிறான். அவிகளைப் பெறுகிறான்.



4. அக்கினி துலக்கப்படுங்கால் மித்திரனாகிறான். மித்திரனாகி ஹோதாவாகிறான்; வருணனாகிறான்; அவன் ஜாதவேதஸன்; மித்திரன்; அத்வர்யுவாகிறான்; தமூனனாகிறான்-தான மனமுள்ளவனாகிறான். அவன் பிரேரிக்கும் வாயுவாகிறான். அவனே நதிகளுக்கும் மலைகளுக்கும் மித்திரனாகிறான்.

5. சுந்தரனான அக்கினி, பரவும் புவியின் பிரியமான முதன்மையான இடத்தைப் பாலிக்கிறான். மகானான அவன், சூரியனின் வழியான வானைப் பாலிக்கிறான். அவன் சோதி புவிகளின் நடுவிலுள்ள மருத்துக்களின் ஏழு தலைப் படைகளைப் பாலிக்கிறான். அவன் தேவர்களை மதப்படுத்தும் அவிகளைப் பாலிக்கிறான். 2,500

6. மகானும் தேவனுமான அக்கினி, அறிவதற்குரிய எல்லாப் பொருள்களையுமறிந்து, போற்றத் தகுந்ததும், பொலிவுள்ளதுமான சலத்தைச் செய்தான். வியாபகனும் உறங்குபவனுமான அக்கினியின் வடிவம் ஒளியுடனாகிறது. அவன் சலத்தை விழித்திருந்து பாலிக்கிறான்.

7. ஆர்வமுள்ள அக்கினி, பிரகாசிப்பதும், மிக்கப் போற்றப்படுவதும் விரும்பப்படுவதுமான இடத்திலே அமர்ந்திருக்கிறான். சோதியுள்ளவனும், சுத்தனும், பரந்தவனும், சுத்தப்படுத்துபவனுமான அவன், தன் பெற்றோர்களான சோதியையும் புவியையும் அடிக்கடி புதுப்பிக்கிறான்.

8. எழில்படுத்தும் சலங்கள் இறங்குங்கால் ஈரத்தால் செழித்து வளரும் ஓஷதிகளால், அவன் பிறப்பிக்கப்பட்டவுடன் உயரத்தில் ஏந்திச் செல்லப்படுகிறான். பெற்றோர்களின் அங்கத்திலுள்ள அக்கினி எங்களைப் பாலிப்பானாக.

9. துதிக்கப்பட்டு ஸமித்தால் வளர்ந்த மகானான அக்கினி, புவியின் நாபியிலே நிலைத்து வானின் வடிவத்தில் பிரகாசிக்கிறான். மித்திரனும், துதியாருகனும்,

மாதிரிசுவரனும், தூதனுமான அக்கினி தேவர்களை யக்ஞத்துக்கு ஏந்தி வருவானாக.

10. சூரியனுடைய ரசிமிகளிலிருந்து மறைக்கப்பட்டிருந்த அவி ஏந்தும் அக்கினியைக் காற்று சொலிப்பித்தவுடன் ஒளிமண்டலங்களில் உத்தமனாயிருக்கும் மகானான அக்கினி காந்தியால் சுவர்க்கத்தைத் தாங்கிறான்.

11. அக்கினியே! அவியளிப்பவனுக்குப் பசுக்களைத் தருவதும், பல செயல்களைச் சாதகமளிப்பதுமான நிலத்தை எங்களிடம் நித்தியமாயிருக்கப் புலப்படுத்தவும். எங்கள் வம்சத்திலே, புதல்வர்களும் பேரர்களும் தோன்றுவார்களாக. அக்கினியே! உன்னுடைய ஸுமதி எப்பொழுதும் எங்களிடம் விளங்குக. 2,506

## 6. அக்கினி

### 240. விசுவாமித்திரன்-காதினன்

1. தோத்திரத்தால் ஊக்கப்படும் தேவ விருப்பமுள்ள கர்த்தாக்கள் தேவர்களைப் போற்றுவதற்கான துடுப்பை ஏந்தி வருவார்களாக. அவி ஏந்தப்பட்டு தென் திசைக்கு இயங்கும் அது கீழ்த் திசைக்குச் செல்லுகிறது. நெய் நிறைந்த துடுப்பு அக்கினிக்கு அவியைத் தாங்குகிறது.

2. அக்கினியே! நீ பிறந்தவுடன் சோதியையும் புவியையும் நிரப்புகிறாய். யஜிக்கத் தக்க நீ, உன் மகிமையால் வானையும் நிலத்தையும் கடக்கிறாய். உன்னுடைய ஏழு நாக்களான சுடர்கள் போற்றப்படுக.

3. தேவ பக்தர்களும், மநு வம்சத்தில் தோன்றியவர்களும், அவிகளை ஏந்தி உன்னுடைய காந்தியுள்ள சுவாலையைப் போற்றுங்கால், வானமும் புவியும், துதியாருகத் தேவர்களும் யக்ஞத்தை நிறைவேற்ற ஹோதாவான உன்னைப் பாடுகிறார்கள்.



4. மகானும் போற்றத் தகுந்தவனுமான அக்கினி, சோதி புவிகளின் நடுவே தன் பரந்த பீடத்திலே திரமாய் அமர்ந்திருக்கிறான். ஆக்கிரமிப்பவர்களும், சூரியனின் மனைவிகளும், மூப்பற்றவர்களும், துன்பப்படாதவர்களுமான சோதியும் புவியும் மிக்கப் போற்றப்படும் அக்கினிக்குப் பாலைத் தரும் பசுக்களாகிறார்கள்.

5. அக்கினியே! மகானான உன்னுடைய செயல்கள் மிக்க மேன்மையானவை. நீ உன்னுடைய பலத்தால் சோதியையும் புவியையும் பரத்துகிறாய். நீ தூதனாகிறாய். விருஷபனே! நீ பிறந்தவுடன் மனிதர்களின் தலைவனாகிறாய். 2,511

6. அக்கினியே! நீண்ட கேசமுள்ளவையும், நெய் பொழிபவையும், சிகப்பு நிறமிருப்பவையுமான குதிரைகளைத் தேரிலே நீ யக்ஞத்துக்கு வர, கயிறுகளால் இணைக்கவும். பிறகு எல்லாத் தேவர்களையும் ஏற்றிக் கொண்டு வரவும். ஜாதவேதஸனே! அவர்களுக்கு நல்ல யக்ஞங்களை நடத்தவும்.

7. அக்கினியே! வனங்களில் வசிக்கும் நீ, உன் விருப்பம் போல் சலங்களைப் பருகி மரங்களைத் தகிக்குங்கால் உன்னுடைய ரசிமிகள் சோதி மண்டலங்களை ஒளிப்படுத்துகின்றன. நீ பழைய பல பிரகாசமான உஷைகளைப் போல் பிரகாசிக்கிறாய். துதியாருகமான ஹோதாவின் பிரகாசத்தைத் தேவர்களும் போற்றுகிறார்கள்.

8. அக்கினியே! நீ பரந்த வானிலே இன்புறும் தேவர்களோடும், சோதியின் ஒளிமண்டலத்திலே இருப்பவர்களோடும், தக்கவாறு அழைக்கப்பட்டால் வரும் துதியாருக ஊமார்களோடும், உன் தேருக்குத் தகுந்த குதிரைகளோடும்,

9. அக்கினியே! ஒரு தேரிலோ அல்லது பல தேர்களிலோ ஏறி எங்கள் முன்னே வரவும். ஏனெனில் உன் குதிரைகள் ஆற்றலுள்ளவை. யக்ஞத்தின் உணவுக்காக

முப்பத்து மூன்று தேவர்களை அவர்களுடைய மனைவிகளோடு ஏற்றி வரவும். ஸோமத்தால் அவர்களை மதப்படுத்தவும்.

10. செழுமைப்பட எல்லா யக்ஞங்களிலும் பரந்த சோதியாலும் புவியாலும் போற்றப்படும் அவனே, தேவர்களின் ஹோதாவாகிறான். ருதத்தில் பிறந்தவனும், ருதத்தோடிருப்பவனும், எழிலுள்ளவனும், சத்திய சொருபனுமான அக்கினி, யக்ஞங்களைப் போல் அனுகூலமாய் இயங்குகிறான்.

11. அக்கினியே! அவியளிப்பவனுக்குப் பசுக்களைத் தருவதும், பல செயல்களை நடத்த சாதகமாயிருப்பதுமான நிலத்தை எங்களிடம் நித்தியமாயிருக்க அளிக்கவும். எங்கள் வமிசத்தில், புதல்வர்களும் பேரர்களும் தோன்றுவார்களாக. அக்கினியே! உன்னுடைய ஸுமதி எங்களிடம் விளங்குக. 2,517

## 7. அக்கினி

### 241. விசுவாமித்திரன்–காதினன்

1. நீல முதுகுள்ளவனும், எல்லாம் தாங்குபவனுமான அக்கினியின் ரசிமிகள் எழுகின்றன. அவை, தாய்மார்களான சோதியிலும், புவியிலும், ஏழு வாணிகளிலும், நதிகளிலும் பரவுகின்றன. அவனைச் சூழ்ந்துள்ள சோதியும் புவியும் அவனோடு இசைந்து நிலவுகிறார்கள் – யஜிக்கும் தலைவனுக்கு – தீர்க்காயுளைத் தருகிறார்கள்.

2. சோதியில் வசிக்கும் விருஷபனிடம் பசுக்களும், பெட்டைக் குதிரைகளும் இருக்கின்றன. அவன் இனிய செல்வமேந்தும் தேவிகளிடம் வந்தான். பொழிபவனான அக்கினியின் அசுவங்கள் வானிலே வியாபகமாகி, பால் தரும் பசுக்களாகின்றன. அவன் இனிய சலத்தை ஏந்திச் செல்லும் தேவிகளான நதிகளிடஞ் செல்லுகிறான். ருதத்தின் ஸ்தானத்தில் சயனிக்க விரும்புபவனும், உன் சுவாலைகளைச் சாந்தப் படுத்துபவனுமான உன்னை–அக்கினியை, ஒரு பசு–வாக்கு – பணிகிறது– போற்றுகிறது.



3. செல்வங்களின் தலைவன் தன்னுடைய நன்கு பயிலப்பட்ட குதிரைகளின் மீது ஏறினான். நிதிகளை ஆய்ந்தெடுப்பவனும், அறிஞனும், கருப்பு முதுகுள்ளவனும், பல அங்கங்களுள்ளவனுமான அக்கினி, அவற்றின்–குதிரைகளின், துரித வேகத்தை – சதா செல்லும் சக்தியை–பாலிக்கக் குதிரைகளுக்கு இளைப்பாறும் இடத்தைத் தந்தான்.

4. வானின் அருகே பல வடிவங்களோடு பிரகாசிப்பவனும், உலகத்தைத் தாங்குபவனும், தேயாதவனும், துவஷ்டாவின் மகத்தான புதல்வனுமான அக்கினியை நதிகள் பலப்படுத்தி ஏந்திச் செல்லுகின்றன. அக்கினி ஒரு மனைவியுடனிருக்கும் கணவனைப் போல் சோதி புவிகளிடமிருக்கிறான்.

5. சனங்கள் பொழிபவனும், துன்ப ரகிதனுமான அக்கினியின் ஆதரவை–சுகத்தை அறிகிறார்கள். அக்கினியின் கட்டளைகளிலே களிக்கிறார்கள். அவர்களுடைய மகத்தான தோத்திரங்கள் இளையைப் போல் போற்றத் தகுந்தவை. பிரகாசிப்பவையும், காந்தியுமுள்ள அவை சோதியை ஒளிப்படுத்துகின்றன. 2,522

6. மழையைப் பொழிபவன் இரவை எழில் படுத்த தன் சொந்த காந்தியை வழிபடுபவனிடம் செலுத்துங்கால், மனிதர்கள் மகத்தான சோதியையும் புவியையும் முழங்கிப் போற்றும் போது அவர்கள் அக்கினிக்கு இன்பத்தைத் தருகிறார்கள்.

7. ஏழு விப்பிரர்கள், ஐந்து அத்வர்யுக்களோடு துரிதமான அக்கினிக்குச் செய்யப்பட்ட பிரியமான இடத்தைப் பாலிக்கிறார்கள். தேய்வில்லாத தேவர்கள்– துதிப்பவர்கள்–கீழ்த்திசையிலே முகங்களைச் செலுத்தி–

ஸோமத்தைச் சொரிந்து, தேவர்களுடைய யக்ஞங்களை நடத்துங்கால் இன்புறுகிறார்கள்.

8. நான் இரு முதன்மையான தேவ ஹோதாக்களைப் போற்றுகிறேன். ஏழு ஹோதாக்கள் சுவதாவோடு இன்புறுகிறார்கள். இவர்கள் ருதமான அக்கினியைப் புகழ்ந்து விரத பாலகர்களாக ருதத்தை நினைத்து ருதத்தையே பேசுகிறார்கள்.

9. தேவ ஹோதாவான அக்கினியே! மகானும், ஜயமுள்ளவனும், அற்புதனும், பொழிபவனுமான உனக்கு, பரந்து மிக்கப் படரும் ரசிமிகள் உனக்குப் பொழிகின்றன. எல்லாவற்றையும் அறிபவனும், இன்பந் தருபவனுமான நீ. மகத்தான தேவர்களையும், சோதியையும் புவியையும் இங்கு ஏந்தி வா.

10. எப்பொழுதும் சலனமாகும் அக்கினியே! மிருந்த அவிகளோடும், உத்தமச் சொற்களோடும், உத்தமச் சின்னங்களோடும், செல்வதானத்தோடும் உஷைகள் எங்களுக்கு உதிப்பார்களாக. உன் பரவும் சுவாலையின் சக்தியால், மதிப்புக்குரிய வழிபடுபவனின் பாபத்தை நீக்கவும். 2,527

11. அக்கினியே! அவியளிப்பவனுக்குப் பசுக்களைத் தருவதும், பல செயல்களை நடத்த சாதகமாயிருப்பதுமான நிலத்தை எங்களிடம் நித்தியமாயிருக்க அளிக்கவும். எங்கள் வமிசத்தில் புதல்வர்களும் பேரர்களும் தோன்றுவார்களாக. அக்கினியே! உன்னுடைய ஸுமதி எங்களிடம் விளங்குக. 2,528

## 8. யூபம்

### 242. விசுவாமித்திரன்—காதினன்

1. வனஸ்பதியே! தேவபக்தர்கள், உன்னை யக்ஞத்தில் திவ்ய நெய்யால் காப்பிடுகிறார்கள். நீ உயர்ந்து நின்றாலும் அல்லது உன்னுடைய தாயான புவியினங்கத்தில் சயனித்திருந்தாலும், நீ எங்களுக்குச் செல்வங்களை அளிக்கவும்.



2. நீ சொலிப்பிக்கப்பட்ட அக்கினியின் கீழ்த்திசையிலே நின்று, தேயாத சுகத்தின் மூலமான உணவையளித்து, உத்தம சந்தானத்தையும் தந்து, தூரத்திலே எங்களுடைய பகைவனை விலக்கி, மகத்தான சௌபாக்கியத்துக்காக உயர்ந்து நிற்கவும்.

3. வனஸ்பதியே! நீ புவியின் இந்த உத்தம ஸ்தானத்திலே போற்றப்படவும். நீ ஸுமதியினால் அளக்கப்பட்டு உயர்ந்து நிற்கவும். யக்ஞத்தை நடத்துபவனுக்கு உணவை யளிக்கவும்.

4. நல்லாடை யணிந்தவனும், மாலைகளைத் தரிப்பவனும் இளைஞனுமான யூபன் வருகிறான். அவன் பிறப்பிக்கப்பட்டவுடன் மிக்கப் புகழோடாகிறான். அவனைப் பேரறிஞர்களும், மனத்தோடு தேவர்களை விரும்புபவர்களும், தியானிப்பவர்களும், கவிகளும் உயர்த்துகிறார்கள்.

5. வனத்தில் பிறந்து மனிதர்களால் நடத்தப்படும் யக்ஞத்திலே வளர்ந்து வண்ணப்பட்ட அவன், தினங்களை நலப்படுத்த மீண்டும் தோற்றுவிக்கப்படுகிறான். 2,533

### யூபங்கள்

6. வனஸ்பதியே! தேவர்களை விரும்பும் மனிதர்களால் வெட்டப்பட்டு, பரசுவால் செதுக்கப்பட்ட யூபங்களும், எல்லாப் பகுதிகளோடு பிரகாசித்து நிற்கும் யூபங்களும், பிரசையுடன் செல்வத்தை எங்களுக்கு அளிக்க.

7. புவியின் மீது வெட்டி வீழ்த்தப்பட்ட யூபங்களும், அறிஞர்களால் இழைக்கப்பட்டவையும், யக்ஞத்தைப் பூர்த்தி செய்பவையுமான யூபங்களும், விரும்பத் தகுந்த அவியைத் தேவர்களிடம் செலுத்துக.

### விசுவே தேவர்கள்

8. யக்ஞத் தலைவர்களும், ஆதித்தியர்களும், ருத்திரர்களும், வசுக்களும், சோதியும் புவியும், நிலமும் வான

மும், ஐக்கியத் தோடிருக்கும் எல்லாத் தேவர்களும், எங்கள் யக்ஞத்தைப் பாலிப்பார்களாக. அவர்கள் யக்ஞக் கொடியை உயர்த்துவார்களாக.

**யூபங்கள்**

9. நீண்ட வரிசையில் பறக்கும் அன்னங்களைப் போல் யூபங்கள் ஒளி அணிந்து, அணிவகுத்து எங்களிடம் வந்திருக்கின்றன. அவை அக்கினியின் கீழ்த்திசையில் அறிஞர்களால் நிறுத்தப்பட்டவை. பிரகாசமுள்ள அவை தேவர்களுடைய வழியிலே செல்லுகின்றன.

10. எழில் படுத்தும் காப்புக்களோடுள்ள அந்த யூபங்கள் காண்பதற்குக் கொம்புகளுள்ள பிராணிகளின் கொம்புகளைப் போல் தோன்றுகின்றன. ரித்விஜர்களால் கூறப்படும் துதிகளைக் கேட்கின்றன. அவை போர்களிலே எங்களைப் பாலிக்க.

11. வனஸ்பதியே! மகத்தான சௌபாக்கியத்துக்காகக் கூரிய கோடரியால் எடுத்து வரப்பட்ட நீ, நாங்கள் ஆயிரங்களோடேற, நீ நூறு கிளைகளோடு ஏறவும்.
2,539

## 9. அக்கினி

### 243. விசுவாமித்திரன்-காதினன்

1. மானிட நண்பர்களான நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக, தேவனும், சலங்களின் பேரனும், மிக்கச் செல்வனும், மிக்கச் சோதியுள்ளவனும், சேரத் தக்கவனும், துன்பமற்றவனுமான உன்னை விரும்புகிறோம்.

2. அக்கினியே! நீ வனங்களை விரும்பும் தாய்மார்களான சலங்களிடம் சென்றாய். ஆனால் அங்கு தூரத்தில் தாமதஞ் செய்வதை சகிக்க இயலவில்லை. ஆனால் ஒரு விநாடியிலே எங்களிடமிருக்கிறாய்.

3. நீ திருப்தியை ஏந்திச் செல்ல விரும்புகிறாய். ஆதலால் நீ எங்களிடம் அநுகூலமாகிறாய். உன்னைப்



பாலிக்கும் நண்பர்களில் சிலர் உன்னை முந்துகிறார்கள். வேறு சிலர் உன்னைச் சுற்றி அமர்கிறார்கள்.

4. துரோகமற்றவர்களும், நீண்ட ஆயுளுமுள்ள தேவர்கள், நிலையாயிருப்பவர்களும், சேர்ந்திருப்பவர்களுமான பகைவர்களை எதிர்க்க நேரிடுங்கால், குகையிலே சிங்கத்தைப் போல் சலங்களில் மறைந்திருந்த அக்கினியைக் கண்டார்கள்.

5. மாதரிசுவரன் தூரத்திலிருந்து தேவர்களுக்காகத் தானே மறைந்திருப்பவனும், மந்தனத்தால் பிறப்பிக்கப்படுபவனுமான அக்கினியை, ஓடிப்போன புதல்வனை மீட்டு வரும் தந்தையைப் போல் ஏந்தி வந்தான்.
2,544

6. அவிகளை ஏந்துபவனே! மிக்க இளைஞனே! மானிடர்களின் நண்பனான நீ, யக்ஞங்களையெல்லாம் உன் ஆற்றலால் பாலிக்குங்கால் உன்னை மனிதர்கள் இங்ஙனம் தேவர்களிடமிருந்து பெற்றார்கள்.

7. அக்கினியே! உன்னைப் போற்றும் செயல் மங்களத்தைத் தருகிறது. அர்ப்பணைச் செல்வப்படுத்துகிறது. ஆதலால் இரவின் துவக்கத்திலே பசுக்களும் மனிதர்களும் உன்னைப் போற்றுகிறார்கள்.

8. சுந்தர யக்ஞங்களை அறிபவனும், சுத்தப்படுத்தும் சோதியோடு எரிபவனும், துரித ஞான தூதனும், தீவிரனும், பழையவனும், துதிக்கத் தகுந்தவனுமான தேவனை-அக்கினியை-போற்றுங்கள்.

9. 3,339 தேவர்கள் அக்கினியைப் போற்றினார்கள். அவனுக்கு நெய்க் காப்பிட்டார்கள். அவனுக்குத் தருப்பையைப் பரத்தினார்கள். அவனை அங்கு ஹோதாவாக அமர்த்தினார்கள். 2,548

## 10. அக்கினி

### 244. விசுவாமித்திரன்-காதினன்

1. அக்கினியே! அறியும் மானிடர்கள், பிரசைகளின் அரசனும், தேவனுமான உன்னை யக்ஞத்திலே ஒளிப்படுத்துகிறார்கள்.

2. அக்கினியே! அவர்கள் உன்னை யக்ஞங்களிலே ஹோதாவாகவும், ரித்விஜனாகவும் போற்றுகிறார்கள். நீ உன்னுடைய சொந்த இடத்திலே ருதபாலகனாகப் பிரகாசிக்கவும்.

3. ஜாதவேசனான உனக்கு அவிகளைத் தருபவன் தீரத்திண்மையைப் பெறுகிறான் அவன் செழிக்கிறான்

4. ஏழு ஹோதாக்களால் அலங்காரமாகும் யக்ஞத்துவஜனான அக்கினி அவியளிப்பவனுக்காக இங்கு தேவர்களோடு வருவானாக.

5. படைப்பவனுக்குப் போல் ஹோதாவான அக்கினிக்குப் பழைய மகத்தான தோத்திரத்தை விப்பிரர்களின் ஒளிச்சுடர்களை ஊக்கப்படுத்தக் கூறுங்கள். 2,553

6. அவன் இன்னும் மிக்கத் துதியாருகனாகப் பிறக்கவும், எங்களுக்கு மிகுந்த உணவையும் செல்வங்களையும் அளிக்கத் தோன்றவும், நம்முடைய துதிகள் அக்கினியைப் போற்றுக.

7. அக்கினியே! நீ யக்ஞத்திலே மிக்க யஜிக்கத் தகுந்தவன். நீ வழிபடும் பக்தனுக்காகத் தேவர்களை யஜிக்கவும். ஹோதாவான நீ, பகைவர்களை ஜயித்துப் பிரகாசிக்கிறாய்.

8. எங்களை சுத்தப்படுத்துபவனான நீ, சிறப்புள்ளதும், மிக்க வீரத்தன்மையுமுள்ள செல்வத்தை எங்களுக்களிக்கவும். க்ஷேமத்துக்காக உன்னைப் போற்றுபவர்களின் அருகிலிருக்கவும்.

9. விப்பிரர்களும், விழித்திருப்பவர்களும், அறிஞர்களும், அவி ஏந்துபவனும், அமுதனும், பலத்தால் தோன்றி வளர்பவனுமான உன்னை ஒளிப்படுத்துகிறார்கள். 2,557

## 11. அக்கினி

### 245. விசுவாமித்திரன்

1. ஹோதாவும், புரோகிதனும் நன்கு காண்பவனுமான அக்கினி கிரமமாய்ச் செலுத்தப்படும் யக்ஞத்தை அறிகிறான்.



2. அவிகளை ஏந்துபவனும், அமிருதனும், அவிகளை விரும்புபவனும், தூதனும், யக்ஞங்களைப் பெறுபவனுமான அக்கினி செயலோடு சேர்ந்து செல்லுகிறான்.

3. யக்ஞத்தின் பழைய கொடியும், தாரகனுமான அக்கினி செயலால் அறிகிறான். இந்த யாகத்தின் நோக்கத்தை உணர்கிறான்.

4. அவர்கள், பலத்தின் மகனும், நித்தியப் புகழுள்ளவனும், பிறக்கும் அனைத்தையுமறிபவனுமான அக்கினியை அவியை ஏந்துபவனாகச் செய்தார்கள்.

5. மனிதர்களை முந்துபவனும், விழித்திருப்பவனும், அவிகளை ஏந்துபவனுமான அக்கினி எப்பொழுதும் புதியவனாகிறான்; துன்பமற்றாகிறான். 2,562

6. மிகுந்த உணவையளிப்பவனும், தேவர்களைப் பாலிப்பவனுமான அக்கினி, எல்லாப் பகைவர்களையும் எதிர்க்கும் திறமுள்ளவனாகிறான்.

7. சுத்தப்படுத்தும் சோதியுள்ளவனும், அவி ஏந்துபவனுமான அக்கினிக்கு அவியளிக்கும் மானிடன் மனையையும் உணவுகளையும் பெறுகிறான்

8. ஜாதவேதஸனான அக்கினியை விப்பிரர்களான நாங்கள் துதிகளால் துதித்து, எல்லா நல்ல பொருள்களையும் பெறுவோமாக.

9. அக்கினியே! நாங்கள் போர்களிலே எல்லா உயர்ந்த பொருள்களையும் பெறுவோமாக. ஏனெனில் உன்னில் எல்லாத் தேவர்களும் இணைந்திருக்கிறார்கள். 2,566

## 12. இந்திராக்கினிகள்

### 246. விசுவாமித்திரன்–காதினன்

1. இந்திராக்கினிகளே! எங்கள் துதிகளால் சோதியிலிருந்து எடுத்து வரப்பட்ட இந்த விரும்பத் தகுந்த

ஸோமத்துக்கு வாருங்கள். எங்கள் செயலால் பிரேரிதமாகி நீங்கள் இதைப் பருகுங்கள்.

2. இந்திராக்கினிகளே! வழிபடுபவனோடு சேர்ந்துள்ளதும், சேதனமளிப்பதுமான யக்ஞம் உங்களிடம் வருகிறது.

3. யக்ஞத்தின் சக்தியால் நான் அறிஞர்களை விரும்பும் இந்திராக்கினிகளைப் பற்றுகிறேன். இங்கு அவர்கள் ஸோமத்தால் திருப்தியாவார்களாக.

4. நான் பகைவர்களைத் துன்புறுத்துபவர்களும், விருத்திரனை வீழ்த்துபவர்களும், ஜயிப்பவர்களும், ஜயிக்கப்படாதவர்களும், மிக்க உணவைத் தருபவர்களுமான இந்திராக்கினிகளை அழைக்கிறேன்.

5. இந்திராக்கினிகளே! உங்களை ஹோதாக்களும், தோத்திரமறிந்தவர்களும், உத்கரதாக்களும் உங்களைப் பாடுகிறார்கள். நான் உணவுக்காக உங்களை நாடுகிறேன் 2,571

6. இந்திராக்கினிகளே! நீங்கள் தாஸர்களால் பாலிக்கப்பட்டிருந்த தொண்ணூறு கோட்டைகளை ஒரு மகத்தான செயலால் இடித்தீர்கள்.

7. இந்திராக்கினிகளே! வழிபடுபவர்கள் ருத வழிகளை அனுசரித்து எங்கள் யக்ஞத்தில் இருக்கிறார்கள்.

8. இந்திராக்கினிகளே! உங்களிடம் ஆற்றல்களும் உணவுகளும் சேர்ந்து நிலைக்கின்றன. ஆதலால் மழை பெய்யும் நன்மையும் உங்களிடம் சேமிக்கப்பட்டிருக்கிறது.

9. இந்திராக்கினிகளே! சோதியை ஒளிப்படுத்தும் நீங்கள் போர்களிலே ஜயித்து, பொலிவுடன் தோன்றுங்கள். உங்களுடைய வீரத்தன்மை – ஜயத்தை – புலப்படுத்துகிறது. 2,575



# 13. அக்கினி

## 247. ரிஷபன்—விசுவாமித்திரனின் புதல்வன்

1. உங்களுடைய தேவனான அக்கினி போற்றப்பட்டு எங்களிடம் தேவர்களோடு வந்து தருப்பையின் மீது அமர அவனுக்கு உத்தமத் துதிகளைக் கூறுங்கள்.

2. ருதத்தைக் கூறும் அக்கினியின் வசமே சோதியும் புவியுமிருக்கின்றன. பாலிக்கும் தேவர்கள் அக்கினியின் பலத்தைப் போற்றுகிறார்கள். அவியளிப்பவர்கள் அவனைப் பாடுகிறார்கள். செல்வங்களை விரும்புபவர்கள் பாலனத்துக்கு அவனையே பற்றுகிறார்கள்.

3. விப்பிரனான அக்கினி யக்ஞஞ் செய்பவனை நடத்துகிறான். அவன் யக்ஞங்களைக் கிரமப்படுத்துகிறான். நீங்கள் செல்வத்தைத் தருபவனும், அளிப்பவனும், உங்களுக்கு நலத்தைச் செய்பவனுமான அவனைப் போற்றுங்கள்.

4. நாங்கள் ஆதரவுடன் வாழ, அக்கினி, செழிக்கும் மனைகளை எங்களுக்களிப்பானாக. அங்கு அவனிடமிருந்து அபரிமிதமான செல்வம் சோதியிலிருந்தோ, புவியிலிருந்தோ, சலங்களிலிருந்தோ எங்களுக்குத் தோன்றுக.

5. வழிபடுபவர்கள், ஒளியுள்ளவனும், ஒப்பற்றவனும், தேவர்களின் ஹோதாவும், மனிதர்களைப் பாலிப்பவனுமான அக்கினியை யஜிக்க, அவனுடைய செல்வந் தரும் யக்ஞங்களால் அனலை ஒளிப்படுத்துகிறார்கள். 2,580

6. தேவர்களை அழைக்கும் நீ, எங்களுடைய தோத்திரத்தையும், துதிகளையும் பாலித்துப் பூர்த்தி செய்யவும். அக்கினியே! காற்றுக்களோடு செழிப்பவனும், ஆயிரங்களைத் தருபவனுமான நீ, எங்களுடைய சுகத்தைச் செழிப்பிக்கவும்.

7. அக்கினியே! நீ எங்களுக்கு ஆயிரக்கணக்காயிருப்பதும், புத்திரப் பௌத்திரர்களுள்ளதும், புட்டி

யளிப்பதும், பிரகாசிப்பதும், மிக்க வீரத்தன்மையைத் தோற்றுவிப்பதும், அபரிதமாயிருப்பதும், தேயாதிருப்பதுமான செல்வத்தை யளிக்கவும். 2,582

## 14. அக்கினி

### 248. ரிஷபன்—விசுவாமித்திரனின் புதல்வன்

1. தேவர்களின் ஹோதாவும், வழிபடுவனை இன்புறுத்துபவனும், ஸத்தியனும், தேவர்களை யஜிப்பவனும், மிக்க அறிஞனும், படைப்பவனுமான அக்கினி, நம்முடைய யக்ஞங்களில் இருக்கிறன். பலத்தின் மகனும், மின்னலைத் தேராக அடைந்தவனும், சுவாலையான கேசமுள்ளவனுமான அவன், தன் புகழைப் புவியிலே புலப்படுத்துகிறன்.

2. நான் சத்தியத்தைப் பாலிக்கும் உனக்கு, வணக்க மொழிகளைக் கூறுகிறேன். நீ அவற்ருல் இன்புறவும், வலியஞன உனக்கு, யக்ஞங்களை விளக்குபவனுமான உனக்கு, அவை கூறப்படுகின்றன. அறிஞனை நீ, அறிஞர்களை ஏந்தி வா. யக்ஞாருகஞன நீ, எங்களுடைய பாலனத்துக்காகத் தருப்பையின் மீது நடுவிலே உட்காரவும்.

3. அக்கினியே! தங்கள் பலத்தைப் புலப்படுத்தும் இருவரான இரவும் பகலும், காற்றின் வழிகளால் துரிதமாய் வருவார்களாக. மானிடர்கள் பழையவனை அவிகளால் அலங்கரிக்குங்கால் தேரின் இரு பீடங்களில் இருப்பவர்களைப் போல் இரவும் பகலும் மனையை நாடுகிருர்கள்.

4. பலத்தின் மகனே! வலியஞன அக்கினியே! நீ சூரியஞக நின்று மானிடர்களுக்கு உன் ஒளிக் கதிர்களை வீசுங்கால், உனக்கு மித்திரனும், வருணனும், எல்லா மருத்துக்களும் துதியைக் கூறுகிருர்கள்.

5. நாங்கள் உயர்த்திய கைகளோடு வணக்கத்துடன் உன்னை அணுகி இன்று எங்கள் அவியையளிக்கிரேம். விப்பிரஞன நீ. ஊக்கமுள்ள மனத்தோடு, சலிக்காத தோத்திரத்தோடு தேவர்களை யஜிக்கவும். 2,587



6. பலத்தின் மகனே! உன்னிடமிருந்து, வழிபடும் அறிஞனுக்குப் பல பாலனங்களும், ஆற்றல்களும் தோன்றுகின்றன. அக்கினியே! எங்களுக்கு அபரிமிதமான செல்வத்தையும், சத்தியத்தைப் பாலிப்பவனும், வஞ்சகமொழியற்றவனுமான புதல்வனை அளிக்கவும்.

7. மானிடர்களான நாங்கள், மிக்க வலியனும், தேவனும், ஸர்வக்ஞனுமான உனக்கு யக்ஞத்திலே அளிக்கப்படும் அவிகளே இவை. நல்ல தேருள்ள வழிபடுபவனை யெல்லாம் அறிந்துகொள்ளவும். அமிருதனே! எங்களால் இங்கு அளிக்கப்படும் அனைத்தையும் சுவைக்கவும். 2,589

## 15. அக்கினி

### 249. உத்கீலன்—காத்யன்

1 பரந்த சோதியோடு பிரகாசிக்கும் நீ, பகைவர்களான அரக்கர்களையும், அரக்கிகளையும், பிசாசிகளையும் விலக்கவும். நான் சுகத்தைத் தருபவனும், மகானும், சுலபமாயழைக்கப்படுபவனுமான அக்கினியின் இன்பத்தைத் தரும் தலைமையில் இருப்பேஞக.

2. நீ இன்று உஷையின் உதயத்திலும், சூரியன் உதித்தவுடனும் எங்களுடைய பாலகஞயிருக்கவும். அக்கினியே! தேகத்தோடு தோற்றுவிக்கப்படும் நீ, என்னுடைய நித்திய ஸ்தோமத்தால், புதல்வனிடம் தந்தையைப் போல் இன்புறவும்.

3. விருஷபனே! அக்கினியே! மனிதர்களைக் காண்பவனும், இருட்டிலே துலங்குபவனுமான நீ, கிரமமாய் மிருந்த சுவாலைகளோடு பிரகாசிக்கவும். எங்களை நயத்துக்குச் செலுத்தவும். வறுமையிலிருந்து கடத்தவும். மிக்க இளைஞனே! விரும்பும் எங்களுக்குச் செல்வங்களை யளிக்கவும்.

4. அக்கினியே! ஜயிக்கப்படாதவனும், பொழிபவனுமான நீ, பகைவர்களுடைய எல்லா நகரங்களையும், அவர்களுடைய உத்தமச் செல்வங்களையும், நன்ருய் ஜயித்துப் பிரகாசிக்கவும். வழிகாட்டும் உத்தமனும், ஜாதவேதஸனுமான நீ, எங்களுக்கு மகத்தான முதன்மையான பாலனமளிக்கும் யக்ஞத்தின் தலைவனுயிருக்கவும்.

5. உலகத்தையழிப்பவனுமான ஒளியும் அறிவுமுள்ள நீ, தேவர்களைப் போற்ற பல யக்ஞங்களைக் குற்றமில்லாமல் நடத்தவும். செல்வத்தைக் குவிக்கும் தேரைப் போல் பலத்தை ஏந்தி வா. அக்கினியே! அழகர்களான சோதியையும் புவியையும் ஏந்தி வா. அழகான சோதியையும் புவியையும் ஒளிப்படுத்தவும். 2,594

6. அக்கினியே! விருஷபனே! எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்து எங்களைச் செழிப்பிக்கவும். ஆற்றல்களை ஊக்கப்படுத்தவும். சோதியையும் புவியையும் மிக்கப் பால் பொழியச் செய்யவும். தேவனே! நீ தேவர்களோடு சேர்ந்து மிக்கக் காந்தியோடு பிரகாசிக்கிருய். எந்த மானிடன் தீமையும் எங்களைத் தடைப்படுத்தாமலிருக்க.

7. அக்கினியே! அவியளிப்பவனுக்குப் பசுக்களைத் தருவதும், பல செயல்களை நடத்த சாதகமாயிருப்பதுமான நிலத்தை எங்களிடம் நித்தியமாயிருக்க அளிக்கவும். எங்கள் வம்சத்திலே புதல்வர்களும் பேரர்களும் தோன்றுவார்களாக. அக்கினியே! உன்னுடைய ஸுமதி எங்களிடம் விளங்குக. 2,596

## 16. அக்கினி

### 250. உத்கீலன்-காத்யன்

1. இந்த அக்கினி வீரத்துக்கும் மகத்தான சௌபாக்கியத்துக்கும் தலைவனுயிருக்கிருன். அவன் பசுக்களும் புதல்வர்களுமுள்ள செல்வத்துக்குத் தலைவனு



யிருக்கிருன். விருத்திரனைக் கொல்பவர்களுக்குத் தலைவனுயிருக்கிருன்.

2. தலைவர்களும், களத்திலே பகைவர்களை ஜயிப்பவர்களும், தினந்தோறும் எதிரிகளைத் தாழ்த்துபவர்களும் சுகத்தைத் தரும் செல்வங்களிருப்பவர்களுமான மருத்துக்களான நீங்கள், எங்கள் செல்வத்தைச் செழிப்பிக்கும் இந்த அக்கினியைப் போற்றுங்கள்.

3. செல்வனுன அக்கினியே! பொழிபவனுன நீ, எங்களை வலிமையும், பல புதல்வர்களும், ஆரோக்கியமும் ஆனந்தமுமுள்ள செல்வங்களோடு செழிப்பிக்கவும்.

4. படைப்பவன்-செயலாளன் எல்லா உலகங்களிலும் பரவுகிருன். ஆற்றலுள்ள செயலாளன், எங்களுடைய அவிகளைத் தேவர்களிடம் எடுத்துச் செல்லுகிருன். அவன் வழிபடுபவர்களோடிருக்கிருன். மனிதர்களின் தோத்திரங்களிலும், வீரந் தோன்றும் போரிலும் பாலிக்கப் புலனுகிருன்.

5. அக்கினியே! எங்களை வறுமையில் செலுத்தாதே. வீரப் புதல்வரின்மையில் சாய்க்காதே. பலத்தின் மகனே! பசுக்களின்மையிலும் நிந்தையிலும் உட்படுத்தாதே. எங்கள் பகைவர்களை விலக்கவும்.

6. மிகுந்த செல்வமுள்ளவனே! அக்கினியே! நீ யக்ஞத்திலே மகத்தான புத்திர பௌத்திரர்களையும் உணவையும் தாங்குகிருய். அவற்றை எங்களுக்களிக்கவும். மிகுந்த புகழுள்ளவனே! செல்வங்களோடும், ஏராளமான பொருள்களோடும் சுகத்தை ஏந்தி வந்து எங்களுக்குப் பொழியவும். 2,602

## 17. அக்கினி

### 251. கதன் வைசுவாமித்திரன்

1. பலரால் போற்றத் தகுந்தவனும், சுடர்கேசமுள்ளவனும், நெய்யால் சுத்தப்படுபவனும், சுத்தஞ்

செய்பவனும், உத்தம யக்ஞமுள்ளவனும், தருமனுமான அக்கினி முதலில் கிரமமாய்ச் சொலிப்பிக்கப் படுங்கால் அவன் தேவர்களை யஜிக்க அவிகளால், அஞ்சனங்களால் அலங்காரமாகிறான்.

2. அக்கினியே! நீ புவிக்காக அவியையளித்தது போல், அறிஞனும், ஜாதவேதஸனுமான நீ, சோதிக்காக அவியை யளித்தது போல் இந்த அவியால் தேவர்களை யஜிக்கவும். நீ மநுவுக்குச் செய்தது போல் இன்று இந்த யக்ஞத்தைப் பூர்த்தி செய்யவும்–நிறைவேற்றவும்.

3. ஜாதவேதஸனே! உன் ஆயுசுக்கள் மூன்று இருப்புக்கள்–இருக்கைகள்-நெய், ஓஷதி-ஸோமங்களால் கற்பிதமாகின்றன. அக்கினியே! உனக்குத் தாய்மார்களான மூன்று உஷைகள் இருக்கிறார்கள். நீ அவர்களோடு தேவர்களுக்கு அவியை யளிக்கவும். நீ அறிந்து யக்ஞத்தை நடத்துபவனுக்கு சுகத்தைத் தருபவனாகவும்.

4. ஜாதவேதஸனே! போற்றும் நாங்கள் மிக்க ஒளியுள்ளவனும், மிக்க அழகனும், துதிக்கத் தகுந்தவனுமான அக்கினியாம் உன்னை அவிகளோடு வணங்குகிறோம். தேவர்கள் அமிருதத்தின் நாபியும், இன்பத்தில் பற்றற்றிருப்பவனும், அவிகளை ஏந்துபவனுமான உன்னைத் தூதனாகச் செய்தார்கள்.

5. பூர்வத்தில் உனக்கு முன்னதாகவே அந்த ஹோதா இருந்தான். அவன்–சோதியிலுள்ள அக்கினி–யஜிப்பதில் சிறந்தவன். அவன் சோதியிலும் புவியிலும் விளங்கி, அமர்ந்து, சுவதாவோடு வழிபடுபவர்களுக்கு சுகத்தைத் தருபவனாயிருந்தான். அறியும் நீ, பூர்வத்திலிருந்த அந்த அக்கினியின் தருமத்தையனுசரித்துத் தேவர்களை யஜிக்கவும். இங்ஙனம் இந்த யக்ஞத்தைத் தேவர்கள் ஏற்கத் திறப்படுத்தவும். 2,607



# 18. அக்கினி

## 252. கதன் வைசுவாமித்திரன்

1. அக்கினியே! நீ எங்களிடம் வருங்கால் நீ நல்ல மனமுடனாகவும். நண்பனிடம் நண்பனைப் போலும், புதல்வனிடம் பெற்றோர்களைப் போலும், நல்லவனாகவும். மனிதர்கள், மனிதர்களுக்குப் பலவிதத் துரோகங்களைச் செய்பவர்கள். ஆதலால் நீ எங்களை எதிர்க்கும் பகைவர்களைப் பற்பப்படுத்தவும்.

2. அக்கினியே! எங்கள் அருகிலிருக்கும் நட்பற்றவர்களைப் பற்பப்படுத்தவும். போற்றாத பகைவனின் சாபத்தைப் பற்பப்படுத்தவும். வசுவே! அறியும் நீ, அறிவிலியை–நீதியற்றவனை–பற்பப்படுத்தவும். மூப்பற்றவையும், எங்கும் பரவுபவையுமான உன்னுடைய சுடர்கள் உன்னைச் சூழ்க.

3. அக்கினியே! செல்வத்தை விரும்பும் நான், உன்னை வேகப்படுத்தவும், வலிமைப்படுத்தவும், உனக்கு நெய்யோடும் ஸமித்தத்தோடும் அவியையளிக்கிறேன். நான் என்னால் இயன்ற வரை உன்னைத் தோத்திரத்தால் துதிக்கிறேன். இந்தத் துதி நூறு செல்வங்களையடைய துதிக்கிறேன்.

4. அக்கினியே! பலத்தின் மகனே! நீ போற்றப் படுங்கால் உன் காந்தியோடு மேலே ஏறவும். துதியைச் செய்யும் விசுவாமித்திரர்களுக்கு மிகுந்த உணவையும் செல்வத்தையுமளிக்கவும். அவர்களை நோயிலிருந்தும் விபத்திலிருந்தும் நீக்கவும். நாங்கள் நல்ல செயல்களைக்கப்படுத்தும் உன் தேகத்தைப் பாலாலும் நெய்யாலும் புட்டிப்படுத்த அவற்றை உனக்குச் சொரிகிறோம்.

5. அக்கினியே! செல்வங்களைத் தாராளமாயளிப்பவனே! மிக்க அருமையான செல்வங்களை எங்களுக்களிக்கவும். அதற்காக நீ சொலிப்பிக்கப்படுகிறாய். செல்வனான வழிபடுபவனின் மனையிலே நீ செல்வத்தை

யளிக்க உன் ஒளி வடிவங்களுள்ள கைகளை நீட்டியிருக்கிருய். 2,612

## 19. அக்கினி

### 253. காதீகௌசிகன்

1. நான் இந்த யக்ஞத்திலே தேவர்களைத் துதிப்பவனும், அழைப்பவனும், கவியும், அனைத்தையுமளிப்பவனும், அமூடனுமான அக்கினியைப் பற்றுகிறேன். துதியாருகனுன அவன் எங்களுக்காகத் தேவர்களை யஜிப்பாஞக. செல்வங்களுக்காக-உணவுக்காக நாங்கள் அளிக்கும் உத்தம அவிகளை அவன் பெற்றுக் கொள்வாஞக.

2. அக்கினியே! நான் தேவர்களை வணங்கி ஒளியுள்ள அவியைத் தருவதும், உணவையளிப்பதும், நெய் நிறைந்ததுமான துடுப்பை உன் முன்னே வைக்கிறேன். நீ அளிக்கப்படும் செல்வத்தால் சாந்தமாகி இந்த யக்ஞத்தை உன்னுடைய பிரதட்சிணத்தால் போற்றுவாயாக.

3. அக்கினியே! உன்ஞல் பாலிக்கப்படுபவன் கூரிய மனமுள்ளவஞகிருன். அவனுக்கு உத்தம சந்தானத்தையளிக்கவும். நாங்கள் செல்வங்களை விருப்பத்தோடு அளிக்கும் உன்னுடைய மகிமையில் எப்பொழுதும் இருப்போமாக. உன்னைப் புகழ்ந்து நாங்கள் செல்வப் பாத்திரங்களாவோமாக.

4. அக்கினியே! அறிஞர்கள் ஹோதாவான உன்னிடம் பல சுடர்ப் படைகளை ஸ்தாபித்திருக்கிருர்கள். மிக்க இளைஞனே! நீ இன்று திவ்ய சோதியை யஜிக்க இங்கு தேவர்களை ஏந்தி வா.

5. அமர்ந்திருக்கும் அறிஞர்கள், தேவர்களின் ஹோதாவான உன்னை, நீ யக்ஞத்திலே யஜிக்க உனக்கு நெய் காப்பிடுங்கால், எங்களுடைய பாலகஞக இருக்க விரும்பவும். எங்கள் சந்தானங்களுக்கு மிகுந்த உணவையளிக்கவும். 2,617



## 20. அக்கினி

### 254. காதீகௌசிகன்

#### விசுவே தேவர்கள்

1. அவியை ஏந்தும் அக்கினி உஷையின் உதயத்திலே சூக்தங்களோடு அக்கினியையும், உஷையையும், அசுவினிகளையும், ததிக்கிராவனையும் அழைக்கிருன். எங்கள் யக்ஞத்தை விரும்பும் சோதியுள்ள தேவர்கள் இசைந்து கேட்பார்களாக.

#### அக்கினி

2. சத்தியத்தில் தோன்றிய அக்கினியே! உன்னுடைய உணவுகள் மூன்று; வசிக்கும் இடங்கள் மூன்று; தேவர்களைத் திருப்தி செய்யும் நாக்குகள் மூன்று; தேவர்களால் விரும்பப்படும் மூன்று வடிவங்களும் உன்னிடமுண்டு. அவற்ருல் கவனத்தோடு எங்களுடைய துதிகளைப் பாலிக்கவும்.

3. தேவஞன அக்கினியே! இருக்கும் அனைத்தையும் அறியும் நீ உணவை வழங்குபவன். அமுதஞன உனக்குப் பல பெயர்கள் உண்டு. நீ விசுவத்தைத் திருப்தி செய்யும் வழிபடுபவர்களுடைய பந்துவாயிருக்கிருய். மயக்குபவர்களின் மாயைகளையெல்லாம் தேவர்கள் உன்னில் ஸ்தாபித்திருக்கிருர்கள்.

4. தேவஞன அக்கினி, பருவங்களைக் கிரமப்படுத்தும் சூரியனைப்போல் தேவப் பிரசைகளின் தலைவஞயிருக்கிருன். விருத்திரனை விலக்குபவனும், பழையவனும், விசுவத்தை அறிபவனுமான அவன், வழிபடுபவனை எல்லாத் துன்பங்களிலிருந்தும் கடத்துவாஞக.

#### விசுவே தேவர்கள்

5. நான் இந்த யக்ஞத்திலே, ததிக்கிராவனையும், அக்கினியையும், தேவியான உஷையையும், பிரகஸ்பதியையும், தேவஞன ஸவிதாவையும், அசுவினிகளையும்,

மித்திரனையும், வருணனையும், பகனையும், வசுக்களையும், ஆதித்தியர்களையும் அழைக்கிறேன். 2,622

## 21. அக்கினி

### 255. காதிகௌசிகன்

1. ஜாதவேதஸனே! எங்களுடைய யக்ஞத்தைத் தேவர்களிடம் செலுத்தவும். இந்த அவிகளைப் பெற்றுக் கொள்ளவும். வேதிகையிலே அமர்ந்து மேதையின் நெய்யின் பிந்துக்களை அருந்தவும்.

2. பர்வகனே! உன்னுடைய சொந்த யக்ஞத்திலே நீ புசிக்கவும், தேவர்கள் புசிக்கவும், நெய்யுடனுள்ள மேதையின் பிந்துக்கள் சொட்டுகின்றன. ஆதலால் எங்களுக்கு உத்தமச் செல்வத்தையளிக்கவும்.

3. அக்கினியே! விப்பிரஞன உனக்கு நெய் சொட்டும் மேதையின் பிந்துக்கள் அளிக்கப்படுகின்றன. உத்தம ரிஷியான நீ, ஒளிப்படுத்தப்படுகிருய். நீ யக்ஞத்தைப் பாலிப்பவனுகவும்.

4. அக்கினியே! தடைபடாதவனும், திடனுமான உனக்கு நெய்த்துளிகளும், மேதைத் துமிகளும் பாய்கின்றன. கவிகளால் போற்றப்படுபவனும், மிக்க அறிஞனுமான நீ, உன்னுடைய பெரிய சோதியோடு வந்து எங்களுடைய அவியால் இன்புறவும்.

5. நாங்கள் உனக்காகப் பசுவின் உட்புறத்திலிருந்து எடுக்கப்பட்டதும், மிக்க சாரமிருப்பதுமான மேதையாம் அவியை உனக்களிக்கிருேம். வசுவே! உனக்காகப் பிந்துக்கள் சொட்டுகின்றன. அவற்றைத் தேவர்களுக்குப் பங்கிடவும். 2,627

## 22. அக்கினி

### 256. காதிகௌசிகன்

1. இந்திரன் அவியை விரும்பி தன்னுடைய உதரத்துக்காக ஸோமத்தை இந்த அக்கினியில் வைத்தான்.



ஜாதவேதஸனே! போர்க்களத்திலே பல இன்பங்களை அனுபவிக்கும் துரித குதிரையைப் போல் பலவித அவிகளை அருந்தும் நீ, போற்றப்படுகிருய்.

2. போற்றத் தகுந்த அக்கினியே! சோதியிலிருக்கும் சோதியும், புவியிலிருக்கும் சோதியும், ஓஷதிகளிலிருக்கும் சோதியும், சலங்களிலிருக்கும் சோதியும், உன்னுடையவை. நீ அந்த சோதிகளால், வாயுவின் வடிவத்தால் வானைப் பரத்துகிருய். விளங்கும் அது துலங்குகிறது. நரர்களைக் காண்கிறது. கடலைப் போல் மகத்தானது.

3. அக்கினியே! நீ சோதியின் கடலுக்குச் செல்லுகிருய். நீ பிராணன்களான தேவர்களைப் படுத்துகிருய் நீ சூரியனுக்கு மேலே இருக்கும் ஒளி மண்டலத்திலுள்ள சலங்களையும், அதற்குக் கீழே உள்ள வானிலிருக்கும் நீர்களையும் பிரேரிக்கிருய்.

#### புரீஷ்யங்கள்

4. புரீஷ்யாக்கினிகள் கருவிகளோடு சேர்ந்து எங்களுடைய யக்ஞத்தைப் பற்றுவார்களாக. துரோகமற்ற நீங்கள் எங்களுக்கு நோய் நீங்கிய மகத்தான உணவையளியுங்கள்.

#### அக்கினி

5. அக்கினியே! அவியளிப்பவனுக்குப் பசுக்களைத் தருவதும், பல செயல்களை நடத்த சாதகமளிப்பதுமான நிலத்தை எங்களுக்களிக்கவும். எங்களுக்குப் புதல்வர்களும் பேரர்களும் தோன்றுக. உன்னுடைய சுமதி எங்களுக்கு நன்மையைச் செழிப்பிக்க. 2,632

## 23. அக்கினி

### 257. தேவசிரவஸனும் தேவவாதனும்

1. மந்தன்ஞ் செய்யப்பட்டவனும், தலைவன் மனையில் ஸ்தாபிக்கப்பட்டவனும், இளைஞனும், கவியும், யக்ஞத்தை நடத்துபவனும், ஜாதவேதஸனும், அழியாத

வனுமான அக்கினி தகிக்கும் வனங்களின் நடுவே எரிந்து இங்கு எங்களுக்கு அமிருதமான உணவைத் தருகிறான்.

2. பரதனின் புதல்வரான தேவசிரவஸனும், தேவவாதனும், மிக்க வலியனும், செல்வமளிப்பவனுமான அக்கினியைக் கடைந்தார்கள். அக்கினியே! மகத்தான செல்வத்தோடு எங்களைப் பார்க்கவும். எங்களுக்குத் தினந்தோறும் உணவைச் செலுத்துபவனாகவும்.

3. பத்து விரல்கள் இந்தப் பழைய அக்கினியைப் பிறப்பித்தன. தேவசிரவஸனே! தேவவாதனால் சனிப்பிக்கப்பட்டவனும், சனங்களின் வசத்திலிருப்பவனும், தாய்மார்களிடமிருந்து நன்கு பிறந்தவனும், பிரியப் புதல்வனுமான இந்த அக்கினியைப் போற்றவும்.

4. நான் உன்னைப் புவியின் உத்தம ஸ்தானத்திலே நாட்களின் நல்ல தினத்திலே ஸ்தாபிக்கிறேன். அக்கினியே! நீ மானிடனிலே, ஆபயாவிலே, ஒரு நதியிலே—ஸரஸ்வதியிலே, திருஷத்வதியிலே பிரகாசிக்கவும்.

5. அக்கினியே! அவியளிப்பவனுக்குப் பசுக்களைத் தருவதும், பல செயல்களை நடத்த சாதகமளிப்பதுமான நிலத்தை எங்களுக்களிக்கவும். எங்களுக்குப் புதல்வர்களும் பேரர்களும் தோன்றுக. உன்னுடைய ஸுமதி எங்களிடம் நிலைத்திருக்க. 2,637

## 24. அக்கினி

### 258. காதின-விசுவாமித்திரன்

1. அக்கினியே! பகைப் படைகளை ஜயிக்கவும். எதிர்ப்பவர்களை விலக்கவும். தடைபடாத நீ, பகைவர்களை யழிக்கவும். யஜிப்பவனுக்கு ஒளியை யளிக்கவும்.

2. அக்கினியே! அமுதனும், அவிகளால் இன்புறுபவனுமான நீ, வேதிகையிலே சொலிப்பிக்கப்படுகிறாய். எங்களுடைய இந்த யக்ஞத்தைப் பற்றவும்.



3. அக்கினியே! பலத்தின் மகனே! ஒளியோடு விழித்திருக்கும் நீ அழைக்கப்படுங்கால் என் யக்ஞத்திலே பரத்தப்பட்ட தருப்பையின் மீது அமரவும்.

4. அக்கினியே! நீ உன்னுடைய எல்லா அனல்களோடும் எல்லாத் தேவர்களோடும் யக்ஞங்களிலே மனிதர்களால் கூறப்படும் மொழிகளை மேம்படுத்தவும்.

5. அக்கினியே! ஈகையனுக்கு வீரச் சந்ததியையும், மிகுந்த செல்வத்தையுமளிக்கவும். எங்களைப் பல மக்களோடு செல்வப்படுத்தவும். 2,642

## 25. அக்கினி

### 259. காதின-விசுவாமித்திரன்

1. அக்கினியே! 'விசுவத்தையறிபவனும் பேரறிஞனுமான நீ. சோதியின் மகனாயிருக்கிறாய். மேலும், புவியின் மகனாயிருக்கிறாய். அறிஞனான நீ, இங்கு தேவர்களை முதன்மையாக யஜிக்கவும்.

2. அறிஞனான அக்கினி, வீரர்களின் பலத்தைத் தருகிறான். அவன் ஒளியால் உலகத்தை வண்ணப்படுத்தி அமுதர்களுக்கு உணவைத் தருகிறான். பல அவிகள் அளிக்கப்படும் அக்கினியான நீ, இங்கு எங்களிடம் தேவர்களை ஏந்தி வா.

3. ஸர்வக்ஞனும், உலகத்தின் அரசனும், மிக்க ஒளியுள்ளவனும், உணவோடும் ஊக்கத்தோடுமிருப்பவனுமான அக்கினி, தேவிகளும், அமுதர்களும், விசுவத்தைப் பிறப்பிப்பவர்களுமான சோதியையும் புவியையும் ஒளிப்படுத்துகிறான்.

#### அக்கினியும் இந்திரனும்

4. அக்கினியும் இந்திரனுமான நீங்கள், யக்ஞத்துக்கு வாருங்கள். ஸோமத்தோடிருக்கும் அளிப்பவனுடைய மனைக்கு வாருங்கள். தேவர்களான நீங்கள் நட்புத்தன்மையோடு ஸோமத்தைப் பருக வாருங்கள்.

5. அக்கினியே! பலத்தின் புதல்வனான ஜாதவேதஸனே! நித்தியனான நீ உன் பாலனத்தோடு சிவர்களின் உலகங்களைச் சுற்றி வருங்கால் சலங்களின் இடத்திலே-வானிலே-சொலிப்பிக்கப்படுகிறாய். 2,647

## 26. அக்கினி

### 260. காதின-விசுவாமித்திரன்

#### வைசுவாநரன்

1. ருசிக வம்சத்தில் தோன்றிய நாங்கள் செல்வங்களை விரும்பி அவிகளையளித்து எங்கள் மனங்கள் அவனைத் தியானஞ் செய்கின்றன. ஸத்தியப் பிரதிக்கையுள்ளவனும், சோதியளிப்பவனும், வள்ளலும், தேருள்ளவனும், யக்ஞங்களுக்கு வருபவனும், தேவனுமான வைசுவாநரனைத் துதிகளோடு நாங்கள் அழைக்கிறோம்.

2. நாங்கள் எங்கள் பாலனத்துக்காகவும், மனிதனுடைய யக்ஞத்துக்காகவும், மாதரிசுவானனும்-வானிலே மின்னலாக இயங்குபவனும், துதியாருகனான பிரகஸ்பதியும், விப்பிரனும், செவிசாய்ப்பவனும். அதிதியும், துரிதனாய்ச் செல்பவனும், துலங்குபவனும், அக்கினியும், வைசுவாநரனுமான உன்னை அழைக்கிறோம்.

3. தாய்மார்களால் போஷிக்கப்படும் கனைக்கும் குதிரை போல் ருசிகர்களால் யுகந்தோறும் வைசுவாநரன் சொலிப்பிக்கப்படுகிறான். அமுதர்களின் நடுவே விழித்திருக்கும் அந்த அக்கினி, நல்ல குதிரைகளும் உத்தம சந்தானங்களுமுள்ள செல்வத்தை எங்களுக்களிப்பானாக.

#### மருத்துக்கள்

4. துரிதமான அனல்கள் வலிமையுள்ள காற்றுக்களோடு சேர்ந்து, மழைத் திவலைகளை இணைத்துக் கொண்டு சலங்களின் சுத்த மண்டலத்துக்குச் செல்க. தடைபடாதவர்களும் விசுவத்தை யளிப்பவர்களுமான மருத்துக்கள் மிக்கப் பெய்யும் மேகங்களை ஆட்டுகிறார்கள்.





5. விசுவத்தையசைக்கும் மருத்துக்கள் மின்னலழகுள்ளவர்கள். நாங்கள் அவர்களுடையை உக்கிரமான காந்தியை நாடுகிறோம். ருத்திரப் புதல்வர்களான மருத்துக்கள் மழை வடிவமுள்ளவர்கள். ஈகை மனமுள்ள அவர்கள் சிங்கத்தைப் போல் கர்ச்சிக்கிறார்கள். 2,652

6. நாங்கள் ஒவ்வொரு சபையிலும், ஒவ்வொரு கூட்டத்திலும், உத்தமத் துதிகளோடு அக்கினியின் காந்தியையும், மருத்துக்களின் பலத்தையும் வேண்டுகிறோம். நாங்கள் நாடும் மருத்துக்கள் விசித்திர வர்ணக் குதிரைகளிருப்பவர்கள், ஸம்பூரண செல்வத்தையளிப்பவர்கள், தீரர்கள், யக்ஞங்களிலே அவிக்கு வருபவர்கள்.

#### அக்கினி

7. அக்கினியான நான் பிறவியிலேயே எல்லாப் பிராணிகளையுமறிகிறேன். நெய் என்னுடைய கண்; அமிருதம் என்னுடைய வாய்; பிராணனான-சோதியான. நான் மூவித தாதுக்களுள்ளவன்-தன்மைகளிருப்பவன்-அனல் வாயு - ஆதித்தியனின் இயல்புகள். நான் வானையளப்பவன்-சூரியன்; நான் தேயாத தாபம்-வெப்பமாகும். என் பெயர் அவி.

8. அக்கினி, இருதயத்தால் மனனஞ் செய்வதற்கான சோதியைக் கிரமமாய் நன்கறிந்து சுத்தப்படுத்தும் மூவர்களால்-அக்கினி, வாயு, சூரியர்களால் போற்றத் தகுந்த தன்னைச் சுத்தஞ் செய்து கொண்டான். அவன் தன்னுடைய சொந்தத் தன்மைகளால்-அக்கினி, வாயு, சூரியர்களால் இரத்தினத்தை அடைந்தான். பிறகு சோதி புவிகளையெல்லாம் பார்த்தான்.

### விசுவாமித்திரோபாத்தியன்

9. சோதிபுவிகளே! மாணவர்களின் தந்தையும், மொழிவதற்குரியவற்றை – வேத மந்திரங்களை ஒத்துக் காண்பவனும், பெற்றோர்களின் – சோதி புவிகளின் அங்கத்தில் இன்புறுபவனும், சத்திய மொழிகளைக் கூறுபவனும், அறிவின் நித்தியப் பிரவாகத்தையும், நூறு தாரைகளுள்ள சுனையுள்ளவனுமான பேரறிஞனைப் பாலியுங்கள். 2,656

# 27. அக்கினி

## 261. காதின–விசுவாமித்திரன்

1. ருதுக்களே! மாதங்களும், பட்சங்களும், நெய் தரும் பசுக்களோடு, அவிகளை ஏற்றுக்கொள்ளும் தேவர்களும் உங்கள் யக்ஞத்தில் துலங்குகின்றன. சுகத்தை விரும்புபவன் தேவர்களிடஞ் செல்லுகிறான்.

2. நான், அறிஞனும், தூரிதனும், செல்வம் ஏந்துபவனும், யக்ஞத்தை நடத்துபவனுமான அக்கினியைத் துதியோடு போற்றுகிறேன்.

3. நாங்கள் உனக்கு அவிகளையளித்து, தேவனான உன்னை வசப்படுத்தும் வலிமையைப் பெறுவோமாக. அதனால் நாங்கள் எல்லாப் பகைவர்களையும் ஜயிப்போமாக.

4. நாங்கள் யக்ஞத்தில் சொலிப்பிக்கப்படுபவனும், சுடர்கேசமுள்ளவனும், சுத்தப்படுத்துபவனும், துதிக்கத் தகுந்தவனுமான அக்கினியை நாடுகிறோம்.

5. மிக்கப்பிரகாசிப்பவனும், அமுதனும், நெய்யால் சுத்தஞ் செய்பவனும், நன்கு அழைக்கப்பட்டவனுமான அக்கினி யக்ஞத்திலே அவிகளை ஏந்துபவனாகிறான். 2,661

6. தீமையை விலக்குபவர்கள் துடுப்புக்களை ஏந்தி, யக்ஞத்தைச் செய்து, பாலனத்துக்காக இத்தச் செயலால் அக்கினியை முற்படுத்துகிறார்கள்.



7. ஹோதாவும் அமிருதனுமான தேவன் யக்ஞத்தில் முதலில் வருகிறான். அவன் யக்ஞங்களைத் தன் அனுபூதியால்–அறிவால்–நடத்துகிறான்.

8. வலியனான அக்கினி போர்களில் நிறுத்தப்படுகிறான். யக்ஞங்களிலே, முகப்பிலே செலுத்தப்படுகிறான். விப்பிரனான அவன் யக்ஞத்தைப் பூர்த்தி செய்கிறான்.

9. அக்கினி அறிவால் பிறப்பிக்கப்படுபவன்; போற்றப்படுபவன்; எல்லாப் பிராணிகளையும் கருவாகத் தரிப்பவன்; தட்சனின் மகளால் உலகத்தின் தந்தையாக ஏற்கப்பட்டவன்.

10. அக்கினியே! தட்சனின் புதல்வியான இளை, பலத்தால் சனிப்பிக்கப்பட்டவனும், போற்றத் தகுந்தவனும், பிரகாசிப்பவனும், அவிகளை விரும்புபவனுமான உன்னைத் தாங்கினாள். 2,666

11. யக்ஞத்தை நடத்தும் விப்பிரர்கள், கிரமப் படுத்துபவனும், மழையைத் தருபவனுமான அக்கினியை, அவிகளால் ருதத்தை நடத்த ஒளிப்படுத்துகிறார்கள். 2,667

12. நான் அவியின் பேரனும், வானின்மீது பிரகாசிப்பவனும், அறிஞனைத் தோற்றுவிப்பவனுமான அக்கினியை இந்த யக்ஞத்திலே போற்றுகிறேன்.

13. துதியோடும் வணக்கத்தோடும் போற்றத்தகுந்தவனும், இருளை நீக்குபவனும், அழகனும், பொழிபவனுமான அக்கினி சொலிப்பிக்கப்படுகிறான்.

14. பொழிபவனும், வகித்துச் செல்லும் குதிரையைப் போல் தேவர்களிடம் அவிகளை ஏந்திச் செல்பவனுமான அக்கினி சொலிப்பிக்கப்படுகிறான். அவிகளையளிக்கும் அறிஞர்கள் அவனைப் போற்றுகிறார்கள்.

15. பொழியும் அக்கினியே! பொழிபவர்களான நாங்கள், சலங்களைப் பொழிபவனும், பெரியவனும், பிரகாசிப்பவனுமான உன்னை ஒளிப்படுத்துகிறோம். 2,671

## 28. அக்கினி

### 262. காதின விசுவாமித்திரன்

1. அக்கினியே! ஜாதவேதஸனும் செயலுக்கேற்ற வாறு செல்வத்தைத் தருபவனுமான நீ, காலை யக்ஞத்திலே எங்களுடைய புரோடாச அவியைப் பெற்றுக் கொள்ளவும்.

2. அக்கினியே! மிக்க இளைஞனே! புரோடாசம் உனக்குப் பக்குவமாகிப் பதப்பட்டிருக்கிறது. நீ இதைப் பெற்றுக் கொள்ளவும்.

3. அக்கினியே! எங்களுடைய மூன்று நாட்களான புரோடாசத்தையும் அவியையும் புசிக்கவும். பலத்தின் மகனே! நீ எங்கள் யக்ஞத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறாய்.

4. அறிஞனான ஜாதவேதஸனே! இங்கு நடுப்பகல் யக்ஞத்திலே அளிக்கப்படும் புரோடாசத்தைப் புசிக்கவும். அக்கினியே! அக்கினியே! தீரர்கள், மகானான உனக்குக் கொடுப்பதற்குரிய பாகத்தைக் கொடாமல் வைத்துக் கொள்வதில்லை.

5. அக்கினியே! பலத்தின் மகனே! மூன்றுவது யக்ஞத்தில் அளிக்கப்படும் புரோடாசத்தை விரும்பவும். பிறகு துதியால் துதிக்கப்படும் நீ, அழியாததும், இரத்தினமிருப்பதும், எழுப்புவதுமான அவியை அமிருதர்களான தேவர்களிடம் செலுத்தவும்.

6. ஜாதவேதஸனே! அக்கினியே! வளர்ந்த நீ தினம் மறையுங்கால் அளிக்கப்படும் புரோடாசத்தைப் பெற்றுக் கொள்ளவும். 2,677

## 29. அக்கினி

### 263. காதின விசுவாமித்திரன்

1. மந்தனஞ்செய்ய இங்கு மேலரணிக்கட்டையிருக்கிறது. அனலைத் தோற்றுவிக்கத் தருப்பையுமிருக்கிறது. மனிதர்களைப் பாலிக்கும் இந்த அரணியை எடுத்து வா. பூர்வத்தில் போய் நாம் அக்கினியைக் கடைவோமாக.



2. கருப்பிணிகளுள் ஸ்தாபிக்கப்பட்ட கருவைப் போல் இரு அரணிகளுள் ஜாதவேதஸன் இருக்கிறான். அக்கினி, அவிகளோடு விழித்திருக்கும் மனிதர்களால் தினந்தோறும் துதிக்கத் தகுந்தவன்.

3. அடியிலுள்ள அரணி பொழியும் அக்கினியைப் பிறப்பிக்கத் துரிதமாய்ச் சினைப்பிக்கப்பட அறிஞன் அடிக்கோலை மேல் முகமாகவும், மேற்கோலைக் கீழ் முகமாகவும் வைப்பானாக. பிறகு இருளை நீக்கும் ஒளியுள்ள இளையின் புதல்வனான அக்கினி சுடர்த் தாரோடு மந்தன ஸ்தானத்திலிருந்து பிறக்கிறான்.

4. ஜாதவேதஸனான அக்கினியே! நாங்கள் உன்னைப் புவியின் நடுவான இடத்திலே இளையின் ஸ்தானத்திலே நீ அவிகளை ஏந்த-பெற்றுக்கொள்ள-ஸ்தாபிக்கிறோம்.

#### ரித்விஜர்கள்

5. யக்ஞத்தை நடத்தும் நீங்கள், கவியும், ஒரு மனமுள்ளவனும், பேரறிஞனும், அமுதனும், ஒளியாங்கனுமான அக்கினியை மந்தனத்தால் பிறப்பியுங்கள். தலைவர்களே! நீங்கள் உத்தம சுகத்தைத் தருபவனும், யக்ஞத்தின் துவஜனும், முதல்வனுமான அக்கினியைத் துவக்கத்திலே சனிப்பியுங்கள். 2,782

#### அக்கினி

6. அவர்கள் தங்கள் கைகளால் தீக்கோல்களைத் தேய்க்குங்கால் அக்கினி வனங்களிலே சிகப்பு நிறத்தோடு வலிய குதிரையைப் போல் பிரகாசிக்கிறான். அவன், அசுவினிகளின் தடைபடாத நானா நிறமுள்ள தேரின் வேகத்தோடு கற்களையும் புற்களையும் பஸ்பம் செய்து செல்லுகிறான்.

7. பிறந்தவுடன், விப்பிரனும், துரிதமாய்ச் செல்பவனும், அறிஞனும், கவிகளால் போற்றப்படுபவனும், உதாரனுமான அக்கினி பிரகாசிக்கிறன். அவன் துதியாருகன்; விசுவத்தையறிபவன்; தேவர்கள் அவனை யக்ஞங்களிலே அவிகளை ஏந்தச் செய்தார்கள்.

8. ஹோதாவான அக்கினியே! நீ உன்னுடைய சொந்த இடத்திலே அமரவும். அறியும் நீ, சுகிருதமான இடத்திலே யக்ஞத்தை ஸ்தாபிக்கவும். அக்கினியே! தேவர்களைப் பாலிக்கும் நீ, அவியால் தேவர்களை யஜிக்கவும். யக்ஞத்தை நடத்தும் எனக்கு மிகுந்த உணவையளிக்கவும்.

9. நண்பர்களே! பொழியும் புகையை எழுப்புங்கள். மந்தனத்தால் அக்கினியைப் பிறப்பியுங்கள். களைப்பாகாத நீங்கள் அக்கினியோடு போராட்டத்திலே இயங்குங்கள். நீங்கள் தடைபடாமல் செல்வத்தைப் பெறுவீர்கள். இந்த அக்கினி போரிலே ஜயிக்கும் உத்தம வீரன். இவனால் தேவர்கள் பகைவர்களை ஜயிக்கிறார்கள்.

10. அக்கினியே! இதுவே - அரணியே - ஒவ்வொரு பருவத்திலும் உன்னுடைய ஜன்ம ஸ்தானம். நீ இங்கிருந்து பிறப்பிக்கப்பட்டவுடன் பிரகாசிக்கிறாய். நீ இதையறிந்து இங்கே இருக்கவும். எங்கள் மொழிகளால் வளரவும். எங்களைச் செல்வப்படுத்தவும். 2,687

11. அவன் அரணிகளில் கருவாயிருக்குங்கால் தநூநபாதன் எனப்படுகிறன். அவன் பிறப்பிடப்படுங்கால் அசுரர்களைக் கொல்லும் நராசம்ஸனாகிறன். அவன் தாயான வானிலே தன் ஒளியைப் புலப்படுத்துங்கால் மாதரிசுவானாகிறன். அவனுடைய துரித கமனத்திலே வாயுவின் சிருட்டியாகிறது.

12. ஊக்க மந்தனத்தால் விளக்கப்படுபவனும் வணக்கமான கவனத்தோடு நிலைக்கப்படுபவனுமான



அக்கினியே! நீ எங்களுடைய யக்ஞங்களை இம்சையிலிருந்து நீக்கவும். தேவர்களை விரும்பும் தலைவனுக்காகத் தேவர்களை யஜிக்கவும்.

13. மானிடர்கள், தடித்த பற்களுள்ளவனும்-வாயுள்ளவனும் – தீமையிலிருந்து கடத்துபவனும், தேயாதவனும், அமுதனுமான அக்கினியைப் பிறப்பித்தார்கள். மணமாகாத பத்து சகோதரிகள்-விரல்கள்-சேர்ந்து புதியதாய்ப் பிறந்த குழந்தையைப் பற்றுகிறார்கள்.

14. நித்தியமான அக்கினி ஏழு ஹோதாக்களால் பிரகாசிக்கிறன். அவன் தாயினங்கத்திலும், ஸ்தனத்திலும் துலங்கும்போது அவன்-மகிழ்ந்து-முழங்குகிறன், அவன் அரணிக் கோலின் உதரத்திலிருந்து பிறந்த பிறகு எப்பொழுதும் தூங்காமலிருக்கிறன்.

15. பிரம்மத்தில் முதற் தோன்றிய குசிகர்கள் மருத்துக்களின் படைகளைப் போல் பகைவர்களைப் புடைக்க ஆயுதமேந்தி உலகத்தை உணர்கிறார்கள். புகழோடுள்ள-அவியோடுள்ள-அவர்கள் பிரம்மத்தைக் கூறினார்கள். அவர்கள் இந்த மனையிலே அக்கினியை ஒவ்வொருவராக ஒளிப்படுத்துகிறார்கள்.

16. ஹோதாவும் அறிஞனுமான அக்கினியே! நடத்தப்படும் இந்த யக்ஞத்திலே இன்று உன்னை நாங்கள் நாடுகிறோம். ஆதலால், நீ தேவர்களுக்கு அவியைத் திரமாய் ஏந்திச் செல்லவும். சாந்தமாய் நிலைக்கவும். அறிஞனும் அனைத்தையும் அறிபவனுமான நீ, ஸோமத்துக்கு வா. 2,693

## 30. இந்திரன்

### 264. காதின விசுவாமித்திரன்

1. இந்திரனே! ஸோமாருகர்கள் உன்னை விரும்புகிறார்கள். உன் நண்பர்கள் ஸோமத்தைப் பொழிகிறார்கள். உனக்காக அவிகளை ஏந்துகிறார்கள். சனங்களின்

பழிச்சொல்லைத் தாங்குகிறார்கள். உன்னைப் போல் புகழுள்ளவன் எவன்? எங்களுடைய அறிவெல்லாம் உன்னிடமிருந்து வருகிறது.

2. பொன்னிறக் குதிரைகள் உள்ளவனே! தூரமான இடங்களும் உனக்குத் தூரமாக இல்லை. பிறகு நீ உன் குதிரைகளிலே சீக்கிரம் வா. திரமாய்ப் பொழியும் உனக்கு இந்த யக்ஞங்கள் நடத்தப்படுகின்றன. ஸோமத்தைப் பிழியும் கற்கள் வைக்கப்படுகின்றன. அக்கினி சொலிப்பிக்கப்படுகிறது.

3. விருஷபனே! நீ இந்திரன். சிரத்திலே கவசமணிந்தவன். செல்வன்; தாரகன்; மருத்துக்களின் மகத்தான படையின் தலைவன்; பலவிதச் செயல்களை நடத்துபவன்; பகைப் படைகளைத் துடைப்பவன்; உக்கிரன். போரிலே மனிதர்கள் அசுரர்களால் எதிர்க்கப்பட்ட போது நீ அவர்களை எதிர்த்து நடத்திய பழைய வீரச் செயல்கள் இப்பொழுது எங்கே?

4. நீ ஒருவனே திரமாய் நிலைத்துள்ள அசுரர்களை அகற்றுகிறாய். விருத்திரர்களைக் கொன்று முன்னேறுகிறாய். உன்னுடைய ஆக்ஞைக்குக் கீழ்ப்படிந்து சோதியும் புவியும், மலைகளும், நிலைத்திருப்பவை போல் நிற்கின்றன.

5. இந்திரனே! நீ பலரால் அழைக்கப்பட்டபோது நீ ஒருவனாகவே உன் ஆற்றல்களால் விருத்திரனைக் கொன்று, தேவர்களை நோக்கிப் பயப்படாதீர்கள் என அழுத்தமாய்க் கூறினாய். செல்வனான உன்னுடைய பிடிமானம் மிக்கப் புகழுள்ளது. அதனால் எல்லையற்ற சோதியையும் புவியையும் பற்றுகிறாய். எல்லையற்ற இந்த இரு உலகங்களையும் நீ பற்றுங்கால் அவை உனக்கு ஒரு கைப்பிடியே. 2,698

6. இந்திரனே! உன்னுடைய குதிரைகளால் இழுக்கப்படும் உன்னுடைய தேர் இறக்கத்திலே அசுரர்களை



எதிர்க்கப் பாய்க. உன்னுடைய வச்சிராயுதம் பகைவர்களை அழித்துச் செல்க. உன்னை எதிர்ப்பவர்களையும், பற்றுபவர்களையும், ஓடுபவர்களையும் ஒழிக்கவும். விசுவத்தைச் சத்தியப்படுத்தவும். இதற்கேற்ற சக்தி உன்னிடம் சேர்க.

7. செல்வமேந்தும் உன்னால் ஏந்தப்படும் மனிதன் முன் சம்பவியாத மனைச் செல்வத்தைப் பற்றுகிறான். பலரால் போற்றப்படும் இந்திரனே! அவிகளால் தோன்றும் உன்னுடைய மங்களமளிக்கும் ஸுமதி ஆயிரக்கணக்கான செல்வத்தைத் தருவதாயிருக்கிறது.

8. இந்திரனே! புருஹூதனே! தானுவோடு வசித்த கிருணுருவைக் கையற்றுச் செய்து அவனைச் சூரணப் படுத்தவும்.. இந்திரனே! வலிமையடைந்தவனும் துன்புறுத்துபவனுமான விருத்திரனைக் காலற்றுச் செய்து உன் பலத்தால் நீ கொன்றாய்.

9. நீ மகத்தாயிருப்பவனும், எல்லையற்றவனும்' சலித்திருந்தவனுமான புவியை மட்டப்படுத்தி, அவனுடைய இடத்திலே நிலைப்படுத்தினாய். விருஷபன் சோதியையும் வானையும் தாங்குகிறான். உன்னால் பிறப்பிக்கப்பட்ட சலங்கள் இங்கு பெருகுக.

10. மௌனமாய்ப் பசுக்களைப் பிடித்திருந்த அவன், நீ அடிப்பதற்கு முன்னே பயந்து அளித்துவிட்டான். பிறகு இந்திரன் பசுக்களைச் செலுத்த வழிகளை சகசப்படுத்தினான். போற்றத் தகுந்தவையும் முழங்குபவையுமான-பசுக்கள்-சலங்கள்-பலரால் போற்றப்படும் புவியின் புலன்களோடு சேர்ந்தன. 2,708

11. இந்திரன் ஒருவனே பரஸ்பரம் சேர்ந்திருப்பவர்களும், செல்வம் நிறைந்தவர்களும், இருவருமான சோதியையும் புவியையும் நிரப்பினான். சூரனே! நீ உன்னுடைய தேரிலே வானிலிருந்து வலிமையையும் சுகமளிக்கும் உணவையும் ஏந்தி எங்களிடம் வா.

13. பொன்னிறக் குதிரைகளுள்ள இந்திரனால், சூரியனுடைய பயணத்துக்காகத் தினந்தோறும் நிறுவப்படும் திகாந்தங்களைச் சூரியன் கடந்து செல்லான். அவன் செல்வதற்கான வழிகளைக் கடந்த பிறகு தன் குதிரைகளை அவிழ்த்துவிடுகிறான். இந்தச் செயல் எல்லாம் இந்திரனை உன்னுடைய செயல்.

13. எல்லா சனங்களும் இரவு நீக்கப்பட்டு உஷை உதயமாகுங்கால், சூரிய கிரணங்களின் மகத்தான பலவித நிறமுள்ள படையைக் காண விரும்புகிறார்கள். உஷை வந்தவுடன் அனைவரும் மகத்தான கடமைச் செயல்களை அறிகிறார்கள். இந்திரனே! நன்கு செய்யப்பட்ட பலவித செயல்கள், உன்னுடைய செயல்கள்.

14. மார்புகளிலே-நதிகளிலே-மகத்தான சோதி வைக்கப்பட்டிருக்கிறது. அபக்குவமான பசு, அபக்குவமான பாலை ஏந்தி மேய்கிறது-எங்கும் பரவுகிறது. இந்திரன் நமது போகத்துக்காகத் திரண்ட இந்த இனிப்பையெல்லாம் பசுவிலே ஸ்தாபித்தான்.

15. இந்திரனே! நீ உறுதியாயிருக்கவும். ஏனெனில் உன்னுடைய வழியைத் தடுப்பவர்கள் உண்டு. வழிபடுபவனையும் நண்பர்களையும் அவர்கள் யக்ஞத்தை நிறைவேற்றப் பாலிக்கவும். விற்களை ஏந்துபவர்களும், கொடும் படை ஏந்துபவர்களும், துன்பச்சிந்தனையோடு வருபவர்களுமான மானிடப் பகைவர்கள் உன்னால் அழிப்பதற்குரியவர்கள். 2,703

16. உன் வச்சிராயுதத்தின் முழக்கம் வரும் பகைவர்களால் கேட்கப்படுகிறது. தாபப்படுத்தும் இடிப் படையை அவர்கள் மீது செலுத்தவும். வேரோடு அவர்களை வெட்டவும்; எதிர்க்கவும்; மகவானே! ஜயிக்கவும்; அரக்கர்களை யழிக்கவும்; யக்ஞத்தைப் பூர்த்தி செய்யவும்.



17. இந்திரனே! அரக்கர் குலத்தை வேரோடு பிடுங்கவும், நடுவைப் பிளக்கவும், உச்சியைக் குலைக்கவும், தீயோனை எந்தத் தூரமான இடத்துக்குச் செலுத்தியிருந்தாலும், வேதத்தை வெறுக்கும் அவன் மீது தகிக்கும் படையைச் செலுத்தவும்.

18. நடத்துபவனே! சுவஸ்திக்குக் குதிரைகளையளிக்கவும். நீ எங்களருகில் அமர்ந்திருக்குங்கால் நாங்கள் மிகுந்த உணவுகளையும் செல்வங்களையும் அனுபவித்து மகான்களாவோமாக. எங்களுக்குப் பிரசைகளோடு சேர்ந்த செல்வம் தோன்றுக.

19. இந்திரனே! சிறந்த செல்வத்தை எங்களுக்களிக்கவும். நாங்கள் அளிக்க விரும்பும் உன்னுடைய தானத்துக்கு உரியவர்களாயிருக்கிறோம். எங்களுடைய விருப்பம் கடலின் அலைப் போல் திருப்தியாகாமலிருக்கிறது. செல்வங்களின் செல்வபதியே! அவ்விருப்பத்தைப் பூர்த்தி செய்யவும்.

20. எங்களுடைய இந்த விருப்பத்தைப் பசுக்களோடும், குதிரைகளோடும், சிறப்பான செல்வத்தோடும் பூர்த்தி செய்யவும். எங்களைப் புகழுடனுக்கவும். சுவர்க்கத்தை விரும்பும் விப்பிரர்களான குசிகர்கள் மனனஞ் செய்யத் தகுந்த மந்திரங்களோடு இந்திரனை உனக்குத் தோத்திரத்தைக் கூறுகிறார்கள். 2,713

21. இந்திரனே! புட்டியான உணவு எங்களுக்குத் தோன்ற கோபதியான நீ, மேகங்களைப் பிளந்து மழையைப் பெய்யவும். விருஷபனே! நீ சோதியில் பரவி மகானாயிருக்கிறாய். நீ சத்தியத்தால் சக்தியுள்ளவன். மகவானே! நீ எங்களுக்குப் பசுக்களின் தானங்களையளிக்கவும்.

22. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக, இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், நமது துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களையழிப்பவ

னும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,715

# 31. இந்திரன்

## 265. குசிக விசுவாமித்திரன் - இஷீரதனுடைய புதல்வன்

1. புதல்வனில்லாத தந்தை, தன் புதல்வியின் மகன்-தன் பேரன்-புதல்வனுக்குரிய கடமையைச் செய்வான். வம்சத்தை நிலைப்படுத்துவான் என அறிந்து உடன்பாடு செய்து கொள்கிறான். புத்திரோற்பத்தி சக்தியுள்ள மருமகனைச் செல்வங்களால் போற்றுகிறான். தந்தை, புதல்வி கருத்தரிப்பாள் என எண்ணி சாந்த மனத்தோடு தன்னைப் பாலனஞ் செய்து கொள்கிறான்.

2. தேகத்திலிருந்து தோன்றிய புதல்வன்-சொந்த மகன்-தந்தையின் உடைமையைச் சகோதரிக்குப் பராதீனப்படுத்தான். ஏனெனில் அவன் அவளைக் கணவனின் கருவைத் தாங்கும் பாத்திரமாகச் செய்தான். பெற்றோர்கள் குழந்தைகளைத் தோற்றுவித்தால் அவர்களில் ஒருவன்-ஆண் மகன்-நற்செயல்களின் கர்த்தாவாகிறான். புதல்வி, தானங்களால் செழிப்பிக்கத் தகுந்தவளாகிறாள்.

3. பிரகாசமாயுள்ள இந்திரனைப் போற்ற சுவாலைகளோடு நடுங்கி-சொலிக்கும்-அக்கினி மகத்தானப் புதல்வர்களை-இரசிமிகளை-பிறப்பித்தான். ரசிமிகளின் கருப்பம் மகத்தாயிருந்தது. அவர்களுடைய பிறப்பும்-ஓஷதியில் தோன்றுவதும் மகத்தாயிருந்தது. அவர்களுடைய செய்கையும் இந்திரனுடைய யக்ஞங்களால் மகத்தாகிறது.

4. விருத்திரனுடன் போராடும் இந்திரனோடு சேர்ந்துள்ள வெற்றியுள்ள மருத்துக்கள், தமத்திலிருந்து தோன்றிவரும் மகத்தான சோதியை-சூரியனை-கண்டார்கள். உஷைகள் அவனைச் சூரியன் என அறிந்து எழுந்



தார்கள். பசுக்களுக்கு - ரசிமிகளுக்கு - இந்திரன் ஒரு தலைவனாயிருந்தான்.

5. ஏழு அறிஞர்களான, விப்பிரர்கள் திடமான குகையினுள் மறைக்கப்பட்டிருக்கின்றன என்பதை ஆய்தறிந்தார்கள். இந்திரனை மனத்தால் போற்றினார்கள். அவர்கள் அனைத்தையும் ருதவழியால் மீட்டார்கள். இந்திரன் அவர்களுடைய செயல்களையறிந்து, அவர்களுக்கு வணக்கமளித்து, அவனும் அங்கு நுழைந்து, மீட்கும் பணியில் கலந்து கொண்டான். 2,720

6. ஸரமை, மலையின் வெடிப்பான வாயிலைக் கண்டாள். இந்திரன் அவளுக்கு அளித்த உறுதிமொழிபோல் அவளுடைய குட்டிக்கு மகத்தான மிக்க மிகுந்த உணவைக் கிரமப்படுத்தினாள். பிறகு நிலைக்காலுள்ள அவள் அவற்றின் அரவத்தை முதலில் அறிந்தாள்; முன்னேறினாள்; அழியாத பசுக்களின் முன்னே வந்தாள்.

7. நட்பை நாடி, பேரறிஞன் வந்தான். மலை, சுகிருதனுக்குத் தன் செல்வத்தை அளித்தது. சூரன் இளைஞர்களான மருத்துக்களோடு சேர்ந்து போராடினான். ஜயித்தான். உடனே அங்கிரஸன், இந்திரனைத் தொழுபவனானான்.

8. உத்தமப் பொருள்களுக்கெல்லாம் பிரதிநிதியும், பகைவர்களை முந்துபவனும், பிளந்த அனைத்தையுமறிபவனும், சுஷ்ணனைக் கொல்பவனும், மிக்க அறிவுள்ளவனும், பசுக்களை மீட்பவனும், சோதியிலிருந்து வரும் நண்பனுமான அவன், தன்னுடைய நண்பர்களாக எங்களை மேம்படுத்தி, எங்களைக் குற்றத்திலிருந்து நீக்குவானாக.

9. அங்கிரஸர்கள் பசுக்களை விரும்பும் நினைவுகளோடு அமுதத்துக்குச் செல்லும் வழியை அனுசரித்து தோத்திரங்களோடு இந்திரனைத் துதிக்க அமர்ந்தார்கள். தங்கள் நோக்கங்களை நிறைவேற்ற மாதங்களாகச் செய்து வந்த அவர்களுடைய முயற்சி மகத்தானது.

10. பழைய ரேதஸின் பாலைத் தரும் பசுக்கள் தங்களுக்குச் சொந்தமானவை என நினைத்து அங்கிரஸர்கள் இன்பமடைந்தார்கள். அவர்களுடைய கோஷம் சோதியிலும் புவியிலும் பரவிற்று. அவர்கள் மீட்ட பசுக்களை அவற்றின் இடங்களிலே சேர்த்தார்கள். பசுக்களைப் பாலிக்க வீரர்களை நிறுத்தினார்கள். 2.725

11. இந்திரனுடைய பாலனத்துக்காகப் பிறந்தவர்களும், துதிகளுக்கும் அவிகளுக்கும் அருகர்களுமான மருத்துக்களின் உதவியோடு விருத்திரனைக் கொல்பவனான இந்திரன் பசுக்களை விடுவித்தான். அவிகளுக்கு மிக்க அளிப்பவையும், யக்ஞத்துக்கு நெய்யைத் தருபவையுமான உத்தமப் பசுக்கள். அவனுக்கு—யக்ஞம் செய்பவனுக்கு இனிய பாலைத் தருகின்றன.

12. அவர்கள் பாலகனுக்கு உன்னத ஸ்தானத்தைச் செய்தார்கள். மகத்தான மேன்மையான இடத்தைச் செய்தார்கள். அவர்கள் யக்ஞத்திலே அமர்ந்து வானான ஸ்தம்பத்தால் பெற்றோர்களான சோதியையும் புவியையும் தாங்கி, துரிதனான இந்திரனை சோதியின் உச்ச ஸ்தானத்தில் ஸ்தாபித்தார்கள்.

13. எங்களுடைய மகத்தான துதி, செழிக்கும் தலைவனையும், சோதியையும் புவியையும் கிரமப்படுத்த ஸ்தாபித்தது. அவனுக்குக் குற்றமற்ற தோத்திரங்கள் எல்லாம் சேர்ந்திருக்கின்றன. ஆதலால் இந்திரனின் எல்லா ஆற்றல்களும் தாமாகவே துலக்கமாகின்றன.

14. இந்திரனே! நான் உன்னுடைய மகத்தான நட்பை விரும்புகிறேன். நான் உன்னுடைய ஆற்றல்களை விரும்புகிறேன். விருத்திரனைக் கொல்பவனுக்குப் பல குதிரைகள் வருகின்றன. நாங்கள் அறிஞனான உனக்கு மகத்தான தோத்திரத்தையும் அவிகளையும் அளிக்கிறோம். மகவானே! நீ உன்னை எங்களுடைய பாலகனாக எண்ணவும்.



15. பேரறிஞனான இந்திரன் நண்பர்களுக்குப் பரந்த நிலங்களையும், பரந்த செல்வங்களையும், விசாலமான பசுந்தரைகளையும் தந்தான். பிரகாசமான இந்திரன் தலைவர்களான மருத்துக்களோடு சேர்ந்து, சூரியனையும், உஷையையும், புவியையும், அக்கினியையும் பிறப்பித்தான். 2,730

16. பயின்ற மனமுள்ள அவன் வியாபகமாயிருப்பவையும், பொருந்தி இருப்பவையும், விசுவத்தை இன்புறுத்துபவையுமான சலங்களைத் தோற்றுவித்தான். அவை இனிய ஸோமங்களைக் கவிகளான பவித்திரர்களோடு—அக்கினியோடும் வாயுவோடும் சூரியனோடும்—சுத்தப்படுத்தி ஒவ்வொன்றையும் அதனதன் செயலிலே நிலைப்படுத்தி இரவுகளோடும் பகல்களோடும் செல்லுகின்றன.

17. இந்திரனே! சூரியனான உன்னுடைய மகத்தான வலிமையால் எல்லாப் பொருள்களைத் தாங்குபவர்களும், துதியாருகர்களும், இருவருமான இரவும் பகலும், ஒருவரை ஒருவர் தொடர்ந்து செல்லுகிறார்கள். உன்னுடைய உண்மையான விரும்பத் தகுந்த நண்பர்கள்—மருத்துக்கள்—உன்னுடைய பகைவர்களோடு போராட உன்னுடைய மகிமையை அநுசரித்து எங்கும் விளங்குகிறார்கள்.

18. விருத்திரனைக் கொல்பவனே! பூரண ஆயுள்ளவனும், பொழிபவனும், உணவை யளிப்பவனுமான நீ, எங்களுடைய உண்மைகளின் தலைவனாயிருக்கவும். யக்ஞத்துக்கு வர விரும்பிய மகானான நீ, மகத்தான பாலனங்களோடு, மங்கலமான நண்பர்களோடு எங்களிடம் வரவும்.

19. நான் அவனை அங்கிரஸனைப் போல் தோத்திரத்தால் துதித்து, பழையவனான அவனுக்குப் பழைய ப்பாட்டை—துதியை—புதுப்பிக்கிறேன். தேவத்தன்மையற்ற பல துரோகிகளைத் துடைக்கவும். மகவானே! நாங்கள் பெற்றுக்கொள்ள உன்னுடைய சொந்த செல்

வத்தை யளிக்கவும்—எங்களுக்குத் தவ சோதியின் ஒளியைத் தரவும்.

20. சுத்தப்படுத்தும் சலங்கள் எங்கும் பரத்தப்பட்டிருக்கின்றன. எங்களுடைய க்ஷேமத்துக்காக நீர்த்தனங்களை நிரப்பவும். உன் தேரில் வந்து துன்பத்திலிருந்து எங்களைப் பாலிக்கவும். பசுக்களை ஜயிக்க எங்களைத் துரிதப்படுத்தவும். 2,735

21. பசுக்களின் தலைவனும் விருத்திரனைக் கொல்பவனுமான இந்திரன், பசுக்களைப் புலப்படுத்தினான். அவனுடைய பிரகாசமாயிருக்கும் தேஜசுகளால் கிருஷ்ணங்களை விலக்கினான். ருதத்தால் உண்மையான பசுக்களை அங்கிரஸர்களுக்களித்து எல்லாக் கதவுகளையும் சொந்தப் பசுக்களைப் பாலிக்க மூடினான். அல்லது, விருத்திரர்களைக் கொல்பவனும், பசுக்களின் தலைவனுமான இந்திரன் தன் பசுக்களைப் புலப்படுத்தினான். அவன் தன் சிகப்பாட்களோடு கிருஷ்ணப் படைகளைக் கடந்தான். அவன் ருதத்தால் எங்களுக்கு இனிய பொருள்களைக் கற்பித்து எங்களுக்கு அவன் தன் கவாடங்களை யெல்லாம் திறந்து விட்டான்.

22. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், நமது துதிகளைச் செவியுறுபவனும், போர்களிலே பயங்கரனும், பகைவர்களை யழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,737

## 32. இந்திரன்

### 266. காதினன்—விசுவாமித்திரன்

1. இந்திரனே! ஸோமபதியே! பகல் யக்ஞத்திலே உனக்கு இனிப்பைத் தரும் இந்த ஸோமத்தைப் பருகவும். மகவானே! ஸாரமற்ற ஸோமரஸ மிச்சத்தைப் பருகும் நீ, உன்னுடைய குதிரைகளை அவிழ்த்து விடவும்.



தீனியால் அவற்றின் வாய்களை நிரப்பவும். இந்த யக்ஞத்திலே அவற்றை இன்புறுத்தவும்.

2. இந்திரனே! பாலோடோ, மோரோடோ கலக்கப்பட்ட ஸோமத்தையோ அல்லது புதிய ரஸத்தையோ பருகவும். நாங்கள் அதை உன்னுடைய மதத்துக்காக அளிக்கிறோம். தோத்திரங்களைக் கூறும் மருத்துப் படையோடும் ருத்திரர்களோடும் சேர்ந்துள்ள நீ, திருப்தியாகும்வரை ஸோமத்தைப் பருகவும்.

3. இந்திரனே! உன்னுடைய வலிமையையும், வன்மையையும் வலிமைப்படுத்தி உன்னுடைய பலத்தைப் பாடும் மருத்துக்களே இவர்கள். அழகிய கன்னமுள்ளவனும், வச்சிரம் ஏந்துபவனும், ருத்திரர்களோடு படையுடனிருக்கும் நீ, பகல் யக்ஞத்திலே பருகவும்.

4. இந்த மருத்துக்களே இந்திரனுக்குப் பலமாயிருந்தார்கள். இவர்களே அவனை ஊக்கப்படுத்தினார்கள். இந்திரன் இந்த மருத்துக்களால் உற்சாகமாகி என்னைக் கொல்ல எவனாலும் இயலாது எனத் தன்னை நினைத்துக்கொண்டிருந்த விருத்திரனின் மரும ஸ்தானத்தை யழித்தான்.

5. இந்திரனே! எங்கள் யக்ஞத்தால் மானிடனைப் போல் இன்பமாகி நித்தியமான பலத்துக்காக – வீரத்தன்மைக்காக – ஸோமத்தைப் பருகவும். ஹரி அசுவங்களுள்ள நீ, துதியாருகர்களும் வானில் சஞ்சரிப்பவர்களுமான மருத்துக்களோடு வா. புவியிலிருக்கும் சலங்களோடு சேர வானின் சலங்களைச் செலுத்தவும். 2,742

6. நீ உன்னுடைய துரிதப் போரால் தூங்குபவனும், தேவசூன்யனும், சலத்தைச் சூழ்ந்தவனுமான விருத்திரனைக் கொன்று போருக்குச் செல்லும் குதிரைகளைப் போல் தேவிகளான சலங்களை விடுவித்தாய்.

7. நாங்கள், வளர்ந்தவனும், பெரியவனும், போற்றத் தகுந்தவனும், மூப்பாகாதவனும், தருணனு

மான இந்திரனை வணக்கத்தோடு போற்றுகிறேம். அவ னுடைய மகிமை எல்லையில்லாதது. சோதியாலும் புவி யாலும் அளக்கப்படாதது. அளக்க இயலாதது.

8. எல்லாத் தேவர்களும் இந்திரனுன உன்னுடைய செயல்களை–உத்தமச் செயல்களை–பல விரதங்களைப் பங்கஞ் செய்யார்கள். சோதியையும் புவியையும் வானை யும் ஏந்துபவனுமான இந்திரன், சூரியனையும் உஷை யையும் பிறப்பித்தான்.

9. நீ துரோகமில்லாதவன். உன்னுடைய இந்த மகிமையானது உண்மை. நீ பிறந்தவுடன் ஸோமத் தைப் பருகினுய். வலியனுன உன்னுடைய ஆற்றலை சோதிகளும், நாட்களும், மாதங்களும், வருடங்களும் எதிர்க்கச் சக்தியற்றவை.

10. இந்திரனே! நீ உயர்ந்த இடத்திலே பிறந்த வுடன் உன்னுடைய மதத்துக்காக ஸோமத்தைப் பருகினுய். சோதியிலும் புவியிலும் பரவியபோது பழையவனுன நீ, சிருட்டியின் முதல் சிற்பியானுய். 2,747

11. இந்திரனுன உன்னிடமிருந்து பலர் தோன்றி ஞர்கள். மிக்க வலியனுன நீ, தன் பலத்தில் நம்பிக்கை யுள்ளவனும், தூங்கும் சலத்தைச் சூழ்ந்திருந்தவனுமான அகியைக் கொன்ருய்.

12. இந்திரனே! இந்த யக்ஞம் உன்னை வளர்க் கிறது. ஸோமம் பொழியப்படும் யக்ஞம் உன்னுல் விரும்பப்படுகிறது. யக்ஞாருகனுன நீ, யக்ஞத் தலைவனை யக்ஞத்தால் பாலிப்பாயாக. யக்ஞமானது உன்னுடைய வச்சிராயுதத்தை அஹியைக் கொல்ல உறுதிப்படுத்துக.

13. வழிபடுபவன் பாலனமளிக்கும் யக்ஞத்தால் இந்திரனை முற்படுத்தினுன். நான் பழைய ஸ்தோத்திரங் களால், இடைக்கால ஸ்தோத்திரங்களால், புதிய ஸ்தோத்திரங்களால் போற்றப்பட்ட இந்திரனை, புதிய செல்வத்தைப் பெற என் முன்னே அழைப்பேனுக.



14. நான் போற்றுவேன் என நினைத்தவுடன் அவ னுக்குத் துதிகளைக் கூறுகிறேன். நான் அவனைத் துன்ப தினத்துக்கு முன்பாகவே போற்றுவேன். இரு பக்கங்க ளிலிருந்து இந்திரன் அழைக்கப்படுங்கால் அவன் எங்களைத் தோணியைப் போல் கஷ்டத்திலிருந்து பத்திர மாய்க் கடத்திச் செல்வானுக.

15. அவனுக்காகக் கலசம் நிரப்பப்பட்டிருக்கிறது. இந்திரனை வரவேற்கவும். நான் அதை உனக்கு நீ பருக சலத்தைத் தன் கோசத்திலிருந்து ஊற்றும் சலதாரகனைப் போல் ஊற்றுகிறேன். பிரியமான ஸோமரஸங்கள் அவனை மதப்படுத்த இந்திரனைச் சுற்றிப் பெருகுக.

16. புருஹூதனே! ஆழ்ந்த கடல் உன்னைத் தடுக் காது. தொடரும் மலைகளும் உன்னை நிறுத்த ஆற்ற லற்றவை. உன் நண்பர்களால் அழைக்கப்பட்ட நீ, ஆழியிலிருக்கும் அகண்ட சுவாலையைத் தணித்தாய்; பசுக்களின் திடமாய்க் கட்டப்பட்ட தொழுவத்தைப் பிளந்தாய்.

17. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத் தின் தலைவனும், நமது துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களையழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறேம். 2,754.

## 33. இந்திரன்

### 267. காதினன்–விசுவாமித்திரன்

#### நதிகள்

1. மலைகளின் பக்கங்களிலிருந்து பாய்ந்து கடலுக்குச் செல்ல விருப்பமாகி, தளர்த்தப்பட்ட வாய் வடங்களோடு பரஸ்பரம் வேகமுடனுக முந்திக்கொள்ள விரும்பும் இரு குதிரைகளைப் போலும், தங்கள் கன்று

களைச் சுவைக்கத் துரிதமாகும் இரு அழகிய தாய்ப்பசுக்களைப் போலும், விபாசையும் சுதுத்திரியும் சலங்களோடு வேகமாய்ப் பெருகுகிறார்கள்.

2. நீங்கள் இந்திரனால் பிரேரிதமாகி, அவனுடைய ஆக்ஞைகளை விரும்பி, இலக்குக்குச் செல்லும் தேரிலிருப்பவர்களைப் போல் கடலுக்குப் போகிறீர்கள். பிரகாசிப்பவர்களான நீங்கள் ஒருமித்துப் பெருகி அலைகளோடு பொங்கி ஒருவரை ஒருவர் நாடுகிறீர்கள்.

3. நான் உத்தமத் தாயான உன்னிடம்-சுதுத்திரியினிடம்-வந்திருக்கிறேன். நாங்கள் பரந்திருப்பவளும் சௌபாக்கியவதியுமான விபாசையான உன்னிடம் வந்திருக்கிறோம். நீங்கள் இருவரும் ஒரே இடமான கடலுக்குக் கன்றுகளைச் சுவைக்க விரையும் தாய்ப்பசுக்களைப் போல் ஒருமித்துப் பாய்கிறீர்கள்.

4. நதிகள் கூறுகின்றன: நாங்கள் இந்த சலத்தால் நிலத்தை வளப்படுத்தி. தேவனால் செய்யப்பட்ட கடலை நோக்கிப் பாய்கிறோம். நாங்கள் பாய செலுத்தப்படுங்கால் எங்கள் பிரவாகத்தை எவனாலும் தடுக்க இயலாது. விப்பிரன் எதை விரும்பி எங்களை அழைக்கிறான்?

5. விசுவாமித்திரன் பேசுகிறான்: நான் ஸோமத்தைப் பறிக்கச் செல்லுகிறேன். என் விருப்பத்துக்கு இணங்கி ஓடாமல் ஒரு கணப்பொழுது நில்லுங்கள். குசிகனின் புதல்வனான நான் பாலனத்தை விரும்பி மகத்தான ஸ்தோமத்தால் சுதுத்திரியான உன்னை அழைக்கிறேன். 2,759

6. நதிகள் பேசுகின்றன: வச்சிரமேந்தும் இந்திரன் நதிகளைத் தடுத்த விருத்திரனைக் கொன்றபோது எங்களுடைய வழிகளை வெட்டினான். நல்ல கைகளுள்ள தேவனான ஸவிதா எங்கள் வழியில் எங்களைச் செலுத்தினான். நாங்கள் அவனுடைய ஆக்ஞைகளுக்குட்பட்டு மிகுந்த தாரைகளோடு பெருகுகிறோம்.



7. விசுவாமித்திரன்: அஹியை வெட்டித் துணித்த இந்திரனுடைய அந்த வீரச்செயல் எப்பொழுதும் போற்றத் தகுந்தது. அவன் தன் வச்சிரத்தால் தடை செய்தவர்களைத் துடைத்தான். பிறகு விரும்பும் இடத்துக்கு சலங்கள் பாய்ந்தன.

8. நதிகள் கூறுகின்றன: துதிப்பவனே! நீ இந்த மொழியும் மொழியையும் எங்களிடம் கோஷித்ததையும் மறக்காதே. வரப்போகும் சனங்கள் இதைப் போற்றுவார்கள். கவியே! சூக்தங்களிலே உன் அன்பை எங்களுக்குப் புலப்படுத்தவும். மனிதர்களின் நடுவே எங்களைத் தாழ்த்தாதே. உனக்கு வணக்கம்.

9. விசுவாமித்திரன் பேசுகிறான்: சகோதரிகளான நதிகளே! உங்களைப் பாடுபவனுடைய மொழிகளை அன்போடு செவியுறுங்கள். நான் தூரத்திலிருந்து தேரோடும் சகடத்தோடும் வந்திருக்கிறேன். நீங்கள் தாழ்ந்து வணங்குங்கள். சுலபமாய்த் தாண்டத்தக்கவராகுங்கள். நதிகளே! உங்கள் ஓட்டங்களோடு-சக்கரத்தின்-அச்சின் கீழே தாழுங்கள்.

10. நதிகள் பேசுகின்றன: கவியே! நீ தூரத்திலிருந்து தேரோடும் சகடத்தோடும் வந்திருக்கிறாய் எனக் கூறும் மொழிகளை நாங்கள் செவியுறுகிறோம். நாங்கள் தன் குழந்தைக்குப் பாலையளிக்கும் தாயைப் போலும், மனிதனைத் தழுவத் தாழும் யுவதியைப் போலும், உனக்குத் தாழ்ந்து வணங்குவோம். 2,764

11. விசுவாமித்திரன் பேசுகிறான்: நதிகளே! நீங்கள் என்னைக் கடக்கச் செய்தீர்கள். பரதர்களும் உங்களைக் கடந்து செல்வார்களாக. சலத்தைக் கடக்க விரும்பும் கணம்-படை-உங்களால் அனுமதிக்கப்பட்டு இந்திரனால் பிரேரிதமாகிக் கடந்து செல்க. பிறகு வேகத்தோடு உங்களுடைய பிரவாகங்கள் முன்போல் பெருகுக; நான் யக்ஞாருகர்களான உங்கள் ஸுமதியை வேண்டுகிறேன்.

12. பரதர்கள் பசுக்களை நாடிக் கடந்து சென்றார்கள். விப்பிரன் நதிகளின் ஸுமதியையடைந்தான். உங்கள் அலைகளோடு செல்வங்களைப் பொழியுங்கள் உணவையளியுங்கள்; செழிப்பியுங்கள்; நிரப்புங்கள்; வேகமாய்ப் பாயுங்கள்.

13. உங்களுடைய அலை நுகத்தின் கயிற்றுக்குக் கீழ் மோதுக. கட்டுக்களைப் பற்றுதீர்கள். பாபமற்றவர்களும், துன்பமளிக்காதவர்களும், தடைபடாதவர்களுமான இரு நதிகளும் பெருகாமலிருப்பார்களாக. 2,767.

## 34. இந்திரன்

### 268. காதினன்-விசுவாமித்திரன்

1. கோட்டைகளை இடிப்பவனும் செல்வத்தை ஏந்துபவனுமான இந்திரன், பகைவர்களை விலக்கி, தன் மின்னல்களால் தாஸனை அழித்தான். பல படைகளுள்ள இந்திரன் பிரம்மத்தால் பிரேரிதமாகி, தேகத்தோடு வளர்ந்து, சோதியையும் புவியையும் நிரப்பினான்.

2. நான், வலியனும் வணங்கத் தகுந்தவனுமான உன்னை அலங்கரித்து, அமிருதத்துக்காக மனப் பூர்வமான மொழிகளைக் கூறுகிறேன். இந்திரனே! நீ தேவ சனங்களுக்கும் மானிடப் பிரசைகளுக்கும் தலைவன்.

3. புகழ்ச் செயல்களுள்ள இந்திரன், விருத்திரனைக் கொன்றான். போரிலே எதிர்ப்பற்ற அவன், தன்னை அழிக்க எண்ணிய வஞ்சகர்களை வென்றான். துணிக்கப்பட்டு வனங்களிலே பதுங்கின அரக்கனைக் கொன்றான். இரவிலே மறைக்கப் பட்டிருந்த பசுக்களைப் புலப்படுத்தினான்.

4. சோதியைத் தருபவனும், தினங்களைத் தோற்றுவிப்பவனுமான இந்திரன், தன்னை விரும்புபவர்களோடு சேர்ந்தான். வெற்றியுள்ளவன் எதிர்ப்படைகளை ஜயித்தான். மானிடனுக்காகத் தினங்களின் கொடியை ஒளிப்படுத்தினான். பெரிய போருக்காக சோதியைப் பெற்றான்.



5. இந்திரன் உக்கிரமாய்ப் போர் நடத்தும் எதிர்ப் படைகளிலே வீரர்களுக்குப் பல செல்வங்களை வழங்கும் வீரத் தலைவனைப் போல் நுழைந்தான். போற்றுபவனுக்கு இந்த உஷைகளை ஊக்கப்படுத்தினான். அவன் இந்த உஷைகளின் பிரகாசமான காந்தியைத் தன் காந்தியால் உயர்த்தினான். 2,772

6. அவர்கள் இந்த மகத்தான இந்திரனின் மகத்தான, மேலான பல வீரச் செயல்களைப் போற்றுகிறார்கள். அவன் தன் பலத்தால் பலிஷ்டனான அரக்கனை அழித்தான். ஜயிக்கும் சக்தியுள்ள அவன் தன் மாயைகளால் தஸ்யுக்களைக் கொன்றான்.

7. தேவர்களின் தலைவனும் மானிடர்களின் விருப்பங்களைப் பூர்த்திசெய்பவனுமான அவன், உக்கிரப் போரிலே ஜயிக்கப்பட்ட செல்வத்தைத் தேவர்களுக்களித்தான். ஆதலால் விப்பிரர்களான கவிகள் வழிபடுபவனுடைய மனையிலே பதிகங்களோடு அவனுடைய வீரச் செயல்களைப் பாடுகிறார்கள்.

8. வழிபடுபவர்கள் ஜயமுள்ளவனும், சிறந்தவனும், பலத்தைத் தருபவனும், சோதியும் தேவிகளான சலங்களைப் பற்றுபவனும், விண்ணையும் வையத்தையும் இந்த வானத்தையுந் தந்தவனுமான இந்திரனை இன்புறுத்துகிறார்கள்—இன்புறுகிறார்கள்.

9. அவன் குதிரைகளைத் தந்தான். அவன் சூரியனையுந் தந்தான். இந்திரன் பலரைப் புட்டிப் படுத்தும் பசுவையுந் தந்தான். அவன் பொன் நிதியையுந் தந்தான். அவன் தஸ்யுக்களைக் கொன்று ஆரிய வர்ணத்தை-சனத்தை-பாலித்தான்.

10. இந்திரன் ஓஷதிகளையும் தினங்களையுந் தந்தான். அவன் வானையும் வனஸ்பதிகளையுந் தந்தான். அவன் மேகத்தைப் பிளந்தான். அவன் பகைவர்களையும் கலைத்தான். அவன் பகைவர்களை வசப்படுத்தினான். 2,777

11. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக, இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், நமது துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களை யழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,778

## 35. இந்திரன்

### 269. காதினன்-விசுவாமித்திரன்

1. இந்திரனே! வாயு தன் குதிரைகளை இணைத்தவுடன் சற்று நிற்பது போல், நீ தேரிலே குதிரைகளைச் சேர்த்தவுடன் சற்று நிற்கவும்-தாமதிக்கவும். எங்கள் முன்னே வா. ஸோமத்தைப் பருகவும். சுவாஹா! நாங்கள் உன் மதத்துக்காக ஸோமத்தையளிக்கிறோம்.

2. பரிபூரணமாய்ச் செய்யப்படும் இந்த யக்ஞத்துக்கு இந்திரனை ஏந்தி வர, துரிதமாய்ச் செல்லும் இரு பழுப்பு நிறக் குதிரைகளைத் தேரின் நுகங்களிலே பலரால் அழைக்கப்படும் உனக்காக இணைக்கிறேன்.

3. பொழிபவனும் உணவையளிப்பவனுமான நீ, இங்கு உன்னுடைய வலிய குதிரைகளைச் செலுத்தவும். பகைவர்களிடமிருந்து எங்களைப் பாலித்து வழிபடுபவர்களைக் காக்கவும். இங்கு உன் குதிரைகளை அவிழ்த்து விடு. அவற்றுக்குப் புல்லையளிக்கவும். நீயும் தினந்தோறும் தக்க உணவைப் புசிக்கவும்.

4. உன் நண்பர்களும், போரிலே துரிதமாய்ச் செல்பவையும். மந்திரத்தால் இணைக்கப்படுபவையுமான குதிரைகளை நான் இணைக்கிறேன். இந்திரனே! அனைத்தையும் அறிபவனே! எழுந்திரு; உன்னுடைய திரமான சுகமான தேரிலே ஏறு; ஸோமத்துக்கு வா.

5. வேறு யக்ஞகருத்தாக்கள் உன்னுடைய வலிமையுள்ள சுந்தர முதுகுள்ள குதிரைகளை ஈர்க்காமலிருப்பார்களாக. அவர்களைப் புறக்கணித்து எப்பொழுதும் இங்கு



வா. நாங்கள் பிழிந்த ஸோமங்களோடு உன்னைப் பூரணமாய்த் திருப்தி செய்வோம். 2,788

6. இந்திரனே! இந்த ஸோமம் உனக்காகப் பொழியப்பட்டிருக்கிறது. இங்கு வா. நல்ல மனமுடனுகவும், இடையருமல் பருகவும். இந்த யக்ஞத்திலே தருப்பையின் மீது அமர்ந்து இந்த ஸோமத்தை உன் உதரத்தினுள் செலுத்தவும்.

7. உனக்காகத் தருப்பை பரத்தப்பட்டிருக்கிறது. இந்திரனே! ஸோமம் பொழியப்பட்டிருக்கிறது. உன்னுடைய குதிரைகளுக்களிக்கப்பட்ட தானியங்கள் தயாராயிருக்கின்றன. தருப்பையிலே அமர்ந்துள்ள உனக்கு அவிகள் அளிக்கப்படுகின்றன. மருத்துக்களோடிருப்பவனும் பலரால் போற்றப்படுபவனுமான நீ பொழிபவனுயிருக்கிறாய்.

8. இந்திரனே! யக்ஞத் தலைவர்களும், மலைகளும் சலங்களும் உனக்கு இந்த ஸோமத்தை இனிமைப்படுத்தியிருக்கிறார்கள். அழகனும், நல்ல மனமுள்ளவனும், அறிஞனும், உன் வழிகளுக்கிசைந்த துதியை நன்கறிபவனுமான நீ வந்து இந்த ஸோமத்தைப் பருகவும்.

9. இந்திரனே! நீ மருத்துக்களோடு சேர்ந்து ஸோமத்தைப் பகிர்ந்து கொள்கிறாய். அவர்கள் போரிலே உன்னைப் பலப்படுத்தினார்கள். அவர்கள் உன்னுடைய படையுமாகிறார்கள். ஸோமத்தை விரும்பும் நீ, அவர்களோடு சேர்ந்து அக்கினியின் நாக்கோடு ஸோமத்தைப் பருகவும்.

10. துதியாருகனான இந்திரனே! நீ பொழியப்பட்டுள்ள ஸோமத்தை உன்னுடைய சொந்த ஊக்கத்தாலோ அல்லது அக்கினியின் நாக்காலோ பருகவும். சக்கரனே! அத்வர்யுவின் கையால் அளிக்கப்படும் அதைப் பருகவும்-அல்லது ஹோதாவின் கையிலிருந்து அவியின் அளிப்பைப் பெற்றுக்கொள்ளவும்.

11. நாங்கள் எங்கள் பாலனத்துக்காக இந்தப் போரிலே, புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், நமது துதிகளைச் செவியுறுபவனும், போர்களிலே பயங்கரனும் பகைவர்களையழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,789

## 36. இந்திரன்

### 270. காதினன்–விசுவாமித்திரன்

1. இந்திரனே! நீ நண்பர்களான மருத்துக்களை எப்பொழுதும் நாடுகிறாய். உன்னிடமிருந்து செல்வ தானத்தைப் பெற நாங்கள் அளிக்கும் இந்த அவியைப் பெற்றுக்கொள். அவன் ஒவ்வொரு ஸோமப் பொழிவிலும் செழிப்பிக்கும் அவிகளால் வளர்கிறான். மகத்தான செயல்களால் புகழுள்ளவனாகிறான்.

2. பூர்வதினங்களிலே இந்திரனுக்கு ஸோமங்கள் அளிக்கப்பட்டன. அதனால் அவன் மகானானான். காலத்தைக் கிரமப்படுத்தும் அவன் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனானான். இந்திரனே! இந்த உரிய அவிகளைப் பெற்றுக் கொள்ளவும். கற்களால் பிழியப்பட்ட பொழியும் பானத்தைப் பருகவும்.

3. இந்திரனே! பருகவும். பருமனாகவும். பழைய ஸோமங்களைப் போல் இப்பொழுது நாங்கள் அளிக்கும் புதிய ஸோமங்களும் உனக்குத் தோன்றுகின்றன. துதியாருகனே! நீ பழைய ஸோமங்களைக் குடித்தது போல் புதிய ஸோமங்களையும் பருகவும்.

4. மகானான இந்திரன் போரிலே ஜயிக்கிறான். பகைவர்களை எதிர்க்கிறான். அவனுடைய உக்கிர பலமும் உர உறுதியும் எழுகின்றன. பழுப்புக் குதிரைகள் உள்ளவனை ஸோமம் மதப்படுத்துங்கால் அவனைப் புவி அடக்காது; சோதியும் பிடிக்காது.



5. மகானும் உக்கிரனுமான இந்திரன் வீரச் செயல்களுக்காக வளர்கிறான். விருஷபனும் செல்வனுமான அவன் காவ்யத்தோடு இசைந்து செல்லுகிறான். அவனுடைய பசுக்கள் செல்வமளிப்பவையாய்ப் பிறப்பிக்கப்படுகின்றன. அவனுடைய பல தட்சிணைகளும் தோன்றுகின்றன. 2,794

6. அற்பமான ஸோமமன் வானிலிருக்கும் மகத்தான இந்திரனுக்குத் தங்கள் வழியிலே கடலுக்குப் பாயும் நதிகளைப் போலும், ஆழிக்கோடும் சலங்களைப் போலும் நோக்கத்துக்குச் செல்லும் தேரோட்டிகளைப் போலும் இன்பத்தையளிக்கச் செல்லுகிறது.

7. கடலோடு சேர விரும்பும் நதிகளைப் போல் கைகளுள்ள அறிஞர்கள் இந்திரனுக்காகப் பிழியப்பட்ட ஸோமத்தைப் பற்றுகிறார்கள். அவர்கள் ஸோமத்தைக் கறக்கிறார்கள். அவர்கள் அதைப் பவித்திரங்களாலும் இனிய தாரையாலும் சுத்தப்படுத்துகிறார்கள்.

8. ஸோமத்தால் நிறைந்துள்ள அவனுடைய உதரத்தின் இரு பக்கங்களும் ஏரிகளைப் போல் தோன்றுகின்றன. ஏனெனில் அவன் பல யக்ஞங்களிலே ஸோமத்தை யருந்தினான். அவன் யக்ஞத்தின் முதல் உணவுகளைப் புசித்தவுடன் விருத்திரனைக் கொன்றான். ஸோமத்தைக் கேட்டான்.

9. இந்திரனே! துரிதமாய்ச் செல்வத்தை ஏந்தி வா. எவனும் உன்னைத் தடுக்காமலிருப்பானாக. நாங்கள் உன்னைச் செல்வங்களின் செல்வபதி என அறிகிறோம். இந்திரனே! ஈகையே உன்னுடைய மகிமை. குதிரைகளுள்ளவனே! எங்களுக்குச் செல்வங்களையளிக்கவும்.

10. செல்வனான இந்திரனே! ஸாரமற்ற ஸோமத்தைப் பெறுபவனே! எல்லா நன்மைகளையும் ஏந்திவரும் மிகுந்த செல்வத்தை எங்களுக்களிக்கவும். அழகிய

கண்ணமுள்ள இந்திரனே! எங்களுக்குப் பல வீரர்களை யளிக்கவும் (கோர அங்கிரஸன்).

11. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், நமது துதிகளைச் செவியுறுபவனும், போர்களிலே பயங்கரனும், பகைவர்களையழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,800

# 37. இந்திரன்

## 271. காதினன்--விசுவாமித்திரன்

1. இந்திரனே! நாங்கள் உன்னை இங்கு, விருத்திரனைக் கொல்வதும் சண்டையில் ஜயிப்பதுமான பலத்துக்காக வருவிக்கிறோம்.

2. இந்திரனே! சதக்கிரதுவே! துதிப்பவர்கள் உன்னுடைய மனதையும் கண்களையும் எங்களிடம் இயக்குவார்களாக.

3. இந்திரனே! சதக்கிரதுவே! நாங்கள் பகைவர்களை ஜயிக்க எங்களுடைய எல்லாப் பாக்களிலும் உன்னுடைய நாமங்களைக் கூறுகிறோம்.

4. நாங்கள், மனிதர்களைத் தாங்குபவனும், நூறு சிறப்புக்களோடிருப்பவனும், பலரால் போற்றப்படுபவனுமான இந்திரனுக்குத் துதியைக் கூறுகிறோம்.

5. இந்திரனே! நான், விருத்திரர்களை விலக்கவும், களத்திலே உணவைப் பெறுவதற்கும், பலரால் போற்றப்படும் உன்னை அழைக்கிறேன். 2,805

6. இந்திரனே! நீ போர்களிலே ஜயிப்பவனாகவும். சதக்கிரதுவே! விருத்திரனைக் கொல்ல உன்னிடம் வேண்டுகிறோம்.

7. இந்திரனே! எங்களோடு செல்வங்களிலே, சமரிலே, எதிர்ப் படைகளிலே, பலத்திலே, போராடுபவர்களை ஜயிக்கவும்.



8. இந்திரனே! சதக்கிரதுவே! நீ எங்களைப் பாலிக்க, பிரகாசிப்பதும், விழித்திருப்பதும், மிக்கத் திறமிருப்பதுமான ஸோமத்தைப் பருகவும்.

9. இந்திரனே! சதக்கிரதுவே! நான் பஞ்ச சனங்களிலிருக்கும் உன்னுடைய ஆற்றல்களை விரும்புகிறேன்.

10. இந்திரனே! எங்களால் அளிக்கப்படும் மகத்தான உணவு உன்னிடம் சேர்க. மற்றவர்களால் மூந்தப்படாத செல்வத்தை எங்களுக்களிக்கவும். உன் பலத்தை எங்கள் அவிகளால் பலப்படுத்துகிறோம்.

11. சக்கரனே! இந்திரனே! வச்சிராயுதம் ஏந்தும் நீ. தூரத்திலிருந்தாலும் அருகிலிருந்தாலும் எங்களிடம் வா. நீ எங்கிருந்தாலும் அங்கிருந்து இங்கு வா. 2,811

# 38. இந்திரன்

## 272. பிரஜாபதி விசுவாமித்திரன்

1. இழுப்பதிலே நல்லாற்றலுள்ள துரிதமான குதிரையைப் போலும், மரத்தை இழைக்கும் தச்சனைப் போலும் இயங்கும் நீ, இந்திரனுக்குத் துதியைக் கூறவும். நான், இந்திரனுக்குப் பிரியமான, உத்தமமான செயல்களிலே அறிவு நிறைந்த கவிகளைக் காண விரும்புகிறேன்.

2. பயின்ற மனங்களோடும் நல்ல செயல்களோடும் சோதியைக் கற்பித்த கவிகளின் ஜன்மத்தைத் தேவர்களிடங் கேட்கவும். மனோவேகமுள்ள இந்தத் துதிகள் உன் ஆற்றலை வலுப்படுத்தி இந்தத் தருமத்திலே-யக்ஞத்திலே-உன்னிடஞ் சேர்க.

3. இங்கு மருமமான செயல்களை நடத்தி அவர்கள்–கவிகள்–சோதியையும் புவியையும் க்ஷத்திரத்துக்காக ஒருமைப்படுத்தினார்கள். அவர்கள் மருமமான தன்மைகளைத் தரித்து க்ஷத்திரத்துக்காக சோதியையும் புவியையும் எழில்படுத்தினார்கள். கவிகள் மருமங்களையறிந்து தங்களாற்றலால் சோதி புவிகளிலுள்ள பொருள்களைப் புலப்

படுத்தினார்கள். கவிகள் மாத்திரைகளால் அவற்றின் எல்லைகளைக் கட்டுப்படுத்தினார்கள். அவர்கள் அவற்றைப் பரஸ்பரம் ஐக்கியமாக இணைத்தார்கள். அவை பரந்தும் மகத்தாயுமிருந்தன. அவற்றைத் தாங்க வானை நிறுத்தினார்கள். அளவுகளால் அளந்து பரந்த உலகங்களை நிலைப்படுத்தினார்கள். தனித்திருந்த பெரிய உலகங்களைப் பாலனஞ்செய்யத் திரப்படுத்தினார்கள்.

4. தேரிலே நின்ற இந்திரனைக் கவிகள் அலங்கரித்தார்கள். எழில் அணிந்த அவன் சுய சோதியோடு பரவுகிறான். பொழிபவனுடைய செயல்கள் மகத்தானவை. விசுவரூபனான அவன் அமுதங்களை வசப்படுத்துகிறான்.

### இந்திரா வருணர்கள்

5. பொழிபவனும், மூந்துபவனும், மூத்தவனுமான இந்திரன் சலங்களைத் தோற்றுவித்தான். அவை அவனுடைய தாகத்தைத் தணிப்பவையாயிருக்கின்றன. சோதியின் பேரர்களும் அரசர்களுமான இந்திரா வருணர்களே! பிரகாசமாயுள்ள யக்ஞத்தின் பாக்களால் நீங்கள் க்ஷத்திரத்தை ஏந்துகிறீர்கள். 2,816

6. அரசர்களான இந்திரா வருணர்களே! வியாபகமான மூன்று யக்ஞங்களையும் வண்ணப்படுத்துங்கள் இந்தக் குழுவிலே அவற்றைப் பூரணப்படுத்துங்கள். இந்திரனே! நீ யக்ஞத்துக்குச் சென்றாய். நான் இந்த யக்ஞத்திலே, காற்றிலே சலனமாகும் கேசங்களுள்ள கந்தர்வர்களைக் கண்டேன்.

7. பொழிபவனுக்காகப் பல நாமங்களுள்ள தாய்ப் பசுவின் இனிய பாலைக் கறப்பவர்கள், அசுரர்களின் பலவித ஆற்றல்களையணிந்து, பேரறிஞர்களாகி, இந்திரனில் தங்களின் சுயரூபத்தை ஸ்தாபித்தார்கள்.

8. என்னொளியில் சேர்ந்துள்ள இந்த ஸவிதாவின் சோதியிலிருந்து என் பொன் கதிரை எவனும் தனித்துக்



காணான். துதியால் திருப்தியான அவன் தன் குழந்தையைப் பாலிக்கும் தாயைப் போல் விசுவத்தைச் சீராட்டும் சோதியையும் புவியையும் பாலிக்கிறான்.

9. நீங்கள் இருவரும் பழையவனுயுள்ள வழிபடுபவனுக்கு மகத்தான தேவியான ஸ்வஸ்தியை அளியுங்கள்-சாதியுங்கள். எங்களை எங்கும் பாலியுங்கள். எல்லா அறிஞர்களும்-தேவர்களும்-கோபனைப்போல் பேசும் இந்திரனுடைய பலவிதச் செயல்களைக் காண்கிறார்கள்.

10 நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களை யழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,821

## 39. இந்திரன்

### 273. காதினன்–விசுவாமித்திரன்

1. இருதயத்திலிருந்து ஊக்கப்படுவதும், துதிக்கர்த்தாக்களால் கற்பிக்கப்பட்டதுமான தோத்திரம், தலைவனை உன்னை நோக்கி வருகிறது. யக்ஞத்திலே கூறப்படுங்கால், அது உன்னை எழுப்புகிறது. இந்திரனே! உனக்காகத் தோன்றும் இத்தோத்திரத்தைத் தெரிந்து கொள்ளவும்.

2. உஷையின் முன்னே பிறப்பிக்கப்பட்ட பனுவல் காலை யக்ஞத்திலே கூறப்படுங்கால், இந்திரனை எழுப்புகிறது. எங்களுடைய புராதனமான பிதாக்களிடமிருந்து வந்த இந்த தோத்திரம் மங்கலமானது; வெண்மையான ஆடைகளை அணிந்திருக்கிறது.

3. இரட்டையர்களின் தாய்-உஷை-இரட்டைகளைப் பிறப்பித்தாள். என் நாக்கின் நுனி துடித்தது. ஆனால் தணிந்து நின்றது. சூரியனின் துவக்கத்திலே-மூலத்திலே-இருளைக் கொன்று பிளந்த இரட்டையர்கள்

தோன்றும் தேகங்களோடு – செயல்களோடு – சேர்ந்து செல்லுகிறார்கள்.

4. பசுக்களை மீட்கப் போர் புரிந்த எங்கள் பிதாக்களை மனிதர்களின் நடுவே எவனும் நிந்திக்கவில்லை. ஏனெனில் மகிமையுள்ள இந்திரன் அவர்களைப் பலப்படுத்தினான். மகத்தான செயல்களை நடத்திய இந்திரன் அவர்களுக்குப் பசுக்களின் மந்தைகளை அளித்தான்.

5. நவக்வர்களான நண்பர்களோடுள்ள நண்பனான இந்திரன், வீரர்களோடு பசுக்களுக்குத் தன் முழந்தாள்களில் குனிந்து தேடும் இடத்திலே பத்து தசக்வர்களோடு சேர்ந்து இருட்டிலே மறைந்து சாய்ந்திருந்த சூரியனைக் கண்டான். 2,826

6. இந்திரன், தாய்ப் பசுவில் திரண்டிருந்த இனிய பாலைக் கண்டான்; அப்பால் மறைக்கப்பட்டிருந்த கால்களும் குளம்புகளுமுள்ள பசுக்களின் மந்தையை வெளிப்படுத்தினான். பயமுள்ள இந்திரன், குகையிலே மறைந்திருந்தவனும், வானிலே திரிந்தவனுமான அசுரனை வலது கையிலே ஏந்தினான்.

7. பகுத்தறியும் இந்திரன், சோதியை இருட்டிலிருந்து தனிப்படுத்தினான். நாங்கள் தீமையிலிருந்து விலகி பயமற்ற இடத்திலிருப்போமாக. ஸோமத்தைப் பருகுபவனும் ஸோமத்தால் புட்டிப்பவனுமான நீ, பகைவர்களைக் கலைப்பவனான வழிபடுபவனுடைய இந்தத் துதிகளால் இன்பமாகவும்.

8. யக்ஞத்துக்காக இரு உலகங்களையும் சூரியன் ஒளிப்படுத்துவானாக. நாங்கள் தாழ்ந்தும் தீமையிலிருந்து தூரத்திலுமிருப்போமாக. வசுக்களும் நலத்துக்கு நன்கு கடத்துபவர்களுமான நீங்கள் ஈகையுள்ள மனிதனுக்குச் செழிக்கும் செல்வத்தையளியுங்கள்.

9. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக இந்தப் போரிலே, புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களையழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறேன். 2,830



## 40. இந்திரன்

### 274. காதினன்–விசுவாமித்திரன்

1. இந்திரனே! விருஷபனே! நாங்கள் ஸோமம் பிழியப்படுங்கால், உன்னை அழைக்கிறோம். நீ மதமளிக்கும் பானத்தைப் பருகவும்.

2. இந்திரனே! ஆற்றலைத் தரும் ஸோமரஸத்தை விரும்பவும். திருப்தியளிக்கும் ஸோமத்தைப் பருகவும்; உட்கொள்ளவும்.

3. இந்திரனே! சனங்களின் தலைவனும் துதிக்கப்படுபவனுமான நீ, எங்களுடைய செல்வந் தரும் யக்ஞத்தைச் செழிப்பிக்கவும்.

4. இந்திரனே! வீரர்களின் தலைவனே! பொழியப்பட்ட இந்த ஸோமரஸங்கள் மதமளிப்பவை; பிரகாசிப்பவை; இவை உன்னிடத்துக்குச் செல்லுகின்றன.

5. இந்திரனே! பொழியப்பட்டுள்ள இந்த உத்தம ஸோமங்களை உன் உதரத்தினுள் ஊற்றிக் கொள்ளவும். துலங்கும் இத்திவலைகள் சோதியிலே உன்னோடு நிலைக்கின்றன. 2,835

6. இந்திரனே! துதியால் போற்றப்படும் நீ, எங்களுடைய இந்த ஸோமத்தைப் பருகவும். நீ இனிய தாரைகளால் நனைக்கப்படுகிறாய். எங்களுடைய புகழ் உன்னால் அளிக்கப்பட்ட தானம்.

7. வழிபடுபவனுடைய செல்வங்கள் இந்திரனுக்குச் செல்லுகின்றன. அவை தவறாதவை. அவன் ஸோமத்தைப் பருகி வலியனாகிறான்.

8. விருத்திரனைக் கொல்லும் நீ, தூரத்திலிருந்தாலும், அருகிலிருந்தாலும் எங்களிடம் வா. எங்களுடைய இந்த மொழிகளை ஏற்றுக் கொள்ளவும்.

9. இந்திரனே! நீ தூரத்திலிருந்தோ, அருகிலிருந்தோ அல்லது இடைவெளியிலிருந்தோ அழைக்கப்பட்டாலும் அங்கிருந்து நீ எங்களிடம் வரவும். 2,839

## 41. இந்திரன்

### 275. காதினன்-விசுவாமித்திரன்

1. இந்திரனே! வச்சிராயுதம் ஏந்துபவனே! எங்களுடைய யக்ஞத்திலே நீ ஸோமத்தைப் பருக அழைக்கப்படுங்கால் நீ என்னிடம் உன்னுடைய குதிரைகளோடு வரவும்.

2. தருந்த பருவத்திலே ஹோதா அமர்த்தப்பட்டிருக்கிறன். இணைக்கப்பட்ட தருப்பை பரத்தப்பட்டிருக்கிறது. காலையிலே ஸோம ரஸத்தைப் பிழிய கற்கள் வைக்கப்பட்டிருக்கின்றன.

3. தோத்திரங்களை ஏந்தும் உனக்கு இந்தத் தோத்திரங்கள் எங்களால் அளிக்கப்படுகின்றன. தருப்பையின் மீது அமரவும். சூரனே! புரோடாசத்தை அருந்தவும்.

4. இந்திரனே! விருத்திரனைக் கொல்பவனே! துதியால் திருப்தியாகும் நீ, எங்களுடைய இந்தத் துதிகளாலும் எங்களுடைய நித்திய யக்ஞங்களில் தோன்றும் தோத்திரங்களாலும் இன்பமாகவும்.

5. எங்களுடைய துதிகள், மகானும் ஸோமத்தைப் பருகுபவனுமான இந்திரனை, கன்றுகளைத் தாய்ப் பசுக்கள் போல் சுவைக்கின்றன. 2,844

6. மகத்தான செல்வத்துக்காக எங்களால் அளிக்கப்படும் ஸோமத்தைப் பருகி, நீ உன் தேகத்தோடு இன்பமாகவும், வழிபடுபவனை நிந்தனைக்குட்படுத்தாதே.



7. இந்திரனே! மனைகளை அளிக்கும் உன்னை விரும்பும் நாங்கள் அவிகளைத் தந்து உன்னைப் போற்றுகிறோம். நீ எங்களை விரும்புபவனாகவும்.

8. இந்திரனே! குதிரைகளை நேசிக்கும் நீ தூரத்திலிருக்குங்கால் அவற்றை நுகத்திலிருந்து அவிழ்க்காதே. குதிரைகளோடு எங்கள் முன்னே வா. சுவதாவுள்ளவனே! இந்த யக்ஞத்திலே இன்புறவும்.

9. நீண்ட கேசமுள்ளவையும் நெய் பூசப்பட்டதுமான குதிரைகள், இந்திரனே! உன்னைத் தருப்பையின் மீது அமர்த்த, உன்னை சுகமான தேரிலே ஏந்தி இங்கு வருக. 2,848

## 42. இந்திரன்

### 276. காதினன்-விசுவாமித்திரன்

1. இந்திரனே! உன்னுடைய, எங்களிடம் அநுகூலமாயுள்ள குதிரைகள் இணைக்கப்பட்ட தேரில் பொழியப்பட்டுள்ளதும், பாலோடு கலந்திருப்பதுமான இந்த ஸோமத்துக்கு வா.

2. இந்திரனே! கற்களால் அழுத்தப்பட்டு, தருப்பை மீது வைக்கப்பட்டதும், மதமளிப்பதுமான இந்த பானத்துக்கு வா. ரஸம் நிறைந்திருக்கிறது. நீ திருப்தியாகும் வரை பருகவும்.

3 இங்கிருந்து இங்ஙனம் கூறப்படும் என் துதிகள் அவன் ஸோமத்தைப் பருக ஏந்தி வர இந்திரனிடம் செல்க.

4. நாங்கள் இந்த யக்ஞத்திலே இந்திரன் ஸோமத்தைப் பருக அவனை ஸ்தோமங்களோடு அழைக்கிறோம். மிக்க அழைக்கப்படும் அவன் இங்கு வருவானாக.

5. இந்திரனே! இந்த ஸோமங்கள் பிழியப்பட்டிருக்கின்றன, சதக்கிரதுவே! அவற்றை உன் உதரத்தினுள் ஊற்றிக் கொள்ளவும் – ஏந்திக் கொள்ளவும். நீ உணவில் செல்வனுயிருக்கிறாய். 2,853

6. கவியே! நாங்கள் உன்னைப் போர்களில் ஜயிப்பவனும் செல்வத்தைப் பற்றுபவனுமறிகிறோம். ஆதலால் நாங்கள் உன்னிடம் செல்வங்களை விரும்புகிறோம்.

7. இந்திரனே! நீ எங்களுடைய யக்ஞத்துக்கு வந்து கற்களால் பிழியப்பட்டதும், பாலோடும் யவத்தோடும் கலக்கப்பட்டதுமான இந்த ஸோமத்தைப் பருகவும்.

8. இந்திரனே! நான் ஸோமத்தை உன்னுடைய பானத்துக்காக உன்னுடைய சொந்த இடத்துக்குச் செலுத்துகிறேன். அது உன்னுடைய இருதயத்தை இன்புறுத்துக.

9. உன் பாலனத்தை விரும்பும் குசிக வம்சத்தில் வந்த நாங்கள், இந்திரனே! பழையவனான உன்னை அழைக்கிறோம். 2,857

## 43. இந்திரன்

### 277. காதினன்-விசுவாமித்திரன்

1. உன்னுடைய தேரின் பீடத்திலே ஏறி எங்களிடம் வரவும். இந்தப் பழைய ஸோமம் உன்னுடையது. உன்னுடைய பிரியமான நண்பர்களை-குதிரைகளை-தருப்பைக்காக அவிழ்த்து விடவும். அவிகளை ஏந்தி வரும் இந்த மனிதர்கள் உன்னை அழைக்கிறார்கள்.

2. சூரியனான இந்திரனே! எங்களுடைய வாழ்த்துக்களைப் பெற்றுக்கொள்ள பல சனங்களைக் கடந்து இங்கு வா. இந்திரனே! உன்னுடைய நட்பை நாடி துதிக்கக் கற்பிக்கப்பட்ட ஸ்தோமங்கள் – எங்களுடைய இந்த தோத்திரங்கள் உன்னை அழைக்கின்றன.

3. தேவனான இந்திரனே! நீ பிரியமுடனாகும், உன் குதிரைகளோடு எங்களுடைய உணவைச் செழிப்பிக்கும் இந்த யக்ஞத்துக்கு வா. நான் உனக்கு நெய்யோடு



உணவையளித்து ஸோமங்களின் ஸதனத்திலே துதிகளோடு உன்னை அழைக்கிறேன்.

4. வலியவையும், நல்ல அங்கங்களுள்ளவையும், சுமையை நன்கு ஏந்துபவையுமான இரு குதிரைகள் உன்னை இங்கு ஏந்தி வருக. நாங்கள் தாங்கி வரும் யவங் கலந்த அவியை ஏற்று நண்பனான இந்திரன் நண்பனின் துதிகளைச் செவியுறுவானாக.

5. சனங்களின் பாலகனாக என்னைச் செய்யாயோ? உக்கிரனான மகவானே! என்னை அவர்களுக்கு அரசனாகச் செய்யவும். என்னை ரிஷியாகச் செய்யவும். என்னை ஸோமத்தைப் பருகுபவனாகச் செய்யவும். எனக்கு அழியாத செல்வத்தையளிக்காயோ? 2,862

6. இந்திரனே! உன்னுடைய தேரிலே இணைக்கப்பட்டவையும், பானத்தால் ஒப்பாக மதப்பட்டவையும், வலியவையுமான இரு குதிரைகள் உன்னை எங்கள் முன்னே ஏந்தி வருக. அவை இந்திரனுடைய பகைவர்களை யழிப்பவை. அவை இந்திரனுடைய கையால் பிரியமாய்த் தேய்க்கப்பட்டு, தடவப்பட்டு, வானின் மண்டலங்களிலே துரிதமாய்ப் பாய்ந்து அவற்றை இரண்டாகப் பிளப்பவை போல் பரவுகின்றன.

7. நீ விரும்பியபோது பருந்தினால் ஏந்தி வரப்பட்டதும், பகைவர்களைத் தாழ்த்தும் பலமளிப்பதும், மேகங்களைப் பிளக்கும் ஊக்கமளிப்பதும், பொழியும் கற்களால் பிழியப்பட்டதும், பொழிவதுமான ஸோமத்தைப் பருகவும்.

8. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக, இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களை யழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,865

# 44. இந்திரன்

## 278. காதினன்-விசுவாமித்திரன்

1. இந்திரனே! இந்த விரும்பத் தகுந்த ஸோமம் பழுப்பான கற்களால் உனக்குப் பிழியப்படுக. நீ இன்பமாகி உன் கபில நிறக் குதிரைகளோடு வா. உன்னுடைய பொன்னிறத் தேரிலே ஏறவும்.

2. நீ ஸோமத்தை விரும்பி உஷையைப் போற்றுகிறாய். நீ ஸோமத்தை விரும்பி சூரியனை ஒளிப்படுத்துகிறாய். கபில நிறக் குதிரைகளுள்ளவனே! நீ எங்கள் விருப்பங்களை அறிந்து, ஆய்ந்து, எங்களுக்கு எல்லாச் செல்வங்களையும் செழிப்பிக்கிறாய்.

3. இந்திரன் பொன்கதிருள்ள சோதியைத் தாங்குகிறான். கபில பசுமை நிறமுள்ள புவியைத் தாங்குகிறான். பொன்னிற சோதியும் புவியும் இந்திரனுக்கு மிகுந்த உணவைத் தருகின்றன. அவற்றின் நடுவே ஹரி-பொன்னன்-சலனமாகிறான்.

4. பொன் விருஷபன் பிறந்தவுடன் சோதி மண்டலத்தையெல்லாம் ஒளிப்படுத்துகிறான். பொன் குதிரைகளுள்ள அவன் பொன்னாயுதத்தை ஏந்துகிறான். அவன் கைகளிலே பொன் வச்சிரமிருக்கிறது.

5 இந்திரன் பிரகாசிப்பதும், விரும்பத் தகுந்ததும், மின்னல்களால் சூழப்பட்டிருப்பதுமான வச்சிரத்தைப் புலப்படுத்தினான். பொன்னிறக் கற்களால் பிழியப்பட்ட ஸோமத்தைப் புலப்படுத்தினான். பொன் குதிரைகளால் பசுக்களை வெளிப்படுத்தினான். 2,870.

# 45. இந்திரன்

## 279. காதினன்-விசுவாமித்திரன்

1. இந்திரனே! உன்னுடைய களிப்புள்ளவையும், பழுப்பு நிறமுள்ளவையும், மயில் தோகை போல் கேசங்களுள்ளவையுமான குதிரைகளோடு வா. எவரும்



உன்னைப் பறவையைத் தடுக்கும் வலைகளுள்ள வேடர்களைப் போல் தடுக்காமலிருப்பானாக. பாலைவனங்களைக் கடப்பது போல் அவர்களைக் கடந்து வா.

2. விருத்திரர்களைக் கொல்பவனும், மேகத்தைப் பிளப்பவனும், சலங்களைச் செலுத்துபவனும், புரங்களை உடைப்பவனும், வலிய சத்துருக்களைச்சிதைப்பவனுமான இந்திரன் தன் குதிரைகளை எங்களிடம் செலுத்தத் தேரிலே ஏறினான்.

3. நீ ஆழமான கடல்களை சலத்தால் நிரப்புவது போல் வினைத்திட்பனைப் பசுக்களைப் பாலிக்கும் நல்ல கோபன் போல் பரிபாலிக்கிறாய். புல்லைப் பற்றும் பசுக்களைப் போல் நீ ஸோமத்தைப் பற்றுகிறாய். ஏரிக்குப் பாயும் ஓடைகளைப் போல் உனக்கு ஸோமரஸங்கள் பாய்கின்றன.

4. நாங்கள், பகைவர்களிடமிருந்து பாலனமாக எங்களுக்குச் செல்வங்களை, வயது வந்த புதல்வனுக்கு அவனுடைய பாகத்தையளிக்கும் தந்தையைப் போலளிக்கவும். இந்திரனே! எங்கள் விருப்பங்களுக்கேற்ற செல்வத்தை மரத்திலிருந்து பழத்தைக் கீழே ஏந்திவரும் கொளுவியைப் போல் எங்களுக்குக் கீழே தாழ்த்தவும். 2,874

5. இந்திரனே! நீ செல்வனாயிருக்கிறாய். நீ சுவர்க்கத்தின் தலைவன்; இனிய மொழியுள்ளவன்; மிக்கப் புகழுள்ளவன்; பலரால் போற்றப்படுபவன்; நீ பலத்தோடு பலப்பட்டு எங்களுக்கு மிக்க உணவளிப்பவனாகவும். 2,875

# 46. இந்திரன்

## 280. காதினன்-விசுவாமித்திரன்

1. இந்திரனே! போர் வீரனும், விருஷபனும், செல்வபதியும், உக்கிரனும், முதியவனும், இளைஞனும், பகைவர்களைத் தாழ்த்துபவனும், தேயாதவனும், வலியனும், புகழுள்ளவனுமான உன்னுடைய வீரச் செயல்கள் மகத்தானவை.

2. மகிஷனே! உக்கிரனே! நீ மகானுயிருக்கிருய்; செல்வங்களைப் பற்றுகிருய்; வீரச் செயல்களால் பகைவர்களை ஜயிக்கிருய்; நீ ஒருவனே எல்லா உலகத்தின் தலைவனுயிருக்கிருய்; பகைவர்களிடம் போர் செய்யவும். சனங்களை நிலைப்படுத்தவும்.

3. பிரகாசிப்பவனும், அனைத்திலும் எல்லையற்றவனும், ஸோமமுள்ளவனுமான இந்திரன், எல்லா மூலப்பொருள்களையும் கடந்தவன். பலத்திலே தேவர்களை முந்தியவன். பரப்பிலே சோதி புவிகளையும் விரிந்த மகத்தான வானத்தையுங் கடந்தவன்.

4 நித்தியமாய்ப் பொழியப்படும் ஸோம ரஸங்கள், பரந்தவனும், ஆழ்ந்தவனும், பிறப்பிலிருந்தே உக்கிரனும், விசுவவியாபகனும், துதிப்பவர்களைப் பாலிப்பவனுக்குக் கடலுக்குப் பாயும் நதிகளைப்போல் பாய்கின்றன.

5. இந்திரனே! சோதியும் புவியும் ஸோமத்தைக் கருவைத் தரிக்கும் தாயைப் போல் தரிக்கிருர்கள். விருஷபனே! அத்வர்யுக்கள் அந்த ஸோமத்தை உனக்குப் பொழிகிருர்கள். நீ பானஞ் செய்ய அதை அவர்கள் சுத்தப் படுத்துகிருர்கள். 2,880

## 47. இந்திரன்

### 281. காதினன்–விசுவாமித்திரன்

1. இந்திரனே! விருஷபனே! மருத்துக்களோடிருப்பவனே! போருக்காக நீ மதப்பட, மற்ற அவிகளுக்குப் பிறகு அளிக்கப்படும் ஸோமத்தைப் பருகவும். களிப்புறுத்தும் ஸோமதரங்கத்தை உன் உதரத்தினுள் ஊற்றிக் கொள்ளவும். நீ பூர்வத்திலிருந்தே ஸோமத்தின் தலைவனுயிருக்கிருய்.

2. இந்திரனே! சூரனே! மருத்துக்களின் படையால் பின்பற்றப் படுபவனும், அதனுடன் இன்புறுபவனுமான நீ, ஸோமத்தைப் பருகவும். ஏனெனில் நீ விருத்திரர்களைக் கொல்பவன்; நீ அறிஞன்; பகைவர்களை அழிக்



கவும்; எதிர்ப்பவர்களை விலக்கவும்; பிறகு எங்களை எங்கும் அபயப்படுத்தவும்.

3. ருதுக்களோடு சேர்ந்து ஸோமத்தைப் பருகும் நீ, தேவர்களும் நண்பர்களுமான மருத்துக்களோடு சேர்ந்து எங்களால் அளிக்கப்படும் ஸோமத்தைப் பருகவும். ஏனெனில் போரிலே அந்த மருத்துக்கள் உனக்குப் பாலனமளித்து உன்னை இன்புறுத்தினுர்கள். உன்னைப் பின்பற்றிப் பலப்படுத்தினுர்கள். அதனுல் நீ விருத்திரனைக் கொன்ருய்.

4. செல்வனே! அஹியைக் கொல்ல உன்னை ஊக்கப்படுத்தியவர்களும், சம்பரனேடு போர் புரிய உனக்கு உதவி செய்தவர்களும், பசுக்களை மீட்கத் துணை செய்தவர்களும், விப்பிரர்களும், உன்னை மதப்படுத்தியவர்களுமான மருத்துக்களின் படையோடு-சேர்ந்து-இந்திரனே! நீ ஸோமத்தைப் பருகவும்.

5. நாங்கள் எங்களுடைய புதிய பாலனத்துக்காக இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களை யழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிருேம். 2,885

## 48. இந்திரன்

### 282. காதினன்–விசுவாமித்திரன்

1. பொழிபவனும் பிறந்தவுடன் விரும்பத் தகுந்தவனும் பிழியப்பட்ட ஸோமமளிப்பவனைப் பாலிப்பானுக. இந்திரனே! பாலுடன் கலக்கப்பட்ட சுத்தமான ஸோமத்தை மற்ற தேவர்களுக்கு முன்னதாகவே விருப்பம் போல் நீ பருகவும்.

2. நீ பிறந்த தினத்திலே மலையிலிருந்த இந்த ஸோமலதையின் அமுதத்தை இட்டம்போல் பருகினுய். உன்னுடைய மகத்தான தந்தையின்–கசியபனுடைய-

மனையிலே, உன்னைப் பிறப்பித்த யுவதியான தாய் -அதிதி-தன் ஸ்தனத்தை அளிப்பதற்கு முன்னே உனக்கு ஸோமத்தைத் தந்தாள்.

3. குழந்தை தாயினிடஞ் சென்று உணவைக் கேட்டான். அவன் அவளுடைய ஸ்தனத்திலே தீவிரமான ஸோமத்தைக் கண்டான். அறிஞனான அவன் பகைவர்களை விலக்கிச் செல்லுகிறான். அவன் பலவித ஆற்றலைச் செலுத்தி மகத்தான வீரச் செயல்களை நடத்தினான்.

4. உக்கிரனும், எதிர்ப்பிலே துரிதனும், ஜயிக்கும் சக்தியுமுள்ள அவன், தன் தேகத்தைத் தன்னிஷ்டம் போல் செய்து கொண்டான். தன் சுய பலத்தால் துவஷ்டாவை ஜயித்து ஸோமரஸத்தை எடுத்துச் சென்றான். சிலுவங்களில் வைத்திருந்த ஸோமத்தைப் பருகினான்.

5. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக, இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களை யழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,890

## 49. இந்திரன்

### 283. காதினன்-விசுவாமித்திரன்

1. ஸோமத்தைப் பருகி சனங்கள் தங்கள் விருப்பங்களை எவனால் அடைகிறார்களோ அந்த மகத்தான இந்திரனை நான் போற்றுகிறேன். வலியர்களான சோதியாலும், புவியாலும், தேவர்களாலும், விபுவாலும் கற்பிக்கப்பட்டவனும், விருத்திரர்களைக் கொல்பவனும், மகத்தான செயல்களை நடத்துபவனுமான இந்திரனைப் போற்றுகிறேன்.

2. குதிரைகளால் ஏந்தப்படும் அவன் போரிலே புகழுள்ளவனாகி முந்துகிறான். பகைப் படைகளை இரண்டாகப் பிளக்கிறான். அவனை எவனும் முந்தான். ஆட்சி



யின் தலைவனான அவன் வீரர்களான மருத்துக்களால் காக்கப்பட்டு, போருக்குத் துரிதமாகிறான். அவன் சமரில் எதிரி கொல்லும் ஆற்றல்களோடு தஸ்யுவின் ஆயுளை யழிக்கிறான்.

3. மிக்க வலியனான அவன், பகைப் படைகளின் நடுவே போர்க் குதிரையைப் போல் பாய்ந்து சோதியிலும் புவியிலும் பரவி, செல்வ மழையைப் பெய்கிறான். அவன் யக்ஞத்திலே அவிகளால் பகனைப் போல் போற்றத் தகுந்தவன். அவன் துதிப்பவனுக்குத் தந்தையைப் போலிருப்பவன். அவன் அழகன்; அழைக்கத் தகுந்தவன்; உணவைத் தருபவன்.

4. அவன் சோதியையும் புவியையும் தாங்குகிறான். காற்றே அவனுடைய தேர். எங்குமிருப்பவனும் மேலே செல்பவனுமான அவன், வசுக்களின் படையோடு போகிறான். அவன் இரவை மறைத்து, சூரியனை ஒளிப்படுத்தி, தி்ஷணையைப் போல் சக்தியையும் செல்வங்களையும் தருகிறான்.

5. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக, இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களை யழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிறோம். 2,895

## 50. இந்திரன்

### 284. காதினன்-விசுவாமித்திரன்

1. இந்திரன் பருகுவானாக. சுவாஹா! ஸோமம் அவனுக்கே தோன்றுகிறது. அவன் யக்ஞத்துக்கு வந்திருக்கிறான். பகைவர்களை விலக்குபவனும் விருஷபனுமான அவன், எங்கும் வியாபகமாகி இந்த உணவுகளால் தன்னை நிரப்பிக் கொள்வானாக. எங்களாலளிக்

கப்பட்ட அவி அவனுடைய தேகத்தின் விருப்பத்தைப் பூர்த்தி செய்க.

2. பூர்வத்தில் உன்னுல் வேகமாய்ச் செல்லப் பயன்பட்டவையும், உனக்கு இசைந்தவை யாயுமுள்ள இரு குதிரைகளை உன்னைத் துரிதமாய் ஏற்றிவர உன் தேரிலே நான் இணைக்கிறேன். அழகிய தாடையுள்ள இந்திரனே! உன்னுடைய குதிரைகள் உன்னை ஏத்தி வருக. நன்கு பொழியப்பட்ட இந்த இதமான பானத்தைப் பருகவும்.

3. போற்றுபவர்கள், மேன்மையான செல்வத்தையும் நீண்ட ஆயுஸையுமடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்ய விரும்புபவனும், யக்ஞத்துக்கு வரத் துரிதனுமான இந்திரனைப் பசுக்களால் தாங்குகிருர்கள். உக்கிரனும் ஸோமத்தைப் பருகுபவனுமான அவன், பானத்தால் இன்பமடைகிருன். அவன் எங்களுக்குப் பல பசுக்களைப் பிரேரிப்பாஞக.

4. எங்களுடைய இந்த விருப்பத்தைப் பசுக்களோடும், குதிரைகளோடும், சிறப்பான செல்வத்தோடும் பூர்த்தி செய்யவும். எங்களைப் புகழுடனுக்கவும். சுவர்க்கத்தை விரும்பும் விப்பிரர்களான குசிகர்கள் மனனஞ் செய்யத் தகுந்த மந்திரங்களோடு உனக்குத் தோத்திரத்தைக் கூறுகிருர்கள்.

5. நாங்கள் எங்களுடைய பாலனத்துக்காக இந்தப் போரிலே புகழுள்ளவனும், செல்வமளிக்கும் சங்கிராமத்தின் தலைவனும், துதிகளைச் செவியுறுபவனும், போர்களில் பயங்கரனும், பகைவர்களை யழிப்பவனும், பொருள்களை ஜயிப்பவனும், செல்வனுமான இந்திரனை அழைக்கிருேம். 2,900

## 51. இந்திரன்

### 285. காதினன்–விசுவாமித்திரன்

1. உத்தம மொழிகளுள்ளவனும், மனிதர்களைத் தாங்குபவனும், செல்வமுள்ளவனும், துதிக்கத் தகுந்தவனும், செழுமையோடு செழிப்பவனும், பலரால் அழைக்கப்படுபவனும், அமுதனும், தினந்தோறும் மேலான துதிகளால் துதிக்கத் தக்கவனுமான இந்திரனை மேம்படுத்துக.



2. என்னுடைய மொழிகள் சதக்கிரதுவும், மழையைச் செலுத்துபவனும், மருத்துக்களால் காக்கப்படுபவனும், அனைவரின் தலைவனும், உணவைத் தருபவனும், புரங்களை உடைப்பவனும், போரில் துரிதனும், சலங்களைத் துரிதமாய்த் தருபவனும், செல்வங்களை வழங்குபவனும், எதிரிகளைத் தாழ்த்துபவனுமான இந்திரனை எப்பொழுதும் ஏத்துகின்றன.

3. பகைவர்களைத் தேய்க்கும் இந்திரன் செல்வத்தின் இடமான போர்க்களத்திலே போற்றப்படுகிருன். தீமையகன்ற துதிகளால் ஏத்தப்படுகிருன். அவியளிப்பவனுடைய மனையிலே அவன் திருப்தியாகிருன். நீ-விசுவாமித்திரனே! ஜயிப்பவனும் பகைவர்களை அழிப்பவனுமான இந்திரனைப் போற்றவும்.

4. ரித்விஜர்கள், மனிதர்களின் வீரத் தலைவனுன உன்னைச் சொற்களாலும் சூக்தங்களாலும் போற்றுகிருர்கள். பல மாயைகளுள்ள அவன் ஆற்றலைப் பெறவுக்கமாகிருன். அவன் பூர்வத்திலிருந்தே இந்த அவிக்குத் தலைவனுயிருக்கிருன்.

5. இந்திரன் மானிடர்களுக்குப் பல தடைகளை விதித்திருக்கிருன். மானிடர்களுக்கு மிகுந்த தானங்களைத் தருகிருன். அவனுக்குப் புவி பல செல்வங்களைத் தாங்குகிறது. சோதிகளும், ஓஷதிகளும், சலங்களும், மனிதர்களும், வனங்களும் இந்திரனுக்காகச் செல்வங்களைத் தாங்குகிருர்கள். 2,905.

6. இந்திரனே! அறிஞர்கள் உனக்குத் துதிகளையும் தோத்திரங்களையும் கூறுகிருர்கள். நீ அவற்றை ஏற்றுக் கொள்ளவும். நீ மனிதர்களின் நண்பன். நீ மனைகளை யளிப்பவன். நீ எங்கும் பரவுபவன்; நீ இந்த

அவியை யருந்தவும். வழிபடுபவர்களுக்கு உணவை யளிக்கவும்

7. இந்திரனே! மருத்துக்களோடுள்ள நீ, இந்த யக்ஞத்திலே, சர்யாதி மகனின் யக்ஞத்திலே ஸோமத்தைப் பருகியதுபோல் ஸோமத்தைப் பருகவும். யக்ஞத்தை நன்கு நடத்துபவர்களும் கவிகளும் சூரனுன உன் காப்பிலாகி அவிகளால் உன்னைப் போற்றுகிறுர்கள்.

8. இந்திரனே! பானத்தால் திருப்தியாகும் நீ, இந்த யக்ஞத்திலே உன் நண்பர்களான மருத்துக்களோடு சேர்ந்து பொழியப்பட்டுள்ள ஸோமத்தைப் பருகவும். பலரால் அழைக்கப்படுபவனும், மகத்தான போருக்காக, நீ பிறந்தவுடன் எல்லாத் தேவர்களால் அலங்கரிக்கப்பட்டவனுமான நீ பருகவும்.

9. மருத்துக்களே! சலங்களைச் செலுத்த இந்த இந்திரன் உங்களுடைய நண்பனுயிருக்கிருன். பலத்தைத் தரும் மருத்துக்கள் இந்திரனுக்குத் திருப்தியை யளித்தார்கள். விருத்திரனைப் புசிப்பவன் மருத்துக்களோடு சேர்ந்து வழிபடுபவனுல் தன் மனையில் அளிக்கப்படும் ஸோமத்தைப் பருகுவானுக.

10. செல்வபதியே! உனக்காக இந்த ஸோமம் பலத்தோடு பிழியப்பட்டிருக்கிறது. துதியாருகனுன நீ இதைப் பருகவும்.

11. உனக்கு உணவாகப் பொழியப்பட்டுள்ள ஸோமத்தால் உன் தேகத்தைப் பலப்படுத்திக் கொள்ளவும். இது ஸோமாருகனுன உன்னை இன்புறுத்துக.

12. வீரனே! இந்திரனே! இந்த ஸோமம் உன் உதரத்தின் இரு பக்கங்களிலும் நிரம்புக. துதியால் இது ஊக்கமாகி உன் தலையில் செல்க. எங்களுக்குச் செல்வத்தையளிக்க இது உன் கைகளிலே பரவுக. 2,912



# 52. இந்திரன்

## 286. காதினன்-விசுவாமித்திரன்

1. இந்திரனே! எங்களுடைய இந்தக் காலை யக்ஞத்திலே புதிய யவத்தோடும், பொரித்த தானியத்தோடும், தயிரோடும், புரோடாசத்தோடும், துதிகளோடுமுள்ள ஸோமத்தை ஏற்றுக் கொள்ளவும்.

2. இந்திரனே! பக்குவப்பட்ட புரோடாசத்தை ஏற்றுக்கொள்ளவும்; புசிக்கவும். அவிகள் உனக்குச் செல்லுகின்றன.

3 இந்திரனே! புரோடாசத்தைப் புசிக்கவும். எங்கள் துதிகளை யுவதியை விரும்பும் காதலனைப் போல் விரும்பவும்.

4. இந்திரனே! பூர்வத்திலிருந்தே புகழுடனிருக்கும் நீ, உஷையில் அளிக்கப்படும் புரோடாசத்தை விரும்பவும். ஏனெனில் உன்னுடைய செயல்கள் மகத்தானவை.

5. துதிக்கும் அறிஞன் நோக்கத்தில் கூர்மையாகி ஊக்கத்தில் காளை போலாகி பாக்களோடு உன்னை வேண்டுங்கால் பகல் யக்ஞத்திலே அளிக்கப்படும் யவப் பொரியும் புரோடாசமும், இந்திரனே! உன்னை இன்புறுத்துக. 2,917

6. இந்திரனே! பலரால் போற்றப்படும் நீ, எங்களுடைய மாலை யக்ஞத்தில் யவப்பொரிக்கும் ஆஹுதமாகும் புரோடாசத்துக்குப் புகழையளிக்கவும். அறிஞனே! அவிகளோடுள்ள நாங்கள் வாஜரோடும் ரிபுக்களோடுமுள்ள உன்னிடம் துதிகளோடு வருகிறோம்.

7. நாங்கள் பூஷாவோடு சேர்ந்த உனக்குத் தயிர் கலந்த தானியப் பொரியைப் பக்குவஞ் செய்திருக்கிறோம். கபில குதிரைகளுள்ளவனும், அசுவங்களோடு சேர்ந்தவனுமான உனக்கு யவப்பொரி இருக்கிறது. மருத்துக்களின் படையோடுள்ள நீ புரோடாசத்தைப்

புசிக்கவும். சூரனே! அறிஞனும் விருத்திரனைக் கொல்பவனுமான நீ ஸோமத்தைப் பருகவும்.

8. அவனுக்குத் தானியப் பொரியை யளியுங்கள் வீரர்களின் நடுவிலிருக்கும் வீரர் தலைவனுக்குப் புரோடாசத்தை யளியுங்கள். ஜயமுள்ள இந்திரனே! உனக்கு இசைந்த துதிகள், நீ ஸோமத்தைப் பருக உன்னைப் பலப்படுத்துக. 2,920

## 53. இந்திரனும் மற்றவர்களும்

### 287. காதினன்-விசுவாமித்திரன்

இந்திரா பர்வதர்கள்

1. இந்திரா பர்வதர்களே! நீங்கள் உத்தமத் தேரிலே வீரப் புதல்வர்களோடு இனிய உணவுகளை ஏந்தி வாருங்கள். தேவர்களே! எங்கள் யக்ஞங்களிலே அவிகளை அருந்துங்கள்; துதிகளால் பலப்படுங்கள்; அவியில் இன்புறுங்கள்.

இந்திரன்

2. இந்திரனே! செல்வனே! எங்கள் யக்ஞத்திலே தங்கவும்; இங்கிருந்து போகாதே. நான் உனக்கு நன்கு பொழியப்பட்ட ஸோமத்தையளிக்கிறேன். ஆற்றலுள்ள இந்திரனே! நான் மிக்கச் சுவையுள்ள பாட்டால் உன்னுடைய ஆடையின் நுனியைத் தந்தையின் ஆடையைப் பிடித்திழுக்கும் புதல்வனைப் போல் பற்றுகிறேன்.

3. அத்வர்யுவே! நாம் இருவரும் அவனைப் போற்றுவோமாக. நீ என்னோடு ஒன்று சேரவும். நாம் இனிமையான தோத்திரத்தை இந்திரனுக்குக் கூறுவோமாக. இந்த யக்ஞஞ் செய்பவனுடைய தருப்பையின் மீது அமரவும். இந்திரனுக்கு நம்முடைய தோத்திரம் கூறப்படுக.

4. மகவானே! மனைவி மனைவியாகிறாள். அவள் அவனுடைய சனன ஸ்தானமுமாகிறாள்–இருப்பிடமுமாகிறாள். தேரிலே இணைக்கப்பட்ட குதிரைகள் உன்னை



அங்கே ஏந்திச் செல்க. நாங்கள் உனக்குச் சோமத்தைப் பொழியும் பொழுதெல்லாம் அக்கினி உன்னிடம் என்னுடைய தூதனாக வருக.

5. மகவானே! நீ போகவும்; நீ மீண்டும் வரவும். இரண்டு வழிகளிலும் உனக்கு நோக்கமிருக்கிறது. அவன் திரும்பி வர மனைவி காத்திருக்கிறாள். ஸோமம் அவனைத் தங்க விரும்புகிறது. பாலகனான இந்திரனே! நீ பெரிய தேரிலே உட்காரும் போதும் கனைக்கும் குதிரையை அவிழ்த்துவிடும் போதும் உனக்கு நோக்கமிருக்கிறது. 2,925

6. இந்திரனே! நீ ஸோமத்தைப் பருகியவுடன் மனைக்குச் செல்லவும். உன்னுடைய மனையிலே மங்களமளிக்கும் மனைவியிருக்கிறாள். இன்னிசை எழுகிறது. அங்கு உன்னுடைய பெரிய தேரை நிறுத்த இடமுண்டு. உன்னுடைய வலிய குதிரை தட்சிணையோடு அவிழ்த்துவிடப்படுகிறது.

7. இந்த அங்கிரஸர்கள் போஜர்கள்–வள்ளல்கள். விரூபர்கள்; இவர்கள் அசுரனின் வீரர்கள். சோதியின் புதல்வர்கள். இவர்கள் ஆயிரம் ஸோமங்கள் பொழியப்படும் யக்ஞத்திலே விசுவாமித்திரனுக்குச் செல்வங்களை யளித்து அவனுடைய ஆயுளை நீட்டுகிறார்கள்.

8. மகவான் தான் விரும்பும் ரூபத்தையெல்லாம் அடைகிறான். மாயைகளைப் பயின்று தன் சொந்த தேகத்தைப் பலவித வடிவங்களோடு செய்து கொள்கிறான். அவனுடைய தக்க மந்திரங்களால் அழைக்கப்பட்டு அவன் ஒரு கணத்திலே சோதியிலிருந்து மூன்று யக்ஞங்களுக்கும் வருகிறான். ருதுக்களைப் பாலிக்கும் அவன் எந்த ருதுவிலும் ஸோமத்தைப் பருகுகிறான்.

9. தேவர்களைத் தோற்றுவிப்பவனும், தேவர்களால் பிரேரிக்கப்படுபவனும், நரர்களைக் காண்பவனும், மகானும், ரிஷியுமான விசுவாமித்திரன், ஸுதாஸ

னுக்காக யக்ஞத்தை நடத்துங்கால் அலைகளுள்ள நதியை அடக்கினன். பிறகு குசிகர்களால் பிரியமுள்ளவனுன்.

10. விப்பிரர்களே! ரிஷிகளே! நரர்களைக் காண்பவர்களே. குசிகர்களே! யக்ஞத்திலே கற்களால் ஸோமம் பிழியப்பட்டவுடன் துதிகளால் தேவர்களை இன்புறுத்தும் நீங்கள் அன்னங்களைப் போல் சுலோகத்தைப் பாடுங்கள். பிறகு தேவர்களோடு சேர்ந்து ஸோம மயமான ரஸத்தைப் பருகுங்கள். 2,930

11. குசிகர்களே! ஸுதாஸனுடைய குதிரையினருகில் செல்லுங்கள். அதை ஊக்கப்படுத்துங்கள். அதை அரசனுக்குச் செல்வங்களை ஜயிக்க அவிழ்த்து விடுங்கள். தேவர்களின் அரசன் விருத்திரனைக் கிழக்கிலே, மேற்கிலே, வடக்கிலே கொன்றுன். ஆதலால் ஸுதாஸன் புவியின் உத்தம ஸ்தானத்திலே அவனை ஏந்துவாஞக.

12. நான் இந்த சோதி புவிகளைத் தாங்கும் இந்திரனைப் பாடினேன். விசுவாமித்திரனுடைய இந்த தோத்திரம் பரதகுல சனத்தைப் பாலிக்கிறது.

13. விசுவாமித்திரர்கள் வச்சிராயுதமேந்தும் இந்திரனுக்கு, தோத்திரத்தைக் கூறிஞர்கள். ஆதலால் அவன் எங்களை மிக்கச் செல்வப்படுத்துவாஞக.

14. தீச்சுடர்களின் நடுவே உன்னுடைய பசுக்கள் எதற்கு? அவர்கள் பயன் படுத்தவில்லை; அவர்கள் ஸோமத்தோடு கலப்பதற்காக இந்தப் பாலைக் கறப்பதில்லை. அவர்களுக்குப் பாத்திரமும் அவசியமில்லை. அவற்றை எங்களிடம் செலுத்தவும். மகவானே! எங்களுக்கு பிரமகந்தனுடைய வட்டிக்குச் செல்வமளிக்கும் புதல்வனுடையவும் தாழ்ந்த கிளைகளுடையவும் செல்வங்களை அளிக்கவும்.

வாக்கு

15. ஜமதக்கினியால் அளிக்கப்பட்ட சூரியனுடைய புதல்வி எங்கும் சரிந்து—சலனமாகி—அறிவின்மையை அழித்து, மகத்தான நாதத்தை எழுப்பினுள். அவள் அமுதமான அழியாத புகழை—உணவை—தேவர்களின் நடுவே பரத்தினுள். 2,935



16. ஸஸர்பரி-வாக்கு-எங்கும் செல்பவள்—பஞ்சசனங்களுக்குப் பொருத்தமான—புகழை—உணவை—எங்களுக்கு ஏந்தி வருவாளாக. வெளுத்த ரோமமுள்ள ஜமதக்கினியால் எனக்களிக்கப்பட்ட சூரியனுடைய புதல்வி புதிய சீவனை அளிப்பவளாக.

ரதாங்கங்கள்

(ஸுதாசனுடைய தேருக்கு விரும்பப்பட்டவை)

17. குதிரைகள் வலியவையாகுக. அச்சு உறுதியாகுக. தண்டம் நழுவாமலிருக்க; நுகம் தேயாமலிருக்க; இந்திரன் இரு நுகத்தாணிகளையும் சேதப்படாமலிருக்கப் பாலிப்பாஞக. தளராத நேமிகளுள்ள தேர் எங்களருகிலிருக்க.

18. இந்திரனே! எங்கள் தேகங்களுக்குப் பலத்தையளிக்கவும். எங்கள் சகடங்களைப் பலப்படுத்தவும். எங்கள் புதல்வர்களும் பேரர்களும் நீடுழி வாழ அவர்களுக்குப் பலத்தையளிக்கவும். ஏனெனில் நீயே பலத்தையளிப்பவன்.

19. கதிரையின் ஆணியை உறுதிப்படுத்தவும். சிம்சபதத்தால் இழைக்கப்பட்ட பலகையைப் பலப்படுத்தவும். கெட்டியான அச்சே! எங்களால் உறுதிப்படுத்தப்பட்டுள்ள நீ, உறுதியுடஞகவும். நாங்கள் செல்லும் தேரிலிருந்து எங்களைத் தள்ளாதே.

20. வனஸ்பதியால் கற்பிக்கப்பட்ட இந்தத் தேர் எங்களை விலக்காமலும் துன்புறுத்தாமலுமாகுக. நாங்கள் மனைகளுக்குச் செல்லும் வரை, தேரை நிறுத்தி குதிரைகளை அவிழ்க்கும் வரை எங்களுக்கு சுவஸ்தி தோன்றுக. 2,940

அபிசாபம்

21. சூரனே! இந்திரனே! செல்வனே! நீ பலவித உத்தமப் பாலனங்களால் எங்களை இன்று பகைவர்களிட

யிருந்து பாலிக்கவும். எங்களை வெறுப்பவன் தாழ்வானாக விழுவானாக. உயிர் எங்களால் வெறுக்கப்படுபவனிட மிருந்து நீங்குக.

22. கோடரியால் கழிக்கப்படும் பரத்தைப் போல் பகைவன் கழிக்கப்படுவானாக. ஸம்பல மலர் ஒருவனால் சுலபமாய்ப் பறிக்கப்படுவது போல் பகைவன் விலக்கப் படுவானாக. கொதிசருவம் அடிக்கப்பட்டு, உடைந்து, ஒழுகி, நுரையையும் ஆவியையும் கக்குவது போல் என்னுடையின் சக்தியால் அடிக்கப்பட்டு எங்கள் பகை வன் தன் வாயிலிருந்து நுரையைக் கக்குவானாக.

23. சனங்களே! நீங்கள் அழிக்கும் விசுவாமித்திரனு னுடைய ஆற்றலையறியீர்கள். நீங்கள் அவனை அற்பத் தவமுள்ள பசுவென எண்ணி அவனுடைய இடத்துக்குச் செலுத்தினீர்கள். பேரறிஞர்கள் அறிவிலியைப் பரிகாசஞ் செய்யார்கள். அவர்கள் குதிரையின் முன் கழுதையை நடத்தார்கள்.

24. பரதனுடைய இந்தப் புதல்வர்கள், வசிஷ்டர் களிடமிருந்து பிரிந்து போக நினைக்கிறார்கள். அவர் களோடு சேரவிரும்பவில்லை. நித்திய பகைவனை எதிர்ப்பது போல் பரதப் புதல்வர்கள், அவர்களை—வசிஷ் டர்களை எதிர்க்கத் தங்கள் குதிரைகளை ஊக்கப்படுத்தி னார்கள். அவர்கள் போரிலே வசிஷ்டர்களை அழிக்க, வலிய வில்லை ஏந்துகிறார்கள். 2,944

## 54. விசுவே தேவர்கள்

### 288. பிரஜாபதி—விசுவாமித்திரன்

1. அவர்கள், மகானும், துதியாருகனும், யக்ஞத் தில் தோன்றியவனுமான அக்கினிக்கு சுகப்படுத்தும் இந்த ஸ்தோமத்தையும் அடிக்கடி கூறுகிறார்கள். இல் லற ஒளியோடுள்ள அவன் எங்களைச் செவியுறுவானாக; தேவ சோதியோடுள்ள அழியாத அக்கினி செவிசாய்ப் பானாக.



2. மகத்தான சோதி புவிகளின் மேன்மையை அறிந்து அவற்றைப் போற்றவும். என் மனம் எல்லா போகங்களையும் விரும்பி எங்கும் செல்லுகிறது. மானிட னின் யக்ஞங்களிலே சோதி புவிகளைத் துதிப்பதிலும் தேவர்களும் சேர்ந்து இன்புறுகிறார்கள்.

3. சோதி புவிகளே! உங்களுடைய சத்தியம் சத் தியமாயிருக்க. எங்களுடைய மகத்தான செல்வத்துக்கு நீங்கள் தலைவனாயிருங்கள். அக்கினியே! இந்த வணக் கம் சோதிக்கும் புவிக்கும் அளிக்கப்படுகிறது. நான் உணவால் அவர்களைப் போற்றுகிறேன். நான் உத்தமச் செல்வத்தை அவர்களிடம் வேண்டுகிறேன்.

4. ஸத்தியத்தையடைந்துள்ள சோதி புவிகளே! ஸத்தியத்தைக் கூறிய பழைய ரிஷிகள் உங்களிடமிருந்து விரும்பியதைப் பெற்றார்கள். ஆதலால், புவியே! மானி டர்கள் உங்கள் இருவரின் மேன்மையை யறிந்து போரிலே எதிர்க்கும் சூரர்களை ஜயிக்க உங்களைப் போற்றினார்கள்.

5. சத்தியம் என்ன என்பதை எவன் அறிகிறான்? அதை இங்கு எவன் கூறுகிறான்? தேவர்களிடம் செலுத் தும் சரியான வழி எது? அவர்களின்-தேவர்களின்—நட்சத்திரங்களின் அதோமுக ஸ்தானங்கள் - கீழான இருப்பிடங்கள்-தெரிகின்றன. அவர்கள் தூரத்திலும் மர்மங்களாயுமுள்ள இடங்களிலும் இருக்கிறார்கள்-உத் தமமாயும் மர்மங்களாயுமுள்ள விரதங்களிலே இருக் கிறார்கள். 2,949

6. மானிடர்களை நோக்கும் கவி-சூரியன், ருதத்தின்-சலத்தின், மூல ஸ்தானத்திலே-வானிலே இன்புறுபவை யும், வானின் மேலுள்ள சலத்தால் ஊக்கப்படும் சோதி யையும், மழையால் ஊக்கப்படும் புவியையும் பார்க்கிறான். சமமான செயலால் ஐக்கியமாகும் சோதியும் புவியும் தங்களுக்குத் தனி இடங்களைப் பறவையின் பல கூடு களைப் போல் செய்து கொள்கின்றன.

7. ஐக்கியச் செயலுள்ளவர்களும், தனித்தனியா யிருப்பவர்களும் தூரமான எல்லேயுள்ளவர்களுமான அவர்கள், நிலேயான இடத்திலே-வானிலே-விழித்திருக் கிருர்கள். யுவதிகளான சோதியும் புவியும் சகோதரி களைப் போலிருக்கிருர்கள். அவர்கள் தங்களைப் பரஸ் பரம் இரட்டைப் பெயர்களால் சோதி புவி என அழைத் துக்கொள்கிருர்கள்.

8. சோதியும் புவியும் எல்லா சீவ வர்க்கங்களேயும் தனிப்படுத்துகிருர்கள் அவர்கள் மகத்தான தேவர் களைக் களேப்படையாமல் தாங்குகிருர்கள். ஏகனுன-புவி - விசுவன்—தாவர சங்கமப் பொருள்களுக்கும், மிருகங்களுக்கும், பறவைகளுக்கும், நானுவிதப் பிராணி களுக்கும் தலேவனுயிருக்கிருன்.

9. சோதியே! நான் இப்பொழுது மகத்தாய்ப் பாலிப்பவளும், பிறப்பிப்பவளுமான உன்னுடைய பழை மையாயும் நித்தியமாயுமுள்ள சகோதரித் தன்மையை நினைக்கிறேன். உன்னுடைய இடையிலுள்ளதும், பரந் திருப்பதும், தனித்திருப்பதுமான வழியிலே துதிப்பவர் களான தேவர்கள் தங்கள் தேர்களோடு துலங்கு கிருர்கள்.

10. சோதி புவிகளே! நான் உங்களுக்கு இந்த ஸ்தோமத்தைக் கூறுகிறேன். சத்தியம் நிறைந்த உதரம்-இருதயம்-உள்ளவர்களும், அக்கினி நாக்குள்ள மித்திர னும், அரசனுன வருணனும், யுவர்களான ஆதித்தியர் களும், கவிகளும், தங்கள் செயல்களை அறிவிப்பவர்களும் இந்த தோத்திரத்தைச் செவியுறுவார்களாக. 2,954

11. பொற்கையுள்ளவனும் இனிய நாவுள்ளவனு மான ஸவிதா, யக்ஞத்தில் மும்முறை தோன்ற சோதியி லிருந்து இறங்குகிருன். ஸவிதாவே! துதிப்பவர்களால் கூறப்படும் ஸ்துதியை ஏற்றுக்கொள்ளவும். பிறகு எங்க ளுடைய விருப்பங்களையெல்லாம் பூர்த்தி செய்யவும்.



12. திறச் சிற்பியும், திறக்கையனும், செல்வனும், சத்திய சங்கற்பனும், தேவனுமான துவஷ்டா எங்கள் பாலனத்துக்கு அவசியமான பொருள்களைத் தருவானுக. பூஷாவோடு சேர்ந்த ரிபுக்களே! அறிஞர்கள் தூக்கிய கற்களோடு ஸோமத்தைப் பிழியுங்கால் நீங்கள் எங்களை இன்பப்படுத்துங்கள்.

13. மின்னலேத் தேர்களாக அடைந்தவர்களும், ஈட்டிகளை ஏந்துபவர்களும், பிரகாசிப்பவர்களும், பகை வர்களை அழிப்பவர்களும், சலங்களைச் செலுத்துபவர் களும், சதா செல்பவர்களும், துதியார்களுமான மருத்துக் களும் சரசுவதியும் செவி கொடுப்பார்களாக. துரித மருத்துக்களான நீங்கள் எங்களுக்கு வீரப் புதல்வர்களை அளியுங்கள்.

14. எங்களுடைய செல்வத்தைத் தரும் துதிகளும், தோத்திரங்களும், இந்த யக்ஞத்திலே பல செயல்களுள்ள விஷ்ணுவினிடஞ் செல்க. பல பகைவர்களைத் தேய்க்கும் விஷ்ணுவுக்குத் துதிகளும் தோத்திரங்களும் பகனுடைய வழியிலே பாடுபவர்களைப் போல் செல்க. அனைத்தை யும் தோற்றுவிப்பவையும் யுவதிகளுமான திசைகள் மகத் தான அடியை வைக்கும் விஷ்ணுவின்—சூரியனின்—ஆக்ஞைகளைக் கடக்கா.

15. தன்னுடைய எல்லா வீரச் செயல்களால் நடத்திச் செல்லும் இந்திரன், தன் மகிமையால் புவியை யும் சோதியையும் நிரப்புகிருன். புரங்களை உடைப்பவ னும், விருத்திரனைக் கொல்பவனும், ஜயிக்கும் படையின் தலேவனுமான நீ, பசுக்களைத் திரட்டி அவற்றை எங்க ளுக்கு ஏராளமாயளிக்கவும். 2,959

16. என்னுடைய பாலகர்களான நாசத்தியர்கள் பந்துக்களிடம் பிரியமாயிருக்கிருர்கள். உங்கள் இருவ ருக்கும் இருக்கும் சம பிறப்பு நாமம் அழகாயிருக்கிறது. எங்களுக்குச் செல்வங்களைத் தரும் வள்ளல்களாக இருங்

கள். தடைபடாத நீங்கள் குற்றமற்ற செயல்களால் எங்களைப் பாலியுங்கள்.

17. கவிகளே! உங்களுடைய பெயர் மகத்தாயிருக்கிறது. அதனால் நீங்கள் இருவரும் இந்திரனுடைய உலகத்திலே தேவத்தன்மைகளை யடைந்தீர்கள். இந்திரனே! புருஹூதனே! பிரியர்களான ரிபுக்களோடு சேர்ந்துள்ள நண்பனுன நீ, எங்களுடைய செல்வத்துக்காக இந்தத் துதியை ஏற்றுக் கொள்ளவும்.

18. அர்யமானும், அதிதியும், துதியாருகத் தேவர்களும் வருணனின் தடைபடாத விரதங்களைப் பாலிப்பார்களாக. வம்சத்துக்கு நன்மை விளைவிக்காத வழியில் செல்லாமலிருக்க எங்களைப் பாலியுங்கள். எங்கள் மனை பசுக்களோடும் பிரஜைகளோடும் பொங்குக.

19. பல இடங்களில் தோற்றுவிக்கப்படுபவனும், தேவர்களின் தூதனுமான அக்கினி நாங்கள் குற்றமற்றவர்கள் என எங்கும் அறிவிப்பானுக. புவியும், சோதியும், சலங்களும், சூரியனும், நட்சத்திரங்களோடு எங்களைச் செவியுறுவார்களாக.

20. பொழிபவர்களும், மலைகளின் தேவர்களும், நிலையான இருப்பிடங்களில் வசிப்பவர்களும் அவியால் இன்பமாகி எங்களைக் கேட்பார்களாக. ஆதிதி ஆதித்தியர்களோடு எங்களைக் கேட்பார்களாக. மருத்துக்கள் மங்களகரமான சுகத்தை எங்களுக்களிப்பார்களாக.

21. எங்களுடைய வழி செல்ல எப்பொழுதும் சுகமாய்த் தோன்றுக. அங்கு உணவும் விளங்குக. தேவர்களே! ஓஷதிகளை இனிய சலத்தால் ஈரப்படுத்துங்கள்—தெளியுங்கள். அக்கினியே! உன்னுடைய நட்பிலே என்னுடைய செல்வம் அழியாமலிருக்க. மிகுந்த உணவும் செல்வமுமுள்ள மனையை நான் அடைவேனுக.

22. அக்கினியே! அவிகளைச் சுவைக்கவும். எங்களுக்கு மிகுந்த உணவையளிக்கவும். எங்கள் முன்னே



அன்னங்களை அளக்கவும். நீ போரிலே எங்களுடைய பகைவர்களையெல்லாம் ஜயிக்கவும். நீ பிரியமுள்ள மனத்தோடு எங்களைத் தினந்தோறும் பிரகாசிக்கவும். 2,966

## 55. விசுவே தேவர்கள்

### 289. பிரஜாபதி-விசுவாமித்திரன்

1. முந்துகிற உஷைகள் உதயமாகுங்கால் பசுவின் இருப்பிடத்திலே மகத்தான அட்சரம் பிறப்பிக்கப்படுகிறது. பிறகு வழிபடுபவன் தேவர்களுக்குரிய செயல்களை நடத்தத் துரிதமாகிறுன். தேவர்களின் தேவத்தன்மை ஒப்பில்லாதது—மகத்தானது. தேவர்களுடைய ஆற்றல் ஒப்பில்லாதது—மகத்தானது.

2. தேவர்கள் எங்களைத் துன்புறுத்தாமலிருப்பார்களாக. தேவ பதத்தை அனுபவிக்கும் பழைய பிதாக்களும் துன்புறுத்தாமலிருப்பார்களாக. பழைய இடங்களிலிருந்து சோதியைப்படுத்தும் சூரியன் துன்புறுத்தாமல் இருப்பானுக. தேவர்களுடைய அசுரத்தன்மை-ஆற்றல், ஒப்பில்லாதது-மகத்தானது

3. என்னுடைய பல விருப்பங்கள் பலவிதமாய்த் தோன்றுகின்றன. நான் யக்ஞத்தை எண்ணி பழைய துதிகளைக் கூறுகிறேன். நாங்கள் அக்கினி சொலிப்பித்தவுடன் சத்தியத்தை அறிவிப்போமாக. தேவர்களின் ஆற்றல் மகத்தானது-ஒப்பில்லாதது.

4. ஒரே அரசனுன அக்கினி பல இடங்களுக்கு ஏந்தி செல்லப்படுகிறுன். அவன் சயனிக்கும் இடங்களிலே தூங்குகிறுன். அவன் காடுகளோடு—ஸமிந்தனங்களோடு - சேர்ந்திருக்கிறுன். ஒரு தாய் — சோதி, பாலனை—அக்கினியை புட்டிப்படுத்துகிறுள். மற்றொரு தாய்—புவி, அவனுக்கு—அக்கினிக்கு இடத்தைத் தருகிறுள் தேவர்களுடைய ஆற்றல் ஒப்பில்லாதது—மகத்தானது.

5. பழைய ஓஷதிகளிலிருப்பவனும் புதிய ஓஷதிகளில் நிலைப்பவனுமான அவன், தோன்றும் இளந் தளிர்களிலே நுழைகிறான். அவை-ஓஷதிகள்-சினைப் பிக்கப்படாமல், அக்கினியால் கருவைத் தரித்துப் பழத்தைத் தருகின்றன. தேவர்களின் ஆற்றல் மகத்தானது-ஒப்பில்லாதது. 2,971

6. இரு தாய்மார்களின் குழந்தை-சூரியன்-மேற்கே தூங்குகிறான். ஆனால் காலையிலே ஏகனான பாலன் தடைபடாமல் சலனமாகிறான். இவை மித்திரா வருணர்களுடைய விரதங்களாகின்றன - செயல்களாகின்றன. தேவர்களுடைய ஆற்றல் மகத்தானது-ஒப்பில்லாதது.

7. இரு தாய்களின் மகனும், யக்ஞங்களில் ஹோதாவும், எங்கும் நிறைந்திருக்கும் அரசனுமான அக்கினி, வானிலே சூரியனாக முன்னே செல்லுகிறான். அனைத்தின் மூலமான அவன்-புவியிலே-வசிக்கிறான். இனிய மொழிகளைக் கூறுபவர்கள் அவனுக்கு இனிய பாக்களைப் பாடுகிறார்கள். தேவர்களுடைய ஆற்றல் மகத்தானது-ஒப்பில்லாதது.

8. அவனிடம் மிக்க நெருங்கும் பிராணிகள் எல்லாம், போர் வீரனிடமிருந்து புறமோடும் பகைவனின் பலத்தைப் போல் பராமுகங்களோடு தென்படுகின்றன. அனைவராலும் அறியப்படும் அக்கினி சலத்தையழிக்கும் காந்தியை ஏந்துகிறான். தேவர்களுடைய ஆற்றல் மகத்தானது - ஒப்பில்லாதது.

9. நரைத்த தூதன் இந்த ஓஷதிகளிலே எப்பொழுதும் வசிக்கிறான். மகானான அக்கினி, சூரியனோடு சேர்ந்து சோதி புவிகளின் நடுவே சலனமாகிறான். பல வடிவங்களை ஏந்தும் அவன், எங்களைக் கருணைக் கண்ணோடு காண்கிறான். தேவர்களின் ஆற்றல் மகத்தானது - ஒப்பில்லாதது.

10. பிரியமுள்ளவையும் அமுதங்களாயுமுள்ள காந்திகளை ஏந்துபவனும், விஷ்ணுவும், பாலகனுமான



அக்கினி, மழைகளின் உத்தம வழியைப் பாலிக்கிறான். ஏனெனில் அக்கினி இந்த உலகங்களையெல்லாம் அறிகிறான். தேவர்களுடைய ஆற்றல் மகத்தானது - ஒப்பில்லாதது. 2,976

11. இரட்டையர்களான பகலும் இரவும் பலவித வடிவங்களைப் பற்றுகிறார்கள். அவர்களில் ஒருத்தி ஒளியுடன் பிரகாசிக்கிறாள். வேறொருத்தி கருப்பாயிருக்கிறாள். இருவரும் சகோதரிகள். ஒருத்தி கருப்பு; வேறொருத்தி வெளுப்பு. தேவர்களுடைய ஆற்றல் மகத்தானது-ஒப்பில்லாதது.

12. பாலைத் தரும் இரு பசுக்களான தாயும் மகளும்-சோதியும் புவியும், சேருமிடத்திலே - வானிலே - பரஸ்பரம் ஊட்டுகின்றன. நான் ருதத்தின் - சலத்தின் - இடமான வானிலிருக்கும் சோதி புவிகளைப் போற்றுகிறேன். தேவர்களுடைய ஆற்றல் மகத்தானது - ஒப்பில்லாதது.

13. சோதி புவியின் கன்றான அக்கினியை சுவைக்கிறாள். மேகத்தோடு குரலை எழுப்புகிறாள். தாய்ப் பசு சலமில்லாத கன்றான புவிக்குத் தன் ஆபீனத்தைத் தருகிறாள். புவி, ருதத்தின் பாலால்-சலத்தால்-பொழியப் படுகிறாள். தேவர்களுடைய அசுரத் தன்மை-குறைகளை நீக்குந் தன்மை மகத்தானது - ஒப்பில்லாதது.

14. புவி பல வடிவங்களுள்ள தேகங்களைத் தரிக்கிறது. அது பதினெட்டு மாதக் கன்றைச் சுவைத்துக் கொண்டு உச்சத்திலே நிற்கிறது. ருதத்தின் - சூரியனின் சத்தியத்தின் - இடத்தை அறியும் நான் அதைப் போற்றுகிறேன். தேவர்களுடைய அசுரத்தன்மை - பிராணங்களைத் தாங்குந் தன்மை மகத்தானது-ஒப்பில்லாதது.

15. அற்புதமான இடத்தின் நடுவே இரட்டைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. சோதி புவிகளின் நடுவே அனைவருங்காண இரவு பகல்களான இரு முத்திரைகள் அடிக்கப்பட்டிருக்கின்றன. ஒன்று-இருட்டு-மறைந்திருக்

கிறது, மற்றென்று பகல்-ஒளி-புலனுகிறது. நன்மைக்கும் தீமைக்கும் எங்கும் நிறைந்திருக்கும் அந்த வழி இரட்டைகளுக்குச் சமமாயிருக்கிறது. தேவர்களுடைய அசுரத் தன்மை-சுவாசங்களிலே ரமிக்கும் தன்மை-மகத்தானது-ஒப்பில்லாதது. 2,981

16. கன்றுகளில்லாதவையும், சோதியிலிருப்பவையும், கறக்கப்படாமலிருப்பவையும், பாலைத் தருபவையும், எப்பொழுதும் புதியவையாயும் தருணமாயிருப்பவையுமான பால் தரும் பசுக்கள், தங்கள் ஆபீனத்தை அசைத்துக் குலுக்கி மழையைப் பொழிக. தேவர்களுடைய அசுரத்தன்மை-துன்பங்களை விலக்குந் தன்மை-மகத்தானது-ஏகமானது-ஒப்பில்லாதது.

17. வேறு இடங்களிலே வ்ருடபன் முழங்குங்கால் அவனுடைய ரேதஸை வேறு மந்தை பெறுகிறது. அவன் ஜயிப்பவன்; மங்களமளிப்பவன்; அரசன். தேவர்களுடைய ஆற்றல் உயர்ந்தது-ஒப்பற்றது.

18. ஜனங்களே! நாங்கள் வீரனின் குதிரைச் செல்வத்தைக் கூறுவோமாக. தேவர்கள் அவனுடைய செல்வத்தை அறிகிருர்கள். ஆறு குதிரைகள்-பருவங்கள்-அவனை ஏந்துகின்றன. ஐந்து குதிரைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தேவர்களுடைய அசுரத் தன்மை மகத்தானது-ஒப்பில்லாதது.

19. ஸவிதாவும், விசுவருபனும், தேவனுமான துவஷ்டா, மானிடர்களைப் பலவிதமாய்ப் பிறப்பிக்கிருன்; போஷிக்கிருன் - பாலிக்கிருன். இவ்வுலகங்களெல்லாம் அவனுக்குரியவை. தேவர்களுடைய அசுரத்தன்மை மகத்தானது-ஒப்பில்லாதது.

20. அவன் பரஸ்பரம் சேர்ந்தவையும் மகத்தானவையுமான இரு ஆதானங்களை-சோதியையும் புவியையும்-தேவர்களோடும் பிராணிகளோடும் சேர்த்தான். வீரன் செல்வங்களைச் சேர்ப்பதில் சிறந்தவன். தேவர்களுடைய அசுரத்தன்மை மகத்தானது-ஒப்பில்லாதது. 2,986



21. விசுவத்தைத் தாங்கும் எங்களுடைய அரசனை இந்திரன், இப்புவிக்கு மிக்க அருகிலே இதமான நண்பனைப் போல் வசிக்கிருன். வீரர்களான மருத்துக்கள் அவன் முன்னே செல்லுகிருர்கள். அவர்கள் அவனுடைய இடத்திலே இருக்கிருர்கள். தேவர்களுடைய அசுரத்தன்மை மகத்தானது-ஒப்பில்லாதது.

22. இந்திரனே! ஓஷதிகள் உன்னுல் சித்தியைப் பெறுகின்றன. உன்னிடமிருந்து சலங்கள் பாய்கின்றன. புவி உனக்காகச் செல்வங்களை ஏந்துகிறது. உன்னுடைய நண்பர்களான நாங்கள் உத்தமச் செல்வங்களைப் பகிர்ந்து கொள்வோமாக, 2,988

## 56. விசுவே தேவர்கள்

### 290. பிரஜாபதி-விசுவாமித்திரன்

1. வஞ்சகர்கள் தேவர்களுடைய பழையவையும் நிலையாயுமுள்ள விரதங்களைச் சேதப்படுத்த சக்தியற்றவர்கள். அறிஞர்களும் சக்தியற்றவர்கள். துரோகமறியாத சோதி புவிகளின் செயல்களையும் தடுக்க அவர்கள் சக்தியற்றவர்கள். புவியின் மீது நிற்கும் மலைகளை அவர்கள் தாழ்த்தத் திறனற்றவர்கள்.

2 திரமாயிருக்கும் ஒருவன் - வருடம் - ஆறு சுமைகளை - பருவங்களைத் தாங்குகிருன். சத்தியனும் செழித்தவனுமான வருஷத்தை நோக்கி-பசுக்கள்-சூரியனுடைய கிரணங்கள் - செல்லுகின்றன. துரிதமாய்ச் செல்லும் மூன்று மகத்தான உலகங்கள் அவனருகில்-சூரியனருகில் நிற்கின்றன. இரண்டு-சோதியும் வானமும் மர்மத்திலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. ஒன்று - புவி - புலனுகிறது.

3. மூன்று மார்புகளிருப்பவனும் - மூன்று பருவங்களான கிரீஷ்மம், வர்ஷம், ஹேமந்தங்களுள்ளவனும்-

பொழிபவனும், விசுவரூபனும், மூன்று ஆபீனங்கள் - வசந்தம், சாத்து, ஏமந்தம் - இருப்பவனும், பிரஜைகளிருப்பவனும், பல இடங்களில் இருப்பவனும், மூன்று குணங்கள்—உஷ்ணம், சீதம், பெய்கை - உள்ளவனும், மாட்சிமையுமுள்ள வருடனான தேவன் வருகிறான். விருஷபன் நித்தியமான ஓஷதிகளைச் சினைப்படுத்துகிறான்.

4. வருடன் ஓஷதிகளினருகே அவற்றின் சுவடுகளைப் பற்றுபவனும் விழித்திருக்கிறான். நான் ஆதித்தியர்களின்—வஸந்த மாதங்களின்—அழகான நாமத்தை-மது, மாதவம்-கூறுகிறேன். தனித்தனியாய் ஓடும் தேவிகளான சலங்கள், வருடனை நான்கு மாதங்கள் மழையால் இன்புறுத்துகிறார்கள். பிறகு அவர்கள்—சலங்கள், அவனிடமிருந்து-வருணனிடமிருந்து எட்டு மாதங்கள் வரை நீங்குகிறார்கள்.

5. நதிகளே! ஒவ்வொன்றிலும் முப்பிரிவுகளுள்ள மூன்று உலகங்களும், கவிகளுக்கு வசிக்கும் இடங்களாகின்றன. மூன்று தாய்மார்களின் குழந்தை அக்கினி அல்லது சூரியன் யக்ஞங்களில் தலைவனாயிருக்கிறான். அல்லது முவ்வுலகங்களை அளப்பவன் யக்ஞங்களிலே மிக்கத் துலங்குகிறான். சலங்களின் ருததேவிகள்-இளா, பாரதி, சரஸ்வதி என மூவர் உண்டு. அவர்கள் எங்கள் யக்ஞத்திலே தலைவர்களாய் சோதியிலிருந்து மும்முறை தோன்றுகிறார்கள். 2,993

6. ஸவிதாவே! சோதியிலிருந்து இங்கு மும்முறை, தினந்தோறும் மும்முறை உன்னுடைய செல்வங்களை அளிக்கவும். பகனே! பாலிப்பவனே! எங்களுடைய மூன்று மூலப் பொருள்களோடுள்ள-பசு, பொன், ரத்தினம் - செல்வங்களைத் தினசரி மும்முறை யளிக்கவும். திஷணையே! செல்வத்தைச் சம்பாதிக்க எங்களைத் திறப்படுத்தவும்.

7. ஸவிதா எங்களுக்குத் தினத்தின் முக்காலங்களிலும் செல்வத்தை யளிப்பானாக. உத்தமக் கைகளுள்ள



மித்திரா வருணர்களும், சலங்களும், பரந்த சோதியும் புவியும், ஸவிதாவின் பெருந்தன்மையால் அரிய செல்வங்களை அவனிடமிருந்து வேண்டுகிறார்கள்.

8. எவராலும் அடைய இயலாதவையும், உத்தமமாயும், பிரகாசிப்பவையுமான மூன்று இடங்கள் இருக்கின்றன. அங்கு அசுரனான—காலனான—வருஷத்தினுடைய புதல்வர்களான மூவர்கள்—அக்கினி, வாயு, சூரியன், அரசு புரிகிறார்கள்—பிரகாசிக்கிறார்கள். சத்தியத்தைப் பாலிப்பவர்களும், துரிதர்களும், வெல்லப்படாத தேஜசுள்ளவர்களுமான தேவர்கள் சோதியிலிருந்து வந்து எங்களுடைய யக்ஞத்திலே மும்முறை தோன்றுவார்களாக. 2,996

## 57. விசுவே தேவர்கள்

### 291. காதிஜன்-விசுவாமித்திரன்

1. ஆய்ந்தறியும் இந்திரன் என்னுடைய கோபனன்றித் தனியாய்ச் சுதந்திரமுடன் மேய்வதும், சுலபமாய்க் கறக்கப்படுவதும், மிக்கப் புட்டியைத் தருவதும், இந்திரனாலும் அக்கினியாலும்-எங்களால்-போற்றப்படுவதுமான பசுவைப் போலுள்ள தோத்திரத்தை அறிந்து கொள்வானாக.

2. இந்திராவும், பூஷாவும், பொழிபவர்களும், உத்தமக் கைகளுள்ள அசுவினிகளும் எங்களிடம் அன்புள்ளவர்களாகி சோதியிலே சயனித்திருந்த மேகத்தைக் கறந்தார்கள். விசுவே தேவர்கள் இந்தத் துதியில் இன்பமானார்கள். வசுக்களே! நான் உங்களிடமிருந்து தோன்றும் சுகத்தை அடைவேனாக.

3. சகோதரிகள்—ஓஷதிகள், இந்திரனுக்குப் பொழியும் சக்தி தோன்ற விரும்புகிறார்கள். அவர்கள் அவனிடமிருக்கும் சினைப்பிக்குஞ் சக்தியை அறிகிறார்கள். பயனை நாடும் பசுக்கள் பல வடிவங்களை ஏந்தும் கன்றினிடம்-தாவர உலகத்திலே-கன்றுகளிடம் தோன்றும் பசுக்களைப்

போல் தோன்றுகின்றன-தோன்றுகிறார்கள். அல்லது சகோதரிகளான விரல்கள் விருஷபனுக்கு ஆற்றல் தோன்ற விரும்புகின்றன. அவனுக்கு வணக்கமுடனாகி அவனிடமிருக்கும் கருவையறிகிறார்கள். பல வடிவங்களை ஏந்தும் கன்றினிடம்—அக்கினியிடம்-பசுக்கள் பயனை விரும்பி வருகின்றன.

4. அக்கினியே! மனிதர்களுக்குப் பல செல்வங்களைத் தருபவையும், போற்றத் தகுந்தவையும், எழிலுள்ளவையுமான உன்னுடைய சுவாலைகள் மேலே எழுங்கால், நான் யக்ஞத்திலே ஸோமத்தைப் பிழிய கற்களைக் கையிலே தூக்கி அழகான சோதியையும் புவியையும் துதியால் துதிக்கிறேன்.

5. அக்கினியே! உன்னுடைய நாக்கு தேன் நிறைந்தது; மிக்க அறிவுள்ளது; மிக்கப் பரந்திருக்கிறது; தேவர்களின் நடுவே மிக்கப் புகழுடனிருக்கிறது. அதனால் யக்ஞாருகத் தேவர்களையெல்லாம் இங்கு எங்களுடைய பாலனத்துக்காக ஏந்தி வா. இனிய பானங்களைப் பருக அவர்களுக்கு அளிக்கவும்.

6. தேவனே! அக்கினியே! உன்னுடைய பல வடிவமுள்ளதும், மேக தாரைகளைப் போல் அழியாததுமான -ஸுமதியான-தாரை எங்களுக்குப் பானத்தையளிக்கவும். வசுவே! ஜாதவேதஸனே! எங்களுக்கு சர்வஜன ஹிதமான ஸுமதியை யளிக்கவும். 3,002

## 58. அசுவினிகள்

### 292. காதினன்-விசுவாமித்திரன்

1. பழைய பாற்பசு—உஷை, நாம் விரும்பும் பொருள்களைத் தருகிறாள். தட்சிணையின்—உஷையின்—புதல்வன்—சூரியன் பிறகு வருகிறான். அவள் தன் ஒளித் தேரோடு பிரகாசத்தை ஏந்துகிறாள். துதிப்பவன், உஷையை முந்தும் அசுவினிகளைப் போற்ற எழுகிறான்.



2. நன்கு இணைக்கப்பட்ட குதிரைகள் உங்கள் இருவரையும், உங்களுடைய சத்தியத்தைப் பாலிக்கும் தேரிலே ஏந்துகின்றன. அவிகள் பெற்றோர்களிடம் குழந்தைகளைப் போல் உங்களுக்கு எழுகின்றன. எங்களிடமிருந்து கருமியின் புத்தியை விலக்குங்கள். இங்கு வாருங்கள். நாங்கள் உங்களுக்கு அவியைத் தருகிறோம்.

3. தஸ்ரர்களே! நன்கு இணைக்கப்பட்ட குதிரைகளோடும், நன்கு கற்பிக்கப்பட்ட தேரோடும் வந்து, வழிபடுபவனுடைய சுலோகத்தைச் செவியுறுங்கள். அசுவினிகளே! நீங்கள் அனாதியின் பாலனத்துக்கு வரத் துரிதமாகிறீர்கள் என அறிஞர்களான பழைய ரிஷிகள் கூறவில்லையா?

4. நீங்கள் என்னுடைய துதியை மதித்தால், உங்கள் துரித குதிரைகளோடு வாருங்கள். அசுவினிகளே! எல்லா மனிதர்களும் உங்களை அழைக்கிறார்கள். அவர்கள் உங்களுக்குப் பாலோடு கலந்த ஸோமரஸத்தை நண்பர்களுக்கு நண்பர்களைப் போல் அளிக்கிறார்கள். சூரியன் முற்படுகிறான்—வாருங்கள்.

5. அசுவினிகளே! உங்கள் ஒளியால் பல இடங்களை மறைத்து, விலக்கி இங்கு வாருங்கள். மனிதர்களின் நடுவே செல்வர்களான உங்களுக்கு முழங்கும் தோத்திரம் தோன்றுகிறது. தேவர்களால் செல்லப்பட்ட வழிகளால் வாருங்கள். தஸ்ரர்களே! இங்கு மதப்படுத்தும் ஸோமரஸச் செல்வங்களிருக்கின்றன. 3,007

6. உங்களுடைய பழைய நட்பு விரும்பத் தக்கது; மங்களமளிப்பது. யக்ஞத் தலைவர்களே! உங்களுடைய செல்வம் ஜஹ்னுவின் குலத்திலிருக்கிறது. நண்பர்களான நாங்கள் அந்தப் பழைய மங்களகரமான நட்பைப் புதிப்பித்து, இனிய ஸோமரஸத்தோடு உங்களை இன்புறுத்துவோமாக.

7. அசுவினிகளே! சுதட்சர்களும், அசத்தியமில்லாதவர்களும், உதாரகுணமுள்ளவர்களும், களைக்காத

வர்களும், அவிகளை ஏற்றுக் கொள்பவர்களுமான நீங்கள் வாயுவோடும் உங்களுடைய குதிரைகளோடும் சேர்ந்து, இன்பமாகி மாலையிலே அளிக்கப்படும் ஸோமத்தைப் பருகுங்கள்.

8. அசுவினிகளே! உங்களுக்கு மிகுந்த உணவுகள் அளிக்கப்படுகின்றன. குற்றமற்ற வழிபடுபவர்கள் துதிகளால் உங்களைப் போற்றுகிறார்கள். உங்களுடைய ருதத்திலிருந்து தோன்றிய தேர், கற்களால் செலுத்தப்பட்டு சோதியையும் புவியையும் ஒரு கணத்திலே சுற்றி வருகிறது.

9. அசுவினிகளே! உங்களுடைய ஸோமம் இனிப்பைச் சொட்டுகிறது. இதைப் பருகுங்கள்; எங்கள் மனைக்கு வாருங்கள். உங்களுடைய பலவித வடிவத்தைத் தரிக்கும் தேர், ஸோமமளிப்பவனுடைய மனைக்கு வருகிறது. 3,011

# 59. மித்திரன்

## 293. காதினன்—விசுவாமித்திரன்

1. மித்திரன் போற்றப்படுங்கால், சனங்களை உழைக்க ஊக்கப்படுத்துகிறான். இந்திரன் சோதியையும் புவியையும் தாங்குகிறான். மித்திரன் மனிதர்களை மூடாத கண்களோடு பார்க்கிறான். மித்திரனுக்கு நெய்யோடான அவியை யளியுங்கள்.

2. மித்திரனே! ஆதித்தியனே! யக்ஞத்திலே உனக்கு அவிகளைத் தருபவன்—மனிதன்—உணவுள்ளவனாவானாக. உன்னால் பாலனமாகி அவன் துன்பமடையான். அவன் எவனாலும் வெல்லப்படான். பாவம் அவனிடம் தூரத்திலிருந்தோ அருகிலிருந்தோ செல்லாது.

3. நோயிலிருந்து நீங்கியவர்களும், உணவிலே இன்புறுபவர்களும், புவியின் பரந்த இடத்திலே சுதந்திரமாய்ச் செல்பவர்களும், ஆதித்தியத்தியனுடைய விரதத்தை நெருங்கிப் பற்றுபவர்களுமான நாங்கள், மித்திரனுடைய ஸுமதியிலிருப்போமாக.



4. போற்றத் தகுந்தவனும், சுகத்தோடு சேவிக்கத் தகுந்தவனும், சுகத்தையளிப்பவனுமான இந்த மித்திரன் அரசன். மிக்க க்ஷத்திரமுள்ளவன்; படைப்பவன். இவன் பிறந்தான். நாங்கள் இந்த யக்ஞார்கனுடைய—ஆதித்தியனுடைய—ஸுமதியிலே மங்களகரமான நல்ல மனத்திலே இருப்போமாக.

5. மனிதர்களை ஊக்கப்படுத்தும் மகானான ஆதித்தியன் வணக்கத்தோடு அணுகத் தகுந்தவன். அவன் போற்றுபவனை சுகப்படுத்துகிறான். மிக்கத் துதியார்கனான மித்திரனுக்கு அவனால் விரும்பப்படும் அவியை அக்கினியிலளிக்கவும். 3,016

6. விரும்பத் தகுந்த உணவும் மிக்கப் போற்றத் தகுந்த செல்வமும் மனிதர்களைத் தாங்கும் தேவனான மித்திரனுடைய தானங்கள்.

7. தன் மகிமையால் சோதியை அதீனப்படுத்தி மிக்கப் புகழுடைந்த மித்திரன் புவியையும் உணவால் அதீனப்படுத்துகிறான்.

8. பஞ்ச சனங்கள் வெற்றியுள்ள மித்திரனிடம் செல்லுகிறார்கள். அவன் எல்லாத் தேவர்களையும் தாங்குகிறான்.

9. மித்திரன், தேவர்களின் மனிதர்களின் நடுவே நறுக்கிய தருப்பையைப் பரத்தும் மனிதனுக்கு விரதங்களைப் பூர்த்தி செய்யும் உணவைத் தருகிறான். 3,020

# 60. ரிபுக்கள்

## 294. காதினன்—விசுவாமித்திரன்

1. தேவர்களான ரிபுக்களே! உங்களுடைய பந்துத்வம் இங்கு எல்லா மனங்களாலும்—மனிதர்களாலும்—ஒப்புக்கொள்ளப்படுகிறது. யக்ஞத்தில் பாகத்தை விரும்பும் அவர்கள் நரர்களே—மனிதர்களான ரிபுக்களே! உரிமையை யறியும் அவர்கள், இந்த யக்ஞங்களுக்கு வந்திருக்கிறார்கள். மாயைகளால் பகைவர்களை ஜயித்த

ஸௌதன்வப் புதல்வர்களான நீங்கள், யக்ஞாருகமான பாகத்தை அடைந்தீர்கள் – யக்ஞத்திலே உங்கள் பாகத்தை யடைந்தீர்கள்.

3. நீங்கள் எந்த ஆற்றல்களால் சிருவங்களைக் கூறு செய்தீர்களோ, எந்த அறிவால் சர்மத்திலிருந்து பசுவைப் புலப்படுத்தினீர்களோ, எந்த மனத்தால் இந்திரனுடைய இரு குதிரைகளைக் கற்பித்தீர்களோ அந்தச் செயல்களால், ரிபுக்களே! நீங்கள் தேவத் தன்மையை யடைந்தீர்கள்.

3. உத்தமச் செயல்களை நடத்துபவர்களும், மனிதனின் பேரர்களுமான ரிபுக்கள் இந்திரனுடைய நட்பைப் பெற்றார்கள். அதனால் தங்கள் சுவாசங்களை ஏந்தினார்கள் –திரப்படுத்தினார்கள். ஸௌதன்வனின் புதல்வர்கள் அமுதத்வத்தை அடைந்தார்கள். உத்தமச் செயலாளர்கள், நடத்தைகளோடு ஒழுக்கச் செயலோடு வியாபகமாகி தேவத் தன்மையை அடைந்தார்கள்.

4. ரிபுக்களே! ஸோமம் பொழியப்பட்டவுடன் நீங்கள் இந்திரனோடு அவனுடைய தேரிலே செல்லுங்கள். பிறகு உங்களுடைய செல்வத்தை விரும்பும் வழிபடுபவனால் போற்றப்படுங்கள். ஸௌதன்வனப் புதல்வர்களும், அறிஞர்களும், ரிபுக்களுமான உங்களுடைய உத்தமச் செயல்களும், வீரத் தன்மைகளும் எவனாலும் அளக்க இயலாதவை.

## இந்திரனும் ரிபுக்களும்

5. இந்திரனே! உணவளிக்கும் ரிபுக்களோடு சேர்ந்து ஸோமம் நிறைந்துள்ள கலசத்தை உன்னுடைய இரு கைகளாலும் ஏற்றுக்கொள்ளவும். அளிப்பவனுடைய மனையிலே, துதியால் ஊக்கமடைந்த மகவானே! ஸௌதன்வப் புதல்வர்களான மானிட ரிபுக்களோடு இன்பமாகவும். 3,025

6. இந்திரனே! பலரால் போற்றப்படுபவனே! எங்களுடைய இந்த யக்ஞத்திலே ரிபுக்களோடும் வாஜர்களோடும் சேர்ந்து நீ, சசியோடு இன்பமாகவும். சுற்றி வரும் இந்தினங்களும், தேவர்களுடைய விருதங்களும், மனிதர்களுடைய தருமச் செயல்களும் உன்னை நோக்குகின்றன.



7. இந்திரனே! உணவை யளிக்கும் ரிபுக்களோடு துதிப்பவனுக்கு உணவை யளித்து, நீ மருத்துக்களின் சின்னங்களான துரிதமாய்ச் செல்லும் நூறு குதிரைகளோடு வழிபடுபவனுடைய யக்ஞாருகமான தோத்திரத்துக்கு வா. செய்வோனுக்கு ஆயிரஞ் செல்வங்களை அளிக்கும் யக்ஞத்தின் அவிக்கு வா. 3,027

# 61. உஷை

## 295. காதினன்-விசுவாமித்திரன்

1. உஷையே! நீ ஆற்றலோடு ஆற்றலுள்ளவள், நீ செல்வி, மிக்க அறிவுள்ளவள். நீ போற்றுபவனுடைய ஸ்தோமத்தை விரும்பவும். அனைவராலும் போற்றத் தகுந்த நீ தேவி; நீ பழையவள்; நீ யுவதி; நீ புரந்தீ; நீ விரதத்தை அனுசரித்துச் செல்லுகிறாய்.

2. உஷையே! தேவியும் அமுதியும் பொன் தேரிலே ஏறியுள்ளவளுமான நீ, சத்தியக் குரல்கள் செவியுறப்பட பிரகாசிப்பாயாக. உன்னுடைய வலிய பயிலப்பட்ட குதிரைகள் இங்கு பொன்கேசமுள்ள உன்னை ஏந்தி வருக

3. உஷையே! நீ எல்லா புவனங்களிலும் பரவுகிறாய். நீ அமிருதனின் – சூரியனின் - துவஜமாகி உச்சத்திலே நிற்கிறாய். நீ ஒரே நோக்கத்துக்கு–ஒரே வழியில் – எப்பொழுதும் செல்லுகிறாய். புதியவளாய்ப் பிறந்த நீ, சக்கரத்தைப் போல் இங்கு வரவும்.

4. செல்வியான உஷை இருளை விலக்கும் சூரியனின் பத்தினியாகிறாள். அவள் இருளை, ஆடையைப் போல் நீக்கி முன்னேறுகிறாள். சௌபாக்கியவதியான உஷை தன் சொந்த ஒளியைப் பிறப்பிக்கிறாள். உத்தமச்

செயல்களைச் செழிப்பிக்கும் அவள் சோதி புவிகளின் எல்லைகளிலே பிரகாசிக்கிறாள்.

5. உங்கள் மீது பிரகாசிக்கும் தேவியான உஷைக்கு வணக்கங்களோடு உத்தம ஸ்துதியைக் கூறுங்கள். மது ஏந்தும் அவள் வானின் உச்சியிலே தன் ஒளியைப் புலப்படுத்துகிறாள். எழிலும் நகையுமுள்ள அவள் உலகங்களை சோதிப்படுத்துகிறாள். 3,032

6. சத்தியவதி வானிலே அவனுடைய ஒளிக்கதிர்களால் அறியப்படுகிறாள். அவள் சோதி புவிகளின் நடுவே மிக்க அழகாய்ப் பரவுகிறாள். அக்கினியே! நீ முன்னேறும் உஷையினிடம் அவிகளை விரும்பி நீ நாடும் செல்வத்தைப் பெறுகிறாய்.

7. மழையைப் பொழியும் சூரியன் சத்தியமாயுள்ள தினத்தின் மூலத்திலே உஷையை ஊக்கப்படுத்தி சோதியிலும் புவியிலும் பரவுகிறாள். மித்திரா வருணர்களுடைய பிரபாவம் மகத்தானது. அவள் பொன் போலுள்ள தன் ஒளியை எங்கும் பரத்துகிறாள். 3,034

## 62. இந்திரனும் பல தேவர்களும்

### 296. காதினன்-விசுவாமித்திரன்

#### இந்திரா வருணர்கள்

1. இந்திரா வருணர்களே! உங்களிடம் பற்றுள்ளவர்களும், பயத்தால் திரிபவர்களுமான இந்த சனங்கள், இளமைத்தனமுள்ள பகைவனிடமிருந்து எந்தத் துன்பத்தையுமடையார்கள். எந்தப் புகழால் நீங்கள் நண்பர்களுக்கு உணவைத் தந்தீர்களோ அந்தப் புகழ் இப்பொழுது எங்கே?

2. இந்திரா வருணர்களே! மிக்க ஊக்கமுள்ள நான் செல்வத்தை விரும்பி உங்களைப் பாலனத்துக்காக எப்பொழுதும் அழைக்கிறேன். நீங்கள் மருத்துக்களோடும் சோதி புவிகளோடும் சேர்ந்து என் அழைப்புக்குச் செவிகொடுங்கள்.



3. இந்திரா வருணர்களே! நாங்கள் விரும்பும் செல்வம் எங்களுக்குத் தோன்றுக. மருத்துக்களே! எங்களுக்குப் பசுச் செல்வமும், பல வீரப் புதல்வர்களும் தோன்றுக. ருத்திரிகள் – தேவ பத்தினிகள் – மனைகளோடு எங்களைப் பாலிப்பார்களாக. வாக்கும், பாரதியும், தட்சிணைகளோடு எங்களைப் பாலிப்பார்களாக.

#### பிரகஸ்பதி

4. எல்லாத் தேவர்களுடைய நண்பனான பிரகஸ்பதியே! எங்களுடைய அவிகளைப் பற்றுங்கள். அளிப்பவனுக்கு உத்தமச் செல்வங்களை அளியுங்கள்.

5. நீங்கள் யக்ஞங்களிலே சுத்தனான பிரகஸ்பதியை தோத்திரங்களால் போற்றுங்கள். நான் அவனிடம் வெல்லப்படாத ஆற்றலை வேண்டுகிறேன். 3,039

6. மானிடர்களின் நடுவே விருஷபனும், விசுவரூபனும், இம்சிக்கப்படாதவனுமான பிரகஸ்பதி போற்றத் தகுந்தவனாயிருக்கிறான்.

#### பூஷா

7. தேவனே! ஒளியுள்ளவனே! பூஷாவே! இந்தப் புதிய உத்தமத் தோத்திரம் உனக்கு எங்களால் கூறப்படுகிறது.

8. என்னுடைய இந்தத் துதியால் இன்பமாகவும். இந்த உணவை நாடும் பனுவலை, மனைவியை விரும்பும் தாராகாமியனைப் போல் பற்றவும்.

9. எல்லாப் புவனங்களையும் பார்ப்பவனும், அவற்றை நன்கறிபவனுமான பூஷா, எங்களுடைய பாலனாகயிருப்பானாக.

#### ஸவிதா

10. எந்த ஸவிதா - தேவன்–எங்களுடைய செயல்களை, புத்திகளை, அறிவுகளைப் பிரேரிக்கிறானோ, ஊக்கப்படுத்துகிறானோ, எழுப்புகிறானோ – அந்தத் தேவனான

ஸவிதாவினுடைய – சூரியனுடைய – சர்வேசனுடைய – அனைவராலும் போற்றத் தகுந்த பரஞ்சோதியை நாங்கள் தியானஞ் செய்கிறோம். 3,044.

11. உணவை விரும்பும் நாங்கள் தேவ ஸவிதாவின் செல்வ தானத்தைத் துதியோடு வேண்டுகிறோம்.

12. தலைவர்களும் அறிஞர்களும் செயலால் பிரேரிக்கப்பட்டு தேவனான ஸவிதாவை யக்ஞங்களாலும் உத்தமத் தோத்திரங்களாலும் போற்றுகிறார்கள்.

**ஸோமன்**

13. வழியை யறியும் ஸோமன் அந்த நல்வழியிலே செல்லுகிறான். அவன் தேவர்களின் உத்தம ஸ்தானமான ருதத்தின் இடத்துக்குப் போகிறான்.

14. ஸோமன் எங்களுக்கும், எங்களுடைய ஆட்களுக்கும், கால்நடைகளுக்கும் இதமான உணவைத் தருவானாக.

15. ஸோமன் எங்களுடைய ஆயுளை நீடித்து எங்களுடைய பகைவர்களை வென்று எங்களுடைய யக்ஞ ஸ்தானத்தில் அமர்வானாக. 3,049

**மித்திரா வருணர்கள்**

16. மித்திரா வருணர்களே! எங்களுடைய பசுக்களின் தொழுவங்களை நெய்யால் தெளியுங்கள். உத்தமச் செயல்களை நடத்தும் நீங்கள், உலகங்களைத் தேனால் தெளியுங்கள்.

17. உத்தமச் செயல்களை நடத்துபவர்களும், பலரால் போற்றப்படுபவர்களும், துதியால் வளர்பவர்களும், நீண்ட பனுவல்களால் போற்றப்படுபவர்களுமான நீங்கள், உங்கள் பலத்தின் மகிமையால் அரசு புரிகிறீர்கள்.



18. ஜமதக்கினியால் போற்றப்பட்டு யக்ஞத்தின் இடத்திலே அமருங்கள். சத்தியத்தை வளர்க்கும் நீங்கள் ஸோமத்தைப் பருகுங்கள். 3,052

மண்டலம் : 3.
சூக்தங்கள் : 62 இருக்குக்கள் 617.



**மூன்றாவது மண்டலம் முற்றிற்று.**

# நான்காவது மண்டலம்

## 1. அக்கினி

### 297. வாம தேவன் - கௌதமன்

1. அக்கினியே! இசைந்த மனமுள்ள தேவர்கள், துரிதனும் தேவனுமான உன்னை எப்பொழுதும் போருக்குப்பிரேரிக்கிறார்கள். வழிபடுபவர்கள் உன்னை ஊக்கப் படுத்துகிறார்கள். யக்ஞாருகனே! அவர்கள்—தேவர்கள்—அமுதனும் தேவனும் பேரறிஞனுமான உன்னை, மனிதர்களின் நடுவே துலங்கும் தேவனாகப் பிறப்பித்தார்கள். அவர்கள், எங்கும் துலங்குபவனும் பேரறிஞனுமான உன்னைப் பிறப்பித்தார்கள்.

2. அக்கினியே! யக்ஞத்தை விரும்பும் தலைவனும், யக்ஞத்தை விரும்புபவனும், உன்னுடைய சகோதரனும், சத்தியவானும், மனிதர்களைத் தாங்கும் ஆதித்தியனும், மனிதர்களைத் தாங்கும் அரசனுமான வருணனை, ஸுமதியோடு தேவர்களின் முன்னே முற்படுத்தவும்.

3. நண்பனும் அழகனுமான அக்கினியே! நீ வருணனை எங்கள் முன்னே நோக்கத்துக்குத் தேரை வழியிலே கடத்திச் செல்லும் இருவலிய குதிரைகளைப் போல் ஏந்தி வா. அக்கினியே! நீ வருணனோடும் அனைத்தையும் ஒளிப்படுத்தும் மருத்துக்களோடும் சேர்ந்து சுகப்படுத்தும் அவியைப் பெற்றுக்கொள்கிறாய். பிரகாசமான அக்கினியே! எங்கள் புதல்வர்களுக்கும் பேரர்களுக்கும் சுகத்தை யளிக்கவும். அழகான அக்கினியே! எங்களுக்கும் சுகத்தையளிக்கவும்.

4. அக்கினியே! அறிஞனான நீ, தேவனான வருணனுடைய கோபத்தை எங்களிடமிருந்து விலக்கவும் யஜிப்பதில் உத்தமனும், ஏந்துவதில் தலைவனும், மிக்கப் பிரகாசிப்பவனுமான நீ, எங்களை எல்லா வெறுப்புக்களிலிருந்தும் விடுவிப்பாயாக.



5. அக்கினியே! எங்களுடைய பாலகனான நீ, இந்த உஷையின் உதயத்திலே உன் பாலனத்தோடு எங்களருகிலாகவும். வருணனால் வரும் நோயை எங்களிட மிருந்து நீக்கவும். எங்களால் ஏத்தப்பட்டு, இதமான அவியைப் புசிக்கவும். எங்களைச் செவியுறத் துரிதமாகவும். 3,057

6. மிக்கச் செல்வனான தேவனுடைய உத்தமக் கண்ணோட்டம் மானிடர்களின் நடுவே மிக்கப் போற்றத் தகுந்ததாகிறது. அனைவராலும் விரும்பத் தகுந்ததாகிறது. தேவனுக்குப் பிரியமாயிருக்கும் பசுவின் பாலிலிருந்து வரும் சுத்தமான சூடான நெய்யைப் போல் இருக்கிறது. மானிடனுக்குப் பாற் பசுவின் தானத்தைப் போல் இருக்கிறது.

7. எல்லையற்ற வானிலே ஒளியால் உடுத்தப்பட்டுள்ள இந்தத் தேவனின் அக்கினிக்கு மூன்று பிறவிகள்—அக்கினி, வாயு, சூரியன்—உண்டு. அவை உண்மை; மேலானவை; விரும்பத் தகுந்தவை. சுத்தப் படுத்துபவனும், சோதியுள்ளவனும், பிரகாசிக்கும் தலைவனுமான அவன், எங்கள் யக்ஞத்துக்கு வருவானாக.

8. தூதனும், தேவர்களை அழைப்பவனும், சுவாலையான நாக்கோடு பொன்மயத்தேரிலே செல்பவனுமான அவன், எல்லா யக்ஞ ஸதனங்களையும் விரும்புகிறான். அவனிடம் சிகப்புக் குதிரைகளுண்டு. சுந்தரவடிவமுள்ள அவன் மிக்கச் சோதியுள்ளவன். அவன் உணவு மிருந்துள்ள மனையைப் போல் இதமாயிருக்கிறான்.

9. யக்ஞத்தால் பந்துவான அவன், இந்த மனிதர்களை அறிகிறான். அவர்கள் மகத்தான துதிக்கயிறால் அவனை முற்படுத்துகிறார்கள். தேவனான அக்கினி எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுகிறான். இந்த மனிதனின் மனையிலே வசிக்கிறான். அவனுக்குச் செல்வத்தை யளித்து தானும் அக்கினியும் அவனோடிருக்கிறான்.

10. அந்த அறிஞனை அக்கினி தேவர்களால் விரும்பப்படும் செல்வத்துக்கு எங்களைச் செலுத்து-வானாக. அவனை எல்லா அமுதர்களும் யக்ஞங்களை நடத்தச் சிருட்டித்தார்கள். சோதி அவனுடைய தந்தை-யும் அவனைத் தோற்றுவிப்பவனுமாகிறான். அவனை அவர்கள் நெய்யால் தெளிக்கிறார்கள், 3,062

11. அவன் நதிகளிலே முதல்வனாகத் தோன்று-கிறான். பிறகு அவன் பரந்த வானின் மூலத்திலே இந்த இடத்திலே -வேதியிலே- தோன்றுகிறான். தலையும் கால்களுமில்லாத அவன், தன் அங்கங்களை மறைத்து மேகத்தின் இடையிலுள்ள புகையோடு சேர்ந்து சலன மாகிறான்.

12. விருஷபனின்-மேகத்தின்-இடையிலுள்ளவனும், சலத்தின் மூலஸ்தானத்திலிருப்பவனும், துதியால் போற்றப்படுபவனுமான உனக்கு, சாந்தி முதலில் செல்லுகிறது. அன்புள்ள ஏழு ஹோதாக்கள், விரும்பத் தருந்தவனும், தருணனும், அழகனும் பிரகாசிப்பவனு மான அக்கினியைப் பிறப்பிக்கிறார்கள்.

13. இந்த உலகத்திலே எங்களுடைய மானிடப் பிதாக்கள் யக்ஞத்தை, அக்கினியைப் பற்ற ஸ்தாபித்து நீங்கினார்கள், பிறகு அவர்கள், இருட்டை விலக்கும் உஷையை, அவள் ஒளிப்படுத்த அழைத்துக்கொண்டு தமத்திலே பாறைகளின் இடையே மறைத்து வைக்கப் பட்டிருந்த பால் தரும் பசுக்களை வெளிப்படுத்தினார்கள்.

14. அவர்கள் மலைகளைப் பிளந்து அக்கினியைப் போற்றினார்கள், மற்ற அறிஞர்கள் அவர்களுடைய வீரச் செயல்களை எங்கும் அறிவித்தார்கள். அவர்கள் பசுக்களை மீட்கும் வழியையறியாமல் வெற்றியைத் தருபவனான அக்கினியை உயர்த்தினார்கள். பிறகு சூரியனான சோதி யைக் கண்டார்கள். அப்பால் புலன்களால்-யக்ஞங் களால்-அவனை ஏத்தினார்கள்.



15. அக்கினியை நாடும் அத்தலைவர்கள், பசுக்களை மீட்கும் மனத்தோடு, தடைபடுத்துவதும், திடமாயிருப் பதும், பசுக்கள் நிறைந்த தொழுவமாயிருப்பதும், கோக்கள் வைக்கப்பட்டிருக்கும் மலையான அடைப்பை, தெய்வ வாக்கால் பலாத்காரமாய்த் திறந்தார்கள். 3,067

16. அவர்கள் பாற்பசுவின் பூர்வமான நாமத்தை அறிந்தார்கள். அவர்கள் தாயின் மூவேழு உத்தமச் சந் தங்களையும் உணர்ந்தார்கள். பிறகு அவர்கள் அறிஞர் களான உஷைகளைப் போற்றினார்கள். அப்பால் சிகப் பான உஷை சூரியனுடைய புகழோடு தோன்றினாள்.

17. தேயும் இருள் மறைந்து வானம் ஒளியோடு பிரகாசித்தது. தேவியான உஷையின் சோதி எழுந்தது. பிறகு சூரியன் மனிதர்களின் நன்மைகளையும் புன்மை களையும் பார்த்துக் கொண்டு தேயாத மலைகளின்-ரசிமி களின்-மேலே நின்றான்.

18. அப்பால் அங்கிரஸர்கள் எழுந்தவுடன் பசுக்கள் விடுவிக்கப்பட்டிருந்ததைக் கண்டார்கள். அரிய செல்வங்களை-கோக்களை - பற்றினார்கள். எல்லாத் தேவர் களும் அவர்களுடைய எல்லா மனைகளுக்கும் வந்தார் கள். மித்திரனே! வருணனே! கடமையைச் செய்ப வனுக்கு சத்தியம் தோன்றுக.

19. நான் பசுவின் சுத்த ஆபீனத்தைக் கறக்காதும், யக்ஞத்திலளிக்கப்படும் ஸோமத்தின் சுத்தப்பட்ட ரச அவியில்லாமலும், தேவர்களை அழைப்பவனும், விசு வத்தைத் தாங்குபவனும், மிக்க யக்ஞாருகனும், ஒளி யுள்ளவனுமான அக்கினியைப் போற்றுகிறேன்.

20. அக்கினி எல்லா யக்ஞாருகத்தேவர்களின் அதிதி யாயிருப்பானாக. அவன் எல்லா மனிதர்களின் அதிதி யாயிருப்பானாக. தேவர்களின் - வழிபடுபவர்களின்- அவியை, ஜாதவேதஸனான அக்கினி, பெற்றுக்கொண்டு சுகத்தைத் தருபவனாயிருப்பானாக. 3,072

## 2. அக்கினி

### 298. வாமதேவன்-கௌதமன்

1. ஸத்தியவானும், தேவர்களின் நடுவே ஜயிக்கும் தேவனும், தேவர்களை அழைப்பவனும், யக்ஞாருகனை ஹோதாவும், மனிதர்களின் நடுவே அமுதனுக வைக்கப் பட்டவனுமான அக்கினி, யக்ஞத்தை ஒளிப்படுத்த, செய்வோனை உயர்த்த வேதியிலே ஸ்தாபிக்கப்பட்டி ருக்கிறுன்.

2. பலத்தின் மகனே! அக்கினியே! நீ இன்று எங் களுடைய யக்ஞத்திலே தோற்றுவிக்கப்பட்டு, தேவர் களுக்கும் மனிதர்களுக்கும் நடுவே தூதனுகச் செல்ல, அழகனே! மகானே! நீ உன்னுடைய வலிய வீரிய முள்ள, காந்தியுள்ள குதிரைகளை இணைத்துக் கொண்டு செல்லுகிறுய்.

3. நான் ஸத்தியனுயுள்ள உன்னுடைய மனத்தைக் காட்டிலும் வேகமாயுள்ளவையும், உணவைத் தருபவை யும், நெய்யைச் சொரிபவையுமான சிகப்புக் குதிரை களைப் போற்றுகிறேன். நீ பிரகாசமாயிருக்கும் குதிரை களைத் தேரிலே இணைத்து, தேவர்களான உங்களுக்கும் மானிட சனங்களுக்கும் நடுவிலே செல்லுகிறுய்.

4. அக்கினியே! நல்ல குதிரைகளும், உத்தமத் தேரும் மிகுந்த செல்வமுமுள்ள நீ, இந்த வழிபடுபவர்களின் நடுவே, தகுந்த அவிகள் அளிக்கும் மனிதனுக்கு, அர்ய மாவையும், வருணனையும்,மித்திரனையும், விஷ்ணுவையும், மருத்துக்களையும், மேலும் அசுவினிகளையும் ஏந்தி வா.

5. அக்கினியே! இந்த யக்ஞம் பசுக்களையும், ஆடு களையும், குதிரைகளையும் தோற்றுவிப்பதாகுக. இது வழி படுபவனுல் போற்றப்பட்டு, அறிஞர்களால் பாலிக்கப் பட்டு, இடையருமல் நித்தியமாயிருக்க. அசுரனுன மிக்க ஆற்றலுள்ள அக்கினியே! இது உணவோடும், பிரஜை



யோடும், நீட்சியோடும், செல்வத்தோடும், பரந்த மூலத் தோடும், சபையோடும் நிலைத்திருக்க அவற்றைத் தோற்றுவிக்க. 3,077

6. உழைப்பால் வியர்த்து உனக்கு சமிந்தனத்தை தந்து, உன் சேவையிலே தன் தலைக்குத் தாபத்தைச் செய்து கொள்பவனுக்கு நீ செல்வத்தைத் தருகிறுய். அக்கினியே! அவனுக்குத் தீமை செய்ய விரும்பும் ஒவ் வொருவனிடமிருந்தும் அவனைப் பாலிக்கவும்.

7. அக்கினியே! அவியை விரும்பும் உனக்கு உணவையளிப்பவனும், மதப்படுத்தும் ஸோமத்தைச் சதா தருபவனும், அதிதியாக உன்னை வரவேற்பவனும், தேவனுன உன்னை விரும்புபவனுகி, தன் மனையிலே உன்னை ஒளிப்படுத்துபவனுடைய செல்வன்-புதல்வன்-நல்ல வழியில் நிலைத்திருப்பானுக.

8. காலையிலும் மாலையிலும் உன்னைப் போற்றி, உனக்கு அவிகளையளிப்பவனும், தன் மனையிலே உனக்கு விரும்புவதைச் செய்பவனுமான ஈகையனை, தங்கக் கச்சையுடனுள்ள குதிரை போலிருக்கும் நீ, துன்பத்தி லிருந்து மீட்கவும்.

9. அக்கினியே! அமிருதனுன உனக்கு அவிகளைத் தந்து, உயர்த்திய சிருவங்களோடு துதியைக் கூறி உன்னை உபசரிப்பவன் செல்வத்திலிருந்து பிரியாமலிருப் பானுக. துன்புறுத்துபவனுடைய தீமை சூழாமலிருக்க.

10. அக்கினியே! தேவனும் உதாரனுமான நீ, எந்த மனிதனுடைய நன்கு கற்பிக்கப்பட்ட யக்ஞத்தை நீ ஏற் றுக் கொள்கிறுயோ அந்த யக்ஞம் உனக்குப் பிரியமுள்ள தாகுக. தருணனே! நாங்கள் உன்னைப் போற்றுபவனைப் பலப்படுத்துவோமாக. 3,082

11. பாபத்தையும் புண்ணியத்தையும், குதிரையின் வலிய மெலிய முதுகுகளைப் பகுத்தறியும் காசாரியைப் போல் ஆய்ந்தறியும் அக்கினி உத்தமப் புதல்வனோடு

வரும் செல்வத்தால் எங்களைச் செல்வப்படுத்துவானாக. அவன் வறுமையை விலக்குவானாக. எங்களுக்குச் செழிப்பையளிப்பானாக.

12. அக்கினியே! மனிதனுடைய மனைகளிலே வசிப்பவர்களும், நிந்திக்கப்படாதவர்களுமான கவிகள், கவியான உன்னைப் போற்றினார்கள். ஆதலால் யக்ஞத் தலைவனான நீ, வேகமாய் நடக்கும் கால்களோடு அழகர்களாயும் அற்புதர்களாயிருக்கும் தேவர்களைக் காண செல்வாயாக.

13. மிக்க இளைஞனே! அக்கினியே! ஒளியுள்ளவனே! மனிதர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் நீ, வேதிகைக்குச் செலுத்தப் படுகிறாய். ஸோமத்தையளித்து, உபசரித்து, துதித்து, யக்ஞத்தை நடத்துபவனுக்கு இன்பந்தரும் மிகுந்த செல்வத்தைப் பாலனத்துக்காக அளிக்கவும்.

14. அக்கினியே! நாங்கள் எங்கள் கைகளாலும், கால்களாலும், அங்கங்களாலும் உனக்கு உழைக்குங்கால் யக்ஞங்களை நன்கு நடத்தும் அங்கிரஸர்கள் மந்தனச் செயலில் தங்கள் கைகளைத் தேரைக் கற்பிக்கும் சிற்பிகளைப் போல் இயக்குகிறார்கள்.

15. ஏழு விப்பிரர்களும் முதல்வர்களுமான நாங்கள் படைப்பவனான அக்கினியைப் போற்றும் நரர்களை—ரசிமிகளை—தாயான உஷையிலிருந்து தோற்றுவிப்போமாக. அங்கிரஸர்களான நாங்கள் சோதியின் புதல்வர்களாவோமாக. பிரகாசமாயிருக்கும் நாங்கள் சலம் நிறைந்திருக்கும் மேகத்தைப் பிளப்போமாக. 3,087

16. அக்கினியே! யக்ஞத்தை நடத்திய எங்களுடைய பழையவர்களும், உத்தமர்களுமான பூர்வ பிதாக்கள் சுத்த சோதியின் நிலயத்துக்குச் சென்றார்கள். அவர்கள் துதிகளைக் கூறி, இருளை நீக்கி, சிகப்பான பசுக்களைப் புலப்படுத்தினார்கள்.



17. நல்ல செயல்களை நடத்துபவர்களும், பிரகாசிப்பவர்களும், தேவர்களை விரும்புபவர்களுமான தூயவர்கள், தங்கள் பிறவியின் அசுத்தத்தை — யக்ஞத்தால்— இரும்பை, நெருப்பால் சுத்தப்படுத்தும் கருமானைப் போல் சுத்தஞ்செய்து கொண்டார்கள். அவர்கள் அக்கினியை ஒளிப்படுத்தி, இந்திரனை மேம்படுத்தி, தேடிக் காண எங்கும் திரிந்தார்கள். பிறகு மறைக்கப்பட்டிருந்த மகத்தான பசு மந்தைக்குச் சென்றார்கள்.

18. உக்கிரனான அக்கினியே! தீனி நிறைந்த தொழுவத்திலிருக்கும் பசு மந்தையைப் போல் அங்கிரஸர்களின் பசு மந்தை அருகிலிருப்பதை இந்திரன் அறிவித்தபோது மானிடப் புதல்வர்கள் ஆற்றலைப் பெற்று யக்ஞத்தை நடத்தினார்கள். இல்லறத் தலைவன் சந்தானத்தைச் செழிப்பிக்கவும், ஆட்களைப் பாலிக்கவும் வல்லவனானான்.

19. நாங்கள் அக்கினியான உன்னைப் போற்றுகிறோம். அதனால் நல்ல செயலை நடத்துபவர்களாகிறோம். பிரகாசிக்கும் உஷைகள் ஒளியை ஏந்துகிறார்கள். பூரணமாயிருப்பவனும், பலவிதமாய் இன்புறுத்துபவனுமான அக்கினியை ஏந்துகிறார்கள். தேவனான உன்னுடைய மனோகரமான ஒளியை நாங்கள் போற்றுகிறோம்.

20. அக்கினியே! படைப்பவனே! நாங்கள் அறிஞனான உனக்கு இந்தத் துதிகளைக் கூறுகிறோம். நீ அவற்றை இன்பத்தோடு ஏற்றுக்கொள்ளவும். நீ உச்சத்திலே ஒளி வீசவும்; எங்களைச் செல்வப்படுத்தவும். பலரால் போற்றப்படும் நீ, எங்களுக்கு மிகுந்த செல்வத்தையளிக்கவும். 3,092

## 3. அக்கினி

### 299. வாமதேவன்—கௌதமன்

1. யக்ஞத்தின் தலைவனும், ஹோதாவும், உருத்திரனும், சத்தியத்தைத் தருபவனும், சோதிபுவிகளில் நிலைக்

கும் பொன்மேனியனுமான அக்கினியை நீங்கள் புத்தி தடுமாற்றமடைந்து திடீரென மரிப்பதற்கு முன்னே போற்றுங்கள்.

2. கணவனுக்காக அழகிய ஆடைகளை அணிந்து கொள்ளும் அன்பு மிகுந்த மனைவியைப் போல் இந்த வேதியை நாங்கள் உனக்காக அலங்காரஞ் செய்திருக்கிறோம். இந்த சுவாலைகள் உன்னை நோக்குங்கால் உத்தமச் செயல்களை நடத்தும் நீ, காந்தியை யணிந்து எங்கள் முன் உட்காரவும்.

3. நடத்துபவனே! நீ கேட்பவனும், கவனமுள்ளவனும், நரர்களைக் காண்பவனும், உத்தம சுகத்தைத் தருபவனும், அமிருதனுமான தேவனுக்கு - அக்கினிக்கு- துதியையும் தோத்திரத்தையுங் கூறவும். அவனுக்கு ஸோமத்தை அளிப்பவன், ரஸத்தைப் பிழியும் கல்லைப் போல துதியை முழங்குகிறான்.

4. அக்கினியே! நீயே எங்களுடைய இந்த யக்ஞத்துக்குத் தலைவனு யிருக்கிறாய். எங்களுடைய மனையிலே நாங்கள் நட்புத்தன்மைகளைத் தோற்றுவிக்கும் போதும், உனக்கு இன்புறுத்தும் துதிகள் கூறப்படுங்காலும், ஸத்தியத்தை அறிபவனும், நல்ல செயல்களைத் தோற்றுவிப்பவனுமான நீ, எங்களுடைய இந்த ருதத்தை- தோத்திரத்தை-தெரிந்துகொள்ளவும்.

5. அக்கினியே! நீ எங்களுடைய பாவத்துக்கு வருணனிடம் ஏன் குறை கூறுகிறாய்? சூரியனிடம் ஏன்? எங்களுடைய குற்றமென்ன? நீ ஏன் உதார குணமுள்ள மித்திரனிடமும், புவியினிடமும், அர்யமானிடமும், பகனிடமும் கூறுகிறாய்? 3,097.

6. யக்ஞங்களிலே நீ போற்றப்படுங்கால் ஏன் மீண்டும் கூறுகிறாய்? மிக்கப் பலமுள்ளவனும், உதாரத் தன்மையுள்ளவனும், எங்கும் பரவுபவனும், சத்தியனுயுமுள்ள வாயுவினிடம் ஏன் கூறுகிறாய்? அக்கினியே! புவியினிடம் ஏன்? மனிதனைக் கொல்லும் உருத்திரனிடம் ஏன் கூறுகிறாய்?



7. மகானும் புட்டி தருபவனுமான பூஷாவிடம் என் குற்றத்தை ஏன் கூறுகிறாய்? போற்றத் தகுந்தவனும், தேவர்களுக்கு அவிகளைத் தருபவனுமான உருத்திரனிடம் ஏன் கூறுகிறாய்? பலநாள் போற்றப்படும் கம்பீர நடையுள்ள விஷ்ணுவினிடம் ஏன் கூறுகிறாய்? மகத்தான வருடத்தினிடமும் எங்கள் குற்றத்தை ஏன் கூறுகிறாய்?

8. மருத்துக்களின் சத்தியப் படையினிடமும் ஏன் கூறுகிறாய்? வினவப்பட்டாலும் மகத்தான சூரியனிடம் ஏன் கூறுகிறாய்? ஏன் அதிதியினிடம்? ஏன் துரிதமான காற்றினிடம் எங்கள் குற்றத்தைக் கூறுகிறாய்? எல்லாம் அறியும் ஜாதவேதஸனே! சோதியின் செயலை நீ பூர்த்தி செய்யவும்.

9. அக்கினியே! நான் யக்ஞத்துக்கு அவசியமாயிருக்கும் பசுவின் பாலை வேண்டுகிறேன். அபக்குவப் பசு இனியதும் பக்குவமுள்ளதுமான பாலை ஏந்துகிறது. அது கருப்பாயிருந்தாலும தன் வெளுப்பான புட்டிப் படுத்தும் பாலால் மானிடர்களைத் தாங்குகிறது.

10. விருஷபனும் தலைவனுமான அக்கினி, ருதத்தாலும் புட்டிப்படுத்தும் பாலாலும் அலங்கரிக்கப்படுகிறான். உணவைத் தரும் அக்கினி ஒரு இடத்தில் இருந்தாலும் எங்கும் பரவுகிறான். மழையைப் பொழியும் சூரியன், வானின் ஆபீனத்தின் பாலைக் கறக்குகிறான். 3,102

11. அங்கிரஸர்கள் ருதத்தால் மலையைப் பிளந்து பிரிக்கிறார்கள். பசுக்களோடு சேர்ந்து போற்றுகிறார்கள். தலைவர்கள் உஷையினிடம் சுகத்தோடு வருகிறார்கள். அக்கினி தோற்றுவிக்கப்படுங்கால் சூரியனும் தோன்றுகிறான்.

12. அக்கினியே! அமுதர்களும், தடைபடாதவர்களும், தேவிகளுமான நதிகள், ருதத்தால் இனிய சலங்

களோடு துரிதமாக ஊக்க மூட்டப்படும் குதிரையைப் போல் எப்பொழுதும் பெருகப் பாய்கிறார்கள்.

13. அக்கினியே! நீ எங்களைத் துன்புறுத்துபவனுடைய யக்ஞத்துக்கோ அல்லது எங்களருகில் வசிக்கும் வஞ்சகனுடைய யக்ஞத்துக்கோ போகாதே. நீதியற்ற பந்துவினிடமும் செல்லாதே. கபடமுள்ள சகோதரனிடமிருந்து கடனை-அவியை-விரும்பாதே. நாங்கள் நண்பனுடைய பகைவனிடமிருந்து செல்வத்தை அனுபவிக்காமலிருப்போமாக.

14. உத்தமச் செல்வனே! அக்கினியே! எங்களை மிக்கப் பாலிப்பவனும் எங்களிடம் அன்புள்ளவனுமான நீ, உன்னுடைய பாலனங்களால், எங்களைப் பாலிக்கவும். எங்களை ஒளிப்படுத்தவும். எங்களுடைய கொடிய பாவத்தை அடியோடு நீக்கவும். மகத்தாய்ச் செழிக்கும் கொடுமையில் வலிமையடையும் அரக்கனை அகற்றவும்.

15. அக்கினியே! இந்தத் துதிகளால் நீ எங்களிடம் நல்ல மனமுள்ளவனாகவும். சூரனே! தோத்திரங்களோடு அளிக்கப்படும் இந்த அவிகளை ஏற்றுக் கொள்ளவும். அங்கிரஸனே! எங்களுடைய பாக்களால் இன்புறவும். தேவர்களுக்குக் கூறப்படும் தோத்திரம் உன்னை மேம்படுத்துக. 3,107.

16. அக்கினியே! சிருட்டிப்பவனே! விப்பிரனான நான், அறிஞனும் கவியுமான உனக்கு இந்த யாசிக்கும் மர்மமான மொழிகளை எப்பொழுதும் பாடத் தகுந்த காவ்யங்களை, துதிகளோடும் தோத்திரங்களோடும் சேர்த்துக் கூறுகிறேன். 3,108.

## 4. அரக்கனைக் கொல்லும் அக்கினி

### 300. வாமதேவன்-கௌதமன்

1. அக்கினியே! நீ உன்னுடைய பலத்தைப் பரந்த வலையைப் பரத்தும் வேடனைப் போல் பரத்தவும். யானை



யின் மீது ஆட்களோடு போகும் அரசனைப் போல் செல்லவும். நீ பகைவர்களைக் கலைப்பவன். நீ துரிதமாய்ப் போகும் படையை யனுசரித்து உன்னுடைய உக்கிர சுவாலைகளால் அரக்கர்களை எரிக்கவும்.

2. உன்னுடைய சுழன்றுபாயும் துரிதமான சுவாலைகள் எங்கும் இறங்குக-படர்க. மிக்கப் பிரகாசிக்கும் நீ, உன் தீரத்தால் பகைவர்களைப் பற்பப் படுத்தவும். அக்கினியே! உன்னுடைய நாக்கால் கொளுத்தும் சுவாலைகளையும், பொறிகளையும், பந்தங்களையும் பரத்தவும்.

3. அக்கினியே! மிக்கத் துரிதனான நீ, உன்னுடைய சுவாலைகளை எதிர்க்கும் கிரணங்களின் மீது செலுத்துவாயாக. தடைபடாமலுள்ள நீ, எங்களை-உன்னுடைய சனத்தை-அருகிலிருந்தோ, தூரத்திலிருந்தோ தூற்றுபவனிடமிருந்து பாலிப்பவனாகவும். உன்னிடமிருந்து தோன்றும் துன்பம் எங்களை வெல்லாமலாகுக.

4. கூரிய படையுள்ள அக்கினியே! எழுந்திருக்கவும். உன்னுடைய சுவாலைகளை அரக்கர்கள் மீது செலுத்திப் பரத்தவும். பகைவர்களைப் பற்பப்படுத்தவும். எரியும் அக்கினியே! எங்களுக்குத் தீமை செய்பவனைக் காய்ந்த கட்டையைப் போல் தகிக்கவும்.

5. அக்கினியே! மேலெழவும். எங்களைத் தாழ்த்துபவர்களைத் தண்டிக்கவும். உன்னுடைய தெய்வத் தன்மைகளைப் புலப்படுத்தவும். துன்புறுத்துபவர்களின் வலிமையான விற்களைத் தளர்த்தவும். நீ எங்களுடைய பகைவர்களை, பந்துக்களானாலும் பந்துக்களில்லையானாலும் அழிக்கவும். 3,113

6. மிக்க இளைஞனே! தேவனே! துரிதமாய் வரும் அறிஞனான உனக்கு, துதியை யளிப்பவன் உன்னுடைய நன்மதியை உணர்கிறான். அவனுக்கு எல்லா நல்ல தினங்களும், பசுச் செல்வமும், செல்வங்களும் தோன்று

கின்றன. யக்ஞத்தின் தலைவனான நீ, அவனுடைய மனை யிலே பிரகாசிக்கவும்.

7. நித்திய அவிகளோடும் தோத்திரங்களோடும் உன்னைப் போற்றுபவன், செல்வனும் மிக்க ஈகை மன முள்ளவனுமாவானாக. கஷ்டமான வாழ்க்கையிலே அவ னுக்கு எல்லாத் தினங்களும் நல்ல தினங்களாகுக. அவ னுடைய இந்த யக்ஞம் நலத்தை யளிக்க.

8. அக்கினியே! நான் உன்னுடைய நன்மதியைப் போற்றுகிறேன். அடிக்கடி கூறப்படுவதும், எதிரொலிப் பதுமான இந்தப் பாட்டு, உன்னிடம் துதியை இசைக்க, நாங்கள் உன்னை வணங்க, எங்களிடம் நல்ல குதிரை களும், நல்ல தேர்களும் நிலைத்திருக்க, நீ தினந்தோறும் எங்களுக்குச் செல்வங்களை யளிக்கவும்.

9. ஒவ்வொருவனும் சுயமாகவே, காலையிலும், மாலையிலும், தினந்தோறும் மனையிலே பிரகாசிக்கும் உன்னை மிக்கப் போற்றுவானாக. எங்கள் மனைகளில் ரமிப்பவர்களும், பகைவனின் செல்வத்தையனுபவிப் பவர்களுமான நாங்கள் நல்ல மனங்களோடு உன்னைப் போற்றுவோமாக.

10. அக்கினியே! நல்ல குதிரைகளும் பொன் தேருமுள்ள எவன் செல்வமேந்திய ரதத்தோடு உன் னிடம் வருகிறானோ அவனை நீ பாலிப்பவனாகிறாய். உனக்கு விருந்தினனுக்குரிய கடமையைச் செய்து உன்னைத் திருப்தி செய்பவனுக்கு நீ நண்பனாகிறாய் 3,118.

11. ஹோதாவே! தருணனே! என் தந்தை கோதம னிடமிருந்து என்னிடம் வேதமொழிகள் வந்தன. அவற் றால் உத்தம அறிவுள்ள உன்னுடைய பந்துத்வம் எனக் குக் கிடைத்தது. நான் அவற்றால் வலிய சத்துருக்களை யளிக்கிறேன். பகைவர்களைத் தாழ்த்தும் நீ, எங்க ளுடைய மொழிகளை அறிந்து கொள்வாயாக.



12. எல்லாமறியும் அக்கினியே! உன்னுடைய உறங்காத, ஊக்கமான, நலந்தருகிற, சோம்பலற்ற, இன்னலற்ற, களைப்புறாத, பரஸ்பரம் பொருந்துகிற ரசிமிகள் யக்ஞத்தில் தங்கள் இடங்களிலே நிலைத்து எங்களைப் பாலிக்க.

13. அக்கினியே! உன்னுடைய பாலனமளிக்கும் ரசிமிகள் பார்த்தவுடன் மமதையின் குருட்டுப் புதல்வனை -தீர்க்கதமனை - துர்ப்பாக்கியத்திலிருந்து பாலித்தன. அவன் அனைத்தையும் அறிந்து நல்ல செயல்களை நடத் திய ரசிமிகளைப் பாலித்தான். அவனை அழிக்க எண்ணிய பகைவர்கள் அவனுக்கு ஒரு தீமையையுஞ் செய்யவில்லை.

14. அக்கினியே! தீரமாய்ச் செல்லும் உன்னால் நாங்கள் செல்வர்களானோம். நாங்கள் உன்னால் பாலன மாயிருக்கிறோம். நாங்கள் உன் பிரேரணையால் மிருந்த உணவைப் பெறுவோமாக. சத்தியத்தைப் பாலிப் பவனே! எங்களை அருகிலோ, தூரத்திலோ, பலவித மாய்த் தூற்றும் இருவிதத் தீயோர்களை விலக்கவும். எங்கள் விருப்பங்களைக் கிரமமாய்ப் பூர்த்தி செய்யவும்.

15. அக்கினியே! நாங்கள் இந்த ஸமிந்தனத்தால் உன்னைப் போற்றுவோமாக. எங்களால் கூறப்படும் துதியை ஏற்றுக்கொள்ளவும். போற்றாத அரக்கர்களைப் பற்பப்படுத்தவும். உன்னுடைய நண்பர்களால் பாடத் தகுந்தவனான நீ, எங்களைத் துரோகியின்-தூற்றுபவனின்- நிந்தையிலிருந்து பாலிக்கவும். 3,123

## 5. வைசுவாநர அக்கினி

### 301. வாமதேவன்-கௌதமன்

1. நாங்கள் மகத்தான ஒளியோடு பிரகாசிப்பவ னும், தன்னுடைய பூரணமான பரந்த தாங்கத் தகுந்த தன்மையால் கூரையைத் தாங்கும் தம்பத்தைப் போல் சோதியை ஏந்துபவனும், பொழிபவனுமான அக்கினிக்கு- வைசுவாநரனுக்கு-ஒத்த மனத்தோடு எங்ஙனம் அவியை அளிப்போம்?

2 அவியை ஏற்றுக் கொண்டு பக்குவ அறிவுள்ள மானிடனான எனக்கு இந்த செல்வத்தைத் தந்தவனும் பேரறிஞனும், அமிருதனும், பகுத்தறியும் வசுவாநரனுயிருப்பவனும், தலைமைத் தன்மையுள்ளவனும், மகானும், தேவனுமான அக்கினியை நிந்தியாதீர்கள்.

3. இரு இடங்களை நிரப்புபவனும், மிக்கப் பிரகாசிப்பவனும், பலவித ஆற்றலுள்ளவனும், மருமத்திலே வைக்கப்பட்டிருக்கும் மகத்தான உண்மையை, ஞானத்தை, தோத்திரத்தை அறிபவனுமான அக்கினி பாற் பசுவின் காலடியைப் போல் எனக்கு மறைந்திருந்த இந்த அறிவைப் புலப்படுத்தினான்.

4. உத்தமச் செல்வமும் கூரிய பல்லுமுள்ள அக்கினி, அறிஞர்களான மித்திரா வருணர்களுடைய அன்புள்ளவையும் நிலைத்திருப்பவையுமான ஆக்ஞைகளைக் கடக்கும் நீசர்களைத் தன் உக்கிரச் சுவாலையால் தகிப்பானாக.

5. தன் தந்தையின் மனைக்குச் செல்லும் கணவனை இழந்த சகோதரனில்லாத ஸ்திரீகளைப் போலும், பதிகளை வெறுத்து வழி தவறும் பெண்களைப் போலும், பாவம் நிறைந்தவர்களும், நாவிலும், மனத்திலும், பொய்யுள்ளவர்களுமான தீயோர்கள், இந்த அகாதமான ஆழியை-நரகத்தை-தங்களுக்குச் செய்து கொள்கிறார்கள். 3,128

6. சுத்தப்படுத்தும் அக்கினியே! உன்னைப் போற்றத் தவறாத எனக்குப் பாலிப்பதும், மிகுந்துள்ளதும், பரிசளிக்கத்தகுந்ததும், ஏழு தாதுக்கள் உள்ளதும், விரும்பத் தகுந்ததும், மகத்தாயுமுள்ள செல்வத்தை மெலிந்தவனுக்குக் கனத்த சுமையைப் போலிருக்கும் பொருளைப் பலப்படுத்தும் உணவோடு அளிக்கவும்.

7. எங்களுடைய, அவனுடைய புகழுக்கேற்றதும், துதியோடு பற்றப்படுவதும், தானே சுத்தஞ் செய்து கொள்வதுமான தோத்திரம், அசையாத சோதியின் மேலே சூரியனைப் போல் ஏற, புவியின் கீழத்திசையிலே நிலைத்திருக்கப்பட்ட துரிதமாய் ஏறும் ஒளிமண்டலமுள்ள வைசுவாநரனிடம் செல்க.



8. கறப்பவர்கள் சலத்தைப் போல் பெறும் பசுக்களின் பால் வைசுவாநரனால் மர்மத்தில் வைக்கப்பட்டிருக்கிறது என அவர்கள் உறுதிப்படுத்துவதை நான் கூறினால் அதை எதனால் மறுக்க இயலும்? பறவை, பூமியின் பிரியமான மேலான இடத்தைப் பாலிக்கிறது.

9. இந்தப் புகழுள்ள, போற்றத் தகுந்த, மகத்தான மகான்களின்–தேவர்களின்-தோற்றமே சூரியமண்டலமான வைசுவாநரன். பூர்வத்திலிருந்து இவனையே பிரகாசமாயுள்ள பசு–உஷை-தொடர்ந்தது; போற்றிற்று. அது ருதத்தின்–சலத்தின்–இடமான வானின் மேலே மர்மத்திலே நகைத்தது: துரிதமாயிற்று; ஓடிற்று; சூரியனான வைசுவாநரனைக் கண்டது.

10. பெற்றோர்களோடு–சோதி புவிகளோடு-சேர்ந்து பிரகாசித்த அவன் பசுவின் இனிய பாலைத் தன் வாயால் பருக அறிந்தான். பிரகாசிப்பவனும், பொழிபவனுமான ஊக்கமுள்ளவனின் சுவாலையான நாக்கானது தாயான பசுவின் உத்தம ஸ்தனத்தை - ஆபீனத்தை – அணுகி பாலைப் பருக விரும்புகிறது. 3,133

11. நான் வணக்கத்தோடு வினவப்பட்டு உண்மையைக் கூறுகிறேன். ஜாதவேதஸனே! நான் உன்னைத் துதித்து இந்த செல்வத்தையடைந்தேன். நீ இந்தச் செல்வத்தையும், நீ இனி தோன்றும் செல்வத்தையும், சோதியிலும் புவியிலுமுள்ள செல்வத்தையும் தாங்குகிறாய்.

12. எங்களுக்கு இந்தச் செல்வத்தின் பெறுமானம் என்ன? அதனால் இலாபமென்ன? ஜாதவேதஸனே! நீ அறிவதால் எங்களுக்கு அறிவிக்கவும். நேரான வழியிலே நாங்கள் குற்றமற்றுச் செல்ல இந்த இரகசியமான வழியிலே எங்களுக்கு எது உத்தம வழி என்பதைப் புலப்படுத்தவும்.

13. எல்லை எது? இலக்குக்கள் எவை? போருக்குப் பாயும் துரித குதிரைகளைப் போல் நாங்கள் போவதற் குரிய விரும்பத் தகுந்த நோக்கமெது? அமுதனை சூரிய னுடைய பத்தினிகளும் தேவிகளுமான உஷைகள் எப் பொழுது எங்களுக்கு ஒளியால் உலகத்தைப் பரத்து வார்கள்?

14. பயனற்ற, அற்பமான, முடிவில்லாத, சொற்ப மான சொல்லால் மனிதர்கள் திருப்தியாகார்கள். அக்கினியே! அவர்கள் உன்னிடம் எதைக் கூறுகிருர் கள்? ஆயுதமற்ற அவர்கள் வருத்தத்தில் வருந்துவார் களாக.

15. பொழிபவனும், மனைகளையளிப்பவனும், சொலிப் பிக்கப்பட்டவனுமான அக்கினியின் சுவாலைப் படை, இந்த யக்ஞத்தை நடத்துபவனின் செல்வத்துக்காக யக்ஞ ஸதனத்திலே துலங்குகிறது. ஒளியணிந்து, எழில் ரூபமாகி, பலரால் போற்றப்பட்டு, செல்வமுள்ள மனித னைப் போல் அவன் பிரகாசிக்கிருன். 3,138

## 6. அக்கினி

### 302. வாமதேவன் - கௌதமன்

1. அக்கினியே! யக்ஞத்தின் ஹோதாவும் யக்ஞா ருகனுமான நீ, தேவர்களுக்களிக்கப்படும் இந்த யக்ஞத் திலே எங்களுக்கு மேலே நிற்கவும். நீ விரும்பத் தகுந்த அனைத்தையுஞ் ஜயிக்கிருய். நீ வழிபடுபவனுடைய தோத்திரத்தை ஊக்கப்படுத்துகிருய்.

2. ஸர்வக்ஞனும், ஹோதாவும், இன்பந்தருபவ னும், பேரறிஞனுமான அக்கினி, யக்ஞங்களை நடத்த மானிடர்களின் நடுவே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிருன். அவன் சூரியனைப் போல் மேலே சோதியைப் பரத்து கிருன். அவன் சோதியின் மேலே புகையை, தூணைப் போல் தாங்குகிருன்.

3. நெய் நிறைந்த சிருவம் தயாராகிறது. துரிதமா யிருக்கும் இது அவியோடு செழிக்கிறது. யக்ஞத்தைப்



பரத்தும் அறிஞன் தேவர்களின் வேள்வியை நடத்தி அனலைச் சுற்றி வருகிருன். கற்பிக்கப்பட்ட புதிய யூபம் நிறுத்தப்பட்டிருக்கிறது. ஆக்கிரமிப்பதும் துலங்குவது மான பரசு பசுக்களிடம் செல்லுகிறது.

4. தருப்பைப் பரத்தப்பட்டு அனல் மூட்டப்பட்ட வுடன் அத்வர்யு தேவர்களைத் திருப்தி செய்து எழு கிருன். பிறகு ஹோதாவும், பழையவனும், பரத்துபவனு மான அக்கினி பசுவின் பாலகனைப் போல் மும்முறை பசுவைச் சுற்றி வருகிருன்.

5. மதப்படுத்துபவனும், இனிய மொழிகளைக் கூறு பவனும், யக்ஞமிருப்பவனும், ஹோதாவுமான அக்கினி, அளந்த அசைவோடு அவனுகவே பசுவைச் சுற்றி வரு கிருன். அவனுடைய அவியால் ஊக்கப்பட்டு எரியும் சுவாலைகள் எங்கும் பர்வுகின்றன. அவன் பிரகாசிக்குங் கால், எல்லா புவனங்களும், பிராணிகளும் பயப்படு கின்றன. 3,143

6. விரும்பத் தகுந்த சுவாலையுள்ள அக்கினியே! உக்கிரனும் எங்கும் பரவுபவனுமான உன்னுடைய வடிவம் அழகுள்ளது. மங்களமானது. இரவுகள் உன் ஒளியை இருட்டால் மறைக்காது. உன் தேகத்தை அரக்கர்கள் துன்புறுத்தார்கள்.

7. மானிடர்களைப் பிறப்பிக்கும் வைசுவாநரனுடைய தானம் எவனும் தடைபடாமலிருக்கிறது. அவனை உழைப்புக்கு ஊக்கப்படுத்த பெற்றேர்களுக்கு—சோதி புவிகளுக்கு—அவசியமில்லை. நன்ருகத் திருப்தியடைந்த வனும், சுத்தப்படுத்துபவனுமான அக்கினி, மநு வம்சத் தில் வந்த மனிதர்களின் நடுவே நண்பனைப் போல் பிர காசிக்கிருன்.

8. மநு வம்சத்தில் வந்த பிரசைகளின் நடுவே சலன மாகும் இரு ஐந்து சகோதரிகள்—பத்து விரல்கள்—அவி களைப் புசிப்பவனும், பிரகாசிப்பவனும், உஷையில் எழுப் பப்படுபவனும், அழகான வடிவமுள்ளவனும், கோடரி

யைப் போல் கூருள்ளவனுமான அக்கினியை, வைகறையில் எழுப்பும் தோழிகளைப் போல் பிறப்பிக்கிறார்கள்.

9. அக்கினியே! நுரை கக்குபவையும், சிகப்பு நிறமுள்ளவையும், நேராகச் செல்பவையும், நல்ல சலனமுள்ளவையும், மிக்கப் பிரகாசிப்பவையும், வலியவையும், நல்ல உறுப்புக்கள் உள்ளவையும், அழகுள்ளவையுமான உன்னுடைய குதிரைகள், தேவர்களை யஜிக்கும் வேள்விக்கு வருவிக்கப்படுகின்றன.

10. அக்கினியே! உன்னுடைய, ஜயிப்பவையும், பரந்து செல்பவையும், பிரகாசிப்பவையும், போற்றத் தகுந்தவையுமான ரசிமிகள்—சுவாலைகள், நோக்கத்துக்குச்செல்லும் பருந்துகளை — குதிரைகளை — போலும் முழக்கத்துடன் போகும் மருத்துக்களின் படையைப் போலும் பரவுகின்றன.

11. நன்கு சொலிப்பிக்கப்பட்ட அக்கினியே! உனக்குத் தோத்திரம் கற்பிக்கப்படுகிறது. அறிஞன் துதியால் உன்னைப் போற்றுவானாக. வழிபடுபவன் யஜிக்கிறான். எங்களுக்குச் செல்வத்தையளிக்கவும். மானிடர்கள் செல்வங்களை விரும்பி, தேவர்களின் ஹோதாவும், மானிடர்களைப் போற்றுபவனுமான அக்கினியைத் துதித்துக் கொண்டு கீழே அமருகிறார்கள். 3,149

## 7. அக்கினி

### 303. வாமதேவன்—கௌதமன்

1. எவ்வக்கினியை அப்நவானனும், பிருகுக்களும் எல்லா மனிதர்களுக்காக வனங்களிலே ஒளிப்படுத்தினார்களோ அவன் செயல்களில் அற்புதன்; அனைவரையும் ஆட்சி செய்பவன்; ஹோதா; யக்ஞாருகன்; வேள்விகளிலே போற்றத் தகுந்தவன்; முதல்வன். அவன் யக்ஞத்தை நடத்துபவர்களால் ஸ்தாபிக்கப்படுகிறான்.

2. அக்கினியே! தேவனான உன்னுடைய ஒளி எப்பொழுது தோற்றுவிக்கப்படவேண்டும்? சனங்களின் நடுவே நீயே இப்பொழுதும் போற்றப்படவேண்டும் என மனிதர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.



3. சனங்கள், சத்தியவானும், பேரறிஞனும், நட்சத்திரங்களோடு வானைப்போல் பொறிகளோடு பிரகாசமாயிருப்பவனும், எல்லா யக்ஞங்களையும் பாவிப்பவனுமான உன்னை ஒவ்வொரு மனையிலும் தியானஞ் செய்கிறார்கள்.

4. மனிதர்கள் எல்லாப் பிரசைகளுக்கும், தொழுபவனின் துரித தூதனும், மனிதர்களை எல்லாம் நடத்துபவனும், புலப்படுத்துபவனும், பிருகுவைப் போல் அநுசரிப்பவனுமான அக்கினியைப் பற்றினார்கள்—எடுத்து வந்தார்கள்.

5. மானிடர்கள், தேவர்களை அழைப்பவனும், சுந்தரனும், சுத்தப்படுத்தும் ஒளியுள்ளவனும், யஜிக்கத் தகுந்தவனும், ஏழு சுவாலைகளிருப்பவனும் அறிஞனுமான அக்கினியைக் கிரமமாய் அமர்த்தினார்கள் 3,154.

6. தாய்மார்களான சலங்களில் வசிப்பவனும், வனங்களில் இருப்பவனும், விரும்பப்படுபவனும் ஆனால் அணுகப்படாதவனும், அற்புதனும், குகையினுள் மறைந்திருப்பவனும், மிக்க அறிவுள்ளவனும், எத்திசையிலிருந்தும் அவிகளை நாடுபவனுமான அக்கினியை அவர்கள் அமர்த்தினார்கள்.

7. தேவர்கள் தூங்கி எழுந்தவுடன் ஒவ்வொரு யக்ஞத்திலும் ருதத்தின் இடத்திலே அவனை இன்புறுத்துகிறார்கள். மகானான அக்கினிக்கு வணக்கத்தோடு அவிகள் அளிக்கப்படவேண்டும். சத்தியவானான அக்கினி எப்பொழுதும் யக்ஞத்தை ஏற்கிறான்.

8. அனைத்தையும் அறியும் நீ, யக்ஞத்திலே தூதச் செயல்களை அறிகிறாய். சோதியையும் புவியையும், இடைவெளியையும் நன்கு அறிபவனும், அற்ப அவியை அதிகப்படுத்துபவனும், தூதனுமான நீ, சோதியின் ஏற்றங்களுக்குச் செல்லுகிறாய்.

9. காந்தியுடனிருக்கும் உன்னுடைய வழி கருப்பாகிறது. உன் முன்னே ஒளி தோன்றுகிறது. உன்னுடைய சலனமான சோதி, துலங்கும் தேகங்களுக்கு முதன்மையாகிறது. துதிப்பவர்கள், கடைக்கோல்களில் இருக்கும் கருவை ஏந்தியவுடன் நீ பிறப்பிக்கப்பட்டுத் தூதனாகிறாய்.

10. துரிதமாய்த் தோற்றுவிக்கப்பட்டவனுடைய காந்தி துலங்குகிறது. காற்று அவனுடைய சுவாலையை வீசுங்கால் அக்கினி தன் சுடரான நாக்கை மரங்களின் நடுவே செலுத்திப் பரத்துகிறான். தன்னுடைய மின்னும் பற்களால் உணவாக நிற்கும் காஷ்டத்தைப் புசிக்கிறான் 3,159.

11. அக்கினி தன்னுடைய துரித சுவாலையால் உணவான காஷ்டத்தைப் புசிக்கும் போது மகான் தன்னைத் துரிதத் தூதனாகச் செய்து கொள்ளுகிறான். அவன் மரத்தைத் தகித்து, காற்றின் ஊக்கத்தோடு சேர்கிறான். துரித குதிரையை உற்சாகப்படுத்தும் குதிரைக்காரனைப் போல் விரைந்து செல்லும் அக்கினி சுவாலைகளை உறுதிப்படுத்தி ஊக்கப்படுத்துகிறான் 3,160.

## 8. அக்கினி

### 304. வாமதேவன்-கௌதமன்

1. நான் விசுவத்தையறிபவனும், அவிகளை ஏந்துபவனும், அமுதனும், யஜிப்பதில் உத்தமனுமான அக்கினியைத் துதியால் போற்றுகிறேன்.

2. மகானான அக்கினி விரும்பும் செல்வத்தை எங்ஙனம் அளிப்பது என்பதை அறிகிறான். அவன் சோதியின் ஏற்றங்களை அறிகிறான். அவன் இங்கு தேவர்களை ஏந்தி வருவானாக.

3. தேவனான அக்கினி தேவர்கள் எங்ஙனம் வணங்கப்படவேண்டும் என்பதையறிகிறான். அவன் சத்தியவானுக்கு மனையிலே விரும்பப்படும் செல்வங்களைத் தருகிறான்.



4. அவன் தேவர்களை அழைப்பவனாகிறான். அவன் தூதச்செயலை அறிந்து, சோதியின் ஏற்றத்தை-தேவர்களின் இடத்தை - உணர்ந்து சோதிபுவிகளின் நடுவே செல்லுகிறான்.

5. நாங்கள் உனக்கு அவிதானங்களை அளித்து உன்னைப் பாலித்து ஒளிப்படுத்தி போற்றுபவர்களாவோமாக 3,165.

6. அக்கினியைப் போற்றி அவனுக்கு அவிகளை அளிப்பவர்கள் சந்ததியிலும், செல்வங்களிலும் சிறந்தவர்களாயிருக்கிறார்கள்.

7. பலரால் விரும்பப்படும் செல்வங்கள் எங்களுக்குத் தினந்தோறும் தோன்றுக. உணவுகள் எங்களை ஊக்கப்படுத்துக.

8. விப்பிரனான அக்கினி தன்னுடைய ஆற்றலால் மநு வம்சப் பிரசைகளிலிருக்கும் நீக்குவதற்குரிய தீமைகளை விலக்குவானாக 3,168.

## 9. அக்கினி

### 305. வாமதேவன்–கௌதமன்

1. அக்கினியே! தேவனை விரும்பும் இந்த மனிதனைத் தருப்பையில் அமர்த்த வருபவனும், மகானுமான நீ, எங்களை சுகப்படுத்தவும்.

2. தாழ்த்தப்படக் கடினமாயுள்ளவனும், அமுதனும், மநு வம்சப் பிரசைகளின் நடுவே மிக்கச் சிறப்பாய்ச் செல்பவனுமான அக்கினி, தேவர்களின் தூதனாவானாக.

3. அவன் யக்ஞ சதனத்துக்குச் செலுத்தப்படுகிறான். வேள்விகளிலே புகழத் தக்க அவன் ஹோதாவாகிறான். அமருங்கால் அவன் போதாவாகிறான்.

4. அக்கினி யக்ஞத்திலே சென்று அத்வர்யுவாகிறான். அவன் யக்ஞ மனையிலே மனைபதி தலைவனாகிறான். மேலும் அவன் பிரம்மனாக அமர்கிறான்.

5. நீ யக்ஞத்தை விரும்பும் மநு வம்சப் பிரசைகளின் அவிகளை விரும்புகிறாய். நீயே உபவக்தாவாக்கப்படுத்துபவனாகிறாய். 3,178

6. யக்ஞத்திலே எந்த மனிதனுடைய அவிகளை ஏந்திச் செல்ல சம்மதிக்கிறாயோ நீ அவனுக்கு உன்னுடைய தூதச் செயலைப் பூர்த்தி செய்ய விரும்புகிறாய்.

7. அங்கிரனே! எங்களுடைய யக்ஞத்தை ஏற்கவும். எங்கள் வேள்வியை ஏற்கவும். எங்கள் அழைப்பைக் கேட்கவும்.

8. நீ எந்தத் தடைபடாத தேரால் அளிப்பவர்களைப் பாலிக்கிறாயோ அந்தத் தேர் எங்களைச் சுற்றி எங்கும் சலனமாகி பாலிக்க; நிலைக்க. 3,176.

## 10. அக்கினி

### 306. வாமதேவன்–கௌதமன்

1. அக்கினியே! இன்று நாங்கள், துதிகளோடு அவிகளை-குதிரைகளைப் போல் ஏந்துபவனும், எங்களுடைய விருப்பங்களைச் செலுத்துபவனும், கருத்தாவைப் போல் இருப்பவனும், போற்றத் தகுந்தவனும், பிரியனாயிருப்பவனுமான உன்னைப் போற்றுகிறோம்.

2. அக்கினியே! எங்களுடைய மங்கலமான, பலமான பயனைத் தருகிற, சத்தியமான, மகத்தான யக்ஞத்தை இப்பொழுது ஏந்திச் செல்பவனாகவும்.

3. அக்கினியே! சூரியனைப் போல் சோதியாயிருப்பவனான நீ, எங்களுடைய இந்தத் துதிகளால் போற்றப்பட்டு, உன்னுடைய எல்லா ஒளிப்படைகளோடு எங்கள் முன்னே வா.

4. அக்கினியே! இன்று இந்த மொழிகளால் உன்னைப் போற்றி உனக்கு அவிகளை அளிப்போமாக. சூரியனுடைய கதிர்களைப் போல் பிரகாசிக்கும் உன்னுடைய சுவாலைகள் முழங்குகின்றன.

5. அக்கினியே! உன்னுடைய இனிய காந்தியானது இரவிலோ பகலிலோ எல்லாப் பொருள்களின் மீதும்



அழகைத் தர ஆபரணத்தைப் போல் பிரகாசிக்கிறது. 3,181

6. உணவைத் தருபவனே! உன்னுடைய தேகம், சுத்தப்பட்ட நெய்யைப் போல் மாசற்றிருக்கிறது. உன்னுடைய சுத்தமான சொர்ண சோதி நகையைப் போல் பிரகாசிக்கிறது.

7. சத்தியவானான அக்கினியே! உன்னைப் போற்றும் மனிதன் பூர்வத்தில் எந்த பாபத்தைச் செய்திருந்தாலும் அதை நீ அவனிடமிருந்து நீக்குகிறாய்.

8. அக்கினியே! உன்னோடு எங்களுடைய நட்புத் தன்மைகளும், பந்துத்வங்களும் மங்களமுடனாகுக. இந்த இடத்திலே ஒவ்வொரு யக்ஞத்திலே இது-இந்த உறவுத் தன்மை – நம்முடைய பந்தனமாகுக. 3,184

## 11. அக்கினி

### 307. வாமதேவன்–கௌதமன்

1. ஆற்றலுள்ள அக்கினியே! உன்னுடைய மங்கலமான காந்தி பகலில் சூரியனருகில் பிரகாசிக்கிறது. உன்னுடைய ஒளியுள்ள துலக்கமான வெளிச்சம் இரவிலே விளங்குகிறது. உன் அழகிலுள்ள உணவு காண்பதற்கும் அழகாயிருக்கிறது.

2. அடிக்கடி பிறப்பிக்கப்படுபவனும், யக்ஞத்தால் போற்றப்படுபவனுமான அக்கினியே! நீ உனக்கு வணக்கத்தை யளிப்பவனுக்கு மனக் கதவைத் திறக்கவும். பிரகாசிப்பவனும், மிக்கப் பலமுள்ளவனுமான நீ, விரும்பப்படுவதும், தத்துவத்துடனிருப்பதுமான அந்த தோத்திரத்தை எங்களுக்களிக்கவும். ஒளியுள்ள நீ விசுவே தேவர்களோடு சேர்ந்து, துதிப்பவர்களான மற்றவர்களுக்கு அளித்த விரும்பத் தகுந்த, மிகுந்த செல்வத்தைப் பிரகாசமுள்ள அக்கினியான நீ, எங்களுக்கு அளிப்பாயாக.

3. அக்கினியே! உன்னிடமிருந்து காவ்யங்கள் தோன்றுகின்றன. உன்னிடமிருந்து சிந்தனைகள் தோன்றுகின்றன. உன்னிடமிருந்து செல்வப்படுத்தும் தோத்திரங்களும் தோன்றுகின்றன. உன்னிடமிருந்து வீரப் புதல்வர்களோடு அழகுறும் செல்வம், அவிகளை அளிக்கும் சத்தியவானுக்குத் தோன்றுகிறது.

4. வலியனும், அவிகளைச் செலுத்துபவனும், மகானும், விரும்புவதைத் தருபவனுமான உன்னிடமிருந்து உண்மையான பலத்தின் புதல்வன் தோன்றுகிறான். உன்னிடமிருந்து தேவர்களால் பிரேரிக்கப்படுவதும் சுகத்தைத் தருவதுமான செல்வம் தோன்றுகிறது. அக்கினியே! உன்னிடமிருந்து துரிதமாயிருப்பதும், தடைபடாமலுமுள்ள குதிரை தோன்றுகிறது.

5. அமிருதனான அக்கினியே! தேவர்களை விரும்பும் மனிதர்கள், முதல்வனும், தேவனும், தேவர்களை இன்புறுத்தும் நாவுள்ளவனும், பாபத்தை நீக்குபவனும், அரக்கர்களைத் தாழ்த்தும் மனமுள்ளவனும், மனையைப் பாலிப்பவனும், அமூடனுமான உன்னைப் பாக்களோடு போற்றுகிறார்கள்.

6. அக்கினியே! ஆற்றலின் புதல்வனே! நீ பாலிப்பதால் எங்களிடமிருந்து அமதியைத் தூரத்திலே விலக்கவும். எங்களிடமிருந்து பாபத்தை விலக்கவும். எல்லாத் துன்மதிகளையும், தூரத்திலே விலக்கவும். இரவில் பிரகாசிக்கும் உன்னால் சுவஸ்தியைப் பெறுபவன் செழிக்கிறான். 3,190

## 12. அக்கினி

### 308. வாமதேவன்–கௌதமன்

1. அக்கினியே! எவன் உயர்த்திய சிருவத்தோடு உன்னை ஒளிப்படுத்தி உனக்கு இன்று மும்முறை அவியை யளிப்பவன்? உன்னுடைய காந்திகளால் ஜயமுள்ளவனாகி, உன்னுடைய மனத் திட்பத்தால் அறிஞனாகி, ஜாதவேதஸனே! அனைவரையும் ஜயிப்பானாக.



2. அக்கினியே! ஊக்கமாய் உழைத்து ஸமித்தை ஏந்தி வந்து, உன் புகழைப் போற்றி, காலையிலும் மாலையிலும் உன்னை ஒளிப்படுத்துபவன், பகைவர்களை அழித்து, செல்வங்களைத் தேடிக் கொள்கிறான்.

3. அக்கினி, மகத்தான க்ஷத்திரியத்துக்கும், உத்தம உணவுக்கும், செல்வத்துக்கும் தலைவனாயிருக்கிறான். மிக்க இளைஞனான அவன், மிகுந்த உணவை ஏந்துகிறான். போற்றும் மனிதனுக்கு வணக்கத்துக்குரிய செல்வத்தைத் தருகிறான்.

4. மிக்க இளைஞனான அக்கினியே! மனிதர்களிடம் சகஜமாயிருக்கும் அறிவின்மையால் நாங்கள் ஏதேனும் உனக்குக் குற்றஞ் செய்திருந்தால் எங்களைப் புவியின் பாவங்களிலிருந்து விலக்கவும். அக்கினியே! எங்களுடைய குற்றங்களை அடியோடு நீக்கவும்.

5. அக்கினியே! உன்னுடைய நண்பர்களான நாங்கள் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும், மகத்தாயும் பலவிதமாயும் ஏதேனும் குற்றஞ் செய்திருந்தால் அவற்றுக்கு நாங்கள் துன்பப்படாமலாவோமாக. எங்களுடைய புதல்வனுக்கும் பேரனுக்கும் ஆரோக்கியத்தையும் ஆற்றலையுமளிக்கவும்.

6. துதியாருகர்களான வசுக்களே! காலில் கட்டப்பட்டிருந்த பசுக்களை நீங்கள் விடுவித்ததுபோல் எங்களைப் பாவத்திலிருந்து விடுவியுங்கள். அக்கினியே! எங்களுடைய நீண்ட ஆயுசு நீட்டப்படுக. 3,196

## 13. அக்கினி

### 309. வாமதேவன்–கௌதமன்

1. நல்ல மனமுள்ள அக்கினி, செல்வந் தரும் பிரகாசமான உஷைகளின் பவனியைப் பார்த்தான்.

அசுவினிகளே! சுகிருதனுடைய மனைக்குச் செல்லுங்கள். தேவனான சூரியன் ஒளியோடு எழுகிறான்.

2. தேவனான ஸவிதா, உச்சத்திலே இமத்தை விலக்கி, பசுவை விரும்பும் காளையைப் போல் ஒளியைப் பரத்துகிறான். ரசிமிகள் சூரியனை சோதியிலே ஏற்றுங்கால், மித்திரனும் வருணனும் தங்கள் கடமைகளைப் பூர்த்தி செய்யச் செல்லுகிறார்கள்.

3. திரமான இடங்களில் வசிப்பவர்களும், கவனமின்மையற்றவர்களுமான தேவர்கள், இருளை நீக்க உலகத்தையெல்லாம் ஊக்கப்படுத்தும் சூரியனைப் புலப்படுத்துங்கள். அவனை ஏழு குதிரைகள் ஏந்துகின்றன.

4. தேவனான சூரியனே! நீ ரசிமிகளின் ஆடைகளைப் பரப்பி, இருட்டின் கரிய ஸ்தானத்தைத் தாழ்த்தி, வலிய குதிரைகளோடு முன்னேறுகிறாய். வானிலே சருமத்தைப் போல் பரத்தியிருக்கும் இருள் உன்னுடைய நடுங்கும் ரசிமிகளை நீக்குகின்றன.

5. வெகு தூரத்திலில்லாதவனும் தடைபடாதவனுமான இந்தச் சூரியன், அவன் கீழே நோக்குங்காலும் அல்லது மேலே பார்க்குங்காலும் எவனாலும் துன்பமாகான். அவன் எந்த பலத்தால் செல்லுகிறான்? சோதியின் திரண்ட கம்பத்தைப் போல் சுவர்க்கத்தைத் தாங்கும் அவனை எவன் காண்கிறான். 3,201

## 14. அக்கினி

### 310. வாமதேவன்–கௌதமன்

1. தேவனும், ஜாதவேதஸனுமான அக்கினி ஒளியோடு பிரகாசிக்கும் உஷைகளை நோக்கி வளர்ந்தான். வெகுதூரஞ் செல்லும் பொய்யற்றவர்களே! எங்களுடைய இந்த யக்ஞத்துக்கு உங்களுடைய தேரிலே வாருங்கள்.

2. தேவனான ஸவிதா எல்லா உலகங்களிலும் சோதியைப் பரப்பி, உச்சத்திலே தன் கொடியைப் புலப்படுத்துகிறான். அனைத்தையும் நன்கு காணும் சூரியன்



சோதியையும் புவியையும் வானையும் தன் கிரணங்களால் நிரப்புகிறான்.

3. செல்வத்தை ஏந்துபவளும், சிகப்பு நிறமுள்ளவளும், சோதியிலிருப்பவளும், பெரியவளும், கிரணங்களால் அழகுள்ளவளும், அறிபவளுமான உஷை வருகிறாள். தேவியான உஷை உறங்குபவர்களை எழுப்பிக் கொண்டு சுகத்தையளிக்க நன்கு இணைக்கப்பட்ட தேரோடு சலனமாகிறாள்.

4. இந்த வலிமையுள்ள குதிரைகளும் தேரும், உங்களை-அசுவினிகளே! இங்கு, உஷையின் உதயத்திலே ஏந்தி வருக. பொழிபவர்களே! உங்கள் பானத்துக்காகத் தோன்றும் இந்த ஸோமரஸங்கள் உங்களை மதப்படுத்துக.

5. வெகு தூரத்தில் இல்லாதவனும், தடைபடாதவனுமான இந்தச் சூரியன், அவன் கீழே நோக்குங்காலும், அல்லது மேலே பார்க்குங்காலும் எவனாலும் துன்பமாகான். அவன் எந்த பலத்தால் செல்லுகிறான்? சோதியின் திரண்ட கம்பத்தைப் போல் சுவர்க்கத்தைத் தாங்கும் அவனை எவன் காண்கிறான்? 3,206

## 15. அக்கினி

### 311. வாமதேவன்–கௌதமன்

1. தேவர்களை அழைக்கும் அக்கினி சுமை ஏந்தும் குதிரையைப் போல் நம்முடைய யக்ஞத்துக்கு எடுத்து வரப்படுகிறான். தேவனான அவன் தேவர்களின் நடுவே யக்ஞாருகனாயிருக்கிறான்.

2. அக்கினி எங்களுடைய யக்ஞத்துக்குத் தினசரி மும்முறை தேரோட்டியைப் போல் வருகிறான். அவன் தேவர்களுக்கு அவியை ஏந்திச் செல்லுகிறான்.

3. கவியும் உணவுபதியுமான அக்கினி அளிப்பவனுக்கு அரிய செல்வங்களைத் தருகிறான். அவிகளைச் சூழ்கிறான்.

4. தேவவிருதனுடைய புதல்வனுன சிருஞ்ஜயனுக்கு சொலிப்பிக்கப்பட்டது போல், கீழ்த்திசையின் வேதியிலே சொலிப்பிக்கப்படும் இந்த அக்கினி எதிரிகளைத் தாழ்த்துபவன் - துலங்குபவன்.

5. ஊக்கமுள்ள மனிதன் கூரிய கதிருள்ளவனும், பொழிபவனுமான இந்த அக்கினியை அதீனப்படுத்துவானுக. 3,211

6. அறிஞர்கள், ஈகையனும் சோதியின் புதல்வனுமான சூரியனைப் போல் பிரகாசிப்பவனும், அவிகளை வகிக்கக் குதிரையைப் போலிருப்பவனும், போற்றத் தகுந்தவனுமான அக்கினியைத் தினந்தோறும் போற்றுகிருர்கள்.

**ஸோமகன்**

7. சகதேவனின் புதல்வனுன இளவரசன், எனக்கு இரு குதிரைகளையளிக்க விரும்பி என்னை அழைத்த போது நான் பெற்றுக்கொள்ள மறுக்கவில்லை.

8. சகதேவனின் புதல்வனுன இளவரஸனிடமிருந்து மேலான நன்கு பயிலப்பட்ட குதிரைகளை நான் உடனே பெற்றுக்கொண்டேன்.

**அசுவினிகள்**

9. தேவர்களான அசுவினிகளே! உங்களைப் போற்றுபவனும், சகதேவனின் புதல்வனும், இளவரஸனுமான இந்த ஸோமகன் நீண்ட ஆயுசுடனிருப்பானுக.

10. தேவர்களான அசுவினிகளே! நீங்கள் சகதேவனின் புதல்வனுன இளவரஸனை நீடுழி வாழச் செய்வீர்களாக. 3,216

# 16. இந்திரன்

## 312. வாமதேவன்-கௌதமன்

1. வேகமுள்ளவனும், சத்தியவானுமான மகவான் எங்களிடம் வருவானுக. அவனுடைய குதிரைகளும்



எங்களிடம் துரிதமாகுக. நாங்கள் அவனுக்கு இந்த யக்ஞத்திலே மிக்க உக்கிரமான பானத்தையளிக்கிறேம். எங்களால் போற்றப்பட்டு எங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்வானுக.

2. சூரனே! நாங்கள் இந்த யக்ஞத்திலே உன்னை இன்று மதப்படுத்த, எங்களை, வழியில் குதிரையை அவிழ்த்துவிடுபவர்களைப் போல் விடுவிக்கவும். வழிபடுபவன் உசனனைப் போல், அனைத்தையும் அறிபவனும், அசுரர்களைக் கொல்பவனுமான உனக்கு, மனனீயமான ஸ்தோத்திரத்தைக் கூறுகிருன்.

3. மறைந்திருப்பதையறிந்து யக்ஞங்களைப் பூர்த்தி செய்பவனும் பொழிபவனுமான அவன், ஸோமத்தை மிக்கப் பருகி மகிழ்கிருன். இது-ஸோமம்-ஏழு சிற்பிகளான ரசிமிகளை சோதியிலிருந்து பிறப்பிக்கிறது. போற்றப்படும் ரசிமிகள் மானிடர்களுக்கு ஞானங்களைப் புலப்படுத்துகிறது.

4. எப்பொழுது மகத்தாயுள்ள சோதியாயிருக்கும் ஒளி-உலகம்-ரசிமிகளால் புலப்படுகின்றதோ அப்பொழுது தேவர்கள் வசிக்கப் பிரகாசமாகிருர்கள். தலைவர்களின் தலைவனுன சூரியன், இந்திரன் வருங்கால் மானிடர்கள் காண அடர்ந்த தமங்களை அவன் நீக்குகிருன்.

5. உக்கிரனுன் இந்திரன், அபரிமிதமான மகிமையைத் தாங்குகிருன். அவன் தன் மகத்வத்தால் சோதியையும் புவியையும் நிரப்பினுன். எல்லா புவனங்களையும் கடக்கும் அவனுடைய மகிமை அனைத்தையுங்கடந்தது. 3,221

6. சக்கரன் மனிதர்களுக்கு நலமாயிருக்கும் எல்லாப் பொருள்களையுமறிந்து, தன் பிரிய நண்பர்களான மருத்துக்களுக்கு சலங்களை அளித்தான். அவர்கள் முழங்கும் சொற்களோடு மேகத்தைப் பிளந்தார்கள்

விருப்பத்தோடு பசுக்களின் தொழுவத்தைத் திறந்தார்கள்.

7. உன்னுடைய பாலிக்கும் வச்சிராயுதம் சலங்களைத் தடை செய்த விருத்திரனை யழித்தது. சைதன்யமுள்ள பூமி உன்னுடனிருந்தது. வீரனே! தீரனே! நீ, பலத்தால் பாலகனாகி வானின் சலங்களைச் செலுத்தினாய்.

8. பலரால் போற்றப்படுபவனே! நீ சலங்களை விடுவிக்க மேகத்தைப் பிளந்தபோது, ஸரமை உன் முன் தோன்றினாள். நீ அங்கிரஸர்களால் போற்றப்பட்டாய்; மேகங்களைப் பிளந்தாய்; தலைவனாக எங்களுக்கு மிகுந்த உணவைச் செலுத்தினாய்.

9. மகவானே! மனிதர்களால் போற்றப்படும் நீ, போரிலே பாலனத்துக்காக உன்னிடம் யாசித்த கவியான குத்ஸனுக்குச் செல்வத்தையளிக்க அவன் முன்னே சென்றாய். உன் பாலனங்களால் அவனைச் செலுத்தினாய். கபடமுள்ளவனும் பிரம்மமற்றவனுமான தஸ்யு போரிலே செல்வத்துக்காகக் கொல்லப்பட்டான்.

10. தஸ்யுவைக் கொல்லும் மனத்தோடு நீ எங்கள் மனைக்கு வந்தாய். குத்ஸன் உன்னுடைய நட்பைப் பெற ஆர்வமுடன் விரும்பினான். நீங்கள் இருவரும்–குத்ஸனும் இந்திரனும் – அவனுடைய – குத்ஸனுடைய – மனையிலே வடிவங்களோடு விளங்கினீர்கள். சத்தியவதி ஒப்பான வடிவங்களோடு விளங்கினீர்கள். சத்தியவதியான மனைவி–குத்ஸனின் இல்லத்தரசி–உங்கள் இருவரில் கணவன் எவன் என அறியாமல் கலங்கினாள். 3,226

11. போராடிய தினத்திலே குத்ஸன் நேராகச் செல்லும் குதிரைகளைத் தேரிலே இணைத்தபோது உணவைப் பெறுவதற்குரியது போல் கவி–குத்ஸன்–துக்கக் கடலைக் கடக்கும் சத்தியைப் பெற்றான். அன்று பகைவர்களைத் துன்புறுத்துபவனும், காற்று வேகமுள்ள குதிரைகளின் தலைவனுமான நீ, குத்ஸனைப் பாலிக்க அவனோடு ஒரே தேரில் சென்றாய்.



12. நீ குத்ஸனுக்காகக் களிப்பில்லாத சுஷ்ணனைக் கொன்றாய். ஆயிரம் ஆட்களோடு சேர்ந்திருந்த நீ, உன் வச்சிராயுதத்தால் முற்பகலிலே குயவனைக் கொன்றாய். நீ வேகமாய் தஸ்யுக்களைக் கொன்றாய். நீ அவர்களைச் சூரியனின் தேர்ச் சக்கரத்தால், போரிலே துண்டம் துண்டமாகத் துணித்தாய்.

13. நீ விநந்தினனின் புதல்வனான ரிஜிஸ்வனுக்கு வலியனான மிருகயனையும் பிப்ருவையும் வசப்படுத்தினாய். நீ ஐம்பதினாயிரம் கிருஷ்ணர்களைக் கொன்றாய். ஆயுளைக் கொல்லும் மூப்பைப் போலுள்ள நீ, சம்பரனின் நகரங்களை அழித்தாய்.

14. நீ உன்னுடைய தேகத்தைச் சூரியனருகிலே ஏந்துங்கால் அமிருதனான உன்னுடைய ரூபமானது பரவுகிறது, பிரகாசிக்கிறது எனப் புலனாகிறது. நீ வலியர்களின் வலிமையைத் தகிக்குங்கால் காட்டானையைப் போலிருக்கிறாய். ஆயுதங்களை ஏந்துங்கால் சிங்கத்தைப் போல் பயங்கரனாயிருக்கிறாய்.

15. செல்வங்களை விரும்புபவர்களும் பாலனத்துக்காக நாடுபவர்களுமான சனங்கள், யக்ஞத்துக்குப் போருக்குப் போல் இந்திரனுடைய வரவை விரும்பி, அவனிடஞ் செல்லுகிறார்கள். உணவை விரும்பி, பதிகங்களால் அவனுடைய புகழைப் பாடுகிறார்கள். அவன் மனையைப் போல் இருக்கிறான். அவன் இனிய அழகிய புட்டியளிக்கும் தேவியைப் போல் இருக்கிறான். 3,231

16. நாங்கள், மானிடர்களுக்கு நலமாயிருக்கும் பல செயல்களை நடத்துபவனும், விரும்பத் தகுந்த செல்வத்தை யளிப்பவனும், என்னைப் போலுள்ள வழிபடுபவனுக்கு விரும்பத் தகுந்த உணவைத் துரிதமாய்த் தருபவனும், செவிச் செல்வனுமான இந்திரனை அழைப்போமாக.

17. சூரனே! இந்திரனே! தலைவனே! மானிடர்களின் எந்தச் சண்டையிலும் அவர்களின் கூரிய

ஆயுதங்கள் பாயுங்காலும், உக்கிரமான போர் தோன்றுங்காலும், நீ எங்களுடைய பாலகனாக இருக்கவும்.

18. நீ வாமதேவனுடைய செயல்களைப் பாலிப்பவனாகவும். நீ போரிலே வஞ்சகமற்ற நண்பனாகவும். நாங்கள் பேரறிஞனான உன்னிடம் வருகிறோம். நீ போற்றுபவனுக்கு எப்பொழுதும் நலத்தையளித்துப் போற்றப்படுபவனாகவும்.

19. மகவானே! ஒவ்வொரு போரிலும் உன்னை விரும்புபவர்களோடும் செல்வங்களை அளிப்பவர்களோடும் இந்த சனங்களோடுமுள்ள நாங்கள், பகைவர்களை ஜயித்து, செல்வங்களோடு பிரகாசிப்பவர்களைப் போல உன்னைப் பல இரவுகளிலும் வருடங்களிலும் போற்றி இன்புறுவோமாக.

20. அவன் எங்களிடமிருந்து நட்புச் செயல்களை நிறுத்தாமலிருக்கவும், எங்களுடைய உக்கிரப் பாலகனாக நிலைக்கவும், எங்களுடைய தேகங்களைக் காப்பவனாக விளங்கவும், நாங்கள் தருணனும் விருஷபனுமான இந்திரனுக்கு பிரம்மத்தை–தோத்திரத்தை–தேரைக் கற்பிக்கும் பிருகுக்களைப் போல் கற்பிக்கிறோம்.

21. இந்திரனே! பூர்வத்தில் புகழப்பட்டவனும், இப்பொழுது புகழப்படுபவனுமான நீ, வழிபடுபவனான என்னை, சலத்தால் நதிகளைப் போல் உணவால் நிரப்பவும், திருப்தி செய்யவும். குதிரைகளோடிருப்பவனே! உனக்குப் புதிய பிரம்மம் - தோத்திரம் - கற்பிக்கப்படுகிறது. தேர்கள் உள்ள நாங்கள் எப்பொழுதும் அறிவால் ஜயிப்பவர்களாயிருப்போமாக. 3,237

## 17. இந்திரன்

### 313. வாமதேவன் - கௌதமன்

1. இந்திரனே! நீ மகான். மகத்தான புவி உன்னிடம், உன்னுடைய - க்ஷத்ரத்தை - பலத்தை ஒத்துக்



கொள்கிறது. அங்ஙனமே சோதியும் ஒத்துக்கொள்கிறது. நீ உன்னுடைய பலத்தால் விருத்திரனைக் கொன்றாய். அஹியால் தடுக்கப்பட்ட நதிகளை விடுவித்தாய்.

2. பிரகாசிக்கும் நீ பிறக்குங்கால் சோதி நடுங்கிற்று. உன்னுடைய கோபத்துக்குப் பயந்து புவி நடுங்கிற்று. மகத்தான மலைகள், மேகங்கள் ஒடுக்கப்பட்டன. அவை வறட்சியின் வருத்தத்தை அழித்தன. வறண்ட இடங்களிலே சலங்களைப் பரத்தின.

3. பகைவர்களை ஜயிப்பவன் தன் பலத்தைப் புலப்படுத்தினான். வச்சிரத்தைச் செலுத்தினான். தன் பலத்தால் மலையைப் பிளந்தான். மதமடைந்த அவன் தன் வச்சிரத்தால் விருத்திரனைக் கொன்றான். சலங்களைத் தடுத்தவன் அழிக்கப்பட்டான். சலங்கள் வேகமாய்ப் பாய்ந்தன.

4. போற்றத்தகுந்தவனும் கூரிய வச்சிரத்தை ஏந்துபவனும், தன்னுடைய இடத்திலிருந்து அசைக்கப்படாதவனும், மகத்துவமுள்ளவனுமான இந்திரனைப் பிறப்பித்தவன் சோதியாவான். உன்னைத் தோற்றுவித்த சோதி-பிரஜாபதி–நான், உத்தம வீரப்புதல்வனை அடைந்தேன் என நினைத்தான். இந்திரனைத் தோற்றுவித்தவன் மிக்க உத்தமச் செயலைச் செய்பவனானான்.

5. அனைவரும், தேவனான மகவானின் செல்வத்தை-தானத்தை-புகழ்ந்து–மனிதர்களின் அரசனும், பலரால் போற்றப்படுபவனும், ஒருவனாகப் பல பகைவர்களைத் தாழ்த்துபவனுமான இந்திரனைப் பாடுகிறார்கள். 3,242.

6. எல்லா ஸோமங்களும் உண்மையாக இந்திரனுக்கே தோன்றுகின்றன. மதமளிக்கும் பானங்கள், மகத்தான இந்திரனுக்கு உண்மையாகவே மிக்க மதத்தைத் தருபவையாயிருக்கின்றன. நீ உண்மையாகவே வசுபதி. பல செல்வங்களின் தலைவனாயிருக்கிறாய். இந்திரனே! நீ உன்னுடைய செல்வ தானத்தால் எல்லா சனங்களையும் தாங்குகிறாய்.

7. இந்திரனே! நீ முதலில் பிறந்தபோது விருத்திரனால் பயமடைந்திருந்த எல்லா சனங்களையும் உன் பாலனத்தால் ஏந்துகிறாய். சோதியின் பிரவாகங்களை தடை செய்திருந்த அஹியை மகவானான நீ உன் வச்சிராயுதத்தால் கொன்றாய்.

8. நாங்கள் விருத்திரர்களைக் கொல்பவனும், உத்தமச் செல்வமிருப்பவனும், செல்வங்களைத் தருபவனுமான மகவானும், அழிப்பவனும், தீரனும், எதிரிகளை விலக்குபவனும், பெரியவனும், பரிமாணமற்றவனும், விருஷபனும், கூரிய வச்சிராயுதத்தை ஏந்துபவனுமான இந்திரனைப் போற்றுகிறோம்.

9. திரண்ட படைகளை யழிக்கும் இந்த மகவான் போர்களிலே முதல்வன் எனப் போற்றப்படுபவன். அவன் உணவை ஏந்தி வந்து, வழிபடுபவனுக்களிக்கிறான். நாங்கள் அவனுடைய நட்பிலே பிரியப்படுபவர்களாயிருப்போமாக.

10. இந்த இந்திரன் ஜயிப்பதில் புகழுள்ளவன்; வெல்லுவதில் புகழுள்ளவன்; போரால் பசுக்களை மீட்பதில் புகழுள்ளவன்; இந்திரன் உண்மையாகவே கோபத்தையடைந்தால் தாவர ஜங்கமப் பொருள்கள் எல்லாம் அவனைக் கண்டு பயப்படுகின்றன. 3,247

11. பல பகைப் படைகளை ஜயித்த மகவானான இந்திரன் அவர்களுடைய பசுக்களையும் குதிரைகளையும் நன்றாகக் கைப்பற்றினான். தன் ஆற்றல்களால் உத்தமத் தலைவனாயிருக்கும் இந்திரன், இந்த வழிபடுபவர்களால் போற்றப்பட்டு, செல்வத்தை ஏந்தும் அவன் செல்வங்களை வழங்குகிறான்.

12. இந்திரன் தன் பலத்தின் சில பகுதியைத் தாயினிடமிருந்து பெறுகிறான். சில பகுதியைத் தந்தையினிடமிருந்து பெறுகிறான்; அவன் தந்தையினிடமிருந்து உலகத்தைத் தோற்றுவித்தான்; அதன் பலத்தைக் கர்ச்சிக்கும் மேகங்களால் செலுத்தப்படும் காற்றைப் போல் பிரேரிக்கிறான்—ஊக்கப்படுத்துகிறான். இந்திரன் தாயை ஏன் மதிக்கிறான்? தந்தையை ஏன் மதிக்கிறான்? இடிக்கும் மேகங்களால் உந்தப்படும் காற்றைப் போல் போரிலே தன் பலத்தை ஊக்கப்படுத்தும் வச்சிராயுதத்தையே மதிக்கிறான்.



13. மகவானே! நீ ஒருவனை ஏழையாகச் செய்கிறாய். மற்றொருவனைச் செல்வப்படுத்துகிறாய். நீ பாபக் குவியலை வழிபடுபவனிடமிருந்து நீக்குகிறாய். நீ சோதியின் இடியைப் போல் பகைவர்களை அழிக்கிறாய். மகவான் வழிபடுபவனைச் செல்வத்துக்குச் செலுத்துகிறான்.

14. அவன் சூரியனுடைய தேரின் சக்கரத்தைச் செலுத்தினான். சூரியனுடைய ஆயுதத்தைப் பிரேரித்தான். போருக்குச் சென்ற ஏதசனை நிறுத்தினான். குடிலகதியுள்ளதும், கருப்பாயுமுள்ள மேகம், சலங்களின் இடங்களிலே, ஒளியின் மூலத்திலே இருந்த இந்திரனை நனைத்தது - பாலித்தது.

15. அக்கினியின் மீது இரவிலே அவியைப் பொழியும் வழிபடுபவன் போல் மேகம் நனைத்தது. 3,252

16. பசுக்களையும், குதிரைகளையும், மனைவிகளையும் விரும்பும் நாங்கள், பொழிபவனும், மனைவிகளை அளிப்பவனும், பாலனத்தைத் தளராமல் தருபவனுமான இந்திரனைக் கிணற்றில் இறக்கமாகும் குடத்தைப் போல் நட்புத் தன்மையால் இறங்கச் செய்வோமாக.

17. அனைவரையும் அன்புடன் நோக்கும் நீ, எங்களுடைய பாலகனாயிருக்கவும்; பந்துவாகவும்; ஸோமரர்களைக் கவனித்துக் கொள்ளவும்; சுகப்படுத்தவும். நீ நண்பன்; பாலகன்; பாலகர்களின் நடுவே உத்தம பாலகன்; நீ சிருட்டிப்பவன்; விரும்புபவனுக்கு சோதி. உலகத்தை அளிக்கும் நீ எங்களுக்கு உணவையளிப்பவனாகவும்.

18. நீ, உன்னுடைய நட்பை விரும்புபவர்களுக்குப் பாலகனாக இருக்கவும். போற்றப்படும் நீ, நண்பனாய் விளங்கவும். உன்னைப் போற்றுபவனுக்கு நீ உணவை யளிக்கவும். இந்திரனே! நாங்கள் உன்னை இந்தச் செயல்களால் மேம்படுத்துகிறோம். கஷ்டங்களிலிருக்கும் நாங்கள் உன்னை அழைக்கிறோம்.

19. மகவானான இந்திரன் போற்றப்பட்டவுடன் அவன் ஒருவனாகவே பணியாத பல பகைவர்களை அழிக்கிறான். இந்திரனுடைய பாலனத்தை விரும்புபவனுக்கு அவன் பிரியமுள்ளவனாகிறான். அவனுக்குத் தேவர்களாலும் மனிதர்களாலும் துன்பம் தோன்றாது.

20. பலவித குரல்கள் இருப்பவனும், செல்வமுள்ளவனும், மனிதர்களைத் தாங்குபவனும், தடைபடாதவனுமான இந்திரன் எங்களால் போற்றப்பட்டவுடன் எங்களுக்கு சத்திய செல்வங்களை அளிக்கிறான். இந்திரனே! நீ சனங்களுக்கு அரசன். உன்னை வழிபடுபவனுக்குரிய மகத்தான புகழை எங்களுக்குத் தாராளமாயளிக்கவும்.

21. இந்திரனே! பூர்வத்தில் புகழப்பட்டவனும் இப்பொழுது புகழப்படுபவனுமான நீ, வழிபடுபவனான என்னை உணவால், சலத்தால் நதிகளைப் போல் நிரப்பவும்–திருப்தி செய்யவும். குதிரைகளோடிருப்பவனே! உனக்குப் புதிய பிரம்மம் – தோத்திரம்-கற்பிக்கப்படுகிறது. தேர்கள் உள்ள நாங்கள், எப்பொழுதும் அறிவால் ஜயிப்பவர்களாயிருப்போமாக. 3,258

## 18. இந்திரன்

### 314. வாமதேவன்–கௌதமன்

**1. இந்திரன் பேசுகிறான் .**

இது பழைய வழி; ஒத்துக்கொள்ளப்பட்ட வழி; இந்த வழியால் எல்லாத் தேவர்களும் பிறக்கிறார்கள். பூரணமாய் வளர்ந்தவுடன் அவன் அந்த வழியாகவே



பிறப்பானாக. அவன் வேறு வழியால் வந்து அவன் தன் தாயை அழிக்காமலிருப்பானாக.

**2. வாமதேவன் பேசுகிறான் :**

நான் இந்த வழியாக வரப்போவதில்லை. இது கடினமான வழி. நான் பக்கத்தைப் பிளந்து கோணலாய் வருவேனாக. மற்றவர்களால் நடத்தப்படாத பல செயல்கள் என்னால் நிறைவேற்றப்பட வேண்டும். நான் ஒருவனோடு போராடுவேன். மற்றவனோடு தர்க்கிப்பேன்.

3. பக்கத்திலிருந்து பிறந்தால் என் தாய் மரிப்பாள் என இந்திரன் கூறினான். நான் சகஜமான வழியாய் வராமல் என் விருப்பம் போல் பிறப்பேன். இந்திரன், துவஷ்டாவின் மனையிலே, கலசங்களிலே பிழியப்பட்டிருந்த விலை உயர்ந்த ஸோமத்தைப் பருகினான்.

**4. அதிதி பேசுகிறாள் :**

தாயான நான், இந்திரனை ஆயிரம் மாதங்களும் பல வருடங்களும் சுமந்தேன். அவன் செய்த பிழை என்ன ? பிறந்தவர்களிலே, இனி பிறப்பவர்களிலே இந்திரனுக்கு ஒப்பாக எவனும் இல்லை.

5. அவன் – இந்திரன் – நிந்தைக்குரியவன் எனக் கருதி, தாய் அவனை மறைத்தாள். அவனுக்கு எல்லா வீரத்தன்மையையும் தந்தாள். ஆதலால் அவன் பிறந்தவுடன் தானாகவே எழுந்து, ஒளியைத் தரித்து, சோதியையும் புவியையும் நிரப்பினான். 3,263

6. சலம் நிறைந்தவர்களைப் போல் சப்திக்கும் இந்நதிகள் இன்ப முழக்கங்களை எழுப்பிக் கொண்டு பாய்கிறார்கள். அவர்களிடம் எதைக் கூறுகிறீர்கள் எனக் கேளுங்கள். சூழ்ந்திருந்த எந்த மேகத்தை சலங்கள் பிளந்து வந்தன? சலங்கள் பிளக்கவில்லை; எங்களுடைய புதல்வனான இந்திரனே பிளந்தான். அதனால் சலங்கள் பெருகுகின்றன. ஆரவாரஞ் செய்கின்றன.

7. நிவிதங்கள், நிவிருத்திமொழிகள், பிராயச்சித்த சொற்கள் என்னிடம்—அதிதியினிடம்—எதைக் கூறுகின்றன? இந்திரனுடைய பாபத்தை சலங்கள் ஏற்கின்றன—ஏந்துகின்றன என்னுடைய புதல்வன்—இந்திரன்—மகத்தான வச்சிரத்தால் விருத்திரனைக் கொன்ருன். அவன் இந்த நதிகளைச் சுதந்திரமாய்ப் பெருக விடுவித்தான்.

8. வாமதேவன் பேசுகிருன் :

மகிழ்ச்சியுடன் யுவதியான தாய் உன்னைப் பிறப்பித்தாள். எக்களித்து குஷவை உன்னை விழுங்கினுள். எக்களித்து சலங்கள் பாலனுன உன்னை சுகப்படுத்தின. எக்களித்து இந்திரன் தன் பலத்தால் மேலே எழுந்தான்.

9. மகவானே! வியம்சன் எக்களித்து உன்னை அடித்தான். தாடையிலே இடித்தான். அடிபட்ட நீ, அதிக பலமுள்ளவனுகி, உன் வச்சிராயுதத்தால் தாஸனுடைய சிரத்தைச் சிதைத்தாய்.

10. தாயான அதிதி, பக்குவனும், வலியனும், தடைபடாதவனும், விருஷபனும், ஊக்கமுள்ளவனும், ஜயிக்கப்படாதவனும், தன் விருப்பம்போல் செல்பவனும், தன் தேகத்தில் கவனமுள்ளவனுமான இந்திரனை, கன்றை ஈனும் பசுவைப் போல் பிறப்பித்தாள். 3,268

11. தாய், மகத்தான இந்திரனிடம் வினவினுள் : என்னுடைய புதல்வனே! இந்தத் தேவர்கள் உன்னைக் கைவிட்டார்களா? பிறகு இந்திரன் விஷ்ணுவினிடஞ் சொன்னுன்: விஷ்ணுவே! நண்பனே! நீ விருத்திரனைக் கொல்ல விரும்பினுல் அதிகப் பராக்கிரமமுடனுகவும். விஷ்ணுவே! நீ விலகி நிற்கவும். நான் உதவியில்லாமல் விருத்திரனைக் கொல்வேனுக.

12. எவன் உன்னுடைய தாயை விதவையாகச் செய்தான்? உறங்குபவனும், விழித்திருப்பவனுமான உன்னை எவன் கொல்ல விரும்பினுன்? நீ உன் தந்தையைக் காலால் பிடித்து இழுத்துக் கொன்றபோது



உன்னையன்றி வேறு எந்தத் தேவன் உனக்கு ஆறுதலையளிக்க, உன்னை சுகப்படுத்த உன்னருகில் இருந்தான்? இந்திரன் தந்தையினிடமிருந்து பிறக்க மறுத்தான். தந்தையால் துன்புறுத்தப்பட்டவுடன் தந்தையைக் கொன்ருன். பிறகு விதவையான தாயினிடமிருந்து பிறந்தான். இது விஷ்ணுவின் பதில்போல் தோன்றுகிறது.

13. நான் மிக்க வறுமையுடனிருக்குங்கால் நாயின் குடல்களைச் சமைத்தேன். நான் தேவர்களின் நடுவே இந்திரனைத் தவிர என்னை சுகப்படுத்த எவனையும் காணவில்லை. அவமதிக்கப்பட்ட என் மனைவியைப் பார்த்தேன். பிறகு பருந்து-இந்திரன்-எனக்கு மதுவை ஏந்தி வந்தது; இனிய சலத்தைப் பொழிந்தது. 3,271

## 19. இந்திரன்

### 315. வாமதேவன்-கௌதமன்

1. வணக்கத்தோடு அழைக்கப்படும் எல்லாப் பாலனமளிக்கும் தேவர்களும், சோதியும் புவியும், ஏகனுக இருப்பவனும், மகானும், பரந்தவனும், அழகனுமான உன்னை, இந்திரனே! வச்சிரமேந்துபவனே! இங்கு விருத்திரனைக் கொல்ல அழைக்கிருர்கள்.

2. இளைஞர்களை அனுப்பும் பெரியவர்களைப் போல் -கிழவர்களைப் போல்-தேவர்கள் உன்னை—விருத்திரனைக் கொல்ல அனுப்பினுர்கள். அதினின்று, இந்திரனே! சத்தியத்தின் இருப்பிடமான நீ உலகத்தின் சக்ரவர்த்தியானுய். நீ சலத்தை விடுதலைப்படுத்த சயனித்திருந்த அஹியைக் கொன்ருய். இன்புறுத்தும் நதிகளுக்கு நீர்க் கால்களைக் கீறினுய்.

3. இந்திரனே! நீ திருப்திப்படாதவனும், தளராதவனும், புலனற்றவனும், தெரியாமலிருப்பவனும், தூங்குபவனும், இறக்கத்தில் பாயும் நதிகளைத் தடுத்தவனுமான அஹியைப் பௌர்ணிமை தினத்திலே உன்னுடைய வச்சிரத்தால் வீழ்த்தினுய்.

4. இந்திரன் தன் பலத்தால் புவியையும் அதன் மூலத்தையும். தன் கோபத்தால் சலத்தைக் கலக்கும் காற்றைப் போல் ஆட்டினான். தன் திறத்திலே எக்களித்து கனத்த மேகங்களைப் பிளந்தான். மலைகளின் உச்சிகளை உடைத்தான்.

5. தங்கள் புதல்வர்களிடஞ் செல்லும் தாய்மார்களைப் போல், மருத்துக்கள் உன்னிடம் துரிதமாகிறார்கள். அவர்கள் தேர்களைப் போல் உன்னோடு பாய்ந்தார்கள். இந்திரனே! நீ ஓடும் நதிகளை சலங்களால்—திருப்தி செய்தாய். நீ மேகங்களைப் பிளந்தாய். தடைபட்ட நதிகளை விடுவித்தாய். 3,276

6. நீ துர்வித்திக்கும் வய்யனுக்கும், மகத்தாயும், விசுவத்தைப் பாலிப்பதாயும், செழிப்பாயுமுள்ள புவியை உணவாலும் சலன சலத்தாலும் இன்புறுத்தினாய். நீ நதிகளைச் சுலபமாய்க் கடப்பதற்குரியவையாய்ச் செய்தாய்.

7. இந்திரன், பகைவர்களைப் புடைக்கும் படைகளைப் போல் கரைகளை உடைப்பவையும், உணவைத் தோற்றுவிப்பவையும், யுவதிகளாயுமுள்ள நதிகளை நிரப்பினான். அவன் வறண்ட நிலங்களை வெள்ளப்படுத்தினான் தாகமுள்ள பயணிகளைத் திருப்தி செய்தான். அசுரத் தலைவனிடமிருந்த மலட்டுப் பசுக்களைக் கறந்தான்.

8. அவன் விருத்திரனைக் கொன்று, இருட்டால் விழுங்கப்பட்டிருந்த பல உஷைகளையும் வருடங்களையும் விடுவித்தான். நதிகளைக் கட்டறுத்தான். இந்திரன் மேகத்தால் சூழப்பட்டு அடைக்கப்பட்டிருந்த நதிகளைப் பூமியின் மீது பெருக விடுதலைப் படுத்தினான்.

9. குதிரைகளுள்ளவனே! நீ எறும்புகளால் தின்னப்பட்டு வந்த அக்ருவின் புதல்வனை வன்மீகத்திலிருந்து—எறும்புகளின் புற்றிலிருந்து—வெளிப்படுத்தினாய். அவன் விடுதலைப் பட்டவுடன் குருடனாயிருந்த அவன் பாம்பை நன்கு காணும் சக்தியைப் பெற்றான். அவனுடைய கழன்றிருந்த கணுக்கள் மீண்டும் சேர்ந்தன.



10. அறிந்த வாமதேவன், அரசனான இந்திரனே! அறிஞனான உன்னுடைய பலழயவையும், மழையைத் தோற்றுவிப்பவையும், தாமே தோன்றியவையும், மனிதர்களுக்கு நலத்தையளித்தவையுமான வீரச்செயல்களைக் கூறினான். 3,281

11. இந்திரனே! பூர்வத்தில் புகழப்பட்டவனும், இப்பொழுது புகழப்படுபவனுமான நீ, உணவால் போற்றுபவனான என்னை, சலத்தால் நதிகளைப்போல் நிரப்பவும்-திருப்தி செய்யவும். குதிரைகளோடிருப்பவனே! உனக்குப் புதிய பிரம்மம்-தோத்திரம்—கற்பிக்கப் படுகிறது. தேர்கள் உள்ள நாங்கள் எப்பொழுதும் பாட்டால் ஜயிப்பவர்களாயிருப்போமாக. 3,282

## 20. இந்திரன்

### 316. வாமதேவன்—கௌதமன்

1. விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும் உக்கிரனுமான இந்திரன், தூரத்திலிருந்தோ அருகிலிருந்தோ எங்கள் பாலனத்துக்கு வருவானாக. மனிதர்களின் தலைவனும் வச்சிராயுதம் ஏந்தி, மிக்க ஆற்றல்களுள்ள மருத்துக்களோடு சேர்ந்து, போரில் சத்துருக்களை ஜயிப்பவனுமான இந்திரன் வருவானாக.

2. இந்திரன் எங்களிடம் கண்களைச் செலுத்தி எங்களைப் பாலிக்கவும். செல்வப்படுத்த தன் குதிரைகளோடு எங்கள் முன்னே வருவானாக. வச்சிரனும், மகானுமான இந்திரன் போரிலே பாலனமளித்து எங்களுடைய இந்த யக்ஞத்திலே இருப்பானாக.

3. இந்திரனே! எங்களை முற்படுத்தவும். நீ இந்த யக்ஞத்தையும், மனத்திட்பத்தையும் பெறுவாய். வச்சிராயுதம் ஏந்துபவனே! செல்வத்தை ஜயிக்க நாங்கள்

வேடர்களைப் போல் போரிலே உன்னோடு எங்கள் பகைவர்களை ஜயிப்போமாக.

4. இந்திரனே! தன்னயமுள்ள நீ நல்ல மனமுடன் எங்களருகில் இருக்கவும். எங்களை நன்றாக விரும்பி நன்கு பிழியப்பட்ட ஸோமத்தைப் பருகவும். நாங்கள் அளிக்கும் இனிய ரஸத்தைப் பருகவும். பகல் துதியோடும் அளிக்கப்படும் உணவால் இன்பமாகவும்.

5. தன் புருஷனைப் பெருமைப்படுத்தும் மனைவியைப் போல், நான் பலரால் அழைக்கப்படுபவனும், புதிய ரிஷிகளால் போற்றப்படுபவனும், பக்குவப்பட்டுள்ள மரத்தைப் போலிருப்பவனும், ஆயுதங்களை நன்கறியும் வீரனைப் போலிருப்பவனுமான இந்திரனைப் போற்றுகிறேன். 3,287

6. நான் தன் பலத்தால் மலையைப் போல் மகத்தாயிருப்பவனும், பூர்வத்திலே ஜயத்துக்காகப் பிறந்த உக்கிரனும், சலத்தோடு நிறைந்துள்ள கலசத்தைப் போல் ஒளியோடு கலந்திருப்பதும், பழையதாயுமுள்ள வச்சிராயுதத்தை ஏந்துபவனும், பயங்கரனுமான இந்திரனைப் போற்றுகிறேன்.

7. உன் பிறவியால் உன்னைத் தடைப்படுத்துபவன் எவனுமில்லை. நல்ல செயல்களை நடத்த உன்னால் அளிக்கப்பட்ட செல்வத்தை யழிப்பவனுமில்லை. வலியனே! உக்கிரனே! புருஹூதனே! விரும்பப்படும் நலங்களைப் பொழிபவனான நீ, எங்களுக்குச் செல்வங்களை யளிக்கவும்.

8. நீ மனிதர்களின் மனைகளையும் செல்வங்களையும் நடத்துகிறாய். நீ பசுக்களின் மந்தையை மீட்கிறாய். நீ கற்பனையால் அறிவை ஸ்தாபிக்கிறாய். நீ போர்களிலே புடைக்கிறாய். நீ செல்வங்களின் பெரிய குவியல்களைத் தருகிறாய்.

9. அவன் எந்த மகத்தான வலிமையால் மிக்க வலிமையுள்ளவன் எனப் புகழப்படுகிறான்? மகானான



இந்திரன் எந்த மகத்தான பலத்தால் அடிக்கடி போர்களை நடத்துகிறான். அவன் வழிபடுபவனுடைய பலவிதமான பாபங்களை நீக்குகிறான். துதிப்பவனுக்குச் செல்வத்தைத் தருகிறான்.

10. இந்திரனே! எங்களைத் துன்புறுத்தாதே. எங்களைப் பாலிக்கவும். அளிப்பவனுக்கு உன்னால் அளிப்பதற்குரிய மிகுந்த செல்வத்தை எங்களுக்களிக்கவும். நாங்கள், அவியளிக்கத் தகுந்ததும் புதியதாயும் உத்தமமாயுமுள்ள இந்த யக்ஞத்திலே உன்னைப் போற்றிப் பாடுகிறோம்.

11. இந்திரனே! பூர்வத்தில் புகழப்பட்டவனும், இப்பொழுது புகழப்படுபவனுமான நீ, உணவால், போற்றுபவனான என்னை சலத்தால் நதிகளைப் போல் நிரப்பவும். குதிரைகளோடிருப்பவனே! உனக்கு புதிய தோத்திரம் கூறப்படுகிறது. தேர்களுள்ள நாங்கள் உன்னைத் துதிப்பதில் எப்பொழுதும் இன்பமுள்ளவர்களாவோமாக. 3,293

## 21. இந்திரன்

### 317. வாமதேவன்-கௌதமன்

1. இந்திரன் பாலனத்துக்காக எங்களிடம் வருவானாக. எங்களுடன் சேர்ந்து புசிப்பவனான சூரன் இங்கு போற்றப்படுவானாக. பல ஆற்றல்களுள்ள அவன் சூரியனைப் போல தன்னுடைய ஜயிக்கும் சக்தியைப் புட்டி செய்து கொள்வானாக.

2. எவனுடைய, ஜயிப்பதும் பாலனமளிப்பதுமான பலம்–க்ஷத்ரம் – வணக்கத்துக்குரிய சக்கரவர்த்தியைப் போல் மனிதர்களை நடத்துகிறதோ அந்தச் செல்வனும் புகழுள்ளவனுமான இந்திரனின் வலிய வீரர்களை – மருத்துக்களை - போற்றுங்கள்.

3. மருத்துக்களோடுள்ள இந்திரன், பாலனத்துக்காக சுவர்க்கத்திலிருந்தோ, புவியிலிருந்தோ வானி

விருந்தோ, சலங்களிலிருந்தோ, சூரிய மண்டலத்தி லிருந்தோ, எந்தத் தூரமான உலகத்திலிருந்தோ' மழைகளின் இடத்திலிருந்தோ வருவாளுக.

4. நாங்கள், மகத்தாயும் நித்தியமாயுமுள்ள செல்வங்களின் தலைவனும், தன் பலத்தால் பகைப் படைகளை ஜயிப்பவனும், வீரத்தோடு வழிபடுபவர்களை உத்தம செல்வத்துக்குச் செலுத்துபவனுமான இந்திரனை இந்த எங்களுடைய சபைகளிலே போற்றுவோமாக.

5. ஹோதா, உலகத்தைத் திரமாக நிலைப்படுத்துபவனும், அவிக்கு உணவையளிப்பவனும், மானிடர்கள் யஜிக்க மொழியை எழுப்புபவனும், துதிகளால் துதிக்கத் தகுந்தவனும், பலரால் போற்றப்படுபவனுமான இந்திரனை அழைப்பானுக. 3,298

6. வழிபடுபவனுடைய மனையில் இருந்து கொண்டு துதிகளைப் பாடுபவர்கள் தோத்திரத்தோடு இந்திரனை அணுகுங்கால், போர்களிலே எங்களைத் தாங்குபவனும், தணிக்கப்படாத கோபமுள்ளவனுமான இந்திரன் மனைத் தலைவனின் ஹோதாவாக விளங்குவானுக.

7. மகத்தான பார்வரனின்–பிரஜாபதியின்–சக்தியானது போற்றுபவனைத் தாங்க எப்பொழுதும் உதவுகிறது. அது போற்றுபவனின் மறைந்திருக்கும் சிந்தனைகளிலும், செயல்களை நடத்தவும், விருப்பங்களைப் பூர்த்தி செய்யவும், அவனை இன்பப்படுத்தவும், அவனுடைய மனையிலும் மறைந்து நிலவுகிறது.

8. இந்திரன் மேகத்தின் கதவுகளைத் திறக்கும் போதும், வெள்ளங்களால் பிரவாகங்களை ஊக்கப்படுத்தும் போதும், அவனை, அறிஞர்கள் வீரச் செயலுக்கு நடத்துங்கால் அவன் - இந்திரன் - குகையிலே எருமையையும் காட்டுக் காளையையுங் கண்டான்.

9. இந்திரனே! உன்னுடைய கைகள் மங்களமானவை. உன்னுடைய புஜங்கள் நன்கு கற்பிக்கப்பட்டவை. அவை துதிப்பவனுக்குச் செல்வத்தைத் தருகின்றன. இந்திரனே! ஏன் இந்தத் தாமதம்? நீ ஏன் எங்களுக்குச் செல்வத்தையளிக்க இன்பமாகவில்லை?



10. சத்தியவானும், செல்வத்தின் தலைவனும், விருத்திரனைக் கொல்பவனுமான இந்திரன் இங்ஙனம் போற்றப்பட்டு மானிடனுக்குச் செல்வங்களைத் தருகிருன். புருஹூதனே! நான் உன்னுடைய தெய்வ உணவைப் புசிக்க எங்களுடைய செயல்களுக்குச் செல்வங்களையளிக்கவும். 3,303

11. இந்திரனே! பூர்வத்தில் புகழப்பட்டவனும், இப்பொழுது புகழப்படுபவனுமான நீ, உணவால் போற்றுபவனுன என்னை, சலத்தால் நதிகளைப் போல் நிரப்பவும். குதிரைகளிருப்பவனே! உனக்குப் புதிய தோத்திரம் கற்பிக்கப்படுகிறது. தேர்களுள்ள நாங்கள் எப்பொழுதும் புலனுல் உன்னைப் போற்றுபவர்களாவோமாக. 3,304

## 22. இந்திரன்

### 318. வாமதேவன்–கௌதமன்

1. மகானும் வலியனுமான இந்திரன் எங்கள் அவிகளால் ஏத்தப்படுவதால், எங்களிடமிருந்து அவற்றை விரும்புவதால், செல்வமிருப்பவனும், வச்சிரம் ஏந்துபவனும், பலத்துடனிருப்பவனுமான அவன், அவியையும், ஸ்தோமத்தையும், ஸோமத்தையும், தோத்திரங்களையும் ஏற்றுக்கொள்வானுக.

2. பொழிபவனும், உக்கிரனும், தலைவர்களின் தலைவனும், மிக்க வீரத்தன்மையுள்ளவனும், தன் இரு கைகளால் மழையைத் தோற்றுவிக்கும் நான்கு கூர்களுள்ள வச்சிரத்தை வீசுபவனுமான இந்திரன், அழகு செய்துகொள்ள ப்ருஷ்ணியைக் கம்பளமாக-ஆவியாக-அணிந்து அதன் சக்திகளை-கிளைகளை-நட்புத்தன்மைக்காக இணைத்தான்.

3. தேவனும் மிக்கத் தேவத்தன்மையுள்ளவனுமான இந்திரன், பிறந்தவுடன் மகத்தான உணவுகளோடும், மகத்தான ஆற்றல்களோடுமிருந்தான். இசைந்த வச்சிரத்தைக் கைகளிலே ஏந்திய அவன், தன் பலத்தால் சோதியையும் புவியையும் நடுக்கப்படுத்தினன்.

4. மகத்தான இந்திரன் பிறக்குங்கால், அவனிடம் பயமாகி எல்லா உச்ச ஸ்தானங்களும், பல இறக்கங்களும்-கடல்களும்-சோதியும் புவியும் நடுங்கிற்று. பலவானை இந்திரன் சூரியனுடைய தாய்மார்களான சோதியையும் புவியையும் தாங்குகிறான். இந்திரனால் பிரேரிக்கப்பட்ட காற்றுக்கள், மனிதனைப் போல் சத்தத்தைத் தாம் சுற்றிவரும் வானிலே எழுப்புகிறது.

5. இந்திரனே! நீ மகான். உன்னுடைய செயல்கள் மேன்மையானவை. அவை எல்லா யக்ஞங்களிலும் போற்றத்தக்கவை. வீரனும் தீரனுமான நீ, உலகத்தைத் தாங்குகிறாய். உன் தடைபடாத வச்சிரத்தால், திறத்தால் அஹியைக் கொன்றாய். 3,309.

6. மிக்க வலிமையுள்ள இந்திரனே! உன்னுடைய இந்த வீரச்செயல்கள் எல்லாம் உண்மையானவை. பொழிபவனே! உனக்குப் பயந்து பசுக்கள் தங்கள் ஆபீனங்களிலிருந்து பாலைத் தருகின்றன. பொழியும் மனமுள்ள இந்திரனே நதிகள் உனக்குப் பயந்து வேகமாய்ப் பாய்கின்றன.

7. இந்திரனே! குதிரைகளோடிருப்பவனே! நீ விருத்திரனால் தடுக்கப்பட்டு வெகுகாலம் அடைக்கப்பட்டிருந்த நதிகளைப் பெருக விடுவித்தபோது தேவிகளும் சகோதரிகளுமான அந்நதிகள் உன்னைப் போற்றினார்கள்.

8. மதமளிக்கும் ஸோமம் பொழியப்பட்டிருக்கிறது. தாரை உனக்குப் பெருகுக. துதிகர்த்தாவின் குறையை நீக்கும் சக்தியானது குதிரையின் வடங்களைக் கெட்டியாய்ப் பிடித்துள்ள சவாரியைப் போல் எங்களிடம் செலுத்தப்படுக.



9. தாங்கும் இந்திரனே! நீ எங்களுக்கு ஜயிப்பவையும், சக்தியுள்ளவையும், சிறந்துள்ளவையுமான ஆற்றல்களை எப்பொழுதும் எங்களுக்களிக்கவும். மரணத்துக்குரிய பகைவர்களை எங்கள் வசப்படுத்து. துன்புறுத்தும் மனிதனின் ஆயுதத்தை அழிக்கவும்.

10. இந்திரனே! எங்கள் துதிகளைக் கேட்கவும். எங்களுக்குப் பலவித உணவுகளையளிக்கவும். எங்களுடைய எல்லாப் புலன்களையும் பிரேரிக்கவும். மகவானே! எங்களுக்குப் பசுக்களையளிப்பவனாக இருக்கவும்.

11. இந்திரனே!, பூர்வத்தில் புகழப்பட்டவனும், இப்பொழுது புகழப்படுபவனுமான நீ, போற்றுபவனான என்னை உணவால், நதிகளை சலத்தால் போல் நிரப்பவும். குதிரைகளோடிருப்பவனே. உனக்குப் புதிய தோத்திரம் கற்பிக்கப்படுகிறது. தேர்களுள்ள நாங்கள் புலனால் எப்பொழுதும் உன்னைப் போற்றுபவர்களாவோமாக. 3,315.

## 23. இந்திரன்

### 319. வாமதேவன்–கௌதமன்

1. மகானான இந்திரனை ஒருவன் எங்ஙனம் போற்ற வேண்டும்? எந்த ஹோதாவினுடைய யக்ஞத்திலே ஏத்தப்பட்டு, பிரியமுள்ளவனாகி அவன் அங்கு செல்வான்? எங்கு ஸோமத்தைப் பருகி உணவை விரும்பி அவியால் இன்புறுவான்? மகானான இந்திரன் மேன்மையான செல்வத்தை எவனுக்கு ஏந்திச் செல்லுவான்?

2. போரிலே எந்த வீரன் அவனுடைய கூட்டுறவை அடைந்தான்? எவன் அவனுடைய ஸுமதிகளோடு சென்றான்? எவனாவது அவனுடைய அற்புத தானத்தை அறிகிறானா? போற்றப்படுபவனுக்கு அவ

னுடைய செல்வத்தைச் செழிப்பிக்க – பாலிக்க – அவன் எப்பொழுது தோன்றுகிறான்?

3. இந்திரன் அழைப்பவனை எங்ஙனஞ் செவியுறு கிறான்? செவியுற்று அவனுக்குப் பாலனமளிக்கும் பொருள்களை எங்ஙனமறிகிறான்? அவனுடைய பழைய ஈகைகள் எவை? அவர்கள், அவன் துதிப்பவனின் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவன் என ஏன் கூறி னார்கள்?

4. துதியில் ஊக்கமாகி இந்திரனைப் போற்றுபவன் எதிர்ப்பிருந்தாலும் எங்ஙனம் அவனிடமிருந்து செல் வத்தை யடைகிறான்? தேவன் விரும்பும் வணக்கத்தை என்னிடமிருந்து பெற்று என்னுடைய உண்மையான – தோத்திரங்களை – நன்கறிந்து கொள்வானாக.

5. இந்த உஷையின் உதயத்திலே, எப்பொழுது எங்ஙனம், மனிதனின் நட்பைத் தேவனான இந்திரன் ஏற்றுக்கொண்டான்? இந்திரன் அவன் முகப்பிலே விரும்பத்தகுந்த இணக்கமான அவியைப் பரத்திய நண் பர்களுக்குத் தன்னுடைய நட்புத் தன்மையை எப் பொழுது எங்ஙனம் புலப்படுத்தினான்? 3,320.

6. நாங்கள், நீ உன்னுடைய நண்பர்களுக்குப் புலப்படுத்திய நட்புத்தன்மையை எங்ஙனமாவது கூறலாமோ? நாங்கள் உன்னுடைய சகோதரத்தன் மையை எப்பொழுது கூறலாம்? சுந்தரனான இந்திரனின் முயற்சிகள் அனைவருடைய இன்பத்துக்குமாகின்றன. சலனமாகும் இந்திரனின் அற்புத வடிவம் சூரியனைப் போல் அனைவராலும் விரும்பப்படுகிறது.

7. இந்திரன், துரோகிப்பவனும், துன்புறுத்து பவனும், அவனை அசட்டை செய்பவனுமான அரக்கியை அழிக்க நினைத்து அவனைக் கொல்லத் தன்னுடைய கூரிய ஆயுதங்களைத் தீட்டினான். கடனை நீக்கும் உக்கிரனான இந்திரன் கடனளிப்பதற்குரிய அறியாத உஷைகளைத் தூரப்படுத்தினான்



8. ருதத்துக்குப் பல சலங்களிருக்கின்றன. ருதத் துக்குத் தோத்திரம் தீமைகளை அழிக்கின்றன. ருதத்துக்கு ஊக்கப்படுத்துவதும் ஒளியுள்ளதுமான சுலோகம்-தோத் திரம்-மனிதனின் செவிட்டுச் செவிகளைத் திறந்தது.

9. தேகமுள்ள-எழிலுள்ள-ருதத்துக்கு நிலையுள்ள வையும், ஏந்துபவையும், இன்புறுத்துபவையுமான பல வடிவங்கள் இருக்கின்றன. அறிஞர்கள் ருதனால் அழி யாத நீண்ட உணவை விரும்புகிறார்கள். ருதத்தால் பசுக்கள் ருதத்தில்-யக்ஞத்தில்-நுழைந்தன.

10. ஒருவன் ருதத்தை வசப்படுத்தி ருதத்தைப் போற்றுகிறான். ருதத்தின் பலம் வேகத்தோடு பலப் படுகிறது. சலத்தைப் பெற விரும்புகிறது. பரந்தவையும், ஆழமாயுமுள்ள சோதியும் புவியும் ருதத்துக்குரியவை. உத்தமமாயுள்ள பசுக்கள் ருதத்துக்குப் பாலைத் தருகின்றன. 3,325

11. இந்திரனே! பூர்வத்தில் புகழப்பட்டவனும், இப் பொழுது புகழப்படுபவனுமான நீ, போற்றுபவனான என்னை உணவால் நதிகளை சலத்தால் போல் நிரப்பவும். குதிரைகளிருப்பவனே! உனக்குப் புதிய தோத்திரம் கற் பிக்கப்படுகிறது. தேர்களுள்ள நாங்கள் உன்னைத் துதிப் பதில் எப்பொழுதும் ஊக்கமுள்ளவர்களாயிருப்போமாக. 3,326

## 24. இந்திரன்

### 320. வாமதேவன் - கௌதமன்

1. எந்த நல்ல தோத்திரம், பலத்தின் புதல்வனான இந்திரனை எங்கள் முன்னே எங்களுக்குச் செல்வத்தை யளிக்க வருவிக்கும்? சனங்களே! வீரனும் பசுக்களின் தலைவனுமான இந்திரன், பகைவர்களின் செல்வத்தைப் போற்றுபவனுக்குத் தருபவனாகிறான்.

2. இந்திரன் விருத்திரர்களைக் கொல்ல அழைக்கத் தகுந்தவன். அவன் துதியாருகனுய்த் துதிக்கத் தகுந்த

வன். அளிப்பதற்குச் சத்தியமான தனத்தை உள்ளவன். மகவான் பொழிந்து போற்றும் மனிதனுக்குப் போரிலே ஜயித்த செல்வத்தையளிக்கிறான்...

3. மனிதர்கள் போரிலே அவனை அழைக்கிறார்கள். அவர்கள் தங்கள் உயிர்களை நீக்கத் துணிந்து அவனைப் பாலகனுச் செய்து கொள்கிறார்கள். அப்பொழுது இரு கட்சிகளிலுமுள்ள வீரர்கள் தங்களுடைய குழந்தைகளுக்காகவும் சந்ததிக்காகவும் ஒவ்வொருவரும் போராடி தங்கள் தேகங்களை அளிக்கிறார்கள்.

4. உக்கிரனே! சனங்கள் பேயுரர்ச் சுழலிலே சேர்ந்து போராடி தங்கள் பலத்தைப் புலப்படுத்துகிறார்கள். வீரப் படைகள் ஒன்றையொன்று எதிர்க்குங்கால் அவற்றிலே சிலர் சண்டையிலே இந்திரனைப் போல் போர் புரிகிறார்கள்.

5. அங்கு சிலர் இந்திரனுடைய வலிமையையே போற்றுகிறார்கள். புரோடாசத்துக்குப் பின் ஸோமம் செல்க. பொழியாதவனை ஸோமமுனழிக்க, நான் விருஷபனைப் போற்றி இன்புறுகிறேன். 3,331

6. சுவர்க்கத்திலிருக்கும் இந்திரனுக்கு-ஸோமத்தை விரும்பும் அவனுக்கு-பொழிபவன், அவனால்-இந்திரனால்-செல்வமளிக்கப்படுகிறான். பணிந்த மனத்தோடு வணக்கஞ் செலுத்துபவனை இந்திரன் தனது நண்பனாகச் செய்து கொள்கிறான்.

7. இன்று இந்திரனுக்கு ஸோமத்தைப் பொழிந்து, புரோடாசங்களைப் பக்குவப்படுத்தி யவப்பொரியைத் தந்து துதிகளை யளிக்க விரும்புபவனுக்கு இந்திரன் அவனுடைய கோத்திரங்களை விரும்பி அவனுக்கு விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்ளும் ஆற்றல்களைத் தருகிறான்.

8. பகைவர்களையழிக்கும் மானிடப் பகைவனைப் பகுத்தறியும் போதும், தலைவன் நீண்ட போரிலே போராடும் போதும், மனையிலே ஸோமத்தைப் பிழிபவர்களால் ஊக்கப்படுத்தப்பட்ட இந்திரனை அவனுடைய பத்தினி அழைக்கிறாள்.



9. ஒருவன், விலை உயர்ந்த பொருள் ஒன்றுக்குக் குறைந்த விலையை ஏற்றுக்கொண்டான். அவன் வாங்கினவனிடம் மீண்டும் சென்று எனக்கு மீதியான தொகையையளிக்கவும், முழு விலை வேண்டும் எனக் கூறினான். அவன் பாக்கித் தொகையைப் பெறவில்லை; பொருளையும் அடையவில்லை. சிறிய விலையால் பெரிய ஈட்டை மீட்கவில்லை. அற்பர்களும் அறிஞர்களும் ஆபீனத்தைக் கறக்கிறார்கள். மெலிந்தவர்களும் வலியர்களும் ஒப்பந்தத்தைப் பற்றுகிறார்கள்.

10. என்னுடைய இந்த இந்திரனை எவன் பத்து பசுக்களால் வாங்குகிறான்? வாங்குபவன், இந்திரன விருத்திரர்களைக் கொன்றவுடன் அவனை மீண்டும் என்னிடம் அளிப்பானாக.

11. இந்திரனே! பூர்வத்தில் புகழப்பட்டவனும், இப்பொழுது புகழப்படுபவனுமான நீ, போற்றுபவனான என்னை, உணவால் சலத்தால் நதிகளைப் போல் நிரப்பவும். குதிரைகளின் தலைவனே! உனக்குத் தோத்திரம் கற்பிக்கப்படுகிறது. தேர்களுள்ள நாங்கள் புலனால் எப்பொழுதும் உன்னைப் போற்றுபவர்களாவோமாக. 3,337

## 25. இந்திரன்

### 321. வாமதேவன்-கௌதமன்

1. மனிதனுடைய நண்பனும், தேவர்களை விரும்புபவனும், இந்திரனுடைய நட்புக்கு அருகனுமான எவன் இன்று அவனுடைய நட்பில் இன்புறுகிறான்? பிழிந்த ஸோமமுள்ள எவன் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியிலே இந்திரனை அவனுடைய மகத்தான எல்லையற்றப் பாலனத்துக்காகத் துதிக்கிறான்?

2. எவன் ஸோமாருகனுன இந்திரனைத் தகுந்த மொழிகளால் வணங்குகிருன்? எவன் அவனைத் துதிக்க விரும்புகிருன்? எவன் அவனுல் அளிக்கப்பட்ட பசுக்களைத் தாங்குகிருன்? எவன் இந்திரனுடைய சங்கத்தை விரும்புகிருன்? எவன் அவனுடைய நட்பையும், சகோதரத்வத்தையும் விரும்புகிருன்? எவன் பாலனத்துக்காகக் கவியான இந்திரனை நாடுகிருன்?

3. எவன் இன்று தேவர்களின் பாலனத்தை வேண்டுகிருன்? எவன் ஆதித்தியர்களையும், அதிதியையும், சோதியையும் போற்றுகிருன்? எவனுடைய பிழிந்த ஸோமத்தில் துதியால் இன்பமாகி, இஷ்டம் போல் அசுவினிகளும், இந்திரனும், அக்கினியும் பானத்தைப் பருகுகிருர்கள்?

4. பாரதனுன அக்கினி, அவனுக்கு - வழிபடுபவனுக்கு சுகத்தைத் தருவானுக. தலைவனும், மானிடனின் நண்பனும், தலைத்தலைவனுமான இந்திரனுக்கு ஸோமத்தைப் பொழிவோம் எனக் கூறுபவனுடைய மனையிலே அக்கினி நீண்ட காலம் சூரியனைக் காண்பானுக.

5. வழிபடுபவன் பலராலும் சிலராலும் துன்பப்படான். அதிதி அவனுக்குப் பரந்த சுகத்தைத் தருவாளாக. நற்செயல்களை நடத்துபவன் இந்திரனுக்குப் பிரியனுகிருன். இந்திரனிடம் மனத்தைச் செலுத்துபவனுக்கு அவன் பிரியனுகிருன். வணக்கமுடன் அணுகுபவனுக்கும் அவன் பிரியனுகிருன். ஸோமத்தையளிப்பவனுக்கும் அவன் பிரியனுகிருன். 3,342

6. பகைவர்களைத் துரிதமாய்த் தாழ்த்துபவனும், வணக்கத்தோடு அணுகத் தகுந்தவனும், வீரனுமான இந்த இந்திரன் ஸோமத்தை யளிப்பவனுக்குத் தனித்தெளிவைத் தருகிருன். பொழியாதவனுக்கு அவன் பந்துவாகான்; நண்பனுகான்; சகோதரனுகான். அவனிடம் செல்வது கடினம். அவன் துதிக்காதவனைத் தண்டிக்கிருன்.



7. பொழிந்த ஸோமத்தைப் பருகும் இந்திரன் ஸோமத்தை யளிக்காத செல்வமுள்ள வணிகனிடம் நட்புடனுகான். அவன், அந்த வணிகனுடைய செல்வத்தைப் பறிக்கிருன். அவன் வறுமையாலாகுங்கால் அழிக்கிருன். அவியையும் ஸோமத்தையுமளிப்பவனுக்குத் தனி நண்பனுகிருன்.

8. உயர்ந்தவர்களும் தாழ்ந்தவர்களும் இந்திரனை அழைக்கிருர்கள். நடுவிலிருப்பவர்களும் இந்திரனை அழைக்கிருர்கள். நடப்பவர்களும், காரியத்தை முடிக்கச் செல்பவர்களும், நிற்பவர்களும், உழைப்பவர்களும் இந்திரனை அழைக்கிருர்கள். மனையிலிருப்பவர்களும், போருக்குச் செல்பவர்களும் இந்திரனை அழைக்கிருர்கள். உணவை விரும்புபவர்களும் இந்திரனை அழைக்கிருர்கள். 3,345

## 26. இந்திரன்

### 322. வாமதேவன்-கௌதமன்

1. நான் மநுவாயிருந்தேன். நான் சூரியனுயிருந்தேன். நான் விப்பிரனுன கட்சிவான் எனப்படும் ரிஷியாகயிருக்கிறேன். நான் அர்ஜுனியின் புதல்வனுன குத்ஸனை வசப்படுத்துகிறேன். நான் கவியான உசனுயிருக்கிறேன்.

2. நான் ஆரியனுக்கு-மநுவுக்கு-புவியைத் தந்தேன். நான் அவிகளை அளிக்கும் மானிடனுக்கு மழையைப் பொழிந்தேன். நான் சப்திக்கும் சலங்களைச் செலுத்தினேன். தேவர்கள் என் மனத்துக்கு-விருப்பத்துக்கு-பணிகிருர்கள்.

3. நான் ஸோமத்தால் மகிழ்ந்து, சம்பரனின் 99 புரங்களை இடித்தேன். நான் திவோதஸனுன அதிதிக்வனைப் பாலித்தபோது அவன் வசிக்க நூறுவது வாசஸ்தானத்தை யளித்தேன்.

பருந்து

4. மருத்துக்களே! எல்லாப் பருந்துகளைக் காட்டிலும் இந்தப் பறவை மிக்கப் புகழுள்ளதாருக. ஏனெனில் இந்த ஸுபர்ணன் சக்கரமில்லாத தேரிலே தேவர்களால் ஏற்கப்பட்ட ஸோமத்தை மநுவுக்கு ஏந்திச் சென்றது.

5. பறவை பாலகர்களைப் பயமுறுத்தி ஸோமத்தை அங்கிருந்து அபகரித்துச் சென்றது. மனோவேகத்தோடு வானின் பரந்த வழியிலே துரிதமாய்ப் பறந்து, இனிய ஸோம ஓஷதியோடு துரிதமாய்ச் சென்றது. அதனால் இவ்வுலகில் பருந்துகள் புகழைப் பெற்றன. 3,350

6. நேராகப் பறக்கும் பருந்து வெகு தூரத்திலிருந்து ஸோமத்தை ஏந்தி இயங்கிற்று. அந்தத் துதியாருகமானதும் மதப்படுத்துவதுமான ஸோமத்தை, பறவை, உத்தம தேவர்களோடு தீரமனத்தோடு மேன்மையான சோதியிலிருந்து எடுத்து வந்தது.

7. பருந்து, ஆயிரம் யக்ஞங்களையும் பதினாயிரம் யக்ஞங்களையும் தரித்து, ஸோமத்தை எடுத்து வந்தது. பல செயல்களை நடத்துபவனும், சர்வக்ஞனுமான இந்திரன் ஸோமத்தின் மதத்திலே கலக்கமடைந்த சத்துருக்களைக் கொன்றான். 3,352

## 27. சியேநன்

### 323. வாமதேவன்-கௌதமன்

1. நான் கருவிலிருக்குங்கால், இந்தத் தேவர்களின் எல்லா சன்மங்களையும் கிரமமாய் அறிந்தேன். நூறு இரும்புக் கோட்டைகள் என்னைப் பாலித்தன. ஆனால் நான் பருந்தைப் போல் வேகமாய் வெளியே வந்தேன்.

2. கரு என் மனோரதத்தை மயக்கவில்லை. நான் கருப்பையில் தோன்றிய துக்கத்தைக் கூரிய வீரத்தன்மையால் விலக்கினேன். அனைத்தையும் பிரேரிப்பவனும், பலவற்றைத் தாங்குபவனுமான நான் அங்கிருந்த சத்துருக்களை அழித்தேன். அங்கு நான் வளர்ந்தவுடன், துன்புறுத்தும் காற்றுக்களைக் கடந்து வந்தேன்.



3. பருந்து சோதியிலிருந்து இறங்குங்கால் எக்களித்து சப்தித்தது. அப்பொழுது ஸோமபாலகர்கள் ஸோமம் எடுத்துச் செல்லப்படுகிறது என்பதை அறிந்தார்கள். பிறகு வில்லியான கிருசானு வில்லிலே நாணை ஏற்றி அதன் மீது சரத்தை எய்தான்.

4. நேராகப் பறக்கும் பருந்து, மகத்தான சோதியிலிருந்து, ஸோமத்தை, இந்திரனுடைய இடத்திலிருந்து புஜ்யுவை எடுத்துச் சென்ற அசுவினிகளைப் போல் எடுத்துச் செல்லுங்கால் சண்டையில் அம்பால் காயமடைந்த பறவையின் நடுவிலிருந்து இறங்கிய சிறகானது விழுந்தது.

இந்திரன்

5. இப்பொழுது மகவானான இந்திரன், அத்வர்யுக்களால் பாலோடும் தயிரோடும் கலக்கப்பட்டு அளிக்கப்படுவதும் வெண்மையான கலசத்திலே இருக்கும் சுத்தமாயும் புட்டி தருவதுமாயுமுள்ள ஸோமான்னத்தை ஏற்றுக்கொள்வானாக. இனிய பானத்தின் மேற்பாகம் பருகுவதற்குரியது. சூரன் தான் மதப்பட பானத்தைப் பருக ஏற்றுக்கொள்வானாக. 3,357

## 28. இந்திரன்

### 324. வாமதேவன்-கௌதமன்

1. ஸோமனே! உன்னை இந்திரனோடு சேர்ப்பித்த உன்னுடைய நட்பால், அவன் சலங்களை மானிடர்களுக்காகப் பெருகத் தோற்றுவித்தான். அவன் அஹியைக் கொன்றான். அவன் ஏழு நதிகளைச் செலுத்தினான். அவன் மூடப்பட்டிருந்த-தடுக்கப்பட்டிருந்த-கனைகளின் கதவுகளைத் திறந்தான்.

2. ஸோமனே! இந்திரன் உன்னுடைய உதவியால் மேலே மகத்தாயும் நிலையாயிருக்கும் வானிலே விளங்கும் சூரியனின் தேர்ச்சக்கரத்தைப் பறித்தான். மகத்தாய் வருத்தப்படுத்துபவனுடைய - சூரியனுடைய - தேரின் எங்கும் செல்வதுமான சக்கரம் பற்றப்பட்டது.

3. ஸோமனே! இந்திரன், போரிலே பகைவர்களைக் கொன்ருன். அக்கினி அவற்றை முற்பகலிலே பற்பப் படுத்தினன். அவன் பல்லாயிரக் கணக்கான எல்லாப் படைகளையும் கட்டமான விபத்தான இடத்திலே தங்கள் வேலையின் நிமித்தஞ் செல்லும் பயணிகளைப் பணத்துக் காகக் கொல்லும் கள்வர்களைப் போல் அழித்தான்.

4. இந்திரனே! நீ இந்த தஸ்யுக்களை எல்லாப் பண்புகளிலிருந்து நீக்கினுய். நீ செயலற்ற சனங்களைத் தாழ்த்தினுய். ஸோமனும் இந்திரனுமான நீங்கள் உங்க ளுடைய பகைவர்களை எதிர்த்து விலக்குங்கள். அவர் களை நாசப்படுத்த எங்கள் வணக்கத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்.

5. இந்திரனே! ஸோமனே! செல்வங்களுள்ள நீங்கள், சத்துருக்களை யழிப்பவர்கள். உங்கள் பலத் தால் மீட்கப்பட்ட நிலத்தையும், மறைக்கப்பட்டிருந்த மகத்தான குதிரை மந்தையையும் பசு மந்தையையும் நீங்கள் மீட்டு வழங்கினீர்கள் என்பது உண்மை. 3,362

## 29. இந்திரன்

### 325. வாமதேவன்-கௌதமன்

1. இந்திரனே! ஏற்கப்பட்ட அவிகளோடு போற் றப்படும் நீ வா. உன்னுடைய குதிரைகளோடு இன்ப மாகி எங்களுடைய பாலனத்துக்காக எங்களுடைய பல யக்ஞங்களுக்கு வா. தலைவனும், சத்தியமென்னும் செல்வமிருப்பவனும், பாக்களால் போற்றப்படுபவனு மான நீ வா.

2. நல்ல குதிரைகள் இருப்பவனும், அச்சமற்ற வனும், ஸோமத்தைப் பிழிபவர்களால் போற்றப்படுபவ னும், வீரர்களான மருத்துக்களோடு இன்புறுபவனும், மனிதர்களுக்கு நலத்தைச் செய்பவனும், அனைத்தையும் அறிபவனுமான இந்திரன் ஸோமங்களை அளிப்பவர் களால் யக்ஞத்துக்கு வருவானுக.



3. வழிபடுபவன், விரும்பத் தகுந்த ஒவ்வொரு இடத்திலும் அவனுக்கு இன்பத்தை யளிக்கவும். துதி யால் அவனை ஊக்கப்படுத்தவும், அவனுடைய செவி களைச் செவியுறச் செய்ய அவற்றைச் செல்வப்படுத்து வானுக. ஸோமரஸத்தால் சொரியப்பட்டவனும் மிக்க வலியனுமான இந்திரன் எங்களுடைய செல்வத்துக்காக நல்ல தீர்த்தங்களை அபயப்படுத்துவானுக.

4. பாலனத்துக்காக இங்ஙனம் துதித்து அழைக்கும் வழிபடுபவனிடம் செல்லும் வச்சிராயுதம் ஏந்தும் இந்திரன் தானுகவே தேர்களின் நுகங்களிலே துரித மாய்ச் செல்லும் நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான குதிரைகளை இணைக்கிருன்.

5. மகவானே! இந்திரனே! உன்னுல் பாலிக்கப் படும் விப்பிரர்களும், துதிப்பவர்களும், வழிபடுபவர்களு மான நாங்கள், எங்கள் துதிக்கத் தகுந்த மிகுந்த உணவையும் புகழுள்ள செல்வத்தையும் வழங்க உன் ஞேடு கலந்து கொள்வோமாக. 3,367

## 30. இந்திரன்

### 326. வாமதேவன்-கௌதமன்

1. இந்திரனே! விருத்திரனைக் கொல்பவனே! உனக்கு உயர்ந்தவன் எவனுமில்லை. உனக்கதிகமாக ஆற்றலுள்ளவனுமில்லை. உனக்கு ஒப்பாக எவனுமில்லை.

2. தேரின் சக்கரங்களைப் போல் இந்த சனங்கள் எல்லாம் உன்னையே தொடர்கிருர்கள். உண்மையாகவே நீ மகான். நீ புகழ்பெற்றவன்.

3. எல்லாத் தேவர்களும் உன்னுடைய பலத்தின் உதவியால் அசுரர்களிடம் போர் புரிந்தார்கள். அதனுல் நீ இரவிலும் பகலிலும் அழித்தாய்.

4. இந்திரனே! நீ அந்தப் போர்களிலே குத்ஸ னுக்காகவும், அவனுடைய நண்பர்களுக்காகவும் சூரிய னுடைய தேரின் சக்கரத்தைத் திருடினுய்.

5. அந்தப் போர்களிலே தேவர்களை எதிர்க்கும் எல்லாப் படைகளோடும் நீ ஒருவனாகவே போர் புரிந்தாய். இந்திரனே! நீ துன்புறுத்துபவர்களைத் துடைத்தாய். 3.372

6. அந்தப் போர்களிலே நீ மானிடனுக்காகச் சூரியனை வருத்தப்படுத்தினாய். உன்னுடைய போர்ச் செயல்களால் ஏதசனைப் பாலித்தாய்.

7. செல்வனே! இந்திரனே! என்ன, நீ மிக்கக் கோபமடையவில்லையா? ஆமாம்; அக்கோபத்தால் நீ வானிலே தாதுவின் மகனான விருத்திரனைக் கொன்றாய்.

8. இந்திரனே! சோதியிலிருந்து தோன்றிய ஸ்திரீ—உஷை-துன்புறுத்த விரும்பும் போது நீ ஆண்மையுள்ள ஆற்றலைப் புலப்படுத்தி அவளைக் கொன்றாய்.

9. இந்திரனே! மகானான நீ, தானே கர்வத்தால் மேன்மை செய்து கொண்ட சோதியின் மகளான உஷையை அரைத்தாய்-அழித்தாய்.

10. பொழிபவன் சகடத்தை உடைத்த போது சிதைந்த வண்டியிலிருந்து பயந்த உஷை இறங்கினாள். 3,377

11. பிறகு அவளுடைய உடைந்த சகடம் விபாசை நதியின் கரையிலே விழுந்தது. அவள் வெகு தூரத்துக்குச் சென்றுவிட்டாள்.

12. பெருகும் ஸிந்து தடைபட்டவுடன், நீ உன் தந்திரத்தால் நதியைப் புவியின் மீது மிக்கப் பரத்தினாய்.

13. நீ சுஷ்ணனின் நகரங்களை உடைத்தபோது, அவனுடைய செல்வத்தை உன் தீரத்தால் எடுத்துச் சென்றாய்.

14. நீ தாஸனும், குலிதரனுடைய மகனுமான சம்பரனைப் பெரிய மலையிலிருந்து கீழே உருட்டிக் கொன்றாய்.



15. நீ தேரின் சக்கரத்தின் பற்களைச் சூழ்ந்துள்ள வட்டங்களைப் போல் தாஸனான வர்ச்சினனைச் சூழ்ந்துள்ள நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான அவனுடைய ஆட்களைக் கொன்றாய். 3,382

16. இந்திரனே! சதக்கிரதுவே! நீ ஒதுக்கப்பட்ட கன்னியின் புதல்வனைத் தோத்திரங்களில் கலந்து கொள்ளச் செய்தாய்.

17. செயல்களைப் பாலிப்பவனும், அறிஞனும், இந்திரனுமான நீ, அபிடேகம் மறுக்கப்பட்ட துர்வசனையும் யதுவையும் துன்பங்களிலிருந்து கடத்தினாய்-சலத்தைக் கண்டு பயந்த துர்வசனையும் யதுவையும் துன்பங்களிலிருந்து கடத்தினாய்.

18. சரயுவின் அக்கரையில் வசித்த இரு ஆரியர்களான அர்ணனையும், சித்திர ரதனையும் கொன்றாய்.

19. விருத்திரனைக் கொல்பவனான நீ, பந்துக்களால் கைவிடப்பட்ட குருடனுக்குக் கண்ணையளித்தாய்-முடவனுக்குக் காலைத் தந்தாய் உன்னால் அளிக்கப்பட்ட இந்த சுகத்துக்கு ஒப்பாக அளிப்பவன் எவனுமில்லை.

20. நீ அளிப்பவனான திவோதாஸனுக்காகப் பகைவரின் கற்களால் கட்டப்பட்ட நூறு நகரங்களை இடித்தாய். 3,387

21. இந்திரன் தபீதிக்காகத் தன் மாயையினாலும் தன் மாய்க்கும் ஆயுதங்களாலும் முப்பதினாயிரம் தாஸர்களைச் சயனப்படுத்தினான்—அழித்தான்.

22. விருத்திரனைக் கொல்பவனும், கோபதியும், இந்தப் பகைவர்களையெல்லாம் அழிப்பவனுமான நீ, அனைவருக்கும் சமமாயிருக்கிறாய்.

23. இந்திரனே! நீ உன்னுடைய ஆற்றலுள்ள ஆண்மையை ஊக்கப்படுத்தினால் அதை இப்பொழுது எவனாலும் தடுக்க இயலாது.

24. பகைவர்களை யழிப்பவனும் தேவனுமான அர்ய மான், உன்னுடைய அரிய செல்வத்தை அளிப்பானாக. பூஷாவும் அளிப்பானாக. பகனும் அளிப்பானாக. பல்லற்ற தேவன் விரும்பிய செல்வத்தை அளிப்பானாக. 3,391

## 31. இந்திரன்

### 327. வாமதேவன்–கௌதமன்

1. எப்பொழுதும் வளர்பவனும், நண்பனும், அற்புதனுமான இந்திரன் எந்த பாலனத்தால்–சாதனத் தால்–எந்த மிக்க மகத்தான செயலால் எங்களிடம் வரு வான்?

2. பகைவரின் நிலையான செல்வங்களைக் குலைக்க எந்த உண்மையான ஸோமத்தின் மதகரமான ரஸம் உன்னை ஊக்கப்படுத்தும்?

3. நண்பர்களும், உன்னைத் துதிப்பவர்களுமான எங்களைப் பாலிக்கும் நீ, நூறு பாலனங்களோடு எங் களிடம் வரவும்.

4. மனிதர்களின் துதிகளால் ஊக்கமடைந்து, உன் அதீனத்திலிருக்கும் எங்களிடம் சுற்றிவரும் சக்கரத் தைப் போல் வரவும்.

5. நீ உன்னுடைய சொந்த இடத்துக்குப் போவது போல் நீ யக்ஞங்களுக்குக் கீழே இறங்குகிறாய். நான் உன்னைச் சூரியனோடு சேர்த்துப் போற்றுகிறேன். 3,396

6. இந்திரனே! உனக்கு நடத்தப்படும் யக்ஞங் களும் கூறப்படும் துதிகளும் முதலில் உனக்கு உரியவை. பிறகு சூரியனிடம் செல்லுகின்றன.

7. செயல்களைப் பாலிக்கும் இந்திரனே! அவர்கள் உன்னை மகவான் எனவும், ஈகையன் எனவும், பிரகாசிப் பவன் எனவும் கூறுகிறார்கள்.

8. உனக்கு ஸோமத்தைப் பொழிபவனுக்கும், உன்னைத் துதிப்பவனுக்கும், நீ மிகுந்த செல்வத்தைத் துரிதமாய்த் தருகிறாய்.



9. உன்னுடைய நூற்றுக் கணக்கான செல்வங்கள் பகைவர்களால் குறைக்கப் படாமலிருக்கின்றன. உன் னுடைய ஆற்றல்களும் பகைவர்களால் தடுக்கப்படாம லிருக்கின்றன.

10. உன்னுடைய நூறு பாலனங்கள், ஆயிரம் பாலனங்கள் எங்களைப் பாலிக்க. எங்களைப் பாலிக்க உன்னுடைய விருப்பங்கள் எல்லாம் எழுக. 3,401

11. இந்திரனே! இப்பொழுது உன்னுடைய நட்புக் கும், எங்களுடைய க்ஷேமத்துக்கும், மகத்தாயும், மேன்மை செல்வத்துக்காகவும் எங்களை ஆய்ந்தெடுக் கவும்.

12. இந்திரனே! தினந்தோறும் மகத்தான செல்வங் களை எங்களுக்களிக்கவும். எல்லாப் பாலனங்களாலும் எங்களைப் பாலிக்கவும்.

13. இந்திரனே! நீ புதிய பாலனங்களோடு பசுக்கள் நிறைந்திருக்கும் தொழுவங்களை வீரனைப் போல் எங் களுக்குத் திறக்கவும்.

14. இந்திரனே! எங்களுடைய பகைவர்களை விலக்குவதும், புகழுள்ளதும், தவறுததுமான தேர் எங் களுக்குப் பசுக்களையும் குதிரைகளையும் ஜயித்துக் கொண்டு எங்கும் செல்க.

15. சூரியனே! எங்களுடைய புகழைத் தேவர் களின் நடுவே, நீ மிக்க மழை பொழியும் சோதியை எல்லா உலகங்களுக்கும் மேலாக வைத்தது போல் மேம்படுத்தவும். 3,406

## 32. இந்திரன்

### 328. வாமதேவன்–கௌதமன்

1. இந்திரனே! விருத்திரனை அழிப்பவனான நீ, எங் களிடம் துரிதமாய் வா. மகானான நீ மகத்தான பாலனங் களோடு வா.

2. அற்புதனான இந்திரனே! சுற்றித் திரிபவனான நீ, எங்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறாய். அற்புதச் செயல்களிலே ஈடுபட்டவர்களைப் பாலிக்க நீ அற்புதச் செயலை நடத்துகிறாய்.

3. உன்னோடு சேர்ந்துள்ள தாழ்ந்த நண்பர்களான எங்களோடு சேர்ந்து நீ எதிர்க்கும் உக்கிரப் பகைவனை உன் பலத்தால் அழிக்கிறாய்.

4. இந்திரனே! நாங்கள் உன்னோடு சேர்ந்திருக்கிறோம். நாங்கள் உன்னை ஊக்கமாய்ப் போற்றுகிறோம். நீ எங்கள் அனைவரையும் பாலிக்கவும்.

5. வச்சிரத்தை ஏந்தும் நீ, அற்புதமான, குற்றமற்ற, தடைபடாத பாலனங்களோடு எங்களிடம் வா. 3,411

6. இந்திரனே! நாங்கள் மிகுந்த உணவைப் பெற உன்னோடு சேர்ந்து பசுக்களுள்ள உன்னோடு நண்பர்களாயிருப்போமாக.

7. இந்திரனே! பசுக்களோடு சேர்ந்துள்ள உணவுக்கு நீ ஒருவனே தலைவன். ஆதலால் நீ எங்களுக்கு மிகுந்த உணவைத் தருவாயாக.

8. துதியாருகனான இந்திரனே! நீ போற்றப்பட்டு, பாடுபவர்களுக்குச் செல்வத்தையளிக்க விரும்புங்கால் உன் எண்ணத்தை எவனும் மாற்றான்.

9. இந்திரனே! கோதமர்கள், மிகுந்த உணவைப் பெறுவதற்கும், நீ செல்வத்தையளிப்பதற்கும் உன்னைப் போற்றுகிறார்கள்.

10. நீ ஸோமத்தால் மதமடைந்து, எந்த ஆற்றலால் தாஸர்களை எதிர்த்துச் சென்று அவர்களுடைய நகரங்களை அழித்தாயோ அந்த வீரத்தன்மையுள்ள ஆற்றல்களை-செயல்களை-நாங்கள் அறிவிக்கிறோம். 3,416

11. இந்திரனே! துதியாருகனான நீ ஸோமரஸங்கள் பொழியப்படுங்கால், நீ நடத்திய வீரச் செயல்களை அறிஞர்கள் போற்றுகிறார்கள்.



12. இந்திரனே! தோத்திரங்களை அளிக்கும் கோதமர்கள் உன்னை மேம்படுத்துகிறார்கள். நீ அவர்களுக்கு உணவையும் வமிசத்தையுமளிக்கவும்.

13. இந்திரனே! நீ வழிபடுபவர்களுக்கெல்லாம் பொதுச் செல்வனாயிருந்தாலும், எங்களுக்கே உரியவன் என எண்ணி நாங்கள் உன்னை அழைக்கிறோம்.

14. மனைகளையளிப்பவனே! நீ எங்களோடிருக்கவும். ஸோமத்தைப் பருகுபவனே! நீ ஸோமான்னத்தால் இன்பமாகவும்.

15. இந்திரனே! உன்னை விரும்பும் எங்களுடைய ஸ்தோமம், உன்னை எங்களுக்கு அளிக்க, எங்களிடம் தோன்ற, நீ உன்னுடைய குதிரைகளை எங்களிடம் செலுத்தவும். 3,421

16. இந்திரனே! எங்களுடைய புரோடாசத்தைப் புசிக்கவும். வனிதையால் இன்பமாகும் காமுகனைப் போல் எங்கள் துதிகளால் இன்பமாகவும்.

17. இந்திரனே! நாங்கள், உன்னிடம் பழக்கப்பட்டவையும், துரிதமாய் ஓடுபவையுமான ஆயிரங் குதிரைகளையும், ஸோமரஸம் நிறைந்த நூறு கலசங்களையும் வேண்டுகிறோம்.

18. நாங்கள் உன்னிடமிருந்து எங்களருகிலாக நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான பசுக்களை வேண்டுகிறோம். உன்னிடமிருந்து செல்வங்கள் எங்களிடம் வருக.

19. இந்திரனே! நாங்கள் உன்னிடமிருந்து பத்துத் தங்கக் கலசங்களைப் பெறுவோமாக. விருத்திரனைக் கொல்லும் நீ, மிக்கத் தாராளமாயளிப்பவன்.

20. இந்திரனே! ஈகைமனமுள்ள நீ, எங்களுக்குத் தாராளமாய் அளிக்கவும். நீ அற்பமாயளிக்காதே. அதிகமாய் அளிக்க ஏந்தி வரவும். நீ அதிகமாய் அளிக்கவே விரும்புகிறாய். 3,426

21. நீ பலரின் நடுவே தாராளமாய் அளிப்பவன் எனப் புகழப்படுகிருய். விருத்திரனைக் கொல்பவனே! சூரனே! செல்வத்திலே எங்களுக்குப் பங்களிக்கவும்.

22. அறிஞுன இந்திரனே! நான் உன்னுடைய பழுப்புக் குதிரைகளைப் போற்றுகிறேன். வழிபடுபவர்களிடம் பராமுகமாயில்லாதவனும் பசுக்களையளிப்பவனுமான நீ, உன்னுடைய அந்த இரண்டு குதிரைகளால் எங்களுடைய பசுக்களைப் பயப்படுத்தாதே.

இந்திரனுடைய குதிரைகள்

23. உன்னுடைய இரு பழுப்புக் குதிரைகள் யக்ஞங்களிலே, புதியதாயும் அற்பமாயும் அமைக்கப்பட்ட அரங்கத்திலே இரு பாவைகளைப்போல்-பதுமைகளை, பொம்மைகளைப்போல்-பிரகாசிக்கின்றன.

24. உன்னுடைய இன்னலற்ற இரு பழுப்புக் குதிரைகள் யக்ஞங்களிலே நான் அவற்றினிடம் காளைகளால் இழுக்கப்பட்ட, காளைகளால் இழுக்கப்படாத தேரிலோ அல்லது நடந்து சென்ருலும் அவை எங்களுக்குத் திருப்தியை யளிக்க. 3,430

## 33. ரிபுக்கள்

### 329. வாமதேவன்--கௌதமன்

1. நான் என்னுடைய தோத்திரத்தை ரிபுக்களிடம் தூதனைப்போல் செலுத்துகிறேன். நான் அவர்களிடம், ஸோமரஸத்தை நீர்ப்படுத்த வெண்மையான பாலைத் தரும் பாற்பசுவைக் கேட்கிறேன். காற்றைப் போல் துரிதமாயிருப்பவர்களும், நல்ல செயல்களை நடத்துபவர்களுமான அவர்கள் வானெங்கும் கடத்திச் செல்லும் குதிரைகளால் பரவுகிருர்கள்.

2. ரிபுக்கள் பெற்ருேர்களுக்கு அன்போடும் அற்புதங்களோடும் உரிய சேவையைச் செய்தவுடன் தேவர்களின் நட்பை-தேவத்தன்மையை-பெற்ருர்கள். அறிஞர்கள் மிக்க மனமுள்ளவனுக்குப் புட்டியை ஏந்துகிருர்கள்.



3. இரு தேய்ந்த கம்பங்களைப் போல் மூப்பாலும், நோயாலும் படுத்திருந்த பெற்ருேர்களை மீண்டும் இளமைப்படுத்தியவுடன் இந்திரனேடு சேர்ந்து ஸோமத்தைப் பருகியவர்களான வாஜனும், விபவனும், ரிபுவும் எங்களுடைய யக்ஞத்தைப் பாலிப்பார்களாக.

4. ரிபுக்கள் ஒரு வருடம் பசுவைப் பாலித்தார்கள். அதற்கு இறைச்சியை யளித்து ஒரு வருடத்தில் அதை ரிபுக்கள் உருப்படுத்தினுர்கள். ஒரு வருடம் அதை எழில் படுத்தினுர்கள். இச்செயல்களால் அவர்கள் அமிருதத் தன்மையை யடைந்தார்கள்.

5. மூத்தவன் சொன்ஞன்: நாம் ஒரு வட்டிலை இரண்டாகச் செய்வோம். இளையவன் சொன்ஞன்: மூன்ருகச் செய்வோம். கனிட்டன் சொன்ஞன்: நாம் நான்கு வட்டில்களாகச் செய்வோம். ரிபுக்களே! துவஷ்டா உங்கள் மொழிகளைப் போற்றினுன். 3,435

6. நரர்களான ரிபுக்கள் சத்தியத்தைப் பேசினுர்கள். அங்ஙனமே அவர்கள் செய்தார்கள். ரிபுக்கள் தங்களுடைய இந்த ஸ்வதாவை-தன்னயத்தை-அநுசரித்தார்கள். ரிபுக்கள் ஸ்வதாவான அமிருதத்தைப் பகிர்ந்து கொண்டார்கள். துவஷ்டா பகலைப்போல் பிரகாசிக்கும் நான்கு வட்டில்களைப் பார்த்து திருப்தியானுன்-அங்கீகரித்தான்.

7. ரிபுக்கள்-ரசிமிகள்-மறைக்க முடியாத சூரியனின் விருந்தினர்களாகப் பன்னிரெண்டு தினங்கள் சயனித்திருக்குங்கால் அவர்கள் நிலங்களை வளப்படுத்தினுர்கள். நதிகளைப் பிரேரித்தார்கள். பாழான நிலத்திலிருந்து ஓஷதிகள் தோன்றின. தாழ்ந்த இடங்களிலும் சலங்கள் பாய்ந்தன.

8 வீரர்களை ஏந்தும் துரிதத் தேரைக் கற்பித்தவர்களும், விசுவத்தைச் செலுத்துவதும், விசுவரூபமுள்ளதுமான பசுவைச் செய்தவர்களும், உணவைத் தருபவர்

களும், பெரிய செயல்களை நடத்துபவர்களும், திறக்கையுள்ளவர்களுமான அந்த ரிபுக்கள் எங்களுக்குச் செல்வங்களைக் கற்பிப்பார்களாக.

9. மனத்தாலும் செயலாலும் துலங்குபவர்களான தேவர்கள் ரிபுக்களுடைய செயலால் இன்பமானுர்கள். வாஜன்-கனிஷ்டன்-தேவர்களுடைய சிற்பியானுன். ரிபுக்ஷன்-மூத்தவன்-இந்திரனுடைய சிற்பியானுன். விபவன்-நடுவன்-வருணனுடைய சிற்பியானுன்.

10. மதிமொழியால் இந்திரனுடைய குதிரைகளை இன்புறுத்தியவர்களும், இரு பணிவான குதிரைகளைக் கற்பித்தவர்களுமான அந்த ரிபுக்கள் நண்பனுக்குச் செல்வத்தை விரும்புபவர்களைப் போல் எங்களுக்குத் திரண்ட செல்வங்களை அளிப்பார்களாக. 3,440

11. தேவர்கள் தனத்தின் மூன்ருவது யாகத்தில் உங்களுக்குப் பானத்தையும் அதன் மதத்தையுமளித்தார்கள். அவர்கள் நட்புக்காக அளிக்கவில்லை. தபத்தால் களைப்படைந்தீர்கள் என்பதற்காக அவர்கள் அளித்தார்கள். மகான்களாயுள்ள ரிபுக்களே! நீங்கள் இந்த தினத்தின் மூன்ருவது வேள்வியிலே எங்களுக்குச் செல்வத்தையளியுங்கள். 3,441

## 34. ரிபுக்கள்

### 330. வாமதேவன்-கௌதமன்

1. ரிபுவும், விபவனும், வாஜனும், இந்திரனும் செல்வங்களை யளிக்க எங்களுடைய இந்த யக்ஞத்துக்கு வருவார்களாக. ஏனெனில், தேவியான திஷணை உங்களுக்காகப் பானத்தை வைத்திருக்கிருள். மதப்படும் பானங்கள் உங்களிடம் வருகின்றன.

2. உணவோடு பிரகாசிப்பவர்களும் உங்களுடைய தேவத்தன்மையுள்ள பிறவியை அறியும் ரிபுக்களான நீங்கள், ருதுக்களோடு சேர்ந்து இன்புறுங்கள். மதமளிக்கும் பானங்களும் தோத்திரமும் உங்களிடம் வருகின்றன. எங்களுக்கு உத்தம வீரர்களோடு செல்வத்தையளியுங்கள்.



3. ரிபுக்களே! உங்களுக்காக இந்த யக்ஞம் நடத்தப்பட்டது. மிக்கப் பிரகாசமாயிருக்கும் நீங்கள் மனிதர்களைப் போல் பெற்றுக்கொண்டீர்கள். போற்றும் ஸோமங்களும் உங்கள் முன்னே வைக்கப்பட்டன. வாஜர்களான-ரிபுக்களான-நீங்கள் எல்லாம் முதன்மையாகப் போற்றத் தகுந்தவர்களாயிருக்கிறீர்கள்.

4. தலைவர்களே! அளிப்பவனும் யக்ஞத்தை நடத்துபவனுமான மானிடனுக்கு அளிப்பதற்குரிய செல்வத்தை யளியுங்கள். வாஜர்களே! ரிபுக்களே! பருகுங்கள். நான் இதை-தினத்தின் மூன்ருவது யக்ஞத்தை-உங்களை மதப்படுத்த அளிக்கிறேன்.

5. வாஜர்களே! ரிபுக்ஷணர்களே! நரர்களே! மகத்தான செல்வத்தைப் போற்றிக்கொண்டு எங்களிடம் வாருங்கள். மாலையிலே இந்த ஸோம பானங்கள் தொழுவங்களுக்குச் செல்லும் புதிதாய் ஈன்ற பசுக்களைப் போல், உங்களிடம் வருகின்றன. 3,446

6. பலத்தின் புதல்வர்களே! வணக்கத்தோடு அழைக்கப்படும் இந்த யக்ஞத்துக்கு வாருங்கள். இரத்தினங்களை அளிப்பவர்களும், அறிஞர்களுமான நீங்கள், இந்திரனேடு இசைந்திருப்பதால் இன்புறுபவர்களுமான நீங்கள், இந்த இனிய பானத்தைப் பருகுங்கள்.

7. இந்திரனே! நீ வருணனேடு ஸமத்வ அன்புடன் ஸோமத்தைப் பருகவும். துதியாருகனுன நீ, ஸமத்வ அன்புடன் மருத்துக்களோடு ஸோமத்தைப் பருகவும். ஸமத்வ அன்புடன் முதற் பருகுபவர்களோடும் ருதுக்களின் யக்ஞங்களிலே பருகுபவர்களோடும் பருகவும். ஸமத்வ அன்புடன் தேவ பத்தினிகளோடும் செல்வங்களை யளிக்கும் ரிபுக்களோடும் பருகவும்.

8. ரிபுக்களே! நீங்கள் ஆதித்தியர்களோடு இணக்கமாகி இன்புறுங்கள். ரிபுக்களே! பர்வதங்களோடு பிணைந்து இன்புறுங்கள். தேவர்களுக்கு இதமான ஸவிதாவோடு அன்புடன் கலந்து இன்புறுங்கள். செல்வத்தை அளிக்கும் நதிகளோடு அன்புடன் இசைந்து இன்புறுங்கள்.

9. ரிபுக்களான நீங்கள், உங்கள் பாலனத்தால் அசுவினிகளைத் திருப்தி செய்தீர்கள். பெற்றோர்களை இளமைப்படுத்தினீர்கள். இறந்த பசுவை உயிர்ப்பித்தீர்கள். குதிரைகளைக் கற்பித்தீர்கள். தேவர்களுக்குக் கவசங்களைச் செய்தீர்கள். சோதியையும் புவியையும் தனிப்படுத்தினீர்கள். எங்கும் பரவும் தலைவர்களான நீங்கள் நல்ல பயன்களைத் தோற்றுவிக்கும் செயல்களை நடத்தினீர்கள்.

10. பசுவும், உணவும், சந்தானமும், மனைகளும், மிக்கப் புட்டியுமுள்ள செல்வத்தை யடைந்திருப்பவர்களும், ஸோமத்தை முதலில் பருகுபவர்களுமான நீங்கள், மதப்படுங்கால் உங்கள் தானத்தைப் போற்றுபவர்களுக்கு அளிக்கப்படும் செல்வத்தை எங்களுக்களியுங்கள்.

11. ரிபுக்களே! நீங்கள் தூரத்திலே விலகாதீர்கள். நாங்கள் உங்கள் தாகத்தைத் தணிக்காமல் உங்களை விடோம். இந்த யக்ஞத்திலே நிந்தையற்றிருங்கள். தேவர்களான நீங்கள், எங்களுக்குச் செல்வத்தை யளிக்க இந்திரனோடும், மருத்துக்களோடும், துலங்கும் வேறு தேவர்களோடும் சேர்ந்து இன்புறுங்கள். 3,452

## 35. ரிபுக்கள்

### 331. வாமதேவன்–கௌதமன்

1. பலத்தின் புதல்வர்களே! சௌதன்வர்களே! ரிபுக்களே! இங்கு வாருங்கள். நீங்கள் விலகாமலிருங்கள். இந்த யக்ஞத்திலே மதமளிக்கும் ரஸங்கள் அரிய செல்வத்தைத் தரும் இந்திரனை அனுசரித்து உங்களிடம் வருக.



2. ரிபுக்களின் அரிய செல்வதானம் இங்கு என்னிடம் வருக. அவர்கள் தங்களுடைய உத்தம சிற்பச் செயலால் ஒரு வட்டிலை நான்காகச் செய்தார்கள். அதனால் அவர்களுக்குப் பிழியப்பட்ட ஸோமபானம் தோன்றுகிறது.

3. நீங்கள் ஒரு வட்டிலை நான்காய்ச் செய்தீர்கள். நீங்கள் அக்கினியினிடஞ் சென்று, நண்பனே! ஸோமத்தைப்பருக சம்மதத்தை அளிக்கவும் எனக் கூறினீர்கள். ஆதலால் வாஜர்களே! நீங்கள் அமுத வழியில் சென்றீர்கள். சிற்பக்கைகளுள்ள ரிபுக்களாம் நீங்கள் தேவர்களின் திருக்கூட்டத்தோடு சேர்ந்தீர்கள்.

4 நீங்கள் உங்களது சிற்பச் செயலால் நான்காகச் செய்த அந்த வட்டில் எத்தன்மையுடனிருந்தது? அறிஞர்களே! நீங்கள் அவர்களை மதப்படுத்த ஸோமத்தைப் பொழியுங்கள். ரிபுக்களே! இனிய ஸோமரஸத்தைப் பருகுங்கள்.

5. உங்களுடைய அற்புதச் செயல்களால் நீங்கள் உங்கள் பெற்றோர்களை இளமைப் படுத்தினீர்கள். உங்களுடைய செயல்களால் கலத்தைத் தேவர்களுடைய பானத்துக்குத் தகுதியாகச் செய்தீர்கள். உணவுச் செல்வமுள்ள ரிபுக்களே! நீங்கள் உங்கள் செயல்களால் இந்திரனை ஏந்தும் குதிரைகளை வில்லிலிருந்து பாயும் சரத்தைப் போல் துரிதமாகச் செய்தீர்கள். 3,457

6. பொழிபவர்களும், உணவை வழங்குபவர்களுமான ரிபுக்களாம் நீங்கள், ஸோமத்தால் மதமடைந்து மாலையிலே தீவிர ஸோமத்தை உங்களுக்கு இன்பத்தை அளிக்கப் பொழிபவனுக்கு நீங்கள் பல புதல்வர்களுள்ள செல்வத்தைக் கற்பியுங்கள்.

7. இந்திரனே! குதிரைகளுள்ளவனே! காலையிலே அளிக்கப்படும் ஸோமத்தைப் பருகவும். நடுப்பகலில் அளிக்கப்படும் ஸோமம் உனக்குரியது. இந்திரனே! நீ உத்தமச் செயல்களுக்காக நண்பர்களாகச் செய்து

கொண்டவர்களும், உத்தம தானமளிப்பவர்களுமான ரிபுக்களோடு சேர்ந்து மாலையிலே பருகவும்.

8. பலத்தின் புதல்வர்களும், உங்கள் உத்தமச் செயல்களால் தேவர்களால் மாறியவர்களும், பருந்து களைப் போல் வானில் உயரமாய்ப் பறப்பவர்களுமான நீங்கள், எங்களுக்குச் செல்வங்களை அளியுங்கள். ஸுதன்வப் புதல்வர்களே! நீங்கள் அமுதர்களானீர்கள்.

9. சிற்பக் கைகளுள்ள நீங்கள் நல்ல செயல்களை நடத்த விரும்பி செல்வத்தைத் தரும் மூன்ருவது யக்ஞத்தை ஸ்தாபித்தீர்கள். ரிபுக்களே! களிப்படைந்த புலன்களோடு இந்த ஸோமத்தைப் பருகுங்கள். 3,461

## 36. ரிபுக்கள்

### 332. வாமதேவன்–கௌதமன்

1. ரிபுக்களே! உங்களால் அசுவினிகளுக்குச் செய்யப்பட்ட, போற்றத்தக்க, மூன்று சக்கரங்கள் உள்ள தேர், குதிரைகள் இல்லாமலும், வாய் வடங்கள் இல்லாமலும் வானெங்கும் செல்லுகின்றன. ரிபுக்களே! உங்களுடைய எந்தச் செயலால் சோதியையும் புவியையும் நீங்கள் புட்டிப்படுத்துகிறீர்களோ அந்த மகத்தான செயல் உங்களுடைய தேவத்தன்மையைப் புலப்படுத்துகிறது.

2. வாஜர்களே! ரிபுக்களே! மிக்க அறிஞர்களான நீங்கள், மனத்தாலும் தியானத்தாலும், குடிலமற்றதும், நன்ருகச் செல்வதுமான தேரைக் கற்பித்தீர்கள். ஆதலால் நாங்கள் உங்களை இந்த ஸோமத்தைப் பருக அழைக்கிரேம்.

3. வாஜர்களே! ரிபுக்களே! விபவர்களே! நீங்கள் உங்களுடைய மூப்படைந்து தேய்ந்திருந்த பெற்ரேர்களை மீண்டும் இளமைப்படுத்தி, அவர்கள் விருப்பம் போல் எங்கும் செல்லும் ஆற்றலைத் தந்தீர்கள். அதனுல் உங்களுடைய மேன்மை தேவர்களிடம் புகழப்பட்டது.



4. நீங்கள் ஒரு கலத்தை நான்காகச் செய்தீர்கள். நீங்கள் உங்களுடைய அற்புதச் செயல்களால், பசுவைப் புதிய சர்மத்தால் உடுத்தினீர்கள். ஆதலால் நீங்கள் தேவர்களின் நடுவே அமுதத்தன்மையையடைந்தீர்கள். வாஜர்களே! ரிபுக்களே! உங்களுடைய அச்செயல்கள் ஊக்கமாய்ப் போற்றத் தகுந்தவை.

5. உத்தமமாயிருப்பதும், மிக்க உணவை விளைவிப்பதுமான செல்வம், எனக்கு ரிபுக்களிடமிருந்து தோன்றுக. வாஜர்களோடு சேர்ந்து புகழுள்ளவர்களான தலைவர்களால் தோற்றுவிக்கப்பட்டதும், விபவனுல் கற்பிக்கப்பட்டதும், யக்ஞங்களில் போற்றத் தகுந்ததும், தேவர்களான உங்களால் பாலிக்கப்படுவதுமான, உங்களால் கற்பிக்கப்பட்ட தேர், அனைவராலும் பார்க்கத் தகுந்தது. 3,466

6. வாஜனுலும், விபவனுலும், ரிபுக்களாலும் பாலிக்கப்படுபவன், வலியனுகி போரிலே வல்லவனுயிருக்கிருன். அவன் போற்றுவதற்குரிய ரிஷியாயிருக்கிருன். அவன் வீரனுகிப் பகைவர்களை யழிக்கிருன். போர்களிலே வெல்லப்படாமலிருக்கிருன். அவனிடம் செல்வச் செழிப்பு இருக்கிறது. அவனிடம் உத்தம வீரத்தன்மையுமுண்டு.

7. உங்களால் மேன்மையாயும் அழகாயுமுள்ள வடிவம் ஏந்தப்படுகிறது. இது எங்களுடைய ஸ்தோமம். வாஜர்களே! ரிபுக்களே! இதை விரும்புங்கள். நீங்கள் கவிகள், தீரர்கள், பேரறிஞர்கள். நாங்கள் இந்தத் துதியால் உங்களை அழைக்கிரேம், புலப்படுத்துகிரேம்.

8. அறிஞர்களான நீங்கள், எங்களுடைய தோத்திரங்களுக்கு ஈடாக மானிடர்களுக்கு நலமாயிருக்கும் எல்லா போகங்களையும் அளியுங்கள். எங்களுக்குப் பிரகாசிப்பவையும், பலப்படுத்துபவையும், ஜயிப்பவை

யும், மிக்க மேன்மையுள்ளவையுமான செல்வத்தையும் உணவையும் கற்பியுங்கள்.

9. எங்கள் துதியால் இங்கு இன்பமாகி எங்களுக்குப் பிரஜையையும், செல்வத்தையும் பல வீரப்புதல்வர்களோடு புகழையும் கற்பியுங்கள். ரிபுக்களே! அன்னியர்களுக்கு அதிகமாயிருக்கும் விரும்பத்தகுந்த உணவை எங்களுக்களியுங்கள். 8,470.

## 37. ரிபுக்கள்

### 333. வாமதேவன்-கௌதமன்

1. வாஜர்களே! ரிபுக்களே! தேவர்களே! தேவர்கள் சென்ற வழியால் எங்களுடைய யக்ஞத்துக்கு வாருங்கள். குதூகலமான ரிபுக்கள் நாட்களை நல்ல தினங்களாக நிலைப்படுத்த மநுவம்சத்தில் வந்த சனங்களின் நடுவே யக்ஞத்தைத் தாங்கினார்கள்.

2. இந்த யக்ஞங்கள் உங்கள் மனத்துக்கும் இருதயத்துக்கும் ஏற்றவையாகுக. நெய்யோடு கலந்துள்ள போதுமான ஸோமங்கள் உங்களுக்குப் பாய்க. பூரண பானங்கள் உங்களுக்கு இயங்குகின்றன. பருகப்பட்டவுடன் அவை உங்களைப் புகழுக்குரிய செயல்களுக்கு ஊக்கப்படுத்துக.

3. மூன்றாவது யக்ஞத்திலே தேவர்களுக்கு இதமாயளிக்கப்படும் ஸோமம் உங்களைத் தாங்குவதால், வாஜர்களே! ரிபுக்ஷணர்களே! பிரகாசிக்கும் தேவர்களோடிருக்கும் உங்களுக்குப் பிரசைகளின் நடுவே மநுவைப் போல் நான் ஸோமத்தையளிக்கிறேன்.

4. வாஜினர்களே! உங்களுடைய தாடைகள் இரும்பாலானவை. உங்களிடம் செல்வங்களிருக்கின்றன. உங்களிடம் பிரகாசிக்கும் தேரும், பருமனுள்ள குதிரைகளுமிருக்கின்றன. இந்திரனின் புதல்வர்களே! பலத்தின் பேரர்களே! இந்தக் கடையக்ஞம் உங்கள் மதத்துக்காகத் தோன்றுகிறது.



5. ரிபுக்ஷணர்களே! நாங்கள் மிக்கப் பிரகாசிக்கும் செல்வத்துக்காக, போரிலே மிக்கப் பலமுள்ளவர்களும், பரஸ்பரம் ஐக்கியத்தோடிருப்பவர்களும், இந்திரனோடிருப்பவர்களும், எப்பொழுதும் உதாரத்தன்மையுள்ளவர்களும், குதிரைகளோடிருப்பவர்களுமான உங்களை அழைக்கிறோம். 8,475

6. ரிபுக்களும் இந்திரனுமான உங்களால் பாலிக்கப்படும் மனிதன் யக்ஞத்திலே தருமச் சிந்தனைகளாலும், செயல்களாலும், அசுவங்களாலும் வெற்றியுடனுவானாகுக.

7. வாஜர்களே! ரிபுக்களே! எங்களுக்கு யக்ஞ வழிகளைப் புலப்படுத்துங்கள். அறிஞர்களே! நாங்கள் எல்லாத் திசைகளிலும் முன்னேற நீங்கள் போற்றப்படுகிறீர்கள்.

8. வாஜர்களே! ரிபுக்களே! இந்திரனே! நாஸத்தியர்களே! மனிதர்களைச் செல்வப்படுத்த, நீங்கள் குதிரைகளோடுள்ள மிகுந்த செல்வத்தைக் கற்பியுங்கள். 8,478

## 38. ததிக்கிரான்

### 334. வாமதேவன்-கௌதமன்

#### சோதியும் புவியும்

1. சோதி புவிகளே! திரஸதஸ்யுவினால் பூருக்களுக்கு அளிக்கப்பட்ட பழைய செல்வங்கள் உங்களிடமிருந்து வந்தவை. தஸ்யுக்களைக் கொல்ல நீங்கள் குதிரையையும், புதல்வனையும், உக்கிரமாயும் ஜயிப்பதாயுமுள்ள ஆயுதத்தையும் தந்தீர்கள்.

#### ததிக்கிரான்

2. நீங்கள் பல பகைவர்களை அழிப்பவனும், எல்லா சனங்களைப் பாலிப்பவனும், நேராகச் செல்பவனும், இனிய நடையுள்ளவனும், பிரகாசிப்பவனும், துரிதனும், வீரத் தலைவனைப் போல் எதிரிகளைத் துளைப்பவனும், வலியனுமான ததிக்கிரானைத் தந்தீர்கள்.

3. இறக்கத்திலே விழும் சலங்களைப் போல் எங்கும் பாய்பவனும், போருக்கு ஊக்கமாகும் வீரனைப் போல் கால்களோடு எழுபவனும், தேரைச் செலுத்துபவனும், காற்றின் வேகத்தைப் போல் செல்பவனுமான அவனை எல்லா சனங்களும் இன்பத்துடன் போற்றுகிறார்கள்.

4. அவன் போர்களிலே திரண்ட படையை எதிர்த்து ஆவேசத்தோடு பாய்ந்து எல்லாத் திசைகளிலும் செல்லுகிறான். அவனுடைய ஆற்றல் புலனாகிறது. அவன் அறிவதற்குரியதை அறிந்து மானிடனின் பகைவனை ஒதுக்குகிறான்.

5. மனிதர்கள் அவனைப் போர்களிலே, உடையைத் திருடிச் செல்லும் கள்வனைத் தொடர்ந்து செல்பவர்களைப் போலும், இரைக்குப் பாயும் பசித்த பருந்தைப் போலும் ஊக்கத்தோடழைக்கிறார்கள். அவர்கள் உணவையும் பசுக்களின் மந்தையையும் அடைய அவனை அழைக்கிறார்கள். 3,483

6. அவன் போர்களிலே முதன்மையாகத் தோன்றி தேர்ப்பந்திகளோடு எல்லாத் திசைகளிலும் பாய்கிறான். வாய்வடத்தைக் கடித்துப் புழுதியை எழுப்புபவனும், மாலை அலங்கரிக்கப்பட்டவனும், மனிதனின் நண்பனுமுள்ள சிறந்த குதிரையைப் போல் அவன் பாய்கிறான்.

7. துரிதனான அவன் குதிரைப் போரிலே ஜயிக்கிறான். உணவை யளிக்கிறான். தன் அங்கங்களால் பணிவிடை செய்கிறான். துரிதமாய்ச் செல்லும் எதிர்ப் படையின் மீது வேகமாய்ப் பாய்கிறான். நேராக முன்னேறுகிறான். புழுதியை உதைக்கிறான். தன் புருவங்களின் மேலே புழுதியை எழுப்புகிறான்.

8. எதிரியழிக்கும் குதிரையின் பகைவர்கள், சோதியின் கர்ச்சனையைப் போலிருக்கும் அவனுடைய முழக்கத்திலே கலங்குகிறார்கள். அவன் ஆயிரம் எதிர்ப் படைகளோடு சண்டை செய்யுங்கால் அவனுடைய போராட்டம்



பயங்கரமாயிருக்கிறது. அவனை எவனாலும் தடுக்க இயலாது.

9. மனிதர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனான துரித குதிரையின் ஜயிக்கும் வேகத்தை சனங்கள் போற்றுகிறார்கள். அவர்கள் போரிலே அவனைத் தொடர்ந்து சென்று, 'ததிக்கிரான் தன் ஆயிரம் ஆட்களோடு பகைவனை எதிர்த்துப் பாய்கிறான்' எனக் கூறினார்கள்.

10. ததிக்கிரான் தன் திறத்தால் ஐந்து சனங்களை -இனங்களை-சோதியால் சலங்களைப் பரத்தும் சூரியனைப் போல் பரத்துகிறான். நூறுகளையும். ஆயிரங்களையுமளிக்கும் அவன், இனிய ஈடுகளோடு இந்தத் துதிகளை இணைப்பானாக. 3,488

## 39. ததிக்கிரான்

### 335. வாமதேவன்–கௌதமன்

1. நாங்கள் துரிதனான ததிக்கிராவனைப் போற்றுகிறோம். சோதி புவிகளிலிருந்து அவனுக்குத் தீனியைத் தூவுகிறோம் – தருகிறோம். இருள் நீக்கும் உஷைகள் எனக்கு எல்லா நன்மைகளையும் பாலிப்பார்களாக. என்னை எல்லாப் புன்மைகளுக்கப்பால் கடத்திச் செல்வார்களாக.

2. செயல்களைப் பூர்த்தி செய்யும் நான், மித்திரா வருணர்களால் பலருடைய நன்மைக்காக அளிக்கப்பட்டவனும், துன்பத்திலிருந்து கடத்துபவனும், அக்கினியைப் போல் துலங்குபவனும், உதாரத்தன்மையுள்ளவனும், பலரால் போற்றப்படுபவனும், பொழிபவனும், பெரியவனுமான ததிக்கிராவணனுக்குத் துதியைக் கூறுகிறேன்.

3. உஷையின் உதயத்தில் அக்கினி ஒளிப்படுத்தப் பட்டவுடன் அசுவனான ததிக்கிராவணனுக்குத் துதியளிப்பவனை அதிதி, மித்திரா வருணர்களோடு சேர்ந்து பாபத்திலிருந்து நீக்குவாளாக.

4. நாங்கள் எங்கள் உணவும் பலமுமாயிருக்கும் மகத்தான ததிக்கிராவணனுடைய நாமத்தைப் போற்றும் போது, எங்களுடைய க்ஷேமத்துக்காக, வருணனையும், மித்திரனையும், வச்சிராயுதமேந்தும் இந்திரனையும் அழைப் போமாக.

5. இருவித செயல்களை நடத்துபவர்களான போருக்கு எத்தனஞ் செய்பவர்களும், யக்ஞத்துக்குச் செல்பவர்களும், ததிக்கிராவை இந்திரனைப் போல் அழைக்கிறார்கள். மித்திரனும் வருணனும் மனிதனை ஊக்கப் படுத்தும் குதிரையான ததிக்கிராவை அளித்தார்கள். 3,493

6. நான் ஜயிக்கும் குதிரையும் வலியனுமான ததிக்கிராவைத் துதியோடு போற்றினேன். அவன் எங்கள் முகங்களை சுகந்தப் படுத்துவானாக. அவன் நாங்கள் வாழும் நாட்களை நீடிப்பானாக. 3,494

# 40. ததிக்கிரான்

## 336. வாமதேவன் - கௌதமன்

1. நாங்கள் ததிக்கிரானுக்கே துதியைக் கூறுவோமாக. நான் சலங்களையும், அக்கினியையும், உஷையையும், சூரியனையும் பிரகஸ்பதியையும், அங்கிரஸனின் புதல்வனான ஜிஷ்ணுவையும் போற்ற என்னை எல்லா வைகறைகளும் ஊக்கப்படுத்துவார்களாக.

2. முயற்சியுள்ளவனும், போஷிப்பவனும், பசுக்களை யளிப்பவனும், பக்தனோடு வசிப்பவனும், துரிதமாய்ச் செல்பவனுமான ததிக்கிராவணன் விரும்பத் தகுந்த உஷையின் உதயத்திலே உணவை-அவியை-ஏற்க விரும்புவானாக. சத்தியனும், சலிப்பவனும், துரிதனும், தத்துக்கிளியைப் போல் குதிப்பவனுமான அவன் எங்களுக்கு உணவையும், பலத்தையும், சுவர்க்கத்தையும் தோற்றுவிப்பானாக.

3. துரிதமாய்ச் செல்பவனும், முன்னேறுபவனும், ஆர்வமுள்ளவனும், மற்றவர்களைக் கடத்துபவனும், பருந்தைப் போல் வேகமாயிருப்பவனுமான ததிக்கிராவணனை, மனிதர்கள் தொடர்ந்து பறக்கும் துரிதமான பறவையைப் பின்பற்றும் வேறு பட்சிகளைப் போல் பின்பற்றுகிறார்கள்.



4. கழுத்திலும், பக்கங்களிலும், வாயிலும் கட்டப்பட்ட குதிரை, அடிகளைத் துரிதப் படுத்துகிறது. ததிக்கிரான் அறிவைத் தொடர்ந்து, வலிமையிலே வளர்ந்து, வழிகளின் வளைவுகளைக் கடந்து, இன்னும் அதிக வேகமாய்ச் செல்லுகிறான்.

5. அவன் ஒளியிலே வசிக்கும் ஹம்சம்-அன்னம், வானிலே வசிக்கும் வசு-காற்று; வேதிகையிலே வசிக்கும் ஹோதா-அக்கினி; மனையில் விளங்கும் அதிதி-விருந்தினன்; மனிதர்களின் நடுவே வசிப்பவன்-சேதனம். மிக்க உத்தம மண்டலத்திலே வசிப்பவன்-சூரியன். சத்தியத்தில் வசிப்பவன்; விண்ணில் வசிப்பவன்-வாயு. சலங்களிலே பிறந்தவன்; பசுக்களிலே-இரசிமிகளிலே - பிறந்தவன்; யக்ஞத்திலே பிறந்தவன்; மலையில் பிறந்தவன்; சத்தியன் 3,499

# 41. இந்திரா வருணர்கள்

## 337. வாமதேவன்-கௌதமன்

1. இந்திரா வருணர்களே! வருண இந்திரர்களே! அவிகளோடு சேர்ந்த எந்த ஸ்தோமம் அமுதனை ஹோதாவைப் போல் உங்களுடைய ஆதரவைப் பெற்றது? இந்திரா வருணர்களே! எங்களால் உங்களுக்குக் கூறப்படும் தோத்திரம் செயல்களால் சிறப்பிக்கப்பட்டு வணக்கத்தோடு எழுந்து உங்களுடைய இருதயங்களைப் பற்றிற்று.

2. தேவர்களான இந்திரா வருணர்களே! எந்த மனிதன் உங்களுக்கு அவியை யளித்து, நட்பினால் உங்களைப் பந்துக்களாகச் செய்து கொள்கிறானோ அவன் தன் பாவங்களை அழித்துக் கொள்கிறான். போரிலே தன்

பகைவர்களை ஜயிக்கிறான். உங்கள் மகத்தான பாலனங்களால் புகழுள்ளவனாகிறான்.

3. இந்திரா வருணர்களே! நட்புக்காகப் பிழியப்பட்ட ஸோமத்தால் உங்களை இன்புறுத்தும் உணவுள்ள நண்பர்களுக்கு நீங்கள் அளித்தது போல், உங்களைப் பல வித வழிகளில் போற்றும் மனிதர்களுக்கு நீங்கள் தாராளமாகச் செல்வத்தையளிக்கிறீர்கள்.

4. உக்கிரர்களான இந்திரா வருணர்களே! நீங்கள் உங்களுடைய மிக்கப் பிரகாசமுள்ளதும், மிக்க உறுதியுள்ளதுமான வச்சிராயுதத்தை, எங்களால் தடுக்க முடியாதவனும், கொள்ளையடிப்பவனும், துன்புறுத்துபவனுமான இந்த சத்துருவின் மீது செலுத்துங்கள். அவனை ஜயிக்க எங்களுக்கு ஆற்றலையளியுங்கள்.

5. இந்திரா வருணர்களே! நீங்கள் எங்கள் ஸ்தோமத்தைப் பசுக்களை விரும்பும் காளை போல் விரும்புங்கள். தோத்திரமானது, மேயச் சென்றிருப்பதும், ஆயிரம் பால் தாரைகள் இருப்பதுமான பெரிய பசுவைப் போல் எங்களுக்குச் செல்வத்தைப் பொழிக. 3,504

6. நாங்கள் நல்ல புதல்வர்களையும், பேரர்களையும், செழிப்பான நிலங்களையும், நீண்ட ஆயுசையும், வீரியத்தையும் பெற, பகைவர்களை ஜயிக்கும் இந்திரா வருணர்கள் பாலனங்களோடு எங்களைச் சூழ்ந்திருப்பார்களாக.

7. இந்திரா வருணர்களே! பசுக்களை விரும்பும் நாங்கள் பழைய பாலனத்துக்காக, வலியர்களும் பிரியமாயிருப்பவர்களுமான உங்களைப் பற்றுகிறோம். நாங்கள், பெற்றோர்களைப் போல் சுகத்தைத் தருபவர்களும் துதியாருக வீரர்களுமான உங்களை, நட்புக்காகவும் அன்புக்காகவும் நாடுகிறோம்.

8. உங்களுடைய பாலனத்துக்காக, எங்களுடைய துதிகள் மிகுந்த உணவை விரும்பி, தாராளமாய் அளிக்கும் உங்களிடம் வருகின்றன. என்னுடைய மனப்பூர்வமான தோத்திரங்கள், போரை விரும்பும் வீரர்களைப் போலும் ஸோமனோடு கலந்து கொள்ள விரும்பும் பாலைப் போலும் இந்திரா வருணர்களிடம் நெருங்குகின்றன.



9. என்னுடைய துதிகள் செல்வத்துக்காகச் செல்வனை நாடும் சார்ந்தவர்களைப் போலும், உணவை யாசிக்கும் தாழ்ந்த ஸ்திரீகளைப் போலும் இந்திரா வருணர்களிடம் செல்லுகின்றன.

10. குதிரைகளும், தேர்களும், புட்டியும் பொருந்தியுள்ள நித்தியமான செல்வங்களுக்கு நாங்கள் சொந்த உரிமையோடு தலைவர்களாயிருப்போமாக. உலகங்களையெல்லாம் சுற்றும் இவ்விருவரும், செல்வங்களையும் புதிய பாலனங்களையும் நியுக்த குதிரைகளிலே இணைத்து அவற்றை எங்களிடம் செலுத்துவார்களாக. 3,509

11. மகத்தான இந்திரா வருணர்களே! உங்களுடைய மேன்மையான பாலனங்களோடு போர்க்களத்தில் எங்களிடம் வாருங்கள். மின்னும் படைகள் பகைப் படைகளின் நடுவே விளையாடுங்கால் நாங்கள் உங்களாதரவால் அந்தப் போரிலே வெற்றியடைவோமாக. 3,510

## 42. இந்திரா வருணர்கள்

### 338. திரஸதஸ்யு–புருகுத்ஸன்

1. என்னுடைய இராச்சியம் இரு விதம்; நான் எல்லா க்ஷத்திரியர்களையும் அரசு புரிகிறேன். எல்லா அமுதர்களையும் அரசு புரிகிறேன். தேவர்கள் வருணனுடைய சங்கற்பத்தைப் பின்பற்றுகிறார்கள். நான் மனிதர்களின் மிக்க அருகிலுள்ள ரூபத்தை, ஆற்றலை, சங்கற்பத்தை அரசு புரிகிறேன்–வருணன்.

2. வருணனான நான் அரசனாயிருக்கிறேன். எனக்காகவே தேவர்கள் இந்த முதன்மையான ஆற்றல்களையெல்லாம் ஏந்துகிறார்கள். தேவர்கள் வருணனுடைய

வினைத்திட்பத்தைப் பின்பற்றுகிறார்கள். நான் மனிதர்களின் மிக்க உயர்ந்த ரூபத்தை அரசு புரிகிறேன்.

3. நான் இந்திரன். நான் வருணன். என் மகிமையால் நான் இருவராயிருக்கிறேன். நான், பரந்தவையும், ஆழமுள்ளவையும், அழகுள்ளவையுமான சோதி புவிகளாயிருக்கிறேன். அறிஞனான நான், துவஷ்டாவைப் போல் எல்லா புவனங்களையும் சேதனப் படுத்துகிறேன். நான் வையத்தையும் விண்ணையும் தாங்குகிறேன்.

4. நான் ஈரப்படுத்தும் சலங்களைப் பரத்துகிறேன். நான் சூரியனை ருதத்தின் இருப்பிடமாக ஏந்துகிறேன். அதிதியின் புதல்வனான நான் மூத்தாதுக்களான வெளியைப் பரத்தி, ருதத்தால் ருதபாலகனாகயிருக்கிறேன்-வருணன்.

5. போருக்கு ஆர்வமாகி, குதிரைகளிலே நன்கமர்ந்துள்ள வீரர்கள் என்னை அழைக்கிறார்கள். தெரிந்த வீரர்களும் என்னையே போரிலே அழைக்கிறார்கள். செல்வமுள்ள இந்திரனான நான் போரை எழுப்புகிறேன். ஜயிக்கும் சக்தியுள்ள நான் போரிலே புழுதியைக் கிளப்புகிறேன்-இந்திரன். 3,515

6. நான் இந்த வீரச் செயல்களையெல்லாம் செய்தேன். என்னுடைய தடைபடாத தெய்வத்திறத்தை எவனும் தடைப்படுத்தான்; ஸோமங்களும் சொற்களும் என்னை மதப்படுத்துங்கால் சோதியும் புவியும் கலங்குகின்றன-இந்திரன்.

### இந்திரா வருணர்கள்

7. வருணனே! உன்னுடைய இந்தச் செயல்களை அனைவரும் அறிகிறார்கள். துதிப்பவனே! நீ இத்துதிகளை வருணனுக்குக் கூறுகிறாய். இந்திரனே! விருத்திரனைக் கொன்ற புகழ் உனக்குண்டு. நீ தடைபட்டிருந்த நதிகளைப் பெருகிப் பாய விடுவித்தாய்.



8. ஏழு ரிஷிகள், எங்களுடைய இந்த இராஜ்யத்தைத் துர்கஹனுடைய புதல்வன், பாசங்களால் கட்டப்பட்டிருந்த போது பாலித்தார்கள். அவர்கள் அவனுடைய மனைவிக்காக யஜித்து, பாதி தேவனும், இந்திரனைப் போலிருப்பவனும், பகைவர்களை ஜயிப்பவனுமான திரஸதஸ்யுவை அடைந்தார்கள்.

9. புருகுத்ஸனுடைய மனைவி, இந்திரா வருணர்களான உங்கள் இருவரையும், அவிகளோடும் வணக்கங்களோடும் போற்றினார்கள். ஆதலால் நீங்கள், தேவர்களின் அருகில் வசிப்பவனும், பகைவர்களைக் கொல்பவனும், அரசனுமான திரஸதஸ்யுவை அவளிடம் சேர்த்தீர்கள்.

10. நாங்கள் உங்கள் இருவரையும் புகழ்ந்து செல்வங்களால் இன்பப்படுவோமாக. தேவர்கள் அவிகளாலும், பசுக்கள் புற்றரையாலும் இன்பப்படுவார்களாக. இந்திரா வருணர்களே! நீங்கள் தினந்தோறும் எங்களுக்கு அந்தப் பசுவையும் மாசற்ற செல்வங்களையும் அளியுங்கள். 3,520

## 43. அசுவினிகள்

### 339. புருமீளனும் அஜமீளனும்-ஸுஹோத்திரனுடைய புதல்வர்கள்

1. யக்ஞாருகர்களின் நடுவே எவன் எங்களுடைய துதிகளைச் செவியுறுவான்? எந்தத் தேவன் எங்களுடைய தோத்திரத்தைக் கேட்பான்? எவன் அதை விரும்புவான்? அமுதர்களின் நடுவே எந்தத் தேவனுடைய இருதயத்திலே எங்களுடைய பிரியமாயிருப்பதும், தேவத் தன்மையுள்ளதும், அவிகளோடிருப்பதுமான நல்ல துதியை நாங்கள் பதிப்போம்?

2. எவன் எங்களை சுகப்படுத்துவான்? தேவர்களின் நடுவே எந்தத் தேவன் எங்களுடைய யக்ஞத்துக்கு வர மிக்கத் துரிதனாவான்? தேவர்களின் நடுவே

எவன் எங்களை இன்பப் படுத்த, செல்வப்படுத்த மிக்க விரும்புவான்? சூரியனுடைய புதல்வியால் தெரிந்தெடுக்கப்பட்ட எந்தத் தேர் துரிதமாயுள்ளது, துரிதக் குதிரைகளால் இழுக்கப் படுகிறது என அவர்களால் கூறப்படுகிறது?

3. இரவு நீங்குங்கால் தன் ஆற்றலைப் புலப்படுத்தும் இந்திரனைப் போல் நீங்களும் பல தினங்களோடு இங்கு துரிதமாய் வருகிறீர்கள். சோதியிலிருந்து வருபவர்களும், சோதியில் தோன்றுபவர்களும், சுபர்ணங்களாயிருப்பவர்களுமான அசுவினிகளே! உங்களுடைய எந்த ஆற்றலால் நீங்கள் புகழை அடைந்தீர்கள்?

4. உங்களுடைய மேன்மைகளை அளப்பதற்குரிய கோல்-தோத்திரம்-எது? எந்தத் துதிகளால் அழைக்கப்பட்டு நீங்கள் எங்களிடம் வருவீர்கள்? உங்களுடைய கோபத்துக்கு எவன் இலக்காயிருப்பான்? தஸ்ரர்களே! இனிய சலத்தைத் தரும் நீங்கள் உங்கள் பாலனத்தால் எங்களைப் பாலியுங்கள்.

5. வானுக்கப்பால் உங்களை நிலைப்படுத்த உங்களுடைய தேர் ஒளி உலகைச் சுற்றிப் பரவுகிறது. இனிய சலத்தை யளிக்கும் உங்களுக்கு ஈயப்படும் பானத்தோடு பக்குவப்பட்ட யவத்தைச் சேர்க்கப் பாலால் ஸோமத்தைக் கலக்குகிறார்கள். 3,525

6. மேகமானது ரஸத்தால் உங்கள் குதிரைகள் மீது தெளித்தது. துரிதத்திலே பறவைகளைப் போலுள்ள உங்களுடைய துலக்கமான குதிரைகள் ஒளியோடு பிரகாசித்துச் செல்லுகின்றன. உங்களுடைய தேரை அனைவரும் அறிகிறார்கள். அதனால் நீங்கள் சூரியையின் தலைவர்களானீர்கள்.

7. இந்த யக்ஞத்திலே நான் ஒருமனமுள்ள உங்களைத் துதியால் சேர்க்கிறேன். எங்களுக்கு நலமாயிருங்கள். வழிபடும் என்னைப் பாலியுங்கள். பொய்யற்ற



வர்களே! உங்களிடம் செலுத்தப்படும் என் விருப்பம் நிறைவேறுகிறது. 3,527

# 44. அசுவினிகள்

## 340. புருமீளனும் அஜமீளனும்—ஸுஹோத்ரனின் புதல்வர்கள்

1. அசுவினிகளே! நாங்கள் இன்று உங்களுடைய மிக்க வேகமுள்ளதும், சூரிய ரசிமியோடு சேர்ப்பிப்பதும், சூரியை ஏந்துவதும், மூன்று பீடங்கள் இருப்பதும், துதிகளால் போற்றப்படுத்துவதும், பரந்ததும், செல்வம் நிறைந்ததுமான தேரை அழைக்கிறோம்.

2. அசுவினிகளே! சோதியின் மக்களே! உங்களுடைய தேவத் தன்மையாலும், செயல்களாலும் நீங்கள் புகழைப் பெறுகிறீர்கள். மகத்தான குதிரைகள், நீங்கள் இருக்கும் தேரை இழுக்குங்கால் உங்கள் எழிலான வடிவத்தை உணவு பற்றுகிறது.

3. எவன் அளிக்கும் அவிகளோடு உங்களைப் பாலனத்துக்காக இன்று வருவிக்கிறான்? துதிகளோடு ஸோமத்தைப் பருக எவன் உங்களை அழைக்கிறான்? எவன் யக்ஞத்தின் பழைய பக்தனுக்காக வணக்கத்தை யளித்து உங்களை இங்கு முகப்படுத்துகிறான்?

4. நாஸத்தியர்களே! பலவிதத் தன்மைகளுள்ள நீங்கள் உங்களுடைய பொன் மயமான தேரிலே இந்த யக்ஞத்துக்கு வாருங்கள். இனிய ஸோமத்தைப் பருகுங்கள். பணிவிடை செய்யும் எனக்கு இரத்தினத்தை யளியுங்கள்.

5. உங்களுடைய நன்கு கற்பிக்கப்பட்ட தேரிலே சோதியிலிருந்தோ, புவியிலிருந்தோ எங்களிடம் வாருங்கள். பக்தர்களான அந்நியர்களால் தாமதமாகாதீர்கள். நீங்கள் நட்பின் பழைய பந்தங்களால் பந்தமாயிருக்கிறீர்கள். 3,532

6. பகையழிப்பவர்களே! பல வீரப்புதல்வர்களோடுள்ள மகத்தான செல்வத்தை எங்கள் இருவருக்கும் அளியுங்கள். அசுவினிகளே! யக்ஞத் தலைவர்களான புருமீளர்களும் தங்களுடைய துதியை உங்களுக்குக் கூறுகிறார்கள். அஜமீளர்களும் அதனோடு தங்கள் தோத்திரத்தைச் சேர்க்கிறார்கள்.

7. இந்த யக்ஞத்திலே ஒரு மனமுள்ள உங்களை நான் துதியால் சேர்க்கிறேன். எங்களை நலப்படுத்துங்கள். உணவை வழங்கும் நீங்கள் உங்களை வழிபடும் என்னைப் பாலியுங்கள். நாஸத்தியர்களே! உங்களிடம் செலுத்தப்படும் என் விருப்பம் நிறைவேறுகிறது. 3,534

## 45. அசுவினிகள்

### 341. வாமதேவன்–கௌதமன்

1. சூரியன் எழுகிறான். இந்த சோதியின் உச்சியிலே சுற்றிவரும் உங்களுடைய தேர் இணைக்கப்பட்டிருக்கிறது. அதில் மூன்றுவித ஒப்பான உணவுகள் இருக்கின்றன. மது நிறைந்த சர்மம் நான்காவதாகத் தோன்றுகிறது.

2. உங்களுடைய உணவு, ஏந்துபவையும், ஸோமம் நிறைந்தவையும், குதிரைகளால் இணைக்கப்பட்டவையும், படர்ந்துள்ள இருளைச் சூரியனைப் போல் விலக்குபவையும், வானிலே பிரகாசத்தைப் பரத்துபவையுமான தேர்கள், உஷையின் உதயத்திலே தோன்றுகின்றன.

3. இனிய பானத்தைப் பருகுவதற்குரிய வாய்களோடு ஸோமத்தைப் பருகுங்கள். ஸோமத்தினிடம் செல்ல உங்களுடைய பிரியமான தேரிலே குதிரைகளை இணையுங்கள். யக்ஞஞ் செய்பவனின் மனைக்கு வாருங்கள். ஸோமத்தால் வழியை ஊக்கப்படுத்துங்கள். அசுவினிகளே! ஸோமம் நிறைந்த சர்மப் பாண்டங்களை ஏந்தி வாருங்கள்.



4. துரிதமாய்ச் செல்பவையும், தேன் நிறைந்தவையும், நட்புள்ளவையும், பொன் சிறகுள்ளவையும், சுமை ஏந்துபவையும், எக்களிப்பவையும், ஸோமத்தைச் சுவைப்பவையுமான குதிரைகளோடு யக்ஞங்களுக்குத் தேனுக்கு ஈக்களைப் போல் வாருங்கள்.

5. யக்ஞத்தை நடத்தும் அறிஞன் சுத்தஞ் செய்த கைகளால் இனிய ஸோமத்தைக் கற்களால் பொழியுங்கால், யக்ஞ ஸாதனங்களும் அவிகளைச் செலுத்துபவையுமான அக்கினிகள். இணைந்திருக்கும் அசுவினிகளைப் போற்றுகின்றன. 3,539

6. அருகில் முன்னேறும் கிரணங்கள் தினத்தோடு ஒளியை விலக்கி, சூரியனைப் போலுள்ள சோதியோடு வானிலே பரவுகின்றன. சூரியன் குதிரைகளை இணைத்துச் செல்லுகிறான். நீங்கள் உங்களுடைய சுவதாவோடு-இயல்புத் தன்மைகளோடும், யக்ஞ உணவுகளோடும்–அவனைப் பின்பற்றி அவனுடைய வழிகளையெல்லாம் புலப்படுத்துவீர்களாக.

7. அசுவினிகளே! செயல்களை நடத்தும் நான் உங்களைப் போற்றுகிறேன். உங்களுடைய தேயாத தேர் நல்ல குதிரைகளோடு விளங்குகிறது. அதனால் நீங்கள் உடனே உலகங்களுக்கெல்லாம் செல்லுகிறீர்கள். அதனால் அவிகளைத் தந்து ஊக்கமாய் வழிபடுபவனிடம் வாருங்கள். 3,541

## 46. இந்திர வாயுக்கள்

### 342. வாமதேவன்-கௌதமன்

1. வாயுவே! சோதிக்குச் செலுத்தும் யக்ஞங்களிலே பொழியப்பட்ட ஸோமரஸத்தை முதலில் பருகவும். ஏனெனில் நீயே முதற்பருகுவனாயிருக்கிறாய்.

2. வாயுவே! நியுத குதிரைகளுள்ள நீ, இந்திரனைத் தேரோட்டியாக அடைந்திருக்கிறாய். எங்களுடைய

நூறு விருப்பங்களைப் பூர்த்தி செய்ய வா. நீ இந்திர னோடு சேர்ந்து இருவரும் ஸோமத்தைப் பருகுங்கள்.

8. இந்திர வாயுக்களே! உங்களுடைய உணவுக்குத் துரிதமாகும் ஆயிரம் குதிரைகள், நீங்கள் ஸோமத்தைப் பருக உங்களை ஏந்தி வருக.

4. இந்திர வாயுக்களே! சோதிக்குப் பறப்பதும், யக்ஞத்தை நலப்படுத்துவதும், பொன் பீடங்களிருப்பதுமான தேரிலே ஏறுங்கள்.

5. இந்திர வாயுக்களே! உங்களுடைய மிக்க அழுத்தமான தேரிலே யக்ஞத்துக்கு வாருங்கள். இங்கு வாருங்கள்.

6. இந்திர வாயுக்களே! இந்த ஸோமம் ஊற்றப் படுகிறது. நீங்கள் தேவர்களோடு இசைந்து அளிப்பவனுடைய மனையிலே இதைப் பருகுங்கள்.

7. இந்திர வாயுக்களே! உங்களுடைய பயணம் இங்காகுக. நீங்கள் ஸோமத்தைப் பருகக் குதிரைகளை அவிழ்த்து விடுங்கள். 3,548

## 47. இந்திர வாயுக்கள்

### 343. வாமதேவன்–கௌதமன்

#### வாயு

1. வாயுவே! சுத்தனான நான், சோதியை நாடும் யக்ஞங்களில், உனக்கு முதன்மையாய் அளிப்பதற்கான ரஸத்தை ஏந்தி வருகிறேன். விரும்பப்படும் தேவனான நீ, உன்னுடைய நியுத குதிரைகளோடு ஸோமத்தைப் பருக வா.

#### இந்திர வாயுக்கள்

2. இந்திர வாயுக்களான நீங்கள் இருவரும் ஸோம பானங்களைப் பருக அருகர்கள். பள்ளத்துக்குப் பாயும் சலங்களைப் போல் ஸோமங்கள் உங்களிடம் பாய்கின்றன.



3. இந்திர வாயுக்களே! ஆற்றலின் தலைவர்களும், வலியர்களும், நியுத குதிரைகளுள்ளவர்களுமான நீங்கள், ஒரே தேரில் ஏறி வாருங்கள். எங்கள் பாலனத்துக்காக ஸோமத்தைப் பருகுங்கள்.

4. இந்திர வாயுக்களே! தலைவர்களும் யக்ஞங்களைச் செலுத்துபவர்களுமான நீங்கள், அவியை அளிக்கும் எங்களுக்கு, உங்களுடைய பலரால் விரும்பப்படும் நியுத குதிரைகளை அளியுங்கள். 3,552

## 48. வாயு

### 344. வாமதேவன் - கௌதமன்

1. வாயுவே! இதுவரை சுவைக்கப்படாத அவிகளை பகைவர்களைப் பயமுறுத்தும் வீரனைப் போல் பருகவும், வழிபடும் எனக்குச் செல்வத்தை அளிக்கவும். ஸோமத்தைப் பருக உன்னுடைய துலக்கமான தேரிலே வரவும்.

2. வாயுவே! பழிச்சொல்லை நீக்குபவனும், நியுத குதிரைகளோடிருப்பவனும், இந்திரனைச் சாரதியாக அடைந்திருப்பவனுமான நீ, உன்னுடைய துலக்கமான தேரிலே ஸோமத்தைப் பருக வா.

3. எல்லா எழில்களை ஏந்தும் இரு சோதியும் புவியும்-கருப்புச் செல்விகள்–உனக்குப் பணிவிடை செய்கிறார்கள். வாயுவே! உன்னுடைய பிரகாசமான தேரிலே ஸோமத்தைப் பருக வா.

4. மனத்தைப் போல் வேகமாயுள்ளவையும், சேர்ந்து இணைக்கப்பட்டுள்ளவையுமான தொண்ணூற்றொன்பது குதிரைகள் உன்னை ஏந்தி வருக. வாயுவே! உன்னுடைய துலக்கமான தேரிலே ஸோமத்தைப் பருக வா.

5. வாயுவே! நூறு அல்லது ஆயிரம் புட்டியுள்ள குதிரைகளை இணைக்கவும். உன்னுடைய தேர் வேகத்தோடு இங்கு வருக. 3,557

# 49. இந்திரா பிரகஸ்பதிகள்

## 345. வாமதேவன்–கௌதமன்

1. இந்திரா பிரகஸ்பதிகளே! நான் பிரியமான அவியை உங்கள் வாய்களுக்கு அளிக்கிறேன். தோத்திரமும் மனப்படுத்தும் ஸோமமும் உங்களுக்குத் தரப்படுகின்றன.

2. இந்திரா பிரகஸ்பதிகளே! உங்கள் பானத்துக்கும் இன்பத்துக்கும் இந்த இனிய ஸோமம் பிழியப்பட்டு அளிக்கப்படுகிறது.

3. இந்திரா பிரகஸ்பதிகளே! ஸோமத்தைப் பருகுபவர்களான நீங்கள், ஸோமரஸத்தைப் பருக எங்கள் மனைக்கு வாருங்கள்.

4. இந்திரா பிரகஸ்பதிகளே! நூறு பசுக்களும் ஆயிரம் குதிரைகளுமுள்ள செல்வங்களை எங்களுக்களியுங்கள்.

5. இந்திரா பிரகஸ்பதிகளே! ஸோமம் பிழியப்பட்டவுடன் இந்த ரஸத்தைப் பருக நாங்கள் துதிகளோடு உங்களை அழைக்கிறோம்.

6. இந்திரா பிரகஸ்பதிகளே! அளிப்பவனுடைய மனையிலே ஸோமத்தைப் பருகுங்கள். அவனுடைய இடத்திலே இன்புறுங்கள். 3,563

# 50. பிரகஸ்பதி

## 346. வாமதேவன்–கௌதமன்

1. தன் பலத்தால் புவியின் எல்லைகளைத் தாங்குபவனும், மூவுலகங்களில் நாதத்தோடிருப்பவனும், இனிய நாவுள்ளவனுமான பிரகஸ்பதியை, புகழ்பெற்றவர்களும் விப்பிரர்களுமான பழைய ரிஷிகள் தங்கள் முன்னே ஸ்தாபித்தார்கள்.

2. பிரகஸ்பதியே! பகைவர்களைப் பயமுறுத்துபவர்களும், பேரறிஞர்களும், உன்னை இன்புறுத்துபவர்களும், உன்னை எங்களுக்காகப் போற்றுபவர்களுமுள்ள இந்த



வழிபடுபவனுடைய பழந்தருவதும், முன்னேறுவதும், தடைபடாததும், பரந்திருப்பதுமான யக்ஞத்தைப் பாலிக்கவும்.

3. பிரகஸ்பதியே! உந்தம தூரத்திலிருந்து வந்த குதிரைகள் ருதத்தோடு சேர அமர்கின்றன. கற்களால் பிழியப்பட்ட ஸோமரஸங்கள் சலத்தை அளிக்கும் ஆழமான கிணற்றைப் போல் பாய்ந்து துதி முழக்கங்களோடு பெருகுகின்றன.

4. மகத்தான சோதியின் உத்தம இடத்திலே முதன்மையாய்ப் பிறந்த பிரகஸ்பதிக்கு ஏழு வாய்களும், பல வடிவங்களும், ஒலியோடு ஏழு கதிர்களும் இருந்தன. அவன் இருளை நீக்கினான்.

5. அவன் அங்கிரஸர்களின் துதி செய்வதும் துலங்குவதுமான படையோடு முழக்கத்துடன் துன்புறுத்தும் பலனைக் கொன்றான். பிரகஸ்பதி, செல்வமளிப்பவையும் அவியைத் தருபவையுமான பசுக்களைக் கர்ச்சித்து விடுவித்தான். 3,568

6. நாங்கள், பாலகனும், விசுவே தேவனும், பொழிபவனுமான பிரகஸ்பதியை இங்ஙனம் யக்ஞங்களாலும், அவிகளாலும், துதியாலும் போற்றுவோமாக. பிரகஸ்பதியே! நாங்கள் உத்தமப் புதல்வர்களோடும் வீரமக்களோடும் செல்வபதிகளாவோமாக.

7. பிரகஸ்பதியைப் போஷித்து, பாலித்து, புகழ்ந்து, போற்றி, அவனுக்கு முதன்மையாய் அளிக்கும் அரசன், தன் வீரத்தாலும் வலிமையாலும் எல்லாப் பகை சனங்களையும் ஜயிக்கிறான்.

8. பிரம்மன்–பிரகஸ்பதி–போற்றப்பட்டு எந்த அரசனுடைய மனைக்குச் செல்லுகிறானோ அவன், தன் சொந்த மனையிலே செல்வத்தோடு செழிக்கிறான். அவனுக்குப் புவி எல்லாப் பருவங்களிலும் பழத்தைத் தருகிறது. அவனுக்குப் பிரஜைகள் விருப்பத்தோடு தாமாகவே வணக்கத்தைச் செலுத்துகிறார்கள்.

9. அவன் தடைபடாமல் தன் ஜனங்களுடையவும் பகை ஜனங்களுடையவும் செல்வங்களை ஜயிக்கிறான். பிரம்மனுக்குச் செல்வனைத் தேவர்கள் பாலிக்கிறார்கள்.

### இந்திரா பிரகஸ்பதிகள்

10. பிரகஸ்பதியே! நீயும் இந்திரனும் மகிழ்ந்து செல்வங்களைப் பொழிந்து இந்த யக்ஞத்திலே ஸோமத்தைப் பருகுங்கள். எங்கும் பரவும் ஸோம பந்துக்கள் உங்களில் நுழைக. வீரப் புதல்வர்கள் நிறைந்த செல்வங்களை எங்களுக்கு அளியுங்கள்.

11. பிரகஸ்பதியே! இந்திரனே! எங்களை உயர்த்துங்கள். உங்கள் இருவருடைய ஸுமதிகள் எங்களுக்குச் சேர்ந்து தோன்றுக. எங்கள் செயல்களைப் பாலியுங்கள். எங்கள் ஊக்கங்களை-தோத்திரங்களை—எழுப்புங்கள். அவிகளை அளிக்கும் எங்களுடைய சத்துருக்களை விலக்குங்கள். 3,574

## 51. உஷை

### 347. வாமதேவன்-கௌதமன்

1. மிக்கப் பரந்தவளும், அறிவைத் தருபவளுமான சோதி, பூர்வ திசையின் இருட்டிலிருந்து எழுகிறாள். ஆதித்தியனின் புதல்விகளும் பிரகாசிப்பவர்களுமான உஷைகள், சனங்களுக்கு அந்தக் கரண சக்தியைத் தருகிறார்கள்.

2. விரும்பத் தகுந்த உஷைகள் பூர்வ திசையிலே, யக்ஞங்களிலே நிறுத்தப்பட்ட யூபஸ்தம்பங்களைப் போல் எழுகிறார்கள். பிரகாசிப்பவர்களும், சுத்தப்படுத்துபவர்களும், சோதியுள்ளவர்களுமான அவர்கள், தடைபடுத்தும் தமத்தின் கதவுகளைத் திறக்கிறார்கள்.

3. இருளை நீக்குபவர்களும் செல்விகளுமான உஷைகள், ஈகையர்களை, தங்கள் செல்வங்களை அளிக்க ஊக்கப்படுத்துகிறார்கள். கருமித் தன்மைகள் உள்ள வணிகர்கள், ஆழ்ந்த விரும்பத்தகாத இருட்டிலே எழுந்திராமல் தூங்குவார்களாக.



4. செல்விகளான உஷைகளே! நீங்கள் எந்தத் தேரினால் செல்வத்தோடு நவக்வரையும், தசக்வரையும், ஏழு சந்தங்களுமுள்ள அங்கிரஸனையும் நாடி, அவர்கள்மீது பிரகாசித்தீர்களோ, அந்தப் பழைய தேரா அல்லது புதிய தேரா இன்று தோன்றுவது எனத் தேவிகளான உஷைகளே! உங்களைக் கேட்கிறேன்.

5. தேவிகளான உஷைகளே! நீங்கள் ருதத்தால் இணைக்கப்பட்ட குதிரைகளோடு துரிதமாய் உலகங்களைச் சுற்றுகிறீர்கள். நீங்கள் உறங்கும் மனிதர்களையும் கால்நடைகளையும் அவரவரது செயல்களை நடத்த எழுப்புகிறீர்கள். 3,579

6. இந்த உஷைகளின் நடுவே எவள் பழையவள்? எந்தப் பழைய உஷையால், ரிபுக்களின் செயல்கள் நடத்தப்பட்டன? பிரகாசிப்பவர்களும், பொலிவுள்ளவர்களுமான உஷைகள், சலனமாகுங்கால் அவர்களில் யார் பழையவர், யார் புதியவர் என வேற்றுமை தெரியவில்லை. ஏனெனில் அனைவரும் சமமாயும் நித்திய யுவதிகளாயும் விளங்குகிறார்கள்.

7. விரும்பப்படும் செல்வங்களோடு செல்விகளும், ருதத்தின் பயன்களைத் தரும் சத்தியர்களும், பழையவர்களுமான இந்த உஷைகள், மங்கலமுள்ளவர்கள். அவர்களோடு யக்ஞங்களை நடத்துபவன் துதியால் துதித்து, பாக்களால் புகழ்ந்து, துரிதமாய்ச் செல்வத்தைப் பெறுகிறான்.

8. அவர்கள் பூர்வ திசையிலிருந்து உடனே தோன்றி, ஸமமான வடிவத்தோடு, சுற்றிலும் பரவுகிறார்கள். ஸமப் புகழுள்ள அவர்கள் ஒரே இடத்திலிருந்து தோன்றுகிறார்கள். தேவிகளான உஷைகள் ருதத்தின் சபையை எழுப்புகிறார்கள். சலங்களைச் சிருட்டிக்கும் ரசிமிகளைப் போல் போற்றப்படுகிறார்கள்.

9. ஸமமாயிருப்பவர்களும், ஒரு ரூபமுள்ளவர்களும், இன்னலற்ற நிறமுள்ளவர்களும், சுத்தர்களும்,

சோதிகளும், சோதிப்படுத்துபவர்களும், மகத்தான இருட்டைத் தங்கள் ஒளிமய வடிவங்களால் மறைப்பவர்களுமான இந்த உஷைகள் முன்னேறுகிறார்கள்.

10. தேவிகளும், துலங்குபவர்களும், சூரியனின் புதல்விகளுமான உஷைகள், எங்களுக்குப் பிரஜைகள் நிறைந்த செல்வத்தை அளிப்பார்களாக. எங்களை சுகப்படுத்த உங்களை எழுப்பி நாங்கள் உத்தம வீரப்புதல்வர்களுக்குத் தலைவர்களாயிருப்போமாக.

11. சோதியின் புதல்விகளே! பிரகாசிக்கும் உஷைகளே! நான் யக்ஞத்தை அறிவிப்பவனாக உங்களிடம் கேட்கிறேன். நாங்கள் சலனங்களின் நடுவே புகழுள்ளவர்களாயிருப்போமாக. சோதியும் தேவியான புவியும் எங்களுக்கு இதை நித்தியப் படுத்துவார்களாக. 3,585

## 52. உஷை

### 348. வாமதேவன்-கௌதமன்

1. மனிதர்களை நன்கு செலுத்துபவளும், நலங்களைத் தோற்றுவிப்பவளும், சகோதரியான இரவு செல்லுங்கால் ஒளியைப் பரத்துபவளுமான சோதியின் புதல்வி புலனாகிறாள்.

2. அழகிய குதிரையைப் போல் இருப்பவளும், பிரகாசிக்கும் ரசிமிகளின் தாயும், ருதமிருப்பவளுமான உஷை, அசுவினிகளின் சிநேகிதியாயிருக்கிறாள்.

3. நீ அசுவினிகளின் சிநேகிதி. நீ ஒளிக்கதிர்களின் தாயாயிருக்கிறாய். நீ செல்வங்களை நடத்துகிறாய்.

4. நாங்கள் வெறுப்பை விலக்குபவளும், சேதனத்தை மீட்பவளும், சத்தியத்தோடிருப்பவளுமான உன்னை ஸ்தோமங்களோடு எழுப்புகிறோம்.

5. மங்கள ரசிமிகள் மழையின் தாரைகளைப் போல் புலனாகின்றன. உஷை மகத்தான ஒளியால் உலகத்தை நிரப்புகிறாள். 3,590



6. பிரகாசமான உஷை உலகத்தை ஒளியால் நிரப்பி இருளை சோதியால் நீக்குகிறாள். அவள் சுவதாவைப் பாலிப்பாளாக.

7. உஷையே! சோதியை ரசிமிகளாலும், பரந்த பிரியமான வானை சுத்த ஒளியாலும் நிரப்புகிறாய். 3,592

## 53. ஸவிதா

### 349. வாமதேவன்-கௌதமன்

1. நாங்கள் தேவனும், மகானும், அறிஞனுமான ஸவிதாவினிடம் அவியளிப்பவனுக்கு அவனாகவே மனையோடளிக்கும் விரும்பத் தகுந்த செழித்த செல்வத்தைக் கேட்கிறோம். மகத்தான தேவன் அத்தகைய செல்வத்தை எங்களுக்குத் தினந்தோறுமளிப்பானாக.

2. ஒளி உலகை ஏந்துபவனும், உலகத்தைப் பாலிப்பவனும், கவியுமான ஸவிதா, தன் பொன் கவசத்தை அணிந்து கொள்கிறான். விவிதமாய்க் காணும் ஸவிதா உலகை ஒளியால் நிரப்பி மிகுந்த போற்றத் தகுந்த சுகத்தைப் புலப்படுத்துகிறான்.

3. தேவனான ஸவிதா புவியின் உலகங்களையும் சோதியின் உலகங்களையும் தன் ஒளியால் நிரப்புகிறான். தன்னுடைய சொந்த தர்மத்துக்கு சுலோகத்தை எழுப்புகிறான். அவன் பிறப்பிப்பதற்காக, உலகத்தைக் கிரமப்படுத்தவும், ஒளியால் அதை ஊக்கப்படுத்தவும் தன் கைகளை நீட்டுகிறான்.

4. தேவனான ஸவிதா தடைபடாதவனாகி உலகங்களை ஒளிப்படுத்தி மனிதர்களின் நல்ல செயல்களைப் பாலிக்கிறான். புவியின் சனங்களை நல்ல வழியில் செலுத்த தன் கைகளைப் பரத்துகிறான். செயல்களைக் காக்கும் அவன் பரந்த உலகை நடத்துகிறான்.

5. ஸவிதா வானின் மூன்று மண்டலங்களிலும், மூன்று உலகங்களிலும், மூன்று ஒளி நிலையங்களிலும்,

மூன்று சோதிகளிலும், மூவ்விதப் புவியிலும் பரவி, அவற்றைத் தன் மகத்வத்தால் சூழ்கிறான். அவன் தன்னுடைய முச்செயல்களால் அவனாகவே எங்களைப் பாலிப்பானாக. 3,597

6. மிக்கச் செல்வமுள்ளவனும் நல்ல செயல்களைத் தோற்றுவிப்பவனும், எல்லாப் பொருள்களை அறிபவனும், தாவர சங்கமப் பொருள்களைக் கிரமப்படுத்துபவனுமான தேவ ஸவிதா முவ்வுலகங்களிலும் எங்களுக்கு சுகத்தைத் தருவானாக. எங்களுடைய பாவத்தை நீக்குபவனாயிருப்பானாக.

7. தேவனான ஸவிதா ருதுக்களோடு வந்து எங்களுடைய மனைகளைச் செழிப்பித்து, எங்களுக்கு நல்ல வமிசத்தையும் உணவையுமளிப்பானாக. அவன் எங்களுக்கு இரவிலும் பகலிலும் அநுகூலமாயிருப்பானாக. அவன் எங்களுக்கு பிரஜைக் கொழிக்கும் செல்வத்தைக் குவிப்பானாக. 3,599

## 54. ஸவிதா

### 350. வாமதேவன்–கௌதமன்

1. நாம் இப்பொழுது ஸவிதாவைப் போற்றிப் புகழ வேண்டும். தினத்தின் இத்தருணத்தின் மனிதர்கள் அவனை ஏத்த வேண்டும். மநுவின் சந்ததிகளுக்குச் செல்வத்தை வழங்கும் அவன் எங்களுக்கு இங்கு மிக்க உத்தமச் செல்வங்களையளிக்கத் துதிக்கப்படவேண்டும்.

2. நீ யக்ஞார்கர்களாகத் தேவர்களுக்கு முதலில் அமுதத் தன்மையின் ஸாதனமான உத்தம பாகத்தை–ஸோமத்தை –தோற்றுவிக்கிறாய். பிறகு ஸவிதாவே! நீ அளிப்பவனுக்குத் தினத்தை உதயப்படுத்துகிறாய். நீ மானிடர்களுக்குத் தொடரும் வாழ்க்கையைத் தருகிறாய்.

3. ஸவிதாவே! மனிதர்களா யிருக்கும் நாங்கள் எங்கள் அறிவின்மையாலோ, அசக்தியாலோ, ஆற்றலாலான கர்வத்தினாலோ, தேவனான உனக்கோ, தேவர்களுக்கோ, மனிதர்களுக்கோ ஏதேனும் குற்றஞ் செய்திருந்தால் நீ இங்கு எங்களை அக்குற்றங்களிலிருந்து நீக்கவும்.



4. தேவனான ஸவிதாவின் செயலைத் தடைப்படுத்தலாகாது. ஏனெனில் அவன் புவனத்தையெல்லாம் தாங்குகிறான். அவன் சுந்தர விரல்களுள்ள கையால் பரந்த புவியிலே செழுமையைப் பரத்துகிறான். சோதியின் மேன்மையை மேம்படுத்துகிறான்–பரத்துகிறான் இதுவே அவனுடைய உண்மையான மகிமை.

5. நீ இந்திரனைத் தலைவனாக அடைந்துள்ள எங்களைப் பரந்த மேகங்களின் மீது உயர்த்துகிறாய். நீ வழிபடுபவர்களுக்கு வசதிகள் நிறைந்த வசிக்கும் இடங்களைத் தருகிறாய். உன்னை வழிபடுபவர்கள் எங்கு பரந்தாலும் ஸவிதாவே! அவர்கள் உன் ஆக்ஞையிலே அடங்கி நிற்கிறார்கள். 3,604

6. ஸவிதாவே! உனக்கு மும்முறை தினந்தோறும் பொழியப்படும் ஸோமங்கள் எங்களுக்கு சௌபாக்கியத்தையளிக்க. இந்திரனும், சோதியும் புவியும், சலங்களோடு ஸிந்துவும், ஆதித்தியர்களோடு அதிதியும், எங்களுக்கு சுகத்தையளிப்பார்களாக. 3,605

## 55. விசுவே தேவர்கள்

### 351. வாமதேவன்–கௌதமன்

1. வசுக்களே! உங்களின் நடுவே எவன் பாலிக்கிறான்? எவன் ஆதரிக்கிறான்? சோதி புவிகளே! அதிதியே! எங்களைப் பாலியுங்கள். மித்திரா வருணர்களே! வலிய மனிதனிடமிருந்து எங்களைப் பாலியுங்கள். தேவர்களே! உங்களுக்கு யக்ஞத்திலே எவன் செல்வத்தை யளிக்கிறான்?

2. பழைய இடங்களைத் தருபவர்களும், கலங்காத மனமுள்ளவர்களுமான தேவர்கள் தமத்திலிருந்து சோதி

யைத் தனிப்படுத்துபவர்களாயிருக்கிறார்கள். நித்தியமா யளிக்கும் அவர்கள் விரும்புவதைத் தருகிறார்கள். சத்தியச் செயலுள்ள அவர்கள் அழகுள்ளவர்கள்; பிரகாசிப்பவர்கள்.

3. நான் போற்றப்படும் அதிதியையும், ஸிந்துவையும், தேவியான ஸ்வஸ்தியையும் நட்புக்காக மந்திரங்களோடு ஏத்துகிறேன். நான் இரவு பகல்களான இருவரையும் தடைபடாத பாலனத்துக்காகப் போற்றுகிறேன். இரவும் வைகறையும் நாம் விரும்புவதைச் செய்வார்களாக.

4. அர்யமானும் வருணனும் எங்களுக்கு வழியைக் கற்பிக்கிறார்கள். உணவுப் பாலகனான அக்கினி சுகத்துக்கு வழியைப் புலப்படுத்துகிறான். இந்திரனும் விஷ்ணுவும் போற்றப்பட்டு, மக்களுள்ளதும், ஆற்றலுள்ளதும், விரும்பத் தகுந்ததுமான செல்வத்தை, சுகத்தைத் தருவார்களாக.

5. நான் பர்வதத்தினுடைய, மருத்துக்களுடைய தேவ பாலகனான பகனுடைய பாலனங்களைப் பற்றுகிறேன். தலைவனான வருணன், மனிதனால் தோற்றுவிக்கப்படும் துன்பத்திலிருந்து எங்களைப் பாலிப்பானாக. மித்திரன் நட்புத்தன்மையுடன் எங்களைப் பாலிப்பானாக. 3,610.

6. தேவிகளான சோதிபுவிகளே! நான் விரும்பத் தகுந்த செல்வங்களுக்காக அஹிர்புத்னியோடு சேர்ந்து, உங்களை, முழங்கும் நதிகள் மறையும் கடலை, செல்வங்களைத் தேட கடலைக் கடப்பவர்கள் துதிப்பது போல் துதிக்கிறேன்.

7. தேவியான அதிதி, தேவர்களோடு சேர்ந்து எங்களைப் பாலிப்பார்களாக. சதா கவனமுடன் பாலிப்பவனான இந்திரன், எங்களைப் பாலிப்பானாக. நாங்கள் மித்திரனுக்கும், வருணனுக்கும், அக்கினிக்கும் உயர்த்திய அவியை அளிக்காமலிருக்க ஆற்றலற்றிருக்கிறோம்.



8. அக்கினி செல்வத்தின் தலைவன். மகத்தான சௌபாக்கியத்தின் தலைவன். அவன் அவற்றை எங்களுக்களிப்பானாக.

9. உண்மையைப் பேசுபவளும், மிகுந்த உணவுள்ளவளும், செல்வியுமான உஷையே! பல உத்தமச் செல்வங்களை அளிக்கவும்.

10. ஸவிதாவும், பகனும், வருணனும், மித்திரனும், அர்யமானும், இந்திரனும், அவரவர் அளிக்கும் செல்வத்தோடு எங்களிடம் வருவார்களாக. 3,615

## 56. சோதி புவிகள்

### 352. வாமதேவன்–கௌதமன்

1. புகழ் பெற்ற மகத்தான சோதி புவிகள் தூயப்படுத்தும் மந்திரங்களால் கவரப்பட்டு, இந்த யக்ஞத்திலே ஒளியோடு விளங்குவார்களாக. பொழியும் பர்ச்சன்னியன் தன் முன்னோடிகளால் - காற்றுக்களால் - மகத்தான பரந்த உலகங்களைக் கடந்து கொண்டு எங்கும் கர்ச்சிக்கிறான்.

2. தேவிகளும், துதியாருகர்களும், துன்பஞ்செய்யாதவர்களும், வளப்படுத்துபவர்களும், சத்தியமுள்ளவர்களும், தேவர்களைப் புதல்வர்களாக அடைந்தவர்களுமான புவியும் சோதியும், தூய்மைப் படுத்தும் மந்திரங்களால் கவரப்பட்டு, துதியாருகர்களான தேவர்களோடு இந்த யக்ஞத்தில் இருப்பார்களாக.

3. இந்த சோதியையும் புவியையும் பிறப்பித்தவனும், பரந்திருப்பவையும், ஆழமுள்ளவையும், நன்கு கற்பிக்கப்பட்டவையும், ஆதரவற்றவையுமான இவ்விரு உலகங்களையும், தன் ஆற்றலால் ஒருமைப் படுத்திய தீரன், உலகங்களிலே உத்தமச் செயலை நடத்தியவனானான்.

4. பரந்தவர்களும், எங்கும் நிறைந்தவர்களும், துதியாருகர்களும், பரஸ்பரம் சேர்ந்து இன்புறுபவர்களும், உணவையளிக்க விரும்புபவர்களுமான சோதி

யும் புவியும், எங்கள் மனைவிகள் வசிக்கும் பரந்த மனை களோடு எங்களைப் பாலிப்பார்களாக. நாங்கள், செயல் களை நடத்தத் தேர்களையும் ஆட்களையும் அடைவோமாக.

5. நாங்கள் பிரகாசிக்கும் இருவரான உங்களுக்கு —சோதிக்கும் புவிக்கும் மகத்தான தோத்திரத்தைக் கூறுகிறோம். நாங்கள் சுத்தர்களான உங்களுக்கு வணக்கத்தைச் செலுத்த உங்களிடம் வருகிறோம். 3,620

6. உங்களுடைய தேகத்தாலும், சொந்த பலத்தாலும், பரஸ்பரம் தூய்மை செய்து கொண்டு நீங்கள் பிரகாசிக்கிறீர்கள். நீங்கள் பூர்வத்திலிருந்தே ருதத்தை ஏந்துகிறீர்கள்.

7. மகத்தான சோதி புவிகளே! நீங்கள் உங்கள் நண்பனின் விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறீர்கள். ருதத்தைச் செழிப்பித்துப் பூர்த்தி செய்து யக்ஞத்திலே அமர்ந்திருக்கிறீர்கள். 3,622

## 57. க்ஷேத்திரபதி

### 353. வாமதேவன்—கௌதமன்

#### நிலத்தலைவன்

1. நாங்கள் எங்கள் நண்பனான நிலத்தலைவனோடு ஜயிக்கிறோம். அவன் எங்களுக்குப் பசுக்களையும், குதிரைகளையும், புட்டியையும் அளிப்பானாக. ஏனெனில் அந்த ஈகைகளால் அவன் எங்களை இன்புறுத்துகிறான்.

2. நிலத்தின் தலைவனே! நீ பாலையளிக்கும் பசுவைப் போல், தேன் போல் சொட்டுவதும், நெய் போல் சுத்தமாயிருப்பதும், இனிப்பதும், மிகுந்துள்ளதுமான சலத்தை எங்களுக்களிக்கவும்.

3. நிலத்தின் ஓஷதிகள் எங்களுக்கு இனியவையாகுக. சோதிகளும், சலங்களும், வானமும் எங்களுக்கு இனியவையாகுக. நிலபதி எங்களுக்கு இனியனுவானாக.



நாங்கள் பகைவர்களால் தடைபடாமல் அவனைப் பற்றுவோமாக.

#### சுநம்

4. காளை சுகமாக இழுக்க; மனிதர்கள் சுகமாக உழைக்க. கலப்பை சுகமாக உழ. கயிறுகள் சுகமாகக் கட்டுக. சாட்டை சுகமாக அடிக்க.

#### சுநா சீரங்கள்

5. உழுபடையே! உழவனே! நீங்கள் எங்களுடைய மொழியால் இன்புறுங்கள். நீங்கள் சோதியிலே கற்பித்த சலத்தால் இந்தப் புவியை நனையுங்கள். சுநா—வாயு, சீரா—உழுபடை. சூரியன்—உழுபடை, உழவன் எனவும் கூறலாம். 3,627

#### ஸீதை

6. செல்வியான ஸீதையே! உழவுச்சாலே! வேளாண்மையே! நீ எங்களருகிலாகவும். நாங்கள் உன்னைப் போற்றுகிறோம். நீ எங்களைச் செல்வப்படுத்தவும்; நல்ல பழத்தையளிக்கவும். நாங்கள் வந்திக்கிறோம்.

7. இந்திரன் ஸீதையைப் பற்றுவானாக. பூஷா அவளைச் செலுத்துவானாக. பால் நிறைந்திருக்கும் அவள் ஒவ்வொரு வருடமும் பாலைத் தருவாளாக.

#### சுநா சீரங்கள்

8. கலப்பைக் கொழு நம்முடைய நிலத்தை சுகமாக உழுக. காளைகளோடு உழவன் சுகமாகச் செல்க. பர்ச்சன்னியன் இனிய தாரையோடு சுகமாகப் பொழிக. சுனமே! ஸீரமே! எங்களுக்குச் செல்வத்தையளியுங்கள். 3,630

## 58. நெய்

### 354. வாமதேவன்—கௌதமன்

1. சமுத்திரத்திலிருந்து திதிப்பான அலை எழுகிறது. சூரிய ரசிமியால் மனிதன் அமுதத்தன்மையை

அடைகிறான். நெய்யின் இரகசியமான பெயர் எது உண்டோ, அது தேவர்களின் நாக்காகும். அதுவே அமிருதத்தின் நாபியாகும்.

2. நாங்கள் இந்த யக்ஞத்திலே நெய்யின் நாமத்தைப் போற்றுகிறோம். நாங்கள் அதை வணக்கத்தோடளிக்கிறோம். அது ஏத்தப்படுங்கால் நான்கு கொம்புகளுள்ள பிரமன் செவியுறுவானாக. சுந்தர நிறமுள்ள தேவன் இந்த யக்ஞத்தை நடத்துகிறான்.

3. அவனுக்குக் கொம்புகள் நான்கு. மூன்று கண்களுண்டு. அவனுக்கு ஏழு கைகள். முக்கட்டுக்களுள்ள காளை கர்ச்சிக்கிறது. மகத்தான தேவன் மனிதர்களின் நடுவே நுழைந்தான்.

4. பசுவினுள் மும்விதமாய் வைக்கப்பட்டுள்ளதும், பணிகளால் மறைக்கப்பட்டுள்ளதுமான நெய்யைத் தேவர்கள் கண்டார்கள். இந்திரன் ஒரு பாகத்தைத் தோற்றுவித்தான். சூரியன் வேறொன்றையும், மற்ற தேவர்கள், அவிக்காகப் பிரகாசமான அக்கினியினிடமிருந்து மூன்றாவதைக் கற்பித்தார்கள்.

5. இருதயக் கடலிலிருந்து நூற்றுக்கணக்கான தாரைகள் பகைவனுக்குத் தெரியாமல் விழுகின்றன. நான் நெய்யின் இந்தத் தாரைகளைக் காண்கிறேன். அவற்றின் நடுவிலிருக்கும் பொன்மய வேதஸனையும் காண்கிறேன். 3,635

6. அவை – நெய் தாரைகள் – இருதயத்திலிருக்கும் மனத்தால் சுத்தமாகி இன்பமான நதிகளைப் போல் இடையறாமல் பெருகுகின்றன. இந்த நெய் தாரைகள் அனல் மீது வேடனிடமிருந்து பறந்தோடும் மானைப் போல் இறங்குகின்றன.

7. காற்றைப் போல் வேகமாயிருப்பவையும், இறக்கத்தில் விழும் நதியின் சலங்களைப் போல் ஓடுபவையும், அலைகளால் கரைகளை உடைத்துக் கொண்டு மதப்பட்ட



குதிரையைப் போல பாய்பவையுமான சலங்களைப் போல் நெய் தாரைகள் வேகமாய் விழுகின்றன.

8. நெய் தாரைகள் கணவனுக்கு மங்கல வடிவத்துடன் சிரித்து, அவனிடம் அன்புடன் இயங்கும் மனைவிகளைப் போல் அக்கினிக்கு இணக்கமாகின்றன. அவை சுவாலையை ஸமித்தைப் போல் ஊட்டுகின்றன. ஜாதவேதஸன் ஏந்தப்பட்டு அவற்றை விரும்புகிறான்–ஏற்கிறான்.

9. யக்ஞம் நடத்தப்படும் நிலத்திலே ஸோமத்தைப் பொழியும் இடத்திலிருந்து பெருகும் இந்த நெய் தாரைகளை, தங்கள் கண்களில் மை இட்டுக்கொண்டு கணவனிடம் செல்ல அலங்கரிக்கும் யுவதிகளைப் போல் நான் எண்ணுகிறேன்.

10. எங்கள் துதிக்குப் பசு மந்தையை யளியுங்கள்- உத்தமச் செல்வங்களை 'அளியுங்கள். நாங்கள் அளிக்கும் யக்ஞத்தைத் தேவர்களிடம் செலுத்துங்கள். இனிய நெய் தாரைகள் இறங்குகின்றன.

11. அக்கினியே! உன்னுடைய சோதி, கடலில் இருந்தாலும், மனிதனின் இருதயத்திலிருந்தாலும், பிராணிகளின் உயிரிலிருந்தாலும், சலங்களின் சங்கமத்திலிருந்தாலும், போரிலிருந்தாலும் எல்லா உலகமும் அதனிடம் தஞ்சமடைகிறது. உன்னுடைய ரஸத்தில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள அந்தத் திதிப்பான அலையை நாங்கள் பற்றுவோமாக. 3,641

மண்டலம் : 4.

சூக்தங்கள் : 58 — இருக்குக்கள் : 589

**நான்காவது மண்டலம் முற்றிற்று.**

# ஐந்தாவது மண்டலம்

## 1. அக்கினி

### 355. புதனும் கவிஷ்டிரனும்–ஆத்திரேய வம்சம்

1. புற்றரைக்கு வரும் பசுவைப் போல் தோன்றும் உஷையிலே அக்கினி சனங்களால் அளிக்கப்படும் ஸமிந்தனத்தால் சொலிப்பிக்கப்படுகிறான். அவனுடைய சுவாலைகள் வானுக்குச் செல்ல தங்கள் கிளைகளை மேலே எழுப்பும் மகத்தான மரங்களைப் போல மேலெழுகின்றன.

2. ஹோதா தேவர்களை யஜிக்க எழுப்பப்படுகிறான். நல்ல மனமுள்ள அக்கினி உஷையோடு எழுந்திருக்கிறான். சொலிப்பிக்கப்பட்ட அக்கினியின் பிரகாசமாயுள்ள ஆற்றல் - சுவாலை - தோன்றுகிறது. மகத்தான தேவன் இருட்டிலிருந்து விடுவிக்கப்பட்டிருக்கிறான்.

3. அக்கினி திரட்டப்பட்டிருந்த உலகத்தைப் பந்தஞ் செய்திருந்த கச்சையைப் பற்றுகிறான். பிறகு பிரகாசிக்கும் அக்கினி தன் பிரகாசமாயுள்ள ரசிமிகளால் விசுவத்தைப் புலப்படுத்துகிறான். அப்பால் பலமளிக்கும் தட்சிணை - நெய் தாரை - சுவாலையோடு சேர்க்கப்படுகிறது. அக்கினி உச்சத்தில் எழுந்து சிருவங்களால் பரத்தி சொரியப்படும் தாரையைத் தன் நாக்குகளால் பருகுகிறான்.

4. தேவர்களை விரும்பும் மனிதர்களின் மனங்கள், சூரியனில் நிலவும் கண்களைப் போல் அக்கினியில் தியானமாகின்றன. பலவித வடிவங்களுள்ள சோதியும் புவியும், அவனை உஷையோடு பிறப்பிக்குங்கால், அவன் வெள்ளைக் குதிரையைப் போல் எழுகிறான்.

5. சனிப்பிக்கத் தகுந்த அக்கினி தினங்களின் துவக்கத்திலே பிறக்கிறான். சிகப்பான நட்புத்தன்மைகளுள்ள காஷ்டங்களிலே ஸ்தாபிக்கப்படுகிறான். பிறகு யக்ஞாருகனும் ஹோதாவுமான அக்கினி, ஏழு செல்வங்களை ஏந்துகிறான். அவன் ஒவ்வொரு மனையிலும் அமர்த்தப்படுகிறான். 3,646



6. யக்ஞாருகனும் ஹோதாவுமான அக்கினி, தாயான புவியின் மீது சுகந்தமான இடத்திலே அமர்த்தப்படுகிறான். தருணனும், கவியும், பல இடங்களில் இருப்பவனும், யக்ஞத்தை நடத்துபவனும், தாங்குபவனுமான அக்கினி, சொலிப்பிக்கப்பட்டு மனிதர்களின் நடுவே விளங்குகிறான்.

7. அவர்கள் இப்பொழுது துதிகளோடு அறிஞனும், யக்ஞங்களில் விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும், ஹோதாவும், ருதத்தால் சோதியையும் புவியையும் பரத்துபவனும், வழிபடுபவர்களால் எப்பொழுதும் நெய்யோடு உபசரிக்கப்படுபவனுமான அக்கினியை ஏத்துகிறார்கள்.

8. யக்ஞாருகனான அவன், அவனுடைய சொந்த இடத்திலேயே போற்றப்படுகிறான். அக்கினியே! தானமனமுள்ளவனும், கவிகளின் நடுவே புகழ் பெற்றவனும், நம்முடைய அதிதியும், ஆயிரங் கொம்புகளுள்ளவனும், விருஷபனும், சர்வசக்தியுமுள்ளவனுமான நீ, அன்னியர்களையெல்லாம் ஜயிக்கிறாய்.

9. அக்கினியே! நீ எவனுக்காக மிக்க அழகுடன் தோற்றுவிக்கப்பட்டாயோ அவனிடமிருந்து அந்நியர்களிடஞ் செல்லுகிறாய். நீ துதியாருகன்; ஒளியுள்ளவன்; மிக்கப் பிரகாசிப்பவன்; சனங்களால் பிரியப்படுபவன்; மானிடர்களின் அதிதி.

10. மிக்க இளைஞனான உனக்கு, மனிதர்கள் அருகில் இருந்தாலும், தூரத்தில் இருந்தாலும் அவியைச் செலுத்துகிறார்கள். நீ மிக்கத் துதிப்பவனுடைய தோத்திரத்தை ஏற்றுக்கொள்ளவும். அக்கினியே! நீ அளிக்கும் சுகம் பெரிதும் பரந்தது; மங்களமளிப்பது. 3,651

11. காந்தனான அக்கினியே! நீ துதியாருகத் தேவர்களோடு சேர்ந்து, நன்கு செலுத்தப்படுவதும் பிரகாசிப்பதுமான தேரிலே இன்று ஏறவும். வழிகளை அறியும் நீ, பரந்த வானின் வழியாய் அவிகளை அருந்த தேவர்களை ஏந்தி வா.

12. நாங்கள் யக்ஞாருகனும், விருஷபனும், பொழிபவனுமான அக்கினிக்கு இந்த வந்தன மொழியைக் கூறுகிறோம். கவிஷ்டிரன் வணக்கத்தோடு இந்த ஸ்தோமத்தை அக்கினிக்கு, சோதியிலே பிரகாசிப்பவனும், பரந்து செல்பவனுமான சூரியனைப் போல் அளிக்கிறான். 3,658

## 2. அக்கினி

### 356. குமாரன் அத்திரியின் புதல்வன் அல்லது விரசன் ஜானனின் புதல்வன்

1. யுவதியான தாய் தன் அதமான அழைக்கப்பட்ட குமாரனை மர்மத்திலே ஏந்துகிறாள். அவள் அவனைத் தந்தையினிடமளிக்கவில்லை. மனிதர்கள் அவனுடைய ஊறுபட்ட வடிவத்தைக் காணார்கள். ஆனால் அவன் அவர்களின் முன்னே சலன நிலையில் ஸ்தாபிக்கப்பட்டவுடன் அவனை அவர்கள் காண்கிறார்கள்.

2. யுவதியே! நீ துன்மதியாகி, சேடிப்பெண்ணாகி உன்னால் ஏந்தப்படும் குமாரன் யார்? மகத்தான அரசி அவனைப் பிறப்பித்தாள். கரு-கருப்பம்-பல வருடங்கள் வளர்ந்து தாய் அவனைத் தோற்றுவித்த போது நான் அவன் பிறந்ததைப் பார்த்தேன்.

3. நான் அமுதமாயும் வியாபகமாயுமுள்ள அவியை அளிக்குங்கால், பொற்பல்லுள்ளவனும், ஒளி நிறமுள்ளவனும், சுவாலைகளான ஆயுதங்களை ஏந்துபவனுமான அவனை, அருகிலுள்ள இடத்திலிருந்து பார்த்



தேன். இந்திரனை ஏற்காதவர்களும் துதிக்காதவர்களும் அவனுக்கு எந்தத் தீமையைச் செய்வார்கள்?

4. அவனாகவே மிக்கப் பிரகாசித்துக் கொண்டு பசுக்களின் மந்தையைப் போல், ரகசியமாய் ஒரு இடத்திலிருந்து வேறு இடத்துக்குச் செல்வதை நான் கண்டேன். அவர்கள் அவனுடைய சுவாலைகளைப் பற்றவில்லை. அவை தேய்ந்துவிட்டன. அவன் மீண்டும் பிறந்தான். நரைத்த ரோமங்களை அடைந்த அவை மீண்டும் தருண சுவாலைகளாகின்றன.

5. என்னுடைய சனங்களைப் பசுக்களிடமிருந்து எவர் பிரித்தார்கள்? காக்க எதிர்ப்பற்ற பாலகனில்லையா? அந்த சனங்களைப் பிடித்தவர்கள் அழிவார்களாக. எங்கள் விருப்பங்களை அறியும் அக்கினி பசுக்களைப் பாலிக்க நெருங்குகிறான். 3,658

6. பகைவர்கள் பிராணிகளின் அரசனும், சனங்களின் தஞ்சமுமான அக்கினியை மனிதர்களின் நடுவே மறைத்து வைத்தார்கள். அத்திரியின் மந்திரங்கள் அவனை வெளிப்படுத்துக-விடுவிக்க. நிந்திப்பவர்கள் நிந்திக்கப்படுவார்களாக.

7. நீ பந்தமாயிருந்த சுனச்சேபனை ஆயிரம் யூபங்களிலிருந்து விடுவித்தாய். அவன் மிக்கச் சாந்தமுடனிருந்தான் – துதித்தான். ஹோதாவே! அக்கினியே! அறிஞனே! நீ எங்களுடைய இந்த யக்ஞத்திலே அமர்ந்து எங்களைப் பாசங்களிலிருந்து விடுவிக்கவும்.

8. அக்கினியே! நீ கோபமடைந்தால் என்னிடமிருந்து நீங்குகிறாய். இதைத் தேவர்களின் விரதங்களைப் பாலிக்கும் இந்திரன் என்னிடம் கூறினான். அறிஞனான இந்திரன் உன்னையே நோக்கினான். அவனால் கற்பிக்கப்பட்டு, நான், அக்கினியே! உன்னிடம் வந்தேன்.

9. அக்கினி மகத்தான சோதியோடு விவிதமாய்ப் பிரகாசிக்கிறான். அவன் தன் மகத்துவத்தால் அனைத்தையும் புலப்படுத்துகிறான். அவன் தேவத்தன்மையற்றவையும் துன்புறுத்துபவையுமான மாயைகளைத் தாழ்த்துகிறான். அவன் அரக்கர்களைக் கொல்ல, தன் கொம்புகளைக் கூர் செய்து கொள்கிறான்.

10. அக்கினியே! உன்னுடைய கர்ச்சிக்கும் சுவாலைகள் அரக்கர்களைக் கொல்ல, கூரிய ஆயுதங்களைப் போல் வானிலே தோன்றுக. அவனுடைய மதத்திலே அவனுடைய பிரகாசிக்கும் கதிர்கள் அரக்கர்களை வருத்தப்படுத்துகின்றன. தேவத்தன்மையற்ற எதிர்ப்புப் படைகள் அவனைத் தடுக்கத் திறனற்றவை. 3,663

11. பற்பல ஆற்றல்களோடு தோன்றும் அக்கினியே! தேரைக் கற்பிக்கும் திறக்கையுள்ள சிற்பியைப் போல் அறிஞனான நான் உனக்கு இந்த ஸ்தோமத்தைக் கற்பிக்கிறேன். தேவனான அக்கினியே! நீ இதை-இந்த ஸ்தோமத்தை-ஏற்றால் இதனால் வியாபகமான சலங்களை அடைவோமாக.

12. பல கண்டங்களுள்ளவனும், விருஷபனும், சதா வளர்பவனுமான அக்கினி, சத்துருவின் செல்வத்தைத் தடைபடாமல் திரட்டுகிறான். இங்ஙனம் அக்கினியினிடம் அமுதர்களான தேவர்கள் கூறினார்கள். அவன் தருப்பையைப் பரத்தும் மனிதனுக்கு சுகத்தையளிப்பானாக. அவியையளிக்கும் மனிதனுக்கு சுகத்தையளிப்பானாக. 3,665.

## 3. அக்கினி

### 357. வஸுஸ்சுருதன்-ஆத்திரேயன்

1. அக்கினியே! நீ பிறக்குங்கால் வருணனாயிருக்கிறாய். நீ சொலிப்பிக்கப்படுங்கால் மித்திரனாகிறாய். பலத்தின் மகனே! உன்னில் எல்லாத் தேவர்களுமிருக்கிறார்கள். நீ அவியளிக்கும் மனிதனுக்கு இந்திரனாயிருக்கிறாய்.



2. நீ கன்னிப் பெண்களின் சார்பில் அர்யமானாயிருக்கிறாய். தானே இயங்குபவனே! உன்னுடைய நாமம் மர்மமாயிருக்கிறது. நீ தம்பதிகளை ஒருமனப்படுத்துங்கால் அவர்கள் உன்னைப் பிரியமான நண்பனைப் போல் பாலாலும் நெய்யாலும், எழிலும் சுகந்தமும் துலங்க அஞ்சனப்படுத்துகிறார்கள்.

3. மருத்துக்கள் உன்னுடைய புகழுக்காக வானைச் சுத்தப்படுத்துகிறார்கள். விஷ்ணுவினுடைய இடையடி வைக்கப்பட்டவுடன், ருத்திரனே! உன்னுடைய பிறப்பு அழகாயும் அற்புதமாயுமிருக்கிறது. அதனால் நீ பசுக்களின்-சலங்களின்-மர்மமான நாமங்களைப் பாலிக்கிறாய்.

4. தேவனான அக்கினியே! உன்னுடைய புகழால் தேவர்கள் பொலிவுள்ளவர்களானார்கள். அவர்கள் உன்னிடம் அதிக அன்புள்ளவர்களாகி அமுதத்தைப் பருகுகிறார்கள். மனிதர்கள் பயனை விரும்பும் கர்த்தாவுக்காக அவிகளை அளித்து ஹோதாவான அக்கினியை ஏத்துகிறார்கள்.

5. யஜிப்பதில்-உன்னையன்றி சிறந்த ஹோதா வேறு எவனுமில்லை. தன்னயனே! அறிவிலும் உன்னைக் கடப்பவன் எவனுமில்லை. நீ எந்த மனிதனுடைய மனையிலே அதிதியாயிருக்கிறாயோ, அந்த மனிதன், தேவனே! யக்ஞத்தால் பகை சனங்களை ஜயிக்கிறான். 3,670

6. அக்கினியே! செல்வத்தை விரும்பும் நாங்கள் அவிகளால் உன்னை எழுப்பி, உன்னால் பாலனமாகி, செல்வங்களை அடைவோமாக. நாங்கள் தினந்தோறும் யக்ஞங்களிலே பலத்தைப் பெற்று, போரிலே ஜயிப்போமாக. பலத்தின் மகனே! நாங்கள் செல்வங்களால் பகை சனங்களை ஜயிப்போமாக. செல்வத்தால் மக்களை அடைவோமாக.

7. எங்களுக்குத் தீமையையும் துரோகத்தையும் செய்யும் தீயோனை அக்கினி துன்புறுத்துவானாக, அக்கினியே! அறிஞனான நீ, எங்களை மேற்கூறிய இரு வழிகளால் துன்புறுத்தும் தூற்றுபவனைத் துலைக்கவும்.

8. உனக்கு இடத்தையளித்த மானிடர்களால் சொலிப்பிக்கப்பட்டு, மிக்கப் பிரகாசமாகி, யக்ஞச் செல்வம் குவிக்கப்பட்ட இடத்துக்கு நீ சென்றபோது, இவ்வுஷையிலே பழையவர்கள் தேவனான உன்னைத் தூதனாகச் செய்து அவிகளோடு யஜித்தார்கள்.

9. ஆற்றலின் மகனே! தந்தையான உனக்கு அறிவுள்ள புதல்வனைப் போல் வணக்கமளிப்பவனை, போரிலே பாலனத்துக்குச் செலுத்தவும். அறிஞனே! நீ எப்பொழுது எங்களை நோக்குவாய்? யக்ஞத்தை நடத்துபவனே! எங்களை எப்பொழுது நல்ல வழிகளில் செலுத்துவாய்?

10. விசுவே! நீ தந்தையாக அவியை ஏற்குங்கால் வழிபடுபவன் உன்னைப் போற்றி உனக்கு மிகுந்த அவிகளைத் தருகிறான். அக்கினி செய்வோனுடைய பல அவிகளை விரும்பி, தன் திறத்தால் அவனைச் செழிப்பித்து, நலப்படுத்த விரும்பி அவனுக்கு சுகத்தைத் தருகிறான்.

11. அக்கினியே! மிக்க இளைஞனாயிருப்பவனே! நீ துதிப்பவனை எல்லாத் துன்பங்களிலிருந்தும் கடத்திச் செல்லுகிறாய். திருடர்கள் காணப்பட்டார்கள். தீச்சதிகளை விரும்பிய பகை சனங்களும் எங்களால் விலக்கப்பட்டார்கள்.

12. இந்தத் துதிகள் உனக்குக் கூறப்பட்டிருக்கின்றன. வசுவே! ஒரு வேளை குற்றமிருப்பதையும் மொழிந்திருக்கலாம். அக்கினி செழித்து எங்களை நிந்திப்பவனிடமும் துன்புறுத்துபவனிடமும் செலுத்தாமலிருப்பானாக. 3,677.



# 4. அக்கினி

## 358. வசுஸ்சுருதன்–ஆத்திரேயன்

1. அக்கினியே! அரசனே! நான் வசுக்களின் வசுபதியான உன்னை யக்ஞங்களிலே போற்றுகிறேன். உன்னால் ஆற்றலை விரும்பும் நாங்கள் ஆற்றலை ஜயிப்போமாக-அடைவோமாக. உன்னால் நாங்கள் பகை சனங்களின் படைகளை ஜயிப்போமாக.

2. அவி ஏந்துபவனும் தேய்வற்றவனுமான அக்கினி, எங்கள் தந்தையாயிருப்பானாக. வியாபகனும் மிக்கப் பிரகாசிப்பவனுமான அவன், எங்களுக்கு இனிய முகமுடனிருப்பானாக. காருக பத்தியத்தை நன்கு நடத்தும் எங்களுக்கு அவன் மிக்க உணவைத் தருவானாக. அவன் எங்களுக்கு மிகுந்த புகழை அளிப்பானாக.

3. கவியும், மானிடப் பிரசைகளின் தலைவனும், சுத்தனும், சுத்தப்படுத்துபவனும், நெய்யங்கமுள்ளவனும், ஹோதாவும், விசுவத்தை அறிபவனுமான அக்கினியை அறிஞர்களே! நீங்கள் ஏந்துங்கள். தேவர்களின் நடுவே அவன் விரும்பத் தகுந்த செல்வங்களைத் தருகிறான்.

4. அக்கினியே! நீ இளையுடன் கலந்து இன்பமாகி சூரிய ரசிமிகளோடு முயற்சியிலாகி துதியை விரும்பவும். எங்களுடைய ஸமிந்தனத்தைப் பற்றவும். ஜாதவேதஸனே! அவியை அருந்த தேவர்களை ஏந்தி வா.

5. போற்றப்படுபவனும், தான மனமுள்ளவனும், மனையிலே அதிதியாக ஏத்தப்படுபவனுமான நீ, எங்களுடைய இந்த யக்ஞத்துக்கு வா. அக்கினியே! நீ எல்லாப் பகைவர்களையுமழித்து, பகைப்பவர்களின் பொருள்களை எங்களிடம் செலுத்தவும். 3,682.

6 அக்கினியே! உன் படையால் தஸ்யுவைக் கொல்லவும். உன்னுடைய சொந்த தேகத்துக்கே அவர்களு

டைய உணவை உரிமை செய்து கொள்ளவும். ஆற்றலின் மகனே! நீ தேவர்களைத் திருப்தி செய்வதால், தலைவர்களின் தலைவனான நீ, எங்களைப் போரிலே பாலிக்கவும்.

7. அக்கினியே! உன்னை நாங்கள் பாக்களால் போற்றுகிறோம். சுத்தப் படுத்துபவனே! மங்கல ஒளி-உள்ளவனே! நாங்கள் உன்னை அவிகளால் போற்றுகிறோம். எங்களுக்கு விரும்பப்படும் எல்லாச் செல்வங்களையுமளிக்கவும்.

8. அக்கினியே! எங்கள் யக்ஞத்தை விரும்பவும். மூன்று இடங்களில் இருப்பவனே! எங்கள் அவியை விரும்பவும். நாங்கள் தேவர்களின் நடுவே நலத்தைச் செய்பவர்கள் எனக் கருதப்படுவோமாக. முக்காப்புக்களுள்ள மனையோடு எங்களைப் பாலிக்கவும்.

9. ஜாதவேதஸனே! நதியிலே சனங்களைத் தாங்க முடியாத எல்லாத் தீமைகளிலிருந்தும் நீ கடத்திச் செல்லுகிறாய். அத்திரியைப் போல் எங்களால் வணக்கத்துடன் புகழப்படும் நீ, உன்னை எங்களுடைய தேகங்களைப் பாலிப்பவனாக அறிந்து கொள்ளவும்.

10. சிரத்தையுள்ள துதியுள்ள மனத்தோடு உன்னைத் துதித்து, மனிதனான நான், அமுதனான உன்னை ஊக்கமாயழைக்கிறேன். ஜாதவேதஸனே! எங்களுக்குப் புகழையளிக்கவும். அக்கினியே! நான் பிரசைகளோடு அமுதத்வத்தை அடைவேனாக. 3,687

11. ஜாதவேதஸனே! அக்கினியே! நீ எந்த சுகிருதனுக்கு உலகத்தையும் சுகத்தையும் தருகிறாயோ, அவன், குதிரைகளும், பசுக்களும், புதல்வர்களும், வீரமக்களுமுள்ள செல்வத்தையும், சுவஸ்தியையும் பெறுகிறான். 3,688



# 5. ஆப்பிரி ஸூக்தம்

## 359. வசுஸ்சுருதன்-ஆத்திரேயன்

### ஸமிந்தநம்

1. நன்கு சொலிப்பிக்கப்பட்டவனும், பிரகாசிப்பவனும், ஜாதவேதஸனுமான அக்கினிக்கு மிக்க நெய்யையளியுங்கள்.

### நராசம்ஸன்

2. துன்பரகிதனும், கவியும், தேன் கையனுமான நராசம்ஸன் இந்த யக்ஞத்தை ஊக்கப்படுத்துகிறான்.

### இளன்

3. சுளிதனான அக்கினியே! எங்களுடைய பாலனத்துக்காக அற்புதனும் பிரியனுமான இந்திரனைச் சுகமாகச் செல்லும் தேரிலே ஏந்தி வா.

### தருப்பை

4. கம்பளத்தைப் போல் மிருதுவாயுள்ள தருப்பைப் பரத்தப்படுக. துதிப்பவர்கள் துதிக்கிறார்கள். ஒளியுள்ள தருப்பையே! நீ எங்கள் செல்வதானத்துக்காகவும்.

### கதவுகள்

5. தேவிகளே! கதவுகளே! பாலனத்துக்காகக் கதவுகளைத் திறந்து விடுங்கள். யக்ஞத்தைப் பூர்த்தி செய்யுங்கள். 3,693

### இரவும் பகலும்

6. நாங்கள் அழகுள்ளவர்களும், உணவையளிப்பவர்களும், செழிப்பிப்பவர்களும், மகத்தானவர்களும், ருதத்தின் தாய்மார்களுமான இரவையும் பகலையும் போற்றுகிறோம்.

### தேவ ஹோதாக்கள்

7. தேவ ஹோதாக்களான நீங்கள் எங்களால் போற்றப்பட்டு காற்றின் வழியில் சலனமாகி எங்களுடைய மனிதனின் இந்த யக்ஞத்துக்கு வருவீர்களாக.

### மூன்று தேவிகள்

8. சுகத்தைத்தரும் மூன்று தேவிகளான இளையும், ஸரஸ்வதியும், மஹீயும் இன்னலற்றவர்கள். அவர்கள் தருப்பை மீது அமர்வார்களாக.

### துவஷ்டா

9. துவஷ்டாவே! நீ சுகப்படுத்துபவனாக இங்கு வரவும். வியாபகமும் செழுமையுமுள்ள நீ, நீயாகவே எல்லா யக்ஞங்களிலும் வந்து, எங்களைப் பாலிக்கவும்.

### வனஸ்பதி

10. வனஸ்பதியே! நீ எங்கு தேவர்களின் மருமமான வடிவங்களைக் காண்கிறாயோ அங்கு அவிகளை எடுத்துச் செல்லவும். 3,698

### சுவாஹாத்துதி

11. இந்த அவி, சுவாஹாவோடு-வணக்கத்தோடு-அக்கினிக்கு வருணனுக்கு, சுவாஹாவோடு இந்திரனுக்கு மருத்துக்களுக்கு, சுவாஹாவோடு தேவர்களுக்கு அளிக்கப்படுகிறது. 3,699

## 6. அக்கினி

### 360. வசுஸ்சுருதன்-ஆத்திரேயன்

1. எவனிடம் மனை போல் எண்ணி, பசுக்களும் துரித குதிரைகளும் அவிகளை நித்தியமாயளிப்பவர்களும் செல்லுகிறார்களோ அவன் மனைகளையளிப்பவன். அவன் அக்கினி. அவனை நான் போற்றுகிறேன். அக்கினியே! உன்னை ஏத்துபவர்களுக்கு உணவை ஏந்தி வா.

2. எவனிடம் பசுக்களும் துரித குதிரைகளும், உத்தமப் பிறவியுள்ள அறிஞர்களும் செல்லுகிறார்களோ, எவன் மனைகளைத் தருகிறானோ, அவன் அக்கினி. அக்கினியே! உன்னை ஏத்துபவர்களுக்கு உணவை ஏந்தி வா.



3. அனைத்தையுங் காணும் அக்கினி மிக்கத் தினியுள்ள குதிரையை மனிதனுக்குத் தருகிறான். செல்வத்துக்காகச் சீரிய சம்பாரத்தை அக்கினி தருகிறான். அவன் இன்பமாகுங்கால் செல்வத்தைத் தருகிறான். அக்கினியே! நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு உணவை எடுத்து வரவும்.

4. அக்கினியே! தேவனே! நாங்கள் காந்தனும் கழியாதவனுமான உன்னை ஒளிப்படுத்துகிறோம். அதனால் உன்னுடைய புகழ் பெற்ற சுவாலை ஒளியுலகிலே பிரகாசிக்கிறது. அக்கினியே! நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு உணவை ஏந்தி வா.

5. ஒளித் தலைவனும், இன்பத்தைத் தருபவனும், பகைவர்களை யளிப்பவனும், மனிதர்களைப் பாலிப்பவனும் அவிகளை ஏந்திச் செல்பவனும், பிரகாசிப்பவனுமான அக்கினிக்கு இருக்கோடு அவியளிக்கப்படுகிறது. அக்கினியே! உன்னைப் போற்றுபவர்களுக்கு உணவை ஏந்தி வா. 3,704

6. இந்த அக்கினிகள், யக்ஞத்தின் அக்கினிகளிலிருக்கும் எல்லா மேன்மைகளையும் பாலிக்கின்றன. அவை இன்புறுத்துகின்றன. அவை பரவுகின்றன. அவை எப்பொழுதும் யக்ஞ உணவை விரும்புகின்றன அக்கினியே! நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு உணவை ஏந்தி வா.

7. அக்கினியே! உன்னுடைய இந்தச் சுவாலைகள் மிகுந்த உணவால் ஊட்டப்பட்டு புட்டியாகின்றன. இவை இறங்குங்கால் குளம்புள்ள பிராணிகளின் புற்றரைகளை விரும்புகின்றன. அக்கினியே! நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு உணவை ஏந்தி வா.

8. அக்கினியே! நீ உன்னைத் துதிக்கும் எங்களுக்குப் புதிய மனைகளையும் உணவையும் அளிக்கவும். உனக்குப் பாக்களைப் பாடிய நாங்கள் உன்னை ஒவ்

வொரு மனையிலும் தூதனுக அடைவோமாக. அக்கினியே! நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு உணவை ஏந்தி வா.

9. இன்புறுத்துபவனே! நீ உன் வாயினுள்ளே நெய் நிறைந்த இரு சுருக்கங்களைப் பெற்றுக் கொள்கிருய். ஆற்றலின் புதல்வனே! நீ எங்களை யக்ஞங்களிலே, எங்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்வாயாக. அக்கினியே! உன்னைப் போற்றுபவர்களுக்கு உணவை ஏந்தி வா.

10. நாங்கள் இங்ஙனம் அக்கினியைத் துதிகளோடும் யக்ஞங்களோடும் கிரமமாய்ப் போற்றிளேம். அவன் எங்களுக்கு வீரமக்களையும் துரித குதிரைகளின் செல்வத்தையும் தந்தான். அக்கினியே! நீ உன்னைப் போற்றுபவர்களுக்கு உணவை ஏந்தி வா. 8,709

## 7. அக்கினி

### 361. இஷன்–ஆத்திரேயன்

1. நண்பர்களே! மனிதர்களுக்கு மிக்கத் தாராளமாயளிப்பவனும், ஆற்றலின், ஆற்றலுள்ள புதல்வனுமான அக்கினிக்குத் தகுந்த ஸ்தோமத்தையும் உணவையும் அளியுங்கள்

2. எவனை யக்ஞ சதனத்தில் யக்ஞத்தை நடத்துபவர்கள் மகிழ்ந்து போற்றுகிருர்களோ, அந்த சொலிப்பிக்கப்படுபவனும் சனங்களால் தோற்றுவிக்கப்படுபவனுமான அவன் எங்கே?

3. நாம் அவனுக்கு உணவையும் மனிதர்களின் அவிகளையும் அளிக்கும் போது அவன் தன் ஒளியின் ஆற்றலால் ருதத்தின் – யக்ஞத்தின் – கடிவாளத்தைப் பற்றுகிருன்.

4. தூயப்படுத்துபவனும், தேயாதவனுமான அவன் வனஸ்பதிகளைத் தகிக்கும் போது இரவிலே



தூரத்திலிருப்பவனுக்குத் தன்னைப் புலப்படுத்த கொடியை ஏற்றுகிருன்.

5. அவனைப் போற்றுங்கால் அறிஞர்கள் சுவாலைகளின் மீது நெய்யைச் சொரிகிருர்கள். அனலின் மீது தாரைகள் அவனுடைய சொந்தப் புதல்வர்களைப் போல் தந்தையின் முதுகிலே குழந்தைகளைப் போல் ஏறுகின்றன. 8,714

6. மனிதன் அவனை அனைத்தையும் தாங்குபவனையும், உணவுக்குச் சுவையைத் தருபவனையும், மனிதர்களுக்கு வாசங்களைத் தருபவனையு மறிகிருன்.

7. பொன் தாடியிருப்பவனும், பிரகாசமான பற்களுள்ளவனும், பறந்தவனும், தடைபடாத பலமுள்ளவனுமான அவன், புல்லும் செடியும் சிதறியுள்ள வறண்ட நிலத்தைக் கொய்கிருன்.

8. அத்திரியைப் போல் துதிப்பவனுக்கு அவன் பிரகாசிக்கும் பரசுவைப் போல் இருக்கிருன். நன்கு ஏந்திய தாய்–அரணி–அவனைப் பிறப்பித்தாள். நலப்படுத்துபவனைத் தந்தாள். அப்பொழுது அக்கினி அவியை அடைகிருன்.

9. அக்கினியே! அவியை ஏற்பவனும் அனைத்தையும் தாங்குபவனுமான உனக்கு எங்கள் துதியால் இன்பம் தோன்றுகிறது. உன்னைப் போற்றும் இந்த மனிதர்களுக்கு நீ செல்வத்தையும், உணவையும், சித்தத்தையும் அளிக்கவும்.

10. உனக்கு இங்ஙனம் தனித் துதியை யளிக்கும் அறிஞன் உன்னுல் அளிக்கப்படும் பசுக்களைப் பெற்றுக் கொள்வாளுக. அக்கினியே! அளிக்காத தஸ்யுக்களை அத்திரி ஜயிப்பாளுக. அவன் உணவளிக்காத மனிதர்களைத் தாழ்த்துவாளுக. 8,719.

## 8. அக்கினி

### 362. இஷன்–ஆத்திரேயன்

1. அக்கினியே! ஆற்றலைப் புலப்படுத்துபவனே! ருதத்தை விரும்பிய புராதனர்கள், பலரை இன்புறுத்து பவனும், துதியாருகனும், அனைத்தையும் தாங்குபவனும், தான மனமுள்ளவனும், மனைபதியும், உத்தமனும், பழையவனுமான உன்னைப் பாலனத்துக்காக ஒளிப் படுத்தினார்கள்.

2. அக்கினியே! மனிதர்கள் அதிதியும், பழைய வனும், சுடர்ச் சுவாலையுள்ளவனும், பேரறிஞனும், பல ரூபனும், பொருள் தருபவனும், சுகந்தருபவனும், பிரியமான பாலகனும், தேய்ந்த மரங்களை அழிப்பவனு மான உன்னை மனையின் தலைவனாக நிலைப்படுத்தி னார்கள்.

3. அக்கினியே! உத்தமச் செல்வனே! எல்லா மானிடப் பிரஜைகளும், ஹோதாக்களை அறிபவனும், ஊகித்துத் தருபவனும், இரத்தினங்களைத் தருபவனும், இருதயங்களில் இருப்பவனும், அனைவருக்கும் புலப்படு பவனும், உரத்து முழங்குபவனும், நன்கு யஜிப்பவ னும், நெய்யில் வளர்பவனுமான உன்னைப் போற்று கிறார்கள்.

4. அக்கினியே! நாங்கள் தாரகனான உன்னைப் பலவிதமாய்த் துதிகளாலும் வணக்கங்களாலும் யஜித்து உன்னிடம் வருகிறோம். அங்கிரஸனே! நீ சொலிப் பிக்கப்பட்டவுடன் எங்களை விரும்பவும். வழிபடுபவ னால் அளிக்கப்படும் அவியாலும், பிரகாசிக்கும் சுவாலை களாலும், தேவனான அக்கினி இன்புறுவானாக.

5. அக்கினியே! பலரால் போற்றப்படுபவனும், பலரூபனுமான நீ, ஒவ்வொரு மனிதனுக்கும் பூர்வத் தைப் போல் உணவைத் தருகிறாய். நீ உன் பலத் தால் பலவித உணவுகளுக்கும் தலைவனாயிருக்கிறாய். நீ மிக்கப் பிரகாசிக்கும் போது உன் காந்தி எவனாலும் தடைபடாது. 3.724



6. அக்கினியே! தருணனே! நீ சொலிப்பிக்கப் பட்டவுடன் தேவர்கள் உன்னை அவி வகிப்பவனாகவும், தூதனாகவும் கற்பித்தார்கள். அவர்கள் மிக்க வேக முள்ளவனும், நெய் மூலனும், ஆஹுதனும், பிரகாசிப் பவனுமான உன்னை மதியை எழுப்பும் கண்ணாகக் கற்பித்தார்கள்.

7. அக்கினியே! சுகத்தை விரும்பிய புராதனர்கள் உன்னை சொலிப்பித்தார்கள். நீ அழைக்கப்பட்டவுடன் உன்னை நெய்யாலும் நல்ல ஸமித்தனத்தாலும் ஊட்டி னார்கள். அவற்றால் நீ வளர்ந்து, ஓஷதிகளைப் பெற்று, புவிக்குரிய உணவுகளுக்கெல்லாம் தலைவனாகிறாய். 3.726

## 9. அக்கினி

### 363. கய ஆத்திரேயன்

1. அக்கினியே! தேவனான உன்னை மனிதர்கள் அவிகளுடன் போற்றுகிறார்கள். நான் உன்னை ஜாத வேதஸனாகத் துதிக்கிறேன். எங்களுடைய அவிகளை இடையறாமல் ஏந்திச் செல்லவும்.

2. புகழைத்தரும் எல்லா யக்ஞங்களும் அவிகளும் எவனிடம் சேர்கின்றனவோ அக்கினியான அவன் பரத்திய தருப்பையுடன் அவியளிப்பவனுடைய மனை யிலே அவனுக்கு ஹோதாவாகிறான்.

3. இரு அரணிகள், நல்ல யக்ஞனும், மநு வம்சத் தில் வந்த மனிதர்களைத் தாங்குபவனுமான அக்கினி யைப் புதியதாய்ப் பிறந்த குழந்தையைப் போல் பிறப் பித்தன.

4. புல்லுக்கு அவாவுடனாகும் பசுவைப் போல் நீ வனங்களைத் தகிக்குங்கால் குடில கதியுள்ள பாம்பு களைப் போல் பற்றப்படக் கடினமாகிறாய்.

5. அவனுடைய புகையைக் கக்கும் சுவாலைகள் நெருங்கிச் சேர்கின்றன. அவை வானிலே நிறைந்த வுடன் அக்கினி ஊதுந்துருத்திகளை நிரப்புவனைப் போல் தன்னை ஊதிக்கொள்கிறன். ஊதுபவனுல் எழுப்பப் படும் சுவாலைகளைப் போல் அக்கினி தன் சுவாலைகளைக் கூர் செய்து கொள்கிறன். 3,731

6. அக்கினியே! அனைவரின் நண்பனுன உன்னுடைய பாலனங்களாலும், எங்களுடைய துதிகளாலும், நாங்கள் மானிடர்களின் தீச் செயல்களிலிருந்து துன்புறுத்தும் பகைவர்களிடமிருந்து போல் கடந்து செல்வோமாக.

7. வலியனும் தலைவனுமான அக்கினியே! எங்களுக்கு நாங்கள் விரும்பும் செல்வத்தை யளிக்கவும். அவன் எங்கள் பகைவர்களை விலக்குவானுக. அவன் எங்களைப் புட்டிப் படுத்துவானுக. பலத்தைப் பெறப் பாலிப்பானுக. அக்கினியே! நாங்கள் ஜயத்தை அடைய போர்களிலே எங்களுடனிருக்கவும். 3,733

## 10. அக்கினி

### 364. கய ஆத்திரேயன்

1. அக்கினியே! தடைபடாத ஆற்றலுள்ள நீ, பிரகாசிக்கும் செல்வத்தை எங்களுக்குக்களிக்கவும். எங்களை வியாபக செல்வத்தோடு சேர்க்கவும். பலத்தை யடையும் வழியை எழுதவும்.

2. அற்புதனுன அக்கினியே! நீ எங்கள் செயல்களால் திருப்தியாகி எங்களுக்குப் பலத்தின் மேன்மையை யளிக்கவும். அசுரத் தன்மையுள்ள பலம் உன்னிடமிருக்கிறது. மித்திரனைப் போல் போற்றத் தகுந்த நீ பெரிய செயல்களை நடத்துபவன்.

3. அக்கினியே! அறிஞர்களான தலைவர்கள் உன்னைப் போற்றிச் செல்வங்களை அடைந்தார்கள். நாங்களும் உன்னைப் போற்றுவதால் நீ எங்களுடைய மனையையும் செல்வத்தையும் செழிப்பிக்கவும்.



4. இன்புறுத்தும் அக்கினியே! உன்னைத் துதிகளால் போற்றுபவர்கள் குதிரைச் செல்வங்களைப் பெறுகிறர்கள். பகையழிக்கும் பலத்தால் பலப்படுகிறர்கள் அவர்களுடைய மகத்தான புகழ் வானுக்கதிகமாகிறது. கயன் அவனுகவே உன்னை எழுப்புகிறன்.

5. அக்கினியே! உன்னுடைய பிரகாசமாயுள்ள இந்த உக்கிரச் சுவாலைகள் பரவும் மின்னல்களைப் போல் எங்கும் பரவுகின்றன. போரிலே செல்வத்தைப் பறிக்கச் சத்தமுடன் பாயும் தேரைப் போல் வியாபகமாகின்றன. 3,738.

6. அக்கினியே! நீ எங்களுடைய பாலனத்துக்கும், வறுமையை விலக்கும் செல்வங்களின் தானத்துக்கும் துரிதமாகவும். எங்களுடைய அறிஞர்கள் புவியின் எல்லா இடங்களையும் ஜயிப்பார்களாக.

7. அக்கினியே! அங்கிரஸனுன நீ, பூர்வத்திலே போற்றப்பட்டவன். இப்பொழுது போற்றப்படுபவன். நீ ஹோதா. வலியரையும் ஜயிப்பதற்குரிய செல்வங்களையும் எங்களுக்களிக்கவும். துதிப்பவர்களுக்கு உன்னைத் துதிப்பதற்குரிய பலத்தை யளிக்கவும். நாங்கள் போர்களிலே ஜயிக்க நீ எங்களிடம் இருக்கவும். 3,740

## 11. அக்கினி

### 365. ஸுதம்பரன்-ஆத்திரேயன்

1. மனிதனைப் பாலிப்பவனும், விழித்திருப்பவனும், வலியனுமான அக்கினி உலகத்தின் நலத்துக்காகப் பிறப்பிக்கப்பட்டான். நெய்யால் ஊட்டப்படுபவனும், சோதியைப் பற்றும் மகத்தான காந்தியுடனிருப்பவனும் சுத்தனுமான அக்கினி பிரகாசமாய்த் துலங்குகிறன்.

2. செய்வோர்கள், இந்திரனேடும் தேவர்களோடும் ஒரே தேரில் செல்பவனும், யக்ஞத்தின் கொடியும் புரோகிதனுமான அக்கினியை மூன்று இடங்களில் முதன்மையாக ஒளிப்படுத்திஞர்கள். நல்ல சங்கற்பமுள்ளவனும் ஹோதாவுமான அவன், யக்ஞத்தை நடத்தத் தருப்பையின் மீது அமர்ந்தான்.

3. நீ தடைபடாமல் இரு தாய்மார்களிடமிருந்து தோன்றுகிருய். சுத்தனும் துதியாருகனும் அறிஞனுமான நீ, விவஸ்வானிடமிருந்து எழுந்தாய். ரிஷிகள் உன்னை நெய்யால் செழிப்பித்தார்கள். ஆஹுதியளிக்கப்படும் உனக்கு, புகை கொடியாகிறது. அது வானிலே பரவுகிறது.

4. எல்லா விருப்பங்களையும் பூர்த்தி செய்யும் அக்கினி எங்களுடைய யக்ஞத்துக்கு வருவாஞக. மனிதர்கள் ஒவ்வொரு மனையிலும் அக்கினியைப் பாலிக்கிருர்கள். அவிகளை வகிக்கும் அக்கினி தேவர்களின் தூதனுஞன். அக்கினியைப் போற்றுபவர்கள் அவனை யக்ஞத்தைப் பூர்த்தி செய்பவன் எனப் போற்றுகிருர்கள்.

5. அக்கினியே! உனக்கு இந்த மிக்க இனிய மொழி கூறப்படுகிறது. இது உன் இருதயத்தை இன்புறுத்துக. கடலை நிரப்பும் நதிகளைப் போல் துதிகள் உன்னை நிரப்புகின்றன. பலத்தால் உன்னைப் பலப்படுத்துகின்றன. 3,745

6. அக்கினியே! அங்கிரஸர்கள், மர்மத்திலே மறைந்திருப்பவனும், ஒரு மரத்திலிருந்து வேறொரு மரத்துக்கு நுழைபவனுமான உன்னைக் கண்டு பிடித்தார்கள். மகத்தான ஆற்றலோடு நீ கடையப்பட்டு பிறந்தாய். ஆதலால்! அங்கிரஸனே! அவர்கள் உன்னை ஆற்றலின் மகன் எனக் கூறிஞர்கள். 3,746



# 12. அக்கினி

## 366. ஸுதம்பரன்-ஆத்திரேயன்

1. பெரியவனும், யக்ஞாருகனும் சலத்தைப் பொழிபவனும், வலியனும், விருஷபனுமான அக்கினிக்கு மனருகமான துதியை யக்ஞத்திலே அவனுடைய வாயினுள் நன்கு சுத்தப்படுத்தப்பட்ட நெய்யைப் போல் அளிக்கிறேன்.

2. ருதத்தை அறியும் நீ, இந்த ருதத்தை அறியவும். ருதத்தின் பல தாரைகளைச் செலுத்தவும். ஆற்றலுள்ள நான் நல்ல செயல்களைத் தடைப்படுத்தேன். வஞ்சகத்தால் பங்கப்படுத்தேன். நான் சிகப்பு ரிஷபனின் ருதத்தைப் பற்றுகிறேன்.

3. அக்கினியே! துதியாருகனும் ருதத்தை யளிப்பவனுமான நீ, எந்த ருதச் செயலால் எங்களுடைய தோத்திரத்தைத் தெரிந்து கொள்கிருய்? பருவங்களின் பாலகனும் தேவனுமான அக்கினி என்னை அறிந்து கொள்வாஞக. நான் அடைந்திருக்கும் செல்வங்களுக்கு அவன் தலைவன் என நான் இன்றும் அறிந்துகொள்ளவில்லை.

4. அக்கினியே! உன்னைப் பற்றுபவர்களின் நடுவே எவர் பகைவர்களைப் பந்தப்படுத்துகிருர்கள்? அவர்களின் நடுவே சிறப்பாய்ச் செல்வங்களை அளித்து எவர் பாலிக்கிருர்கள்? அவர்களின் நடுவே எவர் அசத்தியங் கூறுபவர்களைப் பாலிக்கிருர்கள்? எவர் தீச்செயல்களை ஊக்கப்படுத்துகிருர்கள்?

5. அக்கினியே! எங்கும் பரவியுள்ள உன்னுடைய இந்த நண்பர்கள் பூர்வத்திலே உன்னைப் போற்ருமல் இன்பமற்றிருந்தார்கள். இப்பொழுது போற்றி மீண்டும் இன்பமுடனிருக்கிருர்கள். நேர்வழியில் செல்லும் என்

னைப் பழிச்சொற்களால் தீய பழக்கங்களுள்ளவன் எனக் கூறுபவர்கள் தமக்கே தீமை செய்து கொள்வார்களாக. 3,751.

6. அக்கினியே! வணக்கத்தோடு உன்னை ஏந்துபவனும், பொழியும் சிகப்பனுக்கு அளிக்கப்படும் யக்ஞத்தைப் பாவிப்பவனுமான வழிபடுபவனின் மனையிலே செல்வம் செழிக்க. உன்னை ஊக்கமாய்ப் போற்றும் மனிதனின் உத்தமப் புதல்வன், அவனை அனுசரித்து அவனிடத்திற்கு வருவானாக. 3,752.

## 13. அக்கினி

### 367. ஸுதம்பரன்-ஆத்திரேயன்

1. அக்கினியே! போற்றும் நாங்கள் உன்னை அழைக்கிறோம். போற்றும் நாங்கள் பாலனத்துக்கு உன்னை ஒளிப்படுத்துகிறோம்; போற்றுகிறோம்.

2. சோதி சேரும் காந்தியுள்ளவனும், தேவனுமான அக்கினிக்கு இன்று நாங்கள் செல்வத்தை விரும்பி ஸாதகமான ஸ்தோமத்தைக் கூறுகிறோம்.

3. மனிதர்களின் நடுவே ஹோதாவாயிருக்கும் அக்கினி எங்களுடைய மொழிகளை விரும்புவானாக. அவன் தேவ சனங்களை யஜிப்பானாக.

4. அக்கினியே! நீ பிரியமுள்ளவன்; உத்தமன்; ஹோதா; அனைவராலும் விரும்பப்படுபவன். வழிபடுபவர்கள் உன்னால் யக்ஞத்தைப் பூர்த்தி செய்கிறார்கள்.

5. அக்கினியே! விப்பிரர்கள், உணவையளிப்பவனும் நன்கு துதிக்கப்படுபவனுமான உன்னைப் போற்றுகிறார்கள். எங்களுக்கு உத்தம பலத்தை யளிக்கவும். 3,757.

6. அக்கினியே! சக்கரத்தின் பற்களைச் சூழ்ந்திருக்கும் வட்டத்தைப் போல நீ தேவர்களைச் சூழ்ந்திருக்கிறாய். நீ பலவிதமான செல்வத்தை எங்களுக்களிக்கவும். 3,758.



## 14. அக்கினி

### 368. ஸுதம்பரன்-ஆத்திரேயன்

1. அமிருதனான அக்கினியை ஸ்தோமத்தால் எழுப்பவும். அவன் சொலிப்பிக்கப்பட்டு தேவர்களுக்கு எங்களுடைய அவிகளை ஏந்திச் செல்வானாக.

2. சனங்கள், தேவனும், அமிருதனும், மானிட சனத்தின் நடுவே மிக்கத் துதியாருகனுமான அக்கினியை ஏந்துகிறார்கள்.

3. பலர் தேவனான அக்கினியை அவன் தேவர்களிடம் அவியை ஏந்திச்செல்ல சுருக்கத்திலிருந்து நெய்யைப் பொழிந்து போற்றுகிறார்கள்.

4. அக்கினி பிறந்தவுடன் மிக்கப் பிரகாசிக்கிறான். தஸ்யுக்களைக் கொல்லுகிறான். தன் ஒளியால் இருளை விலக்குகிறான். அவன் பசுக்களையும், சலங்களையும், சூரியனையும் கண்டான்.

5. துதிக்கத் தகுந்தவனும், கவியும், நெய் முதுகுள்ளவனுமான அக்கினியைப் போற்றுங்கள். அவன் என் அழைப்பை விரும்பிச் செவியுறுவானாக.

6. அவர்கள், விசுவங்காணும் அக்கினியை நல்ல தியானங்களோடும், துதி விரும்பும் தேவர்களோடும், அவிகளோடும், ஸ்தோமங்களோடும் பலப்படுத்தினார்கள். 3,764.

## 15. அக்கினி

### 369. தருண ஆங்கிரஸன்

1. நான் படைப்பவனும், கவியும், துதியாருகனும், புகழுள்ளவனும், முதல்வனும், நெய்யால் இன்புறுபவனும், மிக்க வலியனும், சுகப்படுத்துபவனும், செல்வத்தைப் போஷிப்பவனும், தாரகனும், மனைகளை அளிப்பவனுமான அக்கினிக்குத் துதியைக் கூறுகிறேன்.

2. சோதியின் தாரகமான தருமமாம் யக்ஞ ஸ்தானத்திலே பிறக்காத தேவர்களோடு சேர்ந்துள்ள மனிதப் பிறவிகளோடு அமர்ந்துள்ள அறிஞர்கள் தாரகனும் ருதனுமான அக்கினியைச் செயலைப் பூர்த்தி செய்ய உத்தம ஸ்தானத்திலே ருதத்தால் ஏந்துகிறார்கள்.

3. தேவர்களின் தலைவனுக்கு யக்ஞத்தின் மகத்தான உணவையளிப்பவர்கள் பெறுவதற்கியலாத குற்றமற்ற தேகங்களிலே செழுமையாகிறார்கள். புதியவனாய்ப் பிறந்த அக்கினி திரண்டுள்ள பகைவர்களை விலக்குவானாக. அவர்கள் சீறும் சிங்கத்தினிடமிருந்து நீங்கியிருக்கும் மானைப்போல் என்னிடமிருந்து விலகி நிற்பார்களாக.

4. எங்கும் முதன்மையாகி, எல்லா மனிதர்களையும் தாயைப் போல் தாங்கும்போது உன்னால் பார்க்கப் படவும், ஆதரிக்கப்படவும், நீ போற்றப்படும்போது நிறுத்தப்பட்டு, பலவித உணவைப் பக்குவப்படுத்தும் போது பல வடிவங்களுடனாகிறாய். அப்பொழுது உன்னில் அனைத்தும் நிலைக்கின்றன.

5. தேவனான அக்கினியே! மானிடர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்யப் பரந்திருப்பதும், செல்வங்களைத் தாங்குவதுமான—அவி-உணவு உன் பலத்தை எல்லாம் பாலிக்க. இரகசியமான இடத்திலே செல்வத்தை ஒளித்து வைத்துப் பாலிக்கும் திருடனைப் போல், மகத்தான செல்வத்தையடைய வழியைப் புலப்படுத்தி அத்திரிக்குத் திருப்தியை யளிக்கவும். 3,769.

## 16. அக்கினி

### 370. புரு ஆத்திரேயன்

1. அக்கினியின் சாந்தியிலே மிகுந்த ஆற்றல் இருக்கிறது. நண்பனைப் போல் மனிதர்களால் தங்கள் முன்னே துதிகளோடு ஸ்தாபிக்கப்பட்டவனான அக்கினி தேவனைப் பாடவும்.



2. தேவர்களுக்கு அவியைத் தொடர்ந்து அளிப்பவனும், பகலைப் போல் விரும்பும் செல்வத்தைத் தருபவனும், புஜபல பராக்கிரமத்தால் பிரகாசிப்பவனுமான அக்கினி, மானிடர்களுக்கு ஹோதாவாக இருக்கிறான்.

3. எந்த அக்கினியிலே அனைவரும் துதிகளாலும் அவிகளாலும் பலத்தை ஸ்தாபித்தார்களோ மகத்தான காந்திகளும் செல்வங்களுமுள்ள அந்த அக்கினியின் நட்பிலும் துதியிலும் நாங்கள் ஊக்கமுள்ளவர்களாயிருப்போமாக.

4. அக்கினியே! துதிக்கும் இவர்களுக்கு விரும்பத் தகுந்த பலத்தையளிக்க அனுகூலமாகவும். சோதியும் புவியும் அவனுக்கு மகத்தான சூரியனைப் போலுள்ள சிறப்பைத் தந்தார்கள்.

5. அக்கினியே! எங்களால் போற்றப்படும் நீ, எங்களிடம் துரிதமாக வரவும். விரும்பத் தகுந்த செல்வத்தை எங்களுக்கு அளிக்கவும். உன்னை வழிபடும் நாங்கள், உன்னை ஏத்தும் நாங்கள், அவிகளோடு உனக்குத் தோத்திரத்தைக் கூறுகிறோம். நீ எங்களிடம் அநுகூலமாகவும்; நாங்கள் போர்களிலே ஜயமுடனாகை விளங்கவும். 3,774.

## 17. அக்கினி

### 371. புரு ஆத்திரேயன்

1. தேவனே! மனிதன் இங்ஙனம் யக்ஞங்களால் பிரகாசமாயிருக்கும் அக்கினியான உன்னைப் பாலனத்துக்காக அழைக்கிறான். புரு யக்ஞத்தை நடத்துங்கால் பாலனத்துக்காக அக்கினியைப் போற்றுகிறான்.

2. பலவிதச் செயல்களை நடத்துபவனும், புகழுள்ளவர்களின் நடுவே மிக்கப் புகழுள்ளவனுமான நீ, உன்னுடைய மொழிகளால் அற்புத சோதியுள்ளவனும், துக்கமற்றவனும், துதியாருகனும், பரத்திலிருப்பவனுமான அக்கினியைத் துதிக்கிறாய்.

3. எவனுடைய சோதியைப் போலுள்ள காந்திகளால் ஒளியின் கதிர்கள் மிக்கப் பிரகாசிக்கின்றனவோ அவன், ஆற்றலோடிருக்கிருன். அவன் துதியால் போற்றப்படுகிருன். அவனுடைய ஒளியால் சோதி–சூரியன்-பிரகாசமுடனிருக்கிறது.

4. சுந்தரத் தோற்றமுள்ள அவனைப் போற்றி அறிஞர்கள் தங்கள் தேர்களில் செல்வத்தைக் குவித்துக் கொள்கிருர்கள். அவிகளுக்கு உரியவனுன அக்கினி அப்பால் எல்லா சனங்களாலும் போற்றப்படுகிருன்.

5. துதிகூறும் அறிஞர்கள் பெறும் விரும்பத்தகுந்த செல்வத்தை அக்கினியே! நீ துரிதமாயளிக்கவும். பலத்தின் மகனே! என் விருப்பங்களுக்கு அனுகூலமாகவும், எங்களைத் துன்பத்திலிருந்து பாலிக்கவும். எங்கள் செல்வத்துக்கு ஊக்கமாயிருக்கவும்–நாங்கள் போர்களிலே ஜயமாக நீ வரவும். 3,779.

## 18. அக்கினி

### 372. த்விதன் மிருக்தவாஹனன் ஆத்திரேயன்

1. அமிருதனும், மனிதர்களிடமிருக்கும் அவிகளையெல்லாம் விரும்புபவனும், பலரால் பிரியப்படுபவனும், மனிதர்களின் அதிதியுமான அக்கினி, வைகறையிலே போற்றப்படுவாஞக.

2. மிருக்தவாஹனுன-சுத்த அவிகளை ஏந்துபவனுன த்விதனுக்கு நீ உன்னுடைய சொந்த சலத்தையளிக்க விரும்பவும். ஏனெனில் அவன் அமுதனுன உனக்கு இடையருமல் ஸோமத்தைத் தருகிருன். துதிப்பவனுயிருக்கிருன்.

3. செல்வர்களின் தேர் தடைபடாமல் செல்ல, குதிரைகளைத் தருபவனே! அவர்களுடைய நன்மைக்கு தீர்க்காயுஸோடு துலங்கும் உன்னை அவர்களுடைய துதியோடு நான் அழைக்கிறேன்.



4. பலவிதமான எண்ணங்கள் இருப்பவர்களும், தங்கள் வாய்களில் பாக்களைப் பாலிப்பவர்களும், ஒளியின் முன்னே யக்ஞத்தைப் பரத்துபவர்களுமான அறிஞர்கள், தாமே புகழை அணிந்து கொள்கிருர்கள்.

5. அமுதனுன அக்கினியே! நான் உன்னைத் துதித்தவுடன். எனக்கு ஐம்பது குதிரைகளை யளித்த செல்வர்களுக்கு நீ பிரகாசமாயிருப்பதும், மகத்தாயும், செழிப்பாயுமுள்ளதும், பல ஆட்களைத் தாங்குவதுமான உணவையளிக்கவும். 3,784.

## 19. அக்கினி

### 373. வவ்ரி ஆத்திரேயன்

1. ஒரு நிலை, வேருெரு நிலையைப் பிறப்பிக்கிறது. உமியிலிருந்து உமி அறியப்படுகிறது. தாயின் அங்கத்திலே சாய்ந்து அவன் அனைத்தையுங் காண்கிருன். நாம் வெளித்தோற்றங்களையும் நிலைகளையுமே அறிகிறோம். தேவனின் உண்மையான தோற்றம் நம்மிடமிருந்து மறைக்கப்பட்டிருக்கிறது. தாயின் அங்கத்திலிருந்தே தேவன் பேசுகிருன். செல்வமற்ற நிலைகள் வவ்வியைப் பற்றுகின்றன. அவிகளை ஏற்பவன் அவற்றை அறிவாஞக. அவன் தாயின் அங்கத்திலே சாய்ந்து அனைத்தையும் காண்கிருன்.

2. உன்னுடைய ஆற்றலை அறிபவர்கள் உன்னை இடைவிடாமல் அழைக்கிருர்கள். அவர்கள் அவிகளால் உன்னுடைய பலத்தைப் புட்டிப்படுத்துகிருர்கள். அவர்கள் ஜயிக்கப்படாத நகரத்திலே வசிக்கிருர்கள்.

3. பொன்மாலை அணிந்தவர்களும், பெரிய தோத்திரங்களைக் கூறுபவர்களும், உணவை விரும்புபவர்களும், வாழ்பவர்களுமான மனிதர்கள் வெண் வானில் தோன்றும் உன்னுடைய ஆற்றலை இந்தத் துதியால் பலப்படுத்திஞர்கள் — சுவைத்திரேய சனங்கள் ஜயித்தார்கள். அவர்களுடைய அறிஞுன பிருஹத்துக்தன்

அவனுடைய ஸேவைக்காகப் பொன்மாலையைப் பெற்றான். அவன் செய்த ஸோம யக்ஞங்களுக்காக அவனுக்கு அது அளிக்கப்பட்டது.

4. அக்கினி தன்னுடைய இருபந்துக்களான சோதி புவிகளோடு பாலைப்போல் ஏற்கத் தகுந்த இந்தக் குற்ற மற்ற துதியைக் கேட்பானாக. கலந்த அவியைப் போலிருக்கும் அவன் உணவால் நிறைந்திருக்கிறான். தாழாத அவன் எப்பொழுதும் சத்துருக்களைத் தாழ்த்து கிறான்.

5 பிரகாசமாயுள்ள அக்கினியே! காற்றால் புலப் படுத்தப்படும் நீ, எரியப்பட்ட வனத்தின் சாம்பல்களின் நடுவே விளையாடுகிறாய். நீ எங்கள் முன்னிலாகவும். உன்னுடைய பகைவர்களை அழிப்பவையும், உக்கிர மாயும், கூர்மையாயுமுள்ள சுவாலைகள் உன்னை வழிபடு பவனான இவனுக்குச் சாந்தமுடனாக. 3,789.

## 20. அக்கினி

### 374. பிரயஸ்வந்த ஆத்திரேயர்கள்

1. அக்கினியே! மிக்கத் தாராளமாய் உணவை யளிப்பவனே! உன்னால் ஏற்கப்படுவதும் எங்கள் துதி களால் போற்றத் தகுந்ததுமான அந்த செல்வத்தை— அவியை—நீ தேவர்களிடம் செலுத்துவாயாக.

2. செல்வங்கள் இருந்தும் உனக்கு அவிகள்-யளிக் காதவர்கள் உக்கிர வலிமையிலிருந்து நீங்குவார்களாக. வேறு விரதங்களைப் பற்றுபவர்கள் உன்னுடைய பகைமையையும் தண்டனையும் பெறுவார்களாக.

3. அக்கினியே! பிரயஸ்வந்தர்களான நாங்கள் ஹோதாவும் பலத்துக்குச் சாதகனுமான உன்னைப் பற்று கிறோம். நாங்கள், யக்ஞங்களிலே துதியோடு முதன்மை யாக உன்னைப் போற்றுகிறோம்.

4. ஜயிப்பவனே! தினந்தோறும் நாங்கள் உன்னு டைய பாலனத்துக்குரிய உழைப்பை எங்களுக்களிக்க வும். நல்ல செயல்களை நடத்துபவனே! நாங்கள்



யக்ஞத்தால் செல்வத்துக்குரியவர்களாவோமாக. நாங் கள் பசுக்களோடு இன்புறுவோமாக. நாங்கள் வீரப் புதல்வர்களோடு இன்புறுவோமாக. 3,793.

## 21. அக்கினி

### 375. ஸஸ ஆத்திரேயன்

1. அக்கினியே! நாங்கள் மனுவைப்போல் உன்னைத் தியானிக்கிறோம். நாங்கள் மனுவைப் போல் உன்னை ஒளிப்படுத்துகிறோம். அங்கிரஸனே! மனுவைப் போல் தேவர்களை விரும்புபவனுக்காக நீ தேவர்களை யஜிப்பா யாக.

2. அக்கினியே! நீ இன்பமானால் மானிட உலகத் திலே பிரகாசிக்கிறாய். நன்கு பிறந்தவனும் நெய்யருந்து பவனுமான உனக்கு எப்பொழுதும் சிருவங்கள் எழுப்பப் படுகின்றன.

3. ஒரு மனமுள்ள தேவர்கள் எல்லாம் உன்னையே தூதனாக நியமித்தார்கள். கவியே! செய்வோர்கள் உன்னையே யக்ஞங்களில் துதிக்கிறார்கள்.

4. மனிதன், தேவர்களிடம் அவியைச் செலுத்த, தேவனான அக்கினியாம் உன்னை ஏத்துகிறான். பிரகாசிக் கும் அக்கினியே! நீ மூட்டப்பட்டவுடன் சொலிக்கவும். நீ ருத ஸ்தானத்தில் அமரவும். நீ ஸஸனின் ருத ஸ்தானத் தில் அமரவும். 3,797.

## 22. அக்கினி

### 376. விசுவஸாமா ஆத்திரேயன்

1. விசுவஸாமனே! நீ யக்ஞங்களிலே துதியாரு கனும், தேவர்களை அழைப்பவனும், மனிதனால் மிக்க ஏத்தத் தகுந்தவனும், சுத்தப்படுத்தும் ஒளியைத் தருபவனுமான அக்கினியை, அத்திரியைப் போல் பாடவும்.

2. தேவனும் ஜாதவேதஸனும் ரித்விஜனுமான அக்கினியை ஸ்தாபியுங்கள். தேவர்களுக்கு மிக்க இணக்கமான யக்ஞம் இன்று கிரமமாய் அவர்களிடம் செல்க.

3. மனிதர்கள் நன்கறியும் மனமுள்ளவனும், தேவனுமான உன்னிடம் வருகிருர்கள். நாங்கள் பாலனத்தை நாடி மிக்க உத்தமனுயிருக்கும் உன்னைப் போற்றுகிறோம்.

4. பலத்தின் மகனுன அக்கினியே! எங்களுடைய இந்தத் துதிமொழிகளை அறிந்து கொள்ளவும். அத்திரியின் மக்கள், அழகிய மோவாய்கள் இருப்பவனும், மனையின் தலைவனும், உன்னைப் போலிருப்பவனுமான உன்னை ஸ்தோமங்களால் மேம்படுத்துகிருர்கள். அவர்கள் மொழிகளால் உன்னை வண்ணப்படுத்துகிருர்கள். 3,801

## 23. அக்கினி

### 377. தியும்ந விசுவசர்ஷணி ஆத்திரேயன்

1. அக்கினியே! தன் திறத்தால் பகைவர்களை ஜயிப்பவனும், போர்களிலே எல்லா மனிதர்களையும் புகழோடு ஜயிப்பவனுமான புதல்வன் நியும்னனுக்கு அளிக்கவும். உன்னுடைய சோதியின் மகத்தான சக்தியினுல் எல்லா மனிதர்களையும் ஜயிப்பதும், அருகில் போரில் ஜயிப்பதுமான செல்வத்தையளிக்கவும்.

2. ஜயமுள்ள அக்கினியே! பகைப் படைகளை ஜயிக்கும் செல்வத்தை நீ எங்களுக்களிக்கவும். ஏனெனில் நீ அற்புதன்; நீ சத்தியன்; நீ பசுக்களோடு உணவையளிப்பவன்.

3. பரஸ்பரம் இன்புறுவர்களும், நறுக்கிய தருப்பையைப் பரத்தியவர்களுமான சனங்கள் எல்லாம் யக்ஞ சதனங்களிலே ஹோதாவும் பிரியனுமான உன்னிடம் அனந்தமான செல்வத்தை வேண்டுகிருர்கள்.



4. அக்கினியே! விசுவ சர்ஷணி பகைவர்களை வீழ்த்தும் ஆற்றலுடனிருப்பானுக. சாந்தனுன அக்கினியே! எங்களுடைய மனைகளிலே செல்வம் பொங்க நீ பிரகாசிக்கவும். சுத்தப்படுத்தும் அக்கினியே! நீ ஒளியைத் தந்து சொலிக்கவும். 3,805

## 24. அக்கினி

### 378. கௌபாயனர்கள், லௌபாயனர்கள் எனக் கூறப்படும், நால்வர்களான பந்துவும், சுபந்துவும், சுருத பந்துவும் விப்பிர பந்துவும்–ரிஷிகள்.

1 அக்கினியே! போற்றத் தருந்த நீ, எங்களருகிலாவும்; பாலகனுகவும்; சுகத்தை யளிப்பவனுகவும்.

2. மனைகளைத் தருபவனும் உணவை யளிப்பவனுமான நீ எங்களுடனிருக்கவும். மிக்கப் பிரகாசிக்கும் செல்வத்தை எங்களுக்களிக்கவும்.

3. அக்கினியே! எங்களை அறிந்து கொள்ளவும். எங்கள் அழைப்பைக் கேட்கவும். எல்லாத் துட்ட சனங்களிடமிருந்தும் எங்களைப் பாலிக்கவும்.

4. மிக்கப் பிரகாசிப்பவனும் ஒளி மிருந்தவனுமான அக்கினியே! நாங்கள் எங்களுடைய சுகத்துக்கும் எங்கள் நண்பர்களுடைய சுகத்துக்கும் உன்னைப் போற்றுகிறோம். 3,809

## 25. அக்கினி

### 379. வஸூயவர்கள் - ஆத்திரேயர்கள்

1. வஸூயவர்களே! தேவனுன அக்கினியைப் பாலனத்துக்காகப் போற்றுங்கள். வசுவான அவன் எங்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்வானுக. ரிஷிகளின் புதல்வனும் சத்தியத்தைப் பாலிப்பவனுமான அக்கினி துவேஷிப்பவர்களிடமிருந்து எங்களைப் பாலிப்பானுக.

2. பழைய ரிஷிகளாலும், தேவர்களாலும் சொலிப்பிக்கப்பட்டவனும், இனிய நாவுள்ளவனும், மிகுந்த சோதிகளோடு விபாவசுவாயிருப்பவனே சத்தியன்.

3. அக்கினியே! துதிகளால் துதிக்கத் தகுந்தவனை நீ, எங்களுடைய சிறந்த மேலான செயலாலும் சுமதியினுலும் இன்பமாகி எங்களுக்குச் செல்வங்களை யளிக்கவும்.

4. அக்கினி, தேவர்களின் நடுவே பிரகாசிக்கிறுன். மனிதர்களின் நடுவே விளங்குகிறுன். அக்கினி எங்களுடைய அவிகளை ஏந்துகிறுன். பாக்களால் அக்கினியைப் போற்றுங்கள்.

5. அக்கினி, அவியளிப்பவனுக்கு மிகுந்த உணவுள்ளவனும், மிகுந்த புகழுள்ளவனும், துன்பப் படாதவனும், பெற்றேர்களுக்குப் புகழைத் தருபவனுமான புதல்வனை அளிப்பானுக. 3,814

6. அக்கினி, நல்லவர்களைப் பாலிப்பவனும் தன் வீரர்களோடு போரிலே ஜயிப்பவனுமான புதல்வனைத் தருவானுக. அவன் ஜயிப்பதும், ஜயிக்கப்படாததும், துரிதகாலுமுள்ள குதிரையைத் தருவானுக.

7. எங்கள் வணக்கத்தை நன்கு புலப்படுத்தும் துதி அக்கினிக்குரியது. விபாவசுவே! உன்னிடமிருந்து மகத்தான செல்வம் வருகிறது. உன்னிடமிருந்து உணவு வருகிறது.

8. அக்கினியே! உன்னுடைய ரசிமிகள் பிரகாசமாயிருக்கின்றன. மகானுன நீ, ஸோமத்தைப் பிழியும் கல்லைப் போல் துதியாகிறுய். உன்னுடைய சத்தம் மேகத்தின் கர்ச்சனையே; தானுகவே எழுகிறது.

9. வசூயவர்களான – செல்வங்களை விரும்புவர்களான – நாங்கள் ஆற்றலுள்ள அக்கினியைப் போற்றுகிறேம். பெரிய செயல்களை நடத்தும் அவன் எங்களை எல்லா சத்துருக்களிடமிருந்தும் தோணியைப் போல் கடத்திச் செல்வானுக. 3,818



## 26. அக்கினி

### 380. வசூயவர்கள் ஆத்திரேயர்கள்

1. தேவனே! அக்கினியே! பாவகனே! உன்னுடைய ஒளியுள்ளதும் இன்புறுத்துவதுமான நாக்கால் தேவர்களை ஏந்தி வந்து யஜிக்கவும்.

2. நாங்கள், நெய்யால் தோன்றுபவனும், நானுவித ரசிமிகள் இருப்பவனும், அனைத்தையுங் காண்பவனுமான உன்னைப் போற்றுகிறேம்.

3. கவியே! அக்கினியே! நாங்கள் அவியை உணவாக உள்ளவனும், மிக்கப் பிரகாசிப்பவனும், பெரியவனுமான உன்னை ஒளிப்படுத்துகிறேம்.

4. அக்கினியே! நீ அவியை யளிப்பவனிடம் எல்லாத் தேவர்களோடும் வா. நாங்கள் ஹோதாவான உன்னை நாடுகிறேம்.

5. பொழியும் தலைவனுக்கு உத்தம பலத்தையளிக்கவும். நீ தேவர்களோடு சேர்ந்து தர்ப்பையின் மீது அமரவும். 3,823.

6. ஆயிரங்களை ஜயிப்பவனே! அக்கினியே! நீ சொலிப்பிக்கப்பட்டவுன், தேவர்களின் போற்றத் தகுந்த தூதனுகி எங்களுடைய தருமச்செயல்களைச் செழிப்பிக்கிறுய்.

7. ஜாதவேதஸனும், அவிகளை ஏந்துபவனும், மிக்க இளைஞனும், தேவனும், யஜிப்பவனுமான அக்கினியைப் போற்றுங்கள்.

8. வழிபடுபவர்களால் இன்று அளிக்கப்படும் யக்ஞம் கிரமமாய்த் தேவர்களிடம் செல்க. அவன் அமர, தருப்பையை பரத்துங்கள்.

#### விசுவே தேவர்கள்

9. மருத்துக்களும், அசுவினிகளும், மித்திரனும், வருணனும், தேவர்களும், அவர்களுடைய எல்லா சனங்களோடு இந்தத் தர்ப்பையின் மீது அமர்வார்களாக 3,827.

## 27. அக்கினி

### 381. அத்திரி அல்லது திரயருணன் – திரி விருஷ்ண னுடைய மகன். திரஸ தஸ்யு – புருகுத்ஸனுடைய மகன். அசுவமேதன் – பரதனுடைய மகன்.

1. வைசுவாநரனுன அக்கினியே! நல்லவர்களைப் பாலிப்பவனும், மிக்க வலியனும், செல்வனும், திரிவிஷ்ணு வின் புதல்வனுமான திரயருணன் எனக்குச் சகடத்தோடு இரு காளைகளை அளித்தான். பதினுயிரம் செல்வங்களை அளித்தான். அவன் புகழுடனுனன்.

2. எனக்கு நூறு பொன் நாணயங்களையும், இருபது பசுக்களையும், சுமை தாங்கும் இரு குதிரைகளையும் தரும் திரயருணனுக்கு அக்கினியே! வைசுவாநரனும், எங்களால் நன்கு துதிக்கப்படுபவனும் மேம்படுத்தப்படுபவனுமான நீ, சுகத்தைத் தருவாயாக.

3. பல குழந்தைகளுள்ள என்னுடைய துதிகளால் மகிழ்ந்து யுக்தமனத்தோடு திரயருணன் பல செல்வங் களை ஏற்றுக்கொள்ளவும் எனக் கூறுகிறுன். அக்கினியே! மிக்கத் துதிக்கப்படும் உன்னுடைய நல்ல மனத்தை விரும்பி திரஸதஸ்யுவும் இப்பொருள்களை ஏற்றுக்கொள்ள வும் என என்னிடம் கூறுகிறுன்.

4. அசுவமேதனை அணுகி எனக்குச் செல்வத்தை யளிக்கவும் எனக் கூறி அக்கினிக்கு ரிக்கால் துதியை எழுப்புபவனுக்கு அவனுக்குச் செல்வத்தைத் தருங்கால் அக்கினியே! நீ உனக்கு யக்ஞத்தை யளிக்க விரும்பும் அவனுக்கு அசுவமேதனுக்கு — மேதையை அளிக்கவும்.

5. உன்னை இன்புறுத்தும் அசுவமேதனுல் அளிக்கப் பட்ட முப்பொருள்கள் கலந்த ஸோமத்தைப் போல் அவனுல் எனக்குத் தரப்பட்ட நூறு பருத்த காளைகள் என்னை இன்புறுத்துகின்றன.



### இந்திராக்கினிகள்

6. இந்திராக்கினிகளே! நூறு செல்வ தானங்களைத் தரும் அசுவமேதனுக்கு நல்ல வீரியத்தையும், மகத்தான க்ஷத்திரத்தையும், வானிலிருக்கும் அழியாத சூரியனைப் போல் நிலைப்படுத்துங்கள். 3,833.

## 28. அக்கினி

### 382. விசுவ வாரை–அத்திரி வம்சத்தில் வந்த ஸ்திரீ ரிஷி

1. அக்கினி சொலிப்பிக்கப்பட்டவுடன் வானிலே ஒளியைப் பரத்துகிறுன். உஷையின் முன்னே பரந்து பிரகாசிக்கிறுன். விசுவ வாரை கீழ்த்திசையை நோக்கித் துதிகளோடு தேவர்களை ஏந்துகிறுள். அவள் அவியோடு நெய் சிருவத்தை ஏந்தி அக்கினியின் முன்னே செல்லு கிறுள்.

2. நீ சொலிப்பிக்கப்பட்டவுடன் அமுதத்தை அரசு புரிகிறுய். நீ அவியளிப்பவனின் நலத்துக்காக - ஸ்வஸ் திக்காக - இயங்குகிறுய். நீ எவனிடம் செல்லுகிறுயோ அவன், எல்லா செல்வத்தையுமடைகிறுன். அக்கினியே! அவன் உன் முன்னே விருந்தினருக்குரியதை வைக் கிறுன்.

3. அக்கினியே! நாங்கள் மகத்தான சௌபாக்கி யத்தைப் பெற எங்களுடைய பகைவர்களை ஜயிக்கவும். உன்னுடைய காந்திகள் மிக்க மேன்மையுடனிருக்க. தம்பதிகளின் பந்துத் தன்மையை-பொருத்தத்தை-பாலிக் கவும். பகைவர்களின் ஆற்றல்களை ஜயிக்கவும்.

4. அக்கினியே! சொலிப்பிக்கப்பட்டவுடன் உக்கிர மாய் எழும் காந்தியை நான் போற்றுகிறேன். விருஷப னுன நீ, செல்வனுயிருக்கிறுய். நீ யக்ஞங்களிலே நன்கு ஒளிப்படுத்தப்படுகிறுய்.

5. அக்கினியே! சொலிப்பிக்கப்படுபவனும் அழைக் கப்படுபவனுமான நீ, யக்ஞத்திலே தேவர்களை யஜிக்க வும். ஏனெனில் நீயே அவிகளை ஏந்துகிறுய்.

6. யக்ஞம் நடத்தப்படுங்கால் அவி ஏந்தும் அக்கினியை அழையுங்கள்; பணியுங்கள்; தேவர்களுக்கு — அவி ஏந்துபவனை அறியுங்கள். 3,339.

## 29. இந்திரன்

### 383. கௌரிவீதி சாக்தியன்

1. மானிடனின் யக்ஞத்திலே மூன்று தேயசுகள் இருக்கின்றன. மருத்துக்கள் வானிலே மூன்று சுடர்களை— அக்கினியை, வாயுவை, சூரியனை – தாங்குகிறார்கள். சுத்த பலமுள்ள மருத்துக்கள் உன்னைப் போற்றுகிறார்கள். இந்திரனே! அறிஞனான நீ, மருத்துக்களுடைய ரிஷியாயிருக்கிறாய்.

2. ஸோமரஸத்தைப் பருகி இன்பமாகும் இந்திரனை மருத்துக்கள் பருகுங்கால் அவன் வச்சிராயுதத்தைப் பற்றுகிறான். அதனால் அவியைக் கொல்லுகிறான். சலப் பிரளயத்தைப் பெருக விடுவிக்கிறான்.

3. மகத்தான மருத்துக்களே! நீங்களும் இந்திரனும் நன்கு பிழியப்பட்டுள்ள என்னுடைய இந்த ஸோமத்தைப் பருகுங்கள். இந்திரன் இதைக் குடித்து அஹியை அழிக்கிறான்.

4. அப்பால் இந்திரன் சோதியையும் புவியையும் திரமாய் நிலைப்படுத்தினான். அப்பால் முன்னேறி அவன் விருத்திரனைப் பயத்தால் மானைப் போல் கலக்கினான். தன்னை மறைத்துக்கொள்ள இயங்கியவனும், பயத்தால் பெருமூச்சு விட்டவனுமான தானவனை மறைப்பிலிருந்து நீக்கி இந்திரன் கொன்றான்.

5. மகவானே! அறிஞர்கள் இந்த வீரச்செயல்களுக்காக உனக்கு ஸோமபானத்தைக் கிரமமாய்த் தந்தார்கள். அதனால் நீ ஏதஸனுக்காகச் சூரியனுடைய முன்னேறும் குதிரைகளைத் தடுத்தாய். 3,344.

6. மகவான் ஒரே மூச்சில் சம்பரனின் 99 கோட்டைகளை இடித்தான். மருத்துக்கள் களத்திலே இருந்த



இந்திரனைத் திருட்டுபுச்சந்த தோத்திரத்தால் போற்றினார்கள். அவன் மருத்துக்களின் தோத்திரத்தால் பிரகாசமான அசுரபுரத்தை அழித்தான்.

7. நண்பனான அக்கினி நண்பனான இந்திரனுக்கு உதவ முந்நூறு மகிடங்களைப் பக்குவப்படுத்தினான். இந்திரன் மநுவால் அளிக்கப்பட்ட மூன்று கலசங்களிலுள்ள ஸோமத்தை விருத்திரனைக் கொல்லப் பருகினான்.

8. நீ முந்நூறு எருமைகளைப் புசித்து, மகவானான மூன்று கலச ஸோமத்தைப் பருகி, அஹியைக் கொன்றவுடன், எல்லாத் தேவர்களும் ஸோமபானத்தால் நிறைந்திருந்த இந்திரனைப் போரிலே தாஸனாயிருந்தவனைப் போல் வெற்றி முழக்கத்தை எழுப்ப அழைத்தார்கள்.

9. இந்திரனே! நீயும் உசனனும் துரிதமாயும் திடமாயுமுள்ள குதிரைகளிலே குத்ஸனுடைய மனைக்குச் சென்று, அவனுடைய பகைவர்களைக் கொன்று, பிறகு அங்கிருந்து குத்ஸனோடும் தேவர்களோடும் ஒரு தேரில் சென்று சுஷ்ணனைக் கொன்றாய்.

10. பூர்வத்திலே சூரியனுடைய தேரின் ஒரு சக்கரத்தைத் தனிப்படுத்தினாய். குத்ஸன் செல்வத்தைச் சம்பாதிக்க அவனுக்கு வேறொரு சக்கரத்தையளித்தாய். நாதமற்ற தஸ்யுக்களை உன் ஆயுதத்தால் கொன்றாய். எதிர்த்துப் பேசும் பகைவர்களைப் போர்க்களத்திலே வென்றாய். 3,349

11. கௌரிவீதின் ஸ்தோமங்கள் உன்னை மேப்படுத்துக. நீ விததினனுடைய புதல்வனான ரிஜிஸ்வனுக்கு பிப்ருவை வசப்படுத்தினாய். ரிஜிஸ்வன் உன்னுடைய நட்புக்காகப் புரோடாசனங்களைப் பக்குவப்படுத்தி உன்னை முற்படுத்தினான். நீ அவனுடைய ஸோமபானத்தைப் பருகினாய்.

12. நவக்வர்களும் தசக்வர்களும் ஸோமத்தைப் பிழிந்து இந்திரனைத் துதிகளோடு ஏத்தினார்கள்.

யக்ஞத் தலைவர்கள்- அவனைப் புகழ்ந்து பசுக்களை மறைத்திருந்த குதிரைகளைத் திறந்தார்கள்.

13. மகவானே! நீ நடத்திய வீரச் செயல்களையெல்லாம் நான் அறிகிறேன். அவற்றை நான் எந்தத் தகுதியான தோத்திரத்தால் எங்ஙனம் போற்றுவேன்? உத்தமப் பலமுள்ள இந்திரனே! நாங்கள் நீ நடத்திய புதிய வீரச் செயல்களை எப்பொழுதும் போற்றுவோம்.

14. இந்திரனே! நீ உன்னுடைய சொந்த வீரியத்தால் இந்த வீரச் செயல்களை நடத்தினாய். இவை எவனாலும் செய்யப்படவில்லை. வச்சிராயுதம் ஏந்துபவனே! எதிரிகளைத் தாழ்த்தும் உன்னால் செய்யப்படும் செயல்களின் ஆற்றல்களைத் தடுப்பவன் எவனும் இல்லை.

15. மிக்க வலியனே! இந்திரனே! நாங்கள் கூறப்போகும் துதிகளை ஏற்க விரும்பவும். இப்பொழுது கூறும் துதிகளை விரும்பவும். செல்வத்தை விரும்புபவனும், உத்தமச் செயல்களை நடத்துபவனும், அறிஞனுமான நான், போற்றப்பட்டவையும், நன்கு செய்யப்பட்டவையுமான தோத்திரங்களை ஆடைகளைப் போலும் தேரைப் போலும் கற்பிக்கிறேன். 3,854

## 30. இந்திரன்

### 384. பப்ரு ஆத்திரேயன்

1. வச்சிராயுதம் ஏந்துபவனும், பலரால் அழைக்கப்படுபவனும், வழிபடுபவனின் பாலனத்துக்காக அவனுடைய மனைக்கு ஸோமத்தை விரும்பிச் செல்பவனுமான இந்திரனும் வீரன் எங்கே? குதிரைகளால் இழுக்கப்படுவதும், சுகமாய்ச் செல்லும் தேரிலே உட்கார்ந்துள்ள இந்திரனை எவன் கண்டான்?

2. நான் அவனுடைய மர்மமாயும் உக்கிரமாயுமுள்ள இடத்தைக் கண்டேன். தானாகவே தன்னைத் தாங்கிக் கொள்ளும் அவனை விரும்பி நான் அவனுடைய



இடத்துக்குச் சென்றேன். நான் அவனை அறிய மற்றவர்களிடம் கேட்டன். அறிவை நாடும் யக்ஞத் தலைவர்கள், நாம் இந்திரனிடம் செல்வோமாக என என்னிடம் கூறினார்கள்.

3. இந்திரனே! நாங்கள் உன்னுடைய வீரச்செயல்களை, நீ எங்களுக்காக நடத்திய திரப்பணிகளை ஸோமமளிக்கப்படுங்கால் கூறுகிறோம். அவன் நடத்திய செயல்களை அறியாதவன் அவற்றை அறிந்து கொள்வானாக. தெரிந்தவன் மற்றவர்களுக்குத் தெரியப்படுத்துவானாக. இந்த மகவான் தன் சேனைகளோடு-இந்த இருவரிடமும் தன் குதிரையிலே வருகிறான்.

4. இந்திரனே! நீ பிறந்தவுடன் உன்- மனத்தைத் திரஞ்செய்து கொண்டாய். பல பகைவர்களை எதிர்த்துப் போராட நீ ஒருவனாகவே சென்றாய். நீ உன்னுடைய பலத்தால் மலையைப் பிளந்தாய். பாலைப் பொழியும் பசுக்களின் மந்தையை மீட்டாய்.

5. பரவியுள்ள புகழ் பெற்ற நாமத்தைத் தரித்து, பரனும் பரமனுமான நீ, பிறக்குங்கால் தேவர்கள் இந்திரனை உன்னிடம் பயமுடனானார்கள். நீ தாஸனின் மனைவிகளான எல்லா சலங்களையும் ஜயித்தாய்-வசப்படுத்தினாய். 3,859

6. சுகமாயிருக்கும் இந்த மருத்துக்கள் உனக்கே தோத்திரத்தைக் கூறுகிறார்கள். உனக்கே ஸோமத்தைப் பொழிகிறார்கள். இந்திரன், தேவர்களைத் துன்புறுத்தியவனும், சலங்களைத் தடுத்தவனும், மாயாவியுமான அஹியை மாயைகளால் ஜயித்தான்.

7. எங்களால் போற்றப்படும் மகவானே! நீ, உன்னுடைய வச்சிரத்தால் தேவர்களின் பகைவனை எதிர்த்து, உன்னை, நீ பிறந்ததிலிருந்தே வெறுத்தப் பகைவர்களைக் கொன்றாய். நீ மநுவுக்கு நன்மையைச் செய்ய விரும்பி, தாஸனான நமூசியின் தலையைத் துணித்தாய்-அரைத்தாய்.

8. இந்திரனே! நீ, சலிப்பதும் சப்திப்பதுமான மேகத்தைப் போலிருந்தவனுமான தாஸனின்-நமூசியின் தலையை அரைத்த பிறகே என்னை நண்பனுகச் செய்து கொண்டாய். சோதியையும் புவியையும் மருத்துக்கள் சக்கரத்தைப் போல் சுற்றி வரப்படுத்தினுர்கள்.

9. தாஸனுன நமூசி, ஸ்திரீகளைத் தன் ஆயுதங்களாகச் செய்து கொண்டான். அவனுடைய அபலைப் பகைகள் என்னிடம் எதைச் செய்ய இயலும்? நமூசியின் அந்தப்புரங்களிலிருந்த அவனுடைய இரு அன்புள்ள ஸ்திரீகளைக் கண்டான். பிறகு இந்திரன் அவனிடம் போராடச் சென்றுன்.

10. கன்றுகளிடமிருந்து பிரிக்கப்பட்ட பசுக்கள் இங்குமங்கும் திரிந்தன? ஆனுல் நன்கு பொழியப்பட்ட ஸோமங்கள் அவனை மதப்படுத்தியவுடன் இந்திரன் தன் ஆற்றல்களுள்ள மருத்துக்களோடு அவற்றை-பசுக்களை-கன்றுகளோடு சேர்த்தான்.

11. பப்ருவால் அளிக்கப்பட்ட ஸோமபானங்கள் இந்திரனை இன்புறுத்தியவுடன் விருஷபன் போர்களிலே முழங்கினுன். புரங்களை இடித்த இந்திரன் ஸோமத்தைப் பருகி பால் தரும் பசுக்களை அவனுக்கு-பப்ருவுக்கு மீட்டுத் தந்தான்.

ருணஞ்சயன்

12. அக்கினியே! எனக்கு ருணஞ்சய அரசனின்-ருசமர்கள்-சனங்கள் நாலாயிரம் பசுக்களை அளித்தார்கள். மங்களச் செயலை நடத்தினுர்கள். நாங்கள் தலைவர்களின் தலைவனுன ருணஞ்சயனுல் அளிக்கப்பட்ட செல்வங்களை ஏற்றேம்.

13. அக்கினியே! உருசமர்கள் எனக்கு ஆயிரம் பசுக்களோடு அழகிய மனையைத் தந்தார்கள். தீவிர ஸோமங்கள் இந்திரனை உதயத்திலே மதப்படுத்தின.



14. உருசமர்களின் அரசனுன ருணஞ்சயன் தோன்றியவுடன் உதயத்திலே இருண்ட இரவு கலைந்தது. பப்ரு அழைக்கப்பட்டு துரித குதிரையைப் போல் சென்று நாலாயிரம் பசுக்களைப் பெற்றுன்.

15. அக்கினியே! நாங்கள் உருசமர்களிடமிருந்து நாலாயிரம் பசுக்களைப் பெற்றேம். பிரவிரு ஐந்துக்காகத் தாபப்படுத்தப்பட்ட தங்கக் கலசத்தை அறிஞர்களான நாங்கள் பெற்றுக்கொண்டோம். 3,869

## 31. இந்திரன்

### 385. அவஸ்யு ஆத்திரேயன்

1. மகவானுன இந்திரன் திறத்தைப் புலப்படுத்தும் தேரிலே ஏறி, அதை இறக்கத்திலே செலுத்துகிறுன். தேவர்களின் முதல்வனுன அவன் பசுக்களின் மந்தையைச் செலுத்தும் கோபனைப் போல் பகைவர்களை முற்படுத்தி, தடைபடாமல் முன்னேறுகிறுன்.

2. குதிரைகளுடனிருப்பவனே! எங்களிடம் துரிதமாகவும். எங்களிடம் பராமுகமாகாதே. பலவித செல்வத்தையளிக்கும் நீ, எங்களுடன் நட்புள்ளவனுகவும். ஏனெனில் இந்திரனே! உன்னைக் காட்டிலும் உத்தமன் வேறு எவனுமில்லை. மனைவியற்றவர்களுக்கு நீ தாரங்களைத் தந்தாய்.

3. சூரியனுடைய காந்தி உஷையினுடைய காந்தியை ஜயிக்குங்கால், இந்திரன் எல்லாச் செல்வங்களையும் வழிபடுபவனுக்குத் தருகிறுன். அவன் தடுத்த மலையின் குகையிலிருந்து பசுக்களை மீட்டான். அவன் சோதியால் சூழ்ந்த இருளை நீக்குகிறுன்.

4. இந்திரனே! பலரால் அழைக்கப்படுபவனே! ரிபுக்கள் உன்னுடைய குதிரைகளுக்கு இசைந்த தேரைக் கற்பித்தார்கள். துவஷ்டா, துலங்கும் வச்சிராயுதத்தை உனக்குச் செய்தான். அறிஞர்களான அங்கிரஸர்கள், துதிகளால் இந்திரனைத் துதித்து அஹியைக் கொல்ல அவனுக்கு ஆற்றலை யளித்தார்கள்.

5. இந்திரனே! பொழிபவனான உன்னைப் பொழிபவர்களான மருத்துக்கள் போற்றுங்கால், அதிதியும் ஸோமத்தைப் பிழியுங்கற்களும் சேர்ந்து இசைக்குங்கால் இந்திரனால் பிரேரிதமான சுத்தப்படுத்தும் மருத்துக்கள் குதிரைகளும் தேர்களுமல்லாமல் தஸ்யுக்களை ஜயித்தார்கள். 3,874

6. மகவானே! நீ உன்னுடைய வீரச் செயல்களால் சோதியையும் புவியையும் வசப்படுத்தி, நீ மானிடனுக்கு அற்புத தானங்களுள்ள சலங்களை தந்தாய். நான் உன்னுடைய அந்தப் பழைய வீரச் செயல்களையும் புதிய செயல்களையும் கூறுகிறேன்.

7. சுந்தரனே! விப்பிரனே! நீ அஹியைக் கொன்று உன் திறத்தைப் புலப்படுத்தினாய். இது உன்னுடைய வீரச் செயல். நீ சுஷ்ணனின் மாயைகளைத் தடுத்தாய். நீ அருகில் சென்று தஸ்யுக்களைத் தாழ்த்தினாய்.

8. இந்திரனே! நீ தூரத்திலிருக்கும் கரையில் நிலைத்து, வளப்படுத்தும் சலங்களை யதுவுக்கும் துருவசுவுக்கும் இதப்படுத்தினாய். இந்திரனும் குத்ஸனுமான நீங்கள், உக்கிரனான சுஷ்ணனை எதிர்த்துக் கொன்றீர்கள். இந்திரனே! நீ குத்ஸனை அவனுடைய மனைக்குச் செலுத்தினாய். ஆதலால் உசனரும் தேவர்களும் உங்கள் இருவரையும் போற்றினார்கள்.

9. இந்திர குத்ஸர்களே! உங்களுடைய குதிரைகள் ஒரே தேரில் வரும் உங்கள் இருவரையும் துதிப்பவனிடம் ஏந்தி வருக. நீங்கள் சுஷ்ணனை அவனுடைய சொந்த இடமான சலங்களிலிருந்து நீக்கினீர்கள். நீங்கள் செல்வனின் இருதயத்திலிருந்து தமங்களை நீக்கினீர்கள்.

10. அவஸ்யு கவி காற்றைப் போல் வேகமுள்ள பணிந்த குதிரைகளைப் பெற்றான். இந்திரனே! இங்கு உன்னுடைய நண்பர்களான எல்லா மருத்துக்களும், ஸ்தோத்திரங்களால் உன்னுடைய பலத்தால் பலப்படுத்தினார்கள். 3,879



11. பூர்வத்தில் இந்திரன் போரிலே சூரியனுடைய துரிதமாகச் செல்லும் தேரைத் தடுத்தான். ஏதசன் ஒரு சக்கரத்தை ஏந்திச் சென்றான். அதனால் இந்திரன் பகைவர்களைப் புடைக்கிறான். எங்களை அவன் முற்படுத்தி எங்கள் செயலால் யக்ஞத்தால் போற்றப்படுவானாக.

12. சனங்களே! இந்திரன் அவியை யளிக்கும் அவனுடைய நண்பனைக் காண விரும்பி உங்களைப் பார்க்க வந்திருக்கிறான். வேதியின் மீது சப்திக்கும் கல் வைக்கப்படுகிறது. அத்வர்யுக்கள் அதைத் துரிதமாய்ச் சுற்ற வருவார்களாக.

13. அமுதனான இந்திரனே! உன்னை விரும்பும் மனிதர்கள் இன்னும் விரும்புவார்களாக. பாபத்தில் செல்லாமலிருப்பார்களாக. யஜிப்பவர்களை விரும்பவும். எந்த சனங்களின் நடுவே நாங்கள் உன்னுடையவர்களாயிருக்கிறோமோ அந்த சனங்களுக்கு நீ ஆற்றலை யளிக்கவும். 3,882

## 32. இந்திரன்

### 386. காது ஆத்திரேயன்

1. இந்திரனே! நீ மேகத்தைப் பிளக்கிறாய். சலமடைகளைத் திறக்கிறாய். நீ தடைபட்ட தாரைகளை விடுவிக்கிறாய். மகத்தான மேகத்தைப் பிரிக்கிறாய். தானவனைக் கொன்று வெள்ளங்களை விடுவிக்கிறாய்.

2. இடிப்பவனே! நீ தடைபட்ட மேகங்களை ருதுக்களிலே தளர்த்துகிறாய். மேகத்தின் பலத்தைப் பலப்படுத்துகிறாய். உக்கிரனான இந்திரனே! நீ சலங்களிலே சயனித்திருந்த அஹியைக் கொன்று உன்னுடைய ஆற்றலின் புகழை நிலைப்படுத்துகிறாய்.

3. இந்திரன் தன் ஆற்றல்களால் மகத்தான மிருகத்தின் ஆயுதத்தை அழித்தான். அந்த மிருகம் தான் ஒருவனே நிகரற்றவன் என நினைத்தான். ஆனால் அவனிடமிருந்து மிக்க ஆற்றலுள்ள வேறொருவன் பிறப்பிக்கப்பட்டான் — சுஷ்ணன் தோன்றினான்.

4. வச்சிரத்தை ஏந்துபவனும் மழைமேகத்தைப் பிளப்பவனுமான இந்திரன், தன் வச்சிரத்தால், இருட்டில் செல்பவனும், பொழியும் மேகத்தைப் பாலிப்பவனும், இந்தப் பிராணிகளின் உணவால் தானே புசித்து மகிழ்பவனும், வளர்ந்தவனும், தானவனுடைய கோபத்திலிருந்து பிறந்தவனுமான சுஷ்ணனைக் கொன்றான்.

5. மிக்க ஆற்றலுள்ள இந்திரனான நீ, உன்னுடைய ஸோமமதத்திலே, தன் இருண்ட இடத்திலே, விருத்திரன் போருக்காக ஆயத்தஞ் செய்வதை அறிந்தாய். அப்பொழுது நீ, தன்னை மர்மமில்லாதவன், சேதமாகாதவன் என நினைத்துக் கொண்டிருந்த அந்த விருத்திரனை உன்னுடைய நுண்ணறிவால் கண்டாய். 3,887.

6. விருஷபனான இந்திரன், ஸோமரஸத்தால் மதமடைந்து தன் வச்சிரத்தை எழுப்பி, அதனால் வானின் பனித் திவலைகளை யனுபவித்திருந்தவனும், சலங்களின் நடுவே சயனித்திருந்தவனும், சூரியனில்லாத இருட்டிலே வளர்ந்தவனுமான விருத்திரனைக் கொன்றான்.

7. இந்திரன் தன்னுடைய தடைபடாத திடமான ஆயுதத்தை மகத்தான தானவனை எதிர்க்க உயர்த்திய போது, அவன் இடிப்படையைச் செலுத்தி விருத்திரனை அடித்தபோது அவனை எல்லாப் பிராணிகளுக்கும் நீசனாகச் செய்தான்.

8. உக்கிரனான இந்திரன் மேகத்தைச் சூழ்ந்தவனும், சயனித்திருந்தவனும், சலத்தைப் பருகி, பகைவர்களைச் சாய்த்தவனும், உலகத்தை மறைத்தவனும், பரந்தவனுமான விருத்திரனைப் பிடித்தான். பிறகு அவன் தன் மகத்தான ஆயுதத்தால் போரிலே காலற்றவனும், பரிமாணமற்றவனும், வசைமொழி கூறுபவனுமான விருத்திரனைக் கொன்றான்.



9. அந்த இந்திரனுடைய வாட்டும் வலிமையை எவன் தடுப்பான்? தனியனும் தடைபடாதவனுமான அவன் பகைவரின் செல்வங்களைப் பற்றுகிறான். தேவிகளான இந்த சோதியும் புவியும் வேகமுயிருக்கும் இந்திரனுடைய வலிமைக்குப் பயந்து வேகமாய்ச் செல்லுகிறார்கள்.

10. தேவியும், தானே இயங்குபவளுமான சோதி பணிந்து அவனிடம் செல்லுகிறாள். சலனமாகும் பூமியும் அன்புள்ள மனைவியைப் போல் அவனிடம் இணக்கமாகிறாள். அவன் தன் பலத்தையெல்லாம் அவனுடைய இந்த சனங்களோடு பகிர்ந்துகொள்ளுங்கால், மனிதர்கள் வலியனான இந்திரனுக்கு வணக்கத்தைக் கிரமமாய்ச் செலுத்துகிறார்கள்.

11. நான் உன்னை சனங்களின் நடுவே புகழுள்ளவனாயும், பஞ்ச சனங்களுடைய வீரர்களின் ஒரே தலைவனாகப் பிறந்தவனாயும் செவியுறுகிறேன். என்னுடைய சந்ததிகள் தங்கள் விருப்பங்களை அறிவித்து இரவும் பகலும் அவனுக்குத் துதிகளைக் கூறி புகழ் பெற்ற இந்திரனைப் போற்றுவார்களாக.

12. நான் உன்னைப் பருவத்தோடு இசைந்து பிராணிகளை ஊக்கப்படுத்துபவனாகவும், அறிஞர்களுக்குச் செல்வமளிப்பவனாகவும் செவியுறுகிறேன். இந்திரனே! உன்னிடத்தில் ஆசைகளை வைத்த அறிஞர்களான நண்பர்கள் எதைப் பெறுகிறார்கள். 3,894.

## 33. இந்திரன்

### 387. ஸம்வரணன் – பிரஜாபதியின் புதல்வன்

1. நான் மருத்துக்களோடு சேர்ந்திருப்பவனும், போரிலே செல்வத்துக்காகப் போற்றப்படுங்கால் இந்த சனத்தினிடம் – என்னிடம் – அனுகூலமாயிருப்பவனும்,

பெரியவனும், பலிஷ்டனுமான இந்திரனுக்கு மெலியனான நான். அவன், எங்களுடைய சனங்களுக்குப் பலத்தை யளிக்க இங்ஙனம் துதியைக் கூறுகிறேன்.

2. விருஷபனே! இந்திரனே! நீ எங்கள் துதிகளால் கவனமாகி, உன்னுடைய குதிரைகளின் இடைக்கச்சை யைக் கட்டுகிறாய். மகவானே! நீ பிரியனாகி அவற்றை இங்கு செலுத்துகிறாய். நீ இக்குறைகளோடு எங்களை வெறுக்கும் மனிதர்களை எங்களுக்காக ஜயிக்கவும்.

3. மகானான இந்திரனே! எங்களோடு வேறுபடு பவர்களும் மகத்தான செயல்களை நடத்தாமல் உன்னோடு சேராதவர்களும் உன்னால் விரும்பப்படுபவர்கள். தேவனே! வச்சிரமேந்துபவனே! நல்ல குதிரைகளுள்ள நீ, உன்னால் செலுத்தப்படும் கடிவாளங்களுள்ள தேரிலே எங்கள் யக்ஞத்துக்கு வர ஏறவும்.

4. இந்திரனே! உனக்குப் பல துதிகள் தோன்றுங் கால், நீ விளைவிக்கும் நிலங்களிலே மழையைப் பொழியப் போராடி, தடைகளை நீக்கினாய். பொழிபவனான நீ, சூரியனுக்காக அவனுடைய சொந்த இடத்திலே அசுர னான தாஸனின் நாமத்தைப் போர்களிலே அழித்தாய்.

5. இந்திரனே! உன்னுடைய பலத்தை வளர்ப்பவர் களும், யக்ஞத் தலைவர்களும், உன்னிடம் தேர்களைச் செலுத்துபவர்களுமான நாங்கள், உன்னுடையவர்கள். பரவலான ஆற்றலுள்ள இந்திரனே! போற்றுவதற்குரிய பக்தர்களும் சிரத்தையுள்ளவர்களும் போர்களிலே எங்களிடம் பகனைப் போல் வருவார்களாக. 3,899.

6. இந்திரனே! உன் பலம் புகழத்தக்கது. அமுத னான நீ. நடித்து உலகத்தை ஒளியால் நிரப்புகிறாய். நீ எங்களுக்குச் செல்வங்களையும் பிரகாசிக்கும் நிதியையும் அளிக்கவும். நான் செழித்த செல்வத்தின் தலைவனுடைய தானத்தைப் போற்றுவேன்.



7. வீரனே! இந்திரனே! உன்னை ஏத்தித் துதிக்கும் எங்களை உன்னுடைய பாலனத்தால் பாலிக்கவும். நன்கு பொழியப்பட்டு இதமாயிருப்பதும், போரிலே பாலனப் போர்வையுமான ஸோமத்தைப் பருகி திருப்தியாகவும்.

8. கிரிக்ஷித வம்சத்தில் வந்த புருகுத்ஸனுடைய மகனான பொன்னை ஏந்தும் திரஸதஸ்யுவினால் எனக்கு அளிக்கப்பட்ட பத்து அழகான — பிரகாசமாயுள்ள குதிரைகள் என்னை யக்ஞத்துக்கு ஏந்திச் செல்க. நான் யக்ஞங்களோடு சேர்ந்து இயங்குவேனாக.

9. அல்லது மருதசுவனின் மகனான விததனால் அளிக்கப்பட்ட நல்ல நடைகளுள்ள சிகப்புக் குதிரை கள், என்னை ஏந்திச் செல்க. அவன் எனக்குத் தந்த வையும் தருபவையுமான ஆயிரஞ் செல்வங்களும், மதிப் புக்குரிய நான் அலங்கரித்துக் கொள்ள தந்த ஆபரணங் களும் யக்ஞத்தைச் சிறப்பிக்க.

10. அல்லது, லட்சமணனின் புதல்வனான துவன்ய னால் எனக்களிக்கப்பட்ட சுறுசுறுப்பான காந்தியுள்ள குதிரைகள் என்னை ஏந்திச் செல்க. தரப்பட்ட மகத்வ முள்ள செல்வங்கள் ரிஷிஸம்வரணனுடைய மனைக்கு, தொழுவங்களுக்குப் பசுக்களைப் போல் வந்தன. 3,904.

## 34. இந்திரன்

### 388. ஸம்வரணன்-பிரஜாபதியின் புதல்வன்

1. அஜாத சத்துருக்களுள்ளவனும் பகைவர்களை அடக்குபவனுமான இந்திரனிடம், தேயாததும், ஒளி தருவதும், பரிமாணமற்றதுமான அவி செல்லுகிறது. அறிஞர்களே! ஸோமத்தைப் பொழியுங்கள்; புரோடா சத்தைப் பக்குவப்படுத்துங்கள்; துதியை ஏற்பவனும், பலரால் போற்றப்படுபவனுமான இந்திரனுக்கு உங்க ளுடைய கடமைச் செயல்களை நடத்துங்கள்.

2. ஸோமத்தால் தன் வயிற்றை நிரப்பிக் கொள்ளும் மகவான் இனிய ரஸத்தைப் பருகுவதால்

இன்புறுகிறான். அவன் அசுரனான மிருகனைக் கொல்ல விரும்பி அழிக்கும் ஆயிரங்கூர்களுள்ள ஆயுதத்தை உயர்த்துகிறான்.

3. இரவிலும் பகலிலும் இந்திரனுக்கு ஸோமத்தைப் பொழிபவன் புகழுள்ளவனாகிறான். சக்கரன் தன் சந்ததிகளில் கர்வமடைபவனையும் தன் தேகத்தையே போற்றிக் கொள்பவனையும், செல்வனாயிருந்தும், அற்பனோடு-நீசனோடு-நட்புள்ளவனையும் விரும்பான்.

4. சக்கரன் போற்றும் தந்தையைக் கொன்றான்; தாயைக் கொன்றான்; சகோதரனைக் கொன்றான். ஆனால் அவர்களுடைய புதல்வனோ, சகோதரனோ யஜித்தால் அவனுடைய அவிகளை ஏற்க விரும்புகிறான். அவனிடமிருந்து நீங்கான். செயல்களைக் கிரமப்படுத்துபவனும், செல்வங்களைத் தருபவனுமாகும் பாவத்துக்கு அஞ்சான்.

5. அவன் பெரிய செயல்களை நடத்த ஐவருடைய, பதின்மருடைய சங்கத்தை விரும்பான். செல்வமிருந்தும் பொழியாமலிருப்பவனோடு அவன் சேரான். பயமுறுத்தும் அவன் யஜிக்காதவனை, தாஸனைத் தண்டிக்கிறான். அவனை அழிக்கிறான். ஆனால் தேவ பக்தனுக்குப் பசுக்கள் நிறைந்த சாலையை யளிக்கிறான். 3,909

6. போரிலே பகைவர்களைத் தளர்த்துபவனும், தன் தேரின் சக்கரங்களைத் துரிதப்படுத்துபவனுமான இந்திரன் பொழியாதவனிடம் பராமுகமாகி, பொழிந்து, யஜிப்பவனுடைய செல்வத்தைச் செழிப்பிக்கிறான். விசுவத்தை வசப்படுத்துபவனும், பயங்கரனும், தலைவனுமான அவன், தன் விருப்பம் போல் தாஸனை நடத்துகிறான்.

7. அவன் கருமியின் செல்வத்தைப் பறிக்கச் செல்லுகிறான். அளிப்பவனுக்கு உத்தம செல்வத்தைத் தருகிறான். இந்திரனுடைய ஆற்றலைக் கோபப்படுத்தும் ஒவ்வொருவரும் பெருந்துன்பத்துக்குள்ளாகிறான்.



8. மகவானான இந்திரன் உத்தமப் பசுக்களுக்காக பரஸ்பரம் போராடும் இரு செல்வ மனிதர்களின் நடுவே ஒருவனை ஆய்ந்தறிந்து, மேகங்களைக் கலக்கும் அவன் நண்பனின் எதிரிகளை நடுங்கச் செய்து, மருத்துக்களோடு சேர்ந்து அவனுக்குப் பசு மந்தைகளைத் தருகிறான்.

9. அக்கினியே! தலைவனான நான், ஆயிரஞ் செல்வங்களைத் தருபவனும், உவமைக்குரியவனும், புகழுள்ளவனும், அக்கினி வேசியின் புதல்வனுமான சத்திரியைப் போற்றுகிறேன். நன்கு பெருகும் சலங்கள் அவனுக்குச் செழுமையை யளிக்க. அவனுக்குச் செல்வமும் சக்தியும் சிறப்பும் தோன்றுக. 3,913

## 35. இந்திரன்

### 389. பிரபுவசு-அங்கிரஸ கோத்திரம்

1. இந்திரனே! உன்னுடைய எல்லா சனங்களை ஜயிப்பதும், சுத்தமாயிருப்பதும், போர்களில் ஜயிக்கப் படாததும், சாதகமாயிருப்பதுமான அந்த ஆற்றலை எங்கள் பாலனத்துக்காக அளிக்கவும்.

2. இந்திரனே! நான்கிலுள்ளவையும் அல்லது சூரனே! மூன்று உலகங்களிலிருப்பவையும், பஞ்ச சனங்களில் இயங்குபவையுமான உன்னுடைய பாலனங்களையெல்லாம் எங்களுக்களிக்கவும்.

3. இந்திரனே! நாங்கள் மழையைத் தருபவனும், பகைவர்களைத் துரிதமாய்த் துடைப்பவனும், வியாபக மருத்துக்களோடு சேர்ந்து மிக்க வலியனான உன்னால் அளிக்கப்படுவதுமான போற்றத்தகுந்த பாலனத்தை உன்னிடமிருந்து விரும்புகிறோம்.

4. இந்திரனே! நீ பொழிகிறாய். நீ செல்வங்களைப் பொழியப் பிறந்திருக்கிறாய். உன்னுடைய பலம் பெய்கிறது. உன்னுடைய சுயமாகவே சக்தியுள்ள மனம்

பகைவர்களைச் சாய்க்கிறது. இந்திரனே! உன்னுடைய ஆண்மை பகைப் படைகளை அழிக்கிறது.

5. இந்திரனே! வச்சிரமேந்துபவனும், எங்கும் பரவும் தேரிலே செல்பவனும், சதக்கிரதுவும், சக்தியின் தலைவனுமான நீ, உன்னைப் பகைக்கும் மனிதனை எதிர்க்கச் செல்லவும். 3,918

6. விருத்திரனைக் கொல்பவனே! சனங்கள், நறுக்கிய தருப்பையோடு உக்கிரனும் பலரின் நடுவே முதல்வனுமான உன்னை, போரிலே பாலனத்துக்காக அழைக்கிறார்கள்.

7. இந்திரனே! எங்களுடைய தடைப்படுத்தக் கடினமாயிருப்பதும், போர்களிலே முதன்மையாய்க் கலந்து கொள்வதும், ஆட்களோடு பின்பற்றப்படுவதும், மீண்டும் மீண்டும் செல்வத்தைக் குவிக்க விரும்புவதுமான தேரைப் பாலிக்கவும்.

8. இந்திரனே! எங்களிடம் வா; உன்னுடைய பேரறிவால் எங்கள் தேரைப் பாலிக்கவும். நாங்கள் உத்தம ஆற்றலுள்ளவனும், மிக்க ஒளியுள்ளவனுமான உன்னிடம் போற்றத் தகுந்த புகழை அடைவோமாக. நாங்கள் ஒளியுள்ள உனக்கு ஸ்தோமத்தைக் கூறுகிறோம் — விரும்பத் தகுந்த புகழுள்ளவனுமான உன்னைப் போற்றுகிறோம். உதயத்திலே ஸ்தோமத்தை உனக்குத் தியானஞ் செய்கிறோம். 3,921

## 36. இந்திரன்

### 390. பிரபுவசு-ஆங்கிரஸன்

1. தானமனமுள்ளவனும், செல்வங்களையளிக்க அறிபவனுமான இந்திரன், போற்றத் தகுந்த நடையுள்ள வில்லாளனைப் போல் எங்கள் யக்ஞத்துக்கு வருவானாக. தாகமுள்ளவனும் விரும்புபவனுமான அவன் பொழிந்துள்ள ஸோமரஸத்தைப் பருகுவானாக.



2. சூரனே! குதிரைகளிருப்பவனே! ஸோமம் உன்னுடைய தாடையின் மேல் மலையின் உச்சிக்குப் போல் ஏறுக. அரசனான இந்திரனே! நாங்கள் பலரால் அழைக்கப்படும் உன்னை எங்களுடைய துதிகளால், தீனியால் குதிரைகளை இன்புறுத்துவதுபோல் இன்புறுத்துவோமாக.

3. புருஹூதனே! வச்சிரமேந்துபவனே! வறுமையின் அச்சத்தால் என் மனம் சுழலும் சக்கரத்தைப்போல் நடுங்குகிறது. மகவானே! எப்பொழுதும் செழிப்பவனே! துதிக்கும் புருவசுவான நான், தேரிலே அமர்ந்துள்ள உன்னைத் துரிதமாயும் பலவிதமாயும் போற்றுகிறேன்.

4. இந்திரனே! உன்னைத் துதிக்கும் இவன், மகத்தான பலனைப் பெற ஸோமத்தைப் பிழியும் கல்லைப் போல் உனக்குத் துதியை எழுப்புகிறான். மகவானே! உனது இடது கையால் செல்வங்களைத் தருகிறாய். குதிரைகளிருப்பவனே! உனது வலது கையால் செல்வங்களைத் தருகிறாய். அளிக்க விருப்பமற்றிருக்காதே.

5. பொழியும் தோத்திரம் பொழியும் உன்னைச் செழிப்பிக்க. பொழியும் நீ, பொழியும் குதிரைகளிலேயே யக்ஞத்துக்கு வருகிறாய். மழையைச் செலுத்துபவனும், எழிலான மோவாயுள்ளவனும், வச்சிரமேந்துபவனும், பொழிபவனும், பொழியும் தேர் உள்ளவனுமான நீ, போரிலே எங்களைப் பாலிக்கவும்.

6. மருத்துக்களே! எங்களுக்கு முந்நூறு பசுக்களையும், அவற்றைப் பின்பற்ற இரு சிகப்புக் குதிரைகளை அளித்தவனும், செழிப்பவனும், தருணனுமான சுருதரதனுக்கு எல்லா சனங்களும் தாழ்ந்து வணங்குவார்களாக. 3,927.

## 37. இந்திரன்

### 391. பௌமோ அத்திரி

1. அவியோடு பிரகாசிப்பவனும், ஏத்தப்படுவனுமான அக்கினி சூரியனுடைய ஒளியோடு வெல்லப் பார்க்கிறான். நாங்கள் இந்திரனுக்கு அவிகளை அளிப்

போம் எனக் கூறுபவனுக்கு உஷை இடையறாது உதிப்பாளாக.

2. பரத்தப்பட்ட தருப்பையும் சொலிப்பிக்கப்பட்ட அக்கினியுமுள்ள அறிஞன் யஜிக்கிறான். ஸோமத்தைப் பிழியும் உயர்த்தப்பட்ட கல்லுள்ளவனும் துதிக்கிறான். பிழியும் சத்தங்களை எழுப்பும் கற்களுள்ள அறிஞன் அவியோடு பூர்வ ஸ்நானத்துக்காக நதியிலே இறங்குகிறான்!

3. பின்பற்றி வரும் தன் அரசியை ஏந்தி வரும் இந்திரனுடைய மனைவி கணவனோடிருக்கப் பிரியமுள்ளவளாகி யக்ஞத்திலே அவனை அனுசரிக்கிறாள். அவனுடைய தேர் எங்களுக்கு மிகுந்த உணவை ஏந்தி வருக. அது முழங்குக. அது பல்லாயிரம் செல்வங்களை எங்கும் பொழிக.

4. எந்த அரசனுடைய இடத்திலே இந்திரன் பாலோடு கலந்த தீவிர ஸோமத்தைப் பருகுகிறானோ அவன் எத்தீமையையும் அணுகான். அவன் எல்லாத் திசைகளுக்கும் செல்லுகிறான். தன் பகைவனை அழிக்கிறான். தன் பிரசைகளைப் பாலிக்கிறான். அவன் செல்வத்தை அனுபவித்து இந்திரனுடைய நாமத்தைப் பாலிக்கிறான்.

5. அவன் பந்துக்களை ஆதரிக்கிறான். அவன் செல்வத்திலும் க்ஷேமத்திலும் அரசு புரிகிறான். அவன் இப்பொழுதும் எப்பொழுதும் ஜயமுள்ளவனாகிறான். பொழிந்துள்ள ஸோமத்தை இந்திரனுக்களிப்பவன் சூரியனுக்குப் பிரியனாகிறான். அக்கினிக்குப் பிரியனாகிறான். 3,932

## 38. இந்திரன்

### 392. பௌமோ அத்திரி

1. இந்திரனே! சதக்கிரதுவே! உன்னுடைய பரந்த செல்வ தானம் மகத்தானது. அனைத்தையுங் காண்பவனும் உத்தமச் செல்வத்தை அடைந்திருப்பவனுமான நீ, எங்களுக்குச் செல்வங்களையளிக்கவும்.



2. மிக்க வலியனான இந்திரனே! நீ மிக்கப் போற்றத் தகுந்த உணவைத் தரிக்கிறாய்! ஆனால் பொன் நிறமுள்ள தேவனே! அதைப் பெறுவது கடினம். அது மிக்கப் புகழ் பெற்றது எனக் கூறப்படுகிறது.

3. வச்சிரம் ஏந்துபவனே! துதியாருகனும், புகழ் பெற்ற வீரச் செயல்களுமுள்ள வலியர்களான மருத்துக்கள் உன்னுடைய நண்பர்கள். தேவர்களான நீயும் மருத்துக்களும் சோதியையும் புவியையும் பாலிக்க அரசு புரிகிறீர்கள்

4. இந்திரனே! ஆற்றலுள்ள எந்த மனிதனுடைய செல்வத்தையும் உன்னை வழிபடும் எங்களுக்கு ஏந்தி வரவும். ஏனெனில் நீ எங்களைச் செல்வப்படுத்த விரும்புகிறாய்.

5. சதக்கிரதுவே! உன்னுடைய இந்தப் பாலனங்களோடு உன்னுடைய இந்த ஆதரவிலே, சூரனே! நாங்கள் நன்கு காக்கப்படுவோமாக. இந்திரனே! நாங்கள் நன்கு காக்கப்படுவோமாக. 3,937

## 39. இந்திரன்

### 393. பௌமோ அத்திரி

1. விரும்பத் தகுந்தவனே! வச்சிராயுதனே! இந்திரனே! அரிய செல்வம் உன்னிடம் அளிப்பதற்காக இருக்கிறது. செல்வங்களுள்ள நீ, உன்னுடைய இரு கைகளாலும் எங்களுக்களிக்கவும்.

2. இந்திரனே! போற்றத் தகுந்தது என உன்னால் கருதப்படும் எந்த உணவையும் எங்களுக்களிக்கவும். நாங்கள் உன்னிடம் எல்லையற்ற தானத்தைப் பெறுவதற்குரியவர்களாவோமாக.

3. உன்னுடைய தானத் தன்மையுள்ளதும், துதியாருகமுமான மனம் புகழுள்ளது. மகத்தானது. வச்சிரா

யுதனே! எங்களுக்கு ஆதரவான உணவைத் தர ஆயத்தமாயிருக்கிருய்.

4. மனிதர்களின் அரசனும் செல்வர்களான உங்களுடைய பானத்துக்கருகனுமான இந்திரனைப் பழைய மொழிகளால் வழிபடுபவர்கள் போற்றுகிருர்கள்.

5. அந்த இந்திரனுக்குக் காவ்யமாயிருப்பதும், மொழிவடிவமுள்ளதுமான தோத்திரம் கூறப்படவேண்டும். அவனுக்கே பிரம்மத்தை ஏந்தும் அத்திரிப் புதல்வர்கள் துதிகளை எழுப்புகிருர்கள். அத்திரிப் புதல்வர்கள் துதிகளை ஒளிப்படுத்துகிருர்கள். 3,942

## 40. இந்திரன்

### 394. பௌமன் அத்திரி

1. இந்திரனே! எங்களுடைய யக்ஞத்துக்கு வா. ஸோமபதியே! கற்களால் பிழியப்பட்ட ஸோமரஸத்தைப் பருகவும். இந்திரனே! வர்ஷிப்பவனே! அடியோடு விருத்திரனை அழிப்பவனே! நீ வர்ஷிக்கும் மருத்துக்களோடு வா.

2. கல் பொழிபவன்; மதம் பொழிபவன்; பிழியப்பட்ட இந்த ஸோமன் பொழிபவன். இந்திரனே! வர்ஷிப்பவனே! அடியோடு விருத்திரனை யழிப்பவனுன நீ, வர்ஷிக்கும் மருத்துக்களோடு வா.

3. வச்சிராயுதனே! இந்திரனே! வர்ஷிக்கும் நான் வர்ஷிக்கும் உன்னை அற்புதப் பாலனங்களுக்காக அழைக்கிறேன். இந்திரனே! வர்ஷிப்பவனே! அடியோடு விருத்திரனை யழிப்பவனுன நீ, வர்ஷிக்கும் மருத்துக்களோடு வா.

4. துரிதனும், வச்சிரமேந்துபவனும், விருஷபனும், விரைந்துவரும் பகைவர்களை ஜயிப்பவனும், வலியனும், விருத்திரனைக் கொல்பவனும், ஸோமத்தைப் பருகுபவனுமான இந்திரன், குதிரைகளை இணைத்து எங்களிடம் வருவாஞக. நடுப்பகல் யக்ஞத்திலே அவன் ஸோமத்தால் இன்புறுவாஞக.



#### சூரியன்

5. சூரியனே! அசுரனின் புதல்வனுன ஸ்வர்பானு, உன்னை இருளால் போர்த்திய போது, தான் எந்த இடத்தில் நிற்கிருன் என்பதை அறியாமல் கலங்கி நிற்கும் ஒருவனைப் போல் உலகங்கள் தோன்றின. 3,947

#### அத்திரி

6. இந்திரனே! நீ சுவபானுவால் சூரியனின் கீழே பரப்பப்பட்டிருந்த மாயைகளை விலக்குங்கால் அத்திரி, இருளால் மறைக்கப்பட்டு தன் செயல்களில் தடைபட்டிருந்த சூரியனைத் தன் துரீய பிரம்மத்தால் கண்டான்.

#### சூரியன் பேசுகிருன்:

7. அத்திரியே! துரோகி, பசியால் உணவை விரும்பி பயங்கரமான இருளோடு உனக்குரிய என்னைப் புசிக்காமலிருப்பாஞக. நீ மித்திரனுயிருக்கிருய். உன்னுடைய செல்வம் சத்தியமாகும். நீயும் அரசனுன வருணனும் சேர்ந்து என்னைப் பாலியுங்கள்.

8. பிறகு பிராமணனுன அத்திரி கற்களைச் சேர்த்து, ஸோமத்தைப் பிழிந்து, தேவர்களை ஏத்தி, வணக்கத்தோடு அவர்களைப் போற்றி, சூரியனுடைய கண்ணை வானிலே ஸ்தாபித்தான். அவன் சுவபானுவின் மாயைகளைக் களைந்தான்.

9. அத்திரிப் புதல்வர்கள், அசுரப் புதல்வனுன சுவர்பானுவால் ஏவப்பட்ட இருளால் மறைக்கப்பட்டிருந்த சூரியனை மீட்டார்கள். அவனை விடுவிக்க வேறு எவராலும் இயலவில்லை. 3,951.

## 41. விசுவே தேவர்கள்

### 395. பௌமன் அத்திரி

1. மித்திரா வருணர்களே! யக்ஞஞ் செய்ய விரும்புபவர்களின் நடுவே எவன் செய்ய இயலுகிறது?

நீங்கள் சோதியிலோ, மகத்தான புவியிலோ அல்லது வானிலோ இருந்தாலும் எங்களைப் பாலியுங்கள். யக்ஞத்தை விரும்புபவனுக்கும், அவியை அளிப்பவனுக்கும் பசுக்களையும் செல்வங்களையுமளியுங்கள்.

2. மித்திரனும், வருணனும், அர்யமானும், ஆயுவும், இந்திரனும், ரிபுக்ஷனும், மருத்துக்களும் எங்களை விரும்புவார்களாக. பொழியும் ருத்திரனோடு ஒரு மனமுள்ள அவர்கள் துதியையும் தோத்திரத்தையும் வணக்கங்களோடு பெற்றுக் கொள்வார்களாக.

3. அசுவினிகளே! நான் விருப்பத்தை வசப்படுத்தும் உங்களை வாயு வேகத்தோடு உங்களுடைய தேரைத் துரிதப்படுத்த அழைக்கிறேன். யக்ஞத்தை நிறைவேற்றுபவனும் உயிரை யழிப்பவனுமான ஒளிமயனுக்கு – உருத்திரனுக்கு - துதியையும் அவிகளையுமளியுங்கள்.

4. சோதியில் தோன்றி ஜயிப்பவனும், இந்திரனும், கண்வனை ஹோதாவாக உள்ளவனும், சூரியனோடு இசைந்துள்ள திருதனும், வாயுவும், அக்கினியும், பூஷாவும், பகனும், விசுவத்தைப் பாலிக்கும் தேவர்களும், போருக்குப் பாயும் வேகமான குதிரைகளைப் போல் யக்ஞத்துக்கு விரைவார்களாக.

5. மருத்துக்களே! நீங்கள் குதிரைகள் நிறைந்த செல்வத்தை ஏந்தி வாருங்கள். அறிஞன் செல்வங்களைச் சம்பாதிக்கவும், அவற்றைப் பாலிக்கவும், உங்களுக்குத் துதியைக் கூறுகிறான். ஔசிஜன் துரித குதிரைகளால் இன்புறுத்தப்படுவானாக. மருத்துக்களே! துரிதமாய்ச் செல்லும் உங்களுடைய குதிரைகளே அவை. 3,956

6. அறிஞர்களே! உங்களுடைய துதிகளால் நீங்கள், தேவனும், விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும், துதியாருகனுமான வாயு, தேரை இணைக்க



அவனை ஊக்கப்படுத்துங்கள். சுலப சலனமுள்ளவர்களும், யக்ஞம் பற்றுபவர்களும், அழகிகளும், உத்தமிகளுமான தேவ பத்தினிகள் இந்த யக்ஞத்துக்கு வருவார்களாக.

7. மகத்தான இரவு பகல்களே! நான் ஒரு உலகிலுள்ள துதியாருகத் தேவர்களோடுள்ள உங்களுக்கு இன்புறுத்துபவையும், துலக்கமா யிருப்பவையுமான துதிகளோடு அவியை அளிக்கிறேன். இரு அறிஞர்களைப் போல் எல்லாத் தேவையையும் நீங்கள் அதை வழிபடுவனுக்கு யக்ஞத்துக்காகச் செலுத்துங்கள்.

8. நான் செல்வங்களைப் பெற, யக்ஞத் தலைவர்களும் பலரைப் புட்டிப்படுத்துபவர்களுமான உங்களைப் போற்றி, வாஸ்தோஷ்பதியான துவஷ்டாவைப் பாக்களால் இன்புறுத்தி, செல்வத்தைத் தருபவளும், மற்ற தேவர்களின் இன்பத்தோடு கலந்து கொள்பவளுமான தேவியையும், வனஸ்பதிகளையும், ஓஷதிகளையும் போற்றுகிறேன்.

9. பர்வதர்கள் – மேகங்கள் - எங்களுக்குப் பரவலான தானங்களை அளிப்பார்களாக. வீரர்களைப் போல் உலகத்தை ஸ்தாபிக்கும் அவர்கள் எங்களிடம் அநுகூலமாயிருப்பார்களாக. துதிக்கப்பட்டவனும், துதியாருகனும், அனைவராலும் அடையத்தகுந்தவனும், மனிதர்களின் நண்பனுமான சூரியன், எங்கள் துதியால் போற்றப்பட்டு, எங்களைச் செழுமைப் படுத்துவானாக.

10. நான் புவியின் வீரனுடைய கருவை-மேகத்தை-சலங்களின் புதல்வனை – மின்னலாக்கியை – சுத்தமான பாக்களால் போற்றினேன். திருதனை அக்கினி – மூவுலகங்களிலிருக்கும் அனல் – தன்னுடைய சுகப்படுத்தும் சுடுகிற ரசிமிகளோடு செல்லுங்கால் என்னிடம் கோபமாகான். ஆனல் பிரகாசிக்கும் கேசங்களுள்ள அவன் காடுகளை எரிக்கிறான். 3,961

11. நாங்கள் செல்வத்தைப் பெற ருத்திரனின் புதல்வனான மருத்கணத்துக்கு எங்ஙனம் துதியைக் கூறுவோம்? அனைத்தையும் அறியும் பகனுக்கு எங்ஙனம் கூறுவோம்? சலங்களும், ஓஷதிகளும், சோதியும், வனங்களும், மரங்களைக் கேசங்களாக அடைந்துள்ள மலைகளும் எங்களைப் பாலிப்பார்களாக.

12. வானிலே செல்பவனும், எங்கும் பரவுபவனும், வலிமையின் தலைவனுமான வாயு, எங்களுடைய மொழிகளைக் கேட்பானாக. புரங்களைப் போல் பிரகாசிப்பவர்களும், உயர்ந்த மலைகளைச் சுற்றிப் பெருகுபவர்களுமான சலங்கள் கேட்பார்களாக.

13. மகத்தான மருத்துக்களே! நாங்கள் உங்கள் வழிகளை அறிகிறோம். அற்புதர்களே! விரும்பத் தகுந்த அவியை ஏந்தும் நாங்கள் உங்களுக்கு அதைப் புலப்படுத்துவோம். மருத்துக்கள் அநுகூலமாய் இங்கு இயங்கி கலக்கத்தால் குழப்பமடைந்தவர்களும் அவர்களை எதிர்ப்பவர்களுமான மானிடர்களை அவர்கள் ஆயுதங்களால் அழித்து எங்களிடம் வருகிறார்கள்.

14. நான், யக்ஞாருகர்களான மருத்துக்களின் படை சோதியிலிருந்தோ, புவியிலிருந்தோ தோன்றும் சலங்களைப் பெற்றுக் கொள்ள அந்தக் கணத்துக்குத் துதியை யளிக்கிறேன். என்னுடைய மொழிகள் செழிக்க. இன்பமளிக்கும் சோதிகள் பரவுக. மருத்துக்களால் பாலிக்கப்படும் நதிகள் சலத்தால் நிரம்புக.

15. ஒவ்வொன்றுக்கும் கிரமமாய் என்னுடைய துதியளிக்கப்படுகிறது. வருத்திரி தன் ஆற்றல்களோடு பாலனத்தை யளிக்க சக்தியுள்ளவளாயிருப்பாளாக. தாயாயிருப்பாளாக. தாயாயிருப்பவளும், மதிப்புக் குரியவளுமான தரணி எங்கள் துதிகளை ஏற்றுக் கொள்வாளாக அறிஞர்களுடைய துதிகளால் இன்பமான அவள் எங்களுக்கு அனுகூலகையும், அனுகூல தானமளிப்பவளுமாகத் தோன்றுவாளாக. 3,966



16. நாங்கள் ஈகையர்களான மருத்துக்களைத் துதியால் எங்ஙனம் துதிப்போம்? தகுந்த வழியில் கூறப்படும் துதியோடு மருத்துக்களை எங்ஙனம் போற்றுவோம்? கூறப்படும் துதியோடு கீர்த்தியுள்ள மருத்துக்களை எங்ஙனம் போற்றுவோம்? அஹிர்புத்னியன் எங்களைத் துன்பப்படுத்தாமலிருப்பானாக. அவன் எங்கள் பகைவர்களை அழிப்பானாக.

17. தேவர்களே! மனிதன் எப்பொழுதும் உங்களை பிரசைக்காகவும் பசுவுக்காகவும் போற்றுகிறான் தேவர்களே! மானிடன் உங்களைப் போற்றுகிறான். நிர்ருதி இப்பொழுது என்னுடைய தேகத்தை சுகப் படுத்தும் உணவால் தாங்குவாளாக. மூப்பை விலக்குவாளாக.

18. தேவர்களான வசுக்களே! நாங்கள் போற்றத் தகுந்த பசுவினிடமிருந்து பலப்படுத்துவதும், மனத்துக்கு நல்ல ஸாதனமாயிருப்பதுமான உணவை அடைவோமாக. உத்தம தானமுள்ளவளும் சுகத்தைத் தருபவளும் எங்களை நோக்கி வருபவளுமான அந்தத் தேவி எங்களுடைய க்ஷேமத்துக்கு இங்கு அணுகுவாளாக.

19. பசு மந்தையின் தாயான இளையும், நதிகளோடு உர்வசியும் எங்களுக்கு அனுகூலமா யிருப்பார்களாக. மகத்தாய்ப் பிரகாசிக்கும் உர்வசி எங்கள் செயலைப் போற்றுபவளாயும், வழிபடுபவனை ஒளியால் எழில் படுத்துபவளாயும் வருவாளாக.

20. ஊர்ஜவ்யனுடைய ஆதரவிலிருக்கும் எங்களை அவன் பாலிப்பானாக. 3,971

## 42. விசுவே தேவர்கள்

### 396. பௌமன் அத்திரி

1. எங்களுடைய மிக்க சுகப்படுத்தும் துதியானது அவிகளோடு வருணனிடமும், மித்திரனிடமும், பகனிடமும், அதிதியினிடமும் சேர்க. பல நிறமுள்ள வசிக்கும்

பஞ்ச ஹோதாக்களின் – ஐந்து பிராணங்களின் – ஸாதகனை வாயு தடைபடாத வழியுள்ளவன். உயிரையளிப்பவனும் இன்பப்படுத்துபவனுமான அவன் – வாயு – கேட்பானாக.

2. அதிதி என்னுடைய அன்புள்ளதும் இருதயத்தைப் பற்றுவதுமான ஸ்தோமத்தை மகளுடைய சொற்களைத் தாய் போல் கேட்பாளாக. நான் மித்திரனுக்கும் வருணனுக்கும் பிரியமாயிருப்பதும், தேவர்களால் புகழப்பட்டதும், சுகப்படுத்துவதுமான தோத்திரத்தைக் கூறுகிறேன்.

3. அறிஞர்களே! கவிகளின் நடுவே மிக்கக் கவித்தன்மையுள்ள அக்கினியைப் போற்றுங்கள். அவனை இனிய ரஸத்தாலும் நெய்யாலும் திருப்தி செய்யுங்கள். தேவ ஸவிதா எங்களுக்கு மிகுந்த அனுகூலமான, இன்பமான செல்வங்களை அளிப்பானாக.

4. இந்திரனே! குதிரைகள் வைத்துள்ளவனே! நீ உன்னுடைய விரும்பும் மனத்தோடு, எங்களைப் பசுக்களோடும், அறிஞர்களோடும், செல்வத்தோடும், தேவர்களுக்கும் இதமாயிருக்கும் மந்திரத்தோடும், யக்ஞார்கத் தேவர்களின் ஸுமதியோடும் சேர்க்கிறாய்.

5. தேவனான பகனும், செல்வத்தின் தலைவனுமான ஸவிதாவும், அம்சனும், விருத்திரனைக் கொல்லும் இந்திரனும், செல்வங்களை ஜயிக்கும் அனைவரும், ரிபுவும், வாஜனும், புரந்தியும், அமுதர்களும் எங்கள் யக்ஞத்துக்குத் துரிதமாகி எங்களைப் பாலிப்பார்களாக. 3,976.

6. தாங்கள் எதிர்ப்பற்றவனும், ஜயிப்பவனும், தேயாதவனும், மருத்துக்களோடிருப்பவனுமான இந்திரனுடைய வீரச் செயல்களைக் கூறுகிறோம். மகவானே! பூர்வத்திலும், பிற்காலத்திலும், இப்பொழுதும், எவனும், அவனுடைய வீரியத்தை யடையவில்லை.

7. ஆத்மாவே! துதிப்பவனுக்கும் ஏத்துபவனுக்கும் உத்தம சுகத்தைத் தருபவனும், அழைப்பவனுக்கு



மிகுந்த செல்வத்தை ஏந்தி வருபவனும், இரத்தினமளிக்கும் முதல்வனும், பொருள்களை வழங்குபவனுமான பிரகஸ்பதியைப் போற்றவும்.

8. பிரகஸ்பதியே! உன்னுடைய பாலனங்களால் ஆதரவாகும் சனங்கள் பகைவர்களால் துன்பமாகார்கள். அவர்கள் செழித்து வீரப்புதல்வர்களுடனாகிறார்கள். குதிரைகளை யளிப்பவர்களுக்கும், பசுக்களை யளிப்பவர்களுக்கும், ஆடைகளை அளிப்பவர்களுக்கும் சௌபாக்கியங்களைத் தரும் செல்வங்கள் தோன்றுகின்றன.

9. துதிசெய்யும் உத்தமர்களுக்கு அளிக்காமல் தாமே அனுபவித்து வரும் செல்வங்களை நீ அநித்தியப்படுத்தவும். விரதமற்றவர்கள் தங்கள் தொழிலில் செழித்திருந்தாலும், பிரம்மத்துவேஷிகளான அவர்களைச் சூரியனிடமிருந்து தனிப்படுத்தவும்.

10. மருத்துக்களே! தேவர்களுடைய விருந்துக்கு அரக்க்ர்களை அழைக்கும் மனிதனைச் சக்கரங்களற்ற தேர்களோடு இருட்டிலே செலுத்துங்கள். பயனற்ற போகங்களைப் பூர்த்தி செய்து கொள்ள உழைத்து வியர்வையுடனுருங்கால் உங்களைத் துதிக்கும் என்னை நிந்திப்பவனையும் இருட்டிலே செலுத்துங்கள். 3,981

11. எவன் ஒவ்வொரு ஓஷதியின் தலைவனாயிருக்கிறானோ, கூரிய அம்பும் வலிய வில்லும் ஏந்தும் அவனை– உருத்திரனை–ஏத்தவும். அந்த உருத்திரனையே மகத்தான நல்ல மனத்துக்காக ஏத்தவும். வணக்கங்களோடு வலியனான தேவனை ஏத்தவும்.

12. தானமனமுள்ளவர்களும், செயலாளர்களும், நுண்ணிய கைகளுமுள்ள ரிபுக்களும், வர்ஷிக்கும் இந்திரனுடைய மனைவிகளும், விபுவால் கற்பிக்கப்பட்ட நதிகளும், ஸரஸ்வதியும், பிருஹத்திவியும், இராகையும், விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் காந்தர்களும், எங்களுக்குச் செல்வங்களை அளிக்க விரும்புவார்களாக.

13. நான் என்னுடைய புதிய துதியை, இப்பொழுது என்னிடமிருந்து தோன்றும் தோத்திரத்தை மகத்தான பாலகனுக்குக் கூறுகிறேன். பொழிபவனுன இந்திரன், தன்னுடைய புதல்வியான புவியின் நலத்துக்காக நதிகளுக்கு ரூபத்தையளித்து நம்முடைய உபயோகத்துக்காக இந்த சலத்தை நமக்குத் தந்தான்.

14. துதிப்பவனே! உன்னுடைய இந்த நல்ல துதியானது, மேகங்களோடும் சலங்களோடும் நிறைந்திருப்பவனும், மின்னலோடு சோதியையும் புவியையும் மழையால் நனைக்கத் துரிதப்படுபவனுமான பர்ஜன்யனிடம் செல்க.

15. இந்த ஸ்தோமம், ருத்திரனுடைய தருணப் புதல்வர்களான மருத்துக்களின் படையினிடம் செல்க. விருப்பம் என்னை செல்வத்துக்கும் சுவஸ்திக்கும் அழைக்கிறது. பலவித நிறங்களுள்ள குதிரைகளில் யக்ஞத்துக்குச் செல்பவர்களைப் போற்றவும். 3,986

16. இந்த ஸ்தோமம் செல்வத்துக்காக, புவியின், சோதியின், மரங்களின், ஓஷதிகளின், தேவதைகளினிடம் செல்க. எல்லாத் தேவர்களும் செவியுறத் துரிதமாவார்களாக. தாயான தரணி என்னைத் துன்மதியில் செலுத்தாமலிருப்பாளாக.

17. தேவர்களே! நாங்கள் எப்பொழுதும் உங்களுடைய மகத்தான, துன்பமற்ற சுகத்திலிருப்போமாக.

18. நாங்கள் எப்பொழுதும் அசுவினிகளுடைய புதியதாயிருப்பதும், சுகத்தைத் தருவதும், நல்வழியைப் புலப்படுத்துவதுமான பாலனத்தோடு சேர்ந்திருப்போமாக. அமிருதர்களே! எங்களுக்குச் செல்வத்தையும் வீரப் புதல்வர்களையும் எல்லா சௌபாக்கியங்களையும் செலுத்துங்கள். 3,989



# 43. விசுவே தேவர்கள்

## 397. பௌமன் அத்திரி

1. துரிதமாய்ச் செல்பவையும் துன்பஞ் செய்யாதவையுமான பசுக்கள்-நதிகள்-இனிய பாலோடு எங்களிடம் வருக. துதிக்கும் விப்பிரன் ஏழு மகத்தான சுகத்தைத் தரும் நதிகளை மிகுந்த செல்வத்துக்காக அழைக்கிறுன்.

2. நான் நல்ல துதியோடும், அவியோடும், துன்பமாகாத சோதியையும் புவியையும் உணவுக்காக நெருங்க விரும்புகிறேன். தந்தையான சோதியும், இனிய மொழியும், நல்ல கையுமுள்ள தாயான புவியும் மிக்கப் புகழுள்ளவர்கள். அவர்கள் எங்களை ஒவ்வொரு போரிலும் பாலிப்பார்களாக.

3. ஸோமத்தைப் பக்குவப் படுத்தும் அத்வர்யுக்கள் சுந்தரமாயும் சிறப்பாயுமுள்ள ரஸத்தை முதன்மையாக !வாயுவுக்களிக்கிறுர்கள். தேவனுன வாயுவே! நீ ஹோதாவைப் போல், உன் மதத்துக்காக நாங்கள் அளிக்கும் இந்த இனிய பானத்தை முதலில் பருகவும்.

4. ஸோமத்தைப் பிழியும் பத்து விரல்களும் இரஸத்தை வெளிப்படுத்தும் அறிஞனின் இரு கிறக்கைகளும், கல்லைப் பற்றுகின்றன. மங்கல விரல்கள் உள்ள அறிஞன் மகிழ்ந்து மலையில் பிறந்த இனிய ஸோமத்தின் ரஸத்தைக் கறக்கிறுன். அது சுத்தமான ரஸத்தைத் தருகிறது.

5. இந்திரனே! உனக்குத் திருப்தியையளிக்கவும், உன்னுடைய வீரச் செயலை நீ நடத்த உன்னைப் பலப்படுத்தவும், மதப்படுத்தவும் ஸோமம் பொழியப்பட்டிருக்கிறது. நீ எங்களால் அழைக்கப்பட்டவுடன் உன்னுடைய அடங்கிய அன்புள்ள, பழக்கப்பட்ட இரு குதிரைகளை இணைத்து, தேரிலே இங்கு வா. 3,994

6. அக்கினியே! எங்களால் இன்பமாகும் நீ, இனிய ஸோமத்தின் மதத்தைப் பெற விரும்புபவனும், யக்ஞங்களை அறிபவனும், வணக்கத்தோடு அவிகள் அளிக்கப்படுபவனும், மேன்மையானவனும், எங்கும் செல்பவனுமான தேவியான க்நாவைத் தேவர்கள் வரும் வழிகளால் எங்களிடம் ஏந்தி வா.

7. தந்தையின் அங்கத்திலே அன்புள்ள மகனைப் போல் யக்ஞத்தை நாடும் மகாவீர பாண்டம் அக்கினியின் மீது வைக்கப்பட்டிருக்கிறது. வபையுள்ள பாண்டத்தைப் பரத்தித் தாபப்படுத்துவது போல் அதை அறிஞர்கள் எழில் படுத்துகிறார்கள். அதில் நெய்யை இடுகிறார்கள்.

8. போற்றத் தகுந்ததும், கத்தாயுள்ளதும், இன்புறுத்துவதுமான இந்த மொழி, தூதனைப் போல் அசுவினிகளை இங்கு அழைக்கச் செல்க. அசுவினிகளே! சுகப்படுத்துபவர்களும் ஒரே தேரிலே ஏறுபவர்களுமான நீங்கள் வைக்கப்பட்டுள்ள ஸோமத்துக்கு சகடத்தின் அச்சுக்கு ஆணியைப் போல் அவசியமாகும் நீங்கள் வாருங்கள்.

9. நான் செல்வத்துக்கும் உணவுக்கும் விருப்பத்தை ஊக்கப்படுத்துபவர்களும், செல்வங்களைத் தருபவர்களும், ஆற்றலுள்ளவர்களும், துரிதர்களுமான பூஷணனுக்கும் வாயுவுக்கும் தோத்திரத்தைக் கூறுகிறேன்.

10. ஜாதவேதஸனே! நீ எங்களால் அழைக்கப்பட்டு, பல நாமங்களையும் ரூபங்களையும் ஏந்தும் எல்லா மருத்துக்களையும் ஏந்தி வா. மருத்துக்களே! நீங்கள் எல்லாம் உங்களுடைய பாலனங்களோடு, யக்ஞத்துக்குப் பாடுபவனுடைய பாக்களுக்கும் துதிகளுக்கும் வாருங்கள். 8,999

11. போற்றத்தகுந்த ஸரஸ்வதி சோதியிலிருந்து அல்லது பரந்த வானிலிருந்து யக்ஞத்துக்கு வருவாளாக.



நெய்யைப் பொழியும் தேவி எங்களழைப்பால் போற்றப்பட்டு, எங்கள் துதிகளைத் திருப்தி செய்ய விரும்பி செவியுறுவாளாக.

12. அறிஞர்களே! விவிதமாய்ச் செய்பவனும், இனியாங்கமுள்ளவனும், பெரியவனுமான பிரகஸ்பதியை யக்ஞ ஸதனத்திலே ஸ்தாபியுங்கள். நாம் யக்ஞ ஸதனத்தின் உட்புறத்தில் அமர்ந்திருப்பவனும், எங்கும் பிரகாசிப்பவனும், பொன் நிறமுள்ளவனும், அழகுள்ளவனுமான பிரகஸ்பதியைப் போற்றுவோமாக.

13. அனைத்தையும் தாங்குபவனும், பிரஹத்திவனும், இன்புறுத்துபவனுமான அக்கினி. அழைக்கப்பட்டவுடன் எல்லாப் பாலனங்களோடும் வருவானாக. சுவாலைகளையும் ஓஷதிகளையும் உடுத்துபவனும், தடைபடாதவனும், முந்நிறக் கொம்புகளிருப்பவனும், விருஷபனும், அவிகளை ஏற்பவனுமான அக்கினி வருவானாக.

14. மனிதனுடைய ஹோதாக்கள், சிருவங்களை ஏந்திக் கொண்டு தாயான புவியின் பிரகாசமாயும் மிக்க மேன்மையாயுமுள்ள இடத்துக்குப் போகிறார்கள். அவிகளை அளிப்பவர்கள் வணக்கத்தோடு பாலனான அக்கினியை சுகப்படுத்த, நீடித்து வாழ, குழந்தையின் அங்கங்களைத் தேய்த்துப் பிடித்துவிடும் சனங்களைப் போல் பாலிக்கிறார்கள்.

15. அக்கினியே! மகத்தான உன்னிடம் மகத்தான ஆற்றல் இருக்கிறது. உன்னைப் போற்றுவதில் மூப்பாகும் தம்பதிகள் உன்னை நாடுகிறார்கள். ஒவ்வொரு தேவனும் கேட்கத் துரிதமாவானாக. தாயான தரணி எங்களிடம் துன்மதியுடனாகாமலிருப்பாளாக.

16. தேவர்களே! நாங்கள் எப்பொழுதும் துன்பமில்லாத மகத்தான க்ஷேமத்திலிருப்போமாக.

17. நாங்கள் எப்பொழுதும் அசுவினிகளுடைய புதியதாயிருப்பதும், சுகத்தைத் தருவதும், நல்வழியைப்

புலப்படுத்துவதுமான பாலனத்தோடு சேர்ந்திருப் போமாக. அமிருதர்களே! எங்களுக்குச் செல்வத்தையும் வீரப்புதல்வர்களையும் எல்லா சௌபாக்கியங்களையும் செலுத்துங்கள். 4,006

## 44. விசுவே தேவர்கள்

### 398. அவத்ஸாரன்—கசியபன்

1. அவனைத் துதித்து, தங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொண்ட பழைய அறிஞர்களைப் போலும், நம்முடைய முன்னோர்களான அறிஞர்களைப் போலும், இப்பொழுது துதிப்பவர்களைப் போலும், நீ, மேம்படுத்தும் துதியால் பழையவனும், தேவர்களில் முதல்வனும், தர்ப்பையில் அமர்ந்தவனும், சோதியை யறிபவனும், நம் முன் வருபவனும், வலியனும், துரிதனும், ஜயிப்பவனுமான இந்திரனிடமிருந்து என்னுடைய விருப்பங்களைக் கறக்கவும்.

2. இந்திரனே! சோதியில் பிரகாசமாயிருக்கும் நீ, சலனப்படாத மேகத்தின் அழகிய சலங்களை, எல்லாத் திசைகளிலும், மானிடரின் நலத்துக்காகப் பரத்துவாயாக. நல்ல செயல்களை நடத்தும் நீ, சனங்களைப் பாலிப்பவனாகவும், இன்னல் செய்யாதவனாயுமிருக்கிறாய். நீ எல்லா மாயைகளுக்கும் மேலானவனாக விளங்குகிறாய். உன்னுடைய நாமம் ருதத்திலே-சத்தியத்திலே-நிலைக்கிறது.

3 சத்தியத்தையளிப்பதும், சதா செல்வதுமான அவியோடு அக்கினி சேர்ந்திருக்கிறான். அனைத்தையும் தாங்கும் அவன், தடைபடாமல் செல்பவன். ஹோதாவான அவன் பலத்தைப் பாலிப்பவன். தருப்பையின் மீது தவழும் வலியன்; பாலன்; தேயாதவன்; அவனுடைய இடம் ஓஷதிகளின் நடுவே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

4. சூரியனுடைய நன்கு சேர்ந்துள்ள இந்தக் கிரணங்கள், யக்ஞஞ் செய்பவனுக்காக யக்ஞத்தின் வழியில் செல்லும் இணக்கத்தோடு இறங்குகின்றன துரிதமாய்ச் செல்பவையும், அனைத்தையும் கிரமப்படுத்துபவையுமான ரசிமிகளால்-ஆதித்தியன்-இயக்கி, பள்ளமான இடங்களில் பெருகும் சலங்களைத் திருடுகிறான்.



5 அக்கினியே! நன்கு போற்றப்படும் நீ, ஸோமம் பிழியப்பட்டு மரப்பாண்டங்களில் சென்றவுடன் நீ உன்னைத் துதிப்பவர்களின் நடுவே பிரகாசிக்கிறாய். நீ பானத்தை ஏற்கிறாய். நீ இருதயம் பற்றும் துதிகளால் ஊக்கமாகிறாய். உயிரையளிக்கும் நீ, யக்ஞத்திலே உன்னைப் பாலிக்கும் சுவாலைகளைச் செழிப்பிக்கவும். 4,011

6. அவன் எங்ஙனம் தோன்றுகிறானோ அங்ஙனம் புகலப்படுகிறான். அவர்கள் ஸாதகமான காந்தியோடு-தங்கள் ரூபத்தை-சலங்களில் ஏந்துகிறார்கள். அவர்கள் எங்களுக்கு மகத்தாயும் மேன்மையாயுமுள்ள செல்வங்களையும், மேலான ஊக்கத்தையும், பலவித வீரப் புதல்வர்களையும், தேயாத் திறத்தையும் தருவார்களாக.

7. கவியான சூரியன் மனைவியோடிருந்தாலும், மணமாகாதவனைப் போல் போரை விரும்பும் மனத்தோடு பகைவர்களின் மீது செல்லுகிறான். சுயமாகவே சிறப்புள்ள அவன், எங்களுக்குத் தங்கும் மனையையும், ஒவ்வொரு பக்கத்திலும் வெப்பத்தை விலக்கும் வீட்டையுமளிப்பானாக.

8. இந்த எங்களுடைய துதிகளில் ரிஷிகளால் பாடப்படும் உன்னுடைய நாமம் துரிதமாய்ச் செல்லும் இவனுடைய-அக்கினியின்—ஒளியால், சூரியனிடம் செல்லுகிறது. அவன் தன் மனத்தில் சங்கற்பஞ் செய்து கொண்ட செல்வத்தை ஜயிக்கிறான். தனக்குத் தானே ஊக்கஞ்செய்து கொள்பவன் விரும்புவதைப் பெறுகிறான்.

9. எங்களுடைய இந்தத் துதிகளிலே மிக்க மேன்மையாயிருக்கும்-துதி-கடலைப் போலுள்ள சூரியனிடம்

செல்லுகிறது. அவனுடைய துதிகள்-கூறப்பட்டு-பரவும் யக்ஞ ஸதனம்-நலத்தையளிக்கத் தவருது. சுத்தஞன சூரியனிடம், பந்தமான மனத்தை அடைந்த வழிபடுபவனுடைய இருதயத்தின் விருப்பம் பங்கமாகாது.

10. அவனே-ஸவிதாவே-போற்றுவதற்குரியன். நாங்கள் க்ஷத்ரனுடைய, மனஸனுடைய, எவவதனுடைய, யஜதனுடைய சித்தங்களோடு, அவத்ஸாரனுடைய இனிமையான பாக்களோடு அறிஞுல் பெறுவதற்குரிய மகத்தான பலத்தைப் பற்ற இயங்குவோமாக. 4,016.

11. விசுவவாரனுடைய, யஜதனுடைய, மாயினனுடைய இடையைப் பருமனுக்குவதும், மதப்படுத்துவதுமான பானம், பருந்தைப் போல் வேகமாய், தீவிரமாயிருக்கிறது. அவர்கள் இந்த ரஸங்களைப் பருகி பரஸ்பரம் பானஞ் செய்ய ஊக்கஞ் செய்து கொள்கிருர்கள். அவர்கள் இவற்றை மிக்கப் பருகினுல் மிகுந்த மதம் தோன்றுகிறது என்பதைக் கண்டார்கள்.

12. ஸ்தாபிருணனும், யஜதனும், பாஹுவிருக்தனும், சுருதவிதனும், தர்யனும் உங்களோடு சேர்ந்து உங்கள் பகைவர்களை யழிப்பார்களாக. ரிஷிதன் நன்ருய் முன்னேறும் குதிரைகளோடு, நன்கு இசைந்த தோத்திரங்களோடு தேவசங்கத்தைப் போற்றுங்கால், இரு உலகங்களிலும் தன் விருப்பங்களையும் அடைகிருன். மிகவும் பிரகாசிக்கிருர்கள்.

13. ஸுநம்பரன் யக்ஞம் நடத்துபவனைப் பாலிப்பவனுயிருக்கிருன். அவன் எல்லா நல்லெண்ணங்களையும் தோற்றுவித்து உயர்த்துபவனுயிருக்கிருன். பாற்பசு ரஸமான பாலைத் தருகிறது. அது வழங்கப்படுகிறது. அவத்ஸாரன் இதைக் கிரமமாய்ப் புலப்படுத்தி சயனிக்காமல் வேதமொழிகளைக் கற்கிருன்.

14. எவன் எப்பொழுதும் விழித்திருக்கிருனே அவனை இருக்குக்கள் விரும்புகின்றன. எவன் எப்பொழுதும் விழித்திருக்கிருனே அவனிடம் ஸாமங்கள் செல்லுகின்றன. எவன் விழித்திருக்கிருனே அவனிடம் ஸோமன் இங்ஙனம் கூறுகிருன். நான் உன்னுடைய நட்பிலே வசிக்கிறேன்.



15. அக்கினி விழித்திருக்கிருன். அவனை இருக்குக்கள் விரும்புகின்றன. அக்கினி விழித்திருக்கிருன். அவனிடம் ஸோமன் இங்ஙனம் கூறுகிருன். நான் உன்னுடைய நட்பிலே வசிக்கிறேன். 4,021.

## 45. விசுவே தேவர்கள்

### 399. ஸதாபிருணன் – ஆத்திரேயன்

1. இந்திரன் அங்கிரஸர்களின் துதிகளைக் கேட்டு, சோதியிலிருந்து வச்சிரத்தைச் செலுத்தி, பசுக்களை மீட்டான். உதயமாகும் உஷையின் கிரணங்கள் எங்கும் பரவுகின்றன. தேவஞன சூரியன் இருட்டு வியலைக் கலைத்து எழுந்திருக்கிருன். மானிடர்களின் மனைகளின் கதவுகளைத் திறந்திருக்கிருன்.

2. சூரியன் தன் காந்திரிய உருவமளிக்கும் செல்வத்தைப் போல் அளிக்கிருன் - பரத்துகிருன். பசுக்களின் – இரசிமிகளின் – தாயான உஷை, சூரியன் வருகிருன் என்பதை அறிந்து பரந்த வானிலிருந்து தோன்றுகிருள். நதிகள், பெருகும் சலங்களோடு கரைகளை உடைத்துக் கொண்டு பாய்கின்றன. நன்கு நிறுத்தப்பட்ட தூணைப் போல் சுவர்க்கம் நிலைத்திருக்கிறது.

3. மகத்தான தோத்திரங்களைத் தோற்றுவித்த பழையவனிடம் போல் என்னிடம் பர்வதத்தின் – மேகத்தின், கருப்பம் – சலம் - இறங்குகிறது. மேகம் தன் சுமையை நீக்குகிறது. சோதி தன் கடமையைச் செய்கிறது. ஊக்கமாய்ப் போற்றும் அங்கிரஸர்கள் மிக்கத் துதித்து, களைப்படைந்திருக்கிருர்கள்.

4. இந்திராக்கினிகளே! நான் என்னுடைய பாலனத்துக்காகத் தேவர்களால் விரும்பப்படும் சூக்தமொழிகளால் உங்களை அழைக்கிறேன். யக்ஞத்திலே

சிறந்தவர்களும், மருத்துக்களைப் போல் ஊக்கமாயிருப்பவர்களுமான கவிகள் உங்களைக் கவனமாய்ப் புகழ்ந்து, பாக்களோடு போற்றுகிறார்கள்.

5. இன்று வேகமாய் வாருங்கள். நாம் நல்ல செயல்களில் இயங்குவோமாக. நாம் அடியோடு வெறுப்பை விலக்குவோமாக. யக்ஞத்தை நடத்துபவனுக்குத் தோன்றும் எதிர்ப்பைத் தூரத்திலே விலக்குவோமாக. நாம் யக்ஞத்தை நடத்துபவனின் முன்னே செல்வோமாக. 4,026

6. நண்பர்களே! வாருங்கள். எந்தச் செயலால் மநு விசிசிப்பிரனை ஜயித்தானோ, எந்தச் செயலால் வணிகன் வனத்துக்குச் சென்று சலத்தை யடைந்தானோ, எந்தச் செயலால் திருடப்பட்ட பசுக்கள் மறைத்து வைக்கப்பட்டிருந்த இடங்கள் தாயால் திறக்கப்பட்டனவோ, அந்தச் செயலை நாம் நடத்துவோமாக.

7. இந்த யக்ஞத்திலே அறிஞர்களுடைய கைகளால் செலுத்தப்படும் கல் சப்திக்கிறது. அதனால் நவக்வர்கள் பத்து மாதங்கள் போற்றினார்கள். ஸரமை நேராகச் சென்று பசுவைக் கண்டாள். அங்கிரஸன் எல்லா மொழிகளையும் சத்தியப்படுத்தினான்.

8. இந்த மகத்தான தேவியாம் உஷையின் உதயத்திலே அங்கிரஸர்கள் பசுக்களோடு சேர்ந்து பாடுங்கால், கோக்களின் ஊற்று - மேகம் - தேவ சபையின் உத்தம ஸ்தானத்தில் இருந்தது. ஸரமை ருதத்தின் வழியால் பசுவைக் கண்டாள்.

9. ஏழு குதிரைகளால் ஏந்தப்படும் சூரியன் தன்னுடைய நீண்ட பயணத்துக்காகப் பரந்திருக்கும் நிலத்துக்கு வருவானாக. வேகமான பருந்து ஸோமத்தின் மீது பாய்கிறான். கவியும் தருணனுமான அவன், பசுக்களின் நடுவே - ரசிமிகளின் நடுவே - சென்று பிரகாசிக்கிறான்.



10. சூரியன் தன் சுந்தராங்கமுள்ள சிகப்புக் குதிரைகளை இணைத்தவுடன் பிரகாசிக்கும் சலத்துக்கு மேலே ஏறினான். தீரர்கள் அவனை சலத்தின் வழியாய்க் கப்பலைப் போல் இழுத்தார்கள். சலங்கள் அவனுடைய ஆக்ஞைகளைச் செவியுற்று இங்கு இறங்கின.

11. தேவர்களே! நான் சலத்துக்காக உங்களுக்கு எந்த யக்ஞத்தால் நவக்வர்கள் பத்து மாத யக்ஞத்தைப் பூர்த்தி செய்தார்களோ அனைத்தையுமளிக்கும் அந்த யக்ஞத்தை அளிக்கிறேன். நாங்கள் இந்த யக்ஞத்தால் தேவர்களைப் பாலகர்களாக அடைவோமாக. நாங்கள் இந்த யக்ஞத்தால் பாவத்தின் எல்லைகளைக் கடப்போமாக. 4,032

## 46. விசுவே தேவர்கள்

### 400. பிரதிக்ஷத்திர ஆத்திரேயன்

1. நன்கறியும் நான் சுயமாகவே நுகத்திலே குதிரையைப் போல் பந்தமானேன். ஏந்துவதும், பாலிப்பதுமான நுகத்தை நான் தாங்குகிறேன். நான் அதிலிருந்து விடுதலையாக விரும்பவில்லை. நான் அதை மீண்டும் சுமக்க விரும்பவில்லை. வழியை அறியும் தலைவன் என்னைச் சத்திய வழியில் செலுத்துவானாக.

2. அக்கினியே! இந்திரனே! வருணனே! மித்திரனே! தேவர்களே! நீங்கள் எங்களுக்குப் பலத்தை யளியுங்கள். மருத்துக்களின் கணமும் விஷ்ணுவான நீங்களும், எங்களுக்குப் பலத்தையளியுங்கள். நாஸத்தியர்களும், இந்திரனும், தேவபத்தினிகளும், பூஷாவும், பகனும், ஸரஸ்வதியும், எங்கள் யக்ஞத்தை விரும்புவார்களாக.

3. நான் பாலனத்துக்காக இந்திராக்கினிகளையும், மித்திரா வருணர்களையும், அதிதியையும், சுவரத்தையும், சோதியையும், புவியையும், மருத்துக்களையும், மேகங்களையும், சலங்களையும், விஷ்ணுவையும், பூஷாவையும், பிரம்மணஸ்பதியையும், ஸவிதாவையும் அழைக்கிறேன்

4. விஷ்ணுவும், இன்னல் செய்யாத வரதனும், செல்வங்களைத் தரும் ஸோமனும், எங்களை சுகப்படுத்துவார்களாக. ரிபுக்களும், அசுவினிகளும், துவஷ்டாவும், விபனும், எங்களைச் செல்வப்படுத்த அனுகூலமாயிருப்பார்களாக.

5. யக்ஞாருகர்களும் ஒளி உலகில் வசிப்பவர்களுமான மருத்துக்களின் படை, தருப்பையின் மீது அமர, எங்களிடம் வருவார்களாக. பிரகஸ்பதியும், பூஷாவும், வருணனும், மித்திரனும், அர்யமானும், எங்களுக்கு மனைக்குரிய மகிழ்ச்சியைத் தருவார்களாக. 4,037.

6. மேலான மலைகளும் ஈகையுள்ள நதிகளும் எங்களுடைய பாலனத்துக்கு விளங்குவார்களாக. செல்வத்தை விபாகஞ்செய்யும் பகன் உணவோடும் உதவியோடும் வருவானாக. பரந்து பரவும் இந்த அதிதி என் அழைப்பைக் கேட்பாளாக.

7. எங்கள் வணக்கத்தை விரும்பும் தேவ பத்தினிகள் எங்களைப் பாலிப்பார்களாக. மிகுந்த உணவையும், ஆற்றலுள்ள சந்தானத்தையும் அடைய ஆதரிப்பார்களாக. புவியிலிருப்பவர்களும், வானிலே சலாட்சி செய்பவர்களுமான தேவிகளாம் நீங்கள், நன்கு அழைக்கப்படுபவர்களுமான நீங்கள், எங்களுக்கு சுகத்தைக் கொடுங்கள்.

8. தேவி பத்தினிகளான தேவிகள் எங்களுடைய அவியை ஏற்பார்களாக. இந்திராணியும், அக்னயியும், பிரகாசிக்கும் அசுவினிகளும், ரோதஸியும், வருணனியும், ஒவ்வொருவரும் எங்கள் துதியைச் செவியுறுவார்களாக. தேவிகளும் அவியைச் சுவைப்பார்களாக. தேவ பத்தினிகளின் தேவனுன பருவமும் செவி சாய்ப்பார்களாக. 4040.



# 47. விசுவே தேவர்கள்

## 401. பிரதி ரத ஆத்திரேயன்

1. மகத்தான தாயும், தன் புதல்வியை – புவியை – எழுப்புபவளும், போற்றத் தகுந்தவளுமான உஷை, மனிதர்களை உழைப்புக்கு எழுப்பிக்கொண்டு சோதியிலிருந்து வருகிறாள். உபசரிப்பவளும், யுவதியும், புகழப்படுபவளுமான அவள் அழைக்கப்படுங்கால், பாலகர்களான தேவர்களோடு யக்ஞ ஸதனத்துக்கு வருகிறாள்.

2. தங்களுடைய கடமையைப் பூர்த்தி செய்பவையும், அமிருதனுடைய – சூரியனுடைய – நாபியில் – மண்டலத்தில் – வசிப்பவையும், துரிதமானவையுமான ரசிமிகள், வானிலும் புவியிலும் எங்கும் பரவுகின்றன.

3. வர்ஷிப்பவனும், சமுத்திரனும், சிகப்பனுமான ஸுபர்ணன், தந்தைக்குரிய கீழ்த்திசையின் நிலையத்தில் நுழைந்தான். பல நிறமுள்ளவளும், பரவுபவளுமான சோதி, வானின் இரு எல்லைகளுக்குச் சென்று உலகத்தைப் பாலிக்கிறாள்.

4. க்ஷேமத்தை நாடும் நால்வர்கள் அவனை அவிகளால் ஏந்துகிறார்கள். பதின்மர்கள்–பத்து திசைகள் – தங்கள் குழந்தையைப் பயணத்துக்காகப் பலப்படுத்துகிறார்கள். அவனுடைய–சூரியனுடைய–மூன்று விதமான உத்தம ரசிமிகள் வானின் எல்லைகளுக்குச் செல்லுகின்றன.

5. சனங்களே! மர்மமாயிருக்கும் இந்த வடிவத்தை– மண்டலத்தை–பாருங்கள். இங்கு சலங்கள் நிற்கின்றன– நிலைக்கின்றன–இருக்கின்றன. இங்கிருந்து நதிகள் பாய்கின்றன. தாயினிடமிருந்து – அதிதியினிடமிருந்து – தனிமையாயுள்ள அது, அவன் இணைந்து சமமாய் விளங்குபவையுமான சோதி புவிகளால் தாங்கப்படுகிறான். வானிலிருந்து தோன்றியவையும், இணைந்தவையும், ஸம தன்மையுள்ளவையுமான இரவும் பகலும்,

வேறு பருவங்களோடு சேர்ந்து அதை-அந்த தேகத்தை-மண்டலத்தைத் தாங்குகின்றன. 4,045.

6. வழிபடுபவர்கள், சூரியனுக்குத் துதிகளையும் செயல்களையும் செழிப்பிக்கிறார்கள். தாய்மார்கள் புதல்வனுக்குப் போல் அவனுக்கு ஒளியின் ஆடைகளை நெய்கிறார்கள். சூரியனுடைய மனைவிகளான இரசிமிகள் காலையின் இணக்கத்திலே இன்பமாகி, சோதியின் வழியால் எங்கள் முன்னே வருகிறார்கள்.

7. மித்திரா வருணர்களே! இந்த ஸூக்தம் உங்களால் போற்றப்படுக. அக்கினியே! இது எங்களுக்கு ஆற்றலையும் ஆரோக்கியத்தையுமளிக்க. திறத்தையும் நித்தியத்தன்மையையும் நாங்கள் அடைவோமாக. நான் பிரகாசிப்பவனும் மகத்தான தருசனுமான உன்னை நமஸ்கரிக்கிறேன். 4,047.

## 48. விசுவே தேவர்கள்

### 402. பிரதிபாநு ஆத்திரேயன்

1. சுயமாகவே பலமுள்ளவனும், சுயமாகவே புகழுள்ளவனும், மகத்தாய்ப் போற்றத் தகுந்தவனும், பிரியனுமான மின்னலாம் அக்கினியை நாங்கள் எப்பொழுது போற்றுவோம்? எப்பொழுது அக்கினியின் மாயா சக்தியானது சலங்களை நாடி அளவற்ற வானிலிருக்கும் மேகத்தின் மேலே பரவுகிறதோ, அப்பொழுது நாங்கள் போற்றுவோம்.

2. இந்த உஷைகள் அறிஞர்களால் அறியப்படும் பிரஞ்ஞானத்தைப் பரத்துகின்றன. அவை ஒரே தன்மையுள்ளதும், உடுத்துவதுமான ஒளியோடு உலகமெங்கும் பரவுகின்றன. தேவர்களை விரும்புபவன், சென்ற உஷைகளையும் வரும் உஷைகளையும் கவனியான். தன் முன்னே வந்திருக்கும் உஷைகளால் தன் அறிவை வளர்த்துக் கொள்கிறான்.



3. இரவிலும் பகலிலும் அளிக்கப்பட்ட ஸோமங்களால் ஊக்கமடைந்து, இந்திரன் மாயாவியான விருத்திரனை எதிர்க்கத் தன் பரந்த வச்சிரத்தைத் தட்டுகிறான். அவனுக்கு - சூரியனுக்கு - சேவை செய்ய அவனுடைய இடத்திலே நூறு கதிர்கள் சலனமாகின்றன. அவை தினங்களைத் தூரத்திலே விலக்கி மீண்டும் தோற்றுவிக்கின்றன.

4 நான் அந்த அக்கினியின் இசைவை, பரசுவின் பிரதிநிதியைப் போல் காண்கிறேன். நான் அந்தப் பிரகாசமுள்ள - வடிவத்தின் - இரசிமிகளின் - படையை, மானிடர்களின் போகத்துக்குக் கற்பிக்கப்பட்டதெனக் கூறுகிறேன். அவன் வழிபடுபவனோடு இருந்தால், அவன் போரில் அழைக்கும் மனிதனுக்கு அவன் உணவு மிகுந்துள்ள மனையைப் போல் உத்தம செல்வத்தைத் தருகிறான்.

5. அவன் தன் நாக்கோடு நான்கு திசைகளிலும் படர்ந்து, அழகிய ஒளியை அணிந்து, இருளை நீக்கி, பகைவர்களை யழித்து, யக்ஞத்துக்குச் செல்லுகிறான். மனிதத் தன்மையுள்ள நாம், அவனை அறியோம். ஆனால் அவனிடமிருந்து இந்தப் போற்றத் தகுந்த ஸவிதா விரும்பத் தகுந்த செல்வத்தை நமக்களிக்கிறான். 4,052

## 49. விசுவே தேவர்கள்

### 403. பிரதிப்பிரபன் – ஆத்திரேயன்

1. உங்களுக்காக நான் இன்று, மானிடர்களுக்கு செல்வத்தைப் பங்கிடுபவர்களான, தேவனான ஸவிதாவினிடமும், பகனிடமும் நெருங்குகிறேன். அசுவினிகளே! தலைவர்களே! பல நல்ல பொருள்களை அனுபவிக்கும் உங்களுடைய நட்பை விரும்பி, நான் உங்களுடைய வரவைத் தினந்தோறும் விரும்புகிறேன்.

2. தேவர்களின் பகைவர்களை விலக்கும் தேவனான ஸவிதாவின் வரவை அறிந்து போற்றுபவனான நீ, நல்ல

சூக்தங்களால் அவனைப் போற்றவும். மனிதர்களின் நடுவே உத்தமச் செல்வங்களைப் பங்கிடுபவன் என அவனை நன்கறிந்து வணக்கத்தோடு போற்றவும்.

3. பூஷாவும், பகனும், அதிதியுமான அக்கினி, உத்தம ஸமிந்தனங்களை எரிக்கிறான். சூரியன் ஒளியை அணிந்து கொள்கிறான். அழகான தேவர்களும் இந்திரனும், விஷ்ணுவும், வருணனும், மித்திரனும், அக்கினியும், மங்களமான தினங்களைப் பிறப்பிக்கிறார்கள்.

4. பகைவனற்ற ஸவிதா எங்களுக்கு அந்த விரும்பத் தகுந்த செல்வத்தை அளிப்பானாக. அதை எங்களிடம் எடுத்துவரப் பாயும் நதிகள் துரிதமாகுக. அதற்காக யக்ஞத்தின் ஹோதாவான நான் துதிகளைக் கூறுகிறேன். உணவுச் செல்வர்களான நாங்கள், பலவிதச் செல்வங்களின் தலைவர்களாயிருப்போமாக.

5. வசுக்களுக்கு அவியை அளிப்பவர்களும், மித்திரா வருணர்களைத் துதிகளால் ஏத்துபவர்களும் மிகுந்த செல்வத்தை அடைவார்களாக. தேவர்களே! அவர்களை சுகப்படுத்துங்கள். நாங்கள் சோதி புவிகளின் பாலனத்தால் இன்புறுவோமாக. 4,057.

## 50. விசுவே தேவர்கள்

### 404. சுவஸ்தி-ஆத்திரேயன்

1. ஒவ்வொரு மனிதனும் தலைவனான தேவனுடைய ஸவிதாவினுடைய-நட்பை நாடுவானாக. ஒவ்வொரு மனிதனும் அவனிடமிருந்து செல்வங்களை விரும்புவானாக. ஒவ்வொருவனும் தன் சந்ததிகளைப் புட்டி செய்து கொள்ள அவனிடம் செல்வத்தைக் கேட்பானாக.

2. தலைவனே! தேவனே! வழிபடும் இவர்கள் உன்னுடையவர்கள். இந்த வேறு தேவர்களைப் போற்றுபவர்களும் உன்னுடையவர்கள். நாங்கள் செல்வத்தோடு இவர்களுடன் சேர்ந்திருக்கிறோம். நாங்கள் எங்களுடைய விருப்பங்களோடு பொருந்திச் செல்ல விரும்புகிறோம்.



3. தேவர்களே! ஆதலால் இந்த யக்ஞத்திலே தலைவர்களைப் போற்றுங்கள். எங்கள் அதிதிகளைப் போற்றுங்கள். தேவபத்தினிகளைப் போற்றுங்கள் தனிப்படுத்தும் அவன்-ஸவிதா-ஒவ்வொரு பகைவனையும், எல்லா சத்துருக்களையும் தூரத்தில் விலக்குவானாக.

4. யக்ஞத்தை ஏந்துவதும், யூபத்தினிடம் செலுத்தப்படுவதும், யூபத்துக்குத் தகுந்ததாயிருக்கும் பசு யூபத்தை நோக்கிச் செல்லுங்கால், மனைகளையும், சந்ததிகளையும் அளிப்பவனும் வழிபடுபவனிடம் அனுகூல மனத்துடன் இருப்பவனுமான ஸவிதா, செல்வந்தரும் அறிவுள்ள மனைவியைப் போலிருக்கிறான்.

5 தலைவனே! தேவனே! உன்னுடைய பாலனத்தையளிப்பதும், செல்வத்தை ஏந்தியிருப்பதுமான இந்தத் தேர் எங்களை சுகப்படுத்தத் தோன்றுக. போற்றத்தகுந்த ஸவிதாவைப் போற்றுபவர்களான நாங்கள் சுகத்துக்காகவும், செல்வத்துக்காகவும், சுவஸ்திக்காகவும், அவனைப் போற்றுகிறோம். தேவர்களைப் போற்றும் நாங்கள் அவர்களைப் போற்றுகிறோம். 4,062

## 51. விசுவே தேவர்கள்

### 405. சுவஸ்தி-ஆத்திரேயன்

1. அக்கினியே! நீ எல்லாப் பாலனமளிக்கும் தேவர்களோடு ஸோமத்தைப் பருக வா. தேவர்களோடு அவியளிப்பவனிடம் வா.

2. சத்தியச் செயலுள்ள தேவர்களான நீங்கள், எங்கள் யக்ஞத்துக்கு வாருங்கள். சத்தியத்தை ஏந்துபவர்களான நீங்கள், அக்கினியின் நாக்கால் ஸோமத்தைப் பருகுங்கள்.

3. விப்பிரனே! வணங்கத் தகுந்த அக்கினியே! நீ விப்பிரர்களோடும் காலையில் வரும் தேவர்களோடும் ஸோமத்தைப் பருக வா.

### இந்திரா வாயுக்கள்

4. பாண்டத்தில் பிழியப்பட்டிருக்கும் இந்த ஸோமம். இந்திரனுக்கும் வாயுவுக்கும் பிரியமாயிருக்கிறது. இது இப்பொழுது கலசத்தினுள் ஊற்றப்படுகிறது.

### வாயு

5. வாயுவே! அவியளிப்பவனிடம் பிரியமாகி விருந்துக்கு இங்கு வரவும். பிழியப்பட்ட ஸோம ரஸத்தைப் பருகவும். யக்ஞ உணவுக்கு வரவும். 4,067

### இந்திர வாயுக்கள்

6. வாயுவே! இந்திரனே! நீங்கள் இருவரும் பிழியப்பட்ட இந்த ஸோம ரஸங்களைப் பருகத் தகுந்தவர்கள். அவற்றை இன்பமாய்ப் பெற்றுக் கொள்ளுங்கள். இன்னலற்ற நீங்கள் யக்ஞ உணவை அருந்துங்கள்.

7. இந்திரனுக்கும் வாயுவுக்கும் தயிரோடு சேர்க்கப்பட்டுள்ள ஸோமங்கள் ஊற்றப்படுகின்றன. யக்ஞ உணவுகள் உங்களிடம் இறங்கும் நதிகளைப் போல் வருகின்றன.

### விசுவே தேவர்கள்

8. அக்கினியே! நீ எல்லாத் தேவர்களோடும், அசுவினிகளோடும், உஷையோடும் சேர்ந்து வா. நீ அத்திரியைப் போல் ஸோமத்திலே இன்புறவும்.

9. மித்திரா வருணர்களோடும் சேர்ந்து, ஸோமனோடும் விஷ்ணுவோடும் சேர்ந்து, அக்கினியே! நீ வா. நீ அத்திரியைப் போல் ஸோமத்திலே இன்புறவும்.

10. அக்கினியே! நீ ஆதித்தியர்களோடும் வசுக்களோடும் சேர்ந்து இந்திரனோடும் வாயுவோடும் சேர்ந்து வா. நீ அத்திரியைப் போல், ஸோமத்திலே இன்புறவும். 4,072

11. அசுவினிகள் எங்களுக்கு சுவஸ்தியை-செல்வத்தை-செழிப்பையளிப்பார்களாக. பகனும் தேவியான அதிதியும் எங்களுக்குச் செல்வத்தை அளிப்பார்களாக. எதிர்ப்பற்றவனும் பகைவர்களை விலக்குபவனுமான பூஷாவும் எங்களுக்கு சுவஸ்தியை அளிப்பார்களாக. மிக்க அறிவுள்ள சோதியும் புவியும், எங்களுக்கு சுவஸ்தியையும், க்ஷேமத்தையும், செழிப்பையும் அளிப்பார்களாக.



12. நாங்கள் சுவஸ்திக்காக வாயுவையும், வவஸ்திக்காக புவனபதியான ஸோமனையும் போற்றுகிறோம். நாங்கள் சுவஸ்திக்காக எல்லாத் தேவ கணங்களோடும் சேர்ந்திருக்கும் பிரகஸ்பதியைப் போற்றுகிறோம். ஆதித்தியர்கள் எங்களுக்கு ஸ்வஸ்தியை-இன்பத்தையும் ஆரோக்கியத்தையும்-அளிப்பார்களாக.

13. எல்லாத் தேவர்களும் எங்களுடைய ஸ்வஸ்திக்கு, செல்வத்துக்கு, சுகத்துக்கு இன்று எங்களுடன் இருப்பார்களாக. அக்கினியும், வசுவும், வைசுவாநரனும் எங்களுடைய சுவஸ்திக்காக எங்களுடன் இருப்பார்களாக. எங்களை க்ஷேமத்துக்காகப் பாலிப்பார்களாக. தேவர்களான ரிபுக்களும், எங்களை சுவஸ்திக்காகச் செல்வப்படுத்த பாலிப்பார்களாக. ருத்திரனும், ஸ்வஸ்திக்காக எங்களைச் செல்வப்படுத்த எங்களைப் பாவத்திலிருந்து பாலிப்பானாக.

14. மித்திரா வருணர்களே! எங்களுக்கு ஸ்வஸ்தியை-செல்வத்தை செழிப்பை சுகத்தை-அளியுங்கள். வானின் வழியே! செல்வங்களின் தேவியே! எங்களுக்கு சுவஸ்தியை-நித்தியத் தன்மையையும் இன்பத்தையும்-அளியுங்கள். இந்திரனும் அக்கினியும் எங்களுக்கு சுவஸ்தியை-செல்வத்தை ஆரோக்கியத்தை-அளிப்பார்களாக. அதிதியே! எங்களுக்கு ஸ்வஸ்தியையளிக்கவும்.

15. நாங்கள், எங்கள் வழியை ஸ்வஸ்தியோடு சூரிய சந்திரர்களைப் போல் அனுசரிப்போமாக. நாங்கள் எங்களைத் துன்புறுத்தாதவனும், தெரிந்து கொள்பவனும், திருப்பித் தருபவனுமான நண்பனோடு சேர்ந்து செல்வோமாக. 4,077

# 52. மருத்துக்கள்

## 406

1. சியாவாசுவனே! ஊக்கமுள்ள நீ, துதியாருக மருத்துக்களைப் போற்றவும். யக்ஞாருகர்களான அவர்கள் தினந்தோறும் அளிக்கப்படுவதும் இன்னலற்றதுமான யக்ஞ அவியிலே இன்புறுகிறார்கள்.

2. திரமான பலத்தின் நண்பர்களும், தங்கள் வழியில் தீரமாய்ச் செல்பவர்களும், பொழிபவர்களுமான மருத்துக்கள் தாமாகவே எங்களுடைய பல மக்களைப் பாலிக்கிறார்கள்.

3. சரிந்து செல்பவர்களும் சலத்தைப் பொழிபவர்களுமான அவர்கள் இரவுகளையெல்லாம் கடந்து செல்லுகிறார்கள். ஆதலால் நாங்கள் இப்பொழுது சோதியிலும் புவியிலும் புலனுயிருக்கும் மருத்துக்களின் பலத்தைப் போற்றுகிறோம்.

4. நாங்கள், எல்லா யுகங்களிலும், மானிடனைத் துன்பத்திலிருந்து பாலிப்பவர்களான மருத்துக்கு நீங்கள் ஊக்கத்தோடு ஸ்தோமத்தையும் யக்ஞத்தையும் அளிக்க வேண்டுமெனக் கூறுகிறோம்.

5. நீங்கள், சோதியிலிருந்து வந்திருப்பவர்களும், தானமளிக்கும் தலைவர்களும், ஒப்பற்ற பலமுள்ளவர்களும், போற்றத் தகுந்தவர்களுமான மருத்துக்களுக்கு யக்ஞத்தைச் செய்யுங்கள். 4,082

6. மழைகளின் தலைவர்களும், மகான்களுமான மருத்துக்கள், மின்னும் ஆபரணங்களோடும், ஆயுதங்களோடும் துலங்குகிறார்கள். அவர்கள் ஈட்டிகளை பகைவர்களின்-மேகங்களின் – மீது செலுத்துகிறார்கள். முழங்கும் தாரைகளைப்போல், மின்னல்கள் தினந்தோறும் மருத்துக்களை அநுசரிக்கின்றன. பிரகாசிக்கும் மருத்து-கணத்தின் காந்தியானது தானாகவே தோன்றுகிறது.

7. புவியிலுள்ள மருத்துக்களும், பரந்த வானத்திலிருப்பவர்களும் பெருகுகிறார்கள். நதியின் வேகத்திலும்,



பலத்திலும், பரந்த சோதியின் ஸ்தானத்திலும் வளர்கிறார்கள்.

8. மருத்துக்களின் சத்தியபலமாயும் மகத்தாயுமுள்ள படையைப் போற்றவும். வீரர்கள் தாமாகவே துரிதமாகி ஜயத்துக்காக மானை இணைத்திருக்கிறார்கள்.

9. அவர்கள் பருஷ்ணி நதியிலிருந்தாலும், சுத்தப்படுத்தும் அவர்கள் ஒளியை உடுத்திக்கொள்பவர்களாயிருந்தாலும், அல்லது தங்கள் தேர்களின் சக்கரங்களால் சக்தியால் மேகங்களைப் பிளப்பவர்களாயிருந்தாலும்

10. அவர்கள் எங்களிடம் வரும் வழிகளிலோ, பரந்து பிரியும் பல வழிகளிலோ, மலைத்துவாரங்களின் இறக்க வழிகளிலோ, அனுகூல வழிகளிலோ இருந்தாலும், அந்த மருத்துக்களின் பரவலான படை இந்த நாமங்களோடு இயக்கங்களோடு எனக்காக யக்ஞத்தை நன்கு பாலிக்கிறது. 4,087.

11. இப்பொழுது மழையின் தலைவர்களான மருத்துக்கள் உலகத்தைத் தாங்குகிறார்கள். கூட்டும் அவர்கள் அவியை ஏந்துகிறார்கள். தூரத்திலிருக்கும் அவர்கள் தூரத்திலிருக்கும் பொருள்களைத் தாங்குகிறார்கள். அவர்களுடைய பலவித வடிவங்கள் தோன்றுகின்றன.

12. சந்தங்களைப் பாடுபவர்கள் சலத்தை விரும்பி மருத்துக்களைப் போற்றினார்கள். அவர்கள்-மருத்துக்கள்-தாகமுடனிருந்த கோதமனுக்குக் கிணற்றை – ஊற்றை, மேகத்தை – எடுத்து வந்தார்கள். திருடர்களைப் போல் மறைந்திருக்கும் அவர்களில் – மருத்துக்களில் – சிலர் என்னைப் பாலிப்பவர்களாயிருந்தார்கள். அவர்கள் பார்ப்பதற்குப் பிரகாசமாயிருந்தார்கள். பிராண வடிவத்தோடிருந்தார்கள்.

13. ரிஷியே! புலப்படுபவர்களும், மின்னலான ஈட்டிகளோடு பிரகாசிப்பவர்களும், அறிஞர்களும், படைப்பவர்களுமான மருத்துக்களின் கணத்தை இனிய மொழியால் போற்றவும்.

14. ரிஷியே! அவியாலும், துதியாலும் மருத்துக்களின் கணத்தை நண்பனைப் போல் அணுகவும். தாங்கும் மருத்துக்களே! எங்கள் பாக்களால் போற்றப்பட்டு, சோதியிலிருந்தோ அல்லது வேறு எந்த இடத்திலிருந்தோ உங்கள் ஆற்றலோடு வாருங்கள்.

15. வழிபடுபவன் அவர்களைத் துரிதமாய்ப் புகழ்ந்து வேறு தேவர்களை அவர்களுடைய முகப்பில் அழைக்க விரும்பாமல், செல்வங்களைத் தருபவர்களும், வேகத்திலே புகழுள்ளவர்களும், அறிஞர்களுமான மருத்துக்களோடு தானங்களைச் சேர்ப்பானாக. 4,092

16. அறிஞர்களான மருத்துக்கள், பந்துவான எனக்குப் பதிலையளித்தார்கள். மருத்துக்கள் எங்களுடைய தாய் பிருகினி எனச் சொன்னார்கள். எங்களுடைய தந்தை உணவையளிக்கும் உருத்திரன் எனக் கூறினார்கள்.

17. ஒரு படையாகத் திரண்ட ஏழு ஏழான சக்தர்களான மருத்துக்கள் எனக்கு நூற்றுக் கணக்கான பசுக்களை அளிப்பார்களாக. நான் யமுனைக் கரையிலே புகழ் பெற்றுள்ள பசுக்களின் செல்வத்தை அடைவேனாக. நான் குதிரைகளின் செல்வத்தை அடைவேனாக. 4,094

## 53. மருத்துக்கள்

### 407. சியாவாசுவன் ஆத்திரேயன்

1. இந்த மருத்துக்களின் பிறப்பை எவன் அறிகிறான்? பூர்வதினங்களிலே மருத்துக்களின் ஆதரவிலே எவன் வசித்தான்? அவர்களுடைய புள்ளிமான் எப்பொழுது இணைக்கப்பட்டது?

2. அவர்கள் தேர்களில் நின்று எங்கு செல்லுகிர்கள் என அவர்கள் சொன்னதை எவன் கேட்டான். பந்துக்களான மழைகள் பலவித உணவுகளோடு எந்தத் தானமளிக்கும் மனிதனுக்குக் கிரமமாக இறங்கின!

3. பிரகாசிப்பவையும், பாய்பவையுமான குதிரைகளோடு மருத்துக்கள் என்னிடம் வந்து மதப்படுத்தும் பானத்தைப் பருக வந்தோம் எனச் சொன்னார்கள். தலைவர்களும் மனிதர்களின் நண்பர்களுமான அவர்கள் என்னிடம் ரிஷியே! எங்களைப் பார்க்கவும், எங்களைத் துதிக்கவும் எனக் கூறினார்கள்.



4. ஆபரணங்களோடும், ஆயுதங்களோடும், மார்புக் கவசங்களோடும், காப்புக்களோடும், தாமே துலங்குபவர்களும், தேர்களோடும், விற்களோடும் சேர்ந்திருப்பவர்களுமான மருத்துக்களை நாங்கள் போற்றுகிறோம்.

5. தானங்களை அளிக்கத் துரிதமாயிருக்கும் மருத்துக்களே! நான் இன்பத்தோடு வரும் உங்கள் தேர்களைப் பாலிக்கிறேன். அவை மழையிலே தோன்றும் சோதிகளைப் போல் தோன்றுகின்றன. 4,099.

6. தலைவர்களும் உத்தம தானமுள்ளவர்களுமான அவர்கள் அளிப்பவனுக்காக வானிலிருந்து சலத்தின் செல்வத்தைச் செலுத்துகிறார்கள். அவர்கள் மேகத்தை விடுவிக்கிறார்கள்—மழையைத் தரும் மருத்துக்கள் சலத்தோடு எங்கும் பரவுகிறார்கள்.

7. மேகங்களிலிருந்து தாரைகள் தோன்றி, பாலைத் தரும் பசுக்களைப் போல் வானை சலத்தால் நிரப்புகின்றன. நதிகள் வழியிலே விடுவிக்கப்பட்ட துரித குதிரைகளைப் போல் பல திசைகளிலும் பாய்கின்றன.

8. மருத்துக்களே! நீங்கள் சோதியிலிருந்து, வானிலிருந்து, இந்தப் புவியிலிருந்து வாருங்கள். தூரத்திலே தாமதியாதீர்கள்.

9. உங்களை, இரசையும் - ஒலிக்கும் நதியும், அநிதபையும் - ஆறும், குபையும் - காபூல் நதியும், குருமுவும் - ஸிந்துவின் கிளை நதியும், ஸிந்துவும் உங்களைத் தாமதப்படுத்தாமலிருக்க. சலமய ஸரயு உங்கள் வழியைத் தடுக்காமலிருக்க. நீங்கள் அளிக்கும் இன்ப மெல்லாம் எங்களோடு நிலைக்க.

10. நான் உங்களுடைய புதிய தேர்களின் பலத்தையும், மருத்துக்களின் பிரகாசிக்கும் படையையும் போற்றுகிறேன். மருத்துக்களே! உங்களை மழைகள் அனுசரிக்கின்றன. 4,104.

11. நாங்கள் உங்களுடைய ஒவ்வொரு பலத்தையும், ஒவ்வொரு படையையும், ஒவ்வொரு கணத்தையும், சொற்களாலும் செயல்களாலும் பின்பற்றுவோமாக.

12. மருத்துக்கள் இந்தத் தேரிலே, நன்கு பிறந்தவனும் அவியளிப்பவனுமான எந்த வழிபடுபவனிடம் செல்லுகிறீர்கள்?

13. புதல்வனுக்கும் பேரனுக்கும் அழியாத தானியத்தை யளிக்கும் உங்கள் நல் மனத்தால் அதை எங்களுக்கு அளியுங்கள். நாங்கள் உங்களிடம் உயிரைத் தாங்கும் சௌபாக்கியத்தைக் கேட்கிறோம்.

14. நல்ல செயல்களால் பாவத்திலிருந்து நீங்கிய நாங்கள், நிந்திக்கும் இரகசியப் பகைவர்களை ஜயிப்போமாக. மருத்துக்களே! நாங்கள் உங்களால் செலுத்தப்படும் மழையால், பாவம் நீங்கிய சுகத்தையும், சலத்தையும், பசுக்களையும், பூஷ்திகளையும் பெறுவோமாக.

15. புகழ் பெற்ற படைகளுள்ள மருத்துக்களே! தலைவர்களே! உங்களால் பாலிக்கப்படும் மானிடன் தேவர்களால் ஆதரவடைந்து சந்தானத்தை அடைகிறான். நாங்களும் அவனைப் போல் இலங்குவோமாக.

16. ரிஷியே! இந்த வழிபடுபவனுடைய யக்ஞத்திலே போகங்களைத் தரும் மருத்துக்களைப் போற்றவும். தீனியில் பசுக்களைப் போல் அவர்கள் துதியில் இன்புறுகிறார்கள். அவர்களைப் பழைய நண்பர்களைப் போல் அழைக்கவும். துதி விரும்பும் மருத்துக்களைத் துதியால் துதிக்கவும். 4,110.



# 54. மருத்துக்கள்

## 408. சியாவாசுவன்—ஆத்திரேயன்

1. தாமே துலங்குபவர்களும் மலைகளை ஆட்டுபவர்களுமான மருத்துக்களின் படைக்குத் துதியைக் கூறவும். தாபத்தைத் தணிப்பவர்களும், சோதியிலிருந்து வருபவர்களும், யக்ஞங்களில் சகஜமாயிருப்பவர்களும், பிருஷ்டங்கள் எனப்படும் யக்ஞங்களைச் செய்பவர்களும், மிருந்த உணவைத் தருபவர்களுமான மருத்துக்களுக்கு மகத்தான அவியை அளிக்கவும்.

2. மருத்துக்களே! உங்களுடைய படைகள் பிரகாசிப்பவை. பலமுள்ளவை. சலத்தைப் பொழிபவை. உணவைத் தெளிப்பிப்பவை. அவை உங்களுடைய குதிரைகளைத் தேர்களிலே இணைத்து எங்கும் செல்லுபவை. மின்னலோடு சேர்ந்து பரவுபவை. மூன்று இடங்களிலுமிருக்கும் மருத்துக்களின் படைகள் முழங்குகின்றன. எங்கும் பரவும் சலங்கள் புவியின் மீது வீழ்ந்து சப்திக்கின்றன.

3. மழையின் தலைவர்களும், வைரக்கல் ஏந்துபவர்களும், காற்றைப் போல் துரிதமாயிருப்பவர்களும், மலைகளை ஆட்டுபவர்களும், சலத்தை அடிக்கடி தருபவர்களும், வச்சிராயுதம் தாங்குபவர்களும், சேர்ந்து முழங்குபவர்களும், மழையைத் தரச் சேர்பவர்களும், மிக்க வலியர்களுமான மருத்துக்கள் மின்னலோடு பிரகாசமாகி துலங்குகிறார்கள்.

4. ஆற்றலுள்ள ருத்திரப் புதல்வர்களான மருத்துக்களே! நீங்கள் இரவுகளையும், பகல்களையும், வானையும், உலகங்களையும் இயக்குகிறீர்கள். அனைத்தையும் ஆட்டும் நீங்கள் கடலிலே கப்பலைப் போல் மேகங்களை ஆட்டுகிறீர்கள். நீங்கள் பகைவனின் நகரங்களை உடைக்கிறீர்கள். ஆனால் மருத்துக்களே! நீங்கள் துன்பத்தைச் செய்யீர்கள்.

5. மருத்துக்களே! உங்களுடைய ஆற்றல், உங்களுடைய புகழை, தூரத்திலே தன் சோதியைச் செலுத்

தும் சூரியனைப் போலும், தங்கள் போக்கிலே வெகு தூரஞ் செல்லும் தேவர்களுடைய வெள்ளைக்குதிரை களைப் போலும் பரத்துகிறது. வெல்லப்படாத ஒளியுள்ள நீங்கள் சலத்தைத் தடுக்கும் மேகத்தைக் கிழித்தீர்கள். 4,115.

6. மழையைச் செலுத்தும் மருத்துக்களே! சலந் தாங்கும் மேகத்தை நீங்கள் ஆட்டி, சலத்தை விடுவித்த போது உங்களுடைய பலம் புலனாகிறது. பரஸ்பரம் சேர்ந்துள்ள நீங்கள், சுலபமான வழியிலே கண்ணைப் போல் எங்களைச் செல்வ வழிக்குச் செலுத்துங்கள்.

7 மருத்துக்களே! உங்களால் செலுத்தப்படும் ரிஷியோ அல்லது அரசனோ வெல்லப்படான்; அழிக் கப்படான்; அவன் தேயான்; அவன் துன்பமாகான்; அவன் சேதமாகான். அவனுடைய செல்வம் குறையாது. அவனுடைய ஆதரவு பங்கமாகாது.

8. ஆட்சி செய்யும் அவர்கள் மேகங்களை நிரப்பி, முழங்கி, புவியை இனிய ஸாரமுள்ள ரஸத்தால் நனைக் குங்கால், நியுத் குதிரைகளின் தலைவர்களும், கூட்டங் களை ஜயிப்பவர்களும், யக்ஞத் தலைவர்களும், ஆதித்தி யர்களோடு பிரகாசிப்பவர்களுமான அவர்கள் சலங் களைப் பொழிகிறார்கள்.

9. மருத்துக்களுக்காக இந்தப் புவி பரந்திருக் கிருக்கிறது. பரவும் மருத்துக்களுக்காகப் பரந்த சோதி விளங்குகிறது. அவர்கள் செல்வதற்காக வானின் வழிகள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அவர்களுக்காகப் பரவும் மேகங்கள் தங்கள் செல்வங்களை அளிக்கின்றன.

10. அனைத்தின் தலைவர்களும் சோதிக்கு வழிகாட்டு பவர்களும் ஐக்கியப்பட்ட ஆற்றல்களுமுள்ள நீங்கள், சூரியன் உதயமாகுங்கால் ஸோமபானத்தில் இன்புறும் போது உங்களுடைய களைப்பை அறியாத துரித குதிரை களால் நீங்கள் யக்ஞத்துக்கு வரும் இந்த வழியின் எல்லைகளுக்குத் துரிதமாய் வருகிறீர்கள். 4,120



11. மருத்துக்களே! உங்கள் தோள்களில் ஈட்டி களும், கால்களிலே சிலம்புகளும், மார்புகளிலே தங்கக் கவசங்களும், உங்கள் தேர்களிலே சுத்த சலங்களும் பிர காசிக்கின்றன. உங்களுடைய கைகளிலே அக்கினி சுவாலையோடு மின்னல்கள் மின்னுகின்றன. உங்கள் தலைகளின் மீது தங்கப்பாகைகள் – கிரீடங்கள் – துலங்கு கின்றன.

12. மருத்துக்களே! நீங்கள் சலனமாகுங்கால், தடைபடாத ஒளியுள்ள சுவர்க்கத்தை ஆட்டுகிறீர்கள். ஒளிமய சலத்தை ஊக்கப்படுத்துகிறீர்கள். நீங்கள் உங் கள் ஆற்றல்களை ஐக்கியப்படுத்தி மிக்கப் பிரகாசிக்கும் போதும் மழையைச் செலுத்த இயங்கும் போதும் நீங்கள் கோஷத்தை எழுப்புகிறீர்கள்.

13. மருத்துக்களே! பேரறிஞர்களே! தேர்களுள்ள நாங்கள், உங்களால் அளிக்கப்பட்ட உணவு நிறைந்த செல்வத்தின் தலைவர்களாவோமாக. அந்தச் செல்வம் சோதியிலே தேயாமலிருக்கும் ஆதித்தியனைப் போல் தேயாததாய் இருக்க வேண்டும். மருத்துக்களே! எங் களை ஆயிரம் செல்வங்களால் திருப்தி செய்யுங்கள்.

14. மருத்துக்களே! நீங்கள் விரும்பத் தகுந்த வீர மக்களையும் செல்வத்தையும் தருகிறீர்கள். ஸாமத்தை அறியும் அறிஞனைப் பாலிக்கிறீர்கள். பரதனுன எனக் குக் குதிரையையும் உணவையும் தருகிறீர்கள். நீங்கள் அரசனை சுகப்படுத்துகிறீர்கள்.

15. நான் துரிதமாய்ப் பாலனத்தையளிக்கும் உங் களிடம் தன்னுடைய கிரணங்களைப் பரத்திக் கொள்ளும் சூரியனைப் போல் எங்களுடைய சந்ததிகளை விருத்தி செய்து கொள்ள செல்வத்தை நாடுகிறேன். மருத்துக் களே! நாங்கள் இத்துதியின் சக்தியால் நூறு ஏமந்தங் கள் வசிக்க என்னுடைய இந்தத் துதியை விருப்பத் தோடு ஏற்றுக்கொள்ளுங்கள். 4,125

## 55. மருத்துக்கள்

### 409. சியாவாசுவன்-ஆத்திரேயன்

1. பிரகாசிக்கும் ஈட்டிகளை ஏந்துபவர்களும், தங்கத்திலான மார்புக் கவசங்களைத் தரிப்பவர்களும், துதியாருகர்களுமான மருத்துக்கள் மகத்தான பலத்தில் இயங்குகிறுர்கள். துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக.

2. மருத்துக்களே! உங்கள் விருப்பம் போல் நீங்களாகவே உங்கள் பலத்தை ஏந்துகிறீர்கள்-பலத்தில் இயங்குகிறீர்கள். நீங்கள் மிக்கப் பரவலாயும் மகத்தாயும் பிரகாசிக்கிறீர்கள். உங்கள் ஆற்றல்களால் நீங்கள் வானெங்கும் பரவுகிறீர்கள். துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக.

3. ஏககாலத்தில் பிறந்தவர்களும், மகான்களும், ஏககாலத்தில் மழையைப் பொழிபவர்களுமான மருத்துக்கள், புகழுக்கு மிக்க வளர்ந்திருக்கிறுர்கள். யக்ஞத் தலைவர்களான அவர்கள் சூரியனுடைய கிரணங்களைப் போல் பிரகாசிக்கிறுர்கள். 'துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக.

4. மருத்துக்களே! உங்களுடைய மகத்வம் போற்றத் தகுந்தது. அது சூரியனுடைய வடிவத்தை மண்டலத்தைப் போல் போற்றத் தகுந்தது. எங்களை அமிருதத்வத்திலே ஏந்துங்கள். துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக.

5. மருத்துக்களே! நீங்கள் வானிலிருந்து மழையைச் செலுத்துகிறீர்கள். சலத்தோடு நிறைந்துள்ள நீங்கள் தாரையைப் பொழிகிறீர்கள். பகைவர்களையழிப்பவர்களே! உங்களுடைய பசுக்கள் எப்பொழுதும் வற்ருமலிருக்கின்றன. துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக. 4,130



6. நீங்கள் புள்ளியுள்ள பெட்டைக் குதிரைகளைத் தேர்களின் நுகங்களுக்கு இணைக்குங்கால், தங்கக் கவசங்களை யணிந்து, எல்லாப் பகைவர்களையும் விலக்குகிறீர்கள். துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக.

7. மலைகளும் நதிகளும் உங்களைத் தடை செய்யற்க. மருத்துக்களான நீங்கள் விரும்பும் இடத்துக்குச் செல்லுகிறீர்கள். நீங்கள் சோதியையும் புவியையும் சூழ்ந்திருக்கிறீர்கள். துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக.

8. மருத்துக்களே! பூர்வத்தில் செய்யப்பட்ட எந்த யக்ஞத்தையும், புதியதாய் நடத்தப்பட்ட எந்த யக்ஞத்தையும், கூறப்படும் எந்தத் துதியையும், வசுக்களே! ஏத்தப்படும் எந்த தோத்திரத்தையும் அறிபவர்கள், நீங்கள். துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக.

9. மருத்துக்களே! எங்களை சுகப்படுத்துங்கள். எங்களைத் துன்புறுத்தாதீர்கள். எங்களை மிக்கச் சந்தோஷப்படுத்துங்கள். துதியளிக்கும் உங்கள் நட்பைப் புலப்படுத்துங்கள். துரிதமாய்ச் செல்லும் மருத்துக்களின் தேர்கள் எங்களுடைய நலத்துக்கு வருக.

10. மருத்துக்களே! எங்களைச் செல்வத்துக்குச் செலுத்துங்கள். எங்கள் துதிகளால் ஏத்தப்படும் நீங்கள் எங்களைப் பாவத்திலிருந்து விலக்குங்கள். துதியாருகர்களான மருத்துக்களே! நாங்கள் அளிக்கும் அவியை விரும்புங்கள். நாங்கள் செல்வபதிகளாயிருப்போமாக. 4,135

## 56. மருத்துக்கள்

### 410. சியாவாசுவன்-ஆத்திரேயன்

1. அக்கினியே! நான் பிரகாசிக்கும் ஆபரணங்களோடு அலங்காரமாயுள்ளதும், ஜயிப்பதுமான மருத்துக்களின் படையை அழைக்கிறேன். நான் மருத்துக்

களின் சனங்களைப் பிரகாசிக்கும் ஒளி உலகத்தின் மேலி ருந்து இன்று இறங்க அழைக்கிறேன்.

2. அக்கினியே! நீ மருத்துக்களை உன் இருதயத் தில் எங்ஙனம் போற்றினாலும் என்னிடம் நலஞ் செய் பவர்களாக வருக. உன்னுடைய அழைப்புக்களுக்கு மிக்கத் துரிதமாய் வரும் பயங்கரத் தோற்றமுள்ள மருத் துக்களை அவிகளால் திருப்தி செய்யவும்.

3. அந்நியர்களால் துன்பமானால் புவியிலே ஆற்ற லுள்ள தலைவனிடம் செல்லும் சனங்களைப் போல் மருத் துக்களின் படை நாடப்பட்டவுடன் இன்பமாய் எங்களி டம் வருகிறது. மருத்துக்களே! உங்களுடைய படை அனலைப் போல் ஊக்கமாயிருக்கிறது. பயங்கர காளை யைத் தடுக்கக் கடினமாய்த் தோன்றுகிறது.

4. தங்கள் ஆற்றலால் சுலபமாய்ச் சத்துருக்களை யழிப்பவர்களும், அடக்கக் கட்டமாகும் குதிரைகளைப் போல் இருப்பவர்களுமான மருத்துக்கள், தங்கள் சல னங்களால் பரந்திருப்பதும் முழங்குவதுமான மேகத் தைக் கீழே செலுத்துகிறார்கள்.

5. மருத்துக்களே! எழுந்திருங்கள். நான் என்னு டைய ஸ்தோமங்களால் செழித்திருப்பவர்களான மருத் துக்களின் மகத்தாயும் அபூர்வமாயுமுள்ள படையைப் பசுக்களின் மந்தையைப் போல் அழைக்கிறேன். 4,140

6. நீங்கள் பிரகாசமாயுள்ள குதிரைகளைத் தேரிலே இணையுங்கள். சிகப்புக் குதிரைகளைத் தேரிலே இணையுங் கள். தேர் சுமையை ஏந்தி இழுக்க இரு துரித குதிரை களை நுகத்திலே இணையுங்கள். சுமையைத் தாங்கி இழுப் பதிலே சிறந்தவையாயிருக்கும் குதிரைகளை இணையுங் கள்.

7. மருத்துக்களே! இணைக்கப்பட்டுள்ளதும், அழ குள்ளதும், மிக்க முழங்குவதுமான அக்குதிரை, உங்



கள் பயணத்தைத் தாமதப்படுத்தாமலிருக்க. தேரிலே அதை ஊக்கப்படுத்துங்கள்.

8. நாங்கள், இனிய சலங்களை ஏந்துவதும், மருத் துக்களோடு ரோதஸி அமர்ந்திருப்பதும், மருத்துக்களின் உணவு நிறைந்திருப்பதுமான தேரை அழைக்கிறோம்.

9. நான் உங்களுடைய நல்ல பிறப்புள்ளவளும். சௌபாக்கியவதியும், மருத்துக்களோடு சேர்ந்து ஏத்தப் படுபவளுமான ரோதஸி இருப்பதும், தேரை எழில் படுத்துவதும், துதியாருகமானதும், துலங்குவதுமான படையை அழைக்கிறேன். 4,144

## 57. மருத்துக்கள்

### 411. சியாவாசுவன்–ஆத்திரேயன்

1. இந்திரனோடு இருப்பவர்களும், பரஸ்பரம் அன்பு மிகுந்தவர்களும், ருத்திரப் புதல்வர்களுமான நீங்கள் உங் களுடைய பொன் தேர்களிலே எங்களுடைய வரத் தகுந்த யக்ஞத்துக்கு வாருங்கள். எங்களுடைய இந்தத் துதி உங்களுக்குக் கூறப்படுகிறது. தாகத்தால் சலத்தை விரும்பிய கோதமனுக்கு ஊறும் நீரை சோதியிலிருந்து ஏந்தி வந்ததைப் போல் நீங்கள் எங்களிடம் வாருங்கள்.

2. மருத்துக்களே! பேரறிஞர்களான நீங்கள் கத்தி களோடும், ஈட்டிகளோடும், விற்களோடும், சரங்களோ டும், அம்பறுத்தூணிகளோடுமிருக்கிறீர்கள். நல்ல குதிரைகளிலே ஏறியிருக்கும் உங்களிடம் அழகிய தேர் கள் இருக்கின்றன. பிருசினிப் புதல்வர்களே! மருத்துக் களே! நீங்கள் நல்ல படைகளோடு ஜயத்துக்குச் செல்லுகிறீர்கள்.

3. மருத்துக்களே! நீங்கள் வானிலுள்ள மேகங் களை ஆட்டுகிறீர்கள். அவிகளை அளிப்பவனுக்குச் செல் வத்தைத் தருகிறீர்கள். உங்கள் வருகைக்குப் பயந்து காடுகள் வணங்குகின்றன. பிருசினிப் புதல்வர்களே! மருத்துக்களே! உக்கிரர்களான நீங்கள் சலத்தை

செலுத்தப் புள்ளியுள்ள குதிரைகளை இணைக்குங்கால் நீங்கள் புவியைப் பதறச் செய்கிறீர்கள்.

4. மருத்துக்கள் ஒளியோடு பிரகாசிப்பவர்கள். மழையைச் சுத்தப்படுத்துபவர்கள். சுந்தரத் தோற்றங்களும் அழகிய வடிவங்களுமுள்ள இரட்டையர்களைப் போல் விளங்குகிறார்கள். பழுப்பாயும் சிகப்பாயுமுள்ள குதிரைகளின் தலைவர்கள். பகைவர்களைக் குறைப்பவர்கள். பரிமாணத்திலே சோதியைப் போல் பரந்தவர்கள்.

5. மருத்துக்கள் மிகுந்த தாரைகளைப் பொழிபவர்கள். ஆபரணங்களை அணிந்தவர்கள். தானமளிக்கும் உத்தமர்கள். பிரகாசிக்கும் தோற்றமுள்ளவர்கள். அழகிய வடிவமுள்ளவர்கள். அழியாத செல்வமிருப்பவர்கள்; துதியாருகர்கள். சோதியிலிருந்து வந்து அமுதமான அவியைப் பெற்றுக்கொள்கிறார்கள். 4,149

6. மருத்துக்களே! உங்கள் தோள்களிலே ஈட்டிகள் துலங்குகின்றன. புஜங்களிலே பகையழிக்கும் பலம் பதிந்திருக்கிறது. உங்கள் தலைகளிலே தங்கப் பாகைகள் தோன்றுகின்றன. தேர்களிலே ஆயுதங்கள் இருக்கின்றன. உங்களுடைய அங்கங்களிலே எல்லாக் காந்திகளும் சேர்ந்திருக்கின்றன.

7. மருத்துக்களே! எங்களுக்குப் பசுக்களும், குதிரைகளும், தேர்களும், நிதிகளும், ஆண் சந்ததிகளுமான செல்வத்தையளியுங்கள். எங்களுக்குப் புகழையளியுங்கள். ருத்திரப் புதல்வர்களே! நான் உங்களுடைய பாலனத்தை அனுபவிப்பேனாக.

8 மருத்துக்களே! வீரர்களே! மிகுந்த செல்வமுள்ளவர்களும், அமிருதர்களும், சத்தியத்தை அறிபவர்களும், சத்தியத்தால் புகழ் பெற்றவர்களும், கவிகளும், தருணர்களும், மகத்தாய்ப் புகழப்படுபவர்களும், மிகுந்த அவிகளால் போற்றப்படுபவர்களுமான நீங்கள் எங்களை சுகப்படுத்துங்கள். 4,152



# 58. மருத்துக்கள்

## 412. சியாவாசுவன்-ஆத்திரேயன்

1. நான், வேகமாய்ச் செல்லும் குதிரைகளோடிருப்பவர்களும், உக்கிரமாய்ச் செல்பவர்களும், அமுதத்தின் தலைவர்களும், தாமே துலங்குபவர்களும், துதியாருகர்களுமான மருத்துக்களின் பிரகாசமான படையை இன்று ஏந்துகிறேன்.

2. விப்பிரனே! கடகங்களால் அலங்கரிக்கப்பட்ட கைகள் உள்ளவர்களும், மரங்களை ஆட்டும் செயல்களை நடத்துபவர்களும், அறிஞர்களும், செல்வத்தையளிப்பவர்களுமான மருத்துக்களின் பிரகாசமாயும் பலமாயுமுள்ள படையைப் போற்றவும்.

3. மழையைச் செலுத்துபவர்களும், வியாபகர்களாயுமுள்ள மருத்துக்கள் இன்று சலங்களை ஏந்திக்கொண்டு உங்களிடம் வருவார்களாக. மருத்துக்களே! அறிஞர்களும் தருணர்களுமான நீங்கள், உங்களுக்காகச் சொலிப்பிக்கப்பட்ட இவ்வக்கினியை விரும்புங்கள்.

4. துதியாருகர்களான மருத்துக்களே! நீங்கள் உங்களைப் போற்றும் மனிதனுக்கு ஆட்சி செய்பவனும், பகைவர்களை ஜயிப்பவனும், விபவனால் கற்பிக்கப்பட்டவனுமான புதல்வனைப் பிறப்பிக்கிறீர்கள். மருத்துக்களே! உங்களிடமிருந்து முஷ்டிபலமுள்ளவனும், திறக்கையுள்ளவனும், வீரனுமான புதல்வன் தோன்றுகிறான். அவன் உங்களிடமிருந்து நல்ல குதிரையைப் பெறுகிறான்.

5. மருத்துக்களே! சக்கரத்தின் பற்களைப் போல் ஒருவன் மற்றவனுக்குத் தாழ்ந்தவனாயில்லை. ஸமத் தன்மைகளுள்ள தினங்களைப் போல் அவர்கள் அனைவரும் சமமாய் இருக்கிறார்கள். பிருசினியின் புதல்வர்கள் அனைவரும் ஒப்பாய்ப் பிறந்தார்கள். தேஜஸில் எவரும் தாழ்ந்தவரில்லை. வேகத்தில் துரிதமாயிருக்கும் மருத்துக்கள் தங்கள் சுயமான அனுகூல மனத்தோடு மழையைப் பொழிகிறார்கள். 4,157

6. மருத்துக்களே! புள்ளியுள்ள குதிரைகளால் இழுக்கப்படும் திடமான அச்சுக்களிருக்கும் தேர்களிலே நீங்கள் வரும் போது சலங்கள் இறங்கிப் பெருகுகின்றன. காடுகள் சேதமாகின்றன. பிரகாசமாயுள்ள விருஷபன் சூரிய ரசிமிகளால் ஊக்கமடைந்து மழையைப் பொழிய கீழ்ப்புறமாய்க் கர்ச்சிப்பானாக.

7. அவர்களின் வரவிலே புவி படர்ந்தாள். அவர்கள் புவியினுள் சலத்தைக் கருவாக, குழந்தையின் கருவைப் பலத்தால் ஸ்தாபிக்கும் கணவனைப் போல் ஸ்தாபித்தார்கள். அவர்கள் நுகத்துக்குக் காற்றைக் குதிரைகளாக இணைத்தார்கள். ருத்திரப் புதல்வர்கள் வியர்வையை மழையாகச் செய்தார்கள்.

8. மருத்துக்களே! வீரர்களே! மிகுந்த செல்வமுள்ளவர்களும், அமிருதர்களும், சத்தியத்தை அறிபவர்களும், சத்தியத்தால் புகழ் பெற்றவர்களும், கவிகளும், தருணர்களும், மகத்தாய்ப் புகழப்படுபவர்களும், மிகுந்த அவிகளால் போற்றப்படுபவர்களுமான நீங்கள் எங்களை சுகப்படுத்துங்கள். 4,160

## 59. மருத்துக்கள்

### 413. சியாவாசுவன் – ஆத்திரேயன்

1. மருத்துக்களே! அவியளிப்பவனுடைய செல்வத்துக்காக ஹோதா உங்களைப் போற்றுகிறான். ஹோதாவே! சோதியைப் போற்றவும். நான் புவிக்குத் துதியைக் கூறுகிறேன். அவர்கள் குதிரைகளை ஓட்டி மழையைப் பொழிகிறார்கள். வானெங்கும் பரவுகிறார்கள். அவர்கள் தங்களுடைய சொந்த காந்தியை மேகங்களின் காந்தியோடு சேர்க்கிறார்கள்.

2. அவர்களின் வரவிலே புவியானது, சலத்திலே ஆடிக்கொண்டு செல்லும் பயணிகள் நிறைந்த தோணியைப் போல் பதறுகிறது. தூரத்திலே தோற்றமாகும் அவர்கள் சலனங்களால் அறியப்படுகிறார்கள். யக்ஞத்தின் தலைவர்களான மருத்துக்கள் சோதி புவிகளின் நடுவே செல்லுகிறார்கள்.

3. நீங்கள் உங்களை அலங்கரித்துக் கொள்ள உத்தம மகுடத்தைப் பசுக்களின் கொம்பைப் போல் ஏந்துகிறீர்கள். ஒளியையளிக்கும் தினத்தின் கண்ணான சூரியனைப் போல் நீங்கள் மழையையளிப்பதில் ஊக்கமாயிருக்கிறீர்கள். அழகுள்ள நீங்கள் குதிரைகளைப் போல் வேகமாயிருக்கிறீர்கள். யக்ஞத் தலைவர்களான நீங்கள், வழிபடும் மனிதர்களைப் போல் யக்ஞங்களைச் செல்வத்துக்கென நினைக்கிறீர்கள்.

4. துதியாருகர்களான உங்களுடைய உத்தம மேன்மைகளை எவன் கூறுவான்? அறிஞர்களான உங்களுக்குத் தகுந்த துதிகளை எவன் துதிப்பான்? உங்களுடைய வீரச் செயல்களை எவன் போற்றுகிறான்? எவனால் போற்ற இயலும்? நிலத்தை வளப்படுத்த நீங்கள் மழையைத் தரும் போது நீங்கள் புவியை ஒளியின் ரசிமியைப் போல் ஆட்டுகிறீர்கள்.

5 ஒப்பான பந்துத்தன்மைகளுள்ள குதிரைகளைப் போல் பிரகாசிக்கும் அவர்கள் போரிலே வீரர்களைப் போல் போராடுகிறார்கள். செழித்த மனிதர்களைப் போலிருக்கும் யக்ஞத் தலைவர்களான அவர்கள் ஆற்றலிலே உயர்ந்திருக்கிறார்கள். அவர்கள் சூரிய மண்டலத்தை மழைகளால் மறைக்கிறார்கள். 4,165

6. அவர்களிலே மூத்தவன் எவனும் இல்லை; இளையவனுமில்லை; பகைவர்களை ஜயிக்கும் அவர்களில் நடுத்தரன் எவனும் இல்லை. புகழில் அனைவரும் ஸமமாய்ப் பிரகாசிக்கிறார்கள். நீங்கள் உத்தமப் பிறவிகள். உங்களுடைய தாய் பிருசினி. மருத்துக்களே! மானிடர்களுக்கு அனுகூலமாயிருக்கும் நீங்கள் சோதியிலிருந்து எங்கள் முன்னே வாருங்கள்.

7. அவர்கள் சோதியின் உயர்ந்த உச்சிகளிலிருந்து வானின் எல்லைகளுக்குப் பலத்தோடு, பறவை

களைப் போல் அணிவகுத்துச் செல்லுகிறார்கள். அவர்களுடைய குதிரைகள் மேகத்தின் சலங்கை இறங்கச் செய்கின்றன. இவற்றைத் தேவர்களும் மனிதர்களும் அறிகிறார்கள்.

8. சோதியும் புவியும் அதிதியும் நாங்கள் புசிக்க மழையைக் கற்பிப்பார்களாக. அற்புத தானங்களுள்ள உஷைகள் நம்முடைய நலத்துக்கு ஊக்கமுடனிருப்பார்களாக. ரிஷியே! இந்த ருத்திரப் புதல்வர்கள் உன்னால் போற்றப்பட்டு திவ்ய நிதியான மழையை இங்கே கீழே செலுத்துவார்களாக. 4,168

## 60. மருத்துக்கள்

### 414. சியாவாசுவன்–ஆத்திரேயன்

1. நான் பாலிக்கும் அக்கினியைப் பாக்களோடு போற்றுகிறேன். இப்பொழுது போற்றப்படும் அவன் எங்கள் செயல்களுக்குச் சம்மதமளிப்பானாக. உணவைப் பெற விரும்பி இலக்குக்குப் போகும் தேர்களைப் போல் நான் அனலைச் சுற்றி வருகிறேன். நான் மருத்துக்களுக்குத் துதியைக் கூறுவேனாக.

2. சிறப்புள்ள குதிரைகளால் இழுக்கப்படும் சுலபமாய்ச் செல்லும் தேர்களிலே ஏறியுள்ள ருத்திரப் புதல்வர்களான உக்கிர மருத்துக்களே! உங்களுடைய வரவிலே வனங்கள் பயத்தால் வணங்குகின்றன. புவி நடுங்குகிறது. மலைகள் ஆடுகின்றன.

3. பரந்தும் உயர்ந்துமுள்ள மலை உங்களுடைய கர்ச்சனையால் அலறுகிறது. ஈட்டிகள் ஏந்திய மருத்துக்களான நீங்கள் விளையாடுங்கால் வானின் உச்சியும் கலங்குகிறது. நீங்கள் சலங்கைப் போல் ஒன்று சேர்ந்து பாய்கிறீர்கள்.

4. சுத்தப்படுத்தும் சலங்களாலும் பொன்னாபரணங்களாலும் தங்கள் அங்கங்களை எழில் செய்து கொள்ளும் மணமக்களைப் போல் தங்களை எழில் செய்து கொள்பவர்களும், புகழுக்காகத் தங்கள் தேர்களிலே உத்தமர்களாயும், வலியர்களாயுமிருப்பவர்களுமான மருத்துக்கள் தங்கள் காந்திகளைத் தங்கள் வடிவங்களிலே ஸ்தாபனஞ் செய்து கொள்கிறார்கள்.



5. அவர்கள் சகோதரர்கள். எவனும் பெரியவன் இல்லை; எவனும் சிறியவன் இல்லை. அவர்கள் சௌபாக்கியத்துடன் சேர்ந்து வளர்ந்தார்கள். நல்ல செயல்களை நடத்துபவனும், தருணனும், அவர்களுடைய தந்தையுமான ருத்திரனும், மிகுந்த பாலைப் பொழிபவளும், தாயுமான பிருசினியும், மருத்துக்களுக்காக அனுகூலமான தினங்களை அளிப்பார்களாக. 4,173

6. மங்களகரமான மருத்துக்களே! நீங்கள் உயரத்திலே, நடுவிலே, நீசத்திலே உள்ள எந்த சோதியிலிருந்தாலும் அங்கிருந்து ருத்திரர்களே! எங்களிடம் வாருங்கள். அக்கினியே! இன்று நாங்கள் அளிக்கும் அவியைப் பெற்றுக்கொள்ளவும்.

7. விசுவத்தை அறியும் மருத்துக்களான நீங்களும், அக்கினியும், சோதியின் உயர்ந்த ஸ்தானத்தின் உச்சிகளின் மேலே நீங்கள் இருப்பதாலும், பகைவர்களை நடுக்கப்படுத்துபவர்களும், புசிப்பவர்களுமான நீங்கள், திருப்தியாகி அவிகளையளிக்கும் யக்ஞகர்த்தாவுக்கு விரும்பத் தகுந்த செல்வத்தை அளியுங்கள்.

8. அக்கினியே! நீ பிரகாசிப்பவர்களும், துதியாருகர்களும், படைகளோடு சேர்ந்துள்ளவர்களும், அனைத்தையும் சுத்தப்படுத்துபவர்களும், ஊக்கப்படுத்துபவர்களும், தீர்க்காயுசுள்ளவர்களுமான மருத்துக்களோடு சேர்ந்து, இன்பமாகி, ஸோமத்தைப் பருகவும். பழைய கொடியான சுவாலையோடு சேர்ந்துள்ள வைசுவாநரனே! நீ பருகவும். 4,176

# 61. மருத்துக்கள்

## 415. சியாவாசுவன் - ஆத்திரேயன்

### மருத்துக்கள்

1. மிக்கத் தூரத்திலுள்ள இடத்திலிருந்து ஒவ்வொருவராய் வருபவர்களும், மிக்க உத்தமத் தலைவர்களுமான நீங்கள் யார் ?

2. உங்களுடைய குதிரைகள் எங்கே? உங்களுடைய வாய்வடங்கள் எங்கே? வேகமாய்ச் செல்வதற்கான ஆற்றலை எங்ஙனம் பெற்றீர்கள்? நீங்கள் எங்கு செல்லுகிறீர்கள்? குதிரைகளின் முதுகின் மீது சேணமிருக்கிறது. நாசிகளிலே வாய்வடமுண்டு.

3. சாட்டை, குதிரையின் காற்பக்கங்களிலே செலுத்தப்படுகிறது. மனிதர்கள், மருத்துக்கள், குதிரைகள் தங்கள் ஊருக்களைப் பிரித்து, புதல்வனைப் பெறுங்கால் யோஷையைப் போல் பரத்திக்கொள்ள அவற்றை வற்புறுத்துகிருர்கள்.

4. நல்ல பிறப்புள்ளவர்களும், மானிடர்களிடம் நட்புள்ளவர்களும், வீரர்களுமான நீங்கள், அனலோடு சேர்ந்து எரிபவர்கள் போல் சொலிக்கிறீர்கள்.

### தரந்த மஹிஷீ சசியஸீ

5. சியாவாசுவனால் போற்றப்பட்ட வீரனை—தரந்தனை—தன் இருகைகளால் தழுவிக்கொள்ள இயங்கிய கைகளுள்ள அவள்-சசியஸீ-எனக்கு நூற்றுக்கணக்கான ஆடுகளும், கோக்களும், குதிரைகளுமுள்ள பசு செல்வத்தை-அளித்தாள். 4,181

6. சசியஸீ பெண்ணுயிருந்தாலும், செல்வத்தை யளிக்காமலும் தேவர்களை வணங்காமலுமுள்ள ஆணைக் காட்டிலும் உயர்ந்தவளாயிருக்கிருள்.

7. ஏனெனில் அவள்-சசியஸீ - துன்பத்திலிருப்பவனையும், வறுமையிலுள்ளவனையும், எதையாவது



விரும்புபவனையும் தெரிந்துகொள்கிருள். தன் மனத்தைத் தேவர்களிடம் செலுத்துகிருள்.

8. அவனைப் போற்றி, அவளுடைய அர்த்தாங்கனுன, புகழப்படாமலுமுள்ள புமானை நான் புலப்படுத்துகிறேன். அவன் எப்பொழுதும் போல் உத்தம தானங்களை யளிப்பவன்.

### வைததச்வி புருமீள்ஹன்

9. சிவாவசுவனு எனக்கு, யுவதியும் இன்பமும் இணக்கமுள்ளவளுமான சசியஸீ, வழியைப் புலப்படுத்தினுள். இரண்டு சிகப்புக் குதிரைகள்—சசியஸீயால் அளிக்கப்பட்டவை, என்னை மிக்கக் கீர்த்தியுள்ளவனும், விப்பிரனுமான புருமீள்ஹனிடம் ஏந்திச் சென்றன.

### வைததச்வி தரந்தன்

10. வைததச்வி-புருமீள்ஹன், எனக்குத் தரந்தனைப் போல் நூறு பசுக்களையும் செல்வங்களையும் தந்தான். 4,186

### மருத்துக்கள்

11. துரித குதிரைகளால் இங்கு ஏந்தப்பட்டு வரும் மருத்துக்கள் மதமளிக்கும் பானத்தைப் பருகுகிருர்கள், பாக்களையும் புகழுரைகளையும் பெறுகிருர்கள்.

12. அவர்கள் புகழால் சோதியையும் புவியையும் முந்துகிருர்கள். அவர்கள் உச்சியிலுள்ள சோதியிலே பிரகாசிக்கும் சூரியனைப் போல் தங்கள் தேர்களிலே மிக்கப் பிரகாசிக்கிருர்கள்.

13. மருத்துக்களின் படை தருணத் தன்மையுள்ளது. ஒளிமயத் தேரிலே செல்லுகிறது. நிந்தையற்றது; மங்களமகரமானது; உத்தம நோக்கமுள்ளது; தடைபடாதது.

14. குற்றமற்றவர்களும், ருதத்திலிருந்து தோன்றியவர்களுமான மருத்துக்களின் இடத்தை எவன் நிச்சய

மாக அறிகிறான்? பகைவர்களைக் கலக்கும் அவர்கள் எங்கு இன்புறுகிறார்கள்?

15. இந்தத் துதியால் உங்களைத் திருப்தி செய்யும் மனிதனுக்குத் தோத்திரத்தை விரும்பும் நீங்கள், இன்பத்துக்கு வழியைப் புலப்படுத்துகிறீர்கள். ஆதரவுக்கு அழைக்கப்படுங்கால் நீங்கள் செவியுறுபவர்களாயிருக்கிறீர்கள். 4,191.

### தார்ப்பிய ரதவீதி

16. பகையழிப்பவர்களே! யக்ஞாருகர்களே! மிகுந்த செல்வமுள்ளவர்களே! விரும்பத் தகுந்த செல்வங்களை எங்களுக்களியுங்கள்.

17. ஊர்மியே! இரவே! மருத்துக்களின் இந்த ஸ்தோமத்தை என்னிடத்திலிருந்து நீக்கி, தார்ப்பியனிடம் – இரதவீதியினிடம் - செலுத்தவும். தேவியே! என் துதிகளைத் தேரோட்டியைப் போல் ஏந்திச் செல்லவும்.

18. இரவே! நீ எனக்காக இரதவீதியினிடம் ஸோமம் பிழியப்படுங்கால் உன் மகளை நாடும் என் விருப்பம் இன்னும் நீங்கவில்லை எனக் கூறவும்.

19. இந்தச் செல்வனான இரதவீதி, கோமதி நதியின் கரைகளிலே வசிக்கிறான். அவனுடைய மனை, மலைகளின் நடுவிலிருக்கிறது. 4,195.

## 62. மித்திரா வருணர்கள்

### 416. சுருதவிதன் – ஆத்திரேயன்

1. நான் உங்களுடைய இருப்பிடமாயுள்ள சூரியனுடைய நிலையான மண்டலத்தைக் கண்டேன். அது ருதத்தால் மறைக்கப்பட்டிருக்கிறது. அங்கு துதிகள் சூரியனுடைய குதிரைகளை விடுவிக்கின்றன. அங்கு ஆயிரம் ரசிமிகள் சேர்ந்து நிற்கின்றன. அங்கு தேவர்களுடைய வடிவங்களிலே உத்தமமாயிருக்கும் ஒன்றே அந்தச் சூரிய மண்டலமாகும்.



2. மித்திரா வருணர்களே! உங்களுடைய மகத்துவம் புகழுள்ளது. அதனால் ஸதா சலனமாகும் சூரியன் தொடர்கிற தினங்களோடு தாவரமான சலங்களைக் கறக்கிறான். நீங்கள் தானாகவே சுற்றும் சூரியனின் கிரணங்களை யெல்லாம் அதிகப்படுத்துகிறீர்கள். உங்களுடைய ஒரு தேர் எப்பொழுதும் சுற்றி வருகிறது.

3. அரசர்களான மித்திரா வருணர்களே! நீங்கள் உங்களுடைய ஆற்றல்களால் சோதியையும் புவியையும் தாங்குகிறீர்கள். துரிதமாய்த் தானமளிக்கும் நீங்கள் ஓஷதிகளைச் செழிப்பியுங்கள். பசுக்களைப் புட்டிப்படுத்துங்கள். மழையைக் கீழே செலுத்துங்கள்.

4. உங்களுடைய நன்கு இணைக்கப்பட்ட குதிரைகள் உங்களை எங்கள் முன்னே இங்கு ஏந்தி வருக. நெய் வடிவமாயுள்ள மேகம் உங்களைத் தொடர்கிறது. பூர்வத்தில் போல் நதிகள் பெருகுகின்றன.

5. மித்திரா வருணர்களே! நீங்கள் மனிதனின் காந்தியையும், புகழையும், மந்திரத்தால் பாலிக்கப்படும் யக்ஞத்தைப் போல் அதிகப்படுத்தி மிகுந்த உணவுள்ளவர்களும், மிக்கப் பலமுள்ளவர்களுமான நீங்கள், யக்ஞஸ்தானங்களின் நடுவே உங்கள் தேரில் ஏறுங்கள். 4,200.

6. யக்ஞஸ்தானங்களின் நடுவே உங்களால் பாலிக்கப்படும் சுகிருதனுக்கு நீங்கள் ஆதரவுகளோடும், தானமளிக்கும் கைகளோடுமிருங்கள். அரசர்களும் கோபமற்றவர்களுமான நீங்கள், இருவரும் சேர்ந்து க்ஷத்திரத்தையும், ஆயிரந் தூண்களுள்ள மனையையும் தாங்குகிறீர்கள்.

7. அவர்களுடைய தேர் தங்க வடிவமுள்ளது. அதன் தூண்கள் இரும்பாலானவை. அது வானிலே மின்னலைப் போல் மின்னுகிறது. நாங்கள் மங்களகரமான இடத்திலோ அல்லது யூபங்கள் நிறுத்தப்படும்

யக்ஞ ஸ்தனத்திலோ உங்கள் தேரை இனிய ரஸத்தால் நிரப்புவோமாக.

8. மித்திரா வருணர்களே! உஷையின் உதயத்திலே சூரியனின் எழுச்சியிலே உங்களுடைய பொன் வடிவ முள்ளதும் ஆயிரம் இரும்புக் கம்பங்களுள்ளதுமான தேரிலே ஏறுங்கள். அங்கிருந்து புவியையும் அதன் பிரசையையும் பாருங்கள்.

9. தானசீலர்களான மித்திரா வருணர்கள் உலகத்தைப் பாலிப்பவர்கள். நீங்கள், உங்களுடைய ஆற்றலுள்ளதும், அணுகப்படாததும், மாசற்றதுமான சுகத்தால் எங்களைப் பாலியுங்கள். நாங்கள் விரும்பும் செல்வங்களைப் பெற்று ஜயிப்பவர்களாயிருப்போமாக. 4,204.

## 63. மித்திரா வருணர்கள்

### 417. அர்ச்சநாநா ஆத்திரேயன்

1. ருதபாலகர்களும், சத்திய செயல்களை நடத்துபவர்களுமான நீங்கள், பரமசோதியிலே, உங்கள் தேரின் மீது ஏறுகிறீர்கள். மித்திரா வருணர்களே! உங்களால் பாலிக்கப்படுபவனுக்கு பாஜன்யன் வானிலிருந்து இனிய தாரையைப் பொழிகிறன்.

2. மித்திரா வருணர்களே! இந்த உலகத்தை நன்ருக அரசு புரிபவர்களும், சோதியைக் காண்பவர்களுமான நீங்கள், இந்த யக்ஞத்திலே விளங்குகிறீர்கள். நாங்கள் உங்களிடம் மழையும் அமுதத் தன்மையும் நிறைந்த செல்வத்தை வேண்டுகிருேம். உங்களுடைய ரசிமிகள் புவியிலும் சோதியிலும் பரவுகின்றன.

3. மித்திரா வருணர்களே! நன்ருய் அரசு புரிபவர்களும், உக்கிரர்களும், விருஷபர்களும், சோதி புவிகளின் தலைவர்களும், அனைத்தையும் செவியுறுபவர்களுமான நீங்கள், ஸ்தோத்திரத்தை, நாதத்தைச் செவியுறவருகிறீர்கள். பர்ஜன்யனுடைய மாயையால் வானைப் பொழியச் செய்கிறீர்கள்.



4. மித்திரா வருணர்களே! உங்களுடைய ஆயுதமாம் சோதியான சூரியன் வானிலே சலனமாகுங்கால் உங்களுடைய மாயை விண்ணிலே விளங்குகிறது. நீங்கள் அந்தச் சூரியனை, மேக்த்தாலும் மழையாலும் மறைக்கிறீர்கள். பர்ஜன்யனே! அவர்களால் பிரேரிக்கப்பட்ட உன்ஞல் இனிய மழைத் திவலைகள் பெய்கின்றன.

5. மித்திரா வருணர்களே! மருத்துக்கள் சலத்தைப் பொழிய, போர்த்தேரை இணைக்கும் வீரனைப் போல தங்கள் சுகமாய்ச் செல்லும் தேரை இணைக்கிருர்கள். அவர்களுடைய வடிவங்கள் மருத்துக்கள் மழையை வழங்கப் பலவித உலகங்களில் பரவுகின்றன. ஆதலால் சக்கரவர்த்திகளான நீங்கள் எங்களுக்கு சோதியிலிருந்து சலத்தைப் பொழியுங்கள். 4,209

6. மித்திரா வருணர்களே! பர்ஜன்யன்-மேகம்-காந்தியைப் புலப்படுத்துவதும், உணவை அறிவிப்பதுமான விரும்பத் தகுந்த கர்ச்சனையை எழுப்புகிறது. மருத்துக்கள் மேகங்களைத் தங்கள் மாயைகளால் போர்த்துகிருர்கள். அவர்களோடு நீங்கள் சேர்ந்து சிகப்பான குற்றமற்ற வானை, மழை பெய்யச் செய்கிறீர்கள்.

7. மித்திரா வருணர்களே! அறிஞர்களான நீங்கள் தருமத்தால் விரதங்களைப் பாலிக்கிறீர்கள். பர்ஜன்யனுடைய மாயையால்-அறிவால், ஆற்றலால்-உலகத்தையெல்லாம் ருதத்தால்-சலத்தால்-ஒளிப்படுத்துகிறீர்கள். விண்ணிலே, போற்றத் தகுந்த தேரான சூரியனைத் தாங்குகிறீர்கள். 4,211

## 64. மித்திரா வருணர்கள்

### 418. அர்ச்சநாநா ஆத்திரேயன்

1. நாங்கள், பகைவர்களை விலக்குபவர்களும், சோதிக்குச் செலுத்துபவர்களுமான மித்திரா வருணர்களைத் தங்கள் முன்னே பசுக்களின் மந்தைகளை நடத்திச் செல்லும் இரு கோபாலர்களைப் போலுள்ள அவர்களை அழைக்கிருேம்.

2. வழிபடுபவனான நான் விரும்புவதை உங்களுடைய ஆதரவுள்ள, ஆய்ந்தெடுக்கும், அன்புள்ள கைகளால் அளியுங்கள். உங்களால் அளிக்கப்பட்டதும் விரும்பப்பட்டதுமான செல்வமானது எல்லா நிலங்களிலும் பரவுகிறது.

3. நான் சரியான வழியில் செல்ல மித்திரனுடைய நெறியால் நடப்பேனாக. இந்த அன்பனான இன்னலில்லாத மித்திரனுடைய சுகத்திலே எல்லா நன்மைகளும் சேர்கின்றன.

4. மித்திரா வருணர்களே! நான் என்னுடைய துதியால் உங்களிடமிருந்து, செல்வர்களுடையவும், துதிப்பவர்களுடையவும் மனைகளில் பேராசையை எழுப்பும் தன்மையுள்ள செல்வத்தை அடைவேனாக.

5. மித்திரா வருணர்களே! உங்களுடைய உத்தம காந்திகளோடு எங்களுடைய சபைக்கு வாருங்கள். துதிச் செல்வர்களையும் உங்களுடைய நண்பர்களையும் அவர்களுடைய மனைகளிலே செழிப்பியுங்கள். 4,216

6. மித்திரா வருணர்களே! நாங்கள் அளிக்கும் இத் துதிகளுக்குப் பலத்தையும் மகத்தான உணவையும் தாருங்கள். எங்களுக்கு உணவையும் செல்வத்தையும் சுவஸ்தியையுமளிப்பதில் தாராளமாயிருங்கள்.

7. வைகறையின் வெண் கதிரிலே தேவர்களுக்கான யக்ஞத்திலே போற்றத் தகுந்த தேவர்கள் என்னால் பொழியப்படும் ஸோமத்தைக் காண்கிறார்கள். தலைவர்களும் அர்ச்சநாநாஸனைத் தாங்குபவர்களுமான நீங்கள், உங்களுடைய துரித குதிரைகளோடு வாருங்கள். 4,218

## 65. மித்திரா வருணர்கள்

### 419. அர்ச்சநாநன்–ஆத்திரேயன்

1. தேவர்களின் நடுவே உங்கள் இருவரையும் எங்ஙனம் போற்ற வேண்டுமென்பதை அறிபவன் உத்தமச் செயல்களைச் செய்பவனாகிறான். அவனுடைய தோத்



திரத்தைத் சுந்தரமாய்த் தோன்றும் மித்திரா வருணர்கள் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். அவன் அந்த அறிவை-துதி எங்ஙனம் செய்வது என்பதை-எங்களுக்குப் புலப்படுத்துவானாக.

2. உத்தம தேஜசுள்ளவர்களும், அரசர்களும், வெகு தூரத்திலிருந்தே அழைப்புக்களைச் செவியுறுபவர்களும், நல்லவர்களின் தலைவர்களும், ருதத்தை வளர்ப்பவர்களுமான மித்திரா வருணர்கள் ஒவ்வொருவனுடைய நன்மைக்காகச் சலனமாகிறார்கள்.

3. பழையவர்களான உங்களை அணுகி நான் பாலனத்துக்காக உங்கள் இருவரையும் சேர்த்து அழைக்கிறேன். உத்தம குதிரைகளுள்ள நாங்கள் எங்களுக்கு உணவையளிக்க உணர்வுள்ள உங்களைப் போற்றுகிறோம்.

4. மித்திரன், ஒருவன் பாவியாயிருந்தாலும் அவனுக்குத் தன் பரந்த மனைக்கு வரும் வழியைப் புலப்படுத்துகிறான். பகைவர்களையழிக்கும் மித்திரனுடைய சுமதியானது போற்றுபவனுக்குத் தோன்றுகிறது.

5. நாங்கள் எப்பொழுதும் மித்திரனுடைய பரந்த பாலனத்திலிருப்போமாக. பாவமற்ற நாங்கள், மித்திரனே! உன்னுடைய பாலனத்தில் விளங்குவோமாக. அதே சமயத்தில் நாங்கள் வருணனுடைய குழந்தைகளாயுமிருப்போமாக. 4,223

6. மித்திரா வருணர்களே! நீங்கள் இந்த மனிதனிடம் வருகிறீர்கள். அவன் தன் விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்ள அவனைச் செலுத்துகிறீர்கள். அவிச் செல்வர்களான எங்களைப் புறக்கணிக்காதீர்கள். ரிஷிகளின் புதல்வர்களான எங்களைப் புறக்கணிக்காதீர்கள். ஸோமத்தையளிக்குங்கால் எங்களைப் பாலியுங்கள். 4,224

## 66. மித்திரா வருணர்கள்

### 420. அர்ச்சநாநன்-ஆத்திரேயன்

1. அறிவுள்ள மானிடனே! பகைவர்களை அழிப்பவர்களும், நல்ல செயல்களை நடத்துபவர்களுமான இரு தேவர்களைப் போற்றவும். ருத வடிவமுள்ளவனும், துதியாருகனும், அவியைப் பெற்றுக் கொள்பவனுமான வருணனுக்கு அவிகளை அளிக்கவும்.

2. அவர்களுடைய தடைபடாத அசுரர்களைத் தாழ்த்தும் ஆற்றல் நன்ருய்ப் பரவியிருக்கிறது. அதனுல் விரதங்களைப் போல், ஆக்ஞைகளைப் போல் மனித ஸமூகம் சூரியனைப் போல் எழில் செய்யப்பட்டிருக்கிறது.

3. நாங்கள் உங்கள் இருவரையும் உங்களுடைய தேர்கள் வெகு தூரத்திலே எங்கள் முன்னே செல்ல வேண்டுமென உங்களைத் துதிக்கிருேம். ராதஹவ்யனுடைய நல்ல துதியை நீங்கள் ஸ்தோமங்களோடு ஏற்றுக்கொண்டீர்கள்.

4. உங்களை வழிபடும் வலியனுன என்னுடைய பழைய துதிகளால் போற்றப்பட்ட துதியாருகர்களும், அற்புதர்களும், சுத்த பலமுள்ளவர்களுமான நீங்கள், உங்களுடைய அனுகூலமான சித்தங்களோடு, இந்த மனிதர்களின் தோத்திரத்தைத் தெரிந்து கொள்ளுங்கள்.

4. புவியே! உன்னிடம் ரிஷிகளின் தேவைகளுக்காக மிருந்த சலமிருக்கிறது. ஊக்கமுள்ள இரு தேவர்கள் தங்கள் சலனங்களால் போதுமான மிருந்த மழையைத் தருகிருர்கள். 4,229.

5. அனைத்தையும் பார்க்கும் மித்திரா வருணர்களே! நாங்களும் தொழுபவர்களும் உங்களை அழைக்கிருேம். நாங்கள் உங்களுடைய மிக்கப் பரந்திருப்பதும், பலரால் வரத் தகுந்ததுமான சுயராஜ்யத்துக்கு வருவோமாக. 4,230.



## 67. மித்திரா வருணர்கள்

### 421. யஜநன்-ஆத்திரேயன்

1. ஆதித்தியர்களே! மித்திரனே! வருணனே! அர்யமானே! நீங்கள் மிக்க ஸ்தாபிக்கப்பட்டதும், யஜிக்கத் தகுந்ததும், மகத்தாயுள்ளதும், மிக்க வலிமையுடனிருப்பதுமான க்ஷத்திரத்தை – பலத்தை – அடைந்திருக்கிறீர்கள்.

2. மித்திரனே! வருணனே! யக்ஞத்தின் இன்பமான இடத்துக்கு நீங்கள் வருங்கால், மனிதர்களைப் பாலிப்பவர்களும், பகைவர்களை அழிப்பவர்களுமான நீங்கள் சுகத்தையளிக்கிறீர்கள்.

3. எல்லாச் செல்வங்களுமுள்ள மித்திரனும், வருணனும், அர்யமானும், எல்லாத் தேவர்களும் தங்கள் சொந்த இடத்தைப் போல் எங்கள் யக்ஞங்களிலே சேர்ந்திருக்கிருர்கள். வழிபடுபவனைத் துன்பத்திலிருந்து பாலிக்கிருர்கள்.

4. ஏனெனில் அவர்கள் சத்தியத்தைப் பாலிப்பவர்கள். சலத்தை வழங்குபவர்கள். மனிதர்களின் நடுவே யக்ஞத்தைப் பாலிப்பவர்கள். நன்னெறியைக் காட்டுபவர்கள். தாராளமாயளிப்பவர்கள். பாவியாயிருந்தாலும் அவனுக்குச் செல்வத்தைத் தருபவர்கள்.

5. மித்திரனே! வருணனே! எங்களுடைய தோத்திரத்திலே உங்களில் எவன் துதிக்கப்படவில்லை? ஆதலால் எங்களுடைய எண்ணம் உங்களை நோக்குகிறது. அத்திரிகளின் எண்ணம் உங்களை நோக்குகிறது. 4,235.

## 68. மித்திரா வருணர்கள்

### 422. யஜநன்-ஆத்திரேயன்

1. மித்திரனையும் வருணனையும் வியாபகமான பாட்டால் பாடுங்கள். மகத்தான பலமுள்ள நீங்கள் மகத்தான யக்ஞத்துக்கு வாருங்கள்.

2. மித்திரா வருணர்கள் அனைவருக்கும் அரசர்கள் மழையைத் தோற்றுவிப்பவர்கள். தேவர்களின் நடுவே புகழ் பெற்றவர்கள்.

3. அவர்கள் எங்களுக்குப் புவியிலும் சோதியிலும் தோன்றும் செல்வங்களை அளிக்க ஆற்றலுள்ளவர்கள். தேவர்களின் நடுவே உங்களுடைய ஆற்றல் மகத்தானது.

4. அவர்கள் ருதத்தை ருதத்தால் பரிசித்து ஊக்கமாயுள்ள பலத்தை அடைந்தார்கள். வஞ்சகமில்லாமல் வளர்கிறார்கள்.

5. சோதியிலிருந்து மழையைச் செலுத்துபவர்களும், விருப்பங்களைப் பூர்த்தி செய்பவர்களும், உணவின் தலைவர்களும், தக்கவாறு தானமளிப்பவர்களுமான மித்திரா வருணர்கள் தங்களுடைய பரந்த தேரிலே ஏறுகிறார்கள். 4,240

## 69. மித்திரா வருணர்கள்

### 423. உருசக்கிரி-ஆத்திரேயன்

1. மித்திரா வருணர்களே! க்ஷத்திரியனுடைய ஆற்றலை வளர்ப்பவர்களும், அழியாத விரதத்தை-ஆக்ஞையை-பாலிப்பவர்களுமான நீங்கள், மூன்று ஒளி உலகங்களையும், மூன்று சோதிகளையும், மூன்று புவியின் உலகங்களையும் தாங்குபவர்கள்.

2. மித்திரனே! வருணனே! உங்கள் ஆக்ஞையால் பசுக்களிடம் பால் நிறைந்திருக்கிறது. நதிகள் உங்களுடைய விருப்பத்தால் இனிய சலத்தைத் தருகின்றன. உங்கள் விருப்பத்தால் பொழிபவர்களும், சலத்தை ஏந்துபவர்களும், ஒளி உள்ளவர்களுமான மூவர்கள்-அக்கினி, வாயு, ஆதித்தியன்-மூவ்வுலகங்களிலே-புவியிலே, வானிலே, சோதியிலே—அவரவர்களுடைய இடங்களிலே நிற்கிறார்கள்.



3. நான் தேவியான அதிதியை, காலையிலே, சூரியன் உச்சத்திலாகும் நடுப்பகலிலே அழைக்கிறேன். நான் மித்திரா வருணர்களான உங்களை எல்லாக் காலங்களிலும் செல்வங்களுக்காகவும், புதல்வர்களுக்காகவும், பேரர்களுக்காகவும், துன்பத்திலிருந்து நீங்கவும், சுகத்தைப் பெறவும் அழைக்கிறேன்.

4. நான் ஒளியின் உலகங்களையும், புவியின் இடங்களை ஏந்துபவர்களும், ஒளியில் தோன்றியவர்களுமான ஆதித்தியர்களைப் போற்றுகிறேன். மித்திரா வருணர்களே! அமிருதர்களான தேவர்கள் உங்களுடைய நித்தியமாயிருக்கும் விரதங்களை-சட்டங்களை-பங்கப்படுத்தார்கள். 4,244

## 70. மித்திரா வருணர்கள்

### 424. உருசக்கிரி-ஆத்திரேயன்

1. மித்திரனே! வருணனே! நான் உங்களுடைய ஸுமதியை அடைவேனாக. அதனால் நிச்சயமாக மிக்கப் பரந்த பாலனம் தோன்றுகிறது.

2. கருணையுள்ள தேவர்களே! உங்களை நன்றாய்த் துதிக்கும் நாங்கள் உங்களிடமிருந்து உணவை உண்பதற்காக அடைவோமாக. உருத்திரர்களே! நாங்கள் உங்களுடைய ஆதரவிலிருப்போமாக.

3. உங்களுடைய பாலனங்களால் எங்களைப் பாலியுங்கள். அன்பு மிகுந்த பாலனத்தோடு எங்களைப் பாலியுங்கள். நாங்கள் எங்கள் சந்ததிகளோடு சத்துருக்களை ஜயிப்போமாக.

4. அற்புதச் செயல்களை நடத்துபவர்களே! நாங்களும், எங்களுடைய புதல்வர்களும், சந்ததிகளும், அந்நியனுடைய செல்வத்தை அனுபவிக்காமலிருப்போமாக. 4,248

## 71. மித்திரா வருணர்கள்

### 425. பாஹுவிருக்த ஆத்திரேயன்

1. வருணனே! மித்திரனே! எதிரிகளைக் கலைப்பவர்களும், பகைவர்களைக் குலைப்பவர்களுமான நீங்கள், எங்களுடைய இந்த நல்ல யக்ஞத்துக்கு வாருங்கள்

2. மித்திரனே! வருணனே! பேரறிஞர்களான நீங்கள், அனைவரையும் அரசு புரிகிறீர்கள். தலைவர்களான நீங்கள், எங்கள் செயல்களைச் செழிப்பியுங்கள்.

3. மித்திரனே! வருணனே! நீங்கள் அளிப்பவனுடைய ஸோமத்தைப் பருகப் பிழியப்பட்டிருக்கும் ரஸத்துக்கு வாருங்கள். 4,251

## 72. மித்திரா வருணர்கள்

### 426. பாஹுவிருக்த ஆத்திரேயன்

1. நாங்கள் மித்திரனையும் வருணனையும் அத்திரியைப் போல் மந்திரங்களால் அழைக்கிறோம். நீங்கள் ஸோமத்தைப் பருக தருப்பையின் மீது அமருங்கள்.

2. நீங்கள் தருமத்தோடும் விரதத்தோடும் மனிதர்களை ஊக்கப்படுத்தி நிலையான இடங்களில் இருக்கிறீர்கள். நீங்கள் வந்து ஸோமத்தைப் பருக தருப்பையின் மீது அமருங்கள்.

3. மித்திரனும் வருணனும் எங்களைப் பாலிக்க யக்ஞத்தைப் பெற்றுக்கொள்வார்களாக. நீங்கள் வந்து ஸோமத்தைப் பருக தருப்பையின் மீது அமருங்கள். 4,254.

## 73. அசுவினிகள்

### 427. பௌர ஆத்திரேயன்

1. அசுவினிகளே! பல யக்ஞங்களில் புசிக்கும் நீங்கள் தூரத்திலிருந்தாலும், அருகிலிருந்தாலும், பல இடங்களில் சுற்றிக்கொண்டிருந்தாலும், வானிலிருந்தாலும் இங்கு வாருங்கள்.



2. நான் பலரை ஊக்கப்படுத்தும் உங்களை இங்கு அழைக்க அணுகுகிறேன். நான் பல வீரச்செயல்களை நடத்தியவர்களும், தடைபடாதவர்களும், உத்தமர்களும், மிக்க வலியர்களுமான உங்களைப் பாலனத்துக்காக அழைக்கிறேன்.

3. நீங்கள் சூரியனுடைய வடிவத்தை ஒளிப்படுத்த உங்கள் தேரின் பிரகாசமாயுள்ள ஒரு சக்கரத்தை நிலையாக நிறுத்தினீர்கள். நீங்கள் வேறு சக்கரத்தால் உங்களாற்றலோடு மானிடர்களின் யுகங்களைக் கிரமப்படுத்த உலகங்களைச் சுற்றுகிறீர்கள்.

4. வியாபகர்களே! உங்களைத் துதிக்கும் என்னுடைய துதி-வழிபடுபவனால் கூறப்படும் இது-உங்களுக்கு இசைந்ததாகுக. தனித்தனியாய்ப் பிறந்தவர்களும் குற்றமற்றவர்களுமான நீங்கள், எங்களுக்கு உணவை அளியுங்கள்.

5. உங்களுடைய வேகமாய்ச் செல்லும் தேரிலே சூரியை ஏறியவுடன் சிகப்புநிறப் பறவைகளும் தாபப்படுத்தும் காந்திகளும் உங்களைச் சூழ்ந்தன. 4,259.

6. நாஸத்தியர்களே! அத்திரி உங்களைத் துதிசெய்து, தாபத்தைத் தண்மை எனக் கண்டபோது அவன் யக்ஞத் தலைவர்களான உங்களின் உதவியால் தாபம் தண்மையாயிற்று என்பதை மனத்தால் உணர்ந்தான்.

7. உங்களுடைய வலிய உயர்ந்த சலனமுள்ள சதா முன்னேறும் தேர் அப்பொழுதிலிருந்து புகழைப் பெற்றது. அசுவினிகளே! அத்திரி உங்களுடைய செயல்களால் மீட்கப்பட்டான்.

8. ருத்திரர்களே! இனிமையை விரும்புபவர்களே! இனிய தாரைகளைப் பொழியும் அவள் — வாக்கு-உங்களுக்கு ஸேவை செய்கிறாள். நீங்கள் வானின் எல்லைகளைக் கடக்குங்கால் பக்குவப்பட்ட உணவுகள் உங்களைத் தாங்குகின்றன.

9. அசுவினிகளே! நீங்கள் இருவரும் சுகத்தைத் தருபவர்கள் என அவர்கள் சத்தியத்தோடு அழைக்கிறார்கள். யக்ஞத்திலே நீங்கள் செவிச் செல்வர்களாயிருப்பீர்களாக. எங்கள் யக்ஞத்திலே மிக்க சுகத்தை அளிப்பவர்களாயிருக்கிறீர்கள்.

10. தேரைக் கற்பிக்கும் சிற்பியைப் போல் எங்களால் கற்பிக்கப்படுபவையும், அசுவினிகளைப் போற்றுபவையுமான இந்தத் துதிகள் சுகத்தைத் தோற்றுவிப்பவையாகுக. நாங்கள் மகத்தான வணக்கத்தைக் கூறுகிறோம். 4,264

## 74. அசுவினிகள்

### 428. பௌரன்-ஆத்திரேயன்

1. தேவர்களான அசுவினிகளே! துதிச் செல்வர்களே! சோதியிலிருந்து புவிக்கு இறங்கி வந்த நீங்கள், செல்வங்களைச் சொரியும் உங்களுக்கு அத்திரி கூறும் ஸ்தோமத்தைச் செவியுறுங்கள்.

2. தேவர்களான நாஸத்தியர்கள் எங்கு இருக்கிறார்கள்? எங்கு கேட்கப்படுகிறார்கள்? சோதியிலா? எந்த மனிதனிடம் நீங்கள் வருகிறீர்கள்? போற்றுபவர்களில் எவன் உங்களோடு இருக்கிறான்?

3. எவனை எண்ணி நீங்கள் புறப்படுகிறீர்கள்? எவனிடம் நீங்கள் செல்லுகிறீர்கள்? எவனுடைய முகப்பில் செல்ல நீங்கள் உங்கள் தேரை இணைக்கிறீர்கள்? எவனுடைய துதியால் நீங்கள் இன்புறுகிறீர்கள்? நாங்கள் உங்கள் வருகையை விரும்புகிறோம்.

4. பௌரர்களே! அசுவினிகளே! பௌரனுக்கு மழை பெய்யும் மேகத்தைச் செலுத்துங்கள். நீங்கள் யக்ஞத்தை நடத்தும் பௌரனிடம், காட்டிலே சிங்கத்தை விரட்டும் வேடர்களைப் போல், மேகத்தை விரட்டிச் செலுத்துங்கள்.



5. வயதால் தேய்ந்த சியாவனனிடம் மூப்படைந்த சருமத்தை, கவசத்தைப் போல் நீக்கி அவனை மீண்டும் இளைஞனாகச் செய்தபோது, அவன் பெண்கள் விரும்பும் ரூபத்தை அடைந்தான் 4,269

6. உங்கள் இருவரையும் போற்றுபவன்-பௌரன்-இங்கு இருக்கிறான். நாங்கள் உங்களுடைய சன்னிதானத்தில் செல்வத்துக்காக இருப்போமாக. இன்று என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள். உணவுச் செல்வமுள்ள நீங்கள், உங்கள் பாலனங்களோடு இங்கு வாருங்கள்.

7. பல் சனங்களின் நடுவே எவன் இன்று உங்களை நன்கு புகழ்ந்தான்? விப்பிரர்களால் போற்றத் தகுந்த உங்களை எந்த விப்பிரன் நன்கு போற்றினான்? உணவுச் செல்வமுள்ள உங்களை யக்ஞத்தால் எவன் நன்கு ஏத்தினான்?

8. அசுவினிகளே! உங்களுடைய பல பகைவர்களை விலக்குவதும், மனிதர்களின் நடுவே போற்றப்படுவதும், தேவர்களின் தேர்களில் மிக்கத் துரிதமாயிருப்பதுமான தேர் விருப்பமுடன் இங்கு எங்களிடம் வருக.

9. இனிய ஸோமத்தை விரும்பும் உங்கள் இருவருக்கும் கூறப்படும் தோத்திரம் எங்களுக்கு சுகத்தைப் புலப்படுத்துக. பேரறிஞர்களான நீங்கள் பருந்துகளைப் போல் துரிதமாகி வேகமான குதிரைகளிலே இங்கு எங்கள் முன்னே வாருங்கள்.

10. அசுவினிகளே! நீங்கள் எங்கிருந்தாலும் இந்த அழைப்பைச் செவியுறுங்கள். உங்களை அணுக விரும்பும் உத்தம அவிகள் உங்களிடம் வருகின்றன. 4,274

## 75. அசுவினிகள்

### 429. அவஸ்யு-ஆத்திரேயன்

1. அசுவினிகளே! செல்வத்தை ஏந்துவதும், பொழிவதும், நீங்கள் பிரியப்படுவதுமான தேரை, வழி

படுபவனுன ரிஷி ஸ்தோமத்தால் அலங்கரிக்கிறுன். மது வித்தையை அறிபவர்களே! என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள்.

2. அசுவினிகளே! நான் எல்லா சத்துருக்களேயும் ஜயிக்க நீங்கள் வழிபடும் மற்றவர்களேக் கடந்து இங்கு என்னிடம் வாருங்கள். சத்துருக்களேச் சாய்ப்பவர்களும், பொன் தேரிலே செல்பவர்களும், செல்வத்தை வழங்குபவர்களும், நதிகளேச் செலுத்துபவர்களும், மது வித்தையை அறிபவர்களுமான நீங்கள், என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள்.

3. அசுவினிகளே! எங்களுக்கு இரத்தினங்களே ஏந்தி வாருங்கள். ருத்திரர்களே! பொன் தேரிலே செல்பவர்களும், யக்ஞத்திலே இன்புறுபவர்களும், உணவுச் செல்வர்களும், மது வித்தையை யறிபவர்களுமான நீங்கள், என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள்.

4. செல்வத்தைப் பொழிபவர்களே! உங்களே வழிபடுபவனுடைய துதி உங்கள் தேருக்குக் கூறப்படுகிறது. அதற்கும், உங்களுக்கும், மகானும், பக்தனும், அழகனுமான ஸ்தோதா அவியை யளிக்க விரும்புகிறுன். மது வித்தையை அறிபவர்களான நீங்கள், என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள்.

5. அசுவினிகளே! விழித்த மனமுள்ளவர்களும், தேரிலே செல்பவர்களும், துரித சலனமுள்ளவர்களும், அழைப்புக்குச் செவி கொடுப்பவர்களுமான நீங்கள், வஞ்சகமற்ற சியாவனனிடஞ் சென்றீர்கள். மது வித்தையை அறிபவர்களான நீங்கள் என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள். 4,279

6. அசுவினிகளே! தலைவர்களே! உங்களுடைய, நினைத்தவுடன் இணைபவையும், அற்புத அழகுள்ளவையும், துரிதமாய்ச் செல்பவையுமான குதிரைகள் உங்களே



இங்கு நல்ல செல்வங்களோடு ஸோமத்தைப் பருக ஏந்தி வருக. மது வித்தையை அறிபவர்களான நீங்கள், என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள்.

7. அசுவினிகளே! இங்கு வாருங்கள். நாஸத்தியர்களே! எங்களிடம் விருப்பமற்றிராதீர்கள். தடைபடாத தலைவர்களே! நீங்கள் மறைந்திருக்கும் உலகங்களிலிருந்து எங்களுடைய யக்ஞஸதனத்துக்கு வாருங்கள். மது வித்தையை அறியும் நீங்கள், என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள்.

8. அசுவினிகளே! தடைபடாதவர்களே! சலத்தின் தலைவர்களே! இந்த யக்ஞத்திலே உங்களேப் போற்றும் அவஸ்யுவை ஆதரியுங்கள். மது வித்தையை அறிபவர்களே! நீங்கள் என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள்.

9. உஷை உதயமாகிறுள். அவியோடு பிரகாசிக்கும் பருவத்தின் அக்கினி வேதியிலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறுன். செல்வங்களேப் பொழிபவர்களும், சத்துருக்களேச் சாய்ப்பவர்களுமான உங்களுடைய அமிருதமான தேர் இணைக்கப்பட்டிருக்கிறது. மது வித்தையை அறியும் நீங்கள், என்னுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள். 4,288

## 76. அசுவினிகள்

### 430. பௌமன்-ஆத்திரேயன்

1. அக்கினி உஷைகளின் முகத்தை ஒளிப்படுத்துகிறுன். விப்பிரர்களுடைய தேவர்களே விரும்பும் மொழிகள் எழுகின்றன. ஆதலால் அசுவினிகளே! தேர்த் தலைவர்களான நீங்கள், இறங்கி, பூரணமாயும் பிரகாசமாயுமுள்ள யக்ஞத்துக்கு இன்று இங்கே வாருங்கள்.

2. நன்கு செய்யப்பட்ட யக்ஞத்தை இகழாதீர்கள். இப்பொழுது துரிதமாக வாருங்கள். இத்தருணத்திலே போற்றப்படுங்கள். வறுமையை விலக்கும் பாலனத்

தோடு தினத்தின் உதயத்திலே தோன்றுங்கள். அளிப்பவனுக்கு சுகத்தைத் தரத் துரிதமாகுங்கள்.

3. நீங்கள் பசுக்களைக் கறக்கும் சமயத்திலோ, தினத்தின் உதயத்திலோ, சூரியன் உச்சமாயிருக்கும் நடுப்பகலிலோ, அல்லது தினத்திலோ, அல்லது இரவிலோ, வந்தாலும் அப்பொழுது சுகத்தைத் தரும் பாலனத்தோடு வாருங்கள். ஸோமபானம் இப்பொழுது அசுவினிகளைத் தவிர வேறு எந்தத் தேவர்களுக்கும் பருக வாய்ப்பளிக்கப்படவில்லை.

4. அசுவினிகளே! இந்த இடம் உங்களுடைய பழைய மனை. இவை உங்களுடைய வீடுகள். இது நீங்கள் வசிக்கும் ஸ்தானம். சலம் நிறைந்த மேகத்தால் படரப்பட்ட பரந்த வானிலிருந்து எங்களுக்குப் பலத்தையும் உணவையும் ஏந்தி வாருங்கள்.

5. நாங்கள் அவர்களுடைய நலத்தைப் புலப்படுத்துவதும் சுகத்தைத் தருவதுமான தனிப் பாலனத்தால் அசுவினிகளோடு சேர்வோமாக. அமிருதர்களே! எங்களுக்குச் செல்வத்தையும், சந்தானத்தையும், எல்லா நல்ல பொருள்களையுமளியுங்கள். 4,288

## 77. அசுவினிகள்

### 431. பௌமன்-அத்திரி

1. உதயத்தில் முதலில் வரும் இருவரையும் போற்றுங்கள். அவர்கள் அளிக்காத கருமிகளுக்கு முன்னே பருகுவார்களாக அசுவினிகளுக்குக் காலையக்ஞத்திலே உரிமையுண்டு. பழைய கவிகள் அவர்களை உதயத்திலே போற்றினார்கள்.

2. காலையில் அசுவினிகளைப் போற்றுங்கள். அவர்களுக்கு அவிகளை அளியுங்கள். தேவர்களுக்கு மாலையிலே அவி தோன்றுது. ஏனெனில் அதை அவர்கள் விரும்பார்கள் எங்களைத் தவிர அவர்களை நாடுபவனும் ஏத்துபவனுமிருக்கிறான். ஆனால் அவர்கள் முதன்மையாய்ப் போற்றுபவனையே விரும்புகிறார்கள்.



3. அசுவினிகளே! உங்களுடைய பொன்னால் பூசப்பட்டதும், தேன் நிறமுள்ளதும், நெய் சிந்துவதும், மனோவேகமுள்ளதும், காற்றைப் போல் துரிதமாயிருப்பதும், உங்களை எல்லாத் தடைகளிலிருந்தும் ஏத்திச் செல்வதுமான தேர் வருகிறது.

4. நாஸத்தியர்களுக்கு விபாகத்திலே அவியின் அதிகப் பங்கையளித்து அவர்களுக்கு உணவுகளிலே பெரும் பாகத்தைத் தருபவன் தன் செயல்களால் தன் புதல்வனின் க்ஷேமத்தைச் சம்பாதித்துக் கொள்கிறான். அவன் அனல் எழுப்பாதவர்களைக் காட்டிலும் அதிக ஆதரவைப் பெறுகிறான்.

5. நாங்கள் அவர்களுடைய நலத்தைப் புலப்படுத்துவதும் சுகத்தைத் தருவதுமான தனிப் பாலனத்தால் அசுவினிகளோடு சேர்வோமாக. அமிருதர்களே! எங்களுடைய செல்வத்தையும் சந்தானத்தையும் எல்லா நல்ல பொருள்களையுமளியுங்கள். 4.298.

## 78. அசுவினிகள்

### 432. ஸப்தவத்திரி - ஆத்திரேயன்

1. அசுவினிகளே! இங்கு வாருங்கள்! நாஸத்தியர்களே! விருப்பமற்றிருக்காதீர்கள். பிழியப்பட்டிருக்கும் ஸோமத்துக்கு இரு அன்னப்பறவைகளைப் போல் பறந்து வாருங்கள்.

2. அசுவினிகளே! இரு மான்களைப் போலும், புற்றரைக்குச் செல்லும் இரு காட்டுப் பசுக்களைப் போலும் வாருங்கள். பிழியப்பட்டிருக்கும் ஸோமத்துக்கு இரு அன்னப்பறவைகளைப் போல் பறந்து வாருங்கள்.

3. அசுவினிகளே! உணவுச் செல்வமுள்ள நீங்கள், எங்களுடைய யக்ஞத்தைச் செல்வப்படுத்த விரும்புங்கள்.

பிழியப்பட்டிருக்கும் ஸோமத்துக்கு இரு அன்னப்பறவைகளைப் போல் பறந்து வாருங்கள்.

4. அத்திரி உங்களுடைய பாலனத்தால் உமிக்கனல் குண்டலத்திலிருந்து தப்பித்து, கணவனுடைய அன்பை நாடும் மனைவியைப் போல் உங்களை இன்புறுத்துகிறான். ஆதலால் நீங்கள் உங்களுடைய சுகப்படுத்தும் தேர்களோடு பருந்தின் புதியதாய்த் தோன்றிய வேகத்தோடு வாருங்கள்.

5. வனஸ்பதியே! பிரஸவிக்கும் ஸ்திரீயைப் போல் உன் அங்கத்தைத் திறந்துகொள்ளவும் அசுவினிகளே! என் அழைப்பைக் கேளுங்கள். ஸப்தவத்திரியை விடுவியுங்கள். 4,298

6. அசுவினிகளே! உங்களுடைய மாயைகளால்-தந்திரச் செயல்களால்-முடையப்பட்ட கூடையின் வளார்களைப் பயமடைந்திருப்பவனும், உங்களை வேண்டுபவனுமான ரிஷி ஸப்தவத்திரியை விடுவிக்கத் தனிப்படுத்துங்கள்.

கருப்போநிஷதம்

7. ஒவ்வொரு பக்கத்திலும் தடாகத்தைக் கலக்கும் காற்றைப் போல் உன் கருப்பையினுள் இருக்கும் குழந்தையை ஆட்டவும். பத்து மாதங்கள் உள்ளே சாய்ந்திருந்த பாலன் வெளியே வருக.

8. ஆடும்-சலிக்கும்-காற்றைப் போலும், வனத்தைப் போலும், கடலைப் போலும், பத்துமாதக் குழந்தை நஞ்சுக்கொடியுடன் சேர்ந்து, அசைந்து இறங்குக.

9. தன் தாயின் அங்கத்தினுள் பத்து மாதங்கள் சயனித்திருந்த குழந்தை சீவனுள்ளதாயும், துன்பமாகாததாயும், சீவனிலிருந்து தோன்றும் சீவனாயும் வருக. 4,302



## 79. உஷை

### 433. ஸத்திய சிரவஸன்-ஆத்திரேயன்

1. ஒளியான உஷையே! நீ பூர்வத்தில் எங்களை எழுப்பியது போல், நாங்கள் மகத்தான செல்வங்களைச் சம்பாதிக்க எங்களை இன்று எழுப்பவும். நன்கு பிறந்தவளே! குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளே! வய்யனுடைய புதல்வனான சத்திய சிரவஸனுக்கு அனுகூலமாகவும்.

2. சுசிதரதனுடைய புதல்வனான ஸுநீதன் மீது உதயமான சோதியின் மகளே! நன்கு பிறந்தவளே! குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளே! வய்யனுடைய மகனான வலிமையுள்ள சத்திய சிரவஸனின் மீது உதயமாகவும்.

3. நன்கு பிறந்தவளும், குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளுமான நீ, வய்யனுடைய புதல்வனான வலிய சத்திய சிரவஸனின் மீது உதயமானது போல் சோதி மகளே! செல்வங்களை ஏந்தி வரும் நீ, எங்கள் மீது உதயமாகவும்.

4. மிக்கப் பிரகாசமுள்ளவளும், செல்வமளிப்பவளும், நன்கு பிறந்தவளும், குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளுமான உன்னை ஸ்தோமங்களால் ஏத்தி உனக்கு அவியையளிப்பவர்கள் செல்வத்தோடு செழிக்கிறார்கள்.

5. நன்கு பிறந்தவளே! குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளே! செல்வத்தை வழங்க உன் முன்னே திரண்டு நிற்கும் சனங்கள் எங்களுக்கு அபரிமிதமான செல்வங்களை அளித்து எங்களிடம் அன்பு மிகுந்த விருப்பங்களுடனிருக்கிறார்கள். 4,307

6. நன்கு பிறந்தவளே! குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளே! செல்வியான உஷையே! வழிபடுபவர்களுக்கு உணவையும் சந்தானத்தையுமளிக்கவும். அத

னால் அவர்கள் எங்களுக்கு அழியாத செல்வங்களை அளிப்பார்களாக.

7. செல்வியான உஷையே! சுந்தர சனனமுள்ளவளே! குதிரைகளுக்காகப் பிரியமாய்ப் போற்றப்படுபவளே! எங்களுக்குப் புரவிகளும் பசுக்களும் நிறைந்த செல்வங்களைத் தரும் தான சீலர்களுக்கு மிகுந்த உணவையும் செல்வத்தையும் தாருங்கள்.

8. நன்கு பிறந்தவளே! குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளே! சூரிய ரசிமிகளோடும், பிரகாசிக்கும் சுவாலைகளோடும், சோதியின் மகளான நீ, பசுக்களையும் உணவையும் ஏந்தி வா.

9. உஷையே! சோதியின் மகளே! நன்கு பிறந்தவளே! குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளே! நீ உதயமாகவும். எங்களுடைய செயலைத் தாமதப்படுத்தாதே. சூரியன் தன்னுடைய கிரணத்தால் உன்னைத் திருடனைத் தண்டிக்கும் அரசனைப் போலும். பகைவனைத் தாழ்த்தும் மன்னனைப் போலும் தாபப்படுத்தாமலிருப்பானாக.

10. உஷையே! நன்கு பிறந்தவளே! குதிரைகளுக்காகப் போற்றப்படுபவளே! நாங்கள் கேட்கும் எதையும், கேட்காமலே அதிகமாகவும் அளிக்கும் ஆற்றல் உன்னிடமுண்டு. வழிபடுபவர்களின் மீது உதயமாகும் நீ, அவர்களிடம் எப்பொழுதும் கோபமாகாய். 4,812

## 80. உஷை

### 434. ஸத்திய சிரவஸன்-ஆத்திரேயன்

1. ஒளித்தேர் உள்ளவளும், பெரியவளும், குதவதியும், ருதத்தோடிருப்பவளும், சிகப்பு நிறமுள்ளவளும், பிரகாசிப்பவளும், சூரியனை நடத்துபவளும், தேவியுமான உஷையை அறிஞர்கள் துதிகளோடு போற்றுகிறார்கள்.

2. அழகிய உஷை மனிதனை எழுப்புகிறாள். நல்ல வழிகளைப் புலப்படுத்துகிறாள். சூரியனுக்கு முன்னே



செல்லுகிறாள்-பெரிய தேரிலே வருகிறாள். பெரியவளான அவள் எங்கும் பரவுகிறாள். தினங்களின் துவக்கத்திலே சோதியைத் தருகிறாள்.

3. அவள் தன் தேரிலே சிகப்புக் காளைகளை இணைத்து, களைப்பாகாமல் செல்வங்களை நித்தியப்படுத்துகிறாள். தேவியும் பலரால் போற்றப்படுபவளும், பலரால் விரும்பப்படுபவளுமான அவள் நலத்துக்குச் செல்லும் வழிகளைப் புலப்படுத்திப் பிரகாசிக்கிறாள்.

4. தன் அங்கத்தைப் பூர்வத்திலிருந்து புலப்படுத்துபவளும், இரு உலகங்களிலும் பரவியிருப்பவளுமான அவள், மிக்க வெண்மையாயிருக்கிறாள். அவள் சூரியனுடைய வழியையறிபவள் போல அவனுடைய வழியில் செல்லுகிறாள். அவள் திசைகளைத் துன்புறுத்தாள். அவற்றை ஒளிப்படுத்துகிறாள்.

5. அவள் தன் அங்கங்களைப் புலப்படுத்தும் நல்லாடைகளை அணிந்த வனிதையைப் போலும், ஸ்னானஞ் செய்து அழகாய் எழும் மங்கையைப் போலும் நம்முடைய கண்களின் முன்னே நிற்கிறாள். உஷை எதிர்ப்புகளான தமங்களை நீக்கி, சோதியின் புதல்வியான அவள் காந்தியோடு வருகிறாள்.

6. சோதியின் மகள், கற்புள்ள மங்கையைப் போல் மானிடர்களின் முன்னே தன் அங்கத்தை வணங்கத் தாழ்த்திக் கொள்கிறாள். வழிபடுபவனுக்கு உத்தமச் செல்வங்களை அளிக்கும் அவள் பூர்வத்தில் போல் மீண்டும், இப்பொழுதும் சோதியைத் தருகிறாள். 4,818

## 81. ஸவிதா

### 435. சியாவாசுவன்-ஆத்திரேயன்

1. அறிஞர்கள், ஸவிதாவோடு தங்கள் மனங்களை இணைக்கிறார்கள். அவர்கள், அறிஞனும், பெரியவனும், போற்றத் தகுந்தவனுமான ஸவிதாவைப் போற்ற யக்ஞங்களை நடத்துகிறார்கள். ஸவிதா, ஹோதாக்களின்

கடமைகளை அறிந்து அவர்களைச் செலுத்துகிறான். தேவ ஸவிதாவினுடைய தோத்திரம் மகத்தாயிருக்கிறது.

2. கவி எல்லா ரூபங்களையும் தன்னில் ஏந்துகிறான். அவன் மனிதர்களுக்கும் கால்நடைகளுக்கும் நலத்தைப் பிறப்பிக்கிறான். துதியாருகனான அவன் சுவர்க்கத்தைப் புலப்படுத்துகிறான். உஷையின் உதயத்தை அனுசரித்துப் பிரகாசிக்கிறான்.

3. தேவனான ஸவிதா தோன்றிய பிறகு மற்ற தேவர்கள் ஆற்றலால் மகிமையைப் பெறச் செல்லுகிறார்கள். தன் மகிமையால் புவியின் உலகங்களை அளந்த தேவ ஸவிதா பிரகாசிக்கிறான்.

4. ஸவிதாவே! நீ ஒளியின் மூன்று உலகங்களுக்குச் செல்லுகிறாய். நீ சூரியனுடைய ரசிமிகளோடு சேர்கிறாய். இரவின் இரு பக்கங்களிலும்—காலையிலும் மாலையிலும்—இரவைச் சூழ்கிறாய். தேவனே! நீ உன்னுடைய தருமங்களால்—தாரகச் செயல்களால்—மித்திரனாகிறாய்.

5. நீ ஒருவனே சீவர்களுடைய செயல்களையெல்லாம் நடத்துகிறாய். தேவனே! நீ உன்னுடைய சலனங்களால் பூஷாவாகிறாய். இவ்வுலகத்துக்கெல்லாம் நீயே அரசனாயிருக்கிறாய். ஸவிதாவே! சியாவாசுவன் உனக்கு ஸ்தோமத்தைக் கூறுகிறான். 4,323

## 82. ஸவிதா

### 436. சியாவாசுவன்—ஆத்திரேயன்

1. நாங்கள் போகத்துக்குரிய செல்வத்தைத் தேவ ஸவிதாவினிடம் வேண்டுகிறோம். நாங்கள் பகனிடமிருந்து பகைவர்களை யழிப்பதும் அனைத்தையும் தாங்குவதும் மேன்மையுடனிருப்பதுமான செல்வத்தைப் பெறுவோமாக.

2. இந்த ஸவிதாவின் சுயப் புகழுள்ளதும் அன்பு நிறைந்ததுமான சுயராஜ்யத்தை எவனும் பங்கப்படுத்தான்



3. பகனான இந்த ஸவிதா அவியளிப்பவனான எனக்கு இரத்தினங்களைத் தருகிறான். நாங்கள் விரும்பத் தகுந்த செல்வத்தை அவனிடம் வேண்டுகிறோம்.

4. தேவனான ஸவிதாவே! இன்று எங்களுக்குப் பிரஜைகளோடு செல்வத்தை யளிக்கவும். தீக்கனவை - துன்பத்தைத் தரும் வறுமையைத் தூரத்திலே விலக்கவும்

5. தேவ ஸவிதாவே! எங்களிடமிருந்து எல்லாத் தீமைகளையும் நீக்கவும். நன்மையாயிருப்பதை எங்களுக்களிக்கவும். 4,328

6. நாங்கள் தேவ ஸவிதாவின் செல்வாக்கால் அதிதியின் முன்னே குற்றமற்றவர்களாகி விரும்பத் தகுந்த செல்வங்களைப் பெறுவோமாக.

7. நாங்கள், நல்லவர்களைப் பாலிப்பவனும், சத்தியத்தைப் பற்றுபவனும், விசுவே தேவனுமான ஸவிதாவை இன்று சூக்தங்களோடு போற்றுகிறோம்.

8 எப்பொழுதும் விழித்திருப்பவனும், இருவரான இரவையும் பகலையும் மூந்துபவனும், தியானமுள்ளவனுமான தேவனே, ஸவிதாவா யிருக்கிறான்.

9. இந்த சீவர்களுக்கெல்லாம் தன் புகழைப் புலப்படுத்தும் ஸவிதா, அவர்களுக்கு-இச்சீவர்களுக்கு-உயிரையளிக்கிறான். 4,332

## 83. பர்ஜன்யன்

### 437. பௌமன்-அத்திரி

1. தோன்றும் மகத்தான, வலியனான பர்ஜன்யனைப் போற்றவும். இந்தத் துதிகளால் அவனைப் பாடவும். விருஷபனும், துரிதமாயளிப்பவனும், கர்ச்சிப்பவனும், ஓஷதிகளை மழையால் சினைப்பிப்பவனுமான பர்ஜன்யனை வணக்கத்தோடு புகழவும்.

2. அவன் மரங்களைச் சாய்க்கிறான். அவன் அரக்கர்களை அழிக்கிறான். அவன் தன் கொடுமையான ஆயு

நத்தால் உலகத்தையெல்லாம் கலக்குகிறான். பர்ஜன்யன் பேரொலியோடு தீயோனைக் கொல்லும் போது, பாவஞ் செய்யாதவனும் மழையளிப்பவனிடமிருந்து பறந்தோடுகிறான்.

3. தன் கசையால் குதிரைகளை ஊக்கப்படுத்தி, போரின் தூதனைப் புலப்படுத்தும் தேரோட்டியைப் போல் பர்ஜன்யன் மேகங்களை முன்னே செலுத்தி, மழையின் தூதர்களை வெளிப்படுத்துகிறான். தூரத்திலிருந்தே தோன்றும் சிங்கத்தைப் போல் கர்ச்சிக்கும் மேகத்தின் கர்ச்சனை, பர்ஜன்யன், வானை மழை பெய்யும் மேகங்களால் நிரப்புகிறான் என்பதை அறிவிக்கிறது.

4. காற்றுக்கள் குமுறுகின்றன. மின்னல்கள் மின்னுகின்றன. ஓஷதிகள் எழுகின்றன. வானம் பொழிகிறது. பர்ஜன்யன் சலத்தால் புவியை வளப்படுத்தும் போது புவி தகுந்த திறத்தைப் பெறுகிறது—உணவை விளைவிக்கிறது.

5. பர்ஜன்யனே! உன்னுடைய விரதத்தால் புவி வணங்குகிறது. உன்னுடைய விரதத்தால் குளம்புள்ள பிராணிகள் செழிக்கின்றன. உன்னுடைய விரதத்தால் ஓஷதிகள் எல்லா வடிவங்களையும் ஏந்துகின்றன. பர்ஜன்யனே! எங்களுக்கு மகத்தான சுகத்தை யளிக்கவும். 4,337

6. மருத்துக்களே! எங்களுக்கு சோதியிலிருந்து மழையைச் செலுத்துங்கள். வர்ஷிக்கும் குதிரையின் தாரைகள் இறங்குகின்றன. பர்ஜன்யனே! இந்த இடிக்கும் மேகத்தோடு சலத்தைப் பொழிந்து கொண்டு கீழே வா. மழையைச் செலுத்தும் நீ, எங்கள் பாலகனாயிருக்கிறாய்.

7. புவியை நோக்கி கர்ச்சிக்கவும்; கோஷிக்கவும்; ஓஷதிகளைச் சினைப்பிக்கவும்; சலம் ஏந்தும் தேரோடும் வானிலே சுற்றவும். மிக்கப் பந்தப்பட்டிருப்பதும், அதோமுகமாயுள்ளதும், சர்ம மயமுமான கோசத்தை



-மேகத்தை-இயக்கிப் பொழியத் திறக்கவும். மேடு பள்ளங்கள் ஸமமாகுக.

8. மகத்தான மழையின் உறையை மேலே உயர்த்தவும். மழையைப் பொழியவும். நதிகள் தடைபடாமல் கீழ்த்திசையை நோக்கிப் பாய்க. சோதியையும் புவியையும் சலத்தால் நனைக்கவும். பசுக்கள் பருகுவதற்குரிய பானம் தோன்றுக.

9. பர்ஜன்யனே! நீ இடித்து கர்ச்சனை செய்து துட்டர்களை—மேகங்களை-கொல்லுங்கால் இவ்வனைத்தும், புவியின் மீதுள்ள அனைவரும் இன்புறுகிறார்கள்.

10. நீ வர்ஷித்தாய். இப்பொழுது நீ மழையை நிறுத்தவும். நீ பாலைவனங்களைக் கடக்கத் தகுந்தவையாய்ச் செய்தாய். நீ மானிடனின் போகத்துக்காக ஓஷதிகளை விளைவித்தாய். நீ பிரஜைகளிடமிருந்து தோத்திரத்தைப் பெற்றாய். 4,342

## 84. பூமி

### 438. பௌமன்—அத்திரி

1. புவியே! புவிக்கு, வானம், நிலம் என இருவடிவங்கள். நீ உண்மையாகவே மலைகளைப் பிளக்கும் கருவியை ஏந்துகிறாய். சலமுள்ளவளும் பெரியவளுமான நீ, உன்னுடைய மகிமையால், சலத்தால் நிலத்தை இன்புறுத்துகிறாய்.

2. பலவிதங்களாய்ச் சலனமாகும் புவியே! போற்றுபவர்கள் உன்னைப் பாக்களால் போற்றுகிறார்கள். சலனமுள்ளவளான நீ, பருமனாயிருக்கும் மேகத்தை முழங்கும் குதிரையைப் போல் உதைக்கிறாய்.

3. மின்னும் வானிலிருந்து உன்னுடைய மேகம் பெய்யுங்கால் நீ நிலத்திலே வனஸ்பதிகளை உறுதிப்படுத்தி ஏந்துகிறாய். 4,345

## 85. வருணன்

### 439. பௌமன்-அத்திரி

1. பசுவின் சருமத்தைப் பரத்தும் வதைப்பவனைப் போல் சூரியனுக்குப் பாயாக வானை விரித்தவனும், நன்ருய் அரசு புரிபவனும், புகழுள்ளவனுமான வருணனுக்கு மகத்தாயும், ஆழமாயும், விரும்பத் தகுந்ததாயுமுள்ள தோத்திரத்தைக் கூறவும்.

2. அவன் வனங்களின் உச்சிகளின் மீது வானைப் பரத்தினன். அவன் குதிரைகளுக்குப் பலத்தையும், பசுக்களுக்குப் பாலையும், இருதயத்துக்கு சங்கற்பத்தையு-மளித்தான். அவன் சலங்களிலே அக்கினியையும், சோதியிலே சூரியனையும், மலையிலே ஸோமத்தையும் ஸ்தாபித்தான்.

3. வருணன், சோதிக்காகவும், புவிக்காகவும், வானுக்காகவும், அதோமுகமுள்ள மேகத்தின் சலத்தை விடுவித்தான். அதனுல் அவன் உலகத்துக்கெல்லாம் அரசனுயிருக்கிருன். அவன் யவத்தை நனைக்கும் மழையைப் போல் புவியைச் சலப்படுத்துகிருன்.

4. வருணன் மேகத்தின் பாலை அளிக்க விரும்புங்கால், புவியையும், வானையும், சோதியையும் ஈரப்படுத்துகிருன். அப்பால் மலைகள் தங்கள் சிகரங்களிலே மேகத்தை அணிந்து கொள்கிருர்கள். பிறகு பலத்தை விரும்பும் வீரர்களான மருத்துக்கள் மேகத்தைத்தளர்த்துகிருர்கள்.

5. நான் வானிலே நின்று சூரியனுல அளவுகோலால், புவியையளப்பவனுமான வருணனுடைய இந்த மகத்தான மாயையைக் கூறுகிறேன். 4,350

6. மிக்கக் கவித்வமுள்ள தேவனுடைய இந்த மகத்தான மாயையை எவனும் தடை செய்யவில்லை. சுத்த சலத்தோடு செல்லும் ஒரு கடலைக் கூட நீரால் நிரப்ப இயலவில்லை.



7. வருணனே! நாங்கள் ஏதேனும் குற்றத்தை நன்றிசெய்தவனுக்கோ, நண்பனுக்கோ, தோழனுக்கோ, சகோதரனுக்கோ அருகில் அடுத்தவனுக்கோ, அல்லது ஊமையனுக்கோ செய்திருந்தால் அந்தக் குற்றத்தை-பாவத்தை எங்களிடமிருந்து நீக்கவும்.

8. ஆட்டத்தில் ஏமாற்றும் சூதர்களைப் போல், தெரிந்தோ தெரியாமலோ நாங்கள் பாவங்களைச் செய்தால், தேவனுன வருணனே! உனக்குப் பிரியர்களானு எங்களை அவிழ்க்கப்பட்ட பந்தங்களிலிருந்து விடுவியுங்கள். 4,353

## 86. இந்திராக்கினிகள்

### 440. பௌமன்-அத்திரி

1. இந்திராக்கினிகளே! உங்களால் பாலிக்கப்படும் மனிதன், பகைவர்களின் கெட்டியாய்க் காக்கப்படும் செல்வங்களை, விபக்ஷகர்களின் மொழிகளை மறுத்து நிராகரிக்கும் திரிதனைப்போல் சிதைக்கிருன்.

2. நாங்கள், போர்களிலே தடைபடாதவர்களும், சமர்களிலே புகழ் பெற்றவர்களும், பஞ்ச சனங்களைப் பாலிப்பவர்களுமான இந்திராக்கினிகளை அழைக்கிருேம்.

3. அவர்களுடைய ஆற்றல் சத்துருக்களை ஜயிப்பதாயிருக்கிறது. பசுக்களை மீட்பதற்கும் விருத்திரனைப் புடைப்பதற்கும் அவர்கள் ஒரே தேரிலே சேர்ந்து செல்லுங்கால் மகவானுடைய கைகளிலே வெட்டும் மின்னலாயுதம் விளங்குகிறது.

4. நாங்கள், சங்கமச் செல்வத்தின் தலைவர்களும் அறிஞர்களும் போற்றத் தகுந்தவர்களுமான இந்திராக்கினிகளாம் உங்களை, போர்களிலே உங்கள் தேர்களைச் செலுத்த அழைக்கிருேம்.

5. நான், தினந்தோறும் மனிதர்களைப் போல் வளர்பவர்களும், ஆதித்தியர்களைப் போல் போற்றத்

தருந்தவர்களும், தடைபடாத தேவர்களுமான உங்களை, குதிரைகள் அடையப் போற்றுகிறேன்.

6. சப்திக்கும் கற்களால் பிழியப்படும் ஸோமரஸத்தைப் போல், வலிமை தரும் அவி அளிக்கப்படுகிறது. அறிஞர்களுக்கு மகத்தான உணவை யளியுங்கள். உங்களைப் போற்றுபவர்களுக்குச் செல்வத்தை யளியுங்கள். போற்றுபவர்களுக்கு உணவை யளியுங்கள். 4,359

## 87. மருத்துக்கள்

### 441. எவயாமருதன் – ஆத்திரேயன்

1. எவயாமருதனுடைய மொழியில் தோன்றிய பாக்கள் மருத்துக்களோடுள்ள விஷ்ணுவான-இந்திரனை-உன்னிடம் சேர்க. அவை, வலியர்களும, துதியாருகர்களும், நல்லாபரணங்களை அணிந்தவர்களும், பலிஷ்டர்களும், துதிகளை விரும்புபவர்களும், மேகத்தைக் கலைப்பவர்களும், துரிதமாய்ச் செல்பவர்களுமான மருத்துக்களின் படையினிடஞ் செல்க.

2. எவயாமருதன், அறிவோடு தாமாகவே துரிதமாகத் தோன்றுபவர்களும் பெரிய இந்திரனோடு புலப்படுபவர்களுமான மருத்துக்களைப் போற்றுகிறான். மருத்துக்களே! உங்களுடைய வினைத்திட்பத்தை எவனாலும் எதிர்க்க இயலாது. மருத்துக்களே! மிக்க அளிக்கும் தன்மை உங்களிடமிருக்கிறது. நீங்கள் மலைகளைப் போல் அசைக்கப்படாதவர்களா யிருக்கிறீர்கள்.

3. பிரகாசிப்பவர்களும், களிப்புள்ளவர்களும், பரந்த சோதியிலிருந்து வருபவர்களுமான மருத்துக்களை எவயாமருதன் போற்றுகிறான். அவர்கள் அவனுடைய மொழிகளைக் கேட்கிறார்கள். அவர்கள் வசிக்கும் இடத்திலே அவர்களை எவனாலும் அசைக்க இயலாது. தாமே இயங்கும் அனல்களைப் போலுள்ள அவர்கள் நதிகளை இயக்குகிறார்கள்.



4. பரந்து பரவும் மருத்துக்களின் படை, பரந்த பொதுவான வசிக்கும் இடத்திலிருந்து புறப்படுகிறது. அங்கு அவர்களுடைய தேர், தாமாகவே துலங்கும் துரித குதிரைகளால் சேர்க்கப்படுகிறது. அக்குதிரைகள் வலியவை; பரஸ்பரம் போட்டியுள்ளவை. இன்ப மளிப்பவை. அவை முந்துகின்றன. அங்கே அப்பொழுது எவயாமருதன் போற்றுகிறான்.

5. மருத்துக்களே! உங்கள் வருகையின் முழக்கம் உக்கிரமானது. மழையை அறிவிப்பது. ஒளியைத் தருவது; பரவுவது; வலியது; எவயாமருதனைப் பயமுறுத்துகிறது. அதனால், தாமே துலங்குபவர்களும், திரக் கதிர்கள் உள்ளவர்களும், பொன்னாபரணங்கள் அணிந்தவர்களும், சுவாதீனப் படைகள் உள்ளவர்களும், உணவை யளிப்பவர்களுமான நீங்கள், பகைவர்களைத் தாழ்த்தி உங்களுடைய செயல்களை நிறைவேற்றுகிறீர்கள். 4,364

6. மிக்கப் பலமுள்ளவர்களே! உங்களுடைய அபரிமித மகிமையும், பிரகாசமுள்ள பலமும் எவயாமருதனைப் பாலிக்க. துன்பப்படுங்கால் நீங்கள் பிரத்யக்ஷமாய்ப் பாலிப்பவர்கள். எரியும் அனல்களைப் போலுள்ள நீங்கள் நிந்திப்பவர்களிடமிருந்து எங்களைப் பாலியுங்கள்.

7. பிரகாசிக்கும் அனல்களைப் போலுள்ளவர்களும், யக்ஞாருகர்களுமான ருத்திரர்கள் எவயாமருதனைப் பாலிப்பார்களாக. அவர்களுடைய புவிக்குரிய இருப்பிடம் அவர்களால் புகழுடனாகிறது. அவர்களிடம் எக்குற்றமும் இல்லை. அவர்களுடைய சலனங்களிலே மிக்க ஊக்கமும் உற்சாகமும் தோன்றுகின்றன.

8. மருத்துக்களே! நட்புத் தன்மையோடு எங்களிடம் வாருங்கள். உங்களைத் துதிக்கும் எவயாமருதனின் அழைப்புக்குச் செவி கொடுங்கள். மகத்தான விஷ்ணுவோடு ஒரு மனமுள்ள நீங்கள் பகைவர்களை விலக்கும் வீரர்களைப் போல் எங்களுடைய இரகசியச் சத்துருக்களை விலக்குங்கள்.

9. துதியாருகர்களான மருத்துக்களே! எங்களுடைய யக்ஞத்தைச் செல்வப்படுத்த வாருங்கள். அரக்கர்களால் தடைபடாமல் எவயாமருதனுடைய அழைப்புக்குச் செவி கொடுங்கள். வானிலே உயர்ந்த மலைகளைப் போலிருக்கும் பேரறிஞர்களான நீங்கள் எப்பொழுதும் நிந்திப்பவனைத் தடைப்படுத்துங்கள். 4,368

மண்டலம் 5.

ஸூக்தங்கள் 87. இருக்குக்கள் 727.

ஐந்தாவது மண்டலம் முற்றிற்று.

# ஆறுவது மண்டலம்

## 1. அக்கினி

### 442. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. அக்கினியே! நீ தேவர்களின் முதல்வன். உன்னிடம் அவர்களுடைய மனங்கள் பந்தமாகின்றன. பகையழிப்பவனே! நீ இந்த யக்ஞத்திலே ஹோதாவாயிருக்கிறாய். நீ எல்லாப் பகைவர்களின் ஆற்றலை ஜயிப்பதும் ஜயிக்கப்படாததுமான பலத்தை எங்களுக்களிக்கவும்.

2. யஜிப்பவனும், ஹோதாவுமான நீ அவியை விரும்பிப் போற்றப்பட்டு இப்பொழுது இளையின் பதத்திலே உட்காரவும். தேவ நாட்டமுள்ள மனிதர்கள், மகத்தான செல்வத்தை எதிர்பார்த்து, தேவர்களின் முதல்வனான உன்னிடமே வருகிறார்கள்.

3. செல்வத்துக்காக ஊக்கத்தோடு போற்றுபவர்கள், பிரகாசிப்பவனும், அழகுள்ளவனும், மகானும், வபையால் ஊட்டப்படுபவனும், தினந்தோறும் விளங்குபவனும், வானின் வழியால் பல வசுக்களோடு செல்பவனுமான அக்கினியாம் உன்னைப் பற்றுகிறார்கள்.

4. உணவை விரும்பும் மனிதர்கள், தேவர்களுடைய இடத்துக்குச் செல்லும் போது மிகுந்த உணவைத் தடைபடாமல் பெறுகிறார்கள். உன் மங்கள தரிசனத்திலே இன்புறுகிறார்கள். யக்ஞாருக நாமங்களைக் கூறுகிறார்கள்.

5. மனிதர்கள் உன்னைப் புவியிலே மேம்படுத்துகிறார்கள். மானிடர்களுக்கு உன்னால் அளிக்கப்படும் இருவிதச் செல்வங்களுக்காக, பசுவுக்காக, பொன்னுக்காக உன்னை மேம்படுத்துகிறார்கள். நீ, தீமையிலிருந்து அகற்றுவதால் தாரகன் எனப் போற்றத் தகுந்தவன். நீ மானிடர்களுக்கு எப்பொழுதும் தாயும் தந்தையுமாகிறாய். 4,373

6. துதியாருகனும், அன்புள்ளவனும், பிரசைகளின் நடுவே ஹோதாவாயிருப்பவனும், இன்புறுத்துபவனும், யஜிப்பவனுமான அக்கினி, அமர்ந்திருக்கிறன். நாங்கள் எங்கள் மனைகளிலே, சொலிப்பிக்கப்பட்ட உன்னிடம் துதிகளோடும் வணங்கும் முழந்தாள்களோடும் வருவோமாக.

7. அறிஞர்களும், சுகத்தை விரும்புபவர்களும், தேவ நாட்டமுள்ளவர்களுமான நாங்கள், துதியாருகனுன அக்கினியாம் உன்னைப் போற்றுகிறோம். நீ மிக்க ஒளியோடு பிரகாசித்து, மானிடர்களை சோதிக்குச் செலுத்தவும்.

8. நாங்கள், நித்தியமாயிருக்கும் மனிதர்களின் சனத்தலைவனும், கவியும், பகைவர்களை யழிப்பவனும், மனிதர்களுக்குப் பொழிபவனும், சலிப்பவனும், உணவை யளிப்பவனும், சுத்தப்படுத்துபவனும், பிரகாசிப்பவனும், செல்வங்களுக்காக ஏத்தப்படுபவனுமான அக்கினியைப் போற்றுகிறோம்.

9. அக்கினியே! உன்னை யஜித்து, துதித்து, ஸமித்தோடு உனக்கு அவிகளை அளித்து வணக்கங்களோடு ஆஹுதிகளைத் தருபவன், உன்னுல் பாலனமாகி விரும்பத் தகுந்த எல்லா செல்வத்தையுமடைகிறன்.

10. மகத்தான அக்கினியே! நாங்கள் உனக்கு வணக்கங்களோடும், ஸமித்தோடும், அவிகளோடும் மேலான துதியையளிக்கிறோம். நாங்கள் வேதியிலே ஆற்றலின் மகனுன உன்னை மொழிகளாலும் பாசுரங்களாலும் போற்றுகிறோம். நாங்கள் உன்னுடைய மங்களமான சுமதியைப் பெறும் எத்தனங்களிலே ஜயத்தை அடைவோமாக.

11. அக்கினியே! புவியையும் விண்ணையும் ஒளியால் நிறைத்தவனும், தாரகனும், துதியால் துதிக்கத் தகுந்தவனுமான நீ, மிகுந்த உணவையும் திரமான செல்வங்களையுமளிக்கவும்.



12. பகுவே! எங்களுக்கு ஆட்களோடு சதா செல்வத்தையளிக்கவும். எங்கள் புதல்வர்களுக்கும் பேரர்களுக்கும் மிகுந்த பசுக்களை யளிக்கவும். குற்றமற்றிருப்பதும், எங்கள் விருப்பங்களைத் திருப்தி செய்வதுமான உணவு எங்களுக்குத் தாராளமாய்த் தோன்றுக. எங்களை இன்புறுத்த உத்தமப் புகழும் எங்களுக்குத் தோன்றுக.

13. அரசனுன அக்கினியே! நான் செல்வப்பட உன்னிடமிருந்து, பற்பல, பலவிதமான செல்வங்களை அடைவேனுக. பலரால் போற்றப்படும் அக்கினியே! உன்னைத் துதிப்பவனுக்கு உன்னிடம் அரசும் மிகுந்த செல்வங்களும் இருக்கின்றன. 4,381

## 2. அக்கினி

### 443. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. அக்கினியே! ஸமிந்தனத்தோடு அளிக்கப்படும் அவியின் மீது நீ மித்திரனைப் போல் இறங்குகிறுய். வசுவே! அனைத்தையுங் காண்பவனே! நீ எங்கள் உணவோடும் புட்டியோடும் செழிப்பிக்கிறுய்.

2. மனிதர்கள் உன்னை யக்ஞங்களாலும், மொழிகளாலும் ஏத்துகிறுர்கள். தீமையில்லாதவனும், மழையைச் செலுத்துபவனும், உலகத்தைக் காண்பவனுமான சூரியன் உன்னிடம் வருகிறன்.

3. மநு வம்சத்தில் வந்த மனிதன் சுகத்தை விரும்பி யக்ஞத்துக்கு உன்னை அழைக்கும் போது வழிபடும் தலைவர்கள் ஒருமனமுள்ளவர்களாகி யக்ஞத்தின் கொடியான உன்னை ஒளிப்படுத்துகிறுர்கள்

4. உத்தம தானமுள்ள உன்னை யக்ஞத்தால் போற்றும் மனிதன் செழிப்பானுக. அவன் பிரகாசமாயிருக்கும் உன்னுடைய பாலனத்தால் துவேஷிகளைத் தீமைகளைப் போல் கடத்துகிறன்.

5. அக்கினியே! ஸமித்தால் உன் சுவாலையை ஒளிப்படுத்தி, உனக்களிப்பவன் நூறு வருடங்கள் வசிக்கப் பல கிளைகளோடு மனையைத் தாங்குகிறான். 4,886

6. பிரகாசமாயிருக்கும் உன்னுடைய நிர்மலமான புகை வானெங்கும் பரவுகிறது. மேகங்களிலே பக்குவமாகிறது. சுத்தப்படுத்துபவனான நீ, துதியால் போற்றப்பட்டவுடன் சூரியனைப் போல் ஒளியோடு பிரகாசிக்கிறாய்.

7. நீ இப்பொழுது சனங்களின் நடுவே போற்றப்படவேண்டும். ஏனெனில் நீ எங்களுடைய மிக்கப் பிரியமுள்ள அதிதியாயிருக்கிறாய். நீ புரத்திலே போற்றத் தகுந்த பெரியாரைப் போல் இருக்கிறாய். நீ புதல்வனைப் போல் பாலிக்கத் தகுந்தவனாயிருக்கிறாய்.

8. அக்கினியே! நீ அரணியிலே மந்தனத்தால் புலப்படுகிறாய். நீ சவாரியை ஏந்தும் குதிரையைப் போல் அவியை ஏந்துகிறாய். நீ எங்கும் பரவும் காற்றைப் போலிருக்கிறாய். நீ மனையாகிறாய். நீ உணவாகிறாய் நீ புதியதாய்ப் பிறந்த பாலனைப் போலிருக்கிறாய். நீ இங்குமங்கும் செல்லும் குதிரையைப் போலிருக்கிறாய்.

9. அக்கினியே! மூப்பில்லாதவனே! பிரகாசமாயிருக்கும் உன்னுடைய சுவாலைகள் வனங்களைப் புசிக்கும்போது நீ அசைப்பதற்கு முடியாத மரங்களை, புற்றரையை மேயும் பசுவைப் போல் புசிக்கிறாய்.

10. நீ யக்ஞஞ்செய்ய விரும்பும் மனிதர்களுடைய மனையிலே ஹோதாவாக நுழைகிறாய். சனங்களின் தலைவனே! நீ அவர்களைச் செல்வப்படுத்தவும். அங்கிரஸனே! அவியை விரும்பவும்.

11. தேவனான அக்கினியே! நண்பனைப் போல் போற்றப்படுபவனும், சோதியிலும் புவியிலும் வசிப்பவனுமான நீ, எங்களுடைய தோத்திரத்தைத் தேவர்களிடம் கூறவும். துதிக்கும் மனிதர்களை மனைக்குரிய க்ஷேமத்துக்குச் செலுத்தவும். நாங்கள் எங்களுடைய



சத்துருக்களையும், தீமைகளையும், துன்பங்களையும் கடப்போமாக. நாங்கள் உன்னுடைய பாலனத்தால் அவற்றை ஜயிப்போமாக. 4,892

## 3. அக்கினி

### 444. பரத்வாஜன் - பிரகஸ்பதியின் புதல்வன்

1. தேவனே! அக்கினியே! ருதபாலகனும் ருதத்துக்காகத் தோன்றியவனும், தேவனான உன்னை விரும்புபவனுமான மனிதன் பரந்த சோதியைப் பற்றுகிறான். மித்திரனோடும் வருணனோடும் ஒருமனமுள்ள நீ, அவனை உன்னுடைய கவசப்படையால் பாவத்திலிருந்து பாலிக்கிறாய்.

2. விரும்பத் தகுந்த செல்வமுள்ள அக்கினிக்கு அவிகளை அளித்து எல்லா யக்ஞங்களாலும் யஜித்து யக்ஞச் செயல்களால் சாந்தமடைபவன் உத்தம ஸந்தானமில்லாமலிரான். அவனிடம் தீமையணுகாது. கர்வம் தோன்றாது.

3. சூரியனைப் போல் குற்றமற்ற தோற்றமுள்ள உன்னுடைய பயங்கரமான சுவாலைகள் இரவிலே கதறிச் செல்லும் பசுக்களைப் போல் எங்கும் பரவுகின்றன. பிறகு அனைவரின் தஞ்சனும், வனத்தில் பிறப்பிக்கப்பட்டவனுமான இந்த அக்கினி சில இடத்திலே-மலையின் உச்சியிலே-அழகாயிருக்கிறான்.

4. அவனுடைய வழி கூர்மையாயிருக்கிறது. உக்கிரமாயிருக்கிறது. அவனுடைய வடிவம் மிக்கப் பிரகாசமாய் விளங்குகிறது. அவன் தன் வாயால் குதிரையைப் போல் தீனியைப் புசிக்கிறான். அவன் தன் நாக்கைக் கோடாரியைப் போல் நீட்டி, அவன் உலோகத்தை உருக்கும் கொல்லனைப் போல் மரத்தை உருக்கி, கரித்து, பற்பப்படுத்துகிறான்.

5. அவன் சரங்களைச் செலுத்தும் வில்லாளனைப் போல் சுவாலைகளைச் செலுத்துகிறான். அவன் இரும்பாயுதங்களைத் தீட்டும் வீரனைப் போல் தன் சுவாலையைச்

செலுத்திச் சுடரைத் தீட்டுகிறான். மரத்திலே தங்கியிருக்கும் சுலப அடியுள்ள பறவையைப் போலிருக்கும் அவன் பலவிதமாய்ச் சென்று இரவைக் கழிக்கிறான். 4,397.

6. போற்றத் தகுந்த சூரியனைப் போலுள்ள அவன் பிரகாசிக்கும் ரசிமிகளை அணிந்துகொள்கிறான். அவன் நட்புத் தன்மையுள்ள ஒளியைப் படர்த்தி, தன் சுவாலையோடு படபடக்கிறான். இரவிலே பிரகாசமுள்ள அவன் பகலிலே மனிதர்களைச் செலுத்துகிறான். அவன் அமுதன்; அவன் காந்தன்; பகலிலே மனிதர்களைச் செலுத்துகிறான்-ஒளிப்படுத்துகிறான்.

7. சூரியனுடைய ரசிமிகளைப் போல் அவன் கதிர்களைப் பரத்துங்கால் அவன் எரியும் ஓஷதிகளின் நடுவே முழங்குகிறான். அவன் காந்தியோடு துரித ஒளி வழியால் பகைவர்களைச் சாய்த்து நல்ல மனைவிகளான சோதியையும் புவியையும் செல்வத்தால் நிரப்ப இங்கு வருகிறான்.

8. தாமே இணைந்து நன்கு செலுத்தப்படும் குதிரைகளைப் போல் தன் போற்றத் தகுந்த சுவாலைகளோடு மின்னலைப் போல் விளங்குபவனும், மருத்துக்களின் படையைப் போல் அனைத்தையும் வாட்டுபவனுமான அக்கினி பரந்து பிரகாசிக்கும் சூரியனைப் போல் துரிதனாகிறான்-ஒளியுடன் விளங்குகிறான். 4,400.

## 4. அக்கினி

### 445. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. பலத்தின் மகனே! தேவர்களின் ஹோதாவே! நீ மநுவினுடைய யக்ஞத்திலே, தேவர்களை யக்ஞங்களால் யஜித்தது போல் அக்கினியே! விரும்பும் மனமுள்ள நீ விருப்பமுள்ள தேவர்களை எங்களுக்காக உனக்குச் சமமானவர்கள் என எண்ணி யஜிக்கவும்.

2. தினத்தை ஒளிப்படுத்துபவனைப் போல் பிரகாசமாயிருப்பவனும், அனைவராலும் அறியப்படுபவனுமான



அந்த அக்கினி, போற்றத் தகுந்த உணவை எங்களுக்களிப்பானாக. அனைவர்க்கும் உயிரை யளிப்பவனும், அமிருதனும், அதிதியும், ஜாதவேதஸனும் உதயத்தில் மனிதர்களின் நடுவே எழுபவனுமான அக்கினி அளிப்பானாக.

3. எவனுடைய மகத்தான செயல்களை வழிபடுபவர்கள் இப்பொழுது போற்றுகிறார்களோ, எவன் ஒளியை அணிந்து கொண்டு சூரியனைப் போல் பிரகாசிக்கிறானோ, எவன் மூப்பில்லாமலும், சுத்தப்படுத்துபவனாயுமிருக்கிறானோ, அவன் எல்லாப் பொருள்களையும் ஒளிப்படுத்துகிறான். வியாபகர்களான அரக்கர்களின் பழைய புரங்களை அழிக்கிறான்.

4. அக்கினியே! பலத்தின் மகனே! நீ போற்றப்பட வேண்டும். அவன் யக்ஞ உணவுகளில் அமர்ந்து வழிபடுபவர்களுக்கு அவர்கள் பிறந்ததிலிருந்தே உணவையும் மனையையும் தருகிறான். ஆற்றலைத் தருபவனே! எங்களுக்கு ஆற்றலை அளிக்கவும். நீ எங்களுடைய எதிர்ப்பற்ற மனையிலே வசிக்க அரசனைப் போல் ஜயிக்கவும்.

5. இருளை நீக்கும் காந்தியைக் கூர்ப்பிப்பவனும், அவியைப் புசிப்பவனும், வாயுவைப் போல் அரசனாயிருப்பவனுமான அவன் இரவுகளை வெல்லுகிறான். நாங்கள் உனக்குரிய அவிகளை அளிக்காதவனை ஜயிப்போமாக. குதிரையைப் போல் துரிதனாயுள்ள நீ, எங்களை எதிர்க்கும் பகைவர்களை அழிப்பவனாகவும். 4,405.

6. அக்கினியே! நீ ஒளியுள்ள கதிர்களோடுள்ள கதிரவனைப் போல் சோதியையும் புவியையும் உன் காந்தியால் நிரப்புகிறாய். அற்புதனான அக்கினி, அந்தகாரங்களை ஒளியுடன் சேர்த்து, தன் வழியிலே செல்லும் துதி பாருகனான சூரியனைப் போல் அகற்றுகிறான்.

7. அக்கினியே! நாங்கள் போற்றத் தகுந்த உன்னை போற்றத் தகுந்த பாக்களால் போற்றுகிறோம். எங்களுடைய தோத்திரத்தைக் கேட்கவும். உத்தம யக்ஞத் தலைவர்கள் இந்திரனைப் போல் தேவத் தன்மை யுள்ளவனும், வாயுவைப் போல் வலிமையுள்ளவனுமான உன்னைப் போற்றுகிறார்கள்.

8. அக்கினியே! எங்களைத் துன்பமற்ற வழிகளால் செல்வத்துக்கும் க்ஷேமத்துக்கும் செலுத்தவும். எங்களைப் பாலத்துக்கப்பால் கடத்தவும். உன்னை வழிபடுபவர் களுக்கு உன்னால் அளிக்கப்படும் இன்பங்களை இப் பொழுது துதிக்கும் எனக்குக் கொடுக்கவும். நாங்கள் நூறு வருடங்கள் வாழ்ந்து உத்தம சந்தானத்தோடு மகிழ்ந்திருப்போமாக. 4.408.

## 5. அக்கினி

### 446. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. அக்கினியே! நான் ஆற்றலின் மகனும், தருண னும், குற்றமில்லாதவனும், மிக்க இளைஞனும், பேரறிஞ னும், பலரால் நாடப்படுபவனும், இரக்கமுள்ளவனும், அனைவருக்கும் விருப்பமான செல்வங்களைத் தருபவனு மான உன்னை அழைக்கிறேன்.

2. மிகுந்த சுவாலையுள்ள ஹோதாவே! அக்கினியே! உனக்கு யக்ஞாருகர்கள் இரவும் பகலும் செல்வங்களான அவிகளைச் செலுத்துகிறார்கள். அவர்கள் சுத்தப்படுத் தும் அக்கினியிலே எல்லா நல்ல பொருள்களையும், புவி யின் மீது எல்லா புவனங்களையும் - சீவர்களையும் - ஸ்தா பித்த தேவர்களைப் போல் ஸ்தாபிக்கிறார்கள்.

3. நீ பூர்வத்திலிருந்தே இந்த சனங்களிலே வசிக் கிறாய். உன்னுடைய செயல்கள் அவர்களுக்கு நல்ல செல்வங்களைச் செலுத்துபவையாயிருக்கின்றன. ஜாத வேதஸனே! நீ அப்பொழுதிலிருந்து யக்ஞத்தை நடத்து பவனுக்கு இடைவிடாமல் செல்வத்தையளிக்கிறாய்.



4. உன்னுடைய நண்பர்களைப் பாலிப்பவனும், மிக்கப் பிரகாசிப்பவனும், காந்தியோடு சொலிப்பவனு மான நீ, உன்னுடைய சுயமான அழியாத ஆற்றலுள்ள சுவாலைகளால், மறைந்திருந்து எங்களைத் துன்புறுத்து பவனும் அல்லது எங்களருகிலிருந்து துன்புறுத்த விரும்பு பவனுமான மனிதனைப் பற்பபடுத்தவும்.

5. ஆற்றலின் மகனே! உன்னை யக்ஞத்தாலும், ஸமித்தாலும், துதிகளாலும், தோத்திரங்களாலும் போற்று பவன், அமிருதனே! மனிதர்களிலே பேரறிஞனாயும் செல்வனாயும் சிறந்த சிறப்புற்றவனாயும் விளங்குகிறான்.

6. அக்கினியே! உன்னிடம் கேட்கப்படுவதை நீ துரிதமாயளிக்கவும். பலமுள்ள நீ, உன் பலத்தால் எங் களது பகைவர்களை நாசப்படுத்தவும். காந்தியால் பூசப் படும் நீ, துதிகளால் உன்னைப் போற்றும் வழிபடுபவனு டைய முழக்கத்தால் இன்பமாகவும்

7. அக்கினியே! நாங்கள் உன்னுடைய பாலனத் தால் விரும்புவதைப் பெறுவோமாக. செல்வமளிப் பவனே! நாங்கள் உன்னிடமிருந்து செல்வங்களையும் சந்ததிகளையும் பெறுவோமாக. 4.415

## 6. அக்கினி

### 447. பரத்வாஜன் – பிரகஸ்பதியின் புதல்வன்

1. வனங்களை எரிப்பவனும், கருப்பு வழியுள்ளவ னும், வெளுப்பனும், யக்ஞ உணவால் யஜிப்பவனும், சோதியில் தோன்றியவனும், துதிக்கத் தகுந்தவனும், பலத்தின் மகனுமான அக்கினியை, உணவை விரும்பு பவன் புதிய யக்ஞத்தால் நாடுகிறான்.

2. சுத்தப்படுத்துபவனும், மிக்கப் பரந்துள்ளவ னும், பல தூலக் காட்டங்களை எரித்துப் புசிப்பவனும், முழங்குபவனும், வானிலே இருப்பவனும், அழியாத தேவர்களும், ஒலிப்பவர்களுமான மருத்துக்களோடிருப்

பவனுமான அக்கினி, மிக்க இளைஞனும் வெண்ணிற முள்ளவனுமிருக்கிறன்.

3. சுத்தமான அக்கினியே! காற்றினுல் செலுத்தப் படும் உன்னுடைய பிரகாசமான சுவாலைகள் எங்கும் பல விதமாய்ப் பரவுகின்றன. பல காஷ்டங்களைத் தகிக்கின் றன. அக்கினியிலிருந்து தோன்றுபவையும், புதியவை யாய் எழுபவையுமான ரசிமிகள் ஒளியால் மரங்களைப் போர்த்தி, காடுகளைத் தகிக்கின்றன.

4. சோதியுள்ள அக்கினியே! உன்னுடைய ஒளிச் சுடர்கள் விடுவிக்கப்பட்ட குதிரைகளைப் போல் புவியை முண்டனப்படுத்துகின்றன-பற்பப்படுத்துகின்றன. உன் னுடைய சுவாலைப்படை பல ரூபமுள்ள புவியின் உயர்ந்த இடங்களில் ஏறிப் பிரகாசிக்கிறது.

5. காளையின் சுவாலை பசுக்களை மீட்பவனுல் செலுத்தப்பட்ட இடிப்படையைப் போல் அடிக்கடி இறங்குகிறது. சூரனுடைய ஆற்றலைப் போல் அக்கினி யின் அழிக்கும் தன்மையிருக்கிறது. தடைபடாமலும் பயங்கரனுயுமுள்ள அவன் வனங்களை எரிக்கிறுன். 4,420

6. நீ புவியிலே செல்வதற்குரிய இடங்களிலெல் லாம் உன்னுடைய ஒளியால் மகத்தாய்ப் பிரேரிக்கப் படும் ஆற்றலால் பரவுகிருய். நீ எல்லா விபத்துக்களை யும் விலக்கவும். உன்னுடைய மகத்தான ஆற்றல் களால் எதிரிகளைத் தடுத்துப் பகைவர்களை அழிக்கவும்.

7. அற்புதனுன அக்கினியே! அற்புத ஆற்றல் உள்ளவனே! இன்புறுத்துபவனே! எங்களுக்கும் இன் புறுத்தும் மொழிகளால் உன்னை ஏத்துபவனுக்கும், புகழைத் தருவதும், உணவையளிப்பதும், ஆண் சந்ததி கள் உள்ளதும், இன்பமளிப்பதும், மிகுந்துள்ளதும், அற்புதமாயிருப்பதும், மிக்க அற்புதமாயுமுள்ள செல்வங் களை அளிக்கவும். 4,422



## 7. அக்கினி வைசுவாநரன்

### 448. பரத்வாஜன் – பிரகஸ்பதியின் புதல்வன்

1. தேவர்கள் சோதியின் தலைவனும், புவியின் தூத னும், ருதத்துக்காகத் தோன்றுபவனும், கவியும், சக்கர வர்த்தியும், மனிதர்களின் அதிதியும், தேவர்களுக்கு அவி களை ஏந்திச் செல்லும் பாண்டத்தை வாயில் வகித்திருப் பவனுமான வைசுவாநர அக்கினியைப் பிறப்பித் தார்கள்.

2. போற்றுபவர்கள், யக்ஞங்களின் நாபியும், செல் வங்களின் ஸதனமும், ஆஹுதிகளை ஏந்தும் மகத்தான பாண்டமுமான அக்கினியை நன்ருய்ப் போற்றுகிருர்கள். தேவர்கள் அவிகளைச் செலுத்துபவனும், யக்ஞத்தின் கொடியுமான வைசுவாநரனைப் பிறப்பித்தார்கள்.

3. அக்கினியே! உனக்கு அவியை யளிப்பவன் விப்பிரனுகிறுன். உன்னிடமிருந்து ஆற்றலுள்ள அறிஞன் தோன்றுகிறுன். பகைவர்களையழிக்கும் வீரர் களும் உன்னிடமிருந்து தோன்றுகிருர்கள். ஆதலால் அரசனுன வைசுவாநரனே! எங்களுக்கு விரும்பத் தகுந்த செல்வங்களை யளிக்கவும்.

4. அமுதனுன அக்கினியே! நீ குழந்தையைப் போல் பிறக்குங்கால் தேவர்கள் எல்லாம் சேர்ந்து உன்னைப் போற்றுகிருர்கள். வைசுவாநரனே! நீ பெற்றேர்களான சோதி புவிகளின் நடுவே பிரகாசிக்குங் கால் அவர்கள் உனக்காகச் செய்யப்படும் யக்ஞங்க ளால் அமுதத் தன்மையை அடைகிருர்கள்.

5. வைசுவாநர அக்கினியே! உன்னுடைய இந்த மகத்தான செயல்களை எவனுலும் தடுக்க இயலாது. நீ பெற்றேர்களின்-சோதி புவிகளின்-அங்கத்திலே பிறக்கும் போது வானின் வழிகளிலே தினங்களின் துவஜத்தை ஏற்றுகிருய். 4,427

6. அமிருதத்தைப் புலப்படுத்துபவனான வைசுவாநரனுடைய ஒளியால் சோதியின் சிகரங்கள் அளக்கப்படுகின்றன. அவனுடைய தலையிலே, எல்லா புவனங்களும் நிலைக்கின்றன. பாயும் ஏழு நதிகள் அவனிடமிருந்து கிளைகளைப் போல் பெருகுகின்றன.

7. உலகங்களைக் கற்பித்த அக்கினியே நல்ல செயல்களை நடத்தும் வைசுவாநரனாயிருக்கிறான். கவியான அவன் சோதியின் ஒளி மண்டலங்களை ஸ்தாபித்தான். எல்லா உலகங்களையும் பரத்தினான். தடைபடாத பாலகனான அவன் அமுதத்தைப் பாலிப்பவனாயிருக்கிறான். 4,429

## 8. அக்கினி வைசுவாநரன்

### 449. பரத்வாஜன் - பிரகஸ்பதியின் புதல்வன்

1. நான் யக்ஞத்திலே வியாபகனாயிருப்பவனும், சிகப்பனாயுமுள்ள ஜாதவேதஸனின் ஆற்றலைப் போற்றுகிறேன். என்னிடமிருந்து அக்கினி வைசுவாநரனுக்கு புதியதாயும், சுத்தமாயும், அழகாயுமுள்ள தோத்திரம், பவித்திரத்திலிருந்து ஸோமரஸத்தைப் போல் தோன்றுகிறது.

2. உத்தம வானிலே விரத பாலகனான அவ்வக்கினி பிறந்தவுடன் மனிதர்களின் விரதங்களைப் பாலிக்கிறான். மூவுலகங்களைக் கற்பிக்கிறான். நல்ல செயல்களை நடத்தும் வைசுவாநரன் தன் மகிமையால் சோதி உலகைப் பற்றுகிறான்.

3. நண்பனும் அற்புதனுமான அக்கினி, சோதியையும் புவியையும் தாங்குகிறான். அவன் சோதியால் இருட்டை மறைக்கிறான். தாங்கும் இரு உலகங்களையும் அவன் சருமங்களைப் போல் பரத்துகிறான். வைசுவாநரன் எல்லா வீரியத்தையும் ஏந்துகிறான்.

4. மகிஷர்களான மருத்துக்கள் வானிலுள்ள சலங்களின் அங்கத்திலே அவனைப் பற்றுகிறார்கள். சனங்கள்



அவனைப் போற்றத் தகுந்த அரசனாகப் போற்றுகிறார்கள். தூதனான மாதரிசுவான், அக்கினி வைசுவாநரனைத் தூர தேசத்திலிருக்கும் சூரியனிடமிருந்து இங்கு ஏந்தி வருகிறான்.

5. அக்கினியே! ஒவ்வொரு யுகத்திலும் யக்ஞாருகனான உனக்கு, புதிய துதிகளைக் கூறும் எங்களுக்குச் செல்வத்தையும் சிறப்புள்ள புதல்வனையுமளிக்கவும். அழியாத அரசனே! உன்னுடைய கூரிய படையைப் போல் மின்சுடரால் மரத்தைப் போல் பாவியைக் கீழே சாய்க்கவும். 4,434

6. அக்கினியே! அவியளிக்கும் செல்வர்களான எங்களுக்கு, மற்றவர்களால் எடுத்துச் செல்லப்படாமலிருப்பதும், தேய்வற்றதும், உத்தமச் சந்ததிகள் நிறைந்ததுமான செல்வத்தையளிக்கவும். அக்கினி வைசுவாநரனே! நாங்கள் உன்னுடைய பாலனங்களால் நூறு மடங்கான, ஆயிரம் மடங்கான ஆற்றலை அடைவோமாக.

7. போற்றத் தகுந்த அக்கினியே! மூவுலகங்களிலிருக்கும் நீ, வழிபடுபவர்களை உன்னுடைய தடைபடாத பாலனங்களால் பாலிக்கவும். அவிகளை அளிக்கும் எங்களுடைய ஆற்றலை ஆதரிக்கவும். அக்கினி வைசுவாநரனே! நீ எங்களால் போற்றப்பட்டு எங்களைத் தீமைக்கப்பால் கடத்தவும். 4,436

## 9. அக்கினி வைசுவாநரன்

### 450. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. தினத்திலே பாதி கருப்பாயிருக்கிறது, பாதி வெளுப்பாயிருக்கிறது. இவை-இரவும் பகலும்-மாறி மாறிச் சுற்றி வருகின்றன. இவை அறியப்படும் தன்மைகளால் உலகத்தை இயக்குகின்றன. அக்கினி வைசுவாநரன் அரசனைப் போல் சோதியால் தமத்தை நீக்குகிறான்.

2. நான் குறுக்கிழைகளை அறியேன். நான் நெடுக்கிழைகளை அறியேன். ஸங்கமத்திலே ஊக்கமாயிருக்கும்

நெய்வோர்களால் நெய்யப்படும் ஆடையையும் அறியேன் இங்கு எந்த மனிதனுடைய புதல்வன் கீழே இருக்கும் - புவியிலிருக்கும் - தந்தையால் கற்பிக்கப்பட்டு பரத்திலே கூறுவதற்குரிய மொழிகளைக் கூறுவான்?

3. இந்த உலகத்தை யெல்லாம் அறிபவனும், அமுதத்தைப் பாலிப்பவனும், புவியிலே புவியனலாகச் செல்பவனும், மேலே சூரியனாக ஒளிப்படுத்துபவனுமான வைசுவாநரன் குறுக்கிழைகளையும் நெடுக்கிழைகளையுமறிகிறான். அவன் கூறுவதற்குரியதைக் காலமறிந்து கூறுகிறான்.

4. இந்த வைசுவாநரன் முதல் ஹோதாவாயிருக்கிறான். இவனைப் பாருங்கள் – போற்றுங்கள். மானிடர்களின் சரீரங்களிலே அமிருதனான இவன் சோதியாக இருக்கிறான். இவன் தேகத்தோடு தோன்றுகிறான். சதா வளர்கிறான்; திரமாயிருக்கிறான்; அசையாமலிருக்கிறான்; பரவுகிறான்; அமுதனாயிருக்கிறான்.

5. நிலையான சோதி மனத்தைக்காட்டிலும் வேகமாயிருக்கிறான். பிராணிகளின் நடுவே இருதயத்திலே உண்மையைக் காண ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். ஸமமான அறிவும் ஒருமனமுள்ள தேவர்கள் எல்லாம் செயல்களை நடத்துபவனான ஏகனிடம் - சோதியினிடம்-தடைபடாமல் பலவிதமாய்ச் செல்லுகிறார்கள். 4,441

6. என்னுடைய செவிகள் அவனுடைய சிறப்பைச் செவியுற, பல இடங்களுக்கு இயங்குகின்றன – கவனமாகின்றன. என்னுடைய கண்கள் அவனைக் காண எங்கும் செல்லுகின்றன. இருதயத்திலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் இந்த சோதி அவனை அறிய நாடுகிறான். தூரப் பொருள்களின் உறைகலமான என் மனமானது அவனைக் காணத் துரிதமாகிறது. அவனை எங்ஙனம், என்ன, யாவன் எனக் கூறுவேன்? அவனை எங்ஙனம் என நினைப்பேன்?

7. அக்கினியே! எல்லாத் தேவர்களும் உன்னை வணங்குகிறார்கள். ஏனெனில் அவர்கள் இருட்டைக் கண்டு அஞ்சுகிறார்கள். வைசுவாநரன் எங்களைப் பாலனத்தால் பாலிப்பானாக. அமுதனான அக்கினி எங்களைப் பாலனத்தால் பாலிப்பானாக. 4,443



## 10. அக்கினி

### 451. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. நீங்கள் போற்றத் தகுந்தவனும், சோதியில் தோன்றியவனும் மாசற்றவனுமான அக்கினியை நடைபெறும் தடைபடாத யக்ஞத்திலே துதிகளோடு உங்கள் முன்னே ஸ்தாபியுங்கள். ஏனெனில் பிரகாசமாயுள்ள ஜாதவேதஸன், எங்களை யக்ஞங்களிலே செல்வப்படுத்துகிறான்.

2. பல அனல்களால் சொலிப்பிக்கப்பட்டவனும், தேவர்களின் ஹோதாவும், பிரகாசிப்பவனுமான அக்கினியே! நீ மானிடர்களின் இந்த ஸ்தோமத்தைச் செவியுறவும். வழிபடுபவர்கள் நெய்யைப் போல் சுத்தமாயிருப்பதும் சுகப்படுத்துவதுமான ஸ்தோமத்தை மமதையைப் போல் கூறுகிறார்கள்.

3. துதிகளோடு அக்கினிக்கு அவிகளை அளிக்கும் விப்பிரன் மனிதர்களின் நடுவே செழிப்போடு செழிக்கிறான். விசித்திர ஒளியுள்ள அக்கினி அற்புத பாலனங்களோடு அவனுக்குப் பசுக்கள் நிறைந்த கோசாலையைத் தந்து உதவுகிறான்.

4. கருப்பு வழியுள்ள அவன் தோன்றியவுடன் தன்னுடைய தூரத்தில் காணும் ஒளியால் இரு பரந்த உலகங்களையும் நிரப்பினான். சுத்தப்படுத்தும் அவன் தன்னுடைய காந்தியால் இரவின் இருண்ட இருளை நீக்குபவனாய்த் தோன்றுகிறான்.

5. செல்வத்தாலும், உணவாலும், வீரப்புதல்வர்களாலும் உன்னால் நிரப்பப்படும் வேறு சனங்களைப் போல் அக்கினியே! நீ அவிச்செல்வர்களான எங்களை

அற்புத செல்வத்தாலும், மிகுந்த உணவாலும, பாலனத் தாலும் நிரப்பவும்.

6. அக்கினியே! அவியை விரும்பும் நீ, இந்த யக் ஞத்தை ஏற்றுக் கொள்ளவும். உன் முன்னே உட் கார்ந்து அவியுள்ளவனுல் உனக்களிக்கப்படும் இந்த உணவைப் பெற்றுக் கொள்ளவும். பரத்வாஜர்களின் குற்றமற்ற தோத்திரத்தை ஏற்றுக் கொள்ளவும். அவர் கள் பலவித உணவைப் பெற ஆதரிக்கவும்.

7. பகைவர்களைச் சிதறடிக்கவும். எங்கள் உண வைச் செழிப்பிக்கவும். நாங்கள் நல்ல வீரப்புதல்வர் களைப் பெற்று நூறு வருடங்கள் இன்புறுவோமாக. 4,450.

## 11. அக்கினி

### 452. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. ஹோதாவான அக்கினியே! போற்றத் தகுந்த , எங்களால் விரும்பப்பட்டு எங்களால் நடத்தப்படும் யக்ஞத்திலே பகைவர்களை விலக்கும் மருத்துக்களின் படையைப் போற்றவும். எங்களுடைய யக்ஞத்துக்கு, மித்திரா வருணர்களையும், நாஸத்தியர்களையும், சோதி யையும் புவியையும் ஏந்தி வரவும்.

2. மிக்கப் போற்றத் தகுந்தவனும், எங்களைத் துன்புறுத்தாத தேவனுமான நீ, மனிதர்களின் நடுவே நடத்தப்படும் யக்ஞத்திலே ஹோதாவாயிருக்கிறுய். தேவனுன அக்கினியே! அவிகளை ஏந்திச் செல்லும் நீ, உன்னுடைய தேவர்களுடைய வாயைப் போலிருக்கும் சுத்தப்படுத்தும் சுவாலையோடு உன்னுடைய சுயமான தேகத்தைப் போற்றவும்.

3. அங்கிரஸர்களின் நடுவே மிக்க வழிபடும் விப் பிரனுன பரத்வாஜன் யக்ஞத்திலே மதகரமான ஸ்தோத் திரத்தைக் கூறுங்கால் செல்வத்தை நாடும் பனுவல் உன்னை விரும்புகிறது. அத்துதியால் தோன்றும் உன் னுடைய தோற்றம் வழிபடுபவனுக்குத் தேவர்களை யஜிக்கும் திறத்தையளிக்கிறது.



4. பக்குவ அறிவுள்ளவனும் காந்தியுடனிருப்பவனு மான அக்கினி மிக்கப் பிரகாசிக்கிறுன். அவிகளை ஏந்தும் பஞ்சசனங்களால் மானிடர்களின் அதிதியைப் போல் அவியோடு போற்றப்பட்டு நல்ல உணவுடனிருக்கும் நீ, பரந்துள்ள வையத்தையும் விண்ணையும் யஜிக்கவும்.

5. வணக்கத்தோடு தருப்பை நறுக்கப்படுங்கால், நெய் நிறைந்ததும், சிறு குற்றமற்றதுமான சிருவை உயர்த்தப்படுங்கால் புவியின் ஸதனத்திலே வேதி ஸ்தாபனமாகிறது. சூரியனிலே கண்ணைப் போல் யக்ஞத் தலைவனிலே யக்ஞம் சேர்கிறது.

6. பல சுவாலைகளுள்ளவனும் ஹோதாவுமான அக்கினியே! துலங்கும் அனல்களால் சொலிப்பிக்கப் படும் நீ, எங்களுக்குச் செல்வங்களை யளிக்கவும். பலத் தின் மகனே! அவிகளால் உன்னைப் போர்த்தும் நாங்கள் பகைவனைப் போல் பாபத்தை வெல்லுவோமாக. 4,456.

## 12. அக்கினி

### 453. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. ஹோதாவும் யக்ஞத்தின் தலைவனுமான அக்கினி தபஞ்செய்பவனுடைய மனையின் நடுவே சோதியையும் புவியையும் யஜிக்க அமருகிறுன். பலத்தின் மகனும் ருதத்தைப் பாலிப்பவனுமான அவன் தூரத்திலிருந்தே சூரியனைப் போல் உலகத்தை சோதியால் ஒளிப்படுத்து கிறுன்.

2. வழிபடுபவன், துதியாருகனும் துலங்குபவனும் அறிஞனுமான உனக்கு ஒவ்வொரு யக்ஞத்திலும் அவிகளை யளிக்கிறுன் மூவ்வுலகங்களிலிருக்கும் நீ, வானைக் கடந்து செல்லும் சூரியனுடைய வேகத்தோடு மானிடர்களின் புகழ் மிகுந்த அவிகளைத் தேவர்களிடம் எடுத்துச் செல்ல சலனமாகவும்.

3. அவனுடைய வனத்தில் ஆட்சி செய்வதும், மிகுந்த அழகாயுமுள்ள சுவாலை, வழியிலே சூரியனைப் போல் பெருகிப் பிரகாசிக்கிறது. ஓஷதிகளின் நடுவே அவன் இன்னலற்ற காற்றைப் போல் பாய்கிறான். அமுதனும் தடைபடாதவனுமான அவன் தன்னுடைய சுய ஒளியால் எல்லாப் பொருள்களையும் ஒளிப்படுத்துகிறான்.

4. ஜாதவேதஸனான அக்கினி செல்வத்தை நாடும் ஒருவனுடைய தோத்திரங்களைப் போலுள்ள எங்கள் துதிகளால் எங்கள் மனைகளில் ஏத்தப்படுகிறான். மரங்களைப் புசிப்பவனும், வனங்களைத் தகிப்பவனும், கன்றுகளைத் தோற்றுவிக்கும் காளையைப் போல் செயலிலே உக்கிரமாயிருப்பவனுமான அவன் யக்ஞங்களால் போற்றப்படுகிறான்.

5. அவனுடைய சுவாலைகள் வனங்களைச் சுலபமாயழித்து புவியின் மீது பரவுங்கால் அவற்றை வழிபடுபவர்கள் இவ்வுலகத்தில் போற்றப்படுகிறார்கள். தடைபடாமல் சலனமாகும் அவன், ஓடும் திருடனைப் போல் வேகமாயுள்ள அவன், பாலைவனத்திலே பிரகாசிக்கிறான்.

6. துரிதமாய்ச் செல்லும் அக்கினியே! உன்னுடைய எல்லா அனல்களாலும் சொலிப்பிக்கப்பட்ட நீ, எங்களை நிந்தனையிலிருந்து பாலிக்கவும். நீ செல்வங்களைத் தருகிறாய். பகைவர்களை விலக்குகிறாய். நாங்கள் உத்தம வீர மக்களை அடைந்து நூறு ஏமந்தங்கள் இன்புறுவோமாக. 4,462.

## 13. அக்கினி

### 454. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

**1. மங்கலச் செல்வமுள்ள அக்கினியே! உன்னிடத்திலிருந்து எல்லா நல்ல பொருள்களும், சிறப்பான செல்வங்களும், பகைவர்களைக் கொல்வதற்குரிய ஆற்றலும், சோதியின் மழையும், மரத்தின் கிளைகளைப்**



போல் தோன்றுகின்றன. நீ போற்றத் தகுந்தவன். சலங்களைச் செலுத்துபவன்.

2. போற்றத் தகுந்த நீ, எங்களுக்கு இரத்தினத்தை யளிக்கவும். ஒளியால் எழிலுள்ள நீ சூழுங் காற்றைப் போல் எங்கும் பரவுகிறாய். தேவனான அக்கினியே! நீ மித்திரனைப் போல் மிகுந்த சலத்தையும் திரண்ட செல்வத்தையும் தருபவனாயிருக்கிறாய்.

3. பேரறிஞனும், ருதத்தில் பிறந்தவனும், சலங்களின் பேரனோடு - மின்னலோடு - இசைந்திருப்பவனுமான நீ, செல்வத்துக்காக எந்த மனிதனை ஊக்கப்படுத்துகிறாயோ, நல்லவர்களைப் பாலிப்பவனான அவன், அக்கினியே! பகைவனைப் பலத்தால் கொல்லுகிறான். அறிஞனான அவன் பணியின் செல்வத்தைப் பற்றுகிறான்.

4. தேவனே! அக்கினியே! பலத்தின் மகனே! துதிகளாலும், பாக்களாலும், யக்ஞங்களாலும் உன்னுடைய சூரிய காந்தியை வேதிகைக்குச் செலுத்தும் மனிதன் எல்லா உத்தமப் பொருள்களை அனுபவிக்கிறான். தானிய சம்பத்தை அடைகிறான். செல்வங்களின் தலைவனாயிருக்கிறான்.

5. பலத்தின் மகனே! நீ மானிடர்கள் செழிக்க அவர்களுக்கு மிக்கப் புகழையும் வீரப்புதல்வர்களைத் தோற்றுவிக்கும் பொருள்களையும் அளிக்கவும். நீ உன்னுடைய பலத்தால் பசியுடனாகும் ஓநாய்க்குப் பசுக்களை உணவாய் மிக்கத் தருகிறாய்.

6. பலத்தின் மகனே! அக்கினியே! மகானான நீ. எங்களுக்கு நீதியைப் புகலுபவனாகவும், எங்களுக்கு உணவோடு புதல்வர்களையும் பேரர்களையுமளிக்கவும். நான் என்னுடைய எல்லாத் துதிகளாலும் விருப்பப் பூர்த்தியைப் பெறுவேனாக. நாங்கள் நல்ல வீரப்புதல்வர்களை அடைந்து நூறு ஏமந்தங்கள் இன்புறுவோமாக. 4,468.

# 14. அக்கினி

## 455. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. துதிகளோடு சேவையாலும் சிந்தனையாலும் அக்கினியைப் போற்றும் மனிதன், மனிதர்களின் நடுவே துரிதமாக முதல்வனுகிருன். தன் குழந்தைகளைப் பாலனஞ் செய்து கொள்ள மிகுந்த உணவைத் தேடிக் கொள்கிருன்.

2. அக்கினியே பேரறிஞுயிருக்கிருன். செயல்களை நடத்தும் முதல்வனுயிருக்கிருன்; ரிஷியாயிருக்கிருன். மநுவின் புதல்வர்கள் யக்ஞங்களிலே அக்கினியை ஹோதாவாகப் போற்றுகிருர்கள்.

3. பகைவனுடைய பலவித செல்வங்கள் துதிப்பவர்களைப் பாலிக்கத் தனித்தனியாக முந்த இயங்குகின்றன. அக்கினியே! மனிதர்கள் தஸ்யுவைத் துன்புறுத்தி, விரதங்களால், விரதமற்ற பகைவனை வெல்ல விரும்புகிருர்கள்.

4. அக்கினி, வழிபடுபவர்களுக்கு நல்ல செயல்களை நடத்துபவனும், பகைவர்களைத் தாழ்த்துபவனும், நல்லவர்களைப் பாலிப்பவனும், பார்க்கும்போதே தன் பயமளிக்கும் பயத்தால் பகைவர்களைப் பயமுறுத்துபவனுமான வீரப்புதல்வனைத் தருகிருன்.

5. வலியனும், தேவனும், மிக்க அறிஞனுமான அக்கினி, யக்ஞங்களில், தடைபடாததும், வேறு அவியளிப்பவர்களால் பங்கிடப்படாததுமான மிகுந்த செல்வமுள்ள அவிகளை அளிக்கும் மனிதனை இகழ்ச்சியிலிருந்து பாலிக்கிருன்.

6. தேவனுன அக்கினியே! நண்பனைப் போல் போற்றப்படுபவனும், சோதியிலும் புவியிலும் நிலைத்து, எங்களுடைய தோத்திரத்தைத் தேவர்களிடம் கூறவும். நீ துதிக்கும் மனிதர்களை மனைக்குரிய க்ஷேமத்துக்கு நடத்தவும். நாங்கள் எங்களுடைய சத்துருக்களையும், தீமைகளையும், துன்பங்களையும் கடப்போமாக. நாங்கள் உன்னுடைய பாலனத்தால், அவற்றை ஜயிப்போமாக. 4,474.



# 15. அக்கினி

## 456. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. ரிஷியே! உஷையில் எழுபவனும், எல்லா சனங்களையும் பாலிப்பவனும், பிறப்பிலே சுத்தனும், ஒவ்வொரு யக்ஞத்துக்கும் சோதியிலிருந்து வருபவனும், அரணியிலே கருவாக இருப்பவனும், அளிக்கப்படும் அவியை உடனே புசிப்பவனுமான இந்த அதிதியான அக்கினியைத் துதியால் போற்றவும்.

2. வனஸ்பதியில் ஸ்தாபிக்கப்பட்டவனும், போற்றத் தகுந்தவனும், உயரும் சுவாலையுள்ளவனும், நண்பனைப் போல் பிருகுக்களால் ஸ்தாபிக்கப்படுபவனும், அற்புதனுமான அக்கினியே! நீ வீதஹவ்யனுல் இன்புறவும்.

3. தடைபடாத நீ, தட்சனை-விரதத்தில் வலியனுனுயிருப்பவனை-வலுப்படுத்துகிருய். நீ அவனை அருகிலுள்ள, தூரத்திலுள்ள பகைவனிடமிருந்து பாலிப்பவனுயிருக்கிருய். பலத்தின் மகனே! எப்பொழுதும் புகழுடனிருக்கும் நீ, அவியை யளிக்கும் வீதஹவ்யனுக்கு செல்வத்தையும் மனையையுமளிக்கவும்.

4. துலங்குபவனும், உங்களுடைய அதிதியும், சோதிக்கு வழி காட்டுபவனும், மநுவின் யக்ஞத்திலே தேவர்களின் ஹோதாவாயிருப்பவனும், யக்ஞங்களை நன்ருய் நடத்துபவனும், விப்பிரனைப் போல் ஒளிப்படுத்தும் வசனங்களைக் கூறுபவனும், அவிகளை வகித்துச் செல்பவனும், தேவனும், தலைவனுமான அக்கினியை உத்தமப் பாக்களால் போற்றவும்.

5. புவியின் மீது சுத்தப்படுத்துவதும், சேதனப்படுத்துவதுமான காந்தியோடு, ஒளியுடன் உஷைகளைப் போல் பிரகாசிப்பவனும், எதிரிகளை விலக்கும் வீரனைப் போல் ஏதசனைப் போரிலே துரிதமாய்ப் பாலிக்கப் பிரகாசித்தவனும், அவியால் இன்புறுபவனும், தேயாதவனுமான அக்கினியைப் போற்றவும். 4,479

6. வழிபடுபவர்களே! எப்பொழுதும் உங்களுடைய மிக்கப் பிரிய நண்பனும், அதிதியாயுமிருப்பவனும், போற்றத் தகுந்தவனுமான அக்கினியை ஸமிந்தனத்தோடு அடிக்கடி போற்றுங்கள். அமிருதனான அக்கினியைப் பாக்களோடு போற்றுங்கள். ஏனெனில் தேவர்களின் நடுவே தேவனாயுள்ள அவன் நம்முடைய வணக்கத்தை விரும்புகிறான்.

7. நான், சுத்தனும், சுத்தப்படுத்துபவனும், துருவனும், யக்ஞத்திலே எங்கள் முன்னே இருப்பவனும், சொலிப்பிக்கப்பட்டவனுமான அக்கினியைத் துதியோடு போற்றுகிறேன். நாம் விப்பிரனும், ஹோதாவும், பலரால் போற்றப்படுபவனும், நலஞ்செய்பவனும், கவியும் ஜாதவேதஸனுமான அக்கினியை சுகப்படுத்தும் தோத்திரங்களால் போற்றுவோமாக.

8. அக்கினியே! தேவர்களும், மனிதர்களும், அவிகளை ஏந்தும் அமுதனும், பாலிப்பவனும், துதியாருகனுமான உன்னை ஒவ்வொரு யுகத்திலும் தூதனாக நியமித்தார்கள். அவர்கள் விழித்துள்ளவனும், வியாபகனும், மனிதர்களைக் காப்பவனுமான அக்கினியை வேதியிலே வணக்கத்தோடு ஸ்தாபித்தார்கள்.

9. அக்கினியே! தேவர்களையும் மனிதர்களையும் எழில்படுத்தும் நீ, ஒவ்வொரு யக்ஞத்திலும் தேவர்களுடைய தூதனாகி, சோதியிலும் புவியிலும் சுற்றுகிறாய். நாங்கள் உனக்குத் துதியைக் கூறி யக்ஞத்தை நடத்துகிறோம். மூவ்வுலகங்களைப் பாலிக்கும் நீ எங்களை சுகப்படுத்துபவனாகவும்.

10. அற்ப அறிவுள்ள நாங்கள், நல்ல அங்கமுள்ளவனும், நன்கு தோன்றுபவனும், சுத்த சலனமுள்ளவனும், மிக்க அறிஞனுமான அக்கினியைப் போற்றுகிறோம். அறிவதற்குரிய அனைத்தையும் அறியும் அக்கினி தேவர்களை யஜிப்பானாக. அவன் அமுதர்களுக்கு அவியைத் தெரிவிப்பானாக. 4,484.



11. அக்கினியே! சூரனும் கவியுமான உனக்குத் துதியைக் கூறுபவன் உன்னால் பாலனமாகிறான். நீ அவனுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறாய். யக்ஞத்தை நடத்துபவனும் உன்னிடமிருந்து செல்வங்களையும் ஆற்றலையும் அடைகிறான்.

12. அக்கினியே! எங்களைத் துன்புறுத்துபவனிடமிருந்து பாலிக்கவும். ஆற்றலுள்ளவனே! எங்களைப் பாவத்திலிருந்து பாலிக்கவும். குற்றமற்ற அவி உன்னிடம் சேர்க. விரும்பப்படும் ஆயிரஞ் செல்வங்கள் உங்களிடம் தோன்றுக.

13. அக்கினி ஹோதா; அவன் மனையின் பதி; அவன் அரசன்; இருக்கும் அனைத்தையும் அறியும் ஜாதவேதஸனாய் அவன் அறியப்படுகிறான். மனிதர்களின் நடுவே தேவர்களின் நடுவே மிக்க வணக்கமுடன் யஜிக்கிறான். ருதத்தைப் பாலிக்கும் அக்கினி யஜிப்பானாக.

14. அக்கினியே! யக்ஞத்தின் ஹோதாவே! சுத்தப்படுத்தும் ஒளியுள்ளவனே! இன்று யக்ஞத்தை நடத்துபவனின் கடமையை விரும்பவும். நீ தேவர்களை யஜிப்பவன். ஆதலால் நீ யக்ஞத்திலே தேவர்களை யஜிக்கவும். நீ உன்னுடைய மகிமையால் எங்கும் பரவுகிறாய். ஆதலால் மிக்க இளைஞனாயிருக்கும் நீ, இன்று உனக்களிக்கப்படும் அவிகளை விரும்பவும்.

15. அக்கினியே! நீ, வேதியிலே ஒழுங்காய் வைக்கப்பட்டுள்ள அவிகளைப் பார்க்கவும். நீ சோதியையும் புவியையும் யஜிக்காததால் உன்னை ஸ்தாபிக்கிறான். செல்வனான அக்கினியே! நாங்கள் எல்லாத் துன்பங்களிலிருந்தும் கடந்து செல்ல, போரிலே எங்களைப் பாலிக்கவும். நாங்கள் உன்னுடைய பாலனத்தால் அவற்றைக் கடப்போமாக 4,489

16. பிரகாசிக்கும் சுவாலையுள்ள அக்கினியே! கம்பளத்தால் எழில் செய்யப்பட்டதும், சுகந்தங்களின் உறைவிடமாயிருப்பதும், நெய் நிறைந்திருப்பதுமான வேதி

யிலே எல்லாத் தேவர்களோடும் முதல்வனாக அமரவும். அவியளிக்கும் தலைவனுடைய யக்ஞத்தைத் தேவர்களிடம் செலுத்தவும்.

17. அறிஞர்கள் அக்கினியான உன்னைப் பூர்வத்தில் அதர்வன் கடைந்தது போல் கடைகிறார்கள். அப்பால், திரிபவனும் திசைப்பற்றவனுமான உன்னை இருட்டிலிருந்து புலப்படுத்துகிறார்கள்.

18. அக்கினியே! தேவர்களை விரும்பும் தலைவனுடைய க்ஷேமத்துக்காக நீ யக்ஞத்திலே தோன்றவும். பிறகு ருதத்தை வளர்க்கும் அமிருதர்களான தேவர்களை இங்கு ஏந்தி வா. எங்களுடைய யக்ஞத்தைத் தேவர்களிடம் செலுத்தவும்.

19. அக்கினியே! மனையின் பதியே! மனிதர்களின் நடுவே நாங்கள் ஸமிந்தனத்தால் உன்னை மேம்படுத்துகிறோம். எங்களுடைய இல்லறத் தன்மைகள் எல்லாச் செல்வங்களோடும் பூரணமாகுக. எங்களைக் கூரிய காந்தியோடு கூர்மைப்படுத்தவும். 4,493

## 16. அக்கினி

### 457. பரத்வாஜன்—பிரகஸ்பதியின் புதல்வன்

1. அக்கினியே! நீ மானிடர்களின் நடுவே எல்லா யக்ஞங்களிலும் தேவர்களால் ஹோதாவாக நியமிக்கப்பட்டாய்.

2. ஆதலால் நீ எங்களுடைய யக்ஞத்திலே மகத்தான தேவர்களுக்கு மதப்படுத்தும் சுவாலைகளோடு அவிகளை அளிக்கவும். தேவர்களை இங்கு ஏந்தி வா. அவர்களை யஜிக்கவும்.

3. அக்கினியே! நல்ல செயல்களை நடத்தும் நீ படைப்பவன். நீ யக்ஞங்களிலே வேகத்தோடு பெரிய வழிகளையும் சிறிய வழிகளையும் எங்ஙனம் கடந்து செல்வது என்பதை அறிகிறாய்.



4. பரதன் அவியளிப்பவர்களோடு உன்னுடைய இருவிதத் தன்மைகளையும் சுகத்துக்காகப் போற்றினான். போற்றத் தகுந்த உன்னை யக்ஞங்களால் போற்றினான்.

5. நீ திவோதாஸனுக்கு ஸோமத்தைப் பொழியுங்கால் இந்தப் பல செல்வங்களைத் தந்தாய். இப்பொழுது பொழியும் பரத்வாஜனுக்கு அவற்றை யளிக்கவும். 4,498

6. விப்பிரனுடைய நல்ல துதியைச் செவியுற்று, அமுத தூதனாயிருக்கும் நீ, தேவசனங்களை இங்கு அழைத்து வா.

7. அக்கினியே! தியானிக்கும் மானிடர்கள் தேவனான உன்னை அவியைத் தேவர்களிடம் எடுத்துச் செல்ல யக்ஞங்களிலே அழைக்கிறார்கள்.

8. நான் உன்னுடைய தேஜஸையும் தானசீலனான உன்னுடைய செயல்களையும் போற்றுகிறேன். உன்னிடமிருந்து விருப்பங்களைப் பெற்று இன்புறுபவர்களும் உன்னைப் போற்றுகிறார்கள்.

9. அக்கினியே! நீ மநுவால் தேவர்களின் ஹோதாவாகவும், உன் வாயினால் அவர்களுக்கு அவியை ஏந்திச் செல்லும் உத்தம அறிஞனாயும் நியமிக்கப்பட்டிருக்கிறாய்.

10. அக்கினியே! நீ அவியைப் புசிக்க வா. நீ போற்றப்பட்டு அவியைத் தேவர்களிடம் செலுத்த வா. தருப்பையின் மீது ஹோதாவாக அமரவும். 4,503

11. அங்கிரஸனே! நாங்கள் உன்னை ஸமித்துக்களாலும் நெய்யாலும் செழிப்பிக்கிறோம். மிக்க இளைஞனான நீ, மகத்தாய்ப் பிரகாசிக்கவும்.

12. தேவனே! அக்கினியே! பரந்துள்ளதும், புகழுள்ளதும், மகத்தாயிருப்பதும், வீரப்புதல்வர்கள் நிறைந்ததுமான செல்வத்தை எங்களுக்களிக்கவும்.

13. உன்னை, அதர்வன் தலை போலிருப்பதும், விசுவத்தைத் தாங்குவதுமான புஷ்கரத்திலிருந்து—அரணியிலிருந்து, தாமரை இலையிலிருந்து—கடைந்தான்.

14. அதர்வனுடைய புதல்வனுன தத்தியங்க ரிஷி, விருத்திரனை அழிப்பவனும் அசுரபுரங்களை உடைப்பவனுமான உன்னை ஒளிப்படுத்தினுன்.

15. விருஷனுன பாத்தியன், தஸ்யுக்களை அழிப்பவனும். ஒவ்வொரு போரிலும் செல்வத்தை ஜயிப்பவனுமான உன்னை ஒளிப்படுத்தினுன். 4,508

16. அக்கினியே! நான் இங்ஙனம் வேறு துதிகளைக் கூற நீ வா. நீ இந்த ஸோமங்களால் பருமனுகவும்.

17. உன்னுடைய மனம் எங்கு அல்லது எவனிடமிருந்தாலும் நீ அவனுக்கு உத்தம பலத்தைத் தருகிருய். அங்கு அவனிடம் உன் வாசத்தைச் செய்து கொள்கிருய்.

18. உன்னுடைய பூரணமான சுவாலை என் கண்ணுக்குத் துன்பமளிக்காமலிருக்க; நீ பணிந்து வழிபடுபவர்களுக்கு மனையை யளிப்பவன். ஆதலால் எங்களுடைய துதியை ஏற்றுக் கொள்ளவும்.

19. பாரதனும், திவோதாஸனின் பகைவர்களை யழிப்பவனும், பலரை அறிபவனும், நல்லவர்களைப் பாலிப்பவனுமான அக்கினி எங்கள் துதிகளால் இங்கு வருவிக்கப்படுகிருன்.

20. தடைபடாதவனும், எதிர்ப்பற்றவனும், தன் மகத்வத்தால் பகைவர்களைக் கொல்பவனுமான அக்கினி எல்லாப் புவிப் பொருள்களை வெல்லும் செல்வங்களை எங்களுக்களிப்பானுக. 4,513

21. அக்கினியே! நீ இந்த மகத்தான வானத்தை காந்தியுள்ள ஒளிப் பந்தத்தால் பழையதைப் போல் புதுப்பித்துப் பரத்தினுய்-ஒளிப்படுத்தினுய்.

22. நண்பர்களே! நீங்கள் படைப்பவனும், பகைவர்களைப் புடைப்பவனுமான அக்கினிக்கு யக்ஞத்தை நடத்தி ஸ்தோமத்தைக் கூறுங்கள்.



23. ஹோதாவும், ஞானச் செயல்களை நடத்துபவனும், ஒவ்வொரு மானிட யுகத்திலும் நூதனும், அவி ஏந்துபவனுமான அக்கினி எங்களுடைய யக்ஞத்திலே அமருவானுக.

24. வசுவே! இங்கு நீ அரசர்களும், சுத்த விரதர்களான மித்திரா வருணர்களையும், ஆதித்தியர்களையும், மருத்துக்களின் கணத்தையும், சோதியையும் புவியையும் யஜிக்கவும்.

25. ஆற்றலின் மகனே! அக்கினியே! அமுதனுன உன்னுடைய புகழுள்ள காந்தியானது வழிபடும் மனிதனுக்கு உணவைத் தருகிறது. 4,518

26. இன்று செயல்களால் உன்னை உபசரித்து, அவியை அளிப்பவன் போற்றப்பட்டு செல்வத்தை அடைவானுக. அம்மனிதன் உன்னைத் துதிப்பதில் ஊக்கமாயிருப்பானுக.

27. அக்கினியே! உன்னுல் பாலிக்கப்படுபவர்கள் பூரணுயுசை விரும்பி அதைப் பெறுகிருர்கள். அவர்கள் எதிர்க்கும் பகைவர்களை ஜயித்து, அழிக்கிருர்கள்.

28. அக்கினி தன்னுடைய கூரிய சுவாலையால் எல்லா அரக்கர்களையும் அழிக்கிருன். அக்கினி எங்களுக்குச் செல்வங்களை அளிப்பானுக.

29. ஜாதவேதஸனே! அனைத்தையுங் காண்பவனே! நீ எங்களுக்கு உத்தம வீரப் புதல்வர்களோடு செல்வத்தை யளிக்கவும். வினைத் திட்பனே! நீ அரக்கர்களை அழிக்கவும்.

30. ஜாதவேதஸனே! எங்களைப் பாபத்திலிருந்து பாலிக்கவும். பிரம்மத்தின் கவியே! பிரம்மத்தை அறிவிப்பவனே! துன்பஞ் செய்பவர்களிடமிருந்து எங்களைப் பாலிக்கவும். 4,523

31. வதைப்படையால் எங்களைக் கொல்ல விரும்பும் துட்டனிடமிருந்து எங்களைப் பாலிக்கவும். பாபத்திலிருந்து பாலிக்கவும்.

32. தேவனே! எங்களைக் கொல்ல விரும்பும் துட்ட மனிதனை உன்னுடைய சுவாலையால் பற்பப்படுத்தவும்.

33. பகைவர்களைத் தாழ்த்தும் அக்கினியே! பரத்வாஜனுக்கு மிக்க மிகுந்த சுகத்தையும் விரும்பத் தகுந்த செல்வத்தையுமளிக்கவும்.

34. யக்ஞச் செல்வத்தை விரும்புபவனும், சொலிப்பிக்கப்பட்டவனும், பிரகாசிப்பவனும், அவியால் ஆஹூதமானவனும், துதியால் துதிக்கப்பட்டவனுமான அக்கினி பகைவர்களை யழிப்பானாக.

35. தாயின் கருப்பத்தின் நடுவிலிருக்கும் அட்சரத்திலே –வேதியிலே–துலங்குபவனும், தந்தையின் தந்தையுமான அக்கினி, ருதத்தின் பீடத்திலமர்ந்து பகைவர்களை யழிப்பானாக. 4,528

36. ஜாதவேதஸனே! அக்கினியே! அன்னத்தையுங் காண்பவனே! எங்களுக்குச் சந்தானத்தோடு உணவை யளிக்கவும். அவ்வுணவு சோதியில் பிரகாசிக்கும் உணவைப் போலிருக்க.

37. பலத்தால் தோன்றும் அக்கினியே! சுந்தரத் தோற்றமுள்ள உனக்கு அவிகளை யளிக்கும் நாங்கள் துதிகளைக் கூறுகிறோம்.

38. அக்கினியே! நாங்கள் பொன்னைப் போல அழகாயுள்ளவனும், பிரகாசிப்பவனுமான உன்னுடைய சரணத்தை மரத்தின் நிழலைப் போல் பற்றுகிறோம்.

39. அக்கினியே! உக்கிரவில்லியைப் போலிருப்பவனும், கூரிய கொம்புகளுள்ள காளையைப் போலுமுள்ள நீ, அசுரபுரங்களை அழித்தாய்.

40. அவிகளைப் புசிப்பவனும், மனிதர்களின் நல்ல யக்ஞங்களைச் செலுத்துபவனும், பிறந்த குழந்தையைப் போல் கைகளால் ஏந்தப் படுபவனுமான அக்கினியைப் போற்றுங்கள். 4,532



41. மிகுந்த செல்வத்தைத் தருபவனும், தேவனுமான அக்கினியைத் தேவர்களிடம் ஏந்திச் செல்லும் அவியைப் பெற்றுக்கொள்ள நடத்துங்கள். அவன் உரிய பீடத்திலே அமர்வானாக.

42. பிறந்தவுடன் அவனைப் பிரியமான அதிதியைப் போல் போற்றுங்கள். பிறகு கிரகபதியான அவனை, அறிவு தோன்றும் சுகமளிக்கும் வேதியிலே, அனலிலே ஸ்தாபியுங்கள்.

43 தேவனான அக்கினியே! உன்னை யக்ஞத்துக்குத் துரிதமாய் ஏந்திச் செல்லும் நன்கு பழக்கப்பட்ட குதிரைகளை இணைக்கவும்.

44. அக்கினியே! எங்கள் முன்னே வா. யக்ஞ உணவுகளை உண்ணவும் ஸோமபானத்தைப் பருகவும் இங்கு தேவர்களை ஏந்திவா.

45. பாரதனே! அக்கினியே! நீ பிரகாசிக்கவும். தேயாதவனே! தேயாத ஒளியோடு துலங்கும் நீ துலங்கவும். 4,538.

46. அவியோடு எந்தத் தேவனையும் போற்றும் எந்த அவியளிக்கும் மனிதனும் யக்ஞத்திலே சோதி புவியையும் அழைப்பவனும், சத்தியத்தோடு யஜிப்பவனுமான அக்கினியையும் போற்றுவானாக.

47. அக்கினியே! நாங்கள் இருதயத்தால் கற்பிக்கப் பட்டதும், இருக்கு வடிவமுள்ளதுமான அவியைத் தருகிறோம். இந்த அவிகள் உனக்குக் காளைகளாகவும், விருஷபங்களாகவும், பசுக்களாகவும் தோன்றுக.

48. தேவர்கள், அசுரர்களின் செல்வங்களை எடுத்துச் செல்பவனும், அரக்கர்களை அழிப்பவனுமான அக்கினியை முதல்வனாகவும், விருத்திரனைக் கொல்லும் தனியனாகவும் ஒளிப்படுத்துகிறார்கள். 4,541.

## 17. இந்திரன்

### 458. பரத்வாஜன் - பிரகஸ்பதியின் புதல்வன்

1. உக்கிரனுன இந்திரனே! நீ எந்த ஸோமத்தால் ஊக்கமாகி, பணிகளால் திருடப்பட்ட பசுக்களின் பரந்த மந்தையைக் கண்டுபிடித்தாயோ, எதனுல் வச்சிரமேந்து பவனும், பகைவர்களை ஜயிப்பவனுமான நீ, எதிர்க்கும் எல்லாப் பகைவர்களையும் உன் ஆற்றலால் ஜயித்தாயோ, அந்த ஸோமரஸத்தை எங்களால் நீ போற்றப்பட்டு பருகவும்.

2. இந்திரனே! சுவையற்ற பானத்தைப் பருகும் நீ இதைப் பருகவும். தாரகனும், போற்றுபவர்களுக்குப் பொழிபவனும், மலைகளைப் பிளப்பவனும், வச்சிரமேந்து பவனும், குதிரைகளை அடக்குபவனுமான நீ, எங்களுக் குப் பலவித உணவுகளை அளிக்கவும்.

3. பழைய ஸோமத்தைப் பருகியது போல் இந்த ரஸத்தைப் பருகவும். இது உன்னை மதப்படுத்துக. எங்கள் துதியைக் கேட்கவும். எங்கள் மொழிகளால் மேம்படவும். சூரியனைப் புலப்படுத்தவும். உணவால் எங்களைப் புட்டிப்படுத்தவும். இந்திரனே! பகைவர்களைக் கொல்லவும். பசுக்களை மீட்கவும்.

4. இந்திரனே! நீ தானே தாங்கிக் கொள்பவன். மதமளிக்கும் இந்த ஸோம ரஸங்கள் பிரகாசமாயுள்ள உன்னை நனைத்து மகத்தாய்ச் செழிப்பிக்கின்றன. மகா னும், நிறைந்தவனும், வலியனும், பலவிதமாயிருப்பவ னும், பகைவர்களை ஜயிப்பவனுமான உன்னை மதமளிக் கும் ஸோமரஸங்கள் மிக்க இன்புறுத்துக.

5. நீ ஸோமங்களால் மதப்பட்டு, சூரியனையும் உஷையையும் அவரவருடைய கடமைகளிலே செலுத் தினுய். கனத்த இருட்டை நீக்கினுய். இந்திரனே! பசுக் களை மறைத்துள்ளதும், தன் நிலையிலிருந்து அசையாதி ருப்பதுமான மலையை ஆட்டினுய். 4,546



6. உன்னுடைய அறிவால், உன்னுடைய செயல்க ளால், உன்னுடைய ஆற்றலால், அபக்குவப் பசுக்களின் ஆபினங்களினுள் பக்குவமான பாலைத் தோற்றுவித்தாய். நீ பசுக்கள் வெளிப்பட கெட்டியான கதவுகளைத் திறந் தாய். நீ அங்கிரஸர்களோடு சேர்ந்து பசுக்களை மந்தையி லிருந்து விடுவித்தாய்.

7. இந்திரனே! உன்னுடைய செயல்களின் புகழால் பரந்த புவியை நிரப்பினுய். மகானுன நீ, மகத்தான சோதியை நிறுத்தினுய். தேவர்களைப் புதல்வர்களாக உள்ளவர்களும், பழையவர்களும், ருதத்தைத் தோற்று விக்கும் பெரியவர்களுமான இரு உலகங்களையும் நீ தாங்குகிருய்.

8. இந்திரனே! அதேவர்களான அசுரர்கள் தேவர் களை எதிர்த்தபோது எல்லாத் தேவர்களும் உன்னை போருக்காக முன்னணியிலே ஆற்றலுள்ள முதல்வனுக நிறுத்தினர்கள். மருத்துக்கள் இந்திரனைப் போரிலே ஆதரித்தார்கள்.

9. உணவையளிக்கும் இந்திரன் எதிர்த்த அஹியை நித்திய சயனத்துக்கு அடித்து சாய்த்தபோது உன்னு டைய சொந்த கோபத்துக்கும் வச்சிராயுதத்துக்கும் இரு வித பயங்களையடைந்து உனக்கு சோதி வணக்க மளித்தது

10. உக்கிரனுன இந்திரனே! துவஷ்டா, மகத்தா யுள்ள உனக்கு ஆயிரம் தாரைகளும் நூறு கணுக்களு முள்ள—பற்களுமுள்ள—வச்சிரத்தைக் கற்பித்தான். அதனுல் அவன் பேராசையும், பெருந்துணிவும், பெரும் முழக்கமுமுள்ள அஹியைக் கொன்ருன். 4,551

11. இந்திரனே! பரஸ்பரம் சேர்ந்துள்ள மருத்துக் கள் உன்னைப் போற்றி மேம்படுத்துகிருர்கள். உனக்குப் பூஷாவும், விஷ்ணுவும், நூறு மகிஷங்களைப் பக்குவப் படுத்துவார்களாக. மூன்று தாரைகள் அவனுக்கும் மதமளிக்கும் பகையழிக்கும் ஸோமத்தோடு பெருகுக.

12. நீ மகத்தாய் தடைபட்டவையும், தடுக்கப் பட்டவையுமான நதிகளின் சலங்களையும், நீர்களின் பிரவாகத்தையும் விடுவித்தாய். இந்திரனே! நீ அவற்றை இறக்க வழிகளிலே செலுத்தினாய். நீ அவற்றைக் கடலுக்குத் துரிதப்படுத்தினாய்.

13 எங்களுடைய புதிய தோத்திரமானது எங்களுடைய பாலனத்துக்காக இருக்கும் இந்தப் பொருள்களை யெல்லாம் செய்பவனும், மகானும், உக்கிரனும், தேயாதவனும், திறத்தையளிப்பவனும், வீரமருத்துக்களிருப்பவனும், கூரிய படையும், கூரிய வச்சிரம் ஏந்துபவனும், இந்திரனுமான உன்னை வருவிக்க.

14. இந்திரனே! பிரகாசமாயுள்ள விப்பிரர்களான எங்களை உணவுக்காகவும், பலத்துக்காகவும், புகழுக்காகவும் செல்வத்துக்காகவும் தாங்கவும். இந்திரனே! பரத்வாஜனை எனக்கு ஆட்களோடு அறிஞர்களையுமளிக்கவும். இந்திரனே! வருங்காலத்தில் ஒவ்வொரு தினத்திலும் நீ எங்களுடனிருக்கவும்.

15. நாங்கள் இந்தத் துதியால் தேவரால் அளிக்கப்பட்ட உணவைப் பெறுவோமாக. உத்தம வீர மக்களோடு நாங்கள் நூறு ஏமந்தங்கள் இன்புறுவோமாக. 4,556.

## 18. இந்திரன்

### 459. பரத்வாஜன் - பிரகஸ்பதியின் புதல்வன்

1. பலரால் அழைக்கப்படுபவனும், ஜயிக்கும் சக்தியுள்ளவனும், பகைவர்களை அழிப்பவனும், அவர்களால் துன்பப்படாதவனுமான இந்திரனைப் போற்றவும். இந்தத் துதிகளால், தடைபடாதவனும், உக்கிரனும், மானிடர்களுக்குப் பொழிபவனும், ஜயிப்பவனுமான இந்திரனைத் துதிக்கவும்.

2. இந்திரன் எப்பொழுதும் போர்புரிபவன், அளிப்பவன். போர்களைச் செய்பவன்; யக்ஞஞ் செய்பவனோடு



இசைந்திருப்பவன்; பலருக்கு நன்மையைப் புரிபவன்; முழங்குபவன்; சுவையற்ற ஸோமத்தைப் பருகுபவன்; புழுதியை எழுப்புபவன்; மிக்கப் புழுதியுள்ளவன்; மநு வம்சத்தில் வந்த சனங்களைப் பாலிக்கும் முதல்வன்; மிக்கப் பலமுள்ளவன்.

3. நீயே தஸ்யுக்களைத் தாழ்த்தினாய். நீ ஒருவனே சனங்களை ஆரியனுக்காக வசப்படுத்தினாய். இந்திரனே! இது உன்னுடைய வீரச்செயலா, இல்லையா? உரிய காலத்திலே நீ இதை அறிவிக்கவும்.

4. மிக்கப் பலமுள்ளவனே! நான் பல யக்ஞங்களில் புலப்படுபவனும், எங்களுடைய சத்துருக்களின் பகைவனுமான உன்னிலே எப்பொழுதும் அந்த ஆற்றல்-வீரச்செயல்-உண்டு என நினைக்கிறேன். அந்த ஆற்றல் உக்கிரனான உன்னில் உக்கிரமாயும், வலியனில் மிக்க வலிமையாயும், பகைவர்களை எதிர்ப்பதில் மிக்க எதிர்க்கப்படாததாயுமிருக்கிறது.

5. உன்னோடுள்ள எங்களுடைய பழைய நட்பு எப்பொழுதும் நிலைத்திருக்க. நீ உன்னைத் துதிக்கும் அங்கிரஸர்களோடு சேர்ந்து அற்புத இந்திரனே! அசைக்க முடியாத மலைகளை ஆட்டுபவனே! உன் மீது ஆயுதங்களைச் செலுத்திய பலனைக் கொன்றாய். அவனுடைய புரங்களை உடைத்தாய். எல்லாக் கதவுகளையுந் திறந்தாய். 4,561.

6. உக்கிரனான இந்திரனே! நீ அரசர்களைத் தோற்றுவிக்கிறாய். பெரிய போரிலே துதிகளோடு அழைக்கத் தகுந்தவன் நீயே. புதல்வர்களுக்காகவும் பேரர்களுக்காகவும் அழைக்கத் தகுந்தவன் நீயே. போர்களில் போற்றத் தகுந்த தனியனுயுள்ள அவன் வச்சிரமேந்துபவன்.

7. இந்திரன், அமுதமாயும் பகையழிப்பதாயுமான பலத்தால் மானிட சமுதாயத்தைச் செழிப்பித்தான். மிகுந்த வீரத்தன்மையுள்ள அவன், புகழோடும், பலத்

தோடும், செல்வத்தோடும், தீரத்தோடுஞ் சேர்ந்து ஒரே இடத்தில் வசிக்கிறான்.

8. அவன் சங்கிராமத்திலே கலக்கமடையாதவன். அவன் வீணான எதையும் தோற்றுவிக்கவில்லை. அவனுடைய பெயர் புகழ்பெற்றது. அவன் அசுரர்களின் புரங்களை உடைப்பதற்கும் சத்துருக்களை அழிப்பதற்கும் துரிதப்படுபவன். இந்திரனே! நீயே, சுமுரியையும், துனியையும், பிப்ருவையும், சம்பரனையும், சுஷ்ணனையும் கொன்றாய்.

9. மேலெழுவதும், பகைநயையழிப்பதும், புகழுள்ளதும், பலமுள்ளதுமான உன்னுடைய தேரிலே நீ விருத்திரனைக் கொல்ல ஏறவும். உனது வலது கையிலே வச்சிரத்தை ஏந்தவும். செல்வத்தைத் தருபவனான நீ, அசுரர்களின் மாயைகளை விலக்கவும்.

10. காய்ந்த வனத்தை எரிக்கும் அக்கினியைப் போல் இந்திரனே! உன்னுடைய ஆயுதம் பகைவர்களை அழிக்கிறது. பயங்கர ஆயுதத்தைப் போல் பயங்கரமாயிருக்கும் நீ, அரக்கர்களைப் பற்பப்படுத்தவும். உன்னுடைய தடைபடாத மகத்தான படையால் பகைவர்களைப் புடைத்த நீ, போரிலே முழங்கினாய். எல்லாத் தீமைகளையும் தகர்த்தாய். 4,566.

11. செல்வனான இந்திரனே! பலத்தின் மகனே! பலரால் அழைக்கப்படுபவனே! உன்னை பலத்திலிருந்து தனிப்படுத்த எந்த அதேவனாலும் இயலாது. நீ மிக்க ஆற்றலுள்ள வழிகளால் ஆயிரஞ் செல்வங்களோடு எங்களிடம் வா.

12. பகைவர்களை யழிப்பவனும், பழையவனும், செல்வனுமான இந்திரனுடைய மகிமையானது சோதியையும் புவியையும் முந்துகிறது. அவனுக்குப் பகைவன் இல்லை. பிரதிநிதியில்லை பேரறிஞனும் ஜயிப்பவனுமான அவனுக்குப் புகலிடமளிப்பவன் எவனுமில்லை.



13. நீ குத்ஸனையும், ஆயுவையும், அதிதிக்வனையும், உன் வீரச்செயலால் பாலித்தாய். அச்செயல் இப்பொழுதும் போற்றப்படுகிறது. நீ அதிதிக்வனுக்குப் பல்லாயிரஞ் செல்வங்களை அளித்தாய். உன்னுடைய வீரச் செயலால் புவியிலிருந்த தூர்வயாணனை விபத்திலிருந்து விலக்கி உயர்த்தினாய்.

14. தேவனான இந்திரனே! எல்லாத் தேவர்களும் அறிஞர்களில் மிக்க அறிஞனாயுள்ள உன்னை அஹியைக் கொல்லப் போற்றினார்கள். நீ போற்றப்பட்டவுடன் துன்பத்திலிருந்த வழிபடுபவனுக்கும் அவனுடைய சந்ததிக்கும் செல்வத்தைத் தந்தாய்.

15. சோதியும் புவியும் அமுதர்களான தேவர்களும் உன்னுடைய ஆற்றலைப் பின்பற்றுகிறார்கள். பல செயல்களைச் செய்பவனே! நீ இதுவரை செய்யாத செயலைச் செய்யவும். அதனால் உன்னுடைய யக்ஞங்களிலே புதிய தோத்திரத்தைத் தோற்றுவிக்கவும். 4,571.

## 19. இந்திரன்

### 460. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. அரசனைப் போல் மனிதர்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்பவனும், மகானுமான இந்திரன் இங்கு வருவானாக. இரு உலகங்களுக்குமதிகமான ஆற்றலுள்ளவனும், சத்துரு பலத்தால் துன்புறாதவனுமான இந்திரன் எங்கள் முன்னே வீரத்தைப் புலப்படுத்த செழிப்பானாக. தேகத்திலே பருத்தவனும், செயல்களில் சிறந்தவனுமான இந்திரன், யக்ஞங்களை நடத்துபவர்களால் போற்றப்படுவானாக.

2. பெரியவனும், துரிதனும், மூப்பற்றவனும், தருணனும், ஜயிக்கப்படாத ஆற்றலோடு மகத்தாயிருப்பவனும், துரிதமாய் மேன்மைக்கு உயர்பவனுமான இந்திரனை எங்களுடைய தோத்திரம் தானத்துக்காக ஊக்கப்படுத்துகிறது.

3. நீ உன்னுடைய நீண்ட ஊக்கமுள்ள ஈகைத் தன்மையுள்ள கைகளை எங்களுக்கு உணவையளிக்க இயக்கவும். இந்திரனே! பணிந்த மனமுள்ள நீ, போரிலே எங்களிடம் பசுக்களின் மந்தைகளைப் பாலிக்கும் கோபனைப் போலிருக்கவும்.

4. நாங்கள் இன்று உணவை விரும்பி, புகழுள்ளவனும், பகைவர்களை ஆற்றலுள்ள மருத்துக்களோடு சேர்ந்து அழிப்பவனுமான இந்திரனை அழைக்கிறேம். பூர்வத்தில் வழிபட்டவர்களைப் போல் நாங்களும் நிந்தையற்றும், குற்றமற்றும், துன்பமற்றுமாவோமாக.

5. இந்திரன் விரதங்களைப் பாலிப்பவன்; செல்வத்தைத் தருபவன். ஸோமத்தால் செழிப்பவன்; விரும்பத் தகுந்த செல்வங்களின் தலைவன்; உணவைத் தருபவன். வழிபடுபவர்களுக்களிக்கத் தகுந்த செல்வங்கள் கடலுக்குப் பாயும் நதிகளைப் போல் அவனிடம் சேர்கின்றன. 4,576.

6. சூரனே! இந்திரனே! நீ மிகுந்த ஆற்றலுள்ள வலிமையை எங்களுக்களிக்கவும். பகைவர்களை ஜயிப்பவனே! நீ எங்களுக்கு மிக்கத் திண்மையுள்ள திண்மையையும் உக்கிரத்தையுமளிக்கவும். குதிரைகளுள்ளவனே! நீ எங்களை இன்பப்படுத்த மானிடர்களுக்குத் தகுந்தவையும், பிரகாசிப்பவையும், பலப்படுத்துபவையுமான செல்வங்களையெல்லாம் எங்களுக்களிக்கவும்.

7. இந்திரனே! உன்னால் பாலிக்கப்பட்டு வெற்றி பெறும் நாங்கள், புதல்வர்களுக்காகவும், பேரர்களுக்காகவும், உன்னைப் போற்ற உன்னுடைய பகைவர்களை ஜயிப்பதும், தடைபடாததும், ஊக்கமளிப்பதுமான எக்களிப்பை எங்களுக்களிக்கவும்.

8. இந்திரனே! உன்னுடைய பாலனத்தால் போர்களிலே சத்துருக்களான பந்துக்களையோ, மற்றவர்களையோ ஜயிக்க, உன்னுடைய செல்வத்தைத் தருவதும், சிறந்ததும் மிக்கச் சக்தியுள்ளதும், பொழிவதுமான பலத்தை எங்களுக்கு அளிக்கவும்.



9. உன்னுடைய பலப்படுத்தும் பலம், மேற்கிலிருந்தும், வடக்கிலிருந்தும், தெற்கிலிருந்தும், கிழக்கிலிருந்தும் வருக. அது ஒவ்வொரு திசையிலிருந்தும் எங்களிடம் வருக. நீ சுகத்தோடுள்ள செல்வத்தை எங்களுக்களிக்கவும்.

10. நாங்கள் உன்னுடைய வீரத்தன்மையுள்ள பாலனங்களால், சந்ததிகளும், சிறப்புமுள்ள விரும்பத் தகுந்த செல்வத்தை அனுபவிப்போமாக. சோதியிலுள்ள புவியிலுள்ள செல்வங்களின் அரசனுன நீ, பரந்த, விரும்பத் தகுந்த அனந்தமான செல்வத்தை எங்களுக்களிக்கவும். 4,581.

11. நாங்கள் இங்கு புதிய பாலனத்துக்காக, மருத்துக்களோடுள்ளவனும், பொழிபவனும், வளர்பவனும், நிந்தையற்ற அற்பமற்ற பகையுள்ளவனும், திவ்யனும், அரசு புரிபவனும், அனைத்தையும் ஜயிப்பவனும், உக்கிரனும், பலத்தைத் தருபவனுமான அந்த இந்திரனை அழைக்கிறேம்.

12. படை ஏந்துபவனே! தானிருக்கும் சனங்களின் நடுவே தன்னையே மிக்க மேலானவன் என எண்ணிக் கொள்பவனைத் தாழ்த்தவும். புவியிலே போர் நிகழ்வதால் நாங்கள் புதல்வரையும் பசுக்களையும் சலங்களையுமடைய உன்னை இப்பொழுது அழைக்கிறேம்.

13. புருஹூதனே! இந்த நட்புத் தன்மைகளுள்ள துதிகளால் நாங்கள் ஒவ்வொரு பகைவனை ஜயிப்பவர்களாயிருப்போமாக. சூரனே! நாங்கள் பந்துக்கள், பந்துக்களில்லாத இருவிதப் பகைவர்களைக் கொன்று உன்னால் பாலனமாகி மிகுந்த செல்வங்களோடு இன்புறுவோமாக. 4,584.

# 20. இந்திரன்

## 461. பரத்வாஜன் – பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்திரனே! ஆற்றலின் மகனே! ஆயிரஞ் செல்வங்களை ஏந்துபவனும், பண்பட்ட நிலங்களுள்ளவனும், பகைவர்களைத் தாழ்த்துபவனும், புவியைக் கதிர்களால் ஆக்கிரமிக்கும் சூரியனைப் போல் போர்களிலே சத்துரு சனங்களை ஆக்கிரமிப்பவனுமான புதல்வனை, செல்வத்தையளிக்கவும்.

2. இந்திரனே! உன்னிலே சூரியனில் போல் எல்லா பலமும் தேவர்களால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. சுவையற்ற ஸோமரஸத்தைப் பருகும் நீ, விஷ்ணுவோடு சேர்ந்து சலங்களைத் தடை செய்த அஹியைக் கொல்ல, அந்தப் பலம் புலனாகிறது.

3. அழிப்பவனும், மிக்க வலியனும், வலியர்களில் வலியனும், உணவை அளிப்பவனும், மிகுந்த ஒளியுள்ளவனும். அசுரபுரங்களைப் புடைப்பவனுமான இந்திரன், வச்சிராயுதத்தைப் பெற்றவுடன் இனிய ஸோமரஸத்தின் தலைவனானான்.

4. இந்திரனே! பணிகள் நூறு அசுரர்களோடு உன்னை வழிபட்ட அறிஞனான குத்ஸனிடமிருந்து பயந்தோடினார்கள். மிக்க வலிமையுடனிருந்த சுஷ்ணனின் மாயைகளால் இந்திரன் ஏமாற்றப்படவில்லை. அவனுடைய ஆயுதங்களும் தடைபடவில்லை. அவன் அவர்களுடைய உணவை எல்லாம் பறித்தான்.

5. வச்சிரம் செலுத்தப்பட்டு சுஷ்ணன் இறந்தான். மகத்தான துருஹனின் பலமெல்லாம் மறைந்தது. சூரியனைப் போற்றுவதற்காகத் தன் ஸாரதியான குத்ஸனுக்கு ஸமத்தேரிலே இடத்தைச் செய்தான். 4,589.

6. இந்திரன் வருத்துபவனான நமூசியின் தலையைத் திருகிய போது மதமளிக்கும் ஸோமத்தைப் பருந்து ஏந்தி வந்தது. இந்திரன் உறக்கத்திலிருந்த ஸபனுடைய



புதல்வனான நமீயைப் பாலித்தான். ரிஷியின் க்ஷேமத்துக்கு, அவனுக்கு உணவையும் செல்வத்தையும் தந்தான்.

7. நீ அஹிமாயனான பிப்ருவின் பலத்த கோட்டைகளை உன் பலத்தால் இடித்தாய். வச்சிரமேந்துபவனே! இந்திரனே! உத்தம தானமுள்ள நீ, அவியளிக்கும் ரிஜிசுவனுக்குத் தடைபடாத செல்வத்தை அளித்தாய்.

8. சுகத்தையளிக்கும் இந்திரன் பலவித வஞ்சனைகளுள்ள ஏதஸனையும், தசோனியையும், துதுஜியையும், துக்கரனையும், இபனையும், தியோதனனான அரசனுக்கு அன்னைக்கு மகனைப் போல் வசப்படுத்தினான்.

9. பகையழிக்கும் வச்சிரத்தை ஏந்தும் இந்திரன், தடைபடாமல் இந்த எதிரிகளைப் புடைத்து, தேரிலே ஏறும் வீரனைப் போல் தன்னுடைய இரு குதிரைகளுள்ள தேரிலே ஏறுகிறான். அவனுடைய மொழியால் இணையும் குதிரைகள் மகானான இந்திரனை ஏந்திச் செல்லுகின்றன.

10. இந்திரனே! நாங்கள் உனது பாலனத்தோடு உன்னிடம் புதிய செல்வத்தை விரும்புகிறோம். நீ, சத்துரு பிரசைகளைக் கொன்று அவர்களுடைய செல்வங்களைப் புருகுத்ஸனுக்களித்தாய். நீ சரத்தினுடைய ஏழு நகரங்களை உன் வச்சிரத்தால் இடித்தாய். ஆதலால் மனிதர்கள் யக்ஞங்களிலே இந்தத் துதியால் உன்னைப் போற்றுகிறார்கள். 4,594.

11. இந்திரனே! பழையவனான நீ, கவியின் புதல்வனான உசனனுக்குச் செல்வத்தை விரும்பி அவனைச் செழிப்பித்தாய். நீ நவவாஸத்வனைக் கொன்று போரிலே பகைவரால் பிடிக்கப்பட்டிருந்த புதல்வனை மகத்தான பாலகனாயுள்ள உசனனிடம் சேர்ப்பித்தாய்.

**12. இந்திரனே! பகைவர்களுக்கு நடுக்கமளிக்கும் நீ, துனியால் தடுக்கப்பட்ட சலங்களை, பாயும் நதிகளைப் போல் பெருகச் செய்தாய். சூரனே! நீ கடலைக் கடந்து கரையில் சேர்ந்தவுடன் துர்வசனையும், யதுவையும், பத்திரமாய்க் கடத்திச் சேர்த்தாய்.**

18. இந்திரனே! போரிலே இவ்வனைத்தும் உன்னுடைய செயலாகிறது. நீ தூங்கும் துனியையும், சுமுரியையும் சங்கிராமத்தில் நித்தியமாய் சயனப்படுத்தினாய். அப்பால் தபீது ஸோமத்தைப் பொழிந்து, அவிகளைப் பக்குவப்படுத்தி, ஸமித்தையளித்து, உன்னைச் சொற்களோடும் ஸோமங்களோடும் போற்றினான். 4,597.

## 21. இந்திரன்

### 462. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. மிகுந்த விருப்பமுள்ள வழிபடுபவனுடைய இந்த ஆர்வமுள்ள துதிகள் சூரனே! இந்திரனே! போற்றுவதற்குரிய உன்னைப் போற்றுகின்றன. தேயாதவனும், தேரிலிருப்பவனும், சதா புதியவனாயிருப்பவனுமான உன்னிடம் மிக்க உத்தமச் செழுமையுடனிருக்கும் செல்வம் வருகிறது.

2. இந்திரன் மிகுந்த மாயையுள்ளவன். அவனுடைய மகிமை சோதிபுவிகளின் மகிமைகளை முந்துகிறது. அவன் அனைத்தையுமறிகிறான். யக்ஞங்களால் போற்றப்படுபவனும். துதிகளால் ஏத்தப்படுபவனுமான அவனை நான் போற்றுகிறேன்.

3. அவன் மங்கலாயிருப்பதும் பரந்திருப்பதுமான இருட்டைச் சூரியனால் ஒளிப்படுத்தினான். ஆற்றலுள்ளவனே! அமிருதனான உன்னுடைய இருப்பிடத்தைப் போற்ற விரும்புபவர்கள் உயிருள்ள எதையும் துன்புறுத்தார்கள்.

4. இந்த விரச்செயல்களை நடத்திய அந்த இந்திரன் இப்பொழுது எங்கே இருக்கிறான்? அவன் எந்த இடத்துக்கு எவனிடம் போகிறான்? எந்த சனங்களின் நடுவே அவன் வசிக்கிறான்? இந்திரனே! எந்த யக்ஞம் உனது மனத்துக்கு சுகத்தைத் தருகிறது? உன்னைத் திருப்தி செய்ய சக்தியுள்ள துதி எது? உன்னால் விரும்பப்படும் ஹோதா எவன்?



5. பலரால் போற்றப்படுபவனே! பல செயல்களை நடத்துபவனே! பூர்வத்திலே, நடுக்காலத்திலே, நவீனத்திலே தோன்றி இப்பொழுது இருப்பவர்களை நடத்திய இவர்கள் உன்னுடைய நண்பர்களாயிருந்தார்கள். ஆதலால் பலரால் போற்றப்படும் நீ, அந்தத்திலிருந்து உன்னை வழிபடும் என்னை அறிந்து கொள்ளவும். 4,602.

6. வீரனே! இந்திரனே! வழிபடுபவர்கள் பணிவோடு உன்னுடைய சிறந்தவையும், பழையவையும், புகழ்பெற்றவையுமான செயல்களைப் போற்றுகிறார்கள். இங்கு நாங்களும், துதியால் ஏத்தப்படுபவனும், மகானுமான உன்னை நாங்கள் அறிந்துள்ள உன்னுடைய மகத்தான அந்தச் செயல்களுக்காக உன்னைப் போற்றுகிறோம்.

7. அரக்கனுடைய ஆற்றல் உன்னை எதிர்க்கச் சேர்ந்திருக்கிறது. மகத்தாய்த் தோன்றும் அந்த ஆற்றலை நீ எதிர்த்து நிற்கவும். வீரனான இந்திரனே! நீ உன்னுடைய பழைய தோழனும் நண்பனுமான வச்சிராயுதத்தால் அப்பலமுள்ள அரக்கர்களை விலக்கவும்.

8. வீரனே! இந்திரனே! துதிப்பவர்களைத் தாங்கும் நீ, இப்பொழுது துதிப்பவனின் துதிகளைக் கேட்கவும். ஏனெனில் பூர்வ கால யக்ஞங்களிலே எங்களுடைய முன்னோர்களின் பந்துவை – அழைப்புக்களை – நீ செவியுற்றாய்.

#### விசுவே தேவர்கள்

9. பரத்வாஜனே! இப்பொழுது எங்களுடைய காப்புக்கும் பாலனத்துக்கும் வருணனையும், மித்திரனையும், இந்திரனையும், மருத்துக்களையும், பூஷாவையும், விஷ்ணுவையும், பல செயல்களுள்ள அக்கினியையும், ஸவிதாவையும், ஓஷதிகளையும், மலைகளையும் போற்றவும்.

#### இந்திரன்

10. வழிபடும் இவர்கள் மிகுந்த பலமுள்ளவனும் மிக்கப் போற்றத் தகுந்தவனுமான உன்னைப் பாக்க

ளோடு போற்றுகிறர்கள். அழைக்கப்படும் நீ, அழைப்பவனுடைய அழைப்பைக் கேட்கவும். அமிருதனே! உனக்குச் சமமான தேவன் வேறு எவனுமில்லை.

விசுவே தேவர்கள்

11. பலத்தின் மகனே! அனைத்தையும் அறியும் நீ, பகைவர்களை ஜயிக்கும் மநுவுக்கு ஆற்றலை அளித்தவர்களும், அக்கினியின் நாக்கால் ருதத்தைப் பற்றுபவர்களும், துதியாருகர்களுமான தேவர்களோடு என்னுடைய துதிக்குச் சீக்கிரம் வா.

இந்திரன்

12. வழிகளைக் கற்பிப்பவனே! அனைத்தையும் அறியும் நீ, சுலப வழிகளிலோ, கஷ்ட வழிகளிலோ எங்களுக்குத் தலைவனுகவும். இந்திரனே! நீ உன்னுடைய களைப்படையாதவையும், பெரியவையும், மிகுந்த சுமைகளைத் தாங்குபவையுமான குதிரைகளோடு எங்களுக்கு உணவை ஏந்தி வா. 4,609

## 22. இந்திரன்

### 463. பரத்வாஜன் - பிரகஸ்பதியின் புதல்வன்

1. நான் இந்தத் துதிகளால், வழிபடுபவர்களிடம் வருபவனும், விருஷபனும், வலியனும், ஸத்தியனும், சத்துருக்களை ஜயிப்பவனும், மனிதர்களால் அழைக்கத் தகுந்த தனியனுமான இந்திரனைத் துதிக்கிறேன்.

2. பழைய பிதாக்களும் நவக்வர்களுமான ஏழு விப்பிரர்கள், பகைவர்களைத் தாழ்த்துபவனும், சோதிகளிலே சுற்றுபவனும், மேகங்களிலே வசிப்பவனும், துரோகமில்லாத மொழியுள்ளவனும், மிகுந்த பலமிருப்பவனுமான இந்திரனுக்குத் துதிகளை அளித்தார்கள். அவிகளைத் தந்தார்கள்.

3. நாங்கள் பலமக்களுள்ளதும், ஆட்கள் நிறைந்ததும், மிகுந்த உணவுள்ளதுமான செல்வத்தை அடைய இந்திரனை நாடுகிறேம். குதிரைகளின் தலைவனே! பின்



னப்படாததும், அழியாததும், சுகத்தைத் தருவதுமான பொருளை எங்களை இன்புறுத்த நீ அளிக்கவும்.

4. இந்திரனே! உன்னை வழிபடுபவர்கள் பூர்வத்தில் பெற்ற சுகத்தை நீ எங்களுக்கு அளிக்கவும். தடைபடாதவனே! பகை தாழ்த்துபவனே! பலரால் அழைக்கப்படுபவனே! மிகுந்த செல்வமுள்ளவனே! அசுரர்களைக் கொல்பவனே! யக்ஞத்திலே உனக்குரிய பாகம் எது? அவி எது?

5. வச்சிரத்தை ஏந்துபவனும், தேரில் அமர்ந்து பலவற்றை ஏற்பவனும், பல செயல்களை நடத்துபவனும், பலத்தை யளிப்பவனுமான எவன், சொல்லோடும் செயலோடும் வழிபடுகிருனே அவன் சுகத்தைப் பெறச் செல்லுகிறன். தீரத்தோடு பகைவனை எதிர்க்கிறன். 4,614

6. சொந்த பலமுள்ள நீ, மனே வேகமுள்ளதும், கணுக்களுமுள்ள படையால் இந்த மாயையோடு வளர்ந்த விருத்திரனைக் கொன்ருய். மிக்க ஒளியுள்ளவனும் மிகுந்த வலிமையுள்ளவனுமான இந்திரனும் நீ, உன்னுடைய எதிர்ப்பற்ற படையால், அசுரர்களின் இணக்கமற்ற, கடினமான, திடமான கோட்டைகளை இடித்தாய்.

7. பழையவனும் மிக்க வலியனுமான இந்திரனின் புகழைப் பூர்வத்தில் போல் இப்பொழுது நான் துதியால் பரத்தும் பணியிலிருக்கிறேன். எல்லையற்றவனும், நன்கு ஏந்திச் செல்பவனுமான இந்திரன், எங்களை எல்லாத் துன்பங்களிலிருந்தும் கடத்திச் செல்வானுக.

8. துன்புறுத்தும் அரக்கர்களின் இனத்துக்காகப் புவியிலும் சோதியிலும், நடு வானிலுமுள்ள இடங்களைத் தாபப்படுத்தவும். விருஷபனே! உன்னுடைய தாபத்தால் அவர்களை எங்கும் பஸ்பப்படுத்தவும். பிரம்மத்துவேஷிகளை பஸ்மப்படுத்த சோதியையும் புவியையும் தாபப்படுத்தவும்.

9. இந்திரனே! பிரகாசிக்கும் தோற்றமுள்ளவனே! சோதியில் தோன்றும் சனங்களுக்கு நீ அரசன். புவியில் தோன்றும் சலன சீவன்களுக்கும் நீ அரசன். நீ உனது வலது கையிலே வச்சிராயுதத்தை ஏந்தவும். அமிருதனே! நீ எல்லா மாயைகளையும் அழிக்கிறாய்.

10. நாங்கள் பகைவர்களைக் கொல்ல மகத்தாயிருப்பதும், தடைபடாமலுள்ளதும், திரண்டிருப்பதுமான ஸ்வஸ்தியை எங்களுக்களிக்கவும். நீ ஸ்வஸ்தியால் தாஸர்களை ஆரியப்படுத்தினாய். நாஹுஷாகளின்-மானிடர்களின்-ஆயுதங்கள் ஓங்குக. விருத்திரர்கள் ஏங்குக.

11. பலரால் அழைக்கப்படுபவனே! படைப்பவனே! யக்ஞாருகனே! அனைவராலும் போற்றப்படும் குதிரைகளோடு எங்களிடம் வா. உன்னுடைய குதிரைகள் எந்தத் தேவனாலும் அசுரனாலும் தடுக்கப்படாதவை. அவற்றோடு எங்கள் முன்னே விரைந்து வா. 4,620

## 23. இந்திரன்

### 464. பரத்வாஜன் - பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்திரனே! ஸோமம் பிழியப்பட்டு மகத்தான ஸ்தோம சந்தத்தோடு தோத்திரங் கூறப்படுங்கால் நீ உன்னுடைய குதிரைகளை இணைக்க ஆயத்தமாகவும். மகவானே! உன்னுடைய இணைக்கப்பட்ட குதிரைகளோடு உனது கையிலே வச்சிராயுதத்தை ஏந்திக் கொண்டு இங்கு வா.

2. நீ சோதியிலே சத்துருக்களோடு வீரர்களை ஊக்கப்படுத்தும் போரிலே போராடுங்கால் ஸோமம் பொழிபவனைப் பாலிக்கிறாய். அச்சமற்ற இந்திரனே! யக்ஞத் திறமுள்ளவனும், பயந்தவனுமான வழிபடுபவனைத் துன்புறுத்தும் தஸ்யுக்களை நீ தாழ்த்துகிறாய். ஆனாலும் ஸோமத்தைப் பிழிந்தவுடன் நீ வா.

3. வழிபடுபவனைப் பாலனத்துக்குச் செலுத்தும் உக்கிரனான இந்திரன் பொழிபவனுடைய ஸோமத்தைப்



பருகுபவனாகுக. ஸோமத்தைத் தருபவனுக்கு அவன் உலகத்தைத் தருபவனாகுக. துதிக்கும் மனிதனுக்கு அவன் செல்வத்தைத் தருபவனாகுக.

4. வச்சிராயுதத்தை ஏந்துபவனும், ஸோமத்தைப் பருகுபவனும், பசுக்களை யளிப்பவனும், பலவித சந்தானங்களையும் வீரப்புதல்வர்களையு மளிப்பவனும், வழிபடுபவனுடைய அழைப்பைச் செவியுறுபவனும், நம்முடைய துதிகளைப் பற்றுபவனுமான இந்திரன் தினந்தோறும் நடைபெறும் பல யக்ஞங்களுக்குக் குதிரைகளோடு வருவானாகுக.

5. நாங்கள், எங்களுக்குப் புட்டிச் செயலைச் செய்த பழைய இந்திரனுக்கு அவனால் விரும்பப்படும் தோத்திரத்தைக் கூறுகிறோம். இந்திரனுக்கு அளிக்கப்படும் அவி அவனை மேம்படுத்துக என்னும் முழக்கத்தோடு ஸோமம் பொழியப்படுங்கால் நாங்கள் அவனைப் போற்றுகிறோம். 4,625

6. இந்திரனே! நீ உன்னை வலிமை செய்துகொள்ள தோத்திரங்களைச் செய்தாய். நாங்கள் உனக்கு அத்தகைய துதிகளைக் கூறுகிறோம். நாங்கள் எங்களது யக்ஞங்களோடு திருப்தி செய்யும் இதமான தோத்திரங்களை ஸோமத்தைப் பருகும் உனக்குக் கூறுவோமாக.

7. இந்திரனே! நீ இணக்கமாகி எங்களுடைய புரோடாசத்தைப் பெற்றுக் கொள்ளவும். தயிரோடு கலந்த ஸோமத்தைப் பருகவும். வழிபடுபவனால் பரத்தப்பட்ட தருப்பையின் மீது அமரவும். உன்னை விரும்புபவனுக்கு உலகத்தைப் பரத்தவும்.

8. உக்கிரனான இந்திரனே! நீ உன் விருப்பம் போல் இன்புறவும். இந்த யக்ஞங்கள் உன்னிடம் சேர்க. பலரால் அழைக்கப்படும் உனக்கு எங்களுடைய இந்தத் தோத்திரங்கள் எழுக. இந்தத் துதி உன்னை எங்களுக்குப் பாலனஞ் செய்ய ஊக்கப்படுத்துக.

9. நண்பர்களே! ஸோமங்கள் பிழியப்பட்டவுடன் இனிய பானங்களால் இந்திரனைத் திருப்தி செய்யுங்கள். அவனுக்கு மிகுந்த ஸோமத்தை அளியுங்கள். அவற்றால் அவன் எங்களைப் புட்டிப்படுத்துகிறான். மிகுந்த ஸோமமளிப்பவனைப் பாலிக்க இந்திரன் எப்பொழுதும் பராமுகமாயிரான்.

10. ஸோமம் பொழியப்பட்டவுடன் அவிச் செல்வவின் தலைவனான இந்திரன், பரத்வாஜனான என்னால் வழிபடுபவனை நலத்துக்குச் செலுத்தவும், அவன்-இந்திரன்-விரும்பத் தகுந்த எல்லாச் செல்வங்களையுமளிக்கப் போற்றப்படுகிறான். 4,680

## 24. இந்திரன்

### 465. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. ஸோமத்தைப் பொழியப்படும் யக்ஞங்களிலே இந்திரனில் தோன்றும் மதம் நலத்தைப் பொழிகிறது. சுலோகத்தோடு இசைக்கப்படும் பாட்டிலே, மதம் நலத்தைப் பொழிகிறது. ஆதலால் ஸோமத்தைப் பருகுபவனும், பழைய ரஸத்தைக் குடிப்பவனுமான மகவான், துதிகளோடு மனிதர்களால் ஏத்தத் தகுந்தவனாயிருக்கிறான். சோதியில் வசிக்கும் அவன் துதிகளின் அரசனாயிருக்கிறான். அழியாத பாலகனாயுமிருக்கிறான்.

2. பகைவர்களைத் துன்புறுத்துபவனும், வீரனும், மனிதர்களுக்கு இதஞ் செய்பவனும், பகுத்தறிபவனும், வழிபடுபவர்களின் பரந்த பாலகனும், மனைகளை அளிப்பவனும், நரர்களை நடத்துபவனும், ஏத்துபவர்களை ஏந்துபவனும், உணவையளிப்பவனுமான இந்திரன், யக்ஞத்திலே போற்றப்படுங்கால் எங்களுக்கு உணவையளிக்கிறான்.

3. சூரனே! மகானான உன்னுடைய மகிமை சோதி புவிகளின் மேன்மையை-சக்கரங்களின் வட்டத்தினது மேன்மையை-அச்சுப்போல் முந்துகிறது. புருஹூதனே!



இந்திரனே! உன்னுடைய பல பாலனங்கள் மரத்தின் கிளைகளைப் போல் எழுகின்றன.

4. பல செயல்களை நடத்துபவனே! அறிஞனே! உன்னுடைய செயல்கள் பட்டிக்குச் செலுத்தும் பசுக்களின் பரந்த வழிகளைப் போல் பரவியிருக்கின்றன. ஈகை மனமுள்ள இந்திரனே! உன்னுடைய கட்டுக்கடங்காத செயல்கள் கன்றுகளைக் கட்டும் கயிறுகளைப் போல் பகைவர்களைக் கட்டுபவையாயிருக்கின்றன.

5. இந்திரன் இன்று ஒரு செயலை நடத்துகிறான். மறு தினம் வேறு செயலை நடத்துகிறான். அடிக்கடி நன்மையையும் புன்மையையும் மாறி மாறிச் செய்கிறான். அவனும், மித்திரனும், வருணனும், ஆரியனும், இந்த யக்ஞத்திலே எங்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்பவர்களாயிருப்பார்களாக. 4,685.

6. இந்திரனே! மனிதர்கள் யக்ஞங்களாலும் துதிகளாலும் அவர்கள் விரும்புவதை உன்னிடமிருந்து மலையின் உச்சியிலிருந்து இறங்கும் சலங்களைப் போல் இறக்குகிறார்கள்-பெறுகிறார்கள். துதியால் சேரத் தகுந்த உன்னை இந்தத் துதிகளோடு உணவை விரும்பி, போருக்குப் பாயும் குதிரைகளைப் போல் ஊக்கமாகி அணுகுகிறார்கள்.

7. இந்திரன் மாதங்களாலும் வருடங்களாலும் மூப்பாகான். தினங்களாலும் மெலிந்தவனாகான். துதிகளாலும் தோத்திரங்களாலும் உயர்த்தப்படும் மகத்தான இந்திரனின் தேகம் செழிப்புடனாகுக.

8. போற்றப்பட்டாலும் இந்திரன், திடமாயிருப்பவனுக்கும், திரமாயிருப்பவனுக்கும், தஸ்யுக்களால் தூண்டப்பட்டு ஊக்கமாயிருப்பவனுக்கும் வசமாகான். இந்திரனுக்குப் பெரிய மலைகளும் சுலப வழிகளாகின்றன. ஆழத்திலும் அவன் நிலையைக் காண்கிறான்.

9. ஸோமத்தைப் பருகுபவனும் ஆற்றலுள்ளவனுமான இந்திரன், ஆழமுள்ளதும் அகலமுள்ளதுமான மனத்தோடு எங்களுக்கு உணவையும் பலத்தையுமளிப்பானாக. இன்னலற்ற நீ எங்களைப் பாலிக்கத் தினந்தோறும் கவனமுடனிருக்கவும்.

10. இந்திரனே! போரிலே தலைவனைப் பாலிக்க அவனைப் பின்பற்றவும். அருகிலோ, தூரத்திலோ இருக்கும் பகைவனிடமிருந்து அவனைப் பாலிக்கவும். மனையிலோ, வனத்திலோ இருக்கும் பகைவனிடமிருந்து அவனைப் பாலிக்கவும். உத்தம வீரப்புதல்வர்கள் உள்ள நாங்கள் நூறு வருஷங்கள் இன்புறுவோமாக. 4,640.

## 25. இந்திரன்

### 466. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. ஆற்றலுள்ள இந்திரனே! உன்னுடைய இந்தச் சிறிய, பெரிய, இடையான பாலனங்களால் எங்களுடைய பகைவர்களைக் கொல்ல, போரிலே எங்களைப் பாலிக்கவும். உக்கிரனே! மகானான நீ எங்களுக்கு அவசியமாயிருக்கும் உணவுகளை அளிக்கவும்.

2. இந்திரனே! இந்தத் துதிகளால் இன்பமாகி, எதிர்க்கும் படைகளைத் துன்புறுத்தி, எங்கள் சேனைகளைப் பாலித்து, பகைவனின் கோபத்தை விலக்கவும். இந்தத் துதிகளால் ஊக்கமாகி எல்லாப் பகைவர்களையும் ஒவ்வொரு திசைக்கும் துரத்தவும். ஆரியனுக்கு எல்லாத் தாஸப்பிரசைகளையும் தாழ்த்தவும்.

3. இந்திரனே! எங்கள் முன்னே எங்களை அழிக்கப் பகைவர்களாக அணிவகுத்து நிற்பவர்களை அவர்கள் பந்துக்களாயிருந்தாலும் அல்லது பந்துத்வமில்லாமலிருந்தாலும் அவர்களுடைய படைபலத்தை யழிக்கவும். அவர்களுடைய திறத்தைத் தளர்த்தி அவர்களை ஓடச் செய்யவும்.



4. எதிர்த்துக் கொள்ளும் இரு படைகள் புதல்வர்களுக்காகவும், பேரர்களுக்காகவும், பசுக்களுக்காகவும், சலத்துக்காகவும், நிலத்துக்காகவும், போரிலே போராடுங்கால், அங்கு சமருக்கு வலியாங்கங்களோடு இரு வீரர்கள் பரஸ்பரம் எதிர்த்து நிற்கும்போது மிக்க வலியாங்கமுள்ள வீரன் மற்றவனைக் கொல்லுகிறான்.

5. இந்திரனே! உன்னை எவனும் தடைப்படுத்தான். போரிலே உன்னை எந்த வீரனுமணுகான். துன்புறுத்துபவனும் அண்டான். எந்தத் தீரனுமணுகான். தன் திறத்தில் நம்பிக்கையுள்ளவனுமணுகான். இவர்களிலே எவனும் உனக்கு நிகரில்லை. நீ இந்தச் சூரர்களையெல்லாம் முந்துகிறாய்.

6. வலிய சத்துருவை வீழ்த்துவதற்காகவோ, ஆட்களோடு நிறைந்த மனைகளைப் பெறுவதற்காகவோ, போரிலே இரு படைகள் போராடுங்கால் இந்திரனை அழைக்கும் அறிஞர்களின் மனிதன் செல்வத்தை ஜயிக்கிறான்.

7. ஆதலால் இந்திரனே! உன்னுடைய சனங்கள் பயத்தால் பதறுங்கால் நீ அவர்களைப் பாலிக்கவும். எங்களுடைய முதன்மையான தலைவர்களையும், எங்களை முற்படுத்தி உன்னை வழிபடுபவர்களையும் நீ பாலிக்கவும்.

8. இந்திரனே! மகத்தான உனக்கு செல்வத்துக்காகவும் பகைவனைக் கொல்வதற்காகவும் ஆற்றல் எல்லாம் அளிக்கப்பட்டிருக்கிறது. போற்றத் தகுந்த இந்திரனே! தகுந்த க்ஷத்திரமும் தகுந்த சக்தியும் போரிலே தேவர்களால் உனக்களிக்கப்பட்டிருக்கின்றன.

9. இந்திரனே! நீ எங்களால் போற்றப்பட்டு நாங்கள் போரிலே பகைவர்களை ஜயிக்க எங்களை ஊக்கப்படுத்தவும். துன்புறுத்தும் தூய்மையற்ற பகைவர்களைத் தாழ்த்தவும். பரத்வாஜர்களான நாங்கள் உன்னைப் போற்றி மிகுந்த உணவோடு மனைகளைப் பெறுவோமாக. 4,649.

## 26. இந்திரன்

### 467. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்திரனே! நாங்கள் மிகுந்த உணவைப் பெற ஸோமத்தையளித்து உன்னை அழைக்குங்கால் நீ எங்களுக்குச் செவி சாய்க்கவும். வரப்போகும் தினத்திலே போருக்காக மனிதர்கள் அணி வகுக்குங்கால் நீ உன்னுடைய உக்கிர பாலனத்தை எங்களுக்களிக்கவும்.

2. வாஜினியின் புதல்வனான பரத்வாஜன் அவிகளை யளித்து, பெறுவதற்கரிய மிகுந்த உணவைப் பெற உன்னை அழைக்கிறான். இந்திரனே! அவன் நல்லவர்களைப் பாலிப்பவனும், பகைவர்களால் எதிர்க்கப்படுங்கால் துட்டர்களிடமிருந்து பாலிப்பவனுமான உன்னைப் பாலிக்கிறான். அவன் தன் கை முட்டிகளை எழுப்பி, பசுக்களுக்காகப் போராடுங்கால் உன்னை எதிர்பார்க்கிறான்.

3. நீ கவி; ஒளியைப் பெற அவனை ஊக்கப்படுத்துகிறாய். நீ அவியை அளித்த குத்ஸனுக்காக சுஷ்ணனைத் துணித்தாய். நீ அதிதிக்வனுக்கு சுகத்தை யளிக்க விரும்பி கொல்லப்பட மருமாங்கம் இல்லாதவன் எனத் தன்னை நினைத்திருந்த சம்பரனின் தலையை நீக்கினாய்.

4. நீ விருஷபனிடம் பெரிய போர்த் தேரைச் சேர்ப்பித்தாய். பத்து தினங்களாகப் போர் புரிந்த அவனைப் பாலித்தாய். நீ துக்ரனை வேதசுவோடு கொன்றாய். நீ உன்னைப் போற்றிய துஜியை மேம்படுத்தினாய்.

5. சத்துருக்களைக் கொல்லும் இந்திரனே! நீ புகழுக்குரிய செயல்களை நடத்தினாய். சூரியனே! நீ சம்பரனின் நூறும் ஆயிரமுமான படைகளை உடைத்தாய். நீ, தாஸனான சம்பரன் மலையிலிருந்து வெளியில் வந்த போது அவனைக் கொன்றாய். நீ திவோதாஸனை அற்புத பாலனங்களால் பாலித்தாய்.

6. சிரத்தையுடனளிக்கப்பட்ட ஸோமத்தால் இன்பமாகி, தபீதிக்காகச் சுமுரியை, நீ நித்திய சயனத்தில் சாய்த்தாய். இந்திரனே! நீ பிடீனஸனுக்குக் கன்னிகையான இராஜியைத் தந்து, உன்னறிவால் அறுபதினாயிரம் படைகளை உடனே அழித்தாய்.



7. இந்திரனே! வீரர்களோடு சேர்ந்தவனே! மிக்க வலியனே! பகைவர்களைத் தாழ்த்துபவனே! வீரர்கள், பகைவர்களைப் பந்தப்படுத்தும் உன்னால் அளிக்கப்பட்ட சுகத்தையும் பலத்தையும் போற்றுகிறார்கள். அங்ஙனம் நானும் எனது வழிபடுபவர்களோடு உன்னால் அவர்களுக்களிக்கப்பட்ட அப்புகழுள்ள சுகத்தையும் பலத்தையும் பெறுவேனாக.

8. துதியாருகனான இந்திரனே! உன்னுடைய நண்பர்களான நாங்கள் செல்வத்துக்காகக் கூறப்படும் இந்த தோத்திரத்திலே உனக்குப் பிரியமுள்ளவர்களாவோமாக. பிரதர்தனனுடைய புதல்வனான க்ஷத்திரஸ்ரீ விருத்திரர்களைக் கொல்வதிலும் செல்வங்களைக் குவிப்பதிலும் மிக்க உத்தமனாயிருப்பானாக. 4,657.

## 27. இந்திரன்

### 468. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்த ஸோமமதத்திலே இந்திரன் எதைச் செய்தான்? இந்த ஸோமத்தைப் பருகியவுடன் அவன் எதைச் செய்தான்? இந்த ஸோமத்தின் நட்பிலே அவன் எதைச் செய்தான்? உன்னைப் போற்றிய பழையவர்களும் போற்றும் புதியவர்களும் இந்த ஸோம ஸதனத்திலே உன்னிடமிருந்து எதைப் பெற்றார்கள்?

2. இந்த ஸோமமதத்திலே இந்திரன் நல்ல செயலைச் செய்தான். ஸோமத்தைப் பருகி அவன் நல்ல செயலைச் செய்தான். அவன் இந்த ஸோமத்தின் நட்பிலே நல்ல செயலைச் செய்தான். உன்னைப் போற்றிய பழையவர்களும், போற்றும் புதியவர்களும் இந்த ஸோம ஸதனத்திலே உன்னிடமிருந்து நல்லதைப் பெற்றார்கள்.

3. மகவானே! நாங்கள் உன்னுடைய எல்லா மகிமைகளையும் அறியோம். நாங்கள் உன்னுடைய

செழுமைச் செல்வங்களையும் அறியோம். உன்னுடைய துதியாருகமான எல்லாச் செல்வத்தையுமறியோம். உன்னுடைய ஆற்றலை எவனும் அறியான்.

4. நீ எந்த வீரியத்தால் வரசிகனுடைய புதல்வர்களைக் கொன்ருயோ அந்த இந்த வீரியம் எங்களால் அறியப்பட்டது. உன்னுடைய எல்லா சக்தியோடு அவர்கள் மீது செலுத்தப்பட்ட வச்சிராயுதத்தின் சத்தத்தால் அவர்களில் தீரனுயிருந்தவனும் மாய்ந்தான் என்பதும் எங்களுக்குத் தெரிந்தது.

5. அவன் சயமானனுடைய புதல்வஞன அப்யாவர்த்தனுக்கு உதவிசெய்து வரசிகனுடைய வம்சத்தையழித்தான். ஹரியூபீய் நகரத்திலே விருசீவானுடைய முன்னணிப் படையைக் கொன்ருன். பின்படை பயத்தால் கலைந்தது.

6. பலரால் அழைக்கப்படும் இந்திரனே! யயாவதி நதிக்கரையிலே கவசமணிந்த முப்பதினுயிரம் வீரர்கள் புகழை நாடி ஒன்று சேர்ந்தார்கள். வரசிகனுடைய புதல்வர்களான விருசீவதர்கள் சரத்துக்கு முன்னே சாய்ந்து உடையும் பாண்டங்களைப் போல் நாசமடைந்தார்கள்.

7. இனிய புல்லால் இன்பமாகி, துள்ளிக்குதித்துத் துலங்குபவையும், சோதிபுவிகளின் நடுவே செலுத்தப்படுபவையுமான குதிரைகளுள்ள இந்திரன், ஸிருஞ்ஜயனுக்குத் துர்வசனை வசப்படுத்தினுன். வாரசிகர்களைத் தைவவாதனுக்கு அளித்தான்.

தானம்

8. அக்கினியே! செல்வனும் சிறந்த அரசனுமான சாயமான அப்யாவர்த்தன், தேர்களோடு வரும் இரு பெண்களையும், இருபது பசுக்களையுமளித்தான். பிருது வம்சத்தில் வந்த இவனுடைய இந்த தட்சிணை எவனுலும் அழிக்க இயலாதது. 4,665.



## 28. பசுக்கள்

### 469. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. பசுக்கள் வருக. செல்வத்தைத் தருக. அவை எங்களுடைய பட்டிகளில் தங்குக. எங்களால் அவை இன்புறுக. பல நிறமுள்ள பசுக்கள் கன்றுகளோடு பெருகுக. அவை இந்திரனுக்குப் பல உஷைகளிலே பாலை அளிக்க.

இந்திரன்

2. இந்திரன் துதியைக் கூறி யக்ஞத்தைச் செய்பவனுக்கு விரும்பும் செல்வங்களைத் தருகிருன். அவனுக்கு எப்பொழுதும் பொருளைத் தருகிருன். அவனுக்குச் சொந்தமாயுள்ளதையும் நட்டப்படுத்தான். அவன் அவனுடைய செல்வங்களை அடிக்கடி அதிகப்படுத்துகிருன். பக்தனைப் பகைவனுக்கு அணுக முடியாத கோட்டையிலே நிலைப்படுத்துகிருன்.

பசுக்கள்

3. பசுக்கள் இழக்கப்படாமலிருக்க. எந்தத் திருடனும் அவற்றை அபகரிக்காமலிருக்க. எந்த எதிர்ப்பாயுதமும் அவற்றின் மீது செலுத்தப்படாமலிருக்க. எந்தப் பசுக்களால் கோபதி யக்ஞங்களைச் செய்கிருனே, தேவர்களை யஜிக்கிருனே அந்தப் பசுக்களை அவன் நீண்ட காலம் அடைந்திருப்பாளுக.

4. புழுதி எழுப்பும் போர்க் குதிரைகள் அவற்றை அணுகாமலிருக்க. யக்ஞத்தின் பலி பீடங்களுக்குச் செல்லாமலிருக்க. போற்றும் மனிதனுடைய பசுக்கள் பயமற்று எங்கும் மேய் தரையிலே சுற்றி மேய்க.

5. பசுக்கள் எனக்குச் செல்வமாகுக. இந்திரன் எனக்குப் பசுக்களை யளிப்பாளுக. பசுக்கள் ஸோமத்தின் முதல் உணவை அளிக்க. சனங்களே! இந்தப் பசுக்கள் எங்களுக்கு இந்திரனுகின்றன. நான் மனத்தாலும் இருதயத்தாலும் இந்த இந்திரனை விரும்புகிறேன்.

6. பசுக்களே! எங்களைப் புட்டிப்படுத்துங்கள். மெலிந்திருப்பதும் எழிலற்றதுமான தேகத்தை அழகுள்ளதாய்ச் செய்யுங்கள். செல்வக் குரல்களுள்ள நீங்கள் எங்கள் மனையைச் செல்வப்படுத்துங்கள். உங்களுடைய மகத்தான உணவு சபைகளிலே போற்றப்படுகிறது.

7. பசுக்களே! உங்களுக்குப் பல கன்றுகள் தோன்றுக. மேய நல்ல புற்றரைகளும், பருகச் செல்வதற்குரிய குளங்களும் உங்களுக்கு நிலைக்க. எந்தத் திருடனும் உங்களை வசப்படுத்தாமலிருக்க. இரைக்காக எந்தப் பிராணியும் உங்களை எதிர்க்காமலிருக்க. உருத்திரனுடைய ஆயுதமும் உங்களிடமிருந்து நீங்குக.

இந்திரன்

8. பசுக்களின் புட்டிப்படுத்தும் உணவு விரும்பப்படுக. இந்திரனே! உன்னைப் பலப்படுத்த காளையின் ரேதஸானது விரும்பப்படுகிறது. 4,678.

## 29. இந்திரன்

### 470. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. உங்களுடைய தலைவர்கள் இந்திரனுடைய நல்மனத்தை விரும்பி, மகத்தான துதியைக் கூறி, நட்புக்காக அவனைப் போற்றுகிறார்கள். வச்சிரத்தைக் கையில் ஏந்தும் அவன் மகத்தான செல்வத்தைத் தருகிறான். பெரியவனும் அன்பனுமான அவனைப் பாலனத்தை அடைய உயர்த்துங்கள்.

2. அவனுடைய கைகளிலே மனிதர்களுக்கு நலத்தை யளிக்கும் செல்வங்கள் குவிந்திருக்கின்றன. தேரிலே செல்லும் அவன் பொன் தேரிலே அமர்ந்திருக்கிறான். அவனுடைய கைகளிலே ஒளிக்கதிர்கள் சேர்ந்திருக்கின்றன. தேரிலே இணைக்கப்பட்டிருக்கும் வலிய குதிரைகள் அவனை வானின் வழியிலே ஏந்திச் செல்லுகின்றன.



3. அவர்கள் செல்வத்துக்காக உன்னுடைய பாதங்களை வணங்குகிறார்கள். ஏனெனில் வச்சிராயுதத்தை ஏந்தும் நீ சத்துருக்களை வீழ்த்துபவன். தட்சிணைகளைத் தருபவன். நடிகனே! நீ அனைவருங் காண சதா சலனமாகும் வடிவத்தைத் தரித்துச் சுற்றும் சூரியனைப் போல் தோன்றுகிறாய்.

4. இந்திரனுக்கு ஸோமம் பிழியப்பட்டு பொருத்தம் செய்யப்படுகிறது. புரோடாசம் பக்குவமாகிறது. யவம் பொரிக்கப்படுகிறது. அறிஞர்கள் இந்திரனைப் புகழ்ந்து, அவியை அளித்து, துதிகளைக் கூறிக்கொண்டு தேவர்களின் அருகே செல்லுகிறார்கள்.

5. உன்னுடைய வலிமைக்கு எல்லை வகுக்கப்படவில்லை. அந்த வலிமையின் மகிமையை யறிந்து சோதியும் புவியும் கலங்குகின்றன. அறிஞன் ஊக்கமாகி அவியோடு உன்னை நன்கு யஜித்து சலத்தால் மந்தைகளைத் திருப்தி செய்யும் கோபதியைப் போல் உன்னைத் திருப்தி செய்கிறான்.

6. இங்ஙனம் மகானான இந்திரன் அழைக்கப்படுவானாக. பொன் மோவாயுள்ள அவன் யக்ஞத்துக்கு வந்தாலும் வராவிட்டாலும் செல்வத்தைத் தருபவனாயிருக்கிறான். ஒப்பற்ற பலமுள்ள அவன் தோன்றியவுடன் பல விருத்திரர்களையும் பகைக்கும் தஸ்யுக்களையும் அழிப்பானாக. 4,679

## 30. இந்திரன்

### 471. பரத்வாஜன் - பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்திரன் வீரியத்தைப் புலப்படுத்த மீண்டும் வளர்ந்தான். முதல்வனும் மூப்பற்றவனுமான அவன் செல்வங்களைத் தருகிறான். இந்திரன் சோதியையும் புவியையும் கடக்கிறான். அவனுடைய பாதி பாகம் இரு உலகங்களுக்கும் ஸமமாகிறது.

2. நான் அவனுடைய மகத்தான அசுரனை யழிக்கும் ஆற்றலைப் போற்றுகிறேன். வீரச் செயல்களை நடத்த அவன் எடுக்கும் சங்கற்பத்தை எவனும் தடைபடுத்த இயலாது. அவனால் சூரியன் தினந்தோறும் தென்படுகிறான். நல்ல வினைத் திட்பனான அவன் பரந்த உலகங்களைச் செய்கிறான்.

3. நீ நதிகள் செல்ல வழிகளை வகுத்த உன்னுடைய செயல் பூர்வத்தில் போல் இப்பொழுது நடைபெறுகிறது. அதனால் நீ அவற்றை வழிகளிலே செலுத்தினாய். மலைகள் உனது ஆக்ஞையால் உணவுக்கு உட்காரும் மனிதர்களைப் போல் நிலைத்தன. நல்ல செயல்களை நடத்துபவனே! உன்னால் உலகங்கள் திரப்பட்டன.

4. இந்திரனே! உனக்குச் சமமாகவோ, மேலாகவோ தேவர்களிலே எவனுமில்லை. மனிதர்களிலே எவனுமில்லை. நீ சலங்களைத் தடுத்த அஹியைக் கொன்றாய். நீ சலங்களைக் கடலுக்குப் பாய விடுவித்தாய்.

5. நீ தடைபட்ட சலங்களை எல்லாத் திசைகளிலும் பாய விடுவித்தாய். நீ சூரியனையும், சோதியையும், உஷையையும் உடனே பிறப்பித்து உலகத்தின் சனங்களுக்கு அரசனாயிருக்கிறாய். 4,684

## 31. இந்திரன்

### 472. ஸுஹோத்ர-பரத்வாஜன்

1. செல்வபதியே! நீ செல்வங்களுக்கு ஒரு தலைவனாயிருக்கிறாய். நீ மானிடர்களை உன்னுடைய இரு கைகளிலே ஏந்துகிறாய். அவர்கள், புதல்வர்களையும், வீரப் பேரர்களையும், மழையையும் அடைய பல துதிகளோடு உன்னைப் போற்றுகிறார்கள்.

2. இந்திரனே! உனக்குப் பயந்து வானின் எல்லா உலகங்களும் பெய்யாத மழையைப் பொழியச் செய்கின்றன. நீ தோன்றுங்கால் சோதியும் புவியும் மலைகளும் வனங்களும் திரமான அனைத்தும் கலங்குகின்றன.



3. இந்திரனே! நீ குத்ஸனோடு சேர்ந்து, வற்றாத சுஷ்ணனை எதிர்த்துப் போராடினாய். நீ போர்க்களத்திலே குயவனைச் சாய்த்தாய். நீ போரிலே சூரியனுடைய தேரின் சக்கரத்தைத் திருடினாய். நீ தீயோர்களைத் துரத்தினாய்.

4 அறிஞனே! ஸோமத்தால் பெறப்படுபவனே! உனக்குத் துதியைக் கூறும் பரத்வாஜனுக்கும், உனக்கு ஸோமத்தையளிக்கும் திவோதாஸனுக்கும் ஆற்றலோடு செல்வங்களைத் தருங்கால் நீ தஸ்யுவான சம்பரனுடைய எதிர்ப்பற்ற நூறு கோட்டைகளை இடித்தாய்.

5. உண்மையான வீரர்களின் தலைவனே! மிக்க மிகுந்த செல்வமுள்ளவனே! நீ மகத்தான போருக்குப் பயங்கரமான தேரிலே ஏறவும். உத்தம வழியில் செல்பவனே! பாலனத்துக்காக நீ என்னிடம் வரவும். புகழுள்ள நீ, எங்கள் புகழை சனங்களின் நடுவே புலப்படுத்தவும். 4,689

## 32. இந்திரன்

### 473. ஸுஹோத்ர பரத்வாஜன்

1. நான் என்னுடைய வாயினால், மகத்தாயும், வீரனாயும், வலியனாயும், துரிதனாயும், துதியாருகனாயும் வளர்ந்தவனாயுமுள்ள இந்திரனுக்கு, புதியவையும், நிறைந்தவையும், சுகப்படுத்துபவையுமான துதிகளைக் கூறுகிறேன்

2. அவன் கவிகளுக்காகத் தாய்மார்களான சோதியையும் புவியையும் சூரியனால் ஒளிப்படுத்தினான். கவிகளால் புகழப்பட்டு அவன் மலையைப் பிளந்தான். மிக்கத் தியானஞ் செய்யும் வழிபடுபவர்களால் அடிக்கடி விரும்பப்பட்டு அவன் பசுக்களின் தடைகளை நீக்கினான்.

3. பல செயல்களைச் செய்யும் அவன் குனிந்த முழந்தாள்களோடு அவிகளை அளிக்கும் வழிபடுபவர்களுடன்-அங்கிரஸர்களுடன்-சேர்ந்து பசுக்களை மீட்க அசுரர்களை

வென்றான். கோட்டைகளை இடிக்கும் அவன் நண்பர்களோடு நண்பனாகி, கவிகளோடு கவியாகி அசுரர்களின் திரமான புரங்களை இடித்தான்.

4. விருஷபனே! போற்றத் தகுந்தவனே! நீ மகத்தான படைகளோடும் சேர்ந்து, சனங்களின் நடுவே வழிபடுபவனை சுகப்படுத்த இளங் குதிரைகளோடும், பல வீரக் குதிரைக் குட்டிகளோடும் அவனிடம் வரவும்.

5. இயல்பான சக்தியுள்ள அவனிடம் துரித குதிரைகளுண்டு. பகைவர்களை ஜயிக்கும் இந்திரன் தட்சிணையத்திலே சலங்களை விடுவிக்கிறான். இங்ஙனம் விடுவிக்கப்பட்ட சலங்கள் தினந்தோறும் தீராத, திரும்பி வராத கடலுக்குச் செல்லுகின்றன. 4,694

## 33. இந்திரன்

### 474. சுனஹோத்ர பரத்வாஜன்

1. விருஷபனான இந்திரனே! நல்ல குதிரையின் மீது ஏறி; பகைவரின் பல குதிரைகளை ஜயிப்பவனும், போர்களில் எதிர்க்கும் பகைவர்களை வெல்லுபவனும், அளிப்பவனும், யஜிப்பவனும், துதியால் உன்னை இன்புறுத்துபவனும், மிகுந்த பலமுள்ளவனுமான புதல்வனை எங்களுக்களிக்கவும்.

2. இந்திரனே! பலவித மொழிகளுள்ள மனிதர்கள் போரிலே பாலனமாக உன்னை அழைக்கிறார்கள். நீ விப்பிரர்களோடு சேர்ந்து பணிகளைக் கொன்றாய். உதாரன் உன்னால் பாலிக்கப்பட்டு உணவைப் பெறுகிறான்.

3. சூரனே! இந்திரனே! நீ எதிரிகளான ஆரியர்களையும், தாஸர்களையும், இருவிதப் பகைவர்களையுமழித்தாய். தலைவர்களின் தலைவனே! நீ போரிலே உன்னுடைய நன்கு செலுத்தப்படும் ஆயுதங்களால் காடுகளை அழிக்கும் விறகுவெட்டிகளைப் போல், உன்னுடைய சத்துருக்களை வெட்டித் தள்ளினாய்



4. இந்திரனே! நாங்கள் செழிக்க எங்கும் பரவும் நீ, எங்களுடைய நண்பனாகவும், குற்றமற்ற பாலனங்களோடு பாலிப்பவனாகவும். ஆட்கள் அழியும் சமர்களிலே போராடுங்கால் நாங்கள் செல்வத்தை அடைய உன்னை அழைக்கிறோம்.

5. இந்திரனே! நீ இப்பொழுதும் இனி வருங்காலங்களிலும் எங்களுடையவனாகவும். எங்கள் நிலைக்கேற்றவாறு சுகப்படுத்துபவனாகவும். இங்ஙனம் உஷையிலே துதித்து உன்னைப் புகழ்ந்து மகத்தான உன்னுடைய எல்லையற்ற பிரகாசமான சுகத்திலே நாங்கள் இருப்போமாக. 4,699.

## 34. இந்திரன்

### 475. சுனஹோத்ர பரத்வாஜன்

1. இந்திரனே!. உன்னில் பல தோத்திரங்கள் சேர்கின்றன. உன்னிடமிருந்து பல புகழுரைகள் வருகின்றன. ரிஷிகளின் துதிகளும் தோத்திரங்களும் ஸ்தோமங்களும் பூர்வத்தில் போல் இப்பொழுதும் இந்திரனும் உன்னைப் போற்ற பரஸ்பரம் முந்துகின்றன.

2. மகத்தான பலத்துக்காகத் தேருடன் போல் இந்திரனோடு இணைந்திருப்பவர்களான நாங்கள் பலரால் அழைக்கப்படுபவனும், பலரால் போற்றப்படுபவனும், மகானும், ஏகனும், யக்ஞங்களில் புகழப்படுபவனுமான அவனைப் போற்றுவோமாக.

3. எந்தச் செயல்களாலும், சொற்களாலும் துன்பமாகாத இந்திரனை மேம்படுத்த எல்லாத் துதிகளும் அவனிடம் செல்லுகின்றன. நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான பக்தர்கள் துதியாருகளுன அவனைப் போற்றுகிறார்கள். அந்தத் துதிகள் அவனை இன்புறுத்துகின்றன.

4. சோதியிலே சந்திரனோடு சேரும் காந்தியைப் போல் அளிக்கப்படும் ஸோமம் இந்திரனோடு சேர விரும்புகிறது. பாலைவனங்களிலே மனிதர்களுக்குப் புத்துயிரையளிக்கும் சலத்தைப் போல் யக்ஞங்களிலே

அளிக்கப்படும் தோத்திரங்களும் அவிகளும் அவனுக்குச் செழிப்பையளிக்கிறது.

5. இந்த மகத்தான தோத்திரம் வழிபடுபவர்களான எங்களால், இந்த இந்திரனுக்கு எங்களுடைய பகைவர்களோடு நடைபெறும் மகத்தான போரிலே எங்கும் பரவும் இந்திரன் எங்களைப் பாலிப்பவனாகவும், மேம்படுத்துபவனுமாகத் தோன்றக் கூறப்படுகிறது. 4,704.

## 35. இந்திரன்

### 476. ஸுஹோத்ர பரத்வாஜன்

1. எங்களுடைய தோத்திரங்கள் உன்னோடு உன்னுடைய தேரிலே எப்பொழுது நிலைக்கும்? நீ உன்னைத் துதிப்பவனுக்கு எப்பொழுது ஆயிரஞ் சனங்களைத் தாங்கும் புட்டிப் பொருளைத் தருவாய்? என்னுடைய ஸ்தோமத்தை எப்பொழுது செல்வத்தோடு சேர்ப்பிப்பாய்? எப்பொழுது எங்களுடைய யக்ஞங்களைச் செல்வத்தோடு செல்வப்படுத்துவாய்?

2. இந்திரனே! நீ எப்பொழுது தலைவர்களைத் தலைவர்களோடும், வீரர்களை வீரர்களோடும் ஒருமையுடன் சேர்ப்பித்து, எங்களுக்குப் போர்களிலே ஜயத்தை அளிப்பாய்? நீ பகைவரிடமிருந்து முப்பொருள்களை ஏந்தும் பசுக்களை எப்பொழுது ஜயிப்பாய்? இந்திரனே! நீ எங்களுக்குப் பரவலான செல்வத்தை எப்பொழுது அளிப்பாய்?

3. மிக்கப் பலமுள்ளவனே! நீ உன்னை வழிபடுபவனுக்கு பலவிதமான உணவை எப்பொழுது தருவாய்? நீ உன்னிலே துதிகளையும் செயல்களையும் எப்பொழுது ஐக்கியஞ் செய்து கொள்வாய்? அவிகள் எப்பொழுது பசுக்களைத் தோற்றுவிக்கும்?

4. இந்திரனே! உன்னை வழிபடுபவனுக்கு எப்பொழுது, பசுக்களையளிப்பதும் குதிரைகளால் இன்புறுத்துவதும், பலத்தில் புகழுள்ளதுமான உணவை,



புட்டியைப் பெருக்கவும். பாலை நன்களிக்கும் பசுக்களைப் பாலிக்கவும். அவற்றைப் பிரகாசிக்க ஒளிப்படுத்தவும்.

5. எங்களது பகைவனை வேறு வழியிலே செலுத்தவும். வீரனாயிருக்கும் வலியனான இந்திரன் பகைவர்களை அழிப்பவனாயிருக்கிறான். ஆதலால் நீ போற்றப்படுகிறாய். நான் சுத்தமான செல்வங்களையளிக்கும் இந்திரனைத் தவறாமல் எப்பொழுதும் துதிப்பேனாக. விப்பிரனான இந்திரனே! உணவால் ஆங்கிரஸர்களை இன்புறுத்தவும். 4,709.

## 36. இந்திரன்

### 477. நரோ பரத்வாஜன்

1. உன்னுடைய எக்களிப்புக்கள் மானிடர்களுக்கெல்லாம் நன்மையை உண்மையாகவே தருகின்றன. புவியிலிருக்கும் செல்வங்கள் மனிதர்களுக்கெல்லாம் உண்மையாகவே நன்மையைத் தருகின்றன. நீ உண்மையாகவே உணவை வகுத்தளிப்பவன். ஆதலால் நீ தேவர்களின் நடுவே ஆற்றலை ஏந்துகிறாய்.

2. வழிபடுபவன் அந்த இந்திரனுடைய பலத்தை முக்கியமாய்ப் போற்றுகிறான். சனங்கள் அவனை வீரச்செயல்களுக்காக உண்மையாகவே முற்படுத்திக்கொள்கிறார்கள். அவர்கள் ஓயாமல் வரும் பகைப்படைகளைப் புடைப்பவனும், எதிரிகளை எதிர்ப்பவனும், தாழ்த்துபவனுமான இந்திரனுக்கு விருத்திரனை அழிப்பதற்காக யக்ஞத்தை நடத்துகிறார்கள்.

3. மருத்துக்கள் சங்கமாகச் சேர்ந்து அவனுக்கு சேவை செய்கிறார்கள். வீரியங்களும், ஆண்மைகளும், நியுத குதிரைகளும் இந்திரனுக்குச் சேவை செய்கின்றன. மிகுந்த வாய்மைகளுள்ள தோத்திரங்கள் பரந்து விசாலமாயிருக்கும் இந்திரனிடம் கடலுக்குச் செல்லும் நதிகளைப் போல் செல்லுகின்றன.

4. இந்திரனே! நீ எங்களால் போற்றப்பட்டு மிகுந்த இன்பத்தைத் தருவதும், மனையை அளிக்கும்

செல்வமுள்ளதுமான தாரையைப் பெருக்கவும். ஏனெனில் நீ சனங்களின் ஒப்பற்ற தலைவனாயிருக்கிறாய். நீ உலகத்துக்கெல்லாம் தனித்தலைவனாயிருக்கிறாய்.

5. இந்திரனே! எங்கள் துதியால் இன்புறுபவனும், பகைவர்களின் மிகுந்த செல்வங்களைச் சூரியனைப் போல் ஜயிப்பவனுமான நீ, செவியுறத் தகுந்த ஸ்தோத்திரங்களைக் கேட்கவும். பலத்தோடிருப்பவனும், ஒவ்வொரு யுகத்திலும் போற்றப்படுபவனும், அவியால் புலப்படுபவனுமான நீ, எங்களிடம் அசாதாரணமாயிருக்கவும். 4,714

## 37. இந்திரன்

### 478. பார்ஹஸ்பத்ய பரத்வாஜன்

1. உக்கிரனான இந்திரனே! உன்னுடைய இணைக்கப்பட்ட குதிரைகள், உன்னுடைய அனைவராலும் விரும்பப்படும் தேரை எங்கள் முன்னே இழுத்து வருக. வழிபடும் பரத்வாஜன் உன்னை அழைக்கிறான். இன்று உன்னோடு சேர்ந்து இன்புறும் நாங்கள் இன்று செல்வத்தில் செழிப்போமாக.

2. பசுமையான ஸோமரஸங்கள் எங்கள் யக்ஞத்திலே பாய்கின்றன. சுத்தமான அவை நேராகக் கலசத்தினுள் செல்லுகின்றன. பழையவனும், புகழுள்ளவனும், மதமளிக்கும் ஸோமத்தின் அரசனுமான இந்திரன் இந்த ஸோமத்தைப் பருகுவானாக.

3. எங்குஞ் செல்பவையும், நேராக சலிப்பவையும், தேரை இழுப்பவையுமான குதிரைகள், திடச் சக்கரமுள்ள தேரிலே அமர்ந்திருக்கும் மகத்தான வலிமையுள்ள இந்திரனை எங்கள் யக்ஞத்துக்கு ஏந்தி வருக. அமுதமான ஸோமம் காற்றால் வற்றாமலிருக்க.

4. உத்தமனும், பல செயல்களை நடத்துபவனுமான இந்திரன், செல்வர்களின் நடுவே வழிபடுபவனைத் தானமளிக்க ஊக்கப்படுத்துகிறான். அதனால் வச்சிரமேந்துப



வனே! நீ பாபத்தை விலக்குகிறாய். தீரனான நீ அறிஞர்களுக்குச் செல்வங்களை அளிக்கிறாய்.

5. இந்திரன் உத்தம உணவைத் தருபவனாயிருக்கிறான். மிக்கப் புகழுள்ள இந்திரன் எங்கள் துதிகளால் புகழில் சிறப்பானாக. இந்திரன் விருத்திரனைக் கொல்பவனாக. பிரேரிக்கும் இந்திரன், துரிதனாயிருக்கும் அவன் நாங்கள் விரும்பும் செல்வங்களை எங்களுக்களிப்பானாக. 4,719

## 38. இந்திரன்

### 479. பார்ஹஸ்பத்திய பரத்வாஜன்

1. மிக்க அற்புதனான இந்திரன் இந்தப் பாண்டத்திலிருந்து பருகுவானாக. எங்களுடைய மகத்தாயும் பிரகாசமாயுமுள்ள இந்திரத் துதியைப் பற்றுவானாக. நெய் வசனத்தின் யக்ஞத்திலே அவியையும் வணக்கத்தையும் பெற்றுக் கொள்வானாக.

2. வழிபடுபவன் அவனுக்குத் துதியை முழங்குகிறான். இந்திரன் தூரத்திலிருந்தால் அவனுடைய செவியில் சேர வழிபடுபவன் முழக்கத்தோடு துதியைக் கூறுகிறான். அவனை அழைக்கும் இந்தத் தேவத்துதி அவனை ஊக்கப்படுத்தி. இந்திரனை என் முன்னே புலப்படுத்துக.

3. நான் உத்தமத் துதியாலும், அவிகளாலும், பழையவனும் நித்தியனுமான இந்திரனைப் போற்றுகிறேன். அவனிலே அவிகளும் தோத்திரங்களும் சேர்கின்றன. அவனுக்குக் கூறப்படுங்கால் மகத்தான ஸ்தோமம் மேம்படுகிறது.

4. நான் யக்ஞத்தால் செழிப்பவனும், ஸோமத்தால் செழிப்பவனும், துதிகளாலும், தோத்திரங்களாலும், வணக்கத்தாலும், இரவாலும், பகலாலும், மாஸங்களாலும், தினங்களாலும் செழிப்பவனும், போற்றப்படுபவனுமான இந்திரனை மேம்படுத்துகிறேன்.

5. விப்பிரனே! நாங்கள் இன்று பகைவர்களைக் கொல்லத் தோன்றுபவனும், மிக்கச் செழிப்பவனும், மகானும், உக்கிரனுமான உன்னை, செல்வத்துக்காகவும், பாலனத்துக்காகவும், எங்களுடைய பகைவர்களை அழிப்பதற்காகவும், புகழுக்கும் போற்றுகிறோம். 4,724

## 39. இந்திரன்

### 480. பார்ஹஸ்பத்திய பரத்வாஜன்

1. இந்திரனே! எங்களுடைய இனிப்புள்ளதும், மதமளிப்பதும், கவித் தன்மையிருப்பதும், சோதியில் தோன்றியதும், ஏந்துவதும், அறிஞரால் போற்றப் படுவதும், துதியால் துதிக்கத் தகுந்ததும், பற்றத் தகுந்ததுமான ஸோமத்தைப் பருகவும். தேவனே! நீ உன்னைத் துதிப்பவனுக்குப் பசுக்களில் முதன்மையாக உள்ள உணவை-பாலை-அளிக்கவும்.

2. மலையில் மறைத்து வைக்கப்பட்டிருந்த பசுக்களை மீட்கத் தீர்மானித்தவனும், யக்ஞத்தை நடத்துபவர்களுமான அங்கிரஸர்களோடு சேர்ந்தவனும், சத்தியத் துதியால் ஊக்கமடைந்தவனுமான இந்த இந்திரன் பலனுடைய பிளவு படாத பாறையைப் பிளந்தான். மொழிப் படைகளால் பணிகளை ஜயித்தான்.

3. இந்திரனே! உன்னுல் பருகப்பட்ட இந்த ஸோமம் இருண்ட இரவுகளையும், அற்பங்களையும், பகல்களையும், வருடங்களையும் ஒளிப்படுத்திற்று. பழைய தேவர்கள் இந்த ஸோமத்தைத் தினங்களின் துவஜமாகச் செய்தார்கள். ஸோமன் உஷைகளை ஒளியிலே பிறப்பித்தான்.

4. பிரகாசமுள்ள இந்திரன் பிரகாசமற்ற உலகங்களை ஒளிப்படுத்தினுன். அவன் ருத ஒளியோடு பல உஷைகளிலே பரவினுன். மானிடர்களுக்கு நலத்தைச் செய்யும் அவன், செல்வம் நிறைந்ததும், துதியோடு



இணைக்கப்பட்டதும், குதிரைகளால் இழுக்கப்படுவதுமான தேரிலே செல்லுகிறுன்.

5. பழைய அரசனே! நீ போற்றப்படும் போது உன்னைத் துதிப்பவனும், செல்வத்தைப் பெறுவதற்கு உரியவனுமான - வழிபடுபவனுக்கு - மிகுந்த உணவை அளிக்கவும். அவனுக்கு சலத்தையும், ஓஷதிகளையும் விஷமில்லாத காடுகளையும், பசுக்களையும், குதிரைகளையும், மனிதர்களையும் அளிக்கவும். 4,729

## 40. இந்திரன்

### 481. பார்ஹஸ்பத்திய பரத்வாஜன்

1. இந்திரனே! உன்னுடைய மதத்துக்காகப் பிழியப்பட்ட ஸோமத்தைப் பருகவும். உன்னுடைய நட்புத் தன்மையுள்ள குதிரைகளை நிறுத்தவும். அவற்றைத் தளர்த்தவும். எங்கள் சங்கத்திலுட்கார்ந்து எங்கள் துதிகளைப் போற்றவும். உன்னைத் துதித்துப் போற்றுபவனுக்கு உணவை யளிக்கவும்.

2. இந்திரனே! நீ பருகுவதற்காகப் பசுக்களாலும், அறிஞர்களாலும், கற்களாலும் ஒருமையுடன் பக்குவப்பட்டதும், மகத்தான செயல்களுக்காக நீ பிறந்தவுடன் உன்னுல் குடிக்கப்பட்டதுமான இந்த ஸோமத்தைப் பருகவும்.

3. அக்கினி சொலிப்பிக்கப்படுகிறது. இந்திரனே! ஸோமம் பொழியப்பட்டிருக்கிறது. வலிய குதிரைகள் உன்னை இங்கு ஏந்தி வருக. இந்திரனே! நான் உன்னை விரும்பும் மனத்தோடு மீண்டும் மீண்டும் அழைக்கிறேன். மகத்தான செல்வத்துக்காக எங்களிடம் வரவும்.

4. நீ இத்தகைய யக்ஞங்களுக்குச் சென்றிருக்கிறுய். இப்பொழுது ஸோமத்தைப் பருக விரும்பும் மகத்தான மனத்தோடு வா. எங்களுடைய இந்தத் துதிகளைக் கேட்கவும். வழிபடுபவன் உனக்கு இந்த அவியை உன் தேகத்தைப் புட்டிப்படுத்த அளிப்பானுக.

5. இந்திரனே! துதியால் போற்றப்படும் நீ, தூரத்திலோ, சோதியிலோ, வேறு எந்த இடத்திலோ அல்லது உனது சொந்த ஸதனத்திலோ அல்லது வேறு எங்கோ இருந்தாலும், அங்கிருந்து குதிரைகளைச் செலுத்தி, மருத்துக்களோடு சேர்ந்துள்ள நீ வந்து, இன்பமாகி, நாங்கள் பாலிக்கப்பட எங்களைக் காக்கவும். 4,734

## 41. இந்திரன்

### 482. பார்ஹஸ்பத்திய பரத்வாஜன்

1. இந்திரனே! கோபமற்ற நீ, யக்ஞத்துக்கு வரவும். பிரியப்பட்ட ரஸங்கள் உனக்காகச் சுத்தஞ் செய்யப்பட்டிருக்கின்றன. வச்சிரனே! அவை கோசாலைகளுக்குச் செல்லும் பசுக்களைப் போல் கலசத்தினுள் பாய்கின்றன. இந்திரனே! போற்றத் தகுந்தவர்களிலே முதல்வனான நீ வா.

2. இந்திரனே! உன்னுடைய இனிய ஸோமத்தைப் பருகுவதும், நன்கு கற்பிக்கப்பட்டதும், பரந்திருப்பதுமான நாக்கால் ரஸத்தைப் பருகவும். அத்வர்யு உன் முன்னே நிற்கிறான். இந்திரனே! உன்னுடைய பசுக்களை மீட்ட, கற்பிக்கப்பட்ட வச்சிராயுதம் பகைவர்களின் மீது செலுத்தப்படுக.

3. சொட்டுவதும், பொழிவதும், விசுவரூபமுள்ளதுமான இந்த ஸோமம், வர்ஷிப்பவனான இந்திரனுடைய பானத்துக்காகப் பக்குவப்படுத்தப்பட்டிருக்கிறது. குதிரைகள் இருப்பவனே! அனைத்தையும் நடத்துபவனே! உக்கிரனே! இந்திரனே! பூர்வத்தில் உன் அதீனத்திலிருந்ததும், இப்பொழுது உனது உணவாயுமுள்ள ஸோமத்தைப் பருகவும்.

4. இந்திரனே! பிரியப்பட்ட ஸோமம் பிரியாத ஸோமத்தைக் காட்டிலும் மிகச் சிறந்தது. அறிபவனுக்கு இன்பத்தைத் தர இது மேன்மையுள்ளது. பகைவர்களை ஜயிக்கும் நீ, இந்த யக்ஞத்தை அனுகவும். அதனால் உனது ஆற்றல்களைப் பூர்த்தி செய்து கொள்ளவும்.



5. இந்திரனே! நாங்கள் உன்னை அழைக்கிறோம். நீ எங்கள் முன்னே வா. ஸோமம் உனது தேகத்தைத் திருப்தி செய்யப் பூரணமாகுக. சதக்கிரதுவே! நீ இந்த ரஸங்களால் இன்பமாகவும். போர்களிலே எங்களைப் பாலிக்கவும். சனங்களின் நடுவே எங்களைப் பாலிக்கவும். 4,739

## 42. இந்திரன்

### 483. பார்ஹஸ்பத்திய பரத்வாஜன்

1. அறிஞர்களே! பருக விரும்புபவனும், எல்லாப் பொருள்களை அறிபவனும், பூரணமாய்ச் செல்பவனும், யக்ஞங்களுக்கு விரைபவனும், தலைவனும், எவனையும் பின்பற்றாதவனுமான இந்திரனுக்கு ஸோமத்தையளியுங்கள்.

2. ஸோமரஸங்களோடு அதிசயமாய் ஸோமத்தைப் பருகுபவனும், பிழிந்த ரஸங்கள் நிறைந்த கலசங்களுடனிருப்பவனும், வலியனுமான இந்திரனிடம் செல்லுங்கள்.

3. பிழியப்பட்டவையும் பெருகுபவையுமான ஸோமங்களோடு நீங்கள், அவன் முன்னிலையில் சென்றவுடன், அறிஞனான இந்திரன், உங்களுடைய விருப்பத்தை அறிகிறான். பகைவர்களை ஜயிக்கும் அவன், உங்களுடைய எந்த விருப்பத்தையும் பூர்த்தி செய்கிறான்.

4. அத்வர்யுவே! அவனுக்கே யக்ஞ உணவின் இந்த ரஸத்தையளிக்கவும். அவன் எங்களை, வெல்லத் தகுந்த ஒவ்வொரு சத்துருவின் துன்பத்திலிருந்தும் பாலிப்பானாக. 4,743

## 43. இந்திரன்

### 484. பார்ஹஸ்பத்திய பரத்வாஜன்

1. நீ எந்த ஸோமமதத்திலே சம்பரனை, திவோதாஸனுக்கு வசப்படுத்தினாயோ அந்த ரஸம் இந்திரனே! உனக்கு ஊற்றப்படுகிறது. நீ பருகவும்.

2. இந்திரனே! காலையிலோ, பகலிலோ, மாலையிலோ பிழியப்பட்டதும், உன்னை இன்புறுத்துவதுமான எந்த ரஸத்தை நீ பாவிக்கிருயோ, அது உனக்கு ஊற்றப்படுகிறது. நீ பருகவும்.

3. எந்த ரஸத்தின் மதத்தால், பாறையினுள் கெட்டியாய்க் கட்டப்பட்டிருந்த பசுக்களை நீ விடுவித்தாயோ, அந்த மதமளிக்கும் இந்த ஸோமம் இந்திரனே! உனக்கு ஊற்றப்படுகிறது. நீ பருகவும்.

4. இந்திரனே! நீ எந்த ஸோமான்ன ரஸத்தாலான மதத்தால் மகவானுடைய ஆற்றலை அடைந்திருக்கிருயோ அந்த ரஸம், இந்திரனே! உனக்கு ஊற்றப்படுகிறது. நீ பருகவும். 4,747

## 44. இந்திரன்

### 485. சம்யு பார்ஹஸ்பத்தியன்

1. செல்வனுன இந்திரனே! செல்வங்கள் நிறைந்திருப்பதும், சிறப்போடு மிக்கப் பிரகாசிப்பதுமான ஸோமம், உனக்குப் பொழியப்படுகிறது. ஸ்வதாவின் தலைவனே! அது உனக்கு மதத்தைத் தருகிறது.

2. பல சுகங்களுள்ளவனே! உன்னை இன்புறுத்துவதும், உன் பக்தர்களுக்குச் செல்வங்களைத் தருவதுமான ஸோமம் பொழியப்படுகிறது. இந்திரனே! ஸ்வதாபதியே! அது உனக்கு மதத்தைத் தருகிறது.

3. உன் பலத்தை வளர்ப்பதும் உனது பாலகர்களோடு-மருத்துக்களோடு-வெற்றியைத் தருவதுமான ஸோமம் பிழியப்படுகிறது - பொழியப்படுகிறது. இந்திரனே! சுவதாபதியே! அது உனக்கு மதத்தைத் தருகிறது.

4. நான் உங்களுக்காகத் தீமை செய்யாதவனும், ஆற்றலின் தலைவனும், அனைத்தையும் ஜயிப்பவனும், தலைவனும், தான சீலனும், விசுவத்தைக் காண்பவனுமான இந்திரனைப் போற்றுகிறேன்.



5. தேவியர்களான சோதியும் புவியும், சத்துருவின் செல்வங்களைப் பறிப்பவனும், எங்கள் துதிகளால் வளர்பவனுமான இந்திரனைப் போற்றுகிருர்கள். 4,752

6. நான் உங்களுடைய இந்திரனை அமர்த்த ஆற்றலோடு இந்தத் தோத்திரத்தைப் பரத்துவேன். அவனேடு நிலைத்திருக்கும் ஆதரவளிக்கும் பாலனங்கள் பரந்து புலனுகின்றன.

7. இந்திரன் யக்ஞத்தில் திறமையுள்ளவனை அறிந்து கொள்கிருன். புதிய நண்பன் ஸோமத்தைப் பருகி உத்தம செல்வத்தைத் தேவர்களுக்கு-பக்தர்களுக்கு அளிக்கிருன். யக்ஞ உணவை அருந்தி வலிய குதிரைகளால் ஏந்தி வரப்படும் அவன் நண்பர்களுக்கு ஆதரவையளிக்க விரும்பிப் பாலகனுகிருன்.

8. ருதத்தின் வழியிலே அனைத்தையுங்காணும் ஸோமம் பருகப்படுகிறது. வழிபடுபவர்கள் அதை இந்திரனுடைய மனத்தைத் திருப்தி செய்ய அளிக்கிருர்கள். சத்துருக்களை ஜயிக்கும் அவன், மகத்தான தேகமுள்ளவன். எங்கள் துதிகளால் ஏந்தப்பட்டு எங்கள் காட்சிக்குப் புலப்படுவானுக.

9. எங்களுக்கு மிக்கப் பெருமையுள்ள பலத்தையளிக்கவும். உன்னை வழிபடுபவர்களின் பல சத்துருக்களை எதிர்க்கவும். உன் செயல்களால் எங்களுக்கு மிகுந்த உணவை அளிக்கவும். செல்வத்தை அனுபவிக்க எங்களைப் பாலிக்கவும்.

10. இந்திரனே! மகவானே! நாங்கள் தானசீலனுன உன்னையே நாடுகிறேம். குதிரைகளின் தலைவனே! நீ எங்களை விரும்பாமலிருக்காதே. நாங்கள் சனங்களின் நடுவே உன்னை அன்றி வேறு எந்தப் பந்துவையும் காணவில்லை. வேறு எதற்காக அவர்கள் உன்னைச் செல்வமளிப்பவனுகக் கூறுகிருர்கள்? 4,757.

11. விருஷபனே! யக்ஞங்களைத் தடுப்பவனிடம் எங்களைச் செலுத்தாதே. செல்வங்களின் தலைவனே!

செல்வனான உன்னுடைய நட்பிலிருக்கும் நாங்கள் துன்பப்படாமலாவோமாக. மனிதர்களின் நடுவே உனக்குத் தடைசெய்பவர்கள் பலர் இருக்கிறார்கள். நீ ஸோமமளிக்காதவர்களை நீக்கவும். அவி அளிக்காதவர்களை அழிக்கவும்.

12. இந்திரன் இடித்து மேகங்களை எழுப்பி, மழையைப் போல், பசுச் செல்வங்களையும், குதிரைச் செல்வங்களையும் வழிபடுபவர்களுக்குப் பெய்கிறான். இந்திரனே! பழையவனான நீ, யக்ஞம் நடத்துபவனைத் தாங்குகிறாய். செல்வன் அவியளிக்கத் தவறி, பிழை செய்யாமலிருப்பானாக.

13. வீரனே! அத்வர்யுவே! மகத்தான இந்திரனுக்குப் பிழிந்த ஸோமரஸங்களைச் செலுத்தவும். ஏனெனில் அவன் ஸோமத்தின் அரசனாயிருக்கிறான். அவன் போற்றத் தகுந்த ரிஷிகளின் பழைய புதிய பாக்களால் போற்றப்படுகிறான்.

14. இந்த ஸோமத்தின் மதத்திலே தடைபடாமலுள்ளவனும், அறிஞனுமான இந்திரனான அவன், எதிர்க்கும் பல பகைவர்களைக் கொன்றான். அழகிய மோவாயுள்ள அந்த வீரனுக்கு இனிய ஸோமத்தைப் பருக அளிக்கவும்.

15. பொழிந்துள்ள இந்த ஸோமத்தை இந்திரன் பருகுவானாக. இதனால் மதமடைந்து அவன், தன் வச்சிராயுதத்தால் விருத்திரனை அழிப்பவனாவானாக. மனைகளை அளிப்பவனும், வழிபடுபவர்களைப் பாலிப்பவனும், செயலாளர்களைக் காப்பவனுமான இந்திரன், தூரத்தில் இருந்தாலும் எங்கள் யக்ஞத்துக்கு வருவானாக. 4,762.

16. இந்திரனால் விரும்பப்படுவதும், அவன் விரும்பத் தகுந்ததுமான இந்த அமுத பானம் அவனால் பருகப்படுக. எங்களிடம் அவன் அனுகூல மனமுடனாக அது தேவனான இந்திரனை ஊக்கப்படுத்துக. அதனால் அவன்



எங்களிடமிருந்து சத்துருக்களையும் துன்பத்தையும் நீக்குவானாக.

17. சூரனே! மகவானே! அதனால் மதமடைந்து பந்துக்களும், பந்துத்வமில்லாதவர்களும், நட்பற்றவர்களுமான பகைவர்களை அழிக்கவும். இந்திரனே! எங்களைத் துன்புறுத்தும் எதிர்ப்படைகளைப் புறமோடச் செய்து கொல்லவும்.

18. செல்வனான இந்திரனே! எங்களுடைய இந்தப் போர்களிலே நாங்கள் செல்வத்தைப் பெற எங்களைச் சாத்தியப்படுத்துக. நாங்கள் ஜெயத்தைப் பெற எங்களைச் சித்தப்படுத்து. எங்களை மழையாலும் புதல்வர்களாலும் பேரர்களாலும் செல்வப்படுத்து.

19. உன்னுடைய வலியவையும், விருப்பம் போல் தாமே இணைபவையும், உன்னுடைய விருப்பமளிக்கும் தேரை இழுப்பவையும், மழையளிக்கும் ரசிமிகளால் செலுத்தப்படுபவையும், துரிதமாய்ச் செல்பவையும், எங்களை நோக்கி வருபவையும், யௌவனமுள்ளவையும், வச்சிரமேந்துபவையும், நன்கு இணைக்கப்பட்டவையுமான குதிரைகள் உன்னைப் பொழிவதும் மதமளிப்பதுமான ஸோமத்தினிடம் ஏந்தி வருக.

20. பொழிபவனே! உன்னுடைய பொழிபவையும், கடலின் அலைகளைப் போல் சலத்தைத் தெளிப்பவையும், மகிழ்பவையுமான குதிரைகள் உன்னுடைய தேரிலே இணைக்கப்பட்டிருக்கின்றன. இந்திரனே! தருணனும் விருஷபனுமான உனக்குக் கற்களால் பிழியப்பட்ட ஸோமத்தை அறிஞர்கள் அளிக்கிறார்கள்.

21. நீ சோதியின் விருஷபம்; நீ புவியின் விருஷபம்; நீ நதிகளின் விருஷபம்; நீ தாவர ஜங்கமங்களின் விருஷபம். பொழியும் உத்தம விருஷபனான உனக்குத் தேன்சுவை ரஸமுள்ள இனிய ஸோமம் பருகுவதற்குப் புலனாகிறது.

22. இந்தத் தேவனான ஸோமன் தோன்றியவுடன் நண்பனான இந்திரனோடு சேர்ந்து தன் பலத்தால் பணி

யைக் கொன்றுன் இந்த ஸோமன் திருடப்பட்ட பசுச் செல்வத்தை மறைத்து வைத்தத் தீயோனுடைய மாயை களையும் படைகளையும் விலக்கினுன்.

25. இந்த ஸோமன் உஷைகளைச் சூரியனேடு திருமணஞ் செய்வித்தான். இந்த ஸோமன் சூரிய மண்டலத்தின் நடுவே சோதியை ஸ்தாபித்தான். இந்த ஸோமன் சோதியிலே பிரகாசிக்கும் மூன்று இடங்களி லுள்ள தேவர்களிலே மறைந்திருந்த மூவ்விதமான அமிருதத்தைக் கண்டான்.

26. இந்த ஸோமன் சோதியையும் புவியையும் நிலைப்படுத்தினுன். இந்த ஸோமன் சூரியனுடைய ஏழு ரசிமிகளோடுள்ள தேரை இணைத்தான். இந்த ஸோமன் பசுக்களின் உள்ளே பத்து எந்திரங்களோடுள்ள பக்குவப் பாலை ஏந்தினுன். 4,771.

## 45. இந்திரன்

### 486. சம்யூ-பிரகஸ்பதியின் புதல்வன்

1. தூரத்திலிருந்து துர்வஜையும் யதுவையும் நல்ல வழியால் அழைத்து வந்த அந்த இந்திரன் எங்களுடைய நண்பனுயிருப்பானுக.

2. இந்திரன் துதிக்காதவனுக்கும் உணவைத் தருகிருன். அவன் மெதுவாய்ச் செல்லும் குதிரைகளிலே, பகைவர்களை எதிர்த்துச் செல்பவனுயிருந்தாலும் அவர் களால் சேர்த்துவைக்கப்பட்டிருக்கும் செல்வத்தை ஜயிப்பவனுயிருக்கிருன்.

3. அவன் தமக்குப் புலப்படுத்தும் வழிகள் மேன்மையானவை. அவனுக்குப் பலவிதத் துதிகள் கூறப்படுகின்றன. அவனுடைய பாலனங்கள் நீங்கா மலிருக்கின்றன.

4. நண்பர்களே! பாக்களால் வசமாகும் இந்திரனுக் குத் துதியையும் பாட்டையும் இசையுங்கள். அவன் நம் முடைய மகத்தான பேரறிவாயிருக்கிருன்.



5. விருத்திரனைக் கொல்பவனே! நீ வழிபடும் ஒரு வனைப் பாலிக்கிருய். வழிபடும் இருவரைப் பாலிக்கிருய். எங்களைப் போல் இருப்பவர்களையும் பாலிக்கிருய். 4,776.

6. எங்களை வெறுப்பவர்களை நீ எங்களிடமிருந்து தூரத்திலே விலக்குகிருய். உன்னைத் துதிப்பவர்களைச் செல்வப்படுத்துகிருய். நீ மனிதர்களால் உத்தம வீரன் என அழைக்கப்படுகிருய்.

7. நான், பிரம்மனுயிருப்பவனும், பாக்களால் வசப் படுபவனும், போற்றத் தகுந்தவனும், நம்முடைய நண்பனுமான இந்திரனை, பசுவைப் போல் கறக்கத் துதிகளால் அழைக்கிறேன்.

8. வீரனும் பகைப்படைகளை ஜயிப்பவனுமான அவனுடைய கைகளிலே சோதி புவிகளிலுள்ள எல்லாச் செல்வங்களுமிருக்கின்றன என அறிஞர்கள் கூறு கிருர்கள்.

9. வச்சிரமேந்துபவனே! சசிபதியே! பகைவர் களின் திடமான கோட்டைகளை இடிக்கவும். எவனுக்கும் வணங்காத இந்திரனே! அவர்களின் மாயைகளை விலக்கவும்.

10. சத்தியனே! ஸோமத்தைப் பருகுபவனே! உணவைத் தருபவனே! உணவை விரும்பும் நாங்கள் அந்த உன்னையே அழைக்கிறேம்.

11. நாங்கள் பூர்வத்தில் அழைக்கப்பட்டவனும், பகைவனுல் பற்றப்பட்டிருக்கும் செல்வத்தைப் பெற இப்பொழுது போற்றத் தகுந்தவனுமான உன்னையே அழைக்கிறேம். எங்கள் அழைப்பைக் கேட்கவும்.

12. இந்திரனே! எங்கள் துதிகளால் ஏத்தப்படும் உன்னுல் அனுகூலமாகி, நாங்கள் எங்கள் குதிரைகளால் பகைவனுடைய அசுவங்களை ஜயிக்கிறேம். நாங்கள் பகைவனுல் பற்றப்பட்டிருக்கும் செல்வத்தையும் மிகுந்த உணவையும் ஜயிக்கிறேம்.

13. வீரனே! துதியாருகனான இந்திரனே! போரிலே மகானாயிருக்கும் நீ, பகைவனால் பற்றப்பட்டிருக்கும் செல்வத்தை ஜயிப்பவனாயிருக்கிறாய்.

14. மிக்கத் துரிதமான உன் வேகத்தால் எங்கள் தேர்களைப் பகைவரின்மீது செலுத்தவும்

15. ஸாரதிகளில் முதல்வனும், ஜயிப்பவனுமான இந்திரனே! எங்களுடைய எதிர்க்கும் தேரால் பகைவனால் பற்றப்பட்டிருக்கும் செல்வத்தை ஜயிக்கவும். 4,786.

16. பிரசைகளின் ஒரு அதிபதியாகப் பிறந்தவனும், அனைத்தையுங் காண்பவனும், மழையைத் தருபவனுமான அந்த இந்திரனைப் போற்றவும்.

17. இந்திரனே! உன்னைப் போற்றுபவர்களின் நண்பனாயிருப்பவனும், உன் பாலனத்தால் அவர்களை சுகப் படுத்துபவனுமான நீ, எங்களை சுகப்படுத்தவும்.

18. வச்சிரத்தை ஏந்துபவனே! நீ உன்னுடைய கைகளிலே வச்சிராயுதத்தை அரக்கர்களைக் கொல்லப் பற்றவும். உன்னை எதிர்ப்பவனை அடியோடொழிக்கவும்.

19. தான் செல்வங்களைத் தருபவனும், நம்முடைய நண்பனும், துதிப்பவர்களை ஊக்கப்படுத்துபவனும், துதியால் துதிக்கத் தகுந்தவனும், பழையவனுமான இந்திரனை அழைக்கிறேன்.

20. துதியாருகனும், தடைபடாதவனுமான இந்திரன் ஒருவனே புவிக்குரிய செல்வங்களுக்கெல்லாம் தலைவனாயிருக்கிறான். 4.791.

21. கோபதியே! தீரனாயிருக்கும் நீ, உன்னுடைய நியுத் குதிரைகளோடு வந்து, எங்களுடைய விருப்பங்களை மிகுந்த உணவாலும், புரவிகளாலும், பசுக்களாலும் திருப்தி செய்யவும்.

22. பலரால் அழைக்கப்படுபவனும், பகைவர்களை ஜயிப்பவனுமான இந்திரனுக்கு ஸோமம் பொழியப்பட்ட



வுடன் பசுக்களுக்குத் தீனியைப் போல் திருப்தி செய்யும் துதிகளைக் கூறுங்கள்.

23. மனைகளைத் தரும் அவன், நம்முடைய துதிகளைச் செவியுறுங்கால் பசுக்கள் சேர்ந்துள்ள செல்வத்தைத் தரத் தவறான்.

24. தஸ்யுக்களைக் கொல்லும் இந்திரன், குவித்ஸனுடைய மாடுகள் நிறைந்த கொட்டில்களுக்குச் செல்லுகிறான். அவன் அவற்றை எங்களுக்குத் தன் வீரச் செயல்களால் புலப்படுத்துகிறான்.

25. பல செல்வங்களை நடத்தும் இந்திரனே! எங்களுடைய இந்தத் துதிகள் உனக்குக் கன்றுகளிடம் செல்லும் பசுக்களைப் போல் இயங்குகின்றன. 4,796.

26. இந்திரனே! உன்னுடைய நட்பை அழிக்க இயலாது. வீரனே! நீ பசுக்களை விரும்புபவனுக்குப் பசுக்களையும், குதிரைகளை விரும்புபவனுக்குக் குதிரைகளையும் தருகிறாய்.

27. பெருஞ் செல்வத்துக்காக உனக்களிக்கப்படும் ஸோமத்தால் நீ உன் தேகத்தை இன்புறுத்திக்கொள்ளவும். வழிபடுபவனை நிந்திப்பவனுக்கு வசப்படுத்தாதே.

28. துதியால் திருப்தியாகும் உனக்கு மீண்டும் மீண்டும் ஸோமம் பொழியப் படுங்கால் எங்களுடைய இந்தத் தோத்திரங்கள் கன்றுகளினிடம் துரிதமாகும் பசுக்களைப் போல் உன்னிடம் துரிதமாகின்றன.

29. யக்ஞ அவிகளோடு பற்றப்படும் யாகத்திலே கூறப்படும் வழிபடும் பலரின் துதிகளைப் பல சத்துருக்களைக் கொல்லும் உன்னைப் பலப்படுத்துகின்றன.

30. இந்திரனே! எங்களுடைய, உன்னை மிக்க மேன்மைப்படுத்தும் துதி, உன்னருகிலாகி அது நாங்கள் பெருஞ் செல்வங்களைச் சம்பாதிக்க எங்களை ஊக்கப் படுத்துக. 4,801.

பிருபு

31. கங்கையின் உயர்ந்த கரையைப் போல் விளங்கும் பணிகளின் உயர்ந்த இடங்களிலே பிருபு தலைமை வகித்தான்.

32. நான் செல்வத்துக்காக அவனை நாடியபோது, அவன் எனக்கு ஆயிரக்கணக்கான பசுக்களைத் தானமாகக் காற்றைப் போல் துரிதமாகும் வேகத்தோடு அளித்தான்.

33. எங்களுடைய காயகர்களும், துதிகர்த்தாக்களும் ஆயிரம் பசுக்களைத் தரும் உத்தமனும், ஆயிரம் துதிகளைப் பெறும் உத்தமனும், அறிஞனுமான பிருபுவை சதா போற்றுகிறார்கள். 4,804.

## 46. இந்திரன்

### 487. சம்யு–பிரகஸ்பதியின் புதல்வன்

1. புலவர்களான நாங்கள் செல்வத்தை அடைய உன்னை அழைக்கிறோம். சனங்கள் நல்லவர்களைப் பாலிக்கும் உன்னைப் பகைவர்களை எதிர்க்குங்காலும், குதிரைகள் போராடும் களங்களிலும், பாலனத்துக்காக அழைக்கிறார்கள்.

2. வச்சிரம் ஏந்தும் அற்புதனே! மேகங்களின் தலைவனே! தீரனும் மகானுமான நீ, எங்களால் ஏத்தப்பட்டு எங்களுக்குப் பசுக்களையும், தேர்களுக்குரிய குதிரைகளையும், போர்களிலே ஜயிப்பவனுக்கு மிகுந்த உணவை அளிப்பது போல் அளிக்கவும்.

3. நாங்கள், மகத்தான சத்துருக்களைக் கொல்பவனும் அனைத்தையுங் காண்பவனுமான இந்திரனை அழைக்கிறோம். வீரர் தலைவனும், ஆயிரமாற்றல்களோடு மிக்க ஆண்மையுடனிருப்பவனுமான நீ, எங்களைப் போர்களிலே ஜயப்படுத்திச் செழிப்பிக்கவும்.

4. இருக்குக்களின் வடிவமுள்ளவனே! நீ எங்களுடைய பகைவர்களைக் கடும் போரிலே தாக்கும் காளையைப் போல் உக்கிரத்தோடு எதிர்க்கவும். சூரியனுடைய ஒளிக்காகவும், சலத்துக்காகவும், உயிருக்காகவும் போராடப்படும் மகத்தான போரிலே நீ எங்களுடைய பாலகனுயிருக்கவும்.

5. இந்திரனே! அற்புதனே! வச்சிரமேந்துபவனே! அழகிய மோவாயுள்ளவனே! நீ எந்த உணவால் சோதியையும் புவியையும் நிரப்புகிறாயோ, அந்த மேன்மையுள்ளதும், வலிமையளிப்பதும், புஷ்டி தருவதுமான உணவை எங்களுக்களிக்கவும் 4,809.

6. அரசனே! நாங்கள் தேவர்களின் நடுவே உக்கிரனும், பகைவர்களை ஜயிப்பவனுமான உன்னைப் பாலனத்துக்காக அழைக்கிறோம். எங்களுடைய சத்துருக்களை ஜயிக்க சுலபப்படுத்தவும்.

7. இந்திரனே! மானிடப் பிரசைகளிலிருக்கும் ஒவ்வொரு சக்தியையும், செல்வத்தையும், பஞ்ச சனங்களிலிருக்கும் ஒவ்வொரு உணவையும், மகத்தான ஆண்மையுள்ள ஆற்றல்கள் அனைத்தையும் எங்களுக்களிக்கவும்.

8. மகவானே! நாங்கள் சத்துருக்களோடு நடத்தும் போர்களிலே, எங்கள் பகைவர்களை யுத்தத்தில் அழிக்க திருக்ஷியினிடமும், துருஹ்யனிடமும், பூருவினிடமுமுள்ள பலத்தை எல்லாம் எங்களுக்களிக்கவும்.

9. இந்திரனே! நீ செல்வர்களுக்கும், எனக்கும், முத்தாதுக்களோடு சேர்ந்துள்ளதும், முவ்வழிகளால் காப்பதும், அழியாதிருப்பதும், இடமளிப்பதுமான மனையை அழிக்கவும். பகைவர்களின் ஆயுதத்தை அவர்களிடமிருந்து விலக்கவும்.

10. இந்திரனே! மகவானே! நீ துதியால் ஏத்தப்பட்டு இறுமாப்போடு எங்களை எதிர்ப்பவர்களிடமிருந்தும் எங்களுடைய பசுக்களை எடுத்துச் செல்லும் மனத்தோடு எங்களைத் தாக்குபவர்களிடமிருந்தும், எங்களுடைய தேகங்களைப் பாலிப்பவனுக எங்களருகிலாகவும். 4,814

11. இந்திரனே! இப்பொழுது எங்களைப் பலப்படுத்தவும். வானிலிருந்து சிறகுள்ளவையும், கூரியவையும், பிரகாசிப்பவையுமான சரங்கள் போரிலே வருங்கால், நீ எங்கள் தலைவனைப் பாலிக்கவும்.

12. போரிலே எங்கள் வீரர்கள் தங்கள் தேகங்களைச் சிரமஞ் செய்துகொள்ளும் இடத்திலே எங்கள் பிதாக்கள் விரும்பிய ஒதுங்கும் நிலங்களை அளிக்கவும். எங்களுக்கும் எங்கள் புதல்வர்களுக்கும் தஞ்சத்தையளிக்கவும். தென்படாத பகைமையை யெல்லாம் விலக்கவும்.

13. இந்திரனே! மகத்தான போரிலே கடினமான வழியிலே நீ இயங்கி, குதிரைகளை இரையைத் தேடும் பருந்தைப் போல் வேகமுடனாக நீ ஊக்கப்படுத்துங்கால்

14. இறக்கத்திலே பாயும் நதிகளைப் போல் அவை வேகமாய்ப் பாய்ந்து, கனைத்து முழங்கினாலும், இறுக்கப் பட்ட இடைகளுள்ள அவை மீண்டும் மீண்டும் போர்க்களத்துக்கு, பசுக்களுக்காக, இரைக்காகப் பாயும் பறவைகளைப் போல் பாய்கின்றன. 4,818.

## 47. பலதேவர்கள்

### 488. கர்கன்-பரத்வாஜனுடைய புதல்வன்

### ஸோமம்

1. இந்த ஸோமம் உருசியுள்ளது. இது இனிமையுள்ளது; இது ஊக்கமுள்ளது; சுவையுள்ளது; இந்திரன் இந்த ஸோமத்தைப் பருகியவுடன் அவனைப் போர்களிலே எவனாலும் ஜயிக்க இயலாது.

2. இங்கு இந்த இனிய ஸோமத்தைப் பருகியவுடன் இந்திரன் மிகுந்த மதமுள்ளவனாகிறான். இதைக் குடித்தவுடன் அவன் விருத்திரனைக் கொல்ல எழுகிறான். இந்த ஸோமம் சம்பரனுடைய பல படைகளையும் அவனுடைய 99 நகரங்களையும் அழிக்கிறது.

3. இது பருகப்பட்டவுடன் என்னுடைய மொழியை ஊக்கப்படுத்துகிறது. விரும்பத் தகுந்த அறிவைப் புலப்



படுத்துகிறது. அறிஞனான இந்த ஸோமன் பிராணிகளெல்லாமிருக்கும் ஆறு பரந்த உலகங்களைக் கற்பிக்கிறான்.

4. இந்த ஸோமம் புவிக்குப் பரப்பைக் கற்பிக்கிறது. சோதிக்குத் திரத்தன்மையைத் தருகிறது. இந்த ஸோமம் மூன்று கலசங்களான ஓஷதிகளிலே, சலங்களிலே, பசுக்களிலே அமுதத்தை ஏந்துகிறது. இந்த ஸோமம் பரந்த வானைத் தாங்குகிறது.

5. இந்த ஸோமம் வானிலே வசதியுள்ள உஷைகளின் உதயத்திலே, சூரியனுடைய அற்புதமாயும், அழகாயும், ஊக்கமளிப்பதாயுமுள்ள காந்தியைப் புலப்படுத்துகிறது. விருஷபனும், மருத்துக்களோடிருப்பவனும், மகானுமான இந்த ஸோமன் மகத்தான ஸ்தம்பத்தால்—வானால்—சோதியை நிறுத்துகிறான். 4,823.

### இந்திரன்

6. சூரனே! இந்திரனே! செல்வங்களைப் பற்ற போர்களிலே சத்துருக்களைக் கொல்லும் நீ, கலசத்திலிருந்து ஸோமத்தைத் தீரமாய்ப் பருகவும். பகல் யக்ஞத்தில் மிக்கப் பருகவும். செல்வக் களஞ்சியமான நீ எங்களுக்குச் செல்வங்களை அளிக்கவும்.

7. இந்திரனே! வழியிலே எங்கள் முன்னே செல்பவனைப் போல் எங்களைக் கவனித்துக் கொள்ளவும். அனந்தமான செல்வத்தையளிக்கவும். துன்பத்திலிருந்து நன்கு கடத்துபவனாயிருக்கவும். பகைவர்களிடமிருந்து எங்களைக் கடத்தவும். விரும்பத் தகுந்த செல்வங்களுக்கு வழிகாட்டுபவனாயிருக்கவும்.

8. இந்திரனே! அறிஞனான நீ, எங்களைப் பரந்த இடத்துக்கும், உலகத்துக்கும், சுகத்துக்கும், பயமின்மைக்கும், சோதிக்கும், சுவஸ்திக்கும் செலுத்தவும். நாங்கள் பழையவனான உன்னுடைய அழகுள்ளவையும், ஆதரவளிப்பவையும், மகத்தாயுமுள்ள கைகளில் சாய்ந்திருப்போமாக.

9. இந்திரனே! மிகுந்த செல்வங்களுள்ளவனே! எங்களை உன்னுடைய பரந்த தேரிலே, வலிய குதிரைகளிலே அமர்த்தவும். எல்லா உணவுகளின் நடுவிலுள்ள உகந்த உணவை எங்களுக்களிக்கவும். மகவானே! சத்துருவின் செல்வம் எங்களைத் தாழ்த்தாமலிருக்க.

10. இந்திரனே! என்னை சுகப்படுத்தவும். சீவனௌஷதத்தை எனக்களிக்கவும். என்னாயுளை நீட்டவும். கத்தியின் தாரையைப் போல் என் புத்தியைக் கூர்ப்பிக்கவும். நான் கூறும் எந்த மொழிகளையும் ஏற்கவும். உன்னை நாடும் எனக்கு உன்னுடைய தேவ பாலனத்தை யளிக்கவும். 4,828.

11. நான் பாலிக்கும் இந்திரனை, ஆதரிக்கும் இந்திரனை, ஒவ்வொரு அழைப்பிலும் செவியுறும் சூரனை, சக்தனான இந்திரனை, பலரால் அழைக்கப்படும் இந்திரனை அழைக்கிறேன். மகவானான இந்திரன் எங்களுக்கு சுவஸ்தியை யளிப்பானாக.

12. நன்கு பாலிப்பவனும், செல்வனுமான இந்திரன் பாலனங்களால் நன்கு சுகப்படுத்துபவனாயிருப்பானாக. எல்லாமறியும் அவன் எங்கள் சத்துருக்களை விலக்குவானாக. அவன் எங்களுக்குப் பயமின்மையைத் தருவானாக. நாங்கள் உத்தம வீரியத்தின் தலைவர்களாயிருப்போமாக.

13. நாங்கள் யக்ஞார்கனுடைய சுமதியிலும் மங்களமான நல்ல மனத்திலுமிருப்போமாக. பாலகனும், செல்வனுமான இந்திரன் எங்களிடம் வெறுப்புள்ளவர்களை யெல்லாம் தூரத்திலே இறுதிக்குச் செலுத்துவானாக.

14. உனக்கு வழிபடுபவனுடைய துதிகளும், தோத்திரங்களும், இறக்கத்தில் பாயும் நதிகளைப் போல் துரிதமாகின்றன. வச்சிராயுதனே! நீ யக்ஞத்தின் பல செல்வங்களையும், பல ஸோமதாரைகளையும், பாலையும் ஒருமைப்படுத்துகிறாய்.



15. எவன் அவனைத் துதிக்கிறான்? எவன் அவனைத் திருப்தி செய்கிறான்? எவன் அவனை யஜிக்கிறான்? ஏனெனில் எப்பொழுதும் மகவான் உக்கிரனாகவே இருக்கிறான். அறிவோடு ஒருவன் தன் காலை மாறி மாறி வைப்பது போல் அவன் தன் ஆற்றலால் பிந்துபவனை முந்துபவனாகவும், முந்துபவனைப் பிந்துபவனாகவும் செய்கிறான். 4,833.

16. ஒவ்வொரு உக்கிரப் பகைவனைத் தாழ்த்துவதிலும், தலைவனை அடிக்கடி மாற்றுவதிலும் இந்திரன் புகழ் பெற்றவன். இறுமாப்புள்ளவர்களை வெறுப்பவனும், சோதிபுவிகளுக்கு அரசனுமான இந்திரன் தன் பிரசைகளாயுள்ள சனங்களைப் பாலிக்கிறான்.

17. இந்திரன் நல்ல செயல்களைச் செய்யும் முதல்வர்களுடைய நட்புக்களை நீக்குகிறான். அவர்களைத் துன்புறுத்தி சாதாரண செயல்களைச் செய்யும் தாழ்ந்தவர்களோடு சேர்க்கிறான், அல்லது இந்திரன் வழிபடாதவர்களை விலக்கி வழிபடுபவர்களோடு பல வருடங்கள் வசிக்கிறான்.

18. அவன் ஒவ்வொரு உருவத்திலும் பிரதிநிதியாயிருக்கிறான். நாங்கள் பார்ப்பதற்காக இது அவனுடைய ஒரே வடிவமாயிருக்கிறது. அவன் மாயைகளால் பல வடிவங்களெடுத்துப் பரவுகிறான். ஏனெனில் அவனுடைய தேரிலே ஆயிரங் குதிரைகள் இணைக்கப்பட்டிருக்கின்றன.

19. துவஷ்ட்ரி – இந்திரன் – தேரிலே குதிரைகளை இணைத்து இங்கு பல இடங்களிலே பிரகாசிக்கிறான். வழிபடுபவர்களின் நடுவே எப்பொழுதுமிருக்கும் இந்திரனை அன்றி வேறு எவன் அவர்களைப் பகைவர்களிடமிருந்து பாலிப்பவனாயிருக்கிறான்?

### தேவர்கள்

20. தேவர்களே! நாங்கள் பசுக்கள் சஞ்சரிக்காத இடத்துக்கு வந்திருக்கிறோம். இப்பரந்த பூமி கொலை

பாதகர்கள் இன்புறும் ஸ்தானமாயிருக்கிறது. பிரகஸ்பதியே! எங்களுக்குப் பசுக்களைத் தேடும் வழியைப் புலப்படுத்தவும். இந்திரனே! வழி தவறிய வழிபடுபவனுக்கு வழியைக் காட்டவும். 4,838.

### இந்திரன்

21. இந்திரன் தன்னுடைய இடத்திலிருந்து—சூரியனாகத் தோன்றி ஸம வடிவங்களுள்ள தமங்களை—இரவுகளை—ஒரு நாளின் வேறு பாதியான பகல்களைப் புலப்படுத்த நீக்குகிறான். விருஷபன் செல்வத்தை நாடிய இரு தாஸர்களான வர்சினனையும் சம்பரனையும் உதவிரஜ தேசத்திலே கொன்றான்.

### தானம்

22. இந்திரனே! உன்னைப் போற்றும் எனக்குப் பிரஸ்தோகன், பத்து பொன் கோசங்களையும் பத்து குதிரைகளையுந் தந்தான். நாங்கள் திவோதாஸனிடமிருந்து-பிரஸ்தோகனிடமிருந்து, அதிதிக்வனால்-பிரஸ்தோகனால்-சம்பரனிடமிருந்து பற்றப்பட்ட பொருளான இந்த செல்வத்தைப் பெற்றுக்கொண்டோம்.

23. நான் திவோதாஸனிடமிருந்து பத்து குதிரைகளையும், பத்து கோசங்களையும், ஆடைகளையும், மிகுந்த உணவையும், பத்து பொன் கட்டிகளையும் பெற்றுக் கொண்டேன்.

24. அசுவத்தன் குதிரைகளோடு பத்து தேர்களையும் நூறு பசுக்களையும், அதர்வர்களுக்கும் பாயுவுக்கும் அளித்தான்.

25. எல்லா மனிதர்களின் நன்மைக்காகப் பெருஞ் செல்வத்தைப் பெற்றுக்கொண்ட பரத்வாஜர்களை ஸிருஞ்ஜயனுடைய புதல்வனான பிரஸ்தோகன் போற்றினான். 4,843

### தேர்

26. மரத்தால் கட்டப்பட்ட தேரே! நீ திடாங்கத்துடனிருக்கவும். நீ எங்களுடைய நண்பனாகவும். நீ



பாலகனாயிருக்கவும். நீ வீரர்களால் செலுத்தப்படவும். நீ பசுவின் சருமங்களால் கட்டப்பட்டிருக்கிறாய். நீ எங்களை நிலைப்படுத்தவும். உன்னில் அமர்ந்து செல்பவன் போரின் செல்வங்களை எல்லாம் ஜயிப்பானாக.

27. சோதிபுவிகளின் ஸாரத்திலிருந்து கற்பிக்கப்பட்டதும், வனஸ்பதிகளின் சக்தியிலிருந்து அமைக்கப்பட்டதும், சலங்களின் வேகமிருப்பதும், பசுவின் சருமத்தால் கட்டப்பட்டதும், இந்திரனுடைய வச்சிராயுதமுமான தேரை அவியோடு ஏத்தவும்.

28. தேவனே! தேரே! மருத்துக்களை முந்துவதும், மித்திரனுடைய கருப்பமும், வருணனுடைய நாபியும், இந்திரனுடைய படையும், எங்களுடைய இந்த யக்ஞத்தால் போற்றப்படுவதுமான நீ, அவியைப் பெற்றுக் கொள்ளவும்.

### துந்துபி

29. போர் முரசே! நீ உன் முழக்கத்தால் சோதியையும் புவியையும் நிரப்பவும். தாவர சங்கமப் பொருள்கள் எல்லாம் உன் முழக்கத்தை உணர்க. இந்திரனோடும் தேவர்களோடும் சேர்ந்துள்ள நீ, சத்துருக்களை வெகு தூரத்துக்கப்பால் செலுத்தவும்.

30. பகைப்படையை எதிர்த்து முழங்கவும். எங்கள் பலத்தை ஊக்கப்படுத்தவும். கயவர்களைக் கலக்கஞ் செய்யவும்; கர்ச்சிக்கவும்; எங்களைத் துன்புறுத்த இன்புறுபவர்களை விலக்கவும். முரசே! நீ இந்திரனுடைய கரமுட்டாயிருக்கிறாய். எங்களைப் பலப்படுத்தவும்.

### இந்திரன்

31. இந்திரனே! எங்களுடைய இந்தப் பசுக்களை மீட்கவும். அவற்றை இங்கே திருப்பிச் செலுத்தவும். துந்துபி போரை அறிவிக்க முழங்குகிறது. குதிரைகளில் ஏறியுள்ள எங்கள் தலைவர்கள் ஒன்று சேர்கிறார்கள்.

இந்திரனே! தேரில் ஏறியிருக்கும் எங்களுடைய வீரர்கள் ஜயிப்பார்களாக. 4,849

# 48. அக்கினியும் பலதேவர்களும்

## 489. சம்யு பார்ஹஸ்பத்தியன்

### அக்கினி

1. நாங்கள் அமுதனும், ஜாதவேதஸனும், எங்கள் பிரியமுள்ள நண்பனுமான அக்கினியைப் போற்றுங்கால், நீங்கள் ஒவ்வொரு யக்ஞத்திலும் ஆற்றலுள்ள அவனை அடிக்கடி கூறப்படும் துதியால் போற்றுங்கள்.

2. பலத்தின் மகன் மெய்யாகவே எங்களை விரும்புபவனாயிருக்கிறான். நாம் அவிகளைத் தேவர்களிடம் செலுத்துபவனுக்களிப்போமாக. போர்களில் அவன் எங்களைப் பாலிப்பவனாயிருப்பானாக. பலப்படுத்துபவனாயிருப்பானாக. எங்கள் புதல்வர்களைப் பாலிப்பவனாயிருப்பானாக.

3. அக்கினியே! பொழிபவனும், மூப்பற்றவனும், மகானுமான நீ, காந்தியோடு பிரகாசிக்கிறாய். தேயாத ஒளியோடு துலங்கும் நீ, துலங்குகிறாய். உன்னுடைய சிறப்புள்ள கதிர்களோடு எங்களை ஒளிப்படுத்தவும்.

4. அக்கினியே! நீ மகத்தான தேவர்களை யஜிக்கிறாய். எங்களுக்காக இடைவிடாமல் யஜிக்கவும். உன்னுடைய அறிவாலும், செயலாலும் யக்ஞம் பூர்த்தியாகிறது. தாங்கள் பாலனமாகத் தேவர்களையெல்லாம் முகப்படுத்தவும். அவர்களுக்கு அவிகளை அளிக்கவும். நீயும் அருந்தவும்.

5. உன்னை சலங்களும், மலைகளும், மரங்களும் ருதத்தின் கருவாகப் பேணுகின்றன. மனிதர்களால் பலத்தோடு கடையப்பட்ட நீ, புவியின் உயர்ந்த இடத்திலே பிறப்பிக்கப்படுகிறாய். 4,854

6. சோதியையும் புவியையும் தன் ஒளியால் நிரப்புபவனும், வானிலே புகையோடு பிரகாசிப்பவனும், பொழி



பவனுமான அக்கினி, இருண்ட இரவுகளிலே தமத்தை நீக்குபவனாகத் தோன்றுகிறான். பிரகாசிப்பவனும் பொழிபவனுமான அக்கினி, இருண்ட இரவுகளிலே தலைவனாயிருக்கிறான்.

7. தேவனே! தருணனே! துலங்கும் அக்கினியே! நீ பரத்வாஜனால் சொலிப்பிக்கப்பட்டவுடன் மகத்தான சுவாலைகளோடு பிரகாசிக்கிறாய். எங்களுக்குச் செல்வங்களைத் தருகிறாய். சுத்தஞ் செய்பவனே! ஒளியோடு பிரகாசிக்கவும்.

8. அக்கினியே! நீ மநு வம்சத்தில் வந்த எல்லாப் பிரஜைகளுக்கும் மனைக்கும் தலைவனாயிருக்கிறாய். மிக்க இளைஞனாயிருப்பவனே! நீ மூட்டப்படுங்கால் என்னைத் துன்பத்திலிருந்து, நூறு காப்புக்களோடு பாலிக்கவும். உன்னை வழிபடும் எனக்கும், உன்னை வழிபடுபவர்களுக்குச் செல்வங்களை அளிப்பவர்களுக்கும் நூறு ஏமந்தங்களை நல்கவும்.

9. அக்கினியே! அற்புதனே! மனைகளை அளிப்பவனான நீ, உன்னுடைய பாலனத்தோடு எங்களுக்குச் செல்வங்களைப் பிரேரிக்கவும். ஏனெனில் அக்கினியே! நீயே இந்த செல்வத்தைச் செலுத்துபவன். எங்களுடைய வம்சத்தை நிலைப்படுத்தவும்.

10. நீ தடைபடாத தளராத பாலனங்களால் எங்கள் புதல்வர்களையும் பேரர்களையும் பாலிக்கிறாய். எங்களிடமிருந்து தேவர்களின் கோபங்களையும் மானிடர்களின் துவேஷங்களையும் விலக்கவும். 4,859

### மருத்துக்கள்

11. நண்பர்களே! பால் தரும் பசுவைப் புதிய பண்ணோடு அணுகுங்கள். துன்பமாகாமல் அவளைப் பந்தத்திலிருந்து அவிழ்த்து விடுங்கள்.

12. மருத்துக்களுடைய வலிமையுள்ளதும், தாமே துலங்குவதுமான படைக்கு அமுதமான உணவை அளிப்

பவனும், தாமே செல்பவர்களும், வானைச் சலனமாகும் சலங்களோடு இன்பத்தை அளித்து, கடப்பவர்களுமான மருத்துக்களைத் திருப்தி செய்ய விரும்புபவனுமான பசு தோன்றுகிருன்.

13. மருத்துக்களே! அனைவர்க்கும் பூரணமான உணவாயிருப்பதும், விசுவத்துக்குப் பாலையளிப்பதுமான இருவிதத் தன்மைகளுள்ள பசுவைக் கறக்கவும்.

14. நான் செல்வத்தை அளிக்க, இந்திரனைப் போல் மகத்தான செயல்களை நடத்துபவர்களும், வருணனைப் போல் அறிஞர்களும், அர்யமானைப் போல் போற்றத் தகுந்தவர்களும், விஷ்ணுவைப் போல் தானசீலர்களும், மருத்துக்களுமான உங்களுடைய படையைப் போற்றுகிறேன்.

15. நான் மிக்க முழங்குபவர்களும், தடைபடாதவர்களும், பாலிப்பவர்களுமான மருத்துக்களுடைய பிரகாசமாயுள்ள படையைப் போற்றுகிறேன். அதனுல் மானிடர்களுக்கு நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான செல்வக் குவியல்கள் அளிக்கப்படுகின்றன. அப்படை மறைந்திருக்கும் செல்வத்தைப் புலப்படுத்துக. அது செல்வங்களை நாங்கள் அடைய சுலபப்படுத்துக. 4,864

பூஷா

16. பூஷாவே! என்னிடம் வரத் துரிதமாகவும். மிக்கப் பிரகாசமுள்ளவனே! எதிர்க்கும் கொடும் பகைவர்களையெல்லாம் விலக்கவும். நான் உன் அருகிலாகி உனக்குத் துதியைக் கூறுகிறேன்.

17. பூஷாவே! காக்கைகளும், அவற்றின் குஞ்சுகளுமுள்ள பிரமரத்தை நாசப்படுத்தாதே. என்னை நிந்திப்பவர்களை அடியோடழிக்கவும். பகைவன் என்னைப் பறவைகளை வேடர்களைப் போல் பிடிக்காமலிருக்க.

18. தயிரை ஒழுகாமல் ஏந்தும் சருமத்தைப் போல் உன்னுடைய நட்பு இடையருமல் நிலைத்திருக்க.



19. பூஷாவே! நீ மானிடர்களுக்கு மேலாயிருக்கிருய். நீ புகழில் தேவர்களுக்குச் சமமாய் விளங்குகிருய். ஆதலால் பூஷாவே! நீ எங்களைப் போர்களிலே கவனித்துக் கொள்ளவும். நீ பூர்வத்திலிருந்தவர்களைப் பாலித்தது போல் எங்களைப் பாலிக்கவும்.

மருத்துக்கள்

20. மருத்துக்களே! இயக்குபவர்களும், போற்றத் தகுந்தவர்களுமான உங்களுடைய சத்திய வாக்கு எங்களுக்கு நல்ல வழியைப் புலப்படுத்துபவளாயிருப்பாளாக. இனியவளான அவள், தேவர்களையும், யஜிக்கும் மானிடர்களையும், விரும்பத் தகுந்த செல்வத்தில் செலுத்தும் தலைவியாயிருக்கிருள். 4,869

21. மருத்துக்கள் பிரகாசமாயுள்ள பலத்தையும், யக்ஞாருகமான பெயரையும், விருத்திரர்களைக் கொல்லும் மேன்மையான பலத்தையும் அடைந்திருக்கிருர்கள். அவர்களுடைய செயல்கள் சோதிமண்டலமெங்கும் துரிதமாய்த் தேவனுன சூரியனுடைய ஒளியைப் போல் பரவுகின்றன.

சோதியும் புவியும்

22. ஒரு தரம் ஒரே ஒருமுறை சோதி-உலகம்-பிறப்பிக்கப்பட்டது. ஒருதரம் ஒரே ஒருமுறை புவி பிறப்பிக்கப்பட்டது; கற்பிக்கப்பட்டது. ஒரே தடவை பிருசினியின் பால் கறக்கப்பட்டது. இரண்டாவதில்லை. இதற்கப்பால் வேறு ஒப்பாயுள்ள எதுவும் பிறப்பிக்கப்படவில்லை. 4,871

## 49. விசுவே தேவர்கள்

### 490. இருஜிசுவனன்-பரத்வாஜனுடைய புதல்வன்

1. நான் நல்ல செயல்களைச் செய்யும் சங்கத்தைப் புதிய பாக்களால் போற்றுகிறேன். நான் சுகப்படுத்துபவர்களான சங்கமாயிருக்கும் மித்திரா வருணர்களைப் போற்றுகிறேன். மிகுந்த பலமுள்ளவர்களான மித்திர

னும் வருணனும் அக்கினியும் இங்கு வருவார்களாக. அவர்கள் கேட்பார்களாக.

2. ஒவ்வொருவனுடைய யக்ஞங்களில் போற்றத் தகுந்தவனும், கர்வமற்ற செயல்களுள்ளவனும், இரு யுவதிகளான சோதி புவிகளின் தலைவனும், பலத்தின் மகனும், சோதி உலகின் புதல்வனும், யக்ஞத்தின் கொடியும், பிரகாசிப்பவனுமான அக்கினிக்கு, துதியை அளிக்க வழிபடுபவனை ஊக்கப்படுத்துகிறேன்.

3. சிகப்பாயுள்ள தேவனுக்கு மாறுன வடிவங்களுள்ள இரு புதல்விகள் உண்டு. ஒருத்தி சூரியனோடு சேர்ந்திருக்கிருள். மற்றொருத்தியை நட்சத்திரங்கள் எழில்படுத்துகின்றன. பரஸ்பரம் மாறுபட்டவர்களும், தனித்துப் பலவிதமாய்ச் செல்பவர்களும், நம்முடைய துதிக்குத் தகுந்தவர்களுமான இரவும் பகலும், எங்களிடமிருந்து செவியுறும் துதியால் இன்புறுவார்களாக.

4. தன் தேரைச் செல்வத்தால் நிறைத்துக் கொள்பவனும், அனைவராலும் விரும்பப்படுபவனும், பரந்த பொருள்களை அடைந்துள்ளவனுமான வாயுவின் முகப்பிலே எங்களுடைய மகத்தான தோத்திரம் செல்க. ஒளியுள்ள தேரிலே செல்பவனும், நியுத குதிரைகளைச் செலுத்துபவனும், கவியும், மிக்கத் துதியாருகனுமான வாயுவாம் நீ, கவியாம் என்னை மேம்படுத்தவும்.

5. நாஸத்தியர்களே! தலைவர்களே! நீங்கள் எந்தத் தேரிலே எங்களுக்கும் எங்களுடைய புதல்வர்களுக்கும் புதிய பலத்தையளிக்க நினைத்தவுடன் வந்து சேர்ந்தீர்களோ, அசுவினிகளுடையதுமான அந்தப் பிரகாசமாயுள்ள தேர் ஒளியால் என் தேகத்தை எழில் செய்க. 4,876.

6. புவியின் விருஷபனே! வரதனே! பர்ஜன்யனே! அளிப்பதற்குரிய சலங்களை வானிலிருந்து பிரேரிக்கவும். கவிகளே! சத்தியத்தைச் செவியுறுபவர்களே! உலகங்களைத் தாங்குபவர்களே! உங்களைத் துதி



களால் இன்புறுத்தும் வழிபடுபவனுடைய சங்கமச் செல்வத்தைச் செழிப்பிக்கவும்.

7. சுத்தஞ் செய்பவளும்; விரும்பத் தகுந்தவளும், அழகிய நடையுள்ளவளும், வீரனுடைய பத்தினியுமான ஸரஸ்வதி எங்களுடைய புத்தியை உற்சாகப்படுத்துவாளாக-ஏந்துவாளாக. அவள் தேவ பத்தினிகளோடு சேர்ந்து இன்பமாகி எதிர்ப்பற்றதும் குற்றமற்றதுமான மனையை, சுகத்தை வழிபடுபவனுக்களிப்பாளாக.

8. நான் இனிய மொழியால் எல்லா வழிகளையும் பாலிப்பவனுன பூஷாவைப் போற்றுகிறேன். அவன் காமத்தால் வசப்பட்டவுடன் அர்க்கனிடம் சென்றுன்' அவன் எங்களுக்குப் பொன் கொம்புகளுள்ள பசுக்களை அளிப்பானுக. பூஷா எங்களுடைய ஒவ்வொரு செயலையும் சித்தப்படுத்துவானுக.

9. ஹோதாவும் பிரகாசிப்பவனுமான அக்கினி, இந்த அவியால் வடிவங்களை வகுக்கும் முதல்வனும், புகழுள்ளவனும், உணவையளிப்பவனும், திறக்கையுள்ளவனும், மகானும், இல்லறத் தலைவர்களால் துதிக்கப்படுபவனும், சுலபமாய் அழைக்கப்படுபவனுமான துவஷ்டாவை யஜிப்பானுக.

10. இந்தத் துதிகளால் உலகத்தின் தந்தையான உருத்திரனைப் போற்றவும். இந்தத் துதிகளால் இரவிலும் உருத்திரனைப் போற்றவும். நாங்களும் கவியான உருத்திரனல் ஊக்கமாகி, பெரியவனும், அழகனும், மூப்பற்றவனும், சுகமயனும், செல்வத்தின் மூலனுமான அவனை அழைக்கிறோம். 4,881.

11. நித்திய தருணர்களும், கவிகளும், யக்ஞாருகர்களுமான மருத்துக்களே! வழிபடுபவனின் துதிக்கு வாருங்கள். தலைவர்களான நீங்கள் இங்ஙனம் செழித்து வானிலே எங்கும் ஒளியின் கதிர்களைப்போல் பரவி செடி கொடி மரங்களில்லாத இடங்களை மழையால் திருப்தி செய்யுங்கள்.

12. நான் என்னுடைய பாக்களை வலியனும் துரிதனுமான சூரனுக்கு, பசுக்களைப் பட்டிக்கு ஓட்டிச்செல்லும் கோபதியைப் போல் பிரேரிக்கிறேன். மருத்துக்களின் புகழுள்ள அந்தப் படை தன் தேகத்திலே வழிபடுபவனுடைய தோத்திரங்களை வானிலே நட்சத்திரங்களைப் போல் அணிந்துகொள்வாளாக.

13. அசுரர்களால் துன்புறுத்தப்பட்டபோது மநுவுக்காகப் புவிக்குரிய உலகங்களைக் கால் அடிகளால் அளந்த—கற்பித்த—விஷ்ணுவே! உன்னால் அளிக்கப்பட்ட மனையில் வசிக்கும் நாங்கள், செல்வங்களோடும், நோயற்ற தேகத்தோடும், புதல்வர்களோடும் இன்புறுவோமாக.

14. எங்கள் தோத்திரங்களால் போற்றப்பட்டு அஹிர்புத்னியும், பர்வதனும், ஸவிதாவும், எங்களுக்கு சலத்தோடு உணவை அளிப்பார்களாக. விசுவே தேவர்கள் எங்களுக்கு ஓஷதிகளோடு உணவை அளிப்பார்களாக. பேரறிஞுனை பகன் எங்களைச் செல்வத்துக்காகப் பிரேரிப்பானாக.

15. விசுவே தேவர்களே! எங்களுக்குத் தேர்கள் உள்ளதும், மனிதர்களைத் திருப்தி செய்வதும், வீரப் புதல்வர்கள் உள்ளதும், மகத்தான குதத்தைப் பாலிப்பதுமான செல்வத்தையும், தேயாத மனையையும், தீயோர்களையும், துன்புறுத்துபவர்களையும், ஜயிக்கத் திறமுள்ளவையும், தேவர்களை நாடும் சனங்களை ஆதரிப்பவையுமான தனத்தையும் இடத்தையும் அளியுங்கள். 4,886

## 50. விசுவே தேவர்கள்

### 491. இருஜிசுவனன்—பரத்வாஜனுடைய புதல்வன்

1. நான் தோத்திரங்களோடு உங்களுடைய தாயும், தேவியுமான அதிதியையும், வருணனையும், மித்திரனையும், அக்கினியையும் பகைவர்களை ஜயிப்பவனும், உத்தம சுகத்தைத் தருபவனுமான — அரியமணனையும், ஸவிதாவையும், பகனையும், பாலிக்கும் எல்லாத் தேவர்களையும் சுகத்துக்காக அழைக்கிறேன்.



2. மிக்க ஒளியுள்ள சூரியனே! துவிஜர்களும், ருதத்தை விரும்புபவர்களும், சத்தியத்தைப் பாலிப்பவர்களும், செல்வமுள்ளவர்களும், துதியாருகர்களும், அக்கினியை நாக்காக அடைந்தவர்களும், தட்சப் புதல்வர்களும், உத்தம ஒளியுள்ளவர்களுமான தேவர்களிடம், நாங்கள் குற்றமற்றவர்கள் எனத் தெரியப்படுத்தி அவர்கள் எங்களைத் தண்டிக்காமலிருக்க விரும்பவும்.

3. மேலும், சோதிபுவிகளே! எங்களுக்குப் பரந்த க்ஷத்திரத்தை அளியுங்கள். எங்களுடைய சுகத்துக்காக மகத்தான மனையையளியுங்கள். எங்களுக்கு அனந்தமான செல்வத்தை ஸ்தாபியுங்கள். ஏந்துபவர்களே! எங்கள் மனையிலிருந்து பாபத்தை நீக்குங்கள்.

4. நாங்கள் தேவர்களான மருத்துக்களை எங்களுடைய சிறிய, பெரிய போரிலே பாலனத்துக்காக அழைக்கும்போது, மனைகளையளிப்பவர்களும் தடைபடாதவர்களுமான ருத்திரப் புதல்வர்கள், இப்பொழுது போற்றப்பட்டு எங்களிடம் பணிந்து வருவார்களாக.

5. மருத்துக்களோடு தேவியான ரோதஸி துரிதமாய்ச் சேர்ந்து இயங்குகிறாள். வழிபடுபவர்களைச் செழிப்பித்து, செல்வத்தால் போற்றும் பூஷா, மருத்துக்களே! நீங்கள் அழைப்புக்குச் செவி சாய்த்து வருங்கால் வழிகளிலிருக்கும் எல்லாப் பிராணிகளும் நடுங்குகின்றன. 4,891.

6. வழிபடுபவனே! வீரனும் துதியை விரும்புபவனுமான இந்திரனைப் புதிய துதியால் போற்றவும், போற்றப்படும் அவன் எங்கள் அழைப்பைக் கேட்பானாக. அங்ஙனம் ஏத்தப்பட்ட அவன் எங்களுக்கு மிகுந்த உணவுகளை அளிப்பானாக.

7. சலங்களே! மனிதர்களுக்கு நலத்தைச் செய்யும் நீங்கள் தடைபடாத பாலான்னத்தையளியுங்கள். தண்மையைத் தந்து துணைபுரிந்து — துன்பத்தை நீக்குங்கள். நீங்கள் தாய்மார்களை முந்தும் வைத்தியர்கள். நீங்கள்

தாவர சங்கமப் பொருள்களை யெல்லாம் பிறப்பிப் பவர்கள்.

8. பாலிப்பவனும், பொன் கையுள்ளவனும், துதி யாருகனுமான ஸவிதா எங்களிடம் வருவானாக. தான சீலனான அவன் உஷையின் முகத்தைப் போல் வழிபடு பவனுக்கு விரும்பத் தகுந்த செல்வங்களைப் புலப்படுத்து கிறான்.

9. பலத்தின் மகனே! அக்கினியான நீ இப்பொழுது எங்களுடைய யக்ஞத்திலே தேவர்களைத் திருப்பவும். நான் எப்பொழுதும் உன்னுடைய தானத்தை அனுபவிப் பேனாக. அக்கினியே! நான் உன்னுடைய பாலனத்தால் உத்தம வீரப்புதல்வர்களோடிருப்பேனாக.

10. அறிஞர்களே! வாய்மையின் தலைவர்களே! நீங்கள் உங்களுடைய செயல்களோடு சேர்ந்து என்னு டைய அழைப்புக்குச் சீக்கிரம் வாருங்கள். அசுவினி களே! நீங்கள் அத்திரியை விடுவித்தது போல் எங்களை மகத்தான இருட்டிலிருந்து விலக்குங்கள். போரிலே விபத்திலிருந்து எங்களைப் பாலியுங்கள். 4,896.

11. தேவர்களே! நீங்கள் புகழுள்ளதும், பலமளிப் பதும், வீரப்புதல்வர்கள் உள்ளதும், பலரால் போற்றப் படுவதுமான செல்வத்தை எங்களுக்கு அளியுங்கள். சோதியில் தோன்றும் ஆதித்தியர்களும், புவியில் புலனு கும் வசுக்களும், பசுக்களில் தோன்றும் மருத்துக்களும், சலங்களில் தோன்றும் ருத்திரர்களும், எங்கள் விருப்பங் களைப் பூர்த்தி செய்து எங்களை சுகப்படுத்துவார்களாக.

12. இணக்கமுள்ள உருத்திரனும், ஸரஸ்வதியும், விஷ்ணுவும், வாயுவும், ரிபுக்ஷணனும், வாஜனும், தேவனான விதாதாவும், மழையைப் பொழிந்து எங்களை சுகப்படுத்துவார்களாக. பர்ஜன்யனும், வாஜனும் எங்களுக்கு மிகுந்த உணவை அளிப்பார்களாக.

13. மேலும், தேவ ஸவிதாவும், பகனும், செல்வங் களைத் தாராளமாயளிக்கும் சலங்களின் பேரனுமான



அக்கினியும் எங்களைப் பாலிப்பார்களாக. தேவர்களோடு துவஷ்டாவும் எங்களைப் பாலிப்பார்களாக. 4,900.

14. அஹிர்ப்புதன்னியனும், அஜஏகபாதனும், புவி யும் கடலும் எங்களைக் கேட்பார்களாக. ருதத்தைப் பாலிப்பவர்களும், எங்களால் அழைக்கப்பட்டு போற்றப் படுபவர்களும், மந்திரங்கள் கூறப்படுபவர்களும், கவி களால் பாடப்பட்டவர்களுமான விசுவே தேவர்கள் எங்களைப் பாலிப்பார்களாக.

15. பரத்வாஜ வம்சத்தில் வந்த என்னுடைய புதல்வர்கள் துதிகளோடும் தோத்திரங்களோடும் இங்ஙனம் தேவர்களைப் போற்றுகிறார்கள். போற்றப் படுபவர்களும், பாடப்படுபவர்களும், மனைகளை அளிப் பவர்களும், தடைபடாதவர்களுமான விசுவே தேவர் களுமான நீங்கள் எப்பொழுதும் உங்கள் மனைவிகளோடு போற்றப்படுவீர்களாக. 4,901.

## 51. விசுவே தேவர்கள்

### 492. இருஜிசுவனன்-பரத்வாஜனுடைய புதல்வன்

1. மித்திரா வருணர்களுடைய தடைபடாமலிருப்ப தும், பிரியமுள்ளதுமான மகத்தான கண்ணானது மேலே எழுகிறது. ருதத்தினுடைய - சூரியனுடைய - சுத்தமா யிருப்பதும் அழகுள்ளதுமான முகம் உதயத்திலே சோதி யின் நகையைப் போல் பிரகாசிக்கிறது.

2. அறியத் தகுந்த மூவ்வுலகங்களை அறிபவனும், அவற்றிலிருக்கும் தேவர்களுடைய பிறப்பை அறிபவனும், மனிதர்களுடைய நலமான நலமற்ற செயல்களைக் காண் பவனுமான சூரியன் அனைத்தையும் ஒளிப்படுத்துகிறான். அவன் தலைவனாகி மானிடர்களுடைய அடையத் தகுந்த விருப்பங்களையும் புலப்படுத்துகிறான்.

3. தேவர்களே! நான் மகத்தான ருதத்தின் பால கர்களான உங்களைப் போற்றுகிறேன். நன்கு பிறந்த அதிதியையும், மித்திரனையும், வருணனையும், அர்யமானை

யும், பகனையும் போற்றுகிறேன். நான் தடைபடாத செயல்கள் உள்ளவர்களும், செல்வத்தைத் தருபவர்களும், சுத்தப்படுத்துபவர்களுமான தேவர்களை இங்கு அழைக்கிறேன்.

4. துன்புறுத்துபவர்களைத் தொலைப்பவர்களும், நல்லவர்களைப் பாலிப்பவர்களும், தடைபடாதவர்களும், பெரிய அரசர்களும், நல்ல மனைகளைத் தருபவர்களும், நித்திய தருணர்களும், மிக்கச் சக்தி வாய்ந்தவர்களும், எங்குமிருப்பவர்களும், சோதியின் தலைவர்களும், அதிதியின் புதல்வர்களுமான தேவர்களையும், துதியால் இன்புறும் அதிதியையும் பற்றுகிறேன்.

5. தந்தையான சோதியே! எங்களுடைய வஞ்சகமற்ற தாயான பூமியே! சகோதரனான அக்கினியே! வசுக்களே! எங்களை சுகப்படுத்துங்கள். அதிதியே! ஆதித்தியர்களே! ஒரு மனமுள்ள நீங்கள் எங்களுக்குப் பலவிதப் பாலனத்தையளியுங்கள். 4,906

6. துதியாருகர்களான தேவர்களே! எங்களைத் திருடனிடமோ, திருடனுடைய மனைவியினிடமோ, அவர்கள் வசப்படுத்த செலுத்தாதீர்கள். எங்களைத் துன்புறுத்த விரும்புபவனிடமும் சேர்க்காதீர்கள். ஏனெனில் நீங்களே எங்களுடைய தேகங்களுக்கும் ஆற்றலுக்கும் மொழிக்கும் தலைவர்களாயிருக்கிறீர்கள்.

7. வேறொருவனுல் செய்யப்பட்ட பாபத்துக்கு நாங்கள் துன்பப்படாமலிருப்போமாக. வசுக்களே! உங்களால் தண்டிப்பதற்குரிய செயலை நாங்கள் செய்யாமலிருப்போமாக. விசுவே தேவர்களே! நீங்கள் உலகத்தையெல்லாம் அரசு புரிபவர்களாயிருக்கிறீர்கள். பகைவன் தானே தன் தேகத்துக்குத் துன்பத்தைச் செய்துகொள்வானாக.

8. வணக்கமே உக்கிரமாயிருக்கிறது. நான் அவர்களுக்கு வணக்கத்தையளிக்கிறேன். வணக்கம் சோதியையும் புவியையும் ஏந்துகிறது. நான் தேவர்களுக்கு வணக்கத்தையளிக்கிறேன். வணக்கம் தேவர்களை வசப்படுத்துகிறது. நான் செய்த எந்த பாபத்தையும் வணக்கத்தால் விலக்குகிறேன்.



9. துதியாருகர்களான தேவர்களே! சுத்த பலமுள்ளவர்களும், ருதத்தை நடத்துபவர்களும், ருத சதனத்தில் அமர்ந்திருப்பவர்களும், தடைபடாதவர்களும், பரந்து பார்ப்பவர்களும், தலைவர்களும், மகான்களாயுமுள்ள உங்கள் அனைவரையும் நான் வணக்கங்களோடு வந்திக்கிறேன்.

10. மிக்க வலிமையுள்ளவர்களும், சத்தியச் செயலுள்ளவர்களும், துதியில் சிறந்தவர்களைப் பாலிப்பவர்களும், உத்தம காந்திகளுமுள்ள வருணனும், மித்திரனும், அக்கினியும், எங்களிடமிருந்து எல்லாத் துன்பங்களும் நீங்க, எங்களைத் தருந்த வழியிலே செலுத்துவார்களாக. 4,911

11. இந்திரனும், புவியும், பூஷாவும், பகனும், அதிதியுமான அவர்களும், பஞ்ச சனங்களும் எங்கள் மனைகளைச் செழிப்பிப்பார்களாக. அவர்கள் எங்களுக்கு சுகத்தைத் தருபவர்களாகவும்; உணவை அளிப்பவர்களாகவும், நலத்தைப் புலப்படுத்துபவர்களாகவும், பாலகர்களாகவும், காப்பவர்களாகவும் விளங்குவார்களாக.

12. தேவர்களே! இப்பொழுது நீங்கள் உங்களுடைய திவ்ய ஸ்தானத்துக்கு வாருங்கள். பரத்வாஜ வம்சத்திலே வந்த ஹோதா உங்களுடைய சுமதியை நாடுகிறன். யக்ஞத்தை நடத்துபவன் அமர்ந்திருக்கும் வேறு யக்ஞாருகத் தலைவர்களோடு சேர்ந்து செல்வங்களை விரும்பி, தேவர்களுடைய சங்கத்தைப் போற்றுகிறன்.

13. அக்கினியே! நீ துட்டப் பகைவனையும், தீய மனமுள்ள திருடனையும், தூரத்திலே விலக்கவும். நல்லவர்களைப் பாலிக்கும் நீ, எங்களுக்கு சுகத்தை யளிக்கவும்.

14. ஸோமனே! எங்களுடைய இந்தக் கற்கள் உன்னுடைய நட்பை விரும்புகின்றன. பேருண்டிப் பிரியனை பணியைக் கொல்லவும். ஏனெனில் அவன் ஓநாய்.

15. உத்தம தானசீலர்களும், காந்தியுள்ளவர்களுமான உங்களுக்குத் தலைவன் இந்திரனுயிருக்கிறன். பாலிப்பவர்களான நீங்கள், வழியில் எங்களுடனிருங்கள். எங்களுக்கு சுகத்தை யளியுங்கள்.

16. நாங்கள், எல்லாப் பகைவர்களை விலக்குவதாயிருப்பதும், செல்வத்தில் செலுத்துவதும், பாபமற்றதும், சுவஸ்திக்கு இயங்குவதுமான வழியில் வந்திருக்கிறேம். 4,917

## 52. விசுவே தேவர்கள்

### 493. இருஜிசுவனன்–பரத்வாஜனுடைய புதல்வன்

1. நான் அதிராஜனுல் செய்யப்படும் இந்த யக்ஞத்தை சோதியிலுள்ள தேவர்களோ, புவியிலுள்ளவர்களோ ஏற்றுக் கொள்வார்கள் என நினைக்கவில்லை. நான் அந்த யக்ஞத்தைச் செய்யும் இந்த யக்ஞத்துக்குச் சமமாகவோ அல்லது எங்களுடைய இந்தச் செயல்களுக்குச் சமமாகவோ எண்ணவில்லை. அவனை மகத்தான மலைகள் தாழ்த்துக. அதிராஜனை நியமித்தவன் அவமதிக்கப்படுக.

2. மருத்துக்களே! எங்களைத் தாழ்ந்தவர்களாக நினைப்பவனும், நாங்கள் கூறும் தோத்திரத்தை நிந்திக்க விரும்புபவனும், தாபத் துன்பங்களில் தோய்வானுக. பிரம்மத் துவேஷியைச் சூரியன் தகிப்பானுக.

3. ஸோமனே! உன்னை ஏன் மந்திரத்தைப் பாலிப்பவன் எனக் கூறினுர்கள்? உன்னை ஏன் எங்களைப் பழிச்சொல்லிலிருந்து பாலிப்பவன் எனச் சொன்னுர்கள்? நிந்திக்கப்படும் எங்களை நீ பாலிக்காமல் ஏன் மௌனமாய்ப் பார்க்கிருய். உன்னுடைய தகிக்கும் ஆயுதத்தைப் பிரம்மத் துவேஷியின் மீது செலுத்தவும்.



4. உதயமாகும் உஷைகள் என்னைப் பாலிப்பார்களாக. பெருகும் நதிகள் என்னைப் பாலிப்பார்களாக. நிலைத்திருக்கும் மலைகள் என்னைப் பாலிப்பார்களாக. நான் தேவர்களை அழைக்குங்கால் பிதுருக்கள் என்னைப் பாலிப்பார்களாக.

5. நாங்கள் எப்பொழுதும் நல்ல மனங்களுடனிருப்போமாக. நாங்கள் எப்பொழுதும் உதய சூரியனைப் பார்ப்போமாக. செல்வங்களின் செல்வபதியும், எங்களுடைய அழைப்புக்கு எப்பொழுதும் வருபவனுயிருப்பவனும், தேவர்களிடம் அவியைச் செலுத்தும் பணியிலிருப்பவனுமான அக்கினி எங்களுக்கு உரியவற்றைச் செய்வானுக. 4,922

6. இந்திரன் பாலனத்தோடு எங்கள் அருகில் வரமிக்கத் துரிதனுயிருப்பானுக. நதிகளோடு பெருகும் ஸரஸ்வதியும் எங்களிடம் வருவாளாக. ஓஷதிகளோடு பர்ஜன்யன் எங்களுக்கு சுகத்தைத் தருபவனுயிருப்பானுக. நன்கு போற்றப்படும், நன்கழைக்கப்படும் அக்கினி எங்களிடம் தந்தையைப் போலிருப்பானுக.

7. விசுவே தேவர்களே! வாருங்கள். என்னுடைய இந்த அழைப்பைக் கேளுங்கள். இந்தத் தருப்பையின் மீது அமருங்கள்.

8. தேவர்களே! உங்களை நெய் சொட்டும் அவியோடு போற்றுபவனிடம் வாருங்கள்.

9. அமிருதனுடைய புதல்வர்கள் எங்களுடைய துதிகளைக் கேட்பார்களாக. எங்களுக்கு சுகத்தைத் தருபவர்களாயிருப்பார்களாக.

10. ருதத்தை வளர்ப்பவர்களும், உரிய பருவங்களிலே கூறப்படும் துதிகளைக் கேட்பவர்களுமான விசுவே தேவர்கள் எங்களுடைய யுக்தமான பாலைப் பற்றுவார்களாக. 4,927

11. இந்திரன், மருத்துக்களின் கணத்தோடும், மித்திரன், துவஷ்டாவோடும் அர்யமானேடும் எங்களுடைய தோத்திரத்தையும், இந்த அவிகளையும் ஏற்றுக்கொள்வார்களாக.

12. அக்கினியே! ஹோதாவும் எந்தத் தேவ சனங்களைப் போற்ற வேண்டுமென்பதை அறியும் நீ, எங்களுடைய இந்த யக்ஞத்தைத் தேவர்களிடம் கிரமமாய்ச் சேர்ப்பியுங்கள்.

13. விசுவே தேவர்களே! நீங்கள் வானிலோ, சோதியிலோ இருந்தாலும் என்னுடைய இந்த அழைப்பைக் கேளுங்கள். அக்கினியின் நாக்கால் அவிகளை ஏற்றுக்கொள்பவர்களும் அல்லது போற்றத் தகுந்தவர்களுமான நீங்கள், இந்தத் தருப்பையின் மீது அமர்ந்து ஸோமத்தால் இன்புறுங்கள்

14. துதியாருகர்களான விசுவே தேவர்களும், சோதியும் புவியும், சலங்களின் பேரனும்-அக்கினியும்-என்னுடைய துதியைக் கேட்பார்களாக. நீங்கள் விரும்பாத மொழிகளை நான் கூறுமலிருப்பேனாக. உங்களிடம் மிக்க நெருங்கியுள்ள நாங்கள், உங்களால் அளிக்கப்படும் சுகத்தில் இன்புறுவோமாக.

15. அழிக்கும் ஆற்றலுள்ள அந்த மகத்தான தேவர்கள், புவியிலோ, சோதியிலோ அல்லது சலங்களின் நிலயத்திலோ, வானிலோ பிறப்பிக்கப்பட்டாலும் அவர்கள் எங்களுக்கும், எங்கள் சந்ததிக்கும், இரவும் பகலும் மிகுந்த உணவைத் தருவார்களாக. 4,932

16. அக்கினி பர்ஜன்யர்களே! என்னுடைய இந்தச் செயலைப் பாலியுங்கள். மிக்க வணக்கத்தோடு அழைக்கப்படும் நீங்கள், இந்த யக்ஞத்திலே எங்களுடைய நல்ல தோத்திரத்தைச் செவியுறுங்கள். உங்களில் ஒருவன் -பர்ஜன்யன்-உணவைத் தோற்றுவிக்கிறுன். மற்றவன் -அக்கினி-சந்தானத்தைத் தருகிறுன். ஆதலால் எங்களுக்குப் பிரஜைகளைத் தரும் உணவுகளை அளியுங்கள்.



17. தருப்பை பரத்தப்பட்டு அக்கினி சொலிப்பிக்கப்பட்டவுடன் நான் உங்களிடம் சூக்தத்தோடும் மகத்தான வணக்கத்தோடும் வந்திருக்கிறேன், யக்ஞாருகர்களான விசுவே தேவர்களே! இன்று எங்களுடைய இந்த யக்ஞத்திலே அளிக்கப்படும் அவியில் இன்புறுங்கள். 4,934

## 53. பூஷா

### 494. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. பூஷாவே! வழிகளின் தலைவனே! நாங்கள் உணவைப் பெறுவதற்கும், யக்ஞத்தை நிறைவேற்றுவதற்கும் உன்னை எங்களோடு போரிலே தேரைப் போல் இணைத்துக் கொள்கிறோம்.

2. பூஷாவே! மனிதர்களுக்கு நண்பனும், வறுமையை விலக்குபவனும், சுத்த தட்சிணைகளைத் தருபவனும், செல்வத்தைத் தருவதில் தானசீலனுமாயிருப்பவனுமான இல்லறபதியினிடம் எங்களைச் செலுத்தவும்.

3. பிரகாசமுள்ள பூஷாவே! தானமளிக்க விரும்பாதவனை அளிக்கச் செய்யவும். கருமியின் மனத்தை இளக்கவும்.

4. உக்கிரனே! நாங்கள் செல்வத்தை-உணவை-ஜயிக்க எங்களுக்கு வழிகளைப் புலப்படுத்தவும். எங்கள் பகைவர்களைத் தூரத்திலே விலக்கவும். எங்கள் எண்ணங்கள் எல்லாம் பூர்த்தியாகுக.

5. கவியே! உன்னுடைய தாக்குக்கோல் கருமியின் இருதயத்தைக் குத்தவும். அவர்களை எங்களுக்கு வசப்படுத்தவும். 4,939.

6. பூஷாவே! தாக்குக்கோலால் கருமியின் இருதயத்தைக் குத்தவும். அவர்கள் மனத்திலே, அளிப்பதற்கு அன்பைப் புலப்படுத்தவும். அவர்களை எங்களுக்கு வசப்படுத்தவும்.

7. அறிஞரான பூஷாவே! கருமியின் இருதயத்தைத் தேய்க்கவும் – தளர்த்தவும்–இளக்கப்படுத்தவும்; அவர்களை எங்கள் வசப்படுத்தவும்.

8. காந்தியுள்ள பூஷாவே! உன்னால் ஏந்தப்படுவதும், உணவைப் பிரேரிப்பதுமான தாக்குக்கோலால் ஒவ்வொரு கருமியின் இருதயத்தைக் குத்தித் தேய்த்து, அதைத் தளர்த்தவும்.

9. பிரகாசமுள்ள பூஷாவே! நாங்கள், உன்னுடைய பசுக்களைச் செலுத்துவதும், பசுக்களுக்கு வழி காட்டியாயுமுள்ள உன்னுடைய ஆயுதத்தின் ஆதரவை வேண்டுகிறோம்.

10. எங்களுடைய இந்த புத்தியானது–தோத்திரம்–பசுக்களையும், குதிரைகளையும், செல்வக்குவியலையும், ஆட்களையும் தோற்றுவிப்பதாயிருக்க. 4,944

## 54. பூஷா

### 495. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. பூஷாவே! எங்களை தேர்வழியில் செலுத்துபவனும், இதோ இதுதான் எனக் கூறுபவனுமான அறிஞனிடம் சேர்ப்பிக்கவும்.

2. எங்கள் செல்வங்கள் மறைத்து வைக்கப்பட்டுள்ள மனைகளுக்கு எங்களைச் செலுத்துபவனும், இவைதான் உங்களுடைய செல்வங்கள் என எங்களுக்குக் காட்டிக் கூறுபவனுமான அறிஞனோடு நாங்கள் பூஷாவின் ஆதரவால் சேர்வோமாக.

3. பூஷாவின் சக்கரம் அழிக்காது. கோசம் விலக்கப்படவில்லை. சக்கரத்தின் தாரை நம்மைத் துன்புறுத்தாது.

4. பூஷாவை அவிகளால் போற்றுபவனை அவன் மறக்காமலிருப்பான். போற்றுபவன் முதல்வனாகி செல்வத்தைப் பற்றுகிறான்.



5. பூஷா எங்கள் பசுக்களைப் பாலிக்க வருவானாக. பூஷா எங்கள் குதிரைகளைப் பாலிப்பானாக. பூஷா எங்களுக்கு உணவை அளிப்பானாக. 4,949.

6. பூஷா, ஸோமத்தைப் பிழிந்து யக்ஞத்தை நடத்துபவனுடைய பசுக்களைப் பாலிப்பதற்கும், துதிகளைக் கூறும் எங்களுடைய பசுக்களைப் பாலிப்பதற்கும் வருவானாக.

7. பூஷாவே! எங்களுடைய பசுக்கள் அழியாமலிருக்க. அவை துன்பமாகாமலிருக்க. கிணற்றில் வீழ்ந்து காயப்படாமலிருக்க. ஆதலால் நீ துன்பமாகாமலுள்ள அந்தப் பசுக்களோடு வா.

8. எங்கள் துதிகளைக் கேட்பவனும், வறுமையை நீக்குபவனும், நட்டமாகாத செல்வத்தைப் பாலிப்பவனும், அனைவரையும் நடத்துபவனுமான பூஷாவினிடம் செல்வங்களை வேண்டுகிறோம்.

9. பூஷாவே! உன்னுடைய விரதத்திலிருக்கும் நாங்கள் எப்பொழுதும் துன்பத்திலாகாமலிருப்போமாக. நாங்கள் எப்பொழுதும் உங்களைப் போற்றுபவர்களாயிருக்கிறோம்.

10. பூஷா, எங்களுடைய பசுக்கள் வழி தவருமளிருக்கத் தன் வலது கையை நீட்டுவானாக. இழந்த பசுவை எங்களிடம் மீண்டும் சேர்ப்பிப்பானாக. 4,954.

## 55. பூஷா

### 496. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. பிரஜாபதியின் புகழுள்ள பேரனான பூஷா வழிபடுபவனிடம் வருவானாக. நாம் இருவரும் சேர்ந்து செல்வோமாக. நீ ருதத்தின்–யக்ஞத்தின்–ஸாரதியாக இருக்கவும்.

2. நாங்கள் ஸாரதிகளின் முதல்வனும், சடை தரிப்பவனும், மகத்தான செல்வத்தின் தலைவனும் எங்கள்

நண்பனுமான பூஷாவினிடம் செல்வங்களை வேண்டு கிறோம்.

3. காந்தியுள்ள பூஷாவே! நீ செல்வங்களின் பிர வாகமாயிருக்கிறாய். உன்னுடைய குதிரை ஆடாகும். நீ செல்வக் களஞ்சியமாயிருக்கிறாய். வழிபடுபவன் ஒவ் வொருவனுக்கும் நண்பனாயிருக்கிறாய்.

4. நாங்கள் ஆட்டில் ஏறுபவனும், உணவைத் தரு பவனும், சகோதரியினுடைய-உஷையினுடைய-காதல னுமான பூஷாவைப் போற்றுகிறோம்.

5. நான், தன் தாயினுடைய-இரவினுடைய-கணவ னான பூஷாவைப் போற்றுகிறேன். தன் சகோதரியினு டைய காதலனான பூஷா என்னைக் கேட்பானாக. இந்திர னுடைய சகோதரன் எங்களுடைய நண்பனாயிருப் பானாக.

6. இணைக்கப்பட்டிருக்கும் ஆடுகள் தேவனிருக்கும் தேரை இழுத்துக்கொண்டு மனிதனுக்கு நலத்தைச் செய் யும் பூஷாவை ஏந்தி வருக. 4,960.

## 56. பூஷா

### 497. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. ஒருவன் கரம்பத்தைப் புசிப்பவன். பூஷா என நினைத்தால் அவனுக்கு வேறு எந்தத் தேவதையையும் நினைப்பதற்கவசியமில்லை.

2. ஸாரதிகளின் தலைவனும் நல்லவர்களைப் பாலிப் பவனுமான இந்திரன், நண்பனான பூஷாவோடு சேர்ந்து தன் பகைவர்களைக் கொல்லுகிறான்.

3. ஸாரதிகளின் தலைவனும், செலுத்துபவனுமான பூஷா ஒளியுள்ள சூரியனுக்காகத் தன்னுடைய தேரின் தங்கச் சக்கரத்தைப் பிரேரிக்கிறான்.

4. பலரால் போற்றப்படுபவனும், அழகனும் அறிஞனுமான பூஷாவே! நாங்கள் இன்று உன்னைப்



போற்றுகிறோம். நீ, விரும்பப்படும் செல்வத்தையளிக் கவும்.

5. எங்களுடைய இலாபத்துக்காகப் பசுக்களை விரும் பும் இந்த சங்கத்தைத் திருப்தி செய்யவும். பூஷாவே! உன்னுடைய புகழ் தூர தேசத்திலும் பரவியிருக்கிறது.

6. நாங்கள் இன்று செய்யும் யக்ஞத்துக்காகவும் நாளை செய்யப்போகும் யக்ஞத்துக்காகவும், தீமையி லிருந்து தூரமாயிருப்பதும், செல்வத்தினருகிலிருப்பது மான ஸ்வஸ்தியை உன்னிடம் வேண்டுகிறோம். 4,966

## 57. இந்திரனும் பூஷாவும்

### 498. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. நாங்கள் இந்திரனும் பூஷாவுமான உங்களை, உங்களுடைய நட்புக்காகவும், எங்களுடைய சுவஸ்திக் காகவும், உணவைப் பெறுவதற்காகவும் போற்றுகிறோம்.

2. ஒருவன் சுருக்குக்களில் ஊற்றப்பட்ட ஸோமத் தைப் பருக வருகிறான். வேறொருவன் பூஷா-தரம்பத் தைப் புசிக்க விரும்புகிறான்.

3. ஒருவனை ஆடுகள் ஏந்துகின்றன. புட்டியான இரு குதிரைகள் வேறொருவனை-இந்திரனை-தாங்குகின்றன. இந்திரன் இவர்களோடு பகைவர்களைக் கொல்லுகிறான்.

4. வர்ஷிக்கும் இந்திரன் வீழ்பவையும் மகத்தாயு முள்ள சலங்களைக் கீழே பெய்யுங்கால், அவனோடு-அவ னருகில்-பூஷாவுமிருக்கிறான்.

5. நாங்கள் இந்திரனுடையவும், பூஷாவினுடைய வும் சுமதியை மரத்தின் கிளைகளைப் போல் ஆதரவுக்குப் பற்றிக் கொள்கிறோம்.

6. நாங்கள் மகத்தான பாலனத்துக்காகப் பூஷா வையும், இந்திரனையும் கடிவாளங்களை இறுகப் பிடித்து இழுக்கும் சாரதியைப் போல் எங்களிடம் இழுக்கிறோம். 4,972.

# 58. பூஷா

## 499. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. பூஷாவே! நீ சூரியனைப் போல் இருக்கிறாய். உன்னுடைய ஒரு வடிவம் ஒளியுள்ளது. மற்றொன்று போற்றத் தகுந்தது. பகலையும் இரவையும் போல் வெவ்வேறான வடிவங்கள் உனக்கு உண்டு. உணவையளிக்கும் நீ, எல்லா மாயைகளையும் மேதைகளையும் பாலிக்கிறாய். பூஷாவே! உன்னுடைய மங்களமான தானம் இங்கு தோன்றுக.

2. ஆட்டின் மீது செல்பவனும், பசுக்களைப் பாலிப்பவனும், ஆற்றலை மனையாக உள்ளவனும், செயல்களை ஊக்கப்படுத்துபவனுமான அவன், எல்லா உலகத்தின் மீது ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். தேவனான பூஷா தன்னுடைய சரளமாய்ச் செல்லும் சாட்டையை–கோலை–இங்குமங்கும் வீசுபவனாயும், ஒவ்வொரு பிராணியையும் ஒளிப்படுத்துபவனாயும் செல்லுகிறான்.

3. பூஷாவே! வானின் நடுவிலிருக்கும் கடலைக் கடக்கும் உன்னுடைய தங்கக் கப்பல்களிலே, சூரியனுக்குத் தூதுச் செயலைச் செய்யும் பணியோடு காமத்தால் வசப்பட்டு புகழை விரும்பிச் செல்லுகிறாய்.

4. பூஷா, சோதிக்கும் புவிக்கும் நல்ல பந்துவாயிருக்கிறான். அவன் உணவின் தலைவன்; செல்வமுள்ளவன்; அழகான வடிவமுண்டு. தேவர்கள் வலியனும், துரிதமாய்ச் செல்பவனும் காமத்தால் வசப்பட்டவனுமான அவனைச் சூரியைக்கு அளித்தார்கள். 4,976

# 59. இந்திராக்கினிகள்

## 500. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்திராக்கினிகளே! ஸோமம் பொழியப்படுங்கால் நான் உங்களுடைய வீரச்செயல்களைக் கூறுவேன். நீங்கள் தேவர்களுடைய பகைவர்களான பிதுருக்களை அழித்தீர்கள். நீங்கள் பிழைத்திருக்கிறீர்கள்.



2. இந்திராக்கினிகளே! இங்ஙனம் சத்தியமாய் உங்களுடைய மகிமை போற்றத் தகுந்தது. நீங்கள் இருவரும் ஒரே தந்தையினிடமிருந்து பிறந்தீர்கள். சகோதரர்களான நீங்கள் இரட்டையர்கள். உங்களுடைய தாய் ஒவ்வொரு இடத்திலும் இருக்கிறாள்.

3. ஸோமம் பொழியப்பட்டவுடன் நீங்கள் இருவரும் தீனிக்குச் செல்லும் இரு குதிரைகளைப் போல் வருகிறீர்கள். நாங்கள் இன்று இந்த யக்ஞத்திலே வச்சிராயுதம் ஏந்தும் தேவர்களான இந்திராக்கினிகளைப் பாலனத்துக்காக அழைக்கிறோம்.

4. தேவர்களான இந்திராக்கினிகளே! ருதத்தை வளர்ப்பவர்களும், துதியைப் பெறுபவர்களுமான நீங்கள், ஸோமம் பொழியப்படுங்கால் விரும்பத் தகாத மொழிகளைக் கூறி, முறை தவறி, உங்களைத் துதிப்பவனுடைய ரஸத்தைப் பருகாமலிருக்கிறீர்கள்.

5. தேவர்களான இந்திராக்கினிகளே! உங்களுடைய இந்தச் செயலை–வழியை–எந்த மனிதன் அறிகிறான்? உங்களில் ஒருவன்–இந்திரன்–ஒவ்வொரு பக்கத்துக்கும் செல்லும் குதிரைகளை இணைத்து உங்களுடைய ஒரே தேரிலே சூரியனுகச் செல்லுகிறான்.

6. இந்திராக்கினிகளே! காலில்லாத இந்தப் பெண்ணான உஷை, பாதமுள்ளவர்களிடம் உறங்கும் பிராணிகளிடம் வருகிறாள். அவற்றின் சிரங்களுக்குச் சேதனத்தை யளிக்கிறாள். பிராணிகளைத் தங்கள் நாக்குகளோடு முழங்கச் செய்து சலனமாகிறாள். அவள் முன்னேறி முப்பது அடிகள் நடக்கிறாள்.

7. இந்திராக்கினிகளே! மனிதர்கள், கைகளில் விற்களை ஏந்தி அவற்றைப் பரத்துகிறார்கள். பசுக்களுக்காகப் போராடும் மகத்தான போரிலே எங்களைக் கைவிடாதீர்கள்.

8. இந்திராக்கினிகளே! அழிப்பவர்களும் எதிர்ப்பவர்களுமான பகைவர்கள், எங்களைத் துன்புறுத்துகிறார்

கள். என்னுடைய சத்துருக்களை விலக்குங்கள். சூரியனுடைய காட்சியிலிருந்து அவர்களைத் தனிப்படுத்துங்கள்.

9. இந்திராக்கினிகளே! சோதியிலும் புவியிலுமுள்ள செல்வங்கள் எல்லாம் உங்களுடைய செல்வங்களே. எங்களுக்கு இப்பொழுதும் எல்லா மனிதர்களையும் பாலிக்கும் செல்வங்களை அளியுங்கள்.

10. இந்திராக்கினிகளே! துதியை ஏற்பவர்களும் எங்கள் மொழிகளைச் செவியுறுபவர்களுமான நீங்கள், எங்கள் பாக்களால் கவரப்பட்டு ஸோமத்தைப் பருக எங்களிடம் வாருங்கள். 4,986

## 60. இந்திராக்கினிகள்

### 501. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. மிகுந்த செல்வங்களின் தலைவர்களும், வலிமையில் மிக்க வலியர்களும், அவியை விரும்புபவர்களும், ஜயிப்பவர்களுமான இந்திராக்கினிகளைப் போற்றுபவன், பகைவனை ஜயிக்கிறான்-பலத்தை அடைகிறான்.

2. இந்திராக்கினிகளே! அசுரர்களால் எடுத்துச் சென்ற பசுக்களையும், சலங்களையும், சூரியனையும், உஷைகளையும் மீட்க நீங்கள் போர் புரிந்தீர்கள். இந்திரனே! நீ திசைகளையும், சூரியனையும், அற்புத சலங்களையும், பசுக்களையும் உலகத்தோடு மீண்டும் சேர்க்கிறாய். நியுத குதிரைகளுள்ள அக்கினியே நீயும் இங்ஙனம் செய்கிறாய்.

3. விருத்திரனைக் கொல்பவர்களே! இந்திராக்கினிகளே! நீங்கள் விருத்திரனைக் கொல்லும் பலத்தோடு வணக்கத்தால் கவரப்பட்டு எங்களிடம் வாருங்கள். இந்திராக்கினிகளே! நீங்கள் குற்றமற்ற மிக்க உத்தமச் செல்வங்களோடு எங்களிடம் தோன்றுங்கள்.

4. பூர்வத்திலே நீங்கள் செய்த வீரச் செயல்களுக்கெல்லாம் பூர்வத்திலே போற்றப்பட்ட உங்கள் இருவரையும் நான் அழைக்கிறேன். இந்திராக்கினிகளே! எங்களைத் துன்புறுத்தாதீர்கள்.



5. நாங்கள் பகைவர்களைக் கொல்பவர்களும், உக்கிரர்களுமான இந்திராக்கினிகளை அழைக்கிறோம். அவர்கள் என்னைப் போலுள்ள ஒருவனிடம் அன்புடனிருப்பார்களாக. 4,991.

6. அவர்கள் எங்களுடைய ஆரியப் பகைவர்களைக் கொல்லுகிறார்கள். இந்த வீரர்களின் தலைவர்கள் தாஸப் பகைவர்களைக் கொல்லுகிறார்கள். எங்கள் துவேஷிகளையெல்லாம் கொல்லுகிறார்கள்.

7. இந்திராக்கினிகளே! இந்த ஸ்தோமங்கள் உங்களைப் போற்றுகின்றன. சுகத்தைத் தரும் நீங்கள் ஸோமத்தைப் பருகுங்கள்.

8. இந்திராக்கினிகளே! தலைவர்களே! பலரால் விரும்பப்படும் நியுத குதிரைகளுள்ள நீங்கள் அவற்றோடு அளிப்பவனிடம் வாருங்கள்.

9. இந்திராக்கினிகளே! தலைவர்களே! பொழியப்பட்டுள்ள இந்த ஸோமத்துக்குப் பானஞ் செய்ய வாருங்கள்.

10. காடுகளையெல்லாம் தன் சுவாலைகளால் சூழ்ந்து தன் நாக்கால் அவற்றைக் கருமைப்படுத்தும் அக்கினியைப் போற்றவும். 4,996.

11. ஒளிப்பிக்கப்பட்ட அக்கினியால் இந்திரனுடைய சுகத்தைப் பெறுபவன் பிரளயங்களைக் கடந்து இன்பத்துக்குச் செல்லும் வழியைக் காண்கிறான். ஒளிப்பிக்கப்பட்ட அக்கினியில் இந்திரனுக்குத் திருப்தியளிக்கும் அவியை யளிக்கும் மனிதன் உணவுக்காக விரும்பத் தகுந்த சலங்களை அளிக்கிறான்.

12. அந்த இரு இந்திராக்கினிகள், எங்களுக்குப் பலப்படுத்தும் உணவையும், துரித குதிரைகளையும், அவிகளை ஏந்திச் செல்ல எங்களுக்களிப்பார்களாக.

13. இந்திராக்கினிகளே! நீங்கள் எங்கள் யக்ஞத்தில் பிரஸன்னமாகவும், அவியால் இன்புறுத்தப்படவும், உங்களிருவரையும் நான் அழைக்கிறேன். நீங்கள் இருவரும் உணவையும் செல்வத்தையும் தருபவர்கள். ஆதலால் நான் உங்கள் இருவரையும் உணவுக்காக அழைக்கிறேன்.

14. இந்திராக்கினிகளே! நண்பர்களே! தேவர்களே! நீங்கள் பசுமந்தைகளோடும் குதிரைப் படைகளோடும் எங்களிடம் வாருங்கள். சுகப்படுத்துபவர்களே! நாங்கள் நட்புக்காக உங்கள் இருவரையும் அழைக்கிறோம்.

15. இந்திராக்கினிகளே! ஸோமத்தைப் பொழியும் வழிபடுபவனுடைய அழைப்பைக் கேளுங்கள். அவனுடைய அவிகளை விரும்புங்கள்; அருந்துங்கள்; வாருங்கள்; இனிய ஸோமத்தைப் பருகுங்கள். 5,001.

## 61. ஸரஸ்வதி

### 502. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. அவன் அவிகளை அளித்த வத்தியசிரவனுக்கு உக்கிரனும் கடன்களை அடைப்பவனுமான திவோதாஸன் எனப்படும் புதல்வனை அளித்தாள். அவள் தன்னையே திருப்தி செய்து கொண்டவனும், கருமித் தன்மையுள்ள உலோபியை அழித்தாள். ஸரஸ்வதியே! உன்னுடைய தானங்கள் மிக்க மேன்மையாயிருக்கின்றன.

2. அவள் மகத்தாயும் உக்கிரமாயுமுள்ள அலைகளால் மலைகளின் சிகரங்களைத் தாமரைத் தண்டுகளுக்குச் செல்லுபவனைப் போல் – கெல்லி – தேய்க்கிறாள். நாங்கள் உத்தமப் பாக்களோடும், செயல்களோடும், பாராதவர்களை அழிக்கும்–இரு கரைகளையும் உடைக்கும்–ஸரஸ்வதியை எங்களுடைய பாலனத்துக்காகப் போற்றுகிறோம்.



3. ஸரஸ்வதியே! நீ தேவர்களை நிந்திப்பவர்களையும், விசுவத்தை மருட்டும் விசயனுடைய புதல்வனையும் கொல்லுகிறாய். நீ மனிதர்களுக்காக நதிகளை வெளிப்படுத்தினாய். செல்வம் நிறைந்த செல்வியே! நீ அவற்றிலிருந்து விஷத்தை ஓடச்செய்தாய்.

4. செல்வம் நிறைந்த செல்வியும், சிந்தனைகளைப் பாலிப்பவளும், தேவியுமான ஸ்ரஸ்வதி எங்களை நன்கு பாலிப்பாளாக.

5. தேவியான ஸரஸ்வதியே! எவன் செல்வத்துக்காகப் பகைவனை எதிர்க்குங்கால் இந்திரனைப் போல் உன்னை அழைக்கிறானோ அவனை நீ பாலிக்கவும். 5,006.

6. தேவியான சரஸ்வதியே! சக்தியுள்ளவளே! நீ எங்களைப் போரிலே ப்பாலிக்கவும். பூஷாவைப் போல் போற்றத் தகுந்த செல்வத்தையளிக்கவும்.

7. பொன் தேரிலே செல்லுபவளும், பகைவர்களை அழிப்பவளும், உக்கிரமாயிருப்பவளுமான ஸரஸ்வதி, எங்களுடைய உத்தம துதியை விரும்புவாளாக.

8. ஆற்றலுள்ளவளும், அனந்தமாயிருப்பவளும், குடிலமற்றவளும், காந்தியுள்ளவளும், முன்னேறுபவளும், சலத்தையளிப்பவளுமான ஸரஸ்வதி முழக்கத்துடன் பாய்கிறாள்.

9. சலமுள்ள சரஸ்வதி எங்களுடைய பகைவர்களையெல்லாம் கடத்துவாளாக. அவளுடைய சகோதரிகளான நதிகளும் எங்களுடைய சத்துருக்களையெல்லாம் தினங்களைக் கடத்தும் சூரியனைப் போல் கடத்துவார்களாக.

10. ஏழு சகோதரிகளுள்ளவளும், எங்களிடம் பிரியமாயுள்ளவர்களின் நடுவே மிக்கப் பிரியமாயிருப்பவளும், நன்கு போற்றப்படுபவளுமான ஸரஸ்வதி எப்பொழுதும் போற்றத் தகுந்தவளாயிருப்பாளாக. 5,011.

11. புவியின் பரந்த உலகங்களையும், வானையும், தன் காந்தியால் நிரப்பும் ஸரஸ்வதி எங்களை நிந்திப்பவனிடமிருந்து பாலிப்பாளாக.

12. மூவ்வுலகங்களில் இருப்பவளும், ஏழு தாதுக்கள் உள்ளவளும், பஞ்ச சனங்களைச் செழிப்பிப்பவளுமான ஸரஸ்வதி ஒவ்வொரு போரிலும் அழைக்கப்பட வேண்டும்.

13. மகிமையால் தேவர்களான நதிகளின் நடுவே மகத்தான சிறப்புக்களுடன் விளங்குபவளும் வேகமாய்ப் பாயும் ஆறுகளின் நடுவே வேகமாய்ப் பாய்பவளும், தலைமைத் தன்மைக்கு மிக்கப் பெரியவளாய்க் கற்பிக்கப்பட்டவளுமான ஸரஸ்வதி, அறிபவனால் போற்றப்பட வேண்டும்.

14. ஸரஸ்வதியே! எங்களை உத்தமச் செல்வத்துக்குச் செலுத்தவும். உங்களுடைய பாலனத்தை எங்களுக்கு மறுக்காதே. எங்களை இகழ்ந்து உன்னிடமிருந்து நீக்காதே. எங்களுடைய நட்பையும் வணக்கத்தையும் ஏற்றுக்கொள்ளவும். நாங்கள் உன்னால் விரும்பப்படாத இடங்களுக்குச் செல்லாமலிருப்போமாக. 5,115.

## 62. அசுவினிகள்

### 503. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. நான் சோதியின் தலைவர்களும், புவியை நடத்துபவர்களுமான இரு அசுவினிகளைப் போற்றுகிறேன். நான், பகைவர்களை எப்பொழுதும் விலக்குபவர்களும், உதயத்திலே சூழ்ந்திருக்கும் தமங்களைப் புவியின் எல்லைகளுக்கு நீக்குபவர்களுமான அசுவினிகளை, மந்திரங்களால் மேம்படுத்தி அழைக்கிறேன்.

2. பிரகாசிக்கும் காந்திகளோடு யக்ஞத்துக்கு வரும் அவர்கள் தங்கள் தேரின் அழகை ஒளிப்படுத்துகிறார்கள். அவர்கள் பரந்திருப்பதும் அனந்தமாயுமுள்ள காந்தியைப் புலப்படுத்துகிறார்கள். அவர்கள் குதிரைகளால் பாலைவனங்களைக் கடக்கிறார்கள். அவற்றை சலத்தால் தண்மைப்படுத்துகிறார்கள்.



3. உக்கிரர்களான அசுவினிகளே! நீங்கள் செல்வப்படுத்தச் சென்றிருந்த ஏழையின் மனையிலிருந்து மனோவேகமாயுள்ள குதிரைகளிலே வழிபடுபவர்களை எப்பொழுதும் சோதிக்கு எடுத்துச் சென்றீர்கள். வள்ளலைத் துன்புறுத்துபவன் உங்களால் நித்திய சயனத்துக்குச் செலுத்தப்படுவானாக.

4. அவர்கள் குதிரைகளை இணைத்து உத்தம உணவையும், புஷ்டியையும், பலத்தையும் ஏந்திக் கொண்டு புதிய வழிபடுபவனுடைய வணக்கத்தை ஏற்றுக் கொள்ள வருகிறார்கள். அன்பனும், பழையவனும், ஹோதாவுமான அக்கினி தருணர்களை யஜிப்பானாக.

5. நான் புதிய தோத்திரத்தால், ஏத்துபவனுக்கு அற்புத செல்வங்களைத் தருபவர்களும், துதிப்பவனையும் தோத்தரிப்பவனையும் சுகப்படுத்துபவர்களும், பல வீரச் செயல்களை நடத்துபவர்களும், துரிதர்களும், அழகர்களும், பழையவர்களுமான அசுவினிகளைப் போற்றுகிறேன். 5,020

6. அவர்கள் பறவைகளோடு வானின் வழிகளால், துக்கிரனுடைய புதல்வனான புஜ்யுவை, சலத்திலிருந்து–சமுத்திரத்திலிருந்து - வெளிப்படுத்தினார்கள். அவர்கள் புழுதியற்ற இடைவெளிகளிலே பறக்கும் குதிரைகளோடு துரிதமாகி சலத்தின் அங்கத்திலிருந்து அவனை மீட்டார்கள்.

7. தேரிலே செல்லும் நீங்கள், உங்களுடைய ஜயமுள்ள தேரால் மலையைப் பிளந்து கொண்டு செல்லுகிறீர்கள். பொழிபவர்களான நீங்கள் வத்திரிமதியின் அழைப்பைக் கேட்டீர்கள். விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் நீங்கள், சயுவுக்காகப் பசுவில் பாலைப் பெருக்கினீர்கள். இங்ஙனம் உங்கள் சுமதியைப் புலப்படுத்தி நீங்கள் எங்கும் விளங்குகிறீர்கள்.

8. சோதிபுவிகளே! ஆதித்தியர்களே! வசுக்களே! மருத்துக்களே! பூர்வத்தில் மானிடர்கள் மீது செலுத்தப்பட்ட தேவர்களின் கடுங்கோபத்தை அசுரர்களோடு சேர்ந்தவனுக்கு அழிப்புள்ளதாகவும், ஆபத்துள்ளதாகவும் செய்யுங்கள்.

9. மித்திரா வருணர்கள் எல்லா உலகத்தின் அரசர்களான அசுவினிகளை உரிய காலத்தில் போற்றும் மனிதனை அறிந்து கொள்கிறார்கள். அவன் தன்னுடைய ஆயுதத்தை வலிய அரக்கன் மீதும், மானிடனுடைய துரோகச் சொற்கள் மீதும் செலுத்துகிறான்.

10. நீங்கள் எங்களுடைய மனைக்கு எங்களுக்குச் சந்தானத்தை யளிக்க நட்புத்தன்மைகளுள்ள சக்கரங்களோடு வாருங்கள். நீங்கள் உங்களுடைய காந்தியுள்ளதும் வீரர்கள் நிறைந்திருப்பதுமான தேரிலே வாருங்கள். நீங்கள் உங்களுடைய மறைந்துள்ள கோபத்தால், உங்களைப் போற்றும் மனிதனுடைய வணக்கத்தைத் தடுப்பவர்களுடைய தலைகளை வெட்டுங்கள். 5,025.

11. நீங்கள் உங்களுடைய மிக்க உயர்ந்த அல்லது நடுத்தரமான அல்லது தாழ்ந்த குதிரைப் படைகளோடு வாருங்கள். பசுக்களின், கெட்டியாய்ச் சாத்தப்பட்டிருக்கும் கொட்டிலின் கதவுகளைத் திறந்து விடுங்கள். நீங்கள் உங்களைத் துதிப்பவனிடம் உதாரத் தன்மையுடனிருங்கள். 5,026.

## 63. அசுவினிகள்

### 504. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. எங்களுடைய வணக்கத்துடனுள்ள ஸ்தோமம் பிரகாசிப்பவர்களும், பலரால் போற்றப்படுபவர்களுமான அசுவினிகளை எங்கும் தூதனைப் போல் பார்த்து நாசத்தியர்களான அவர்களை எங்கள் முன்னே வரச்செய்கிறது. இந்த வழிபடுபவனுடைய தோத்திரத்தால் நீங்கள் பிரியமுடனிருங்கள்.



2. நீங்கள் துதிக்கப்பட்டு என்னுடைய இந்த அழைப்புக்கு ஸோமத்தைப் பருகத் துரிதமாய் வருகிறீர்கள். தூரத்திலிருப்பவனோ அருகிலுள்ளவனோ எங்களைத் துன்புறுத்தாமலிருக்கவும், எல்லாப் பகைவர்களிடமிருந்து பாலிக்கப்படவும், எங்கள் மனையைச் சூழ்ந்து கொண்டு பாலியுங்கள்.

3. உங்களுக்கு விருந்தளிக்க ஸோமம் பக்குவப்பட்டிருக்கிறது. மிருதுவான தருப்பையும் பரத்தப்பட்டிருக்கிறது. அறிஞன் உங்கள் வரவை உயர்த்திய கைகளோடு விரும்பி உங்களைப் போற்றுகிறான். உங்களை விரும்பி கற்கள் ஸோமத்தைப் பிழிகின்றன.

4. அக்கினி உங்களுக்காக உயரத்தில் இருக்கிறான். அவன் உங்களுடைய யக்ஞங்களிலே இருக்கிறான். நெய் சிந்தும் அவி செல்லுகிறது. நாஸத்தியர்களான உங்களை அழைக்கும் பணியிலிருப்பவன் ஊக்கத்தோடும் உற்சாகத்தோடுமிருக்கிறான்.

5. பலரைப் பாலிப்பவர்களே! புகழுக்காகச் சூரியனுடைய பெண், உங்களுடைய நூறு பாலனங்களை ஏந்தி வரும் தேரிலே ஏறினாள். அறிஞர்களான தலைவர்களே! நடிப்பவர்களே! யக்ஞாருகளான தேவர்கள் தோன்றுங்கால் நீங்கள் உங்கள் மாயைகளால் அனைவரையும் முந்துகிறீர்கள். 5,031.

6. இந்த அழகிய காந்திகளோடு சூரியையை ஒளிப்படுத்த புட்டியைத் தந்தீர்கள். உங்களுடைய குதிரைகள் சுகப்படுத்த இறங்கின. துதியாருகர்களே! தோத்திரம் போற்றப்பட்டு உங்களிடம் சேர்ந்தது.

7. உங்களுடைய துரிதமானவையும் சுமை தாங்குபவையாயுமுள்ள குதிரைகள் நாஸத்தியர்களான உங்களை யக்ஞ உணவுக்கு ஏந்தி வருக. உங்களுடைய மனத்தைப் போல் வேகமாயுள்ள குதிரை மிகுந்த சத்தான விரும்பத் தகுந்த உணவை வழங்கிற்று.

8. பலரைப் பாலிப்பவர்களே! உங்களால் அளிக்கப்பட பலவித செல்வங்கள் உண்டு. புட்டிப்படுத்தும் நிலையான உணவை எங்களுக்களியுங்கள். இன்பத்தை அளிப்பவர்களே! உங்களுக்கு நல்ல துதியும் துதிப்பவர்களுமுண்டு. உங்கள் தானத்தை நாடும் ஸோமரஸங்களுமுண்டு.

9. புரயனுடைய துரிதமாய் ஓடுபவையும், நேராகப் பாய்பவையுமான இரு பெட்டைக் குதிரைகள் என்னுடையவையாகுக. ஸுமிதனுக்குச் சொந்தமான நூறு பசுக்களும், பேருகனுல் பக்குவப்படுத்தப்பட்ட உணவுகளும் எனக்காகுக. சாண்டன் எனக்கு அழகிய பத்து பொன் தேர்களையும், பணிவுள்ளவர்களும், வீரர்களும் உத்தமர்களுமான ஆட்களையும் அளிப்பானுக.

10. நாஸத்தியர்களே! உங்களை வழிபடுபவனுக்கு புருபந்தா நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான குதிரைகளை வீரர்களே! பரத்வாஜனுக்கு அளிப்பானுக. பல செயல்களை நடத்துபவர்களே! அரக்கர்கள் கொல்லப் படுவார்களாக.

11. நான் உங்களால் அளிக்கப்படும் சுகத்தை அறிஞர்களோடு பகிர்ந்து கொள்வேனுக. 5,037

## 64. உஷை

### 505. பரத்வாஜன்—பிரகஸ்பதியின் புதல்வன்

1. காந்திகளுள்ள உஷைகள் உலகத்தை எழில்படுத்த தங்களுடைய வெளுப்பான சோதியோடு சலங்களின் அலைகளைப் போல் எழுந்தார்கள். அவள் எல்லா நல்ல வழிகளையும் கடந்து செல்ல சுகப்படுத்துகிருர்கள். செல்வியும் சிறந்தவளுமான அவள் செல்வந்தருபவளாயிருக்கிருள்.

2. உஷையே! நீ மங்களமாய்த் தோன்றுகிருய். நீ பரந்து பிரகாசிக்கிருய். உன்னுடைய ஒளிக்கதிர்கள் வான்மீது ஏறுகின்றன. மகத்தான காந்திகளோடு அழகாயும் பிரகாசமாயுமுள்ள நீ, உன்னுடைய வடிவத்தைப் புலப்படுத்துகிருய்.



3. சிகப்பாயும் பிரகாசிப்பவையாயுமுள்ள பசுக்கள்-கதிர்கள்—மங்கலமுள்ள, பரந்துள்ள, புகழுள்ள உஷையை ஏந்துகின்றன. அவள் வீரனுயிருக்கும் வில்லாளனைப் போல் பகைவர்களை விலக்குகிருள். துரிதனுயுள்ள தீரனைப் போல் அவள் தமத்தை நீக்குகிருள்.

4. மலைகளிலும் எட்டாத இடங்களிலும் நீ செல்வதற்குச் சுலபமான வழிகள் இருக்கின்றன. தானே துலங்கும் நீ, வானைக் கடக்கிருய். சோதியின் புதல்வியான நீ, உன்னுடைய பரந்த பொலிவுள்ள தேரிலே விரும்பத் தகுந்த செல்வங்களை எங்களுக்கு ஏந்தி வா.

5. உஷையே! நீ எனக்குச் செல்வத்தை ஏந்தி வா. ஏனெனில் தடைபடாமலிருக்கும் நீ, வழிபடுபவர்களுக்குச் செல்வத்தை உன்னுடைய காளைகளிலே உன்னிஷ்டம் போல் ஏந்தி வருகிருய். சோதியின் புதல்வியும், அழகியுமான நீ, முதல் யக்ஞத்திலே போற்றப்படவேண்டும். 5,042

6. தேவியான உஷையே! பறவைகள் உன் உதயத்திலே தங்கள் கூடுகளிலிருந்து கிளம்புகின்றன. மனிதர்கள் உணவைச் சம்பாதித்துக்கொள்ள எழுகிருர்கள். அருகிலிருப்பவனும், அவியளிப்பவனுமான மனிதனுக்கு இந்தச் செல்வத்தை ஏந்தி வருகிருய். 5,048

## 65. உஷை

### 506. பரத்வாஜன்—பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்த சோதியில் பிறந்த ஒளிப் புதல்வி நமக்காக இருளை நீக்குகிருள். மானிடர்களைப் புலப்படுத்துகிருள். தன் பிரகாசமான சோதியால் இருளை நீக்குபவளாயும் இரவுகளில் துலங்கும் நட்சத்திரங்களை அழிப்பவளாயும் தோன்றுகிருள்.

2. சிகப்புக் குதிரை சோடிகளால் இழுக்கப்படும் அழகிய தேர்களிலிருக்கும் உஷைகள் சோதியிலே செல்லுங்கால் அற்புதமாய்ப் பிரகாசிக்கிறார்கள். அவர்கள் காலையிலே மகத்தான யக்ஞத்தின் முகத்தைப் புலப்படுத்தி இரவின் தமத்தை நீக்குகிறார்கள்.

3. உஷைகளே! அவியை அளிக்கும் மனிதனுக்குப் புகழையும், உணவையும், இரஸத்தையும் ஏந்தி வருபவர்களாயும், செல்வஞ் செழித்தவர்களாயும், வானில் செல்பவர்களாயுமுள்ள நீங்கள், வழிபடுபவனுக்கு இன்று வீரப்புதல்வர்களோடும் செல்வங்களோடும் உணவை அளியுங்கள்.

4. உஷைகளே! போற்றுபவனுக்கு அளிக்க உங்களிடம் எந்த செல்வமிருக்கிறதோ, அவியளிக்கும் தலைவனுக்கு அளிக்க எந்தச் செல்வமிருக்கிறதோ, துதிக்கும் அறிஞனுக்கு அளிக்க எந்தச் செல்வமிருக்கிறதோ, அந்தச் செல்வத்தை என்னைப் போலுள்ள ஒருவனுக்குத் துதிகள் ஏற்கப்பட்டால் எனக்கு நீங்கள் பூர்வத்தில் அளித்தது போல் அளியுங்கள்.

5. உஷையே! அங்கிரஸர்கள் உன்னுதரவால் மலையின் உச்சியிலிருந்து பசுக்களின் மந்தையை மீட்கிறார்கள். அவர்கள் துதியாலும் தோத்திரத்தாலும் மலையைப் பிளந்தார்கள். தேவர்களை அழைத்த மனிதர்களுடைய் துதியானது பயனை அளித்தது. 5,048

6. சோதியின் புதல்வியே! நீ பூர்வத்தில் உதயமானது போல் இப்பொழுதும் உதயமாகி இருளை நீக்கவும். செல்வமுள்ளவளே! பரத்வாஜனுக்கு உதயமானது போல் துதிப்பவனுக்கு உதயமாகவும். உன்னைப் போற்றுபவனுக்கு, வீரப்புதல்வர்களோடு செல்வத்தையளிக்கவும். பலருக்கு அளிப்பதற்கான உணவை எங்களுக்களிக்கவும். 5,049



# 66. மருத்துக்கள்

## 507. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. மருத்துக்களுடைய ஸம வடிவமுள்ளதும், தயையுள்ளதும், பகை தாழ்த்துவதுமான படை அறிஞனிடம் தோன்றுக. அப்படை மானிடர்களுக்குச் செடிகொடிகள் செழிப்பையளிக்க அவற்றைச் செழுமைப் படுத்துகிறது. அதன் விருப்பத்துக்கு இணங்கி, பிருசினி தன்னுடைய பிரகாசமாயுள்ள மடியிலிருந்து வருடத்தில் ஒருமுறை பாலையளிக்கிறது.

2. சொலிப்பிக்கப்பட்ட அனல்களைப் போல் பிரகாசிப்பவர்களும், இருமடங்காகவும் மும்மடங்காகவும் தங்களைத் தாங்களே பருமன் செய்து கொள்பவர்களும், புழுதியால் பாழாகாத பொன் தேர்கள் உள்ளவர்களுமான மருத்துக்கள் செல்வங்களோடும் ஆற்றல்களோடும் சேர்ந்து தோன்றுகிறார்கள்.

3. பொழியும் ருத்திரனுடைய புதல்வர்களும், தாங்கும் திறமுள்ள வானால் பாலிக்கப்படுபவர்களுமான மருத்துக்கள் மகான்கள். அவர்களைப் பெரியவளும், தாயுமான பிருசினி, கருவாக, மானிடனுடைய நலத்துக்காக ஏந்தினாள் என்பதை அனைவரும் அறிந்தார்கள்.

4. மானிடர்களிடம் வர அவர்களுக்கு எந்த வாகனமும் தேவை இல்லை. ஏனெனில் அவர்கள் ஏற்கனவே அவர்களுடைய இருதயங்களில் இருக்கிறார்கள். அங்கு அவர்களுடைய குறைகளைச் சுத்தப்படுத்துகிறார்கள். மருத்துக்கள் பிரகாசமாகுங்கால் வழிபடுபவர்களைத் திருப்தி செய்ய அவர்களுக்குப் பாலை-மழையை-யளிக்கிறார்கள். காந்தியால் தங்கள் தேகத்தைத் துலங்கச்செய்து புவியை நனைக்கிறார்கள்.

5. வழிபடுபவன் மருத்துக்களின் அருகில் அணுகி, அவர்களுடைய மகத்தான நாமத்தைப் போற்றி விருப்பங்களைப் பூர்த்தி செய்துகொள்ளும் ஆற்றலுள்ளவனாகி

ருன். அவியளிப்பவன் மருத்துக்களின் கோபத்தைத் தணிக்கிருன். இல்லையேல் உக்கிரர்களான அவர்கள் துதிப்பவர்கள் மறைத்து வைத்திருக்கும் செல்வத்தைத் தடைபடாமல் கைப்பற்றுபவர்களாயிருக்கிருர்கள். 5,054

6. பலத்திலே பலமுள்ளவர்களும் கூரிய படைகளை ஏந்துபவர்களுமான மருத்துக்கள் அழகாயிருக்கும் சோதியையும் புவியையும் மழையால் இணைக்கிருர்கள். இந்த மருத்துக்களின் நடுவே தானே துலங்கும் ரோதஸி—வாக்கு—விளங்குகிருள். ஆற்றலுள்ள இவர்களின்—மருத்துக்களின் – நடுவே, ஒளியை – ஒலியை – தடைப்படுத்த எதுவுமில்லை.

7. மருத்துக்களே! உங்களுடைய தேர் பாபமில்லாமலாகுக. வழிபடுபவனுல் செலுத்தப்படும் உங்களுடைய அந்தத் தேருக்கு ஸாரதியில்லை; குதிரைகள் இல்லை; தீனி இல்லை; பாசங்களில்லை; அது சலங்களைத் தந்து விருப்பங்களைப் பூர்த்தி செய்கிறது. அது சோதியிலும் புவியிலும், வானின் வழிகளிலும் செல்லுகிறது.

8. மருத்துக்களே! உங்களால் போரிலே பாலிக்கப்படுபவன் எவனுலும் பிரேரிக்கப்படான்; தடைபடான்; உங்களால், புதல்வர்களாலும் பேரர்களாலும் பாலிக்கப்படுபவன் போரிலே உக்கிரப் பகைவனுடைய பசுக்களின் மந்தைகளை ஜயிக்கிருன்.

9. அக்கினியே! மருத்துக்கள் பலத்தால் பலத்தை ஜயிக்கிருர்கள். துதியாருகர்களான அவர்களுக்குப் புவி நடுங்குகிறது. மருத்துக்களுடைய முழங்குவதும், துரிதமாய்ச் செல்லுவதும் தாமே பலஞ்செய்து கொள்வதுமான படைக்கு மேன்மையான அவியைச் செலுத்தவும்.

10. மருத்துக்கள் யக்ஞத்தை ஒளிப்படுத்துபவர்கள் போல் பிரகாசமுள்ளவர்களாயிருக்கிருர்கள். அக்கினியின் சுவாலைகளைப் போல் சொலிக்கிருர்கள். அவர்கள் போற்றத் தகுந்தவர்கள். அவர்கள் வீரர்களை, பகைவர்களை நடுக்கப்படுத்துகிருர்கள். பிறப்பிலிருந்து பிரகாசமாயிருக்கும் அவர்கள் ஜயிக்கப்படாதவர்கள்.



11. நான் ருத்திரனுடைய புதல்வர்களும், மின்னும் ஈட்டிகளை ஏந்துபவர்களுமான மருத்துக்களின் மேன்மையான படையை அவிகளோடு போற்றுகிறேன். துதிப்பவனுடைய சுத்தமாயும் ஊக்கமாயுமுள்ள துதிகள் மழையை யளிக்கப் பரஸ்பரம் முந்திக்கொள்ளும் மேகங்களைப் போல் மருத்துக்களைப் பலப்படுத்த பரஸ்பரம் முந்துகின்றன. 5,060

## 67. மித்திரா வருணர்கள்

### 508. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. நான் எல்லாப் பொருள்களுக்கும் முதல்வர்களாயிருக்கும் மித்திரா வருணர்களான உங்களை என்னுடைய துதிகளால் போற்ற இயங்குகிறேன். நீங்கள் இருவரும் ஸமமற்றிருந்தாலும் உங்கள் கைகளால் வசப்படுத்தும் உத்தமர்களாயிருக்கிறீர்கள். அவர்கள் மானிடர்களைத் தீமையிலிருந்து வாய்வடங்களால் குதிரைகளைப் போல் தடுத்துப் பாலிக்கிருர்கள்.

2. என்னுடைய இந்தத் துதியானது உங்கள் இருவருக்கும் கூறப்படுகிறது. இது அவியோடு சேர்ந்து அன்பர்களான உங்களிடம் வருகிறது. தருப்பை உங்கள் முன்னே பரத்தப்பட்டிருக்கிறது. மித்திரா வருணர்களே! எங்களுக்கு எதிர்ப்பற்ற மனையை யளியுங்கள். உத்தம தானசீலர்களான உங்களால் அளிக்கப்படும் மனை காப்புள்ள வீடாயிருக்க.

3. மித்திரா வருணர்களே! அனைவராலும் விரும்பப்படுபவர்களும், துதியாலும் தோத்திரத்தாலும் அழைக்கப்படுபவர்களும், உழைப்பால் தன்னைத் தான் பாலித்துக் கொள்ளும் தொழிலாளியைப் போல் உணவுக்காக உழைக்கும் மானிடர்களை உதாரத் தன்மையால் பாலிப்பவர்களுமான நீங்கள் வாருங்கள்.

4. குதிரைகளைப் போல் வலியர்களும், சுத்தத் தோத்திரத்தை ஏற்பவர்களும், சத்தியத்தைப் பாலிப்பவர்களுமான உங்களை அதிதி கருத்தரித்தாள். பிறக்கும் போதே மகத்தானவர்களில் மகத்தானவர்களாயும், மானிடப் பகைவனுக்கு உக்கிரர்களாயும் உங்களை அவள் பிறப்பித்தாள்.

5. எல்லாத் தேவர்களும் உங்கள் மகிமையில் பரஸ்பரம் இன்பமாகி, மகிழ்ந்து, உங்களுக்கு க்ஷத்திரத்தை அளித்தார்கள். நீங்கள் பரந்த சோதிக்கும் புவிக்கும் மேலே மிக்க உயர்ந்தவர்கள். உங்களுடைய கிரணங்கள் தடைபடாமலும் தடுக்கப்படாமலுமிருக்கின்றன. 5,065.

6. நீங்கள் க்ஷத்திரத்தைத் தினந்தோறும் புலப்படுத்துகிறீர்கள். நீங்கள் ஸ்தம்பத்தைப் போல் சோதியின் உச்சியைப் பலப்படுத்துகிறீர்கள். கனத்த வானும்—மேகமும், விசுவே தேவனும்—சூரியனும், மனிதனின் உணவால் சோதியையும் புவியையும் நிரப்புகிறார்கள்.

7. விசுவத்தைத் தாங்குபவர்களான உங்களால் மழை செலுத்தப்படுகின்றன. யுவதிகளான நதிகள் தடைபடாமல் பாய்கின்றன. நதிகள் வற்றாமல் வளத்தை எங்கும் பரத்துகின்றன. அப்பொழுது வழிபடுபவனும் அவனுடைய ஆட்களும் யக்ஞ ஸதனத்தை நிரப்புகிறார்கள். நீங்கள் அறிஞனை வழிபடுபவனுடைய வயிற்றை நிரப்பி அவனைப் பாலிக்கிறீர்கள்.

8. யக்ஞத்தில் அறிஞன் உங்களை சிரத்தையுடன் அணுகும் போதெல்லாம் உங்களிடம் எப்பொழுதும் சலத்தை வேண்டுகிறான். நெய்யால் ஊட்டப்படுபவர்களே! இது உங்களுடைய புகழாகத் தோன்றுக. யக்ஞஞ் செய்பவனுடைய துன்பத்தை நீக்குங்கள்.

9. மித்திரா வருணர்களே! உங்களுக்கு நலமாயும், இதமாயுமுள்ள யக்ஞங்களைத் தடுக்கப் பரஸ்பரம் முந்துபவர்களையும், துதிக்க ஊக்கமில்லாத தேவர்களையும் மனிதர்களையும், செயல்களைச் செய்து யக்ஞம் நடத்தாதவர்களையும், உங்களைப் போற்றாதவர்களையும் விலக்குங்கள்.



10. அறிஞர்கள் துதியைக் கூறுங்கால் அவர்களில் சிலர், அக்கினியையும் வேறு தேவர்களையும் புகழ்ந்து நிவித் தோத்திரங்களைப் பாடுகிறார்கள். ஆதலால் நாங்கள் உங்களுக்கு உண்மையான தோத்திரங்களைச் சொல்லுகிறோம். நீங்கள் உங்கள் மகிமையால் வேறு தேவர்களிடம் சேராமலிருக்கிறீர்கள்.

11. மித்திரா வருணர்களே! பசுக்கள் எங்களிடம் வருங்காலும் போருக்காக அறிஞர்கள் துரிதமாயும் தீவிரமாயுமுள்ள குதிரையை இணைக்குங்காலும் இங்கு எங்களுடைய மனையின் அருகே உங்களுடைய உத்தம தானம் தோன்றுக. 5,071

## 68. இந்திரா வருணர்கள்

### 509. பரத்வாஜன்—பிரகஸ்பதியின் புதல்வன்

1. மகான்களான இந்திரா வருணர்களே! எந்த ஸோமம் மநு அளித்ததைப் போல் நறுக்கிய தருப்பையுள்ள தலைவனுடைய உணவுக்காகவும், மகத்தான சுகத்துக்காகவும் அளிக்கப்படுகின்றதோ, அந்த ஸோமம் இசைந்துள்ள அறிஞர்களால் உங்களுக்கு இப்பொழுது துரிதமாகத் தோன்றுகிறது.

2. தேவர்களின் யக்ஞத்திலே நீங்கள் இருவரும் முதல்வர்கள். நீங்கள் செல்வத்தை வழங்குபவர்கள். சூரர்களின் நடுவே மிக்கச் சக்தியுள்ளவர்கள். செல்வர்களின் நடுவே மிகுந்த தானத்தை அளிப்பவர்கள். மிக்கப் பலமுள்ளவர்கள். சத்தியத்தால் சத்துருக்களை ஜயிப்பவர்கள். எல்லாப் படைகளும் நீங்களே.

3. புகழுள்ள எல்லா ஆற்றல்களுக்கும் ஆனந்தங்களுக்கும் பிரசித்தமாயுள்ள இந்திரா வருணர்களைப் போற்றவும். ஒருவன் தன் வச்சிரத்தால் விருத்திரனைக்

சொல்லுகிறன். விப்பிரனுன வருணன் வழிபடுபவனைத் துன்பங்களிலே பாலிக்க ஆற்றலோடு வருகிறன்.

4. மனிதர்களின் நடுவே ஆண்களும் பெண்களும், தாமாகவே இயங்கி, துலங்கும் எல்லாத் தேவர்களும் உங்களைப் போற்றுங்கால் நீங்கள் மகிமையில் அனைவரையும் முந்துகிறீர்கள். நீங்கள் மகிமையிலே பரந்த சோதியையும் புவியையும் முந்துகிறீர்கள்.

5. இந்திரா வருணர்களே! உங்களுக்கு சுயமாகவே அவிகளை அளிப்பவன் உத்தம தானத்தை யளிப்பவனுகிறன். செல்வனுகிறன். ஸத்தியனுகிறன். அவன் பகைவனுடைய உணவோடு செழிப்பான். செல்வங்களையும் செல்வப் புதல்வர்களையுமடைகிறன். 5,076

6. தேவர்களே! இந்திரா வருணர்களே! அவியளிப்பவனுக்கு உங்களால் அளிக்கப்படும் மிகுந்த உணவும் நிதியும் நிறைந்ததும், பகைவனின் பழிச் சொற்களை நீக்குவதுமான செல்வம் எங்களுக்குத் தோன்றுக.

7. இந்திரா வருணர்களே! காப்பளிப்பதும் தேவர்களைப் பாலகர்களாக அடைந்துள்ளதுமான செல்வம் போற்றுபவர்களான எங்களுக்குத் தோன்றுக. எங்களுடைய அழிக்கும் ஆற்றல் போர்களிலே பகைவர்களை வெல்லுகிறது. அவர்களுடைய புகழைத் துரிதமாய்த் தேய்க்கிறது.

8. இந்திரா வருணர்களே! தேவர்களும் போற்றப்படுபவர்களுமான நீங்கள், உத்தமப் புகழை அடைய எங்களுக்குச் செல்வத்தை அளியுங்கள். மகத்தான தேவர்களான உங்கள் இருவருடைய பலத்தை இங்ஙனம் பாடி நாங்கள் துன்பங்களையெல்லாம் தோணியால் சலங்களைப் போல் கடந்து செல்வோமாக.

9. மகிமையுள்ளவனும், மகா விரதனும், அறிஞனும், மூப்பற்றவனும், பரந்த சோதியையும் புவியையும், ஒளிப்படுத்துபவனும், பெரிய அரசனும், மகத்தானவனும், தேவனுமான வருணனுக்கு மனேகரமாயும், எல்லாம் நிறைந்திருப்பதுமான தோத்திரத்தைக் கூறவும்.



10. இந்திரா வருணர்களே! விரதங்களைப் பாலிப்பவர்களும் ஸோமரஸத்தைப் பருகுபவர்களுமான நீங்கள், பொழியப்பட்டிருப்பதும், மதமளிப்பதுமான இந்த ஸோமத்தைப் பருகுங்கள். நீங்கள் தேவர்களின் உணவை அருந்தி ஸோமத்தைப் பருக யக்ஞத்தின் வழியிலே உங்களுடைய தேர் செல்லுகிறது.

11. இந்திரா வருணர்களே! வர்ஷிக்கும் நீங்கள் மிக்க இனிய ரஸமுள்ளதும் நலத்தைப் பொழிவதுமான ஸோமத்தைப் பருகுங்கள். இந்த உங்களுடைய பானம் எங்களால் ஊற்றப்படுகிறது. தருப்பையிலே அமர்ந்து பருகி மதப்படுங்கள். 5,082

## 69. இந்திரா விஷ்ணுக்கள்

### 510. பரத்வாஜன்–பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்திரா விஷ்ணுக்களே! நான் துதியாலும் அவியாலும் உங்களை ஊக்கப்படுத்துகிறேன். யக்ஞத்துக்குரிய செயல் முடிக்கப்பட்டவுடன் நீங்கள் யக்ஞத்தைப் பற்றுங்கள். தடையற்ற செயல்களால் எங்களைச் செலுத்தி, எங்களுக்குச் செல்வத்தை யளியுங்கள்.

2. இந்திரா விஷ்ணுக்களே! உங்களுக்குக் கூறப்படும் தோத்திரம் உங்களிடம் வருக. நீங்கள் எல்லாத் துதிகளையும் எழுப்புபவர்கள். நீங்கள் ஸோமத்தை ஏந்தும் கலசங்கள்.

3. இந்திரா விஷ்ணுக்களே! மதப் பிரபுக்களும், மதமளிக்கும் ஸோமங்களின் தலைவர்களுமான நீங்கள், செல்வத்தை ஏந்திக் கொண்டு ஸோமத்தைப் பருக வாருங்கள். தோத்திரங்களோடு கூறப்படும் துதிப்பவர்களுடைய பாட்டுக்கள் உங்களைக் காந்திகளோடு பிரகாசஞ் செய்க.

4. இந்திரா விஷ்ணுக்களே! உங்களுடைய ஒப்பான உற்சாகமுள்ளவையும், பகைவர்களை ஜயிப்பவையுமான குதிரைகள், உங்களை இங்கு ஏந்தி வருக. வழிபடுபவர்களுடைய எல்லா அழைப்புக்களாலும் இன்புறுங்கள். என்னுடைய துதிகளையும் தோத்திரங்களையும் கேளுங்கள்.

5. இந்திரா விஷ்ணுக்களே! உங்களுடைய இந்த வீரச் செயல்கள் போற்றப்படவேண்டும். ஸோம மதத்திலே நீங்கள் அடிச்சுவடுகளோடு எட்டி நடந்தீர்கள். நீங்கள் வானைப் பரத்தினீர்கள் - பரந்த வானைக் கடந்தீர்கள். நாங்கள் வாழ உலகங்களைப் பரத்தினீர்கள். 5,087

6. இந்திரா விஷ்ணுக்களே! நெய்யை அருந்துபவர்களும், ஸோமத்தைப் பருகுபவர்களுமான நீங்கள், ஸோமத்தால் வளர்ந்து வணக்கத்தோடு அளிக்கப்படும் அவிகளைப் பெற்றுக்கொண்டு எங்களுக்குச் செல்வத்தை அளியுங்கள். ஏனெனில் நீங்கள் ஸோம சமுத்திரம்- நீங்கள் ஸோமக் கலசமாயிருக்கிறீர்கள்.

7. இந்திரா விஷ்ணுக்களே! சுந்தரத் தோற்றமுள்ள நீங்கள் இந்த இனிய ஸோமத்தைப் பருகுங்கள். உங்கள் வயிறுகளை இரஸத்தால் நிரப்புங்கள். மதமளிக்கும் பானம் உங்களிடம் செல்க. என்னுடைய துதிகளையும் அழைப்புக்களையும் கேளுங்கள்.

8. நீங்கள் எப்பொழுதும் ஜயித்தவர்கள். எப்பொழுதும் ஜயிக்கப்படவில்லை. நீங்கள் போரை நடத்திய போது மும்முறை ஆயிரங்களை ஜயித்தீர்கள்— மூன்று அடிகளால் – சோதியால், வானால், புவியால்- பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தீர்கள். 5,090

## 70. சோதியும் புவியும்

### 511. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. சோதிபுவிகளான நீங்கள் நெய் நிறைந்தவர்கள்; புவனங்களுக்குப் புகலிடங்கள். நீங்கள் பரந்தவர்கள்;



விரிந்தவர்கள்; சலத்தைத் தருபவர்கள்; அழகுள்ளவர்கள்; வருணனுடைய தாரகச் செயல்களால் தனித்தனியாய் நிறுத்தப்பட்டவர்கள். மூப்பற்றவர்கள்; மிகுந்த ரேதஸுள்ளவர்கள்.

2. பூரண தாரைகளோடு நித்தியமாயிருப்பவர்கள்; பால் நிறைந்தவர்கள்; சுத்த விரதத்திலே இருக்கும் நீங்கள், நல்ல செயலை நடத்துபவனுக்கு நெய்யைப் பொழிபவர்கள். சோதி புவிகளே! இந்த புவனங்களின் தலைவர்களான நீங்கள், எந்த ரேதஸ் மனிதர்களுக்கு நலத்தையளிக்கிறதோ அந்த ரேதஸை எங்களுக்குப் பொழியுங்கள்.

3. நிலையாயிருக்கும் சோதி புவிகளே! எந்த மனிதன் ஸத்தியமான வாழ்க்கைக்கு உங்களுக்கு அவிகளை அளிக்கிறானோ அவன் தன் செயல்களிலே ஜயமுள்ளவனாகிறான். அவன் பிரஜைகளோடு பெருகுகிறான். தருமத்தால் பரவுகிறான். உங்களிடமிருந்து பல வடிவங்களுள்ள பிரசைகள் தோன்றுகின்றன. அவை சமச் செயல்களுள்ளவை.

4. சோதிபுவிகளே! நீங்கள் நெய்யால் சூழப்பட்டிருக்கிறீர்கள். சலத்துக்குப் புகலிடமான நீங்கள் சலத்தோடு சேர்ந்திருக்கிறீர்கள். சலத்தைச் செழிப்பிக்கும் நீங்கள் பரந்தவர்கள். பலவிதமாயிருப்பவர்கள்; நீங்கள் யக்ஞத்திலே முதல்வர்களாகப் போற்றப்படுபவர்கள். அறிஞன் சுகத்துக்காக யக்ஞத்தை நடத்த உங்களைப் போற்றுகிறான்.

5. தேனைப் பொழிபவர்களும், தேனைக் கறப்பவர்களும், தேனை விரதமாக உள்ளவர்களும், தேவர்களும், யக்ஞத்தை வளர்ப்பவர்களும், செல்வத்தைத் தருபவர்களும், புகழை, உணவை, உத்தம வமிசத்தை அளிப்பவர்களுமான சோதியும் புவியும் எங்களைத் தேனோடு சேர்ப்பார்களாக.

6. விசுவத்தை யறிபவர்களும், நல்ல செயல்களை நடத்துபவர்களுமான எங்கள் தாய் தந்தைகளாம் புவியும் சோதியும் எங்களுக்கு உணவை அளிப்பார்களாக. பரஸ்பரம் ஐக்கியமாகி அனைவருக்கும் சுகத்தைச் செழிப்பிக்கும் சோதியும் புவியும் எங்களுக்கு வம்சத்தையும், வலிமையையும், செல்வத்தையும் அளிப்பார்களாக. 5,096

## 71. ஸவிதா

### 512. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. தேவனும், நல்ல செயலாளனுமான ஸவிதா அவனுடைய பொன்னுலான கைகளைத் தானமளிக்க நீட்டுகிறான். துதியாருகனும், தருணனும், பேரறிஞனும், உலகத்துக்குப் பல தாரகச் செயல்களிலிருப்பவனுமான ஸவிதா அவனுடைய சலம் நிறைந்துள்ள கைகளை இயக்குகிறான்.

2. நாங்கள் தேவ ஸவிதாவின் சாஸனத்திலிருப்போமாக. நாங்கள் உத்தம அவிகளை அளிக்க ஆற்றலுள்ளவர்களாவோமாக. கால்நடைகளும் சனங்களுமான பல சீவர்களைப் படைத்து நிலைநிறுத்துபவன் நீ ஒருவனே.

3. ஸவிதாவே! நீ சுகத்தைத் தரும் இன்னலற்ற பாலனங்களோடு எங்கள் மனையைச் செல்வப்படுத்தவும். பொன் நாக்குள்ள நீ, நாங்கள் புதிய சுகத்தைப் பெற எங்களைக் கவனித்துக் கொள்ளவும். எங்களைப் பாவிக்கவும். பழிச்சொல் கூறுபவன் எங்களை அதீனப்படுத்தும் ஆற்றலை அடையாமலிருப்பானாக.

4. தேவனும், தான மனமுள்ளவனும், பொன் கையும், பொன் மோவாயுள்ளவனும், போற்றத் தகுந்தவனும், இனிய மொழியுள்ளவனுமான ஸவிதா, ஒவ்வொரு இரவின் அந்தத்திலும் எழுவானாக. அவன் அவியளிப்பவனான எனக்கு மிகுந்த விரும்பத் தகுந்த செல்வத்தை அளிக்கிறான்.



5. புவியின் எல்லைகளிலிருந்து சோதியின் உச்சிக்கு ஏறுபவனும், சலனமாகி இருக்கும் ஒவ்வொரு பொருளையும் இன்புறுத்துபவனுமான ஸவிதா தன்னுடைய பொன்மய தன்கமைந்த கைகளைக் கற்பிக்கும் நாவலனைப் போல் நீட்டுவானாக.

6. ஸவிதாவே! செல்வத்தைத் தினந்தோறும் எங்களுக்குப் பிறப்பிக்கவும். நீ மிகுந்த செல்வத்தையும், பரந்த மனையையும் தருபவன். நாங்கள் இந்தத் துதியால் செல்வமுள்ளவர்களாவோமாக. 5,102

## 72. இந்திரனும் ஸோமனும்

### 513. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. இந்திரா ஸோமர்களே! உங்களுடைய மகிமை மகத்தானது. ஏனெனில், நீங்கள் மகத்தாயும், முதன்மையாயுமுள்ள பொருள்களைக் கற்பித்தீர்கள். நீங்கள் சூரியனையும், சலங்களையும், மானிடர்களுக்குப் புலப்படுத்தினீர்கள். நீங்கள் சூரியனையும், தமங்களையும், நிந்திப்பவர்களையும் நீக்கினீர்கள்.

2. இந்திரா ஸோமர்களே! நீங்கள் உஷையை உதயப்படுத்தினீர்கள். நீங்கள் சூரியனை சோதியோடு உயர்த்தினீர்கள். நீங்கள் தாங்கும் தூணால் – வானுல்– சோதி உலகை நிறுத்தினீர்கள். நீங்கள் அனைவருக்கும் தாயான புவியைப் பரத்தினீர்கள்.

3. இந்திரா ஸோமர்களே! நீங்கள் சலங்களைத் தடுத்த அஹியையும், விருத்திரனையும் கொன்றீர்கள். அதற்காக சோதி உங்களை வணங்குகிறது. பல கடல்கள் நிரப்பப்படும் வரை நீங்கள் நதிகளை ஊக்கப்படுத்தினீர்கள்.

4. இந்திரா ஸோமர்களே! நீங்கள் பசுக்களின் அபக்குவ மடிகளின் உள்ளே பக்குவமான பாலை வைத்தீர்கள். நானுவித நிறங்களுள்ள பசுக்களிலே தடைபடாத வெண்மையான பாலை ஏந்தினீர்கள்.

5. இந்திரா ஸோமர்களே! நீங்கள் பாலிப்பதும், வம்சமுள்ளதும், புகழுள்ளதுமான செல்வத்தை எங்களுக்குத் துரிதமாயளியுங்கள். உக்கிரர்களே! நீங்கள் சனங்களின் நடுவே மானிடர்களுக்கு இதமாயும் பகைவர்களை ஜயிப்பதுமான ஆற்றலைப் பரத்தினீர்கள். 5,107

## 73. பிரகஸ்பதி

### 514. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. மலைகளைப் பிளப்பவனும், முதற் பிறந்தவனும், சத்தியத்தைப் பாலிப்பவனும், அங்கிரஸ வம்சத்தில் வந்தவனும், அவியுள்ளவனும், இரு உலகங்களில் செல்பவனும், ஒளி உலகில் இருப்பவனுமான பிரகஸ்பதி எங்களுக்குத் தந்தையைப் போலாகிறான்.

2. தேவயஜனத்திலே கவனமாயிருக்கும் மனிதனுக்கு அவன் இடத்தை யளிக்கிறான். பிரகஸ்பதி தடைகளை நீக்கி, எதிரிகளை ஜயித்து, பகைவர்களைத் தாழ்த்தி, அசுரர்களுடைய பல கோட்டைகளை இடிக்கிறான்.

3. தேவனான பிரகஸ்பதி பகைவனுடைய செல்வங்களையும், பசுக்களோடு பரந்த மேய் தரைகளையும் ஜயித்திருக்கிறான். தடைபடாத பிரகஸ்பதி சலத்தையும் சோதியையும் பற்ற விரும்பி மின்னலால் பகைவனைக் கொல்லுகிறான். 5,110

## 74. ஸோமனும் உருத்திரனும்

### 515. பரத்வாஜன்-பிரகஸ்பதியின் புதல்வன்

1. ஸோமா ருத்திரர்களே! எங்களில் அசுரர்களுடைய ஆற்றலை ஸ்தாபியுங்கள். யக்ஞங்கள் ஒவ்வொரு மனையிலும் உங்களிடம் செல்க. ஏழு ரத்தினங்களை ஏந்தும் நீங்கள் எங்களை சுகப்படுத்துங்கள். எங்களையும் எங்கள் கால்நடைகளையும் சுகப்படுத்துங்கள்.

2. ஸோமா ருத்திரர்களே! எங்கள் மனைகளில் நுழைந்துள்ள நோயை ஒவ்வொரு திசையிலும் விலக்குங்கள். தூரத்திலாக நிர்ருதியை நீக்குங்கள். மங்களமான உணவும் புகழும் எங்களுக்குத் தோன்றுக.



3. ஸோமா ருத்திரர்களே! எங்கள் தேகங்களிலிருக்கும் நோய்களை நீக்க இந்த மருந்துகளையெல்லாம் எங்களுக்களியுங்கள். எங்கள் தேகங்களில் எங்களால் செய்யப்பட்டதும் பந்தமாயிருப்பதுமான பாபத்தை எங்களிடமிருந்து விலக்குங்கள்.

4. ஸோமா ருத்திரர்களே! கூரிய படையும், கூரிய சரங்களுள்ளவர்களும், உத்தம சுகத்தைத் தருபவர்களும், துதிக்கப்படுபவர்களுமான நீங்கள், இங்கு எங்களை சுகப்படுத்துங்கள். எங்களை வருணனுடைய பாசத்திலிருந்து விடுவியுங்கள். எங்களைப் பாலியுங்கள். 5,114.

## 75. போர்ப்படைகள்

### 516. பாயு-பரத்வாஜனுடைய புதல்வன்

கவசம்

1. கவசமணிந்த வீரன் போர்களின் முன்னணியில் செல்லுங்கால் அவனுடைய வடிவம் மேகத்தைப் போல் தோன்றுகிறது. வீரனே! நீ உன்னுடைய காயமடையாத தேகத்தோடு பகைவர்களை ஜயிக்கவும். கவசத்தின் பலம் உன்னைப் பாலிக்க.

வில்

2. நாங்கள் வில்லால் பகைவர்களுடைய பசுக்களை ஜயிப்போமாக. வில்லால் நாங்கள் போரிலே ஜயிப்போமாக. நாங்கள் வில்லால் உக்கிர மதமுள்ள பகைவர்களை ஜயிப்போமாக. வில் பகைவனுடைய ஆசையைப் பங்கஞ்செய்க. நாங்கள் வில்லால் எல்லா இடங்களிலிருக்கும் பகைவர்களை ஜயிப்போமாக.

நாண்

3. வில்லின் மீது இறுக்க இழுக்கப்பட்ட இந்த நாண் போரிலே வழியைச் செய்து, அதன் நண்பனான சரத்தைத் தழுவுவது போலும், கணவனிடம் இரகசியத்

தைக் கூறும் ஸ்திரீயைப் போல், ஏதோ பிரியமான மொழியைச் சொல்வது போலும் வீரனுடைய செவியினிடம் அடிக்கடி செல்லுகிறது.

### வில்லின் அந்தங்கள்

4. வில்லின் இரு அந்தங்கள் ஒருமனத்துடன் இசைந்து கணவனை அனுசரிக்கும் மனைவியைப் போலும் தன் அங்கத்தில் தன் குழந்தையைப் பாலிக்கும் தாயைப் போலும் வீரனைப் பாலிப்பார்களாக. அவை இசைந்து சலனமாகி, பகைவனைத் துன்புறுத்தி, அவனுடைய சத்துருக்களைச் சாய்க்க.

### அம்பருத்தூணி

5. பல புதல்விகளின் தந்தையும், பல புதல்வர்கள் உள்ளவனுமான அஸ்திரக்கூடு போருக்குச் செல்லுங் கால் முழங்குகிறான். வீரனுடைய முதுகில் சாய்க்கப் பட்டு தன்னுடைய பல குழந்தைகளைச் செலுத்தும் அம்பருத்தூணி சந்திக்கும் எதிர்ப்படைகளையெல்லாம் அழிக்கிறான். 5,119

### தேரோட்டி

6. கைவழக்கமுள்ள தேரோட்டி தேரிலே நின்று தன் முன்னே உள்ள குதிரைகளைத் தன்னிஷ்டம் போல் செலுத்துகிறான்.

### கடிவாளங்கள்

கடிவாளங்களின் மகத்வத்தைப் போற்றுங்கள். ஏனெனில் அவை பின்புறத்திலிருந்து தேரோட்டியின் விருப்பத்தைப் போல் குதிரைகளைச் செலுத்துகின்றன.

### குதிரைகள்

7. குதிரைகள் குளம்புகளால் புழுதியை எழுப்பிப் பொழிகின்றன. தேர்களோடு சேர்ந்து அவை பாய்கின்றன. உரத்த கோஷங்களை எழுப்புகின்றன. அவை பின் வாங்காமல் முன்னங்கால்களால் பகைவர்களை மிதித்து அழிக்கின்றன.



### தேர்

8. படைகளும் கவசமும் வைக்கப்பட்டுள்ள தேர் ஜயிக்கப்பட்ட செல்வத்தை ஏந்தும் வாகனம். அந்தச் செல்வமே வீரனுடைய அவி. ஆதலால் நாம் எப்பொழுதும் நல்ல மனமுள்ளவர்களாகி சுகப்படுத்தும் தேரைப் பற்றுவோமாக.

### தேரைப் பாலிப்பவர்கள்

9. இரத பாலகர்கள் பகைவர்களின் செல்வத்தை இனியது என சுவைத்து இன்புறுபவர்கள்; உணவை வழங்குபவர்கள்; துன்பத்திலே பாலிப்பவர்கள்; ஆற்றலுள்ளவர்கள்; எதிர்ப்பற்றவர்கள்; அழகிய படைகள் உள்ளவர்கள். சரபலமிருப்பவர்கள் – *தீரர்கள்*; வீரத் தன்மையுள்ளவர்கள்; மகத்தானவர்கள்; பல பகைப் படைகளை ஜயிப்பவர்கள்.

### பலதேவர்கள்

10. அறிஞர்களே! பாலிப்பவர்களும், சத்தியத்தைப் பாலிப்பவர்களும், ஸோமாருகர்களுமான நீங்கள், எங்களைப் பாலியுங்கள். பாபமற்ற சோதியும் புவியும் எங்களை சுகப்படுத்துவார்களாக. பூஷா எங்களைத் தீமையிலிருந்து பாலிப்பானாக. நிந்திக்கும் எவனும் எங்களை அதீனப் படுத்தாமலிருப்பானாக. 5,124

### அம்புகள்

11. சரம் நல்ல சிறகை அணிந்திருக்கிறது. மானின் கொம்பு, அம்பின் பல்லாயிருக்கிறது. பசுவின் சருமத்தால் அது கட்டப்பட்டிருக்கிறது. அது செலுத்தப்பட்ட இடத்தில் இறங்குகிறது. வீரர்கள் சேருங்காலும், கலையுங்காலும் செலுத்தப்படும் சரங்கள் எங்களுக்கு சுகத்தையளிக்க.

12. நேராகப் பாயும் அம்பே! எங்களைப் பாலிக்கவும், எங்களுடைய தேகங்கள் கல்லைப்போலிருக்க. ஸோமன் எங்களிடம் அன்பாய்ப் பேசுவானாக. அதிதி எங்களுக்கு சுகத்தையளிப்பாளாக.

### சாட்டை

13. தேர்ந்த தேரோட்டிகளால் வீசப்படும் சாட்டை, குதிரைகளின் ஊருக்களையும் பக்கங்களையும் அடிக்கிறது. அது போர்களிலே குதிரைகளை ஊக்கப்படுத்துகிறது.

### கைக் கவசம்

14. கணை கைச்சட்டை, ஞாணின் உறைப்பிலிருந்து பாவிக்கிறது. அது சுருண்டுள்ள பாம்பைப் போல் முன் கையிலே சுருண்டிருக்கிறது. அறிவதற்குரிய கலைகளை யெல்லாம் வீரன் கைக்கவசம் அறிந்து போர் புரிபவனை ஒவ்வொரு பக்கத்திலும் பாவிப்பானாக.

### அம்புகள்

15. பர்ஜன்யனிடமிருந்து தோன்றியதும், விஷத்தால் பூசப்பட்டதுமான முனையுள்ளதும், அதோமுகத்துடனிருப்பதும், பெரிதாயுள்ளதும், சோதிக்குரியதுமான சரத்துக்கு இந்தச் சொல் கூறப்படுகிறது. 5,129

16. பிரம்மத்தால் கூர்ப்பிக்கப்பட்ட அம்பு செலுத்தப் பட்டவுடன் பறக்கிறது. பகைவர்களிடம் செல்லவும், அவர்களை அழிக்கவும். பகைவர்களிலே எவனையும் உயிரை நீக்காமல் விட்டுவிடாதே.

### போர்க்களம்

17. எங்கு அம்புகள், குடுமிகள் நீக்கப்பட்ட குமாரர்களைப் போல் இறங்குகின்றனவோ அங்கு பிரம்மணஸ்பதியும் அதிதியும் எங்களுக்கு சுகத்தையளிப்பார்களாக. எங்களுக்கு சுகத்தைத் தினந்தோறும் அளிப்பார்களாக.

### கவசம்

18. வீரனே! நான் உன்னுடைய மர்மாங்கங்களைக் கவசத்தால் மறைக்கிறேன். அரசனான ஸோமன் உன்னை அமுதத்தால் போர்த்துவானாக-உடுத்துவானாக. வருணன் உனக்கு உத்தம சுகத்தைத் தருவானாக. நீ ஜயமடைவதைக் கண்டு தேவர்கள் இன்புறுவார்களாக.



19. எங்களைக் கொல்ல விரும்புபவன் நட்பற்ற பந்துவாயிருந்தாலும் அல்லது அந்நியனாயிருந்தாலும் அவனை எல்லாத் தேவர்களும் அழிப்பார்களாக. பிரம்மமே என்னுடைய உத்தம கவசமாயிருக்கிறது. 5,133

மண்டலம் : 6

சூக்தங்கள் : 75 இருக்குக்கள் : 765

*

## ஆருவது மண்டலம் — முதற்பாகம் முற்றிற்று.